

# இரண்டாம் ஜாமங்களின் கதை

சல்மா

# இரண்டாம் ஜாமங்களின் கதை





# இரண்டாம் ஜாமங்களின் கதை

சல்மா [பி. 1968]

இயற்பெயர் ராஜாத்தி (எ) ரொக்கையா. திருச்சி மாவட்டம் பொன்னம்பட்டி சிறப்பு ஊராட்சி மன்றத் தலைவியாகவும் சமூக நலத்துறை வாரியத் தலைவியாகவும் பணியாற்றினார். இரண்டு கவிதைத் தொகுப்புகள், ஒரு நாவல், ஒரு சிறுகதைத் தொகுப்பு வெளிவந்துள்ளன. 'கனவுவெளிப் பயணம்' என்ற பயணநூலும் வெளியாகி உள்ளது. இவருடைய 'இழப்பு' சிறுகதை 'கதா காலச்சுவடு' போட்டியில் பரிசு பெற்றது.

சேனல் 4 தயாரிப்பில் இவரது வாழ்க்கையை அடிப்படையாகக்கொண்ட 'சல்மா' என்கிற ஆவணப்படம் கிம் லாங்கினாட்டோ என்கிற பிரிட்டிஷ் இயக்குநரால் இயக்கப்பட்டு நூற்றுக்கும் மேற்பட்ட நாடுகளின் உலகப்பட விழாக்களில் திரையிடப்பட்டு 14 சர்வதேச விருதுகளைப் பெற்றுள்ளது.

2006ஆம் ஆண்டு ஃபிராங்பர்ட் புத்தக விழா, 2009 லண்டன் புத்தகக் கண்காட்சி, 2010 சீனாவின் பெய்சிங் புத்தகக் கண்காட்சி ஆகியவற்றில் பங்கேற்றார். சல்மாவின் படைப்புகளை முன்வைத்து நார்மன் கட்லர் நினைவுக் கருத்தரங்கு சிகாகோ பல்கலைக்கழகத்தில் 2007 மே மாதம் நடைபெற்றது.

'இரண்டாம் ஜாமங்களின் கதை' ஆங்கிலம், மலையாளம், மராத்தி, ஜெர்மன், கடாலன் ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. வோடோ போன் (Vodafone) க்ராஸ்வோர்டு பரிசு, மான் ஆசியா பரிசு ஆகியவற்றின் தேர்வுப் பட்டியலில் இடம்பெற்றது. 'சாபம்' சிறுகதைத் தொகுப்பு மலையாளத்திலும் வெளிவந்துள்ளது.

பெற்றோர் சர்புனிஷா, சம்சுதீன். கணவர் அப்துல் மாலிக். மகன்கள் சலீம்,

## குடும்ப வரைபடம்


முகமது அலி ராவுத்தர் – ஜமீலா பீவி
சபியா – சையது
சிக்கந்தர்
காதர் – றைமா
வஹிதா
கரீம் – சொஹ்ரா
ராபியா


கனி ராவுத்தர் – கதீஜா
ஆமினா – இஸ்மாயில்
சொஹ்ரா
பிர்தவ்ஸ்
மைமூன்


சவுரா – ஜமால் ராவுத்தர்
ஷெரிபா – சலாம்
யாஸ்மீன்
றைஹானா
ரசாக்


சைனு – லத்தீப்
சுலைமான்–மும்தாஜ்
ரபிக்கா
சித்திக்கா
பரிதா
மதினா


நபிஸா – பஷீர்
அஹமது
ரபிக்


நூரம்மா
பாத்திமா
இலியாஸ்

# மௌனத்தைப் பேசுதல்

நான்கு வருடங்களுக்கு முன் எனக்கு முன்பாக நீண்டு கிடந்த தனிமையான தருணங்களில் ஒன்றில் ஓரளவு திட்டமிடல்களுடன் இந்த நாவலை எழுதத் துவக்கினேன். எம் சமூகம் அடைகாக்கிற மௌனத்தைப் பேசும் விருப்பமும் நவீன தமிழ் இலக்கியத்தில் காலியாகக் கிடக்கும் பக்கங்களை நிரப்ப வேண்டும் என்கிற ஆர்வமும் கூட, வளர்ந்து கொண்டிருந்தன பக்கங்கள்.

நாவலுக்குள் உலவும் பெண்கள் என் உலகத்தில் என்னோடு சகபயணிகளாக இருந்து கொண்டிருப்பவர்கள். அவர்களுக்கென சமூகம் உருவாக்கி வைத்திருக்கும் பிம்பங்களுக்குப் பொருந்தாத யதார்த்தமானவர்கள். எல்லா மனித ஜீவன்களையும்போல தம் வாழ்வை, வாழவும் நேசிக்கவும் விரும்புபவர்கள். தங்களுக்கு அனு மதிக்கப்பட்டிருக்கும் எல்லைக்குக்குள்ளிருந்தபடியே தங்களுடைய சந்தோஷங்களை, கனவுகளை, ரகசியங்களை, துயரங்களைத் தேடிக் கொள்பவர்கள். பிறருடைய சவுகரியத்துக்காகவோ, அசவுகாரியத்துக்காகவோ ஒரு வார்த்தையைக்கூட நான் எழுதவில்லை. மொத்த நாவலிலுமே இது இப்படித்தான் இருந்துகொண்டிருக்கிறது என்பதைச் சொல்லியிருக்கிறேன், அவ்வளவுதான்.

ஏதேனும் ஒரு கட்டத்தில் வாசகர்களுக்கு அலுப்புண்டாக்கக் கூடிய நீளமான நாவல்தான் இது என்றாலும் பெண்களின் உறைந்து போன காலத்தை உணர்த்த வேண்டிய கட்டாயத்தோடு, கதை நிகழும் காலத்தை ஒரு வருடத்திற்கும் குறைவானதாக இருக்குமாறு பார்த்துக் கொண்டேன். எனது திட்டமிடல்களில் மிக முக்கியமானது இது.

அத்தோடு இந்நாவல் குறித்து எழக்கூடிய கேள்விகளுக்குப் பதில் எதையும் சொல்லக்கூடாது என்பதிலும் உறுதியாக இருக்கிறேன்.

ஜாதி மத இன பாலின பாகுபாடுகளைத் தாண்டி மனித உணர்வுகளைப் பொதுவானதாக ஏற்றுக்கொள்ளாத எந்த ஒரு சமூகத்திடமிருந்தும் பெண்களாகிய எமக்குக் கிடைக்கும் வாழ்க்கை ரொம்பவே அநீதியானது என்பதில் ஒரு சந்தேகமும் இல்லை. புனிதத் தன்மைக்குள் வைத்து எம்மைச் சுரண்டுவதோடல்லாமல், இன்று எமது படைப்புகளிலும் இதையெல்லாம் பேசாதே எனக் கட்டளைகளைப் பிறப்பித்துக் கொண்டிருக்கிற சமூகமும் இலக்கியச் சூழலும் இந்நாவலை எழுதி முடித்ததற்கும் வெளிவருவதற்குமான கால இடைவெளியைத் தீர்மானித்தன என்றால் மிகையில்லை.

இந்நாவலை எழுதத் துவங்கிய பின்னர், வீட்டுச்சூழல் தந்த அழுத்தத்தில் எழுத விருப்பமற்று எழுதாதிருந்த வேளைகளிலெல்லாம், 'நாவல் என்னாயிற்று?' என்று கேட்டு எழுதத் தூண்டிய கண்ணனின் ஆர்வம் இல்லையெனில் நாவலை முடித்திருக்கவே மாட்டேன்.

நாவலைச் சிறப்பாகக்கொண்டு வரும் 'காலச்சுவடு' என்னோடு முடங்கிக்கிடந்த என் படைப்புகளைத் தொடர்ந்து வெளியிட்டு என்னை உருவாக்கியதை இந்தச் சமயத்தில் நன்றியோடு நினைவுபடுத்திக் கொள்கிறேன்.

நாவலைப் படித்துப்பார்த்து, என் மீதான அக்கறையோடு, தன் கருத்துக்களை என்னோடு பகிர்ந்து கொண்ட நண்பர் திரு. ஸ்ரீனிவாசன், ஓயாத வேலைகளுக்கு மத்தியில் முன்னுரை தந்த நண்பர் திரு. ரவிக்குமார், பிரதியைப் பார்த்துச் செம்மைப்படுத்திய திரு எம். எஸ். அவர்கள், திரு. யூசுப் அவர்கள், 'நெய்தல்' கிருஷ்ணன் அவர்கள், 'உலகத்தமிழ்.காமில்' இதன் சில அத்தியாயங்களை வெளியிட்ட நண்பர் அரவிந்தன், எனது மோசமான கையெழுத்தைக்

கணினியில் ஏற்றிய சகோதரி ஜெயா இவர்கள் அனைவரோடும் என் நன்றியையும் பிரியத்தையும் பகிர்ந்துகொள்கிறேன்.

என் காரியங்களின் அர்த்தம் புரியாமலேயே பெருமிதத்தோடு என்னோடிருந்து கொண்டிருக்கும் தந்தை சம்சுதீன், தாயார் சர்புனிஷா, சகோதரி நஜிமா, என்னோடிருக்க விரும்பும் தம் நேரங்களை, நான் எழுதவென விட்டுத்தரும் அன்புக் குழந்தைகள் சலீம் ஜாபர், அம்ஜத் நதீம் ஆகியோரை நெகிழ்ச்சியோடு நினைத்துக்கொள்கிறேன்.

**சல்மா**

# முன்னுரை

"முதல் ஜாமத்தைக் காட்டிலும்
விபரீதமானது
கனவுகள் பெருகும் இரண்டாம் ஜாமம்."

இது இரண்டாம் ஜாமங்களின் கதை. நடுச்சாமம் என்றும் குறிக்கப்படுகிற அந்த நள்ளிரவு நேரம், கனவுகள் பெருகும் நேரம். அதனால் அது விபரீதமானது. நனவின் எதிர் நிலையில் இருக்கிறது கனவு. அது படைப்பாற்றல் கொண்டது, எல்லைகளற்றது, கட்டுப்படுத்த முடியாதது - ஆகவே விபரீதமானது. கனவுகள் பெருகும் அந்த நேரத்தில்தான் 'சுவரோவியத்தில் அமைதியாக அமர்ந்திருந்த புலி (இறங்கி வந்து) தலைமாட்டிலமர்ந்து உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறது'. கனவுகளைப் படிக்க முயற்சிக்கிறதா அது? அல்லது கனவுகளைப் பெருக்கிக்கொண்டிருக்கும் உடலைத் தின்னப்போகிறதா?

உறக்கம் என்பதை விழிப்பின் எதிர் நிலையாகவே நாம் புரிந்து கொண்டுள்ளோம். உடல் உறங்கும் அந்நேரத்தில் கனவுகள் எங்கிருந்து, எப்படிப் பெருகுகின்றன? உண்மையில் அப்போது உடல் உறங்குவதில்லை. புற உலகைக் கண்களின் வழி காணும் விழிப்பு நிலையிலிருந்து மாறி, கனவுகளின் வழி புதிய உலகங்களைப் படைக்கிறது உடல். அந்த உலகில் நாம் பார்ப்பவை யதார்த்த உலகில் நாம் பார்த்தவைதான் எனினும் அவற்றின் தன்மைகள் வேறு. இச்சையால் பெருக்கப்படும் கனவுகள் உடலை அமைதிப் படுத்துவதில்லை. கிளர்ந்தெழச் செய்கின்றன.

'சாமம்' என்ற சொல்லுக்கு வேறுசில அர்த்தங்களும் உள்ளன.

அந்தச் சொல்லுக்குப் பசிய நிறம், பஞ்சம் ஆகிய பொருட்களும் உண்டு (பச்சை நிறத்தவள் என்பதைக் குறிக்கவே பார்வதி சாமளை என அழைக்கப்பட்டாள் - பச்சைத் தேவதை?) வறட்சி, பசுமை என்ற இருவேறு எதிர்நிலைகளையும் குறிக்கக்கூடிய ஒரே சொல்லாக இது இருக்கிறது. இந்த வினோதமான குணத்தை இந்தச் சொல் குறிக்கும் காலத்திலும் நாம் உணர முடியும். அமைதியும் கொதிப்பும் கொண்ட காலம்; உறக்கமும் விழிப்பும் கொண்ட காலம்; சாந்தமும் வன்மமும் கொண்ட காலம் - அந்த விபரீதமான காலம்.

'தலைமாட்டிலமர்ந்து உற்றுப்பார்த்துக் கொண்டிருக்கிறது புலி'. இப்போது அந்த உடல் புலியின் கட்டுப்பாட்டுக்குள் உள்ளது. உடலைத் தின்று தீர்த்துவிட்டு அமர்ந்திருக்கும் புலியைப்பற்றி அதிகம் எதிர்பார்ப்புகள் எழாது. ஆனால் இரையை எதிரில் வைத்துப் பார்த்துக் கொண்டிருக்கும் புலி நம் ஆவலைக் கிளர்த்துகிறது. அங்கே செயல் முற்றுப் பெறவில்லை. எதுவும் நேரலாம். மீண்டும் அந்தப் புலி சுவரோவியத்துக்குள் சென்று அமைதியாக அமர்ந்து கொண்டுவிடலாம். அப்படிச் சென்றுவிட்டால் நமது ஆவல் மேலும் அதிகரிக்கத்தான் செய்யும். பசித்த புலி, பார்த்துக் கொண்டிருக்கும் புலி, அதுவும் தலைமாட்டில் அமர்ந்து உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கும் புலி.

பெண்களின் படைப்புகள் இந்தப் புலியை ஒத்தவையாக இருக்கின்றன. நாம் (ஆண்கள்?) பெண்களின் இச்சைகளை, கனவுகளை, ஓவியத்தில் சிறைப்படுத்திச் சுவரில் மாட்டி வைத்தோம். இப்போது அது (புலி) கீழே இறங்கி வந்து நமது தலைமாட்டில் அமர்ந்திருக்கிறது. இன்னும் அது நம்மைத் தாக்கத் தொடங்கவில்லை.

நமது தலைமாட்டில் அமர்ந்திருப்பது புலியல்ல, நமது வளர்ப்புப் பிராணிகளுள் ஒன்றுதான் எனக் கற்பனை செய்து கொள்வதன் மூலம்

நாம் தப்பிக்கலாம் என நினைத்தோம். அதை நாய் என்றும் பூனை என்றும் சொல்லிக் கொண்டோம். ஆனால் அது புலிதான் என்பது புரிந்துவிட்டது. இப்போது நாம் அலறினால் நமது முடிவை அது துரிதப்படுத்திவிடலாம் என்ற அச்சத்தில் மௌனம் காத்தோம். ஆனால் மௌனமாயிருப்பதால் அதன் கவனத்தைத் திசை திருப்ப முடியாது என்பதும் புரிந்துவிட்டது.

புகழுரைக்குப் புலி மயங்காமல் போய்விடுமா என்ற நினைப்பில் நாம் அதனைப் புகழ்ந்தோம். ஆனால் மரண பயம் நமது நாக்கைப் பிடித்து இழுக்க, புகழுரைகள் உளறல்களாக மாறிவிட்டன. இந்தப் புலியைப் பார்த்து நாம் பேசினாலும் மௌனமாக இருந்தாலும் இரண்டுமே நமது அச்சத்தின் வெளிப்பாடுகள்தாம் என்பது தெரிந்துவிட்டது.

இந்த நாவலைப் படிக்கிற எவரும் சல்மாவின் கவிதைகளை நினைவுகூராமல் இருக்க முடியாது. அவற்றுள் சந்தித்த சில பெண்களை நாம் இந்த நாவலிலும் பார்க்கிறோம். 'பெரும்பாலும் தனக்குள்ளாகவே வசித்துக் கொண்டிருந்த' சல்மாவின் மொழி விடுபட்டு இந்த நாவலில் விஸ்தாரமாகப் பிரயாணம் செய்திருக்கிறது.

கவிதைகளில் தென்பட்ட (திருமணமான?) இளம்பெண்களோடு கூட, சிறுமிகள், மூதாட்டிகள், நடுவயதுப் பெண்கள் பலரும் இதில் வருகிறார்கள். பெண்களாலேயே இந்த நாவல் நிரப்பப்பட்டிருக்கிறது என்று சொல்லும் அளவுக்குப் பெண்கள். ஆண் பாத்திரங்கள் புறக்கணிக்கப்பட்டு, சிதைக்கப்பட்டு, கேலி செய்யப்பட்டு ஓரத்தில் தள்ளப்பட்டுள்ளன. சிறுமிகளிடம் தங்களது வக்கிரத்தை வெளிப்படுத்தும் சிக்கந்தர், சின்ன ஹஜரத்; மருமகளிடம் நாகரிகமின்றி நடந்து கொள்ளும் சையது; ஏறக்குறைய ஒரு ஸ்திரீலோலனாகக் காட்டப்படும் கரீம் . . .

பெண்களின் உலகம் கசப்பால், வலியால், துயரத்தால் மட்டுமின்றிச்

சிரிப்பாலும் சூழப்பட்டிருக்கிறது. நோன்பு நாட்களில், பிரேதம் விழுந்த வீட்டில் அல்லது பண்டிகைக்காகப் பலகாரம் செய்யும் பொழுதுகளில் இப்படி எங்கு பெண்கள் கூடினாலும் அவர்களது உரையாடல் பாலியல் குறித்த விவரிப்புகளால் தளும்பத் தொடங்கிவிடுகிறது.

பெயரிடப்படாத அந்த ஊரில் பல்வேறு மனிதர்களை இந்த நாவல் பேசியபோதிலும் குறிப்பாக ஆறு குடும்பங்களை விரிவாகப் பேசிச் செல்கிறது. அந்தக் குடும்பங்களை ஊரோடு சேர்த்து நெய்வதாக மதத்தின் கருத்தியல் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. அதன் நிழல்படாத இடமே இல்லையென்பதுபோல எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறது மதம். தினசரி வாழ்வின் ஒவ்வொரு துளியிலும் அதன் பிரதிபலிப்பை நாம் பார்க்கிறோம். அது தரும் தெம்பில்தான் ஆண்கள் நடமாடுகிறார்கள். குடும்பத்தின் நடவடிக் கைகளில் பெண்களின் இடம் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ளது. சமையலறையும் படுக்கையறையும்தான் அவர்கள் புழங்கக்கூடிய இடங்களாக உள்ளன. திருமணம் அல்லது மரணம் - இவைதான் பெண்கள் ஒன்று கூடுவதற்கு வழி ஏற்படுத்தித் தருகிறது. பண்டிகைக் காலத்தில் செய்யப்படும் சடங்குகளின்போது அவர்கள் கூடுவதற்குச் சிறு வாய்ப்பு கிடைக்கிறது. அத்தகைய சந்தர்ப்பங்களை அவர்கள் தவறவிடுவதே இல்லை. அவர்களது பேச்சில் ஆண்களின் உடலமைப்பு முதல் குணநலன்கள்வரை கேலிக்குள்ளாகின்றன. எந்தவித மனத்தடையுமின்றி தமது இச்சைகள் பற்றிய அபிப்ராயங்களை அவர்கள் பகிர்ந்துகொள்கிறார்கள்.

அவர்களது பேச்சினூடாக வெளிப்படும் ஆசைகள், நிராசைகள் ஆகியவற்றின் அடிப்படையாக இருப்பது மிகவும் வரையறைக்குட்பட்ட மனப்பாங்குகள்தாம். ‘தொட்டு பொட்டு வைத்துக்’ கொள்ளக்கூடிய கறுப்பு நிறமும், ஒல்லியான தேகமும் கொண்ட ஆண் விருப்பத்துக்கு

உரியவன் அல்ல. ‘கம்பீரமான உடல்’ ‘பாதமெல்லாம்கூட வெள்ளையாக’ இருக்கும் ஆணே இச்சைக்குரியவன். பெண்களும் உடல்வாகு, நிறம் ஆகியவற்றை வைத்தே மதிப்பிடப்படுகின்றனர். ‘பளீரென்ற நிறம்’ ‘மின்னல்கீற்று போலப் பிரகாசம்’ கொண்ட பெண்களே அழகானவர்களாகக் காட்டப்படுகின்றனர்.

இந்த மதிப்பீடுகளின் அடிப்படையில்தான் திருப்தியும் அதிருப்தியும்; பெருமையும் கேலியும்; சந்தோஷமும் துக்கமும் பேசப்படுகின்றன. “மனிதர்களுக்கிடையிலான உறவில் மிகவும் இயற்கையானதும் அவசியமானதுமான” ஆண் பெண் உறவு, சமூகத்தால் உருவாக்கப்பட்ட இத்தகைய போலி மதிப்பீடுகளால் கொச்சைப் படுகிறது. பணத்தின் சக்தி அதிகரிக்க அதிகரிக்க அத்துடன் சேர்ந்து தேவையும் பெருகியபடியிருக்கும் ஒரு சமூகத்தில் மனிதர்கள் திருப்தியுற வழியே இல்லை. அங்கே உருவாகும் அதிருப்தி மனித உறவுகைளை வெறுப்பால் சிதைக்கிறது. பரஸ்பரம் நேசத்தை உருவாக்க முடியாத நேசம் கையாலாகாததாக, அவல மானதாகச் சீரழிகிறது.

புணர்ச்சியும்கூட இனப்பெருக்கம் என்ற குறிக்கோளை எட்டுகிற கடமையாக மட்டுமே வரையறுக்கப்படுகிறது. பெண்களின் பாலுணர்வுகள் அதைநோக்கியே ஒழுங்கமைக்கப்படுகின்றன. கலவி முடிந்ததும் (நள்ளிரவானாலும்) தலை முழுகியே தீரவேண்டும் என்ற நியதி, மிஷேல் ஃபூக்கோ மேற்கோள் காட்டும் செய்ன்ட் ஃப்ரான்சிஸின் ஒழுக்கநியதியை நினைவுபடுத்துகிறது. தம்பதிகளின் பாலியல் ஒழுக்கத்துக்கு உதாரணமாக யானைகளின் பழக்கத்தை அவர் குறிப்பிடுகிறார். “யானைகள் பெண் துணைகளை மாற்றிக் கொள்வதில்லை. மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் கலவி செய்யும் அதுவும் ஐந்து நாட்களுக்குத்தான், அதையும் எவர்

கண்ணிலும் படாதவாறு ரகசியமாகத்தான் செய்யும். கலவி முடிந்ததும் நேரே ஆற்றுக்குப் போய் நன்றாகக் குளிக்கும்" என்று குறிப்பிட்டுள்ளார், ஃப்ரான்சிஸ். *(Michel Foucault - Use of pleasure (1985))* இனப்பெருக்கம் என்ற நோக்கத்துக்காகவன்றி ஆண்களோ பெண்களோ புணர்ச்சியில் ஈடுபடுவது முறையற்ற உறவுகளில் மட்டும்தான் நடக்கிறது. குடும்பத்துக்குள் (மதத்துக்குள்?) இனப்பெருக்கத்துக்காக நடைபெறும் புணர்ச்சி குடும்பத்துக்கு அப்பால் இனப்பெருக்கத்தைத் தவிர்த்ததாக இன்பத்துக்கானதாக இருக்கிறது. (மாரியாயிக்கு கரீம் கர்ப்பத்தடை செய்கிறான்)

உடைகளை, நகைகளைப் பெரிதாக நினைக்கும் இந்தப் பெண்கள் தமது கணவனிடமிருந்து எதிர்பார்ப்பவை மிகவும் சாதாரண விஷயங்கள்தான். ஆனால் அவற்றைக்கூட அவர்களால் நிறைவேற்ற முடியவில்லை. சம்பாத்தியத்துக்கெனப் பெருமளவில் புலம்பெயரும் ஆண்கள் ஏற்படுத்துகிற வெற்றிடத்தைக் கற்பனைகளாலும், தீவிரமான மத நம்பிக்கையாலும் நிரப்பிக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்துக்குத் தள்ளப்பட்டுள்ள பெண்கள் தமது உடல்களின் பெருமூச்சுகளை உரையாடல்களால் தணிக்க முற்படுகிறார்கள்.

மண உறவிலிருந்து வெளியேறிய அல்லது வெளியேற்றப்பட்ட பெண்கள், குடும்பச் சூழலால் நிர்ப்பந்திக்கப்படும் பெண்கள் - இவர்களே ஒழுங்குகளை மீறுகிறவர்களாக உள்ளனர். ஆணைப் பொறுத்தவரை கட்டுப்பாடு என்பது அவனது உடைமைக்கு பாதுகாப்பை வழங்குகிறது. இனப்பெருக்கமும்கூட அந்தப் பாதுகாப்புணர்விலிருந்தே நிகழ்கிறது. பாதுகாப்பு தரும் நிம்மதி நல்லது தான் என்றபோதிலும் குடும்ப வாழ்வின் ஜடத்தன்மையால் அவனும் அதிருப்தியுறவே செய்கிறான். அதை உடைப்பதிலிருக்கும் கிளர்ச்சியால் அவனும் ஈர்க்கப்படுகிறான். தனது குடும்பத்தைக்

கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பதால் கிடைக்கும் நிம்மதி பிற குடும்பத்தின் கட்டுப்பாட்டை மீறிவரும் பெண்களால் கிடைக்கும் சந்தோஷம் இரண்டுமே அவனுக்குத் தேவைப்படுகிறது. ஆனால் பெண்களின் நிலை அப்படியானதல்ல. குடும்ப அமைப்புக்குள்ளும் அவள் துயருறுகிறாள் அதை மீறுவதாலும் துன்பப்படுகிறாள். ஒரு ஆணிடமிருந்து விடுபட்டு இன்னொரு ஆணுக்குத் தனது உடலை அவள் பலியிடுகிறாள். ஒழுங்கு மட்டுமல்ல அதை மீறுவதும்கூட பெண்ணுக்குத் துன்பத்தைத்தான் கொண்டு வந்து சேர்க்கிறது.

திருமண உறவு, குடும்ப அமைப்பு ஆகியவை எந்த அளவு இறுக்கமானவையாக உள்ளனவோ அந்த அளவு அவை விபச்சாரத்தின் தேவையை அதிகரிக்கச் செய்கின்றன. பிறழ்வாக, குற்றமாகக் குறிக்கப்படும் விபச்சாரம் அச்சுறுத்தலும் அதனால் கவர்ச்சியும் கொண்டதாயிருக்கிறது. இங்கு இச்சையின் செயல்பாடு என்னவாக இருக்கிறதெனப் பார்க்கவேண்டும். இச்சிக்கப்படாததைத் தடை செய்யத் தேவையில்லை. ஒன்றைத் தடை செய்வதற்குமுன், அது இச்சைக்குரியதாக மாற்றப்பட்டாக வேண்டும். பெண், தனது விடுதலையை இச்சிப்பது இயல்பானதாகும். விரும்புகிற உடலை அடைவதென்பது சுதந்திரத்தின் ஒரு அம்சமென்பது உண்மைதான். ஆனால் எந்த உடலை விரும்புவதென்பது எதனால் தீர்மானிக்கப்படுகிறது எனப் பார்க்க வேண்டும். அங்குதான் கருத்தியல் செயல்படுகிறது. ஆரோக்கியமான, வலிமையான (வயதுக்குப்) பொருத்தமான உடலே தேர்வுக்குரியது என்ற தீர்மானத்தின் அடிப்படையாக இருப்பது சுதந்திரத்துக்கான கருத்தியலா என்று கேட்கத் தோன்றுகிறது. இப்படிப் பார்த்தால் இந்த நாவலில் வரும் பெண்களின் இச்சைகளும் அதன் அடிப்படையிலான மீறல்களும் ஆணாதிக்கக் கருத்தியலால் தீர்மானிக்கப்பட்டிருப்பதை நாம்

உணரலாம். மொழியளவில் மட்டுமே செயல்படும் அவர்களது 'சுதந்திரம்' பௌதீக ரீதியில் அவர்களது அடிமைத்தனத்தையே சுட்டி நிற்கிறது.

மைமூனின் மரணமும் பிர்தவ்ஸின் மரணமும் மிகவும் துயரார்ந்த முறையில் விவரிக்கப்பட்டுள்ளன. இருவருக்கும் சில ஒற்றுமைகளை இந்த நாவல் வரைய முற்படுகிறது. பாவத்தின் சம்பளமாகிறது மரணம். மைமூனின் மரணம் எதிர்பாராமல் நேர்கிறது. பிர்தவ்ஸின் மரணமோ (ஒரு கொலையாக) வலிந்து திணிக்கப்படுகிறது. இரண்டிலுமே 'ஊர்வாயை' மூடுகிற ஒரு முயற்சியே அடிப்படையாக உள்ளது. மைமூன், பிர்தவ்ஸ் ஆகிய இருவரதும் அம்மாக்கள் தமது பெண்களின் உயிரைவிட ஊர் தமக்கு வழங்கக்கூடிய தண்டனையின் கொடுமையைப் பற்றிய அச்சத்தால்தான் அதிகம் அலைக்கழிக்கப்படுகின்றனர். ஊரை விட்டு நூரம்மா விலக்கிவைக்கப்படுவதும் அதன் பிறகான அவரது கதியும் அந்தத் தண்டனையின் கொடுமையை எடுத்துக் காட்டுகின்றன. இப்படியான மானக்கேட்டுக்கு ஆளாகப் பயந்தே அந்த அம்மாக்கள் தமது பெண்களின் உயிரை மாய்க்கிறார்கள். மைமூன், பிர்தவ்ஸ் ஆகியோரைப் பொறுத்தவரை மரணம் என்பது அவர்களது செயலின் தர்க்கபூர்வமான முடிவாகவே இருக்கிறது. மரணத்தின் ஒளியை 'விரும்பி' அதை நோக்கி அவர்கள் பறந்து செல்வதாகவே தோன்றுகிறது. அந்தப் பெண் உடல்கள் துய்த்த இன்பம் போலியான மீறலால் வந்த போலியான சுதந்திரத்தையே அடிப் படையாகக் கொண்டிருக்கிறது. சிவாவுக்கும் பிர்தவ்சுக்குமான உறவு அப்படித்தான் விவரிக்கப்பட்டுள்ளது. அதில் ஆன்மீகக் காரணிகள் அதிகம் செயல்படவில்லை.

பிர்தவ்ஸ் ஏன் சிவாவைத் தேர்ந்து கொள்ளவேண்டும் என்பதற்குத்

தர்க்கபூர்வமான பதிலெதையும் நம்மால் கண்டுபிடிக்க முடியவில்லை. 'புற உடல்' கிளர்த்தும் ஆர்வம்தான் அதனை இச்சிப்பதற்கான அடிப்படையாக இருக்கிறது எனலாம். உடல்களின் பரிவர்த்தனையைப் பொறுத்தமட்டில் அது அந்த முஸ்லீம் சமூகத்துக்குள்ளேயே நடக்கும்போது அவ்வளவு எதிரானதாகப் பார்க்கப்படவில்லை. அந்தச் சமூகத்துக்கு வெளியே அது போகும்போது மிகப் பெரிய எதிர்ப்பைக் கொண்டுவருகிறது. சமூகத்தின் சமனிலை குலைவதென்பது அனுமதிக்க முடியாத குற்றம். பெண் உடல் வெளியேறுவது மட்டுமே இந்தச் சமனிலையைக் குலைக்கும். பாத்திமா, பிர்தவ்ஸ் ஆகியோரின் மீறல்கள் சமூகத்தின் சமனிலையைக் குலைக்கும் அச்சுறுத்தல்களாகின்றன. மாரியாயி அந்த அச்சுறுத்தலை ஏற்படுத்துவதில்லை. இன்னும் சொல்லப் போனால் அந்தச் சமூகத்துக்கு மாரியாயி போன்ற பெண் உடல்கள் தேவைப்படுகின்றன. அவள் அந்தச் சமூகத்தின் உறுப்பாக மாறவில்லை. அதற்குச் சேவைசெய்யும் அடிமையாகவே இருக்கிறாள். வீட்டு வேலைக்குக் கூலியில்லாத ஆளாக மட்டுமின்றி கரீம் போன்ற ஆண்களின் ஆண்மையை உறுதி செய்வதற்கும் அவளது உடல் தேவைப்படுகிறது. மாரியாயியின் உடல் பாலியல் ரீதியிலும், பொருளாதார ரீதியிலும் சுரண்டலுக்கு ஆளாகிறது.

மாரியாயியின் உடல் கரீமால் சுரண்டப்படுகிறது. உழைப்பு அவன் வீட்டுப் பெண்களால் சுரண்டப்படுகிறது. ஆனால் அந்த இரண்டு விதமான சுரண்டல்களையும் தனக்குக் கிடைத்த கௌரவமாக மாரியாயி கருதுவதாகக் கூறப்படுகிறது. அதன் மூலம் அவள் ஒரு அடிமையின் நிலைக்குத் தாழ்த்தப்படுகிறாள். தம் சாதிப் பெண்களை இந்த ஊர் ஆண்கள் (முஸ்லீம் ஆண்கள்?) படுத்தும் பாட்டை எண்ணிப்பார்க்கும் மாரியாயி 'கரீமோட ஆள்' என்று மற்ற ஆண்கள்

ஒதுங்கிப்போவதை ஒரு கௌரவமாகக் கருதுகிறாள். “அந்த ஒரு கவுரவமே போதும்” என்று நிம்மதியடைகிறாள். தான் உழைத்துச் சேமித்த பணத்தைக்கூட கரீமுக்குக் கொடுத்து விடுகிறாள். இப்படி “நல்ல வைப்பாட்டியின்” குணநலன்கள் பொருந்தியவளாக இருப்பதாலேயே கரீமின் வீட்டுக்குள் “புழங்க” அவளுக்கு அனுமதி கிடைக்கிறது. நல்ல மனைவிக்கான லட்சணங்களை மட்டுமல்லாது ‘நல்ல வைப்பாட்டிக்கான’ குணநலன்களையும் நாம் இந்த நாவலினூடாகத் தெரிந்து கொள்கிறோம்.

தாம் எப்படி சுரண்டப்படுகிறோம் என்ற பிரக்ஞையற்ற பெண்கள் தாம் மற்றவர்களை எப்படிச் சுரண்டுகிறோம் என்பதையும் புரிந்து கொள்வதில்லை. அந்த அவலம்தான் மாரியாயி குறித்த அவர்களின் உரையாடலில் வெளிப்படுகிறது.

இந்து மதத்தால் உருவாக்கிவிடப்பட்ட சாதியெனும் நோய் முஸ்லீம் சமூகத்தை எந்த அளவு பீடித்துள்ளது என்பதற்கு மாரியாயி பாத்திரம் ஒரு சான்று. 1934இல் ஹைதராபாத் நிஜாமின் ஆட்சிக்குட்பட்டிருந்த தவுலாதாபாத் கோட்டைக்குச் சென்று அங்கு அவமானப் படுத்தப்பட்ட நிகழ்ச்சியைக் குறிப்பிட்ட அம்பேத்கர் (தொகுப்பு (தமிழ்) 25) ஒருவன் இந்துவுக்குத் தீண்டாதவனென்றால் அவனை முகமதியரும் தீண்டாதவனாகவே நடத்துகிறார்கள் என்பதைச் சுட்டிக் காட்டினார். அந்த நிலை இன்றும் தொடர்வதைத்தான் மாரியாயி பற்றிய சித்திரிப்பினூடாக நாம் பார்க்கிறோம். மத நம்பிக்கைகளைப் பின்பற்றுவதில்கூட கொஞ்சம் சுணக்கம் காட்டுகிற முஸ்லீம் பெண்கள் சாதி நம்பிக்கைகளை ஆண்களைவிடத் தீவிரமாகப் பின்பற்றுகிறார்கள். பாலியல் ரீதியில் இன்பம் தருவதாக உள்ள தீண்டாத சாதிப் பெண்ணின் உடல் ஒரு முஸ்லிம் ஆணுக்கு அருவருப்பூட்டுவதாக இருப்பதில்லை. ஆனால் (முஸ்லீம்) பெண்ணின்

பார்வையில் அந்த உடல் மிகவும் வெறுப்புக்குரியதாக, அருவருப்பூட்டுவதாகவே இருக்கிறது. இது, பெண்களின் பிரச்சனையை ஒட்டுமொத்தமாக ஒரே தளத்தில் வைத்துப் பேசமுடியாது என்பதையும், பாலியல் மற்றும் சாதி என்னும் இரட்டைச் சுரண்டலுக்கு ஆட்பட்டுள்ள தலித் பெண்களின் பிரச்சனையை வேறுபடுத்திப் பார்க்க வேண்டியதன் தேவையையும் தெளிவுபடுத்துகிறது.

இந்த நாவலில் வரும் ஆண்கள் பெண்களின் பாலியல் தேவைகளைப் பூர்த்தி செய்கிற 'செயலூக்கமற்ற' (Passive) பொம்மைகளாகவே உள்ளனர். ராபியாவின் மரப்பாச்சிக்கும் பிர்தவ்ஸின் சிவாவுக்கும் வேறுபாடு அதிகமில்லை. பெண்ணிய நோக்கில் இதை ஒரு 'பழிதீர்த்தலாக' நாம் அடையாளப்படுத்தலாம். வரலாறு நெடுக தம்மை உணர்வற்ற பொம்மைகளாகவே சித்திரித்து வரும் ஆணாதிக்கப் பார்வைக்கு எதிரான பழிதீர்த்தல் இதுவென்று கூறலாம். ஆனால் இந்தப் பழிதீர்த்தலில் இறுதிப் பலியாக பெண்ணே இருக்கிறாள் என்னும்போது அது உண்மையில் பழிதீர்த்தல்தானா என்ற கேள்வி எழுகிறது.

பிர்தவ்ஸ், சிவா சந்திப்புகள் உடனடியாகக் கலவியில் முடிகின்றன. அவர்கள் பேசிக்கொண்டதைவிட அவர்களது உடல்கள் உரையாடிக்கொண்டதே அதிகம் எனத் தோன்றுகிறது. இது ஒரு குற்றம் அல்ல. யதார்த்தம் அப்படி அமைந்திருக்கலாம். அவர்கள் தனிமையில் சந்திக்கும் தருணங்கள் குறைவு. அப்படிக் கிடைக்கும் தனிமையைப் பேசிக் கரைத்துவிட சிவா விரும்பியிருந்தாலும் பிர்தவ்ஸ் ஒப்பியிருக்கமாட்டாள் என்பதுதான் அவளைப் பற்றிய விவரிப்பில் நமக்கு வந்து சேரும் செய்தியாக இருக்கிறது. அவர்களது சந்திப்புகள் பிர்தவ்ஸால்தான் முடிவு செய்யப்படுகின்றன. அவன் வீட்டிற்கு பிர்தவ்ஸ்தான் தேடிச் செல்கிறாள். இங்கு அவளே செயலூக்கமுள்ள

பாத்திரத்தை வகிக்கிறாள். அதற்கு சிவா ஒத்துழைக்கிறான். 'அவளது இளம் தேகத்திலிருந்து பொங்கிப் பெருகிய வேகம்' அவனைப் பயம் கொள்ளச் செய்கிறது.

இந்த உறவில் சிவாவுக்கு நட்டமெதுவுமில்லை. அவன் தனது குடும்ப உறவுகளைக்கூட இழக்கவில்லை. ஆனால் பிர்தவ்ஸோ தனது உயிரையே இழக்கிறாள். தனிப்பட்ட ஒரு பாலியல் உறவில் பெண் வகிக்கும் பாத்திரத்தைக்கொண்டு அவளது விடுதலையைக் கணிப்பது பேதமையானது. பரந்துபட்ட சமூகச் சூழலுக்குள் வைத்தே அது மதிப்பிடப்படவேண்டும்.

இங்கு விவரிக்கப்பட்டுள்ள (முஸ்லீம்) பெண்களின் பாலியல் விழைவுகள், அவர்கள் வகிக்கும் செயலூக்கமான பாத்திரங்களின் பின்னணி ஆராயப்படவேண்டும். மைமூன், மும்தாஜ், பாத்திமா, பிர்தவ்ஸ் - எல்லோருமே ஒரு வெற்றிடத்தை நிரப்பவே இந்த மீறல்களைச் செய்கிறார்கள். அந்த வெற்றிடம், ஒன்று அவர்களால் உரு வாக்கப்பட்டதாயிருக்கிறது. அல்லது சமூகத்தால் ஏற்படுத்தப்பட்டதாயுள்ளது. மண உறவை அவர்கள் முறித்துக் கொள்ளும் பின்னணியிலும் சமூகத்தின் ஈவிரக்கமற்ற அணுகுமுறையே தென்படுகிறது. தமது துணைகளைத் தெரிவு செய்துகொள்வதில் தங்களுக்கு மறுக்கப்பட்ட உரிமையை அவர்கள் அந்த மீறல்களின் மூலமாக நிலைநாட்டுகிறார்கள். அப்படி மீறும்போது இறுதியில் அவர்கள் மரணத்தையே தழுவுகிறார்கள் (மும்தாஜ் மட்டும் விதிவிலக்கு).

பெண்களின் சுயாதீனமான பாலியல் தெரிவுகள், குற்ற உணர்வற்ற உரையாடல்கள் போன்றவற்றை விவரிக்கும்போது மிகவும் கலகத்தன்மை வாய்ந்ததாகத் தென்படும் இந்தப் பிரதி அப்படி மீறிச் சென்ற பெண்களின் அவலங்களை அழுத்தமாக (சற்று மிகையாக

என்று கூடச் சொல்லலாம்) விவரித்து மரபை, ஒழுங்கை வலியுறுத்துவதாக முடிகிறது. பாத்திமாவை ஏன் சாகடிக்க வேண்டும்? நூரம்மா ஏன் அந்தக் கதிக்கு ஆளாக்கப்படவேண்டும்? மைமூனும், பிர்தவ்சும் ஏன் அப்படியொரு மோசமான மரணத்தைத் தழுவ வேண்டும்?

பள்ளிவாசலை மையமாக வைத்துச் செயல்படும் மத நடவடிக் கைகளால் இந்தத் துயர முடிவுகள் ஏற்படவில்லை. நூரம்மாவை ஊர் விலக்கம் செய்தாலும் அவருக்குப் பலர் சோறுபோடவே செய்கிறார்கள். அதை ஜமா - அத் கட்டுப்படுத்தவில்லை. இந்தத் துயர முடிவுகளை ஏற்படுத்துவது பெண்களின் நம்பிக்கைகளில் உறைந்திருக்கும் வன்முறைதான். அதில்தான் மதம் தன்னை ஆழமாகப் பதியவைத்துக் கொண்டிருக்கிறது. பள்ளிவாசலை விட, வீடுதான் மதத்தைப் போஷிக்கிற இடமாக இருக்கிறது. ஹஜரத்தைவிட சாதாரணப் பெண்கள்தான் அந்தக் கருத்தியலைப் பரப்புகிறவர்களாக, பாதுகாக்கிறவர்களாக இருக்கிறார்கள். அவர்களே மிகுந்த மதப் பற்று கொண்டவர்களாகவும் இருக்கிறார்கள். சடங்குகள் வழியாக, நிறுவனங்களின் மூலமாகப் பரப்பப்படும் மதத்தைவிட; நம்பிக்கைகளினடிப்படையில் தினசரி வாழ்வின் நடவடிக்கைகளில் சாதாரண மனிதர்களால் செயல்படுத்தப்படும் மதமே தீவிரமும் வன்முறையும் கொண்டதாயிருக்கிறது.

இச்சைகள் ஒடுக்கப்பட்ட பெண்கள் வரம்புகளை மீறும்போது, குடும்ப அமைப்புக்குள் நெறிப்படுத்தப்பட்டு தமது இச்சைகளை 'உயர்ந்த நோக்கங்களுக்காக' (குடும்ப மானம், சமுதாய மானம், ஊரின் மானம்) திருப்பி விட்டுக்கொண்ட குடும்பப் பெண்கள் வன்முறையைச் செயல்படுத்துகிறவர்களாக இருக்கிறார்கள். இந்த இரு தரப்பினரின் எதிர் கொள்ளலில் 'குடும்பப் பெண்களின்' கையே

ஓங்குகிறது. அதுவே அந்தச் சமுதாயத்தின் சமனிலையை உறுதி செய்கிறது. அதிகாரம் மதத்தின் வழி செயல்படுகிறதென்றால் மதம் குடும்பத்தின் வழியாகத் தன்னை மறு உற்பத்தி செய்துகொள்கிறது. இதனைத் தெளிவாக நாம் புரிந்து கொள்ளும் விதமான திறப்புகளைக் கொண்டிருக்கிறது இந்தப் பிரதி. அதுவே இதன் தனிச்சிறப்பு எனலாம்.

பரந்து விரிந்த இந்தப் பிரதிக்குள் பயணித்துத் திரும்பியபின் யோசித்துப் பார்த்தால் யாருமே இதில் முக்கியமான பாத்திரமாக சிருஷ்டிக்கப்படவில்லையென்பதை உணர முடிகிறது. ராபியாவில் தொடங்கி ராபியாவில் இந்த நாவல் முடிந்தாலும் அவள் இந்த நாவலின் மையச் சரடு அல்ல. அப்படி ஒரு மையம் இதில் இல்லை. பெண்களின் பாலியல் நிலையைப்போலப் பல்வேறு மையங்கள் கொண்டதாக இருக்கிறது இந்தப் பிரதி. இதில் நாயகர்கள் /நாயகிகள் / வில்லன்கள் என எவருமில்லை. அந்த விதத்தில் மிகவும் ஜனநாயகப் பண்பு கொண்டதாக இருக்கிறது இந்தப் பிரதி. இதன் காரணமாக அதிகாரத்துக்கு எதிரானதொரு அமைப்பைக் (Structure) கொண்டதாக இந்தப் பிரதி விளங்குகிறது. பின் நவீனத்துவப் பிரதியொன்றில் காணக்கிடைக்கும் சாதகமான இந்தப் பண்புகள் மிக இயல்பாக இந்த யதார்த்தவகைப் பிரதியில் விரவிக்கிடக்கின்றன.

பெண்களின் மொழி பெரிதும் மௌனத்தால் ஆக்கப்பட்டிருக்குமெனச் சிந்தனையாளர்கள் பலர் கூறிவந்துள்ளனர். ஆனால் இடைவிடாத பேச்சுகளால் நிரம்பியுள்ள இந்தப் பிரதியும் பெண் மொழியின் பிரத்யேக அம்சங்கள் கொண்டதாகவே உள்ளது. இந்தப் பிரதியின் உரையாடல்கள் வெளிப்படையாகத் தெரியவரும் அர்த்தங்களுக்கு அப்பால் வேறெதையும் உணர்த்த முயற்சிக்கவில்லை. ஆனால் நுண்ணுணர்வு கொண்ட வாசகர் இந்த உரையாடலின் வழியே வேறு உலகங்களுக்குச் செல்ல முடியும்.

ஒரே நேரத்தில் மானுடவியல் ஆவணமாக, வரலாற்றுப் பதிவாக, படைப்புக் குணம் நிரம்பிய புனைவாக விளங்குகிற இந்தப் பிரதி இதுவரை பூடகப்படுத்தப்பட்டிருந்த பெண்கள் மற்றும் முஸ்லீம்களின் உலகுக்குள் நம்மை இட்டுச் செல்கிறது. அறியாமை ஏற்படுத்திய இடைவெளியைக் கற்பிதங்களால் நிரப்பிக் கொண்டிருந்த நாம் இந்தப் பிரதியின் ஒளியில் சுயபரிசோதனை செய்து கொள்கிறோம். அது மேலும் மனிதப் பண்பு கொண்டவர்களாக நம்மை மாற்றுகிறது. இந்த ஆக்க சக்தி பெண்களுக்கே உரியது.

**ரவிக்குமார்**

*பாண்டிச்சேரி - 8*

*1.11.2004*

# 1

*மழை விழுவதை வகுப்பறை சன்னல் வழியே பார்த்துக் கொண்டிருந்தாள் ராபியா. வகுப்பறைக்குச் சற்றுத் தள்ளி விளையாட்டு மைதானத்தை ஒட்டியிருந்த ஆசாரி குளத்தின் உயர்வான மண்மேட்டின் மீதிருந்து மழைநீர் சரசரவென இறங்கி வழிவதைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. குளத்தின் உட்புறம் வழியும் நீர் குடிநீராகிக் கொண்டிருக்க, வெளிப்புறத்தில் விழுந்து ஓடும் நீர் சாக்கடையில் கலந்து கொண்டிருந்தது. இடையிடையே வீசிய காற்று ஜன்னல் வழியே அவளது முகத்தில் மழையை வாரி இறைத்து தாங்க இயலாத உற்சாகத்தை அளித்தது. அம்மாவின் பேச்சைக் கேட்டு இன்று ஸ்கூலுக்கு வராமல் இருந்திருந்தால். . .? மழைவரும் நாளன்று பள்ளியில் ஆசிரியரோ ஆசிரியைகளோ வகுப்புகளுக்குப் பாடம் நடத்த வருவதில்லை என்பது வழக்கமான விஷயம். "ஒரு பீரியடை முடித்துவிட்டு அடுத்த கிளாஸ் ரூமுக்குப் போவதற்குள் நனைந்து விடுவோம் என்ற பயம் அவுங்களுக்கு" என்று ராபியாவும் மற்ற பிள்ளைகளும் கிண்டலாகப் பேசிச் சிரித்துக் கொள்வார்கள். அவர்களது பயம் அன்றைய தினத்தை இவர்களுக்கு அதிக குதூகலம் நிறைந்ததாக மாற்றிவிடும். பாட்டும் போட்டியும் கதைகளுமாக ஜோராக நேரத்தைக் கழிப்பார்கள்.*

*"ஏய் ராபியா!"*

*யாரோ தன் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவது காதில் விழ திடுக்கிட்டுத் திரும்பினாள். வகுப்பறையின் லீடர் உமா, "உன்னைத் தேடி ஆள் வந்திருக்குல்ல, போய்ப் பார்" என்றாள். யாராக இருக்கும் என்ற யோசனையுடன் எழுந்து மற்ற பிள்ளைகளைத் தாண்டி*

வாசற்படிக்கு வந்தாள். கார் டிரைவர் முத்து குடைக்குள் ஒடுங்கி நின்று கொண்டிருந்தான்.

“அம்மா உன்னைக் கூட்டி வரச் சொன்னாங்க.”

“எதுக்கு?” என்றாள் ராபியா புரியாமல்.

“தெரியல, வா போகலாம்” என்றான் அவசரப்படுத்தும் குரலில். அவளுக்கு இந்த மழை நேர வகுப்பறையை விட்டுப்போக சுத்தமாக விருப்பமில்லை.

“அதெல்லாம் உடனே வரமுடியாது முத்தண்ணே. நான் டீச்சர்கிட்ட கேட்டுட்டு வர்றேன். குடையை மட்டும் குடுத்துட்டுப் போங்க.”

“அதெல்லாம் இல்லெ, நீ உடனே கேட்டுட்டுவா. அம்மா என்னய திட்டுவாங்க. இப்பவே வா. கேட்டுட்டுப் போகலாம்” என்றவனிடம், “இல்லெ எனக்கு கொஞ்சம் எழுத வேண்டியது இருக்கு. எழுதாம டீச்சர் அனுப்ப மாட்டாங்க. நீங்க போங்க” என்றாள் பிடிவாதமாக.

முத்து மனமில்லாமல் குடையை மட்டும் இவளிடம் தந்துவிட்டுப் போனான்.

ராபியாவுக்கு அப்பாடா என்றிருந்தது. சிறிது நேரம் கழித்து நடந்தே போகலாம். மழையில் நனைந்து கொண்டு, வழியில் தேங்கிக் கிடக்கும் மழைநீரைக் கால்களால் அளைந்து விளையாடிய படி எல்லாரோடும் சேர்ந்தே நடந்து போகலாம். நினைக்கும் போதே சந்தோஷமாக இருந்தது.

உமா கேட்டாள். “எதுக்காக உன்னை கார் அனுப்பி கூப்பிட்டிருப்பாக? எதாச்சும் முக்கியமான விஷயமா இருக்காது?” அவள் முகத்தில் லேசான வருத்தம் தெரிவது போலிருப்பதை ராபியா கவனித்தாள்.

“அதெல்லாம் ஒண்ணும் இருக்காது. மழையில நனைஞ்சு

போயிருவேன்னு கூப்பிட்டு விட்டிருப்பாங்க" என்று அலட்சியமாக சொல்லி விட்டு தன் இடத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

தன்னையே பார்த்துக்கொண்டிருந்த அத்தனை மாணவிகளின் முகங்களிலும் தன்னைக்கூப்பிட கார் வந்து திரும்பிப்போன ஆதங்கம் தெரிவதைக் கவனித்த ராபியாவுக்குப் பெருமையாக இருந்தது. ரமேஷ் தன்னைக் கவனிக்கிறானா என்று ஓரக் கண்ணால் பார்த்தாள். அவன் கவனிக்காமலிருந்தது ஏமாற்றம் தந்தது.

"நல்லவேளை நீ மாட்டேன்னு சொன்ன, நாம நடந்தே போகலாம் ஜாலியா" என்றாள் இவளுக்கருகில் அமர்ந்திருந்த மதினா.

"ஆமாம். அதுக்காகத்தான நான் வரலென்னு சொல்லி அனுப்பிட்டேன்" என்ற ராபியா, மறுபடியும் வகுப்பறைக்கு வெளியில் கொட்டும் மழையை வேடிக்கை பார்க்க ஆரம்பித்தாள். அவளுக்கு நேரெதிரே இருந்த பன்னீர் மரத்திலிருந்து மழைநீர்பட்டு பூக்கள் விழுந்துகொண்டிருப்பது பார்க்க அழகாக இருந்தது. போகும் பொழுது அந்தப் பூவையெல்லாம் பொறுக்கி பையில் போட்டுக் கொண்டு போக வேண்டும். இந்தப் பள்ளியிலேயே அவளுக்கு மிகவும் பிடித்தது இந்தப் பன்னீர்ப்பூ மரம்தான். அந்த மரத்தின் நிழலில் அமர்ந்து படிப்பது ரொம்பவும் பிடிக்கும். எவ்வளவு பெரிய மரம் என்று அதைப் பார்க்கும் பொழுதெல்லாம் தனக்குள்ளே வியந்து கொள்வாள். இந்த மரம் ஏன் இந்த ஊரில் வேறெங்கேயுமே இல்லை என்று அம்மாவிடம் அடிக்கடி கேட்பாள். "எனக்கென்னடி தெரியும்? இல்லென்னா இல்லெதான்" என்று ஒரு வார்த்தையில் முடித்துக் கொள்வாள் அம்மா. தனக்குத் தெரிவதில் பாதி கூட அம்மாவுக்குத் தெரிவதில்லை என்று சமயங்களில் ராபியாவுக்கு பெருமையாக இருக்கும். இன்றைக்கு இந்தக் கேள்வியைப் பெரியம்மாவிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நினைத்துக்கொண்டாள். பெரியம்மா டவுனிலிருந்து வந்தவள்.

நிறைய விஷயம் தெரியும். அம்மா மாதிரி பட்டிக்காடு இல்லை.

குடை வைத்திருந்தாலும், பள்ளி முடிந்து வீட்டிற்கு வந்து சேர்ந்தபோது முழுவதுமாக நனைந்திருந்தாள். இவளைப் பார்த்த நொடியிலேயே சொஹ்ராவுக்கு ஆத்திரம் பொங்கியது. கோபத்தைக் காட்ட அவள் கத்தவோ, திட்டவோ இல்லை என்றாலும், முகத்தில் தெரிந்த சிடு சிடுப்பை வைத்து அவளது கோபத்தைப் புரிந்துகொள்ள முடிந்தது.

“ஏன் நாங்க கூப்பிட்டுவிட்டா வரமாட்டியோ? அப்படி என்னா படிச்சி கிழிச்சிட்டு இருந்தே? உன் சனியனால நாங்களும் போகாம நிக்கிறோம்” என்றபடி ராபியாவின் பக்கத்தில் வந்தவள் அவளது தோற்றத்தைப் பார்த்து அப்படியே திகைத்து நின்றுவிட்டாள்.

வெள்ளைநிறத்தில் ராபியா அணிந்திருந்த பிளவுஸ், மழையில் நனைந்து அவளது உடம்பின் மேல் பகுதியை அப்படியே வெளித்தெரியச் செய்திருந்தது. வயதுக்கு மீறிய அவளது மார்புகள் சொஹ்ராவை அதிர்ச்சிக்குள்ளாக்கிற்று. ராபியாவின் தோளைப் பிடித்து உலுக்கியவள், “இந்தக் கோலத்துலதான் பள்ளிக்கூடத்திலிருந்து வர்றியா? அட அல்லாவே! அம்புட்டுப்பேரும் வேடிக்கை பார்த்திருப்பாங்களே! பொம்பளைப் புள்ளைக்கு கொஞ்சமாச்சும் கூச்சம் வேணாம், இதைக்கூட யாரும் கத்துத் தரணுமா?” என்று புலம்பியபடியே அவள் தலையைத் துவட்டி விடத் துவங்கினாள்.

அம்மாவின் புலம்பலின் அர்த்தம் ராபியாவுக்கு சரியாகப் புரியவில்லை. எதற்காக இப்படிச் சொல்கிறாள் என்று அவள் குனிந்து தன்னைத்தானே பார்த்துக்கொண்டாள். தண்ணீரில் நனைந்ததனால் உடலின் மேடிட்ட மார்புப் பகுதி அப்படியே வெளித்தெரிந்தது. அதைப் பார்த்ததும் இவளுக்குமே கூச்சமாக இருந்தது.

தலையைத் துவட்டி முடித்த சொஹ்ரா, “போ, போயி துணியை மாத்திட்டு கௌம்பு. நாம இப்ப குப்பி வீட்டுக்குப் போறோம். நாங்க போயிட்டா நீ வந்து வீட்டுல தனியா இருப்ப அப்பிடின்னுதான் ஒன்னயையும் கூடக் கூட்டிப் போயிரலாம்னு வரச் சொன்னா இப்பிடியா செய்வ?” என்று முணுமுணுத்துக் கொண்டே அடுப் படிக்குப் போனாள்.

ராபியாவுக்கு சந்தோஷம் மறுபடி தலை தூக்கியது. வெளியே போகப் போகிறோம், இன்று மாலை படிக்கத் தேவையில்லை. மதரஸாவுக்கும் போகத் தேவையில்லை என்ற பெருமையோடு குடுகுடுவென ஓடிப்போய் அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டு யூஃனிபாம் உடையை மாற்றத் துவங்கினாள்.

“இப்பத்தான் வர்றியா ராபியா” என்றபடி அறைக்குள் எட்டிப் பார்த்த றைமா பெரியம்மாவை ஓடிப்போய்க் கட்டிக் கொண்டாள். “நாம இப்ப குப்பி வீட்டுக்கு எதுக்காகப் போறோம்” என்று அண்ணாந்து அவள் முகத்தைப் பார்த்துக் கேட்டாள்.

“சுனைதா குப்பி மௌத்தாப் போயிட்டாங்க தெரியுமா? அதுக்காக” என்றாள். “சரி சரி, நீ கௌம்பு! ஏற்கனவே ஒங்கம்மா கோபமா இருக்கா.”

குப்பியை ராபியாவுக்கு அவ்வளவாகப் பிடிக்காது. அதனால் அவளுக்கு விசேஷமாக வருத்தம் ஒன்றும் தோன்றவில்லை. அவசர அவசரமாக பாவாடை சட்டையை பீரோவிலிருந்து உருவி எடுத்து உடுத்திக் கொண்டாள். சீப்பை எடுத்து தலைமுடியை ஒதுக்கிக் கொண்டாள். நீளமான தலைமுடி ஈரம் காயாமல் நசநசத்தது. அம்மா பார்த்தால் திட்டுவாள் என நினைத்தபடி முடியை அரை குறையாகப் பின்னி விட்டுக்கொண்டு ஓடிப்போய் தயாராக வாசற்படியை ஒட்டி நின்று கொண்டாள்.

“ராபியா!” மறுபடி அம்மா கூப்பிடும் குரல் கேட்டதும் அடுப்படியை நோக்கி ஓடினாள். “இந்தா, இந்தப் பாலெக் குடி. குடிச்சிட்டு இந்தத் தூக்குப் போணிய கையில எடுத்துக்க, நாங்க துப்பட்டிய போட்டுட்டு வந்துடறோம்” என்றபடி அடுப்படியைத் தாழ்ப்பாள் போட்டாள் சொஹ்ரா.

ராபியா பாலைக் குடித்துவிட்டு, மறுபடியும் வாசல் படியில் போய் நின்று கொண்டாள். மழை இன்னும் லேசாகத் தூற்றிக் கொண்டிருந்தது. எதிர் வீட்டு பரிதாக்கா ஜன்னல் வழியே எட்டிப் பார்த்துக் கேட்டாள். “ராபியா, எங்கெ போறிங்க? அடக்கம் பண்ணப் போறீங்களாக்கும்.”

“ஆமா. குப்பி வீட்டுக்குத்தான்” என்றாள் ராபியா. பரிதாவின் குரலைக் கேட்டதும் வாசல்படியை ஒட்டி நிறுத்தியிருந்த காரிலிருந்து முத்து கீழே இறங்கி பரிதா வீட்டு ஜன்னலைப் பார்க்க திரும்பியதும் பரிதா வெடுக்கென்று தலையை உள்ளுக்குள் இழுத்துக் கொண்டாள்.

முத்துவுக்குச் சிரிப்பு வந்தது. “ஏன் ராபியா, நான் என்ன பேயா, பிசாசா? ஏன் இப்புடி பயந்து ஒளியுது” என்று கேட்டான்.

“பரிதாக்கா வயசுக்கு வந்துட்டாங்க இல்லெ? பிறகெப்புடி ஆம்பளைங்க முகத்துல முழிப்பாங்க. அதெல்லாம் முழிக்கக்கூடாது தெரியுமா?” என்றாள் இவள் பெருமை பொங்க.

அதற்குள்ளாக அம்மாவும் பெரியம்மாவும் வெளியில் வந்தார்கள். முத்து டிரைவர் சீட்டில் உட்கார்ந்து கொள்ள, முதலில் காரில் ஏறப் போன ராபியாவிடம், “இந்தா இதைப் போட்டுக்க” என்றபடி சொஹ்ரா ஒரு தாவணியை அவள் கையில் கொடுத்தாள். அதைக் கையில் வாங்கியபடி மலங்க மலங்க விழித்தாள் ராபியா, இது எதுக்காக என்கிற மாதிரி.

“உஸ்! நெஞ்சு தெரியுதுல்ல, மவுத்தான வீட்டுக்கு நாலு பேர்

வருவாங்க! அசிங்கம் பிடிச்சாப்புல இப்ப்டியேவா நிக்கப் போறே? பெரியத்தா திட்டுவாங்க, பொண்ணா லச்சணமா இருக்க வேணாம்? சொல்றத செய்யி” என்று கிசுகிசுத்தாள் சொஹ்ரா.

றைமா பெரியம்மாவுக்கு ஏனோ கோபம் வந்தது. “எதுக்காக நீ அவள இப்பிடி விரட்டுற? இப்ப என்ன அவ்வளவு பெரிய பொம்பளையாயிட்டா அவ? எப்பப்பாரு குத்தம் சொல்லிக்கிட்டு” என்று அவளை அதட்டியவள், ராபியாவிடம், “சும்மா இப்போதைக்கு இதை உடம்புல சுத்திக்கோ, உங்கம்மாவுக்காக” என்றாள்.

ராபியாவுக்கு சொஹ்ராவே தாவணியைச் சுத்தி விட்டாள். இருவரும் காரில் ஏறிக்கொண்டதும் கார் புறப்பட்டது. அம்மாவும் பெரியம்மாவும் வெள்ளை நிறத் துப்பட்டியினால் தங்கள் உடம்பை முழுவதுமாகச் சுற்றி மூடியிருக்க, இருவருக்கும் நடுவே ஒடுங்கிப் போய் உட்கார்ந்திருந்தாள் ராபியா.

இரண்டு தெரு தள்ளித்தான் மவுத்தான குப்பியின் வீடு. ஐந்து நிமிடத்திற்குள் போய்ச் சேர்ந்து விட்டார்கள். வாசலில் பெரிய பந்தல். நிறைய ஆண்கள் அங்கு கிடந்த நாற்காலிகளில் அமைதியாக உட்கார்ந்திருந்தார்கள். மணி ஐந்துதான் இருக்கும் என்றாலும் மழை பெய்ததால் வேகமாக இருட்டிக் கொண்டிருந்தது. காரிலிருந்து இறங்கிய அம்மாவும் பெரியம்மாவும் முகத்தைக் கண்மட்டும் தெரியும்படி மூடிக்கொண்டு வேகமாக நடந்து அங்கிருந்த ஆண்களைத் தாண்டிப்போய் வீட்டிற்குள் நுழைந்து கொள்ள, புதிதாக போட்டிருந்த தாவணி வெட்கத்தை உண்டு பண்ண, முன்னும் பின்னும் அதை இழுத்து சரிசெய்தபடி நடந்தாள் ராபியா. வீட்டினுள்ளிருந்தெழுகிற ஒப்பாரிச் சத்தம் அடிவயிற்றில் திகிலை நிரப்பக் கூடியதாக இருந்தது.

நடுக்கத்துடன் தயங்கியபடியே வீட்டிற்குள் நுழைந்தாள் ராபியா. குப்பென்று ஊதுபத்திப் புகை மூக்கில் ஏறி பயத்தை அதிகப்படுத்தியது.

நாலாபக்கமிருந்தும் அழுகைச் சத்தம் கேட்டுக் கொண்டிருந்த அந்த ஹாலின் நடுவில், பெரிய பெஞ்சில் குப்பியின் மையத்தை மேற்கு நோக்கி கால் நீட்டிப் படுக்க வைத்திருந்தார்கள். முழுக்க வெள்ளைத் துணியால் மூடியிருந்த உடல் இவளுக்கு நடுக்கத்தை உண்டு பண்ணியது. கையிலிருந்த தூக்கை நழுவவிட்டு விடுவோமோ என்கிற பயத்தில் அதனை இறுகப்பற்றி தன் நடுக்கத்தை அதனுள் புதைக்க முயன்றாள்.

அம்மா இருக்கும் இடத்தை நோக்கி சுவர் ஓரமாகவே பதுங்கிப் பதுங்கி மெதுவாக நடந்து அம்மாவுக்கும் பெரியம்மாவுக்கும் நடுவில் உட்கார்ந்து கொண்டாள். பெஞ்சுக்குக் கீழே ஒரு பழைய மால்டோவா டப்பாவில் உப்பை நிரப்பி அதில் ஒரு கட்டு ஊதுபத்தியைச் சொருகி வைத்திருந்தார்கள். அதிலிருந்து திமுதிமுவென்று மேலெழும்பிக் கொண்டிருந்த புகையை உற்றுப் பார்த்த ராபியாவுக்குக் குடலைப் புரட்டியது.

அம்மா நபிஸா மச்சியைத் தன் மடியில் சாய்த்து, முதுகைத் தட்டிக் கொடுத்து ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தாள். “அழுகாதே நபிஸா, நமக்கு வகைஞ்சது அவ்வளவுதான். அழுகாதே.”

நபிஸாவுக்கு அழுகை ஓயவில்லை. “என்னைப் பெத்த அம்மா என்னைய அனாதையா விட்டுட்டுப் போயிட்டியே, அத்தாவை இப்புடி அனாதையா விட்டுட்டுப் போயிட்டியே, இனி எங்களுக்கு யாரு இருக்கா? அல்லா எம்மொகத்தப் பாக்கமாட்டேன்னுட்டியேடா!” என்று உரத்த குரலில் கதறினாள்.

அவளது கதறலில் துக்கம் தாளாமல் இன்னும் ஒன்றிரண்டு பேர் அவள் கூட சேர்ந்து கொண்டு ஒப்பாரி வைக்க ஆரம்பித்தார்கள். நபிஸா மச்சியின் சிவந்த உருண்டை முகம் அழுது வீங்கிப் போயிருந்தது. பிரிந்து கிடந்த தலைமயிர் நெற்றியிலும் முகத்திலும்

விழுந்து முகத்தை மறைத்தது. அவளது கேவல் சத்தம் அம்மாவின் மடியிலிருந்து பெரிதாகக் கேட்டுக் கொண்டிருக்க, இந்தத் தூக்கைப் பெரியம்மா வாங்கிக்கொள்ள மாட்டாளா, என்று அவள் முகத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள் ராபியா. இதைக் கொடுத்துவிட்டு ஒரே ஓட்டமாக இங்கிருந்து வெளியே ஓடிவிட வேண்டும் என நினைத்தவள் மெதுவாக, “பெரியம்மா, எனக்குப் பயமா இருக்கு, நான் வெளிய போய் உக்காரட்டுமா?” என்றாள்.

“சரி போ” என்று இவளது பயத்தினைப் புரிந்து கொண்டவளாக காதில் கிசுகிசுத்த றைமா, ராபியாவின் கையிலிருந்த காப்பியை வாங்கிக் கொண்டாள். “ஏம்மா யாராவது இந்த காப்பியை ஒரு டம்ளர்ல ஊத்திக் கொண்டு வாங்களேன் இந்தப் பொம்பளைப் புள்ளைக்குக் குடுக்க” என்றவாறு நபிஸாவை சொஹ்ராவின் மடியிலிருந்து எழுப்பி உட்கார வைக்க முயன்றாள்.

ராபியாவுக்குப் பெரிய நிம்மதி. அங்கிருந்து எழுந்து மெதுவாக கூட்டத்தைக் கடந்து வெளியே வந்தாள். இனி உட்கார ஒரு சௌகரியமான இடம் தேட வேண்டும் என நினைத்தபடி கண்களை நாலாபுறமும் சுழற்றிப் பார்த்தாள். காலியாகக் கிடந்த ஒன்றிரண்டு ஸ்டூல் சேர்களில் எதில் உட்காரலாம் என்று யோசித்து விட்டு கறுப்பு நிறச் சேர் ஒன்றைச் சத்தமில்லாதபடி சுவர் பக்கம் தூக்கி வந்தாள். மழை பெய்து தரையெல்லாம் சேறும் சகதியுமாக இருந்தது. பாவாடையைக் கெண்டைக் காலுக்கு மேலாக தூக்கிப் பிடித்தபடி உட்கார்ந்தாள்.

அவளுக்குச் சற்று தள்ளி குப்பியின் கணவர் கமால் மாமு உட்கார்ந்திருந்தார். அழுகிறாரா என்று அவர் முகத்தையே உற்றுக் கவனித்தாள். தலையைக் குனிந்தபடி வருத்தமாக உட்கார்ந்திருந்தாரே தவிர அழவில்லை. ஏன் அவருக்கு அழுகை வரவில்லை என்று

தனக்குள் கேட்டுக் கொண்டாள். ஒரு முறை அம்மாவிடம் கேட்டிருக்கிறாள்: "ஏம்மா, ஆம்பிளைங்களுக்கு அழுகையே வராதா."

"ஏன் ?"

"இல்லெ, ஆம்பளைங்க அழுது நான் பார்த்ததேயில்லை. அவங்களுக்குக் கண்ணுல தண்ணிய வச்சு அல்லா படைக்கலையா ?"

அம்மா சொன்னாள், "மக்கு! ஆம்பளைங்க அழுகக்கூடாது, அழுகமாட்டாங்க. அவங்க பொம்பளைங்க மாதிரியில்ல"

அவளுக்கு அலுக்கத் துவங்கியது. அஹமதுவை எங்கே காணவில்லை என்று கண்களாலேயே தேடத் தொடங்கினாள். அவன் இருந்தாலாவது பேசிக்கொண்டிருக்கலாம்.

சொஹ்ராவும் றைமாவும் டம்ளரில் காப்பியை வைத்துக் கொண்டு நபிஸாவை வற்புறுத்த ஆரம்பித்தார்கள். "இப்படியே காலையிலேர்ந்து அழுதுக்கிட்டு இருந்தா உடம்பு என்னத்துக்காகும், ஒரு வாய் குடிம்மா. அம்மாவுக்கென்னா, வாவரசியா மவுத்தாகியிருக்கு! வேற யாருக்கு இந்தக் குடுப்பினை கிடைக்கும் சொல்லு?" என்று அவளைச் சமாதானப்படுத்தி காப்பியைச் சிறிது குடிக்க வைத்தார்கள். இரண்டுவாய் காப்பியைக் குடித்த நபிஸாவுக்கு தான் பெரிய தவறு செய்வது போன்ற உணர்வு ஏற்பட வேண்டாம் என்கிற மாதிரி பிடிவாதமாக தலையை அசைத்தாள். "என்னயைப் பெத்த அம்மா, உன்னை நான் இனி எப்பம்மா பாக்கப் போறேன்" என்று அரற்றியபடி சொஹ்ராவின் மடியில் படுத்துக்கொண்டாள்.

சற்று உரத்த குரலில் றைமா அவளை அதட்டினாள். "என்ன நீ, சும்மா அழுதுக்கிட்டு? இப்பிடி அழுதயின்னா அங்கெ அம்மாவுக்கு கஷ்டமில்லே? பாவம் இல்லே?" என்றாள். அவளது அதட்டலில் நபிஸாவின் அழுகை ஓரளவுக்கு மட்டுப்பட்டது.

றைமாவுக்கு லேசாக வயிற்றைப் புரட்டியது. வீடு முழுக்க நிரம்பியிருந்த மனித வாடையும் ஊதுபத்தி மணமும் சேர்ந்து ஒரு விதமான நாற்றம் வீசியது. காற்று வர வழியில்லாமல் கூட்டம் நிரம்பியிருந்தது. அவள் தன் துப்பட்டியை இழுத்து முகத்தை மூடிக்கொண்டு பிறரறியாதபடி மூக்கைச் சுளித்தாள்.

வெளியிலிருந்து காதர் வந்து உள்ளே எட்டிப்பார்த்தான். “உம் ஸபூர் செய்யுங்கம்மா எல்லாரும். மஃரிபுக்கு அடக்கம். மையித்தைக் குளிப்பாட்டுங்க” என்று சத்தமாகச் சொல்லிவிட்டு போனான்.

கணவன் வந்து சொல்லி விட்டுப் போனதும் றைமாவுக்கு அப்பாடா என்றிருந்தது. தொடர்ந்து அடக்கத்திற்கான ஏற்பாட்டைத் தானே துரிதப்படுத்தினாள்.

“குளிப்பாட்டுற இடத்திலெ பெஞ்சைத் தூக்கிப் போடணும். எல்லாரும் கொஞ்சம் எந்திரிச்சிக்கங்கம்மா” என்று எழுந்து நின்று குரல்கொடுத்தாள். அவள் சொன்ன உடனேயே அங்கிருந்த பெண்களில் நாலைந்துபேர் எழுந்து சுவரோரம் கிடந்த வேறொரு பெஞ்சைத் தூக்கிக் கொண்டுபோய் வாசலில் போட்டுவிட்டு, திரும்ப வந்து மையித்தைத் தூக்கிக் கொண்டு போனார்கள். அவர்கள் போனதும் நபிஸா இன்னும் வேகமாகக் குரல் கொடுத்து அழத்தொடங்கினாள்.

மையித்தைக் குளிப்பாட்டும் ஆசியம்மாவும் வேறு சில பெண்களுமாக முற்றத்தில் குறுக்காக ஒரு சேலையைக் கட்டி மறைப்பு உண்டுபண்ணினார்கள். ஒரு கிண்ணத்தில் லக்ஸ் சோப் தயாராக கரைத்து வைக்கப்பட்டிருந்தது.

மையித்தைக் குளிப்பாட்டி ஒலுச்செய்ய வைத்து வெள்ளைத் துணியில் கபன் மூடும் வேலையை அப்பெண்கள் எல்லோருமாகச் சேர்ந்து செய்து கொண்டிருந்தார்கள். அடுத்த மழை வருவதற்குள்

அடக்கம் செய்துவிட வேண்டும் என்கிற அவசரம் ஆண்களிடம் இருந்ததை றைமாவால் புரிந்துகொள்ள முடிந்தது. மஃரிபுக்குப் பிறகென்றால் நன்றாக இருட்டிவிடும். கபர்ஸ்தானுக்குச் செல்வது சிரமமாக இருக்கும். கரண்ட் போய்விட்டால் இன்னும் கஷ்டமாகப் போய்விடும்.

வீடு முழுக்க ஒரு அமைதி நிரம்பியிருந்தது. துயரம் சூழ்ந்த அமைதி, அங்கிருந்த ஒவ்வொருவரின் முகத்தையும் கடந்து கொண்டிருந்தது. ஒவ்வொருவருக்குமே தங்களுடைய மரணத்தை நினைவூட்டிக் கொள்வதற்கான ஒரு தருணத்தை, குளிப்பாட்டப்படும் உடல் ஏற்படுத்திக் கொண்டிருந்தது. தன் வீட்டை விட்டு இறுதிப் பயணத்தைத் துவங்குவதற்கான நேரம் ஒன்று தம் ஒவ்வொருவருக்குமே வரக்கூடுமென்கிற பயமும் இயலாமையும் அனைவரின் முகங்களிலும் தேங்கிக் கொண்டிருந்தன.

சொஹ்ராவுக்குத் தன் அம்மாவின் ஞாபகம் வந்தது. ஆமினாம்மாவும் இப்படி வாவரசியாக மௌத்தாகியிருக்கக் கூடாதா என்று நினைத்துக் கொண்டாள். அவளது இத்தாக்காலம் எத்தனை கொடுமையானதாக இருந்தது என்பதை நினைத்தபோது அவளையுமறியாமல் கண்களிலிருந்து நீர் வழிந்தது.

“பொண்ணுக எல்லாருக்குமே அல்லா நல்ல நெஸீபப்போட்டு புருஷனுக்கு முந்தி கூட்டிட்டுப் போயிடனும். இத்தாவுல இருக்கற கொடுமைக்கு ஆளாக்காம இது மாதிரி நல்ல மவுத்தைக் கொடுக்கணும்” என்று இருந்திருந்தாற்போல் கையேந்தி மேலே பார்த்து ஆண்டவனிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்ட குரலில் நிறைந்திருந்த துயரத்தோடு “ஆமீன்” என்று சொல்லிய வேறு குரல்களும் சேர்ந்து கொண்டன.

அடக்கம் செய்வதற்குத் தயாரான உடல், ஹாலின் நடுவில்

ஓலைப்பாயை விரித்து அதன் மீது கிடத்தப்பட்டிருக்கிறது. தலை முதல் கால் வரைக்கும் கபன் துணியினால் இறுக்கமாக சுற்றி கட்டப்பட்டிருந்த விதமும், மூடப்படாது திறந்திருக்கும் வற்றிய, சிறிய முகமும் றைமாவின் மனதை என்னவோ செய்தது. அந்த ஹிம்சையிலிருந்து தன்னைத் தற்காத்துக் கொள்ளும் பொருட்டு தன் பார்வையை வேறொரு திசை நோக்கித் துரத்த முயன்று தோற்றாள்.

"யாராரு கடைசியா மொகத்தைப் பாக்கணுமோ, பாத்துக்கங்கம்மா" என்ற ஆசியம்மாவின் கணீரென்ற குரலைத் தொடர்ந்து, திடுமென நாலாபுறமிருந்தும் எழுந்த அழுகைக் குரல்கள் பெரும் சத்தத்துடன் வீட்டை நிறைத்தன. நபிஸா ஓடிவந்து தன் தாயின்மீது விழுந்து முகத்தை முத்தமிட்டுக் கதறிய காட்சி, எல்லோரையுமே கலங்கச் செய்தது. இரண்டு பெண்கள் அவளைப் பலவந்தமாக பிடித்திழுத்து விலக்கி முகத்தையும் மூட ஆண்கள் சிலபேர் சந்தாக்குடன் உள்ளே வந்து அதில் உடலை வைத்து, பச்சை நிறத் துணியை மேலே மூடி தூக்கிக் கொண்டு வெளியில் சென்றனர். மைய்யித்தை இறுதியாக அனுப்பி வைக்க ஆசியம்மா தனது ஓங்கிய குரலில் நீண்ட துஆவை இரு கையேந்தி ஓதத் துவங்கினாள்.

துஆவுக்குப் பிறகு வீடு அமைதியாக இருந்தது. கலைக்க முடியாத மௌனத்தால் கட்டப்பட்டது போல். பெண்கள் தங்களது வீடுகளுக்குச் செல்வதற்காக புர்காவை, துப்பட்டியை எடுத்து மாட்டியபடி ஸலாம் சொல்லி விட்டு போகத்தொடங்கினார்கள். நபிஸா அழுது அழுது சுவரோரத்தில் ஓய்ந்து கிடந்தாள்.

அடக்கத்திற்குப் பிறகு ஆண்கள் திரும்பி வந்து பாத்திஹா ஓதும்வரை காத்திருக்க வேண்டுமா என்கிற யோசனையுடன் சொஹ்ராவும் றைமாவும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். றைமா கிளம்பலாம், என்கிற மாதிரி சொஹ்ராவின்

கைகளைப்பற்றி மறைமுகமாக அழுத்தி கண்களால் ஜாடை காட்டினாள். அவளும் சொஹ்ராவும் அங்கிருந்த மற்ற பெண்களைப் பார்த்து ஸலாம் சொல்லிவிட்டு வெளியில் வந்தார்கள். கிளம்புவதற்குமுன் றைமா தன்னருகிலேயே வைத்திருந்த தூக்கை ஞாபகமாகக் கையில் எடுத்துக் கொண்டாள்.

இருவருக்குமே ரொம்பவும் அசதியாக இருந்தது. இவர்கள் வெளியே வந்ததும், ராபியா காருக்குள்ளிருந்தபடி தலையை நீட்டிப் பார்த்து கையசைத்தாள். இருவரும் வந்து காரில் ஏறிக் கொண்டதும், சொஹ்ரா கேட்டாள். "நீ எங்கே இருந்த, உள்ளே காணவேயில்லை?"

"எனக்குப் பயமா இருந்துச்சும்மா" என்றாள் ராபியா.

"அப்பொ வெளியதான் இருந்தியா, இத்தின ஆம்பளைங்க மத்தியிலயா?" என்று பதட்டத்துடன் கேட்டவளிடம், "ப்ச்! நீ சும்மா இருக்க மாட்டே? அவளைக் கூட்டிட்டு வந்ததே தப்பு! இதுல உள்ளுக்குள்ளயே வேற ஒக்காந்திருக்கணுமாக்கும்" என்றாள் றைமா சற்று எரிச்சலுடன். அதன்பிறகு யாரும் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. ராபியா ஆதரவாக பெரியம்மாவின் தோளில் சாய்ந்து கொண்டாள்.

# 2

காலையில் சீக்கிரமாகவே எழுந்து விட்டாள் ராபியா. மதரஸாவுக்கு ஓதச்செல்ல வேண்டும் என்பதைவிட வாதா மரத்தினடியில் உதிர்ந்து கிடக்கும் பழங்களைப் பொறுக்க வேண்டும் என்கிற ஆசையில் அதிகாலைலேயே எழுந்து கிளம்பிப் போய்விடுவாள். இவளைப் போலத்தான் மற்ற பிள்ளைகளும்! யார் முதலில் போவது, யார் நிறையப் பழம் பொறுக்குவது என்கிற போட்டி அவர்களுக்குள் இருந்து கொண்டிருக்கும்.

வழக்கம்போல தலைக்கு ஒரு துண்டையும் குர்ஆனையும் எடுத்துக் கொண்டு கிளம்பியவளின் ஓட்டத்தை சொஹ்ராவின் குரல் தடுத்து நிறுத்தியது. வாசல் படியருகில் நின்றவாறே, “என்னம்மா” என்றாள்.

“குர்ஆனைத் தொடுறதுக்கு முன்னால ஒலுச் செய்தியா?”

“செய்தாச்சும்மா” என்று சொல்லிவிட்டு தெருவில் இறங்கி ஓடினாள் ராபியா. பள்ளிவாசலில் பஜர் தொழுகைக்குப்பின் யாரும் இருக்கமாட்டார்கள். மோதினார் பாவா மட்டும்தான் ஏதாவது வேலைகள் செய்து கொண்டிருப்பார். அவரை ராபியாவுக்கு ரொம்பவும் பிடிக்கும். காலையில் இவள் போகும்பொழுது அவர் ஒரு பெரிய இரும்புத்தட்டில் சலித்த நைசான மணலை அள்ளி தண்ணீர் ஊற்றிக் கரண்டியால் கலக்கிக்கொண்டிருப்பார். ராபியா அவர் பக்கத்தில் போய் குத்துக்காலிட்டு உட்கார்ந்து கொள்வாள்.

“இது எதுக்கு மோதினார் பாவா?”

“சொல்றேன் புள்ளை, இரு” என்பார். இவளிடம் ஒரு குவளையைக் கொடுத்து, “இந்தா, போய் அவுசுல தண்ணி மெத்திக்கிட்டு வா”

என்பார். இவள் ஓடிப்போய் தண்ணீர் கொண்டு வருவாள்.

"இப்பச்சொல்லுங்க, இது எதுக்கு?" என்று மறுபடி கேட்பாள்.

அவர் தனது தாடியை லேசாக சொறிந்து விட்டுக்கொண்டு, "அதுவந்து, நீங்கள்ளாம் சட்டி பானை வச்சு விளையாடுவீங்க இல்லெ, அதுமாதிரித்தான் நான் விளையாடுறேன். இப்பப் பாரு" என்று சொல்லிவிட்டு விளக்குமாறால் மண்தரையைச் சுத்தமாகக் கூட்டிவிட்டு அந்த இடத்தில் கரைத்த மணலை ஒவ்வொரு கரண்டியாக இடம்விட்டு வரிசையாக, இட்லியைப் போல ஊற்றுவார். அவர் பொய் சொல்கிறார் என்பது இவளுக்குத் தெரியும். அவர் கையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சுவாள். "பொய் சொல்லாதிங்க பாவா, தினமும் இப்பிடி மணல் இட்லி ஊத்துறிங்களே எதுக்காக?" என்று கேட்பாள். அவள் முகத்தில் தெரியும் ஆர்வம் அவருக்குப் பரிதாபமாக இருந்தாலும் சிரித்துக் கொள்வார். அவர் சிரிக்கும் பொழுது அவரது குட்டையான தாடியும் மீசையும் கறுத்த உதடுகளுக்குள்ளிருந்து வெளித்தெரியும் பற்களும் ரொம்பவே வினோதமாக இருக்கும்.

தினமும் அவர் இப்படிச் செய்வதும் பள்ளிவாசலுக்குத் தொழுக வரும் ஆண்கள் அதிலொன்றைக் கையில் எடுத்துக்கொண்டு கழிப்பறைக்குப் போவதும் இவளுக்கும் இவளது தோழிகளுக்கும் பெரும் புதிராகவே இருக்கும். ஒருநாள் அஹமது எகத்தாளமாகக் கேட்டான்: "ஏய், அதுக்குப்பேரு என்னுன்னு தெரியுமாடி உங்களுக்கு?" அவனுடைய கெக்கரிப்பும் ஆர்ப்பாட்டமும் தனக்கு மிகப்பெரிய ரகசியம் ஒன்று தெரியும் என்றும் அதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் அவனிடம் கெஞ்சிக் கேட்க வேண்டும் என்றும் சொல்வதுபோல இருந்தது.

மதினாவும் ராபியாவும் தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள்,

இவனிடமிருந்து நாம் எதையும் தெரிந்து கொள்ளவே வேண்டாம் என்று! இவர்கள் அவனை அலட்சியத்துடன் விலக்குவது அவனுக்கு பெருத்த அவமானமாக இருக்கும். “ஏண்டி, உங்களுக்குத் தெரிய வேணாமா? சொல்லுங்க” என்று கண்களை உருட்டி பயம் காட்டினான்.

“வேணாம் போடா! அஸரத்துங்ககிட்ட சொல்லிடுவோம் தெரியுமில்ல?” என்று மதினா மிரட்டினாள். அதன் பிறகு ஒரு ஓரத்தில் போய் உட்கார்ந்து கொண்ட அஹமதுவுக்கு தனக்குத் தெரிந்த விஷயத்தை இவர்களிடம் சொல்லியே ஆக வேண்டுமென நாவு துடித்தது. எவ்வளவோ தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொண்டும் இயலாமல் சுவரைப் பார்த்து திரும்பி உட்கார்ந்து கொண்டு அதனிடம் சொன்னான்.

“அது பேரு வந்து டேலாக்கட்டி! சில மக்குப் பொண்ணுகளுக்கு இதுகூடத்தெரியலை, பாவம்” என்று அங்கலாய்த்துக் கொண்டான். ராபியாவும் மதினாவும் அன்று அதன் பெயரை மட்டும் காதில் வாங்கிக் கொண்டார்கள்.

ராபியாவின் தந்தை கரீம் தன் மனைவியிடம் பேசும்பொழுது யாரையேனும் திட்ட, “அவனுடைய உறவு எனக்கு டேலாக்கட்டியாக்கும். நெனைக்கறப்போ தூக்கியெறிஞ்சிடுவேன்” என்று அடிக்கடி சொல்வதைக் கேட்டிருக்கிறாள் இவள்.

மோதினார் பாவாவின் கைகள் அளவுடன் நேர்த்தியாக, மணலை மொண்டு ஊற்றுவதைப் பார்த்துக் கொண்டிருந்தவளுக்கு இன்று வாதா மரத்தினடியில் பழங்களேயில்லை என்பது கவலையாக இருந்தது.

“ஏன் பாவா இன்னிக்குப் பழங்களே இல்லை?” என்றாள் ஏமாற்றத்தோடு.

“ஏன் இல்லை? அங்கே பாரு! பெரிய அஜரத்து பொறுக்கி வச்சிருக்காங்க! போய் வாங்கிக்க” என்று சொல்லி கைநீட்டினார். அவர்காட்டிய இடத்தில் பெரிய அஸரத் தலைப்பாகையைக் கழட்டி மடியில் வைத்துக் கொண்டு கையில் தஸ்பீஹ் மணியுடன் உட்கார்ந்திருந்தார். ராபியா சந்தோஷமாக அவரை நோக்கி ஓடினாள். ஓடிவந்தவளைத் தன் கருணை மிகுந்த கண்களால் பார்த்து, “இங்கெ வாம்மா” என்று கூப்பிட்டார்.

“அஸ்ஸலாமலைக்கும் அஸரத்துங்க” என்றபடி அவர் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள் அவள்.

“அலைக்கும் ஸலாம். எங்கே வந்தீங்க? பழம் வாங்கத்தானே?” குறும்பு கொப்பளித்தது அவர் முகத்தில்.

“இல்லை சும்மாதான்” கூச்சத்துடன் தலைகுனிந்து கொண்டாள் ராபியா.

அவர் மெலிந்த உடலும் சுருங்கிய தோலுமாக ரொம்பவும் ஒட்டிப் போயிருந்தார். முதுகில் கூன் விழுந்திருந்தது. கண்கள் குழிக்குள் இருப்பது போல உள்ளே ஒடுங்கியிருந்தன. மிக நீளமான மூக்கு, நீண்டதாடி, தாடிக்குள் விரலை நுழைத்து கோதி விட்டுக் கொண்டிருந்தார். பிள்ளைகள் மீது அவருக்குப் பிரியம் அதிகம். பலநாட்கள் அவரே பழங்களைப் பொறுக்கி வைத்துக்கொண்டு எல்லோருக்கும் பகிர்ந்து கொடுத்து அவர்களது சந்தோஷத்தைப் பார்த்து ரசிப்பார். தஸ்பீஹ் மணியை உருட்டியவாறு வெற்றிலையை அசைபோட்டபடியிருக்கும் வாய்க்குள் ‘ஸல்லல்லாஹ்’ என்று முணுமுணுத்துக் கொண்டிருப்பார். அவரிடத்தில் பிள்ளைகளுக்கும் பிரியம்தான். ஊரில் யார் வீட்டுக்குழந்தைகளுக்காவது காய்ச்சலோ, உடம்பு முடியவில்லையோ என்றால் இவரிடம் மஃரிபு நேரம் பள்ளிவாசலுக்கு வந்து தண்ணீர் ஓதிக்கொண்டு போய் கொடுத்தால்

உடனே சரியாகிவிடும். உமாவுக்கு, ரமேஷுக்குக் காய்ச்சல் வந்தால் கூட இவரிடம் தண்ணீர் ஓதுவதற்குக் கொண்டு வருவார்கள். உமா இவளிடம், "ஏன் ராபியா, அவரு பெரிய அவுலியாவா இருப்பாரோ, ஒடனே ஜுரமெல்லாம் சரியாப்போயிடுது. சரவணா டாக்டர் ஊசிக்குக் கூட கேக்கமாட்டேங்குது" என்று ஆச்சர்யப்படுவாள்.

சின்ன அஸரத்தை யாருக்குமே பிடிக்காது. முக்கியமாக ராபியாவுக்கும் மதினாவுக்கும். ஓதும்பொழுது ஒருவார்த்தை தப்பாக உச்சரித்தால் போதும் தொடையிலேயே கிள்ளுவார். அவர் தொடையைத் தொடுவது கிள்ளுவதற்காக மட்டுமில்லையோ என்று இவளுக்குத் தோன்றும். அவர் தன் கையில் வைத்திருக்கும் குச்சியால் பையன்களை மட்டும்தான் அடிப்பார். பெண்களைத் தொடையில்தான் கிள்ளுவார். அவரைப் பார்த்தாலே இவளுக்குக் கூச்சமாகவும் வெறுப்பாகவும் இருக்கும்.

"ராபியா, இங்க வந்து எம்பக்கத்துல உக்காரு. உனக்கு நல்லா சொல்லித்தரணும்னு உங்கம்மா சொல்லியனுப்பிச்சிருக்காங்க" என்று பக்கத்தில் வேறு உட்காரவைத்துக் கொள்வார். அவ்வப்போது இவளது கன்னத்தில் கிள்ளுவதும் தடவுவதும் உண்டு. அப்பொழுதெல்லாம் ராபியாவுக்கு அழுகை வரும். மதினாவிடம் சொல்வாள், "எனக்கு இந்த ஆள்கிட்ட ஓதப் புடிக்கவேயில்லை."

"ஒனக்கு மட்டுமா? எனக்குந்தான் புடிக்கலை" என்பாள் மதினா.

நன்றாக அடிப்பார் என்பதால் பையன்களுக்கும் அவரைப் பிடிக்காது. அஹமது சொல்வான். "இந்த ஆள் கல்யாணமும் பண்ணல, புள்ளையும் பெக்கல. அப்புறம் எப்புடி புள்ளைகள் மேல பாசம் இருக்கும்? காட்டுப்பய மாதிரி அடிக்கிறான்."

ராபியா அவனைக் கோபிப்பாள். "அஸரத்துங்கள அப்பிடித் திட்டாதே, நரகத்துக்குப் போயிருவே! அஸரத்துங்க அடிக்கிற

எடத்திலயெல்லாம் நரகத்து நெருப்பு படாது தெரியுமில்ல.”

“நரகத்துக்குப் போனா சரி. சொர்க்கத்துக்கு நான் போனேன்னா, அப்ப என்ன ஆவும் இப்ப வாங்கின அடியெல்லாம்?” என்று சொல்வான்.

“போடா லூசு, உங்கிட்ட பேசுறதுக்கு” என்று அலுத்துக் கொள்வாள் ராபியா.

பள்ளிவாசலிலேயே ராபியாவுக்குப் பிடித்தமான இடம் அவுஸ் தான். தரைமட்டத்திலிருக்கும் பெரிய தண்ணீர்த் தொட்டி தொழுக வருபவர்கள் அந்தத் தண்ணீரில்தான் ஒலுச்செய்வார்கள். அந்தத் தொட்டியில் ஏராளமான மீன்களை விட்டிருந்தார்கள். தண்ணீரில் வளர்ந்து நிற்கும் பாசிக்குள் நுழைந்து, பதுங்கி விளையாடும் மீன்களை மேலே வரச்செய்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பாள் ராபியா. காலையில் வீட்டிலிருந்து வரும்போது கொண்டுவந்திருக்கும் கைக் காசில் மறக்காமல் பள்ளிவாசலுக்கு வெளியே புட்டு விற்கும் பையனிடம் புட்டு வாங்கிக் கொள்வாள். அதை அவுஸின் ஒரு மூலையில் அமர்ந்து தூளாக்கி, தண்ணீர் தொட்டியில் போடுவாள். மொத்த மீன்களும் அதைச் சாப்பிட மேலேறி வந்து ஒரே பரபரப்பும் சண்டையும் நடக்கும். அதைப் பார்த்து ரசிப்பது அவளுக்கு அன்றாட வேலை. இதை அவளது அம்மாவிடம் அஹமது சொல்லிக்கொடுத்த போது அம்மா அவளை நன்றாகத் திட்டினாள்.

“உன்னைப் பள்ளிவாசலுக்கு அனுப்பறது ஓதத்தானே தவிர, வெளையாட இல்லை. வயசுக்கு வர்றதுக்கு முந்தி குரானை முடிச்சிட்டா அஸரத்துங்களுக்கு வேட்டி பணம் வச்சுக் குடுக்கலாம்னு இருக்கேன். நீ இப்படி வெளையாடிட்டு வர்றே” என சத்தம் போட்டாள். அதேமாதிரி பள்ளிக்குப் போகும்போதும் வந்தபிறகும், “முகம் கழுவி பவுடர் போட்டுக்கோ! வயசுக்கு வர்ற வயசாகப்

போகுது" என்பாள்.

அன்று காலை மதரஸா நடக்கும் வேளை, பிள்ளைகள் ஒவ்வொருவருக்கும் குப்பியின் வீட்டிலிருந்து மூணாம் நாள் கத்தப் பாத்திஹாவுக்காக ஒவ்வொரு ரூபாய் கொடுத்தார்கள். கமால் மாமுவே தன்கையால் கொடுத்தார். பிள்ளைகளுக்கு ஒரே சந்தோஷம். எதிர்பாராமல் கிடைத்த ரூபாயை எப்படியெல்லாம் செலவழிப்பது என்று மனதிற்குள் கனவு கண்டு கொண்டிருந்தார்கள். பள்ளிவாசல் எதிரிலிருக்கும் காஜாவின் பெட்டிக் கடை முன்னால் ஒரே கூட்டம், நாக்கு ரொட்டி வாங்கித் தின்ன!

மதினா ராபியாவின் காதில் கிசுகிசுத்தாள்: "காசைச் செலவழிக்காதே." ஏனென்று புரியாமல் விழித்தவளிடம், "மவுத்தான வீட்டுக் காசு! அத வச்சுக்க வேணாம். அவுஸ் தண்ணிக்குள்ள போட்டுருவோம்." பிறகு இருவரும் காசை யாருக்கும் தெரியாமல் அவுஸ் தண்ணீருக்குள் வீசினார்கள். ராபியாவுக்கு அதில் விருப்பமில்லை. காலையில் புட்டு வாங்கியாவது மீனுக்குப் போட்டிருக்கலாம். மதினா சொன்னால் நிச்சயம் அதற்கு ஒரு காரணம் இருக்கும் என்பதால் அவள் சொல்படி செய்தாள். மதினாவுக்கும் இவளுக்கும் இடையில் எந்த ஒளிவு மறைவோ, ரகசியங்களோ இதுவரை இருந்ததில்லை. ராபியாவின் சித்தி பிர்தவ்ஸ் தன் கணவனிடமிருந்து தலாக் வாங்கி வீட்டிற்குத் திரும்பி வந்து விட்ட ஒரே ஒரு விஷயத்தைத் தவிர. அதைப்பற்றி யாரிடமும் எதுவும் பேசக்கூடாது என்று அவளை அம்மா மிரட்டி வைத்திருந்தாள்.

றைமா பெரியம்மா சத்தம் போட்டாள். "இதையெல்லாம் எத்தனை நாள் மறைத்து வைக்க முடியும்? இன்னைக்கு இல்லே நாளைக்கு வெளியில வரத்தான போகுது. ஒண்ணும் தெரியாத பொண்ணிடம் போய் என்ன பேச்சு பேசுற நீ."

அவர்கள் எதற்காக இப்படி சத்தம்போட்டுக்கொள்கிறார்கள் என்பது புரியாமல் ராபியா குழப்பத்துடன் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தாள். தலாக் என்றால் என்னவென்று யாரிடம் கேட்டுத் தெரிந்துகொள்வது? புரியவில்லை. ஒருவேளை அஹமதுவுக்குத் தெரிந்திருக்குமோ?

# 3

அதிகாலையில் சேவல் கூவும் சத்தம் கேட்டு கண்விழித்த பிர்தவ்ஸ் இன்னும் கலையாத இருளை வைத்து இது பஜருக்கு முந்தைய நேரம் என்பதைப் புரிந்து கொண்டாள். இரவெல்லாம் தூங்காமல் அழுதழுது வீங்கிப் போயிருந்த இமைகள் பெரும் சுமையாகக் கனக்க, தூரத்தில் எங்கோ குழந்தை ஒன்று அழுவது சன்னமாகக் கேட்டது. அவளுக்குத் திடீரென தான் எங்கேயிருக்கிறோம் என்கிற குழப்பம் உண்டாயிற்று. இருளின் ஊடாகவே தலைமாட்டிலிருந்த சுவரைத் தடவிப் பார்த்துக் கொண்டாள். அவளது படுக்கைக்கு மேலே தட்டுப்பட்ட அலமாரி, தாய்வீட்டில் தான் இருக்கிறோம் என்பதை அவளுக்கு உணர்த்தியது. இந்த ஒரு மாத காலத்திற்குள் தனது வாழ்க்கையின் ஆதாரமான விஷயங்கள் எல்லாமே நடந்து முடிந்து விட்டதை நினைக்கும் பொழுது துக்கம் தொண்டையை அடைத்தது. இனிமேல் தனக்கு வாழ்க்கையில் ஒரு பிடிமானமும் இல்லை. எல்லாமே முடிந்துவிட்டது என்ற உண்மையைப் புரிந்துகொள்ளவே அவளுக்கு ஒரு மாதகாலம் ஆகியிருக்கிறது. இனி அவளால் வெளியில் தலைகாட்ட முடியாது. ஊர் ஏளனம் செய்யும், கேவலமாகப் பேசும், பார்க்கும்.

இதையெல்லாம் விட கொடுமையானதாக இருந்தது யூசுபுடன் வாழ வேண்டுமென்பது! அவளால் அதை ஏற்றுக்கொள்ளவே முடியாது. வேறு எந்தத் துன்பத்தை வேண்டுமானாலும் தாங்கிக் கொள்ளலாம் என்றுதான் இந்த முடிவுக்கே வந்தாள். அம்மாவும் சொஹ்ரா அக்காவும் எவ்வளவோ கெஞ்சிப்பார்த்தார்கள். அழுது தவித்தார்கள். இவள் மசியவேயில்லை. அதன்பிறகுதான் தலாக் கேட்டு பெற்றுக்கொள்வதென்கிற முடிவுக்கு வந்தார்கள்.

பிர்தவ்ஸ், தன் நிலைக்குக் காரணம் என்னவென்று எத்தனைமுறை யோசித்தாலும் முதல் காரணம் தன் அழகு மட்டுமே என்று தான் தோன்றியது. மனதிற்குள், "நான் ஏன் இத்தனை அழகாப் பொறக்கணும், இந்தச் சீரழிவு அடையணும்" என்று நினைத்துக்கொள்வாள்.

அவள் திருமணத்தன்று ஊரே இதைத்தான் பேசியது. திருமணத்திற்கு வந்திருந்த பெண்கள் எல்லோரும் இவள் காது படவே கிசுகிசுத்தார்கள்: "என்ன இது கொடுமையா இருக்கு, அவ லச்சணத்துக்கு இப்பிடி ஒரு மாப்பிள்ளையா?"

"வெளியூரு மாப்பிள்ளை இல்லெ. நிறையப் பணங்காசு இருக்கும் போல, அதுதான் பொருத்தம் பாத்துக்கிட்டிருக்க நேரமில்ல. என்னா நான் சொல்றது" என்று கேலி செய்து கொண்டிருந்தாள் ஒருத்தி. அவர்கள் பேசிச் சிரிப்பது தன்னையும் உசுப்பி விடும் நோக்கத்தில்தான் என்பது புரிந்தாலும், அதனைக் காதில் வாங்கிக்கொண்டு குனிந்து உட்கார்ந்திருந்தாள். மனதுக்குள் திக் கென்றிருந்தது.

சேலையும் சேராவும் முகத்தை மூடியிருக்க குனிந்தபடியே கண்ணில் நீர் வழிய அமர்ந்திருந்தாள். பக்கத்தில் பட்டு வேட்டி சரசரக்க வந்தமர்ந்த மாப்பிள்ளையிடம் அவளது முடியைத்தொட்டு ஸலவாத்து ஓதச்சொன்னாள் ஹாஜியம்மா. அவனது கை தனது தலைமுடியைத் தொட்டபொழுது அப்படியே தன்னை உள் இழுத்துக் கொள்ள முயன்றாள். அவனது முகத்தைப் பார்க்காமலேயே ஒருவிதமான வெறுப்பு அவளுள் தோன்றி விட்டிருந்தது. அப்படியே தலைகுனிந்து அமர்ந்திருந்தாள். பிறகு முகம்பார்க்கும் கண்ணாடியை எடுத்த ஹாஜியம்மா அவளது முகத்தை மூடியிருந்த பூவை விலக்கிவிட்டு அவனிடம் அவள் முகத்தைப் பார்க்கச் சொன்னாள். பிர்தவ்ஸுக்குத்தான் அவனைப்பார்க்க முடியவில்லை. இவளுக்குத்

தாலிகட்டிய ஹாஜியம்மாதான் தானே அத்தனை சடங்குகளையும் செய்ய வைத்துக் கொண்டிருந்தாள். இவளுக்கு அவன் முகத்தை உடனே பார்க்க வேண்டும் என்கிற பதற்றம் தொற்றிக் கொண்டிருந்தது.

அடுத்ததாக அவளைச் சகுனில் வைக்கப்பட்டிருந்த அரிசியை அளக்கச் சொன்னார்கள். அவள் அளந்து வைத்த அரிசியைத் தட்டிவிட்ட அவனது கையைப் பார்த்தவள் அதிர்ந்து போனாள். கன்னங்கரேலென சூம்பிப்போய் ஒல்லியாக நெடு நெடுவென்றிருந்த விரல்கள் அவளை மறுபடியும் அரிசி அளக்கவிடாமல் திகைக்க வைத்தன. பக்கத்திலிருந்த பெண்கள், “அம்மா பொண்ணு! இன்னும் இரண்டு தரம் அளந்து வைய்யி, நேரமாவுது இல்ல” என்று அவசரப்படுத்த, அவள் மேற்கொண்டு சுய உணர்வின்றி எல்லாம் செய்துவைத்தாள்.

மாப்பிள்ளை வீட்டார் விருந்தெல்லாம் முடிந்து கிளம்பிக் கொண்டிருந்தார்கள். லாரியில் சீரை ஏற்றி அனுப்பிவிட்டு பெண்ணையும் மாப்பிள்ளையையும் கூட்டிக் செல்லத் தயாராகிக் கொண்டிருந்தார்கள். பிர்தவ்ஸ் தன் அறையில் அம்மாவைக் கட்டிப் பிடித்து அழுது கொண்டிருந்தாள். அவளை அம்மாவிடமிருந்து பிரித்தெடுக்கவே நீண்ட நேரமாயிற்று. அம்மாவுக்கும் மகளுக்கும் இடையே சொல்லிக்கொள்ள எத்தனையோ விஷயங்கள் இருந்தாலும் அழ மட்டும்தான் முடிந்தது. பிர்தவ்ஸ் ஆமினாவைக் கட்டியணைத்து அழுதபோது தான் இங்கிருந்து போக விரும்பவில்லை என்பதை உணர்த்தும் வகையிலிருந்தது அவளது அணைப்பு. அவள் பயந்தது போலத்தான் நடந்தது.

அன்று இரவு தனித்து விடப்பட்ட அறையில் மெலிதான விளக்கொளி கசிந்து கொண்டிருக்க, பிர்தவ்ஸ் யூசுபின் தோற்றத்தைப் பார்த்த கணத்தில் சொன்னாள். “நான் உன்னோடு வாழப்

போவதில்லை. என்னைத் தொட வேண்டாம்.”

இப்பொழுது நினைத்தாலும் அவளுக்கு ஆச்சர்யமாக இருந்தது. “இந்தத் துணிச்சல் யாருக்கு வரும்? என்னைப் போன்ற படிக்காத பட்டிக்காட்டுப் பெண்ணுக்கு எப்படி வந்தது?”

ஊரே அதிர்ச்சியில் உறைந்துபோய் இருந்தது. ஆமினா தன் அறையை விட்டோ அதிகபட்சமாகத் தனது வீட்டை விட்டோ வெளியில் வருவதேயில்லை. இப்படி ஒரு அடங்காப்பிடாரியைப் பெற்றுவிட்டோமே என்று, எந்நேரமும் அழுதுகொண்டேயிருந்தாள். தலாக் வேண்டாமென சொஹ்ரா வந்து எவ்வளவோ புத்தி சொன்னாள் தங்கைக்கு.

“அழகு என்ன செய்யப் போவுது, சோறுபோடுமா சொல்லு? உன் வாழ்க்கையே இதோட முடிஞ்சு போயிடும் தெரியுமா?”

“அக்கா, அவனைப் பார்த்தாலே எனக்கு அருவெறுப்பா இருக்குக்கா. ஓநாயைப்போல அவன் முகமும் மூஞ்சியும், சீக்குப் பிடிச்சவன் மாதிரி உடம்பும் எனக்கு ஒப்பவேயில்லை. என்னால முடியவே முடியாதுக்கா. அதுக்கு நான் செத்தாவது போயிருவேன்க்கா” என்று அழுதாள்.

ஆமினா சொன்னாள். “இப்படி அசிங்கம் பண்ணறதுக்கு அதையாவது செய்திருக்கலாமே.”

பிர்தவ்ஸூக்குத் தெரியும் தான் யூசுபுடன் வாழ மறுப்பதற்கு, அவனது தோற்றம் மட்டுமே காரணமில்லை என்பது. தனக்கு இவனை மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுத்த தனது மச்சான் கரீமைத் தோற்கடிக்க வேண்டும் என்கிற வெறி அவளிடம் இருந்தது. அவளது தந்தையின் மௌத்துக்குப்பின் இந்த குடும்பத்தின் பொறுப்புக்களை ஏற்றுக் கொண்ட கரீம், தன் கட்டுப்பாட்டின்கீழ் அனைத்தையும் கொண்டுவரத் துவங்கினான். அவனுக்கு, தான் வைத்ததுதான் சட்டம்.

தன்னைமீறி யாரும் எதுவும் செய்யக்கூடாது. தன் தயவில்தான் எல்லாமும் நடக்கவேண்டும். தான் எது செய்தாலும் அது சரியாகத்தான் இருக்கும். அதை யாரும் கேள்வி கேட்கக்கூடாது.

பிர்தவ்ஸுக்கு மாப்பிள்ளை முடிவான பிறகு ஒருநாள், மாடியில் தன் கணவனோடு இருக்கும்போது, சொஹ்ராக்கா சன்னமான குரலில், "ஏங்க, மாப்பிள்ளையை உங்களுக்குப் புடிச்சு தான் பேசி முடிச்சீங்களா?" என்று சந்தேகமாகக் கேட்டாள்.

"புடிக்கிரதுன்னா?" எதிர்கேள்வி கேட்ட கரீம், "இங்கெ பாரு, மாப்பிள்ளை பாக்க லச்சணமா இல்லைதான். ஆனா, காசு பணம் நெறையா இருக்கு! அதுதான முக்கியம்? இப்ப ஊர் ஒலகத்துல நடக்குற கல்யாணம் எல்லாம் பொருத்தம் பாத்தா நடக்குது, சொல்லு? அதுவும் இல்லாம உங்க குடும்பம் இருக்க நெலைமைல இவங்க சம்பந்தத்துக்கு ஒப்புக்கிட்டு வந்ததே பெரிசு. தகப்பனும் இல்ல, கூடப்பொறந்த மச்சினன்மாரும் கிடையாது சீர் செனத்தி செய்றதுக்கு. என்னமோ எனக்காக, நான் ஏதோ நகைநட்டு போடுவேன்னுதான் வந்தானுக. இதையும் விட்டுட்டு என்னா செய்ய சொல்லு?" தீர்க்கமாக ஒலித்தது மச்சானின் குரல்.

"அதுக்காக கடனுக்குக் கட்டிக்குடுக்கறதா? எடுத்தோம் கவுத்தோமுன்னு! தகப்பன் இல்லாத புள்ளைக்கி தகப்பனா இருந்து நீங்க நல்ல வாழ்க்கையைத் தேடித் தருவீங்கன்னுதான இருந்தோம்." விசும்பலுடன் உள்ளுக்குள் பதுங்குகிறது சொஹ்ராவின் குரல்.

"அம்மா, அழுகாத! அந்தப்புள்ளை காதுல விழுந்து தொலைக்கப்போவுது." பதற்றத்துடன் அவளை அடக்குகிறான் கரீம்.

மாடிப்படிக்குக்கீழே நின்று கேட்டுக் கொண்டிருந்த பிர்தவ்ஸின் மனதிலிருந்த கனவுகள் அன்றே கலைந்து போயிற்று.

தெருவில் பெண்கள் கூட்டம் ஒன்று குளிக்கச் செல்லும் காலடிச்

சத்தத்தைக் கவனித்தாள். வழக்கம்போல அவர்களோடு சேர்ந்து தானும் குளிக்கச்செல்ல பிர்தவ்ஸுக்கும் ஆசையாக இருந்தது. இபுறாகீம் ராவுத்தர் தோட்டத்தைத் தாண்டி ஆற்றுக்குப் போவார்கள் எல்லோரும். இப்பொழுது போனால்தான் விடிவதற்குள் வீடு திரும்ப முடியும். வயதுக்கு வந்த பெண்கள் என்பதால் ஆண்களின் நடமாட்டம் துவங்குவதற்குள் வந்து சேர்ந்து விடவேண்டும். ஆற்றுக்குப்போகும் ஒற்றையடிப்பாதை யெங்கும் கூறு கூறாய் குவிந்து கிடக்கிற மலத்தினை மிதித்து விடாமல் நடப்பது இருளில் பெரும்பாடாகத்தான் இருக்கும். ஒருமாத காலத்திற்கு முன்புவரை இவளும் அவர்களோடுதான் சேர்ந்து போய்க் கொண்டிருந்தாள். முதல்நாள் இரவே எல்லோரும் கூடிப் பேசி வைத்திருப்பார்கள் காலையில் எத்தனை மணிக்குப் போகலாம் என்று. லீவு நாட்களில் இங்கு வரும் ராபியாவும் கூட வருவாள். அவளுக்குப் பயமாக இருந்தாலும் சித்தியின் கையை இறுகப் பிடித்துக் கொண்டு விடியும்வரை ‘ஒரு குடம் தண்ணி ஊத்தி ஒரு பூ பூத்துச்சு’ என தண்ணீருக்குள் நின்று ஒரே ஆட்டமாக ஆடிக்கொண்டிருப்பாள்.

இனிமேல் சொஹ்ரா இங்கு வரமாட்டாள். ராபியாவையும் கூட்டி வரமாட்டாள். சொஹ்ராவின் கோபம் தணியும் நாள் வரைக்கும்! அதன்பிறகு ராபியா வந்தாலும் கூட அவளுக்கு இதுபோல குளிக்கப் போகும் சந்தோஷம் கிடைக்கப் போவதில்லை. அவளுக்குக் கஷ்டமாக இருக்கும். கூடவே, இதற்கான காரணங்கள் என்னவென்று புரியாமல் வீட்டின் இந்தச் சோகமான சூழலில் அந்தப் பிஞ்சு மனம் குழம்பிப் போய்விடும். ஒரு விதத்தில் தான் ஒரு கெட்ட கனவொன்றிலிருந்து மீண்டு வந்துவிட்டதாகத் தோன்றினாலும், அது தான் நம்பிக் கொண்டிருக்கும் ஒரு பொய்யோ என்கிற சந்தேகமும் எழ, துயரமான மௌனத்தின் பின் வெடித்துக் கிளம்பிய கேவலுடன் அவள் அழ

ஆரம்பிக்கையில் வானில் நட்சத்திரங்கள் மறைந்து வெளிச்சம் பரவத் தொடங்கியிருந்தது.

# 4

*பள்ளியிலிருந்து திரும்பி வந்து, வீட்டுக்குள் நுழைந்து கல் வாசலில் செருப்பை உதறிவிட்டு புத்தகப்பையை “அல்லாஹு” என்றபடி தொப்பென நாற்காலியில் வைத்த ராபியாவை, “ராபியா இங்கெ வா” என்கிற அம்மாவின் குரல் அழைத்தது.*

*“உம்! இந்தா வரேன்” சுவாரஸ்யமின்றி சொல்லியபடி அம்மாவிடம் போய் நின்றவளை ஏற இறங்கப் பார்த்த சொஹ்ராவின் முகம் அதிருப்தியில் சுருங்கிற்று. “போ, மொதல்ல சோப்புப்போட்டு மொகம் கழுவு. காப்பி குடிச்சுட்டு நான் சொல்ற வேலையைச் செய்” என்றவள் அடுப்படியை நோக்கிச் சென்றாள்.*

*ராபியாவுக்கு முகம் கழுவ வேண்டும் என்கிற நினைப்பே கஷ்டமாக இருந்தது. அதோடு மட்டுமா போகப்போகிறது, முகம் கழுவி பவுடர் போடவேண்டும். பிறகுதான் அம்மாவின் முகத்தில் தெரியும் அதிருப்தி கொஞ்சமாவது குறையும் என்று நினைத்தபடியே குளிக்கும் அறையை நோக்கிச் சென்றாள். சோப்பைக் கையிலெடுத்து அழுத்தமாகக் குழைத்து, திருப்திவரும் வரைக்கும் முகத்தில் தேய்க்க ஆரம்பித்தாள்.*

*கண்ணாடிமுன் நின்று முகம் நிறைய பவுடர் பூசிக்கொண்டு தன்னையே உற்றுக் கவனித்து திருப்தியாக உணர்ந்தவள், “என்னம்மா?” என்றபடி அம்மாவிடம் வந்தாள். கையில் தயாராக காப்பியை வைத்துக் கொண்டு நின்று கொண்டிருந்த சொஹ்ரா மகளது அலங்காரத்தில் திருப்தியுற்றவளாக, “இந்த காப்பியை குடிச்சிட்டு போய் எல்லார் வீட்டுலயும் திட்டை, ஒலக்கை, சல்லடையெல்லாம் வாங்கிட்டுவா. நாளைக்கி மாவு இடிக்கணும்” என்றவள், “உனக்கு ராத்திரிக்கி தூக்கம்வராதே” எனக் குறும்பாக மகளிடம் சொல்லி வாய்*

மூடிய மறுவினாடியே, “நோன்பு வரப் போகுதா மாவு இடிக்கிறமா?” என்று ஆச்சரியத்தோடு கேட்டு சட்டென வாய் மூடிக்கொண்ட ராபியாவின் முகம் சந்தோஷத்தினால் மலர்ந்தது. நொடியில் காப்பியைக் குடித்து முடித்தவள் முதலில் மதினா வீட்டை நோக்கி ஒரே ஓட்டமாக ஓடினாள்.

ரம்ஜான் துவங்க ஓரிருவாரம் இருக்கும் போதே ஒவ்வொரு வீடாக மாவு இடிக்க ஆரம்பித்துவிடுவார்கள். ராபியாவுக்குதான் ரொம்பவும் கொண்டாட்டமாக இருக்கும். நோன்புநாள் நெருங்கிக் கொண்டிருப்பது உற்சாகத்தை உண்டுபண்ணும். சரியாக இன்னும் எத்தனை நாள் இருக்கிறது என்பதை அம்மாவிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும். மதினாவின் வீட்டை அடைந்தவள் முகப்புக்கதவு பூட்டியிருப்பதைப் பார்த்து ஒரு நிமிடம் தயங்கி நின்றாள். பிறகு அருகிலிருந்த ஜன்னல் வழியே எட்டிப்பார்த்து “மதினா” என்று கூப்பிட்டாள். பதிலேதும் இல்லாததால் மறுபடி கதவருகே வந்து ஓங்கி இரண்டு முறை தட்டினாள். உள்ளிருந்து “யாரது” என்கிற சைனுவின் குரலைத் தொடர்ந்து கதவு திறக்கப்பட, பாதியாகத் திறந்த கதவின்வழியே ராபியாவைப் பார்த்த சைனு “நீதானா” என்றபடி முழுதாகத் திறந்துவிட்டு இவள் உள்ளே வரத் தோதாக விலகி நின்றாள்.

“அதுவந்து, எங்கம்மா மாவு இடிக்க ஒலக்கையும் திட்டையும் சல்லடையும் கேட்டாங்க.” தயங்கித் தயங்கி ஒலித்த குரலில் தருவாளா மாட்டாளா என்கிற பயம் இருந்தது. விஷயத்தைச் சொல்லி முடித்த கையோடு பார்வையை சைனுவின் மீதிருந்து திருப்பி வீட்டின் உட்புறமாக நாலாபுறமும் ஓடவிட்டாள். அவள் மதினா வைத்தான் தேடுகிறாள் என்று புரிந்து கொண்ட சைனு, “ஏம்மா இப்பத்தானே பள்ளிக்கூடத்துல இருந்துட்டு பிரிஞ்சிங்க, அதுக்குள்ள அந்தப் புள்ளையைப் பாக்க தேட்டங்குடுக்குதாக்கும்” என்று நக்கலாகச்

சொல்லிவிட்டு சிரித்தாள்.

ராபியா வெட்கத்தில் முகம் சிவந்துவிட்டதாகக் கற்பனை செய்து கொண்டு, “இல்லை! சும்மாதான்” என்று தடுமாறி, “சீக்கிரமாகக் குடுங்க நான்போகணும்” என்றாள்.

“வா உள்ளெ, முத்தத்துல இருக்கு எடுத்துட்டுப்போ” என்றபடி உள்ளே திரும்பிச் சென்ற சைனு, “நாங்க இன்னைக்குத்தான் மாவு இடிச்சோம். எல்லார் வீட்டுலயும் வாங்கின ஒலக்கை, திட்டை சல்லடை எல்லாம் ஒட்டுமொத்தமா இங்கெயே இருக்கு, நீ யாரு வீட்டுக்கும் அலையாத” என்றவள், “ஆமா! இத்தினி உருப்படி இருக்குதே அம்புட்டையும் நீ என்னான்டு ஒத்தையில தூக்கிட்டுப் போவ? போ! போயி பண்ணையாளு யாராவது வரச்சொல்லு” என்றாள். அவள் குரலில் இருந்த அக்கறை ராபியாவுக்கு ரொம்பவே புதிதாக இருந்தது. என்றாலும் இந்த வேலையைத் தானே செய்ய வேண்டும் என்கிற விடாப்பிடியான ஆசையில், “இல்லெ, இல்லெ. நானே கொண்டு போயிடுவேன், ஒண்ணொண்ணா தூக்கிட்டுப் போயிடுவேன்” என்று அவசரமாகப் பதில் சொல்லிக்கொண்டே வேகமாகப் போய் முற்றத்துக் கிணற்றோரச் சுவரையொட்டிச் சாய்த்து வைக்கப்பட்டிருந்த உலக்கைகளைத் தொட்டாள்.

“அடியே! மெதுவா மெதுவா, அப்புடியே சரிஞ்சுரப்போகுது.” தூரத்திலிருந்தே குரல் கொடுத்த பரிதா ஓடிவந்து இவளருகே நின்றுகொண்டு இவளது கையைப் பிடித்துக்கொண்டாள்.

ஒன்றும் புரியாமல் பரிதாவைப் பார்க்கத் திரும்பிய ராபியாவிடம், “இரு. ஒவ்வொண்ணா நான் எடுத்துத்தறேன் உன்கையில, நீ எடுக்கவேணாம்” என்று பரிதா முதலில் ஒரு உலக்கையை எடுத்து இவளது கையில் கொடுத்தாள். “இந்தா பத்திரமா கொண்டுபோ, கால்ல போட்டுக்காம” என்றவள் எதையோ நினைத்தவளாக

மறுபடியும் அதை இவளிடமிருந்து பிடுங்கி அதே இடத்தில் வைத்துவிட்டு, “வேணாம், இதை யாராவது பெரிய ஆளுங்கள வந்து எடுக்கச் சொல்லு! பாத்துமா இருப்பாள் இல்லெ? நீ மாவு சலிக்கிய மட்டும் கொண்டு போ. எதுக்கு வீணாவுல வம்பு, திட்டை வேற நல்ல கனம்” என்றாள்.

ராபியாவுக்கு ஏனோ வருத்தமாக இருந்தது. தன்னால் முடியாது என்று பரிதாக்கா சொல்லிவிட்டாளே, என்னசெய்வது என நினைத்துக் கொண்டாள். “ரொம்பத்தான் அக்கறை, நான் என்ன பச்சைப்புள்ளையாக்கும்.” உதட்டினுள்ளாக முணுமுணுத்துக் கொண்டவள் தன் ஏமாற்றத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல் மாவு சலிக்கிகளைக் கைகளில் அடுக்கி தூக்கிக் கொண்டு வீட்டை நோக்கி நடந்தாள்.

இரவில் மெதுவாக றைமா பெரியம்மாவின் அறைக்குள்ளாக நுழைந்த ராபியாவை வியப்போடு பார்த்தாள் பெரியம்மா. “ராத்திரிக்கி உங்ககூட படுத்துக்கறேன் பெரியம்மா” கெஞ்சலாகக் கேட்டாள். “ஏங்க! என்னங்க விசேஷம்?” குறும்பாகச் சிரித்தபடி கேட்டாள் பெரியம்மா.

ஒரு வினாடி அவளது கிண்டலுக்கு நாணி தலைகுனிந்த ராபியா, உடனேயே தலைநிமிர்ந்து, “பெரியம்மா, காலையில நீங்க எந்திரிக்கிறப்போ என்னையும் எழுப்பி விடுறிங்களா? மாவு இடிக்கிறத பாக்கணும். அம்மாட்ட சொன்னா எழுப்பமாட்டாங்க.” பரிதாபமாக ஒலிக்கிற தன் குரலை ராபியாவுக்கே சகிக்க முடியவில்லை.

“இதுதானாக்கும், நாங்கூட வேற என்னமோன்னுல்ல நெனைச்சேன்.” சிரிக்கிற பெரியம்மாவின் விஷமம் புரியாமல், “அப்ப நான் படுத்துக்கறேன்” என்றபடி வேகமாக வந்து படுக்கையின் மீது தாவி தள்ளிப்படுத்துக் கொண்டாள். ராபியாவின் அவசரத்தில்

பெரியம்மா வேண்டாம் என்று சொல்லிவிடக்கூடாதே என்கிற பயமிருந்தது.

அதிகாலை மூன்று மணிக்கே இவளை எழுப்பிவிட்ட றைமா சொன்னாள். "வா, நாம போய் அரிசி களையலாம்."

கல்வாசலில் பெரிய பெரிய சில்வர் போணிகளில் அளந்து வைக்கப்பட்டிருந்த பச்சரிசியை அம்மாவும் பெரியம்மாவும் தண்ணீரை விட்டு களைய ஆரம்பித்தார்கள். அவ்வப்போது சொஹ்ரா 'உனக்குத் தேவையா' என்கிற மாதிரி இவளை முறைத்துப் பார்ப்பதைப் புரிந்துகொண்டாலும் கவனிக்காதவள் மாதிரி இருந்து கொண்டாள் ராபியா. களைந்த அரிசியை நீர்வடியவென கூடைகளில் அள்ளிப் போட்டுவிட்டு கழனியை மாடுகளுக்கென குழுதாடியில் நிரப்பிவிட்டு மறுபடி மறுபடி அரிசி பளீர் வெள்ளையாக மாறும் வரை களைந்து கொண்டிருந்த றைமா பெரியம்மாவுக்கு மூச்சு வாங்கிற்று. சற்றுநேரம் நிமிர்ந்து நின்று இளைப்பாறியவள் சொன்னாள், "ராபியா மாதிரி அரிசி பளீர் வெள்ளையா மாறணும்." அவர்களைப் பார்த்தபடியே முற்றத்துக் கல்லின் மீது குத்தவைத்து அமர்ந்திருக்கும் இவளுக்குத் தெரியும் பெரியம்மா தன்னைக் குறித்து அதைச் சொல்லவில்லை என்பது. இவள் மனதிற்குள் நினைத்துக் கொண்டாள், 'வஹிதா அக்கா மாதிரின்னு சொல்லுங்க.'

ராபியாவின் காலில் கொசு பிடுங்கிற்று, 'உஷ்! . . . ஆ!' என முனகியபடி காலை வரட்டு வரட்டென சொறிந்தாள். "எங்களுக்கு தலையெழுத்து இதெல்லாம் செய்யணும்னு! ஒனக்கென்ன வந்துச்சு இந்நேரத்துல முழிச்சு ஒக்கார்றதுக்கு" என்று சலித்தபடி சொன்ன சொஹ்ரா கதவுதட்டும் சப்தம் கேட்டு "யாரது" என்றபடி கதவை நோக்கிச் சென்றாள்.

வெளியில் சாத்தப்பனும் கூலிக்காரப் பெண்களும் நின்று

கொண்டிருந்தார்கள். கதவை விரியத் திறந்து வைத்து அவர்களை உள்ளே வரவிட்டாள். பெண்களை முதலில் உள்ளே அனுப்பிவிட்டு கடைசியாக உள்ளே நுழைந்த சாத்தப்பன் கதவைத் தாழிட்டு விட்டு வாசலுக்கு வந்து நின்றான்.

“என்ன ஆச்சு, அரிசியெல்லாம் களைஞ்சாச்சு இல்லெயா, ஊறியிருக்குமா?” என்றபடி அரிசி அண்டாவை நெருங்கி குனிந்து ஒரு கை அரிசியை அள்ளி உற்றுப்பார்த்தான். பிறகு ஒன்றிரண்டு அரிசியை வாயில் போட்டுக்கொண்டவன், “உம்! ஆரம்பிக்கலாம்” என்று உத்தரவு கொடுத்துவிட்டு தனது மேல்சட்டைப் பட்டனை கழட்டத் துவங்கினான். கழட்டிய சட்டையை இருகைகளால் சுருட்டியபடி வைக்க இடம்தேடி முற்றத்தில் நடந்தான்.

ராபியா இமைக்காமல் அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவன் நடப்பது புதிதாக இருந்தது. பேசுவதும் கூட வேறு மாதிரி இழுத்து இழுத்துப் பேசினான். ஒரு பெண்ணைப் பார்ப்பது போல இருந்தது. ஆனால் பெண்மாதிரியும் இல்லை. குழப்பத்துடன் அவன்மீதிருந்த தன் பார்வையை, கூலிப் பெண்கள் பக்கமாகத் திருப்பிக்கொண்டாள். அவர்கள் ஆறுபேர் இருந்தார்கள். அதற்குள்ளாக ஆளுக்கொரு உலக்கையைக் கையில் எடுத்து, உரலில் அரிசியை அள்ளிப் போட்டு இடிக்கத் துவங்கியிருந்தார்கள்.

இடுப்பில் கட்டிய துண்டோடு சாத்தப்பன் மாவை இடிக்கத் துவங்கியபோது லேசாக விடிய ஆரம்பித்திருந்தது.

“உம்! சீக்கிரம் பொண்டுகளா, பராக்கு பாக்காம வேலையை ஜோரா பாருங்க பாக்கலாம்” என்று சொல்லியவன் உலக்கையை ஓங்கி ஓங்கிப் போட்டான். றைமா பெரியம்மா, “எங்கே சாத்தப்பா பாட்டெல்லாம் ஆரம்பிக்கலை, நிய்யி ஆரம்பிச்சுவிடு” என்றாள்.

“பாடாம கொஞ்சம் அலுப்புத்தட்டட்டும் இவளுகளுக்கு. அப்ப

எடுத்துவிடுவேன் இல்லெ” என்று பெருமையாகச் சொன்னவன், “உம் அப்புடிப்போடு, அப்புடித்தே” என்று குரலெழுப்பி எல்லோருக்கும் உற்சாகத்தை ஊட்டினான். அவனோடு வந்த பெண்கள் சிரிப்பை அடக்கிக்கொண்டு அவனது வேகத்துக்கு இணையாக உஸ் . . .! உஸ் . . .! என்று சத்தம் எழுப்பியபடி உலக்கையைப் போட ஆரம்பித்தார்கள். சொஹ்ரா இடித்த மாவைக் கயிற்றுக்கட்டிலில் பாய்விரித்து வெயிலில் காயவைத்தாள்.

மாவு இடிக்கும் ஓசையைக் கேட்ட ராபியாவுக்கு சந்தோஷம் நிலைகொள்ளவில்லை. ரம்ஜான் வருவதற்குச் சில வாரங்களுக்கு முன்பே அனேகமாக ஒவ்வொரு வீட்டிலிருந்தும் மாவு இடிக்கும் ஓசை ஒருவித தாள லயத்துடன் ஊரெங்கும் சுற்றிச் சுற்றி ஒலித்தபடி இருக்கும். தனது உற்சாகத்தை எப்படிக் கட்டுப்படுத்துவது என்பது புரியாமல் அடுப்படிக்கும் வாசலுக்குமாக ஓடிக்கொண்டிருந்தாள். வாசலை ஒட்டிய ஹாலில் துணிவிரித்து இடித்த மாவைச் சலித்துக் கொண்டிருந்த பாத்திமா, “இந்தா, இங்கெ வா, இந்த இடிச்ச மாவைச் சலிச்சு எடு” என்று கட்டளையிட ஆர்வத்துடன் அதை ஏற்று அவளருகே போய் உட்கார்ந்து கொண்டாள். சற்று நேர ஓய்வுக்காக சுவரில் சாய்ந்து நின்று கொண்டிருந்த சாத்தப்பன், “அப்பாடி, வெயில் வரயிலயே என்னா இந்தப்போடு போடுது. கொஞ்சம் தண்ணி குடு தாயி” என்றான். பாத்திமாவைப் பார்த்து, “ஏம்புள்ள நீ பாக்குற வேலைய மாணே மகளப் பாக்க வச்சிருக்க, என்னா நிய்யி” என்று சலித்துக் கொண்டான்.

“நீ சும்மா இரு சாத்தப்பா, பாத்துட்டுப் போகட்டும். சும்மா அதுக்கும் இதுக்குமா தெண்டமா ஓடிக்கிட்டு இருக்கிறா இல்லெ. அப்புறம், இந்தப் பாடுபட்டு மாவு இடிச்சு பணியாரமும் இடியாப்பமும் சுட்டுத் திங்கப் போறது யாரு வாயி? நம்பளப் போல

*வேலைக்காரவுக வாயா, இவுக வாயிதான?" துடுக்காகச் சொல்லி களுக்கென்று சிரித்தாள் பாத்திமா.*

*"அடியாத்தீ" முகவாய்க்கட்டையில் கை வைத்து அதிசயித்த சாத்தப்பன், "இங்கெ பாருவே, இந்தக்கூத்தை! இந்தப்புள்ளை என்னா தெனாவெட்டாப் பேசுதுன்னு" என்று மற்ற கூலிப்பெண்களைப் பார்த்துச் சொன்னான். இடுப்பை அசைத்து அசைத்து நடந்து வந்து சொஹ்ராவிடமிருந்து சொம்பை வாங்கித் தண்ணீர் குடித்தான்.*

*இவ்வளவு நேரமாக ஒன்றும் பேசாமல் மாவைச் சலித்துக் கொண்டிருந்த றைமா, "இவதான? இதுவும் பேசுவா இதுக்கு மேலேயும் பேசுவா சாத்தப்பா, ஒனக்குத் தெரியுமா?" என்று கிண்டலாகச் சொல்லிவிட்டு, "சரி! ஏதாவது பாட்டுப்பாடு போரடிக்காம" என்றாள்.*

*பெரியம்மா இப்படிச் சொன்னதும் பாத்திமாவின் முகம் பெருமையினால் பூரிப்பதை ராபியாவால் கவனிக்க முடிந்தது.*

*"வாங்க! எல்லாரும் மொத டீயைக் குடிங்க" என்றபடியே அடுப்படியிலிருந்து வெளியில் வந்த சொஹ்ரா ராபியாவின் வாய் மாவை அசை போடுவதைப் பார்த்து, "அடி பச்ச மாவையா திங்கிற? வயித்துக்க ஒத்துக்குமா," என்று அதட்டினாள். "நீங்களும் பாத்துக்கிட்டு இருக்கீங்க. அவளைப் பாருங்க," என்று றைமாவிடம் அலுத்துக் கொண்டபடி தானும் வந்து மாவு சலிக்க உட்கார்ந்தாள்.*

*இவள் உட்கார்ந்தும் பாத்திமா எழுந்துபோய் எல்லோருக்கும் டீயை ஊற்றிக் கொடுத்துவிட்டு, "சீக்கிரம், வெயில் வாறதுக்குள்ள இடிச்சு முடிங்க. நான் அடுப்பை மூட்டி மாவை வறுக்க ஏற்பாடு செய்றேன்" என்றாள்.*

*"அதான் வெயிலு வந்துருச்சே, காலா காலத்துல எங்களுக் கென்னா புதுசாக்கும்" என்றபடி சாத்தப்பன் தரையின் மீது சப்பணமிட்டு உட்கார்ந்துகொண்டு டீயைக் குடித்தான்.*

ராபியா வைத்த கண்ணை எடுக்காமல் சாத்தப்பனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் நிற்பது, நடப்பது, பேசுவது எல்லாவற்றையும் தொடர்ந்து கவனித்துப் பார்த்தாள். றைமா பெரியம்மாவிடம் அப்புறம் என்னவெல்லாம் கேட்கலாம் என்கிற யோசனை அவள் மனத்தில் ஓடிக்கொண்டிருந்தது.

கல்வாசலில் குண்டுக்கல் மூன்றை உருட்டிப்போட்டு அடுப்பு மூட்டிய பாத்திமா மாவு வறுக்கும் மண்பானை ஓட்டை அடுப்பில் வைப்பதற்காகக் கையில் எடுத்தபோது, “இரு நான் வாறேன்” என்ற சொஹ்ரா மாவு சலிப்பதை நிறுத்திவிட்டு அவளிடமிருந்து ஓட்டைத் தன் கையில் வாங்கிக் கொண்டுபோய் அடுப்பின்மீது “பிஸ்மில்லா” சொல்லி வைத்தாள். ஒரு பாத்திரத்தில் சலித்த மாவைத் தானே அள்ளிக் கொண்டுபோய் அதனுள் கொட்டிவிட்டு, “துடுப்பை எடுத்துக்கிட்டு வா சாத்தப்பா” என்றாள். மீண்டும் வந்து தன் இடத்தில் வந்து அமர்ந்து கொண்டாள். அம்மாவின் செய்கையால் ஏனோ பாத்திமாவின் முகம் மாறியதை ராபியா கவனித்தாள்.

உட்காரும் பலகையைப் போட்டு அடுப்பிற்கெதிரே உட்கார்ந்து கொண்டு மாவைத் துடுப்பினால் கிண்டியபடியே உற்சாகமாகப் பாட்டொன்றைப் பாடத் துவங்கினான் சாத்தப்பன். அவனது பாட்டு தந்த உற்சாகத்தோடு பெண்கள் அரிசியை வேக வேகமாகக் குத்த ஆரம்பிக்க, றைமாவும் சொஹ்ராவும் கிண்டலாக ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டார்கள்.

பாட்டைப் பாதியில் நிறுத்திவிட்டு, “ஓடியாங்க மாவு வறுபட்டுருச்சு! வந்து அள்ளி ஆறவிடுங்க. ஆறியதும் மறுபடி சலிச்சு வேலையை முடிக்கணும், சீக்கிரம்!” என்று அவசரப்படுத்தினான். இன்னும் ராபியாவுக்கு அவன் பேரிலான ஆர்வம் குறையாமல் இருந்தது. நீளமான மூக்கும் படர்ந்த நெற்றியும் அடர்த்தியான புருவமும்

எப்படிப் பார்த்தாலும் ஏனோ ஒரு பெண்ணைப் பார்ப்பது போலவே இருந்தது இவளுக்கு. வறுத்து ஆறிய மாவைச் சலிக்க ஆரம்பிக்கையில், தாங்கிக்கொள்ளவியலாத ஆர்வத்துடன் றைமா பெரியம்மாவின் காதோரம் ஒட்டி உதட்டைக்கொண்டு போனாள். பெரியம்மாவின் பார்வை, "இப்பொழுது எதுவும் கேட்காதே" எனக் கட்டளையிட்டது. ஏமாற்றத்துடன் மறுபடி தனது இடத்தில் அமர்ந்து கொண்டு சலிக்க ஆரம்பித்த ராபியா, வாய்நிறைய மாவை அள்ளிப் போட்டுக் கொள்வதைப்பார்த்து, "கொஞ்சமா தின்னு சனியனே. புரைக்கேறி சாகப்போறே" என்று பதற்றத்துடன் கத்தினாள் சொஹ்ரா.

மாவு வறுக்கும் ஓசையுடன் சாத்தப்பனின் பாட்டுச் சத்தம் தொடர்ந்து கேட்டுக்கொண்டிருந்தது. ராபியாவுக்கு ஒரு பாட்டுக் கூட புரியவே இல்லை. எந்தப்படத்திலும் இந்தப் பாடல்களைக் கேட்டதாகவே ஞாபகம் இல்லை என்றாலும் பாட்டு அவளுக்கு ரொம்பவே பிடித்திருந்தது. புகையும் தூசியும் கண்ணிலிருந்து நீரை வரவழைக்கவே பாவாடையில் கண்களைக் கசக்கிவிட்டுக் கொண்டாள். வீடே கசகசவென்றிருந்தது. எல்லோருடைய தலை முடியிலும் உடம்பிலும் மாவு ஒட்டி பூச்சாண்டித் தோற்றத்தைக் காட்டியது. எவ்வளவு தட்டிவிட்டாலும் முடி நரைத்தது போல பார்க்கவே வேடிக்கையாக இருந்தது. ஓடிப்போய் கண்ணாடி முன்பாக நின்று கொண்டாள். இப்படியே தெருவிற்குப் போய் மதினாவிடம் காட்டினால் என்ன என்று நினைத்தாள். உடனேயே அந்த நினைப்பைக் கைவிட்டாள். "இவ்வளவு மாவு காயிறதைப் பார்த்தா திருஷ்டி வச்சிருவாங்க. கதவைத் தொறக்கவே கூடாது" என்று காலையிலேயே தன்னிடம் அம்மா அறிவுறுத்தியது நினைவுக்கு வந்தது.

நேரம் நடுப்பகலை எட்டியிருந்தது. வெயிலின் உக்கிரம் தாங்கமுடியாமல், நடைபாதை நிழலில் வரிசையாக

அமர்ந்திருந்தார்கள் கூலிக்காரப் பெண்களும் சாத்தப்பனும். காலையில் உற்சாகமாக வந்தவர்களின் முகம் சோர்வினால் வதங்கிபோயிருந்தது. ராபியாவுக்கு பாவமாக இருந்தது. மெதுவாக அம்மாவிடம் போய் பக்கத்தில் அமர்ந்து கொண்டு, “அவுகளுக்குச் சாப்பாடு?” என்றாள்.

“இந்தா குடுக்கணும்” என்றபடி அடுப்படியைப் பார்த்துத் திரும்பி, “ஏன் பாத்துமா, இவுக எல்லாருக்கும் சாப்பாட்டைப் போட்டுக்குடு” என்றாள். பிறகு றைமாவின் பக்கமாகத் திரும்பி மெதுவான குரலில், “ஏக்கா, கர்ண பரம்பரையில் வந்தவுக யாரையும் பாத்ததில்லையில்ல நீங்க?” என்றபின் ஒருநிமிடம் இடைவெளி விட்டு விட்டு, “இந்தா பாத்துக்கங்க” என்று ராபியாவை நோக்கிக் கண்ணைக் காட்டினாள். ராபியாவுக்கு ஒன்றும் புரியவில்லை என்றாலும் வெட்கம் பிடுங்கித் தின்றது. “போங்கம்மா” என்று செல்லமாகச் சிணுங்கிக்கொண்டாள்.

“சரி சரி, வா! நாம் அதிரசமாவு கிண்டலாம். அடுப்புல பாத்துமா வெல்லப்பாகு வச்சிருக்கா” என்றபடி எழுந்த றைமாவைப் பின்தொடர்ந்து சொஹ்ராவும் அடுப்படிக்குள் சென்றாள். திடீரென மீண்டும் பற்றிக் கொண்ட உற்சாகத்துடன் துள்ளி எழுந்து அவர்களோடு சேர்ந்து கொண்டாள் ராபியா.

றைமா பெரியம்மா கால்களுக்கிடையில் சட்டியை இறுகப் பற்றியபடி துடுப்பினால் கிண்ட ஆரம்பிக்க, மெது மெதுவாக அரிசி மாவைச் சட்டிக்குள் அள்ளித் தூவினாள் சொஹ்ரா. வீடு முழுக்க வெல்லப்பாகின் மணம் நிரம்பி மனதைக் குதூகலம் கொள்ளச் செய்தது ராபியாவுக்கு. நோன்பு வரப்போகிறது. பாத்திஹா ஓதத்தான் இதெல்லாம் செய்கிறார்கள் என்கிற நினைவினால் உண்டாகிய உற்சாகம் கட்டுக்கடங்காமல் பீறிட்டது. சொஹ்ராவின் பின்புறமாக நின்று றைமாபெரியம்மாவின் கைகள் துடுப்பைப் பிடித்து

சட்டிக்குள்ளாக மெதுவாகச் சுற்றிச் சுழல்வதைக் கண்கொட்டாமல் பார்த்தபடியிருந்தாள். வழுவழுவென்று வெண்ணெயைப் போல், பொன்நிறத்தில் சுழல்கிற மாவை அள்ளித் தின்ன வேண்டும் என்கிற ஆசை உண்டானது. ஆனால் அம்மா தின்ன விடமாட்டாள். "சீக்கிரம் உக்காந்திருவ, இனிப்புத் தின்னா" என்பாள்.

அவளது கண்களில் தெரிகிற ஆர்வத்தைப் புரிந்து கொண்ட பெரியம்மா, "இந்தா ராபியா நீ கொஞ்சம் மாவு தின்னுபாரு நல்லாருக்கான்னு" என்று சொல்லியபடி துடுப்பில் அள்ளி ஒரு தட்டில் வைத்து நீட்டினாள்.

"இதை எதுக்கு அவளுக்குக் குடுக்கிறிங்க? அதான் சீனி அதிரச மாவு கிண்டுவோமில்ல, அதைக் குடுங்க." ஏதோ காரணத்தை மனதில் வைத்திருப்பது போலச் சொன்னாள் சொஹ்ரா. இவளுக்கு அம்மாவின் மீது எரிச்சலாக வந்தது. "இல்லெ இதே போதும்." அவசரமாகச் சொல்லிவிட்டு கைநீட்டி தட்டை வாங்கிக் கொண்டாள் ராபியா. அம்மாவுக்கும் பெரியம்மாவுக்கும் அடுப்படி வெக்கையில் உடல் முழுக்க வியர்த்துத் தொப்பலாக நனைந்து கொண்டிருந்தது. அடுப்பிலிருந்த சீனிப்பாகை இறக்கி, மறுபடியும் வேலையைத் தொடர்ந்தார்கள். இவளுக்கு ஏனோ அங்கே இருக்கப் பிடிக்கவில்லை. மறுபடியும் வாசலுக்கு வந்தவள் சாத்தப்பனையும் அந்த பெண்களையும் கவனிக்க ஆரம்பித்தாள். அவர்கள் வேலையை முடிக்க வேண்டுமென்கிற கவலையோடு அமர்ந்திருக்கிறார்களோ என்கிற சந்தேகம் உண்டாயிற்று. பார்க்கவே கஷ்டமாக இருந்தது ராபியாவுக்கு.

இவளைப் பார்த்து பிரியமாகச் சிரித்தான் சாத்தப்பன். "ஏன் மாணே மகளே, இப்புடி வருத்தமா நிக்கிறீங்க, எங்கெ மாணேனையெல்லாம் காணலை? சாப்பிடக்கூட இன்னமும் வரலை" என்றான்.

மாவு இடிக்கும் நாளில் அத்தாவும் பெரியத்தாவும் மறந்தும்கூட

பகலில் வீட்டுப்பக்கம் வரமாட்டார்கள். வீடே அலங்கோலமாகக் கிடக்கிறதென்று சொல்லி சாப்பாட்டைக் கடைக்கு அனுப்பச் சொல்லி சாப்பிடுவார்கள் என்பது இவளுக்குத் தெரியும் “அதுவந்து, கடைக்கி சாப்பாடு குடுத்துவிட்டாச்சு” என்றாள். பிறகும் கேட்கலாமா வேணடாமா என்பது போல் தயங்கித் தயங்கி நின்றவளிடம் ராமாயியும் பொன்னியும் சேர்ந்தாற்போல, “என்னமோ யோசிக்கிறீகளா? என்னான்னு சொல்றது” என்றார்கள்.

பெரிய கண்களில் வியப்பு மிதக்க அவர்களை நெருங்கியவள், “அது வந்து, ஒண்ணுமில்ல, உங்களுக்குக் கைவலிக்குமா, வலிக்காதான்னு கேட்கலாம்னு நெனைச்சேன்.” குசுகுசுவென ஒலித்தது அவளது குரல். அம்மாவின் காதில் விழுந்துவிடக்கூடாதே, என்பது போல.

“இங்கெ பாருவே இந்தப் புள்ளைய” எனச் சொல்லி விழுந்து விழுந்து சிரித்தான் சாத்தப்பன். அம்மா வந்துவிடப்போகிறாள் என்கிற பயம் பிடித்துக்கொள்ள பதிலையே எதிர்பார்க்காமல் அங்கிருந்து ஓடி அடுப்படிக்குள் புகுந்து கொண்டாள் ராபியா.

அன்றிரவு முழுக்க கால்வலிக்கு அம்மாவும் பெரியம்மாவும் மாற்றி மாற்றி மருந்து தேய்த்தார்கள். இருந்தும், அம்மா இரவெல்லாம் வலியினால் தூங்காமல் புரண்டு கொண்டிருந்தாள். எப்போதும் இப்படித்தான். ராபியாவுக்குக் கஷ்டமாக இருந்தது. “எதுக்காகம்மா இவ்வளவு கஷ்டப்பட்டு மாவு இடிக்கணும்” என்றாள் கவலையோடு.

“நோன்பு திறந்திட்டு ஆம்பளைங்களுக்குச் சாப்பிட இடியாப்பம் சுடணும் இல்லெ? அதுக்குத்தான்” என்றாள் அம்மா. வீடுவீடாகப் போய் மாவு சலிக்கி, உலக்கைகளைத் திருப்பிக் கொடுத்ததில் தனக்கும் கூட கால் வலித்தாலும் அம்மாவையும் பெரியம்மாவையும் நினைத்து வருத்தமாக இருந்தது அவளுக்கு.

# 5

அன்று மாலை நேர வெப்பம் கடுமையாகயிருந்தது. மற்றெந்த நாளையும்விட இன்று மிக முக்கியமான நாள். ராபியாவுக்கு மட்டுமல்ல, எல்லாப் பிள்ளைகளுக்கும் பெரியவர்களுக்கும் கூடத்தான். இன்னும் சிறிது நேரத்தில் இருள் கவியத்தொடங்கிவிடும். அப்பொழுதுதான் வானில் ரமலான் பிறை தோன்றும். அதன் பிறகு அடுத்த ஒருமாத காலத்திற்கு ஒரே கொண்டாட்டம்தான். இந்த ரமலான் மாதத்தில் இறப்பதற்குக் கூட கொடுத்து வைத்திருக்க வேண்டுமாம். நேரடி சொர்க்கம் நிச்சயம். இதெல்லாம் அம்மா சொல்லிக் கேட்டிருக்கிறாள். தினமும் வீடுகளில் நோன்பு திறக்கும் பொழுது தின்பதற்குத் தீனி நிறையக் கிடைக்கும். இவையெல்லாவற்றையும் விட சந்தோஷமான விஷயம் இம்மாதத்தில் அல்லா பேய்களை வானத்தில் கட்டிப்போட்டு விடுவான் என்பதுதான்.

சாயங்காலத்திலிருந்தே அவளும் மதினாவும் இன்னும் சில பிள்ளைகளும் ராபியாவின் வீட்டுக்கருகேயிருந்த காலியிடத்தில் ஆளுக்கொரு கல்லைத் தூக்கிப்போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். ராபியாவின் கெண்டைக்காலில் கொசுகடிக்க ஆரம்பிக்க பல்லைக் கடித்தபடி வரட் வரட்டெனச் சொறிந்து கொண்டிருந்தாள். மதினா கேட்டாள்: “ஏன் ராபியா, இன்னிக்கு அவசியம் பிறை வருமில்ல?”

அவளுக்கு ஏனோ சந்தேகமாக இருந்தது. அது தங்களை ஏமாற்றி விடுமோ என்று. அவளது நீளமான முகத்தில் ஏமாற்றத்தின் சாயல் படர்ந்திருந்ததைக் கவனித்த ராபியா அவளுக்காகவேனும் இன்று

பிறை தெரிந்துவிட வேண்டும் என விரும்பினாள். அவளது முகவாட்டத்தைத் தற்சமயத்திற்காவது போக்க வேண்டுமென்கிற நினைப்பில், "வரும், கட்டாயம் வரும். அப்பிடி தெரியலைன்னாலும் கூட சிலோன் ரேடியாவுல சொல்வாங்க இல்ல?" என்றாள். ஆறுதல் சொல்கிற தோரணையோடு.

"ஆமா, உங்க வீட்டுல மாவு இடிச்சாச்சா?" என்றாள் மதினா.

"உம். இடிச்சாச்சே, உங்க வீட்டுல இடிச்சதுக்கு மக்காநாள். அதைக்கூட மறந்துட்டியா" என்று கேட்டாள் ராபியா.

"மறந்தே போயிட்டேன் பாரு" என்று தன் நெற்றியில் லேசாகத் தட்டிக்கொண்டாள் மதினா.

கொஞ்ச நேரம் மௌனமாக வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்த ராபியாவுக்கு போரடித்தது. கழுத்துவேறு வலியெடுத்தது. சலிப்புடன் மதினாவைப் பார்க்கத் திரும்பியவள், "வா மதினா நாம கொஞ்ச நேரம் கல்லா மண்ணா விளையாடலாம்" என்றாள். மதினாவின் முகத்தில் விளையாடுவதற்கான ஆர்வம் இருப்பதாகவே தெரியவில்லை. இருந்தாலும் ராபியா கேட்டு விட்டாளே என்பதற்காக, "உம் விளையாடுவோம்" என்றபடி பளிச்சென எழுந்து நின்றாள்.

அவள் தனக்காகத்தான் அப்படிச் சொல்கிறாள் என்பதைப் புரிந்து, விளையாடும் எண்ணத்தைக் கைவிட்ட ராபியா, "ஊஹும், வேணாம், ஆள் பத்தாது இல்லெ, என்ன செய்றது?" என்றவள், தன்னைச் சுற்றிலும் தலையைத் திருப்பிப் பார்த்தாள். தான் விளையாட வராததற்குக் காரணம் மதினாவின் ஆர்வமின்மை அல்ல. நிஜமாகவே ஆள் பற்றாக்குறைதான் என்பதாக அவள் நம்ப வேண்டும் என்றும் விரும்பினாள் ராபியா.

ராபியா சொன்னதை ஒப்புக்கொண்டவளாக மறுபடியும் தரையில் கிடந்த கல்லின்மீது குத்துக்காலிட்டு அமர்ந்த மதினா, "இன்னக்கி ஏன்

தவக்களை வீட்டுப் பக்கிகளையும் பிகேஎல் வீட்டுப் பக்கிகளையும் தெருவுல காணோம். தினமும் சாங்காலம் இங்கெனதான வெளையாடுவாளுக சைத்தானுக" என்று தனக்குள்ளாக முனகிக் கொண்டாள் ராபியாவின் விருப்பம் நிறைவேறாதது குறித்து வருத்தம் தொனிக்கும் குரலில். ராபியா பதில் ஒன்றும் சொல்லாமல் தன் முகபாவனையாலேயே அதனை ஆமோதித்தாள்.

அவர்களுக்கெதிரில் ஓராசு வீட்டுப் பசு எதையோ அசை போட்டபடி நின்றுகொண்டிருந்தது. அதன் வாயிலிருந்து நுரையோடு வழியும் எச்சில் தரையில் வழிந்தது. அது தன் பிரவுண் நிறக்கண்களால் ஏதோ காரியமாகப் பார்ப்பதுபோல இவர்கள் இருவரையும் ஆழமாக உற்றுப்பார்த்தது. சினை தள்ளிய வயிறு முழுக்க ஒட்டியிருக்கும் ஈக்களைத் தனது செவலை நிற வாலைச் சுழற்றி விரட்ட முயன்று தோற்றது. அதனை இரக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்த ராபியாவுக்கு அந்த ஈக்களை எப்படியேனும் ஓட்டி விட முடியுமா என்கிற நினைவு எழ, அது முடிகிற காரியமில்லை என்று தோன்றியது. ஈக்கள் பசுவின் கழுத்தைக் கெட்டியாகப் பற்றிக் கிடந்தன. ஒவ்வொன்றும் மொச்சைக் கொட்டையளவில். ஒன்றாவது சிறியதாக இல்லை.

இன்னும் ஒன்றிரண்டு நாளில் கன்று போட்டுவிடுமாம். ஓராசுக் கிழவி நேற்று அம்மாவிடம் சொல்லியதைக் கேட்டுக் கொண்டிருந்தது நினைவுக்கு வந்தது. இந்த முறையாவது கன்று போடுவதை அவசியம் பார்க்கவேண்டும் என்பதில் ஆர்வமாக இருந்தாள். இந்தப் பசு போன வருஷம் வலி வந்து துடித்துக்கொண்டிருந்தபொழுது அம்மா வந்து இழுத்துக் கொண்டு போய்விட்டாள், "பயந்து போயிடுவேடி" என்று சொல்லி.

"என்ன யோசனை?" மதினா தோளைத்தொட்டு உலுக்கினாள்

"ஒண்ணுமில்லையே" என்றவள், "இங்கேபாருவே, இந்த மாட்டு மேல எம்புட்டு ஈ கடிச்சுக்கிட்டு இருக்குன்னு பாவம் இல்லே" என்றாள்.

"ப் . . . சு . . .! பெரிய அதிசயத்த பாத்துட்ட, மாட்டுமேலே ஈதானா இருக்கும், உண்ணியும்கூட இருக்கும் தெரியுமா? எதுக்கும் நீ தள்ளியே உக்காரு. வாலுல அடிச்சு வெரட்டறப்போ நம்ம மேல தெறிச்சுரும்." கிண்டலும் அக்கறையுமாகச் சொன்னாள் மதினா. அவளது குரலில் மாட்டுக்காகவெல்லாமா பரிதாபப்படுவார்கள் என்கிற நக்கல் இழையோடியது. அதனைக் கவனிக்காதவள் போல ராபியா தனது பார்வையை வானத்தில் பதித்தாள். மதினா மாட்டை, "சூ . . .! சூ . . .!" வென விரட்டி அந்த இடத்தை விட்டு சற்று தொலைவுக்கு நகர்த்திச் சென்றுவிட்டு மறுபடியும் வந்து அமர்ந்து கொண்டாள். மாட்டின் குளம்பு மண்ணைக் கலைத்ததில் எழுந்த புழுதியின் நெடி அவர்களைச் சூழ்ந்தது.

"என்ன இன்னமும் பிறையைக் காணோமே?" அலுப்புடன் ராபியாவின் முகத்தைப் பார்த்தாள் மதினா. "வந்துரும் பாரு" வானத்தைப் பார்த்தபடியே அவளை ஆறுதல்படுத்தும் விதமாக ஒலித்தது ராபியாவின் குரல்.

கண்ணுக்கெட்டும் தூரம் வரைக்கும் துளிமேகங்கூட இல்லாமல் பளிச்சென்றிருந்தது வானம். அம்மா வடகம் காயப்போடுவதற்கென்று வைத்திருந்த வெளிறிய நீலச் சேலையின் நிறத்தில். பிறை வந்தாலும் ஒளிந்துகொள்ள வழியில்லாதபடிதான் இருந்தது.

தெற்குப்பக்கமாக ஓரிடத்தில் மட்டும் ஒதுக்கமாகக் குவிந்து கிடந்தது மேகக்கூட்டம். பாத்திமா துணி துவைக்கும்போது பலகைக் கல்லுக்குக்கீழே ஒதுங்கிக்கிடக்கும் அழுக்கு நுரையைப்போல்! பாத்திமா அதட்ட, அதட்ட இவள் தன் கரங்களால் நுரையைக் கிண்டிக்கிண்டி விளையாடிக்கொண்டிருப்பாள். சற்றுத் தொலைவில்

ஒரு துண்டு மேகம் மட்டும் தன்னந்தனியே உட்கார்ந்து கொண்டிருந்தது. யாரிடமோ காய் விட்டுவிட்டு கோபமாய் ஒதுங்கி இருப்பது மாதிரி! அதைப் பார்க்கவே பரிதாபமாய் இருந்தது அவளுக்கு. என்றாலும் மறுவினாடியே, “ச்சேச்சே . . .! அது என்னா மனுஷாளா, சும்மா மேகம். இதுக்கெல்லாமா பாவப்படுறது” என்று மனதிற்குள் நினைத்துச் சிரித்துக்கொண்டாள்.

“ஏய் . . .! ஓடியாங்கடா டோய்.” ராபியா வீட்டுக்கு பக்கவாட்டுத் தொண்டுக்குள்ளிருந்து தட தடவென ஓடி வருகிறது பிள்ளைகளின் கூட்டமொன்று. திடுக்கிட்டுத் திரும்பிய ராபியாவின் பின்புறம் கிளம்பிய புழுதிக்கிடையே தென்பட்ட அஹமதுவும் இலியாஸும் இன்னும் சப்தமாகக் குரலெழுப்பியபடி அவளது முன்பாக வந்து நின்று, “உஸ் . . .! அல்லாஹு” என்று மூச்சு வாங்கினார்கள். அவர்களோடு ஓடிவந்த பிகேஎல் வீட்டுப்பிள்ளைகள் மட்டும் நிற்காமல் தம் வீட்டை நோக்கி ஓடிக்கொண்டிருந்தார்கள், “அவுங்கவுங்க வீட்டுக்கு அவரக்கா சோத்துக்கு, புள்ளைபெத்த வீட்டுக்கு பிரியாணி சோத்துக்கு” என்று தொண்டை கிழியும் குரலில் கத்தியபடி! “சனியனுக! புழுதியை என்னமா கிளப்பிவிட்டுட்டுப் போவுதுக பாருவே” என்றபடி இடது உள்ளங்கையை மூக்கிற்கருகே கொண்டு போய் பொத்திக்கொண்ட மதினாவின் முகத்தில் எரிச்சல் மண்டியது. அவள் சனியன் என்று சொல்வது தன்னைத்தான் என்பதைப் புரியாத அஹமது சற்றுத் தள்ளியிருந்த குண்டுக்கல்லின் மீது சட்டமாக உட்கார்ந்துகொண்டு ஏதோ காரியமாக இருப்பதுபோல, கவனமாக வானத்தை அண்ணாந்து பார்க்க ஆரம்பித்தான்.

நெடுநேரமாக வானை அண்ணாந்து பார்த்ததில் சோர்ந்து போய் விட்டார்கள். பிறை தெரிந்த பிறகுதான் ஸஹருக்கான ஏற்பாடுகளில்

இறங்க வேண்டும். வீட்டில் சமையல் செய்ய இவள்தான் கடைக்குப் போய் காயும் வாழைப்பழமும் முட்டையும் வாங்கி வர வேண்டும்.

ராபியா அலுத்துப்போய் வருத்தத்துடன் எழுந்து நின்று பாவாடையின் பின்புறத்தைத் தட்டி இல்லாத மணலை உதிரச் செய்தாள். “நான் சாப்பிடப் போறேன், பசிக்குது” என்று மதினாவிடம் சொன்னபடி நடக்க ஆரம்பித்தாள். “அப்ப பிறை வந்த விபரம் ரேடியோவுல கேட்டுச் சொல்லுவ இல்ல” பின்னாடியிருந்து கத்தியபடி தொடர்ந்தாள் மதினா.

அவள் தன்னிடம் மதிப்பு வைத்துக் கேட்டதும் ராபியாவுக்குத் தாங்க முடியாத சந்தோஷம் உண்டாயிற்று. மற்ற பிள்ளைகளுக்கு மத்தியில் தான் ஒரு முக்கியமான ஆளாக இருப்பது போல உணர்ந்தாள். அதுவும் பக்கத்தில் அஹமது வேறு இருந்தான்.

“ஓ! சொல்றேன்” என்றாள் கர்வமாக! அஹமது தன்பாட்டுக்கு இருக்காமல், “நீ என்ன சொல்றது. இன்னும் கொஞ்ச நேரத்துல பள்ளிவாசல் மைக்குல மோதினார் பாவா சொல்லிருவாருல்ல, சும்மா எம்முன்னால பீத்திக்கிறாளுக” என்றான்.

மதினாவுக்கும் ராபியாவுக்கும் அவன் பேச்சு கோபத்தை உண்டு பண்ணினாலும் பதில் சொல்லாமல் வீட்டை நோக்கிப் போகத் துவங்கினார்கள்.

முதல் நோன்பு என்பதால் ராபியாவும் மதினாவும் நோன்பு வைத்திருந்தார்கள். அவர்களால் முப்பது நோன்பும் வைக்க முடியாது. முதலாவது, பதினைந்தாவது, இருபத்தி ஏழாவது, கடைசி என்று விசேஷமான நோன்புகளை வைக்கத்தான் வீட்டில் அனுமதிப்பார்கள். பெரியத்தாதான் தினமும் திட்டிக்கொண்டிருப்பார், பொம்பளப் பிள்ளைய நோன்பு வைக்க விடுங்க, வயசாகல என்று. அம்மா வைக்க விடமாட்டாள். காலையில் சாப்பிடும் வேலையும் இல்லை,

மதரஸாவும் இல்லை. அவர்களிருவரும் சீக்கிரமாகவே ஸ்கூலுக்கு வந்து விட்டார்கள். உமா இனிமேல்தான் வருவாள். பள்ளியில் ஒரு ஆசிரியர்கூட இன்னும் வந்திருக்கவில்லை. பள்ளியே வெறிச்சோடிக் கிடந்தது. வகுப்பறைக்கு வெளியில், பின்புறமாக இருந்த மாமர நிழலில் இருவரும் நின்று கொண்டிருந்தார்கள். மரத்தில் தரையோடு தாழ்ந்திருந்த கிளையில் தாவி ஏறி உட்கார்ந்த ராபியாவுக்கு அம்மா இதைப் பார்த்தால் என்ன சொல்வாள் என்பது ஞாபகத்துக்கு வந்து சிரிப்புண்டாகியது.

தனக்குள் சிரித்தபடி தான் அணிந்திருந்த பச்சைநிற சீருடையின் பின்பகுதியை லேசாகக் கை வைத்து பிசுபிசுப்பிருக்கிறதாவென்று அழுத்திப்பார்த்தாள். பிறகு மனநிம்மதியோடு கையை எடுத்து மரக்கிளையின் மீது வைத்து அதனை மெதுவாக ஆட்டி விட்டுக் கொண்டாள். இவளைத் தொடர்ந்து மரக்கிளையில் ஏறி உட்கார்ந்த மதினா இவளது செயலின் அர்த்தம் புரியாமல் ராபியாவின் முகத்தை உற்றுப் பார்த்தாள். அவளது வட்டமான உருண்டை முகம் ஏதோ கவலையினால் இருப்பது போலத் தோன்றிற்று. இருந்தாலும் பேசாமல் இருந்தாள்.

“ஏன் ராபியா இன்னைக்கு உங்க வீட்டுல ஸஹருக்கு என்ன சாப்பாடு?” என்றாள்.

சிறிது நேரம் யோசனை செய்வது போலிருந்து விட்டு, “முதல் ஸஹருல்ல, அதனால பருப்பானமும் கறியும்தான். உங்க வீட்டுல?” என்று கேட்டாள்.

“எங்க வீட்டுலயும்தான்” என்ற மதினா, “நீ எத்தினி மணிக்கு எந்திரிச்சே ஸஹர்நேரம்” என்றாள்.

“மூணுமணிக்கே எந்திரிச்சிட்டேன் தெரியுமா?” பெருமையாகச் சொன்னவள், “சஹர்முஸாபிர நீ பாக்கலையா என்ன” என்றாள்.

“நான் நாலுமணிக்குத்தான் எழுந்திருச்சேன், ராபியா” வருத்தத்துடன் சொன்ன மதினா, “ஆமா, அப்பவே முழிச்சு என்ன செய்வியாம்?” என்றாள்.

“எங்க அம்மா இரண்டரை மணிக்கே அலாரம் வச்சு எழுந் திரிச்சுருவாங்க. அந்தச் சத்தத்துல நானும் எழுந்திரிச்சிருவேன் இல்லே.”

“அப்பவே எழுந்திரிச்சு உங்கம்மா என்ன செய்வாங்க?” கண்களை அகலத்திறந்து ஆச்சர்யமாகக் கேட்டாள் மதினா.

“அப்ப எழுந்தாத்தானே சரியா இருக்கும்? முதல்ல அடுப்பு மூட்டி சோறு ஆக்குவாங்க. சோறு வேகுறப்போ ஒலுச்செய்துட்டு தஹஜ்ஜத் தொழுவாங்க. அப்புறம் மத்த வேலைகளப் பாக்கறதுக்குள்ள நாலு மணி ஆயிரும் இல்ல” என்ற ராபியா ஸஹருக்குச் சாப்பிடும்போது சாப்பிடவே முடியாமல் தான் எத்தனை சிரமப்பட்டோம் என்பதை நினைத்துக் கொண்டாள்.

முதல் நோன்பு வைக்கப்போகிற பெருமையில் ரொம்பவே ஆர்வமாக அத்தாவுக்கும் பெரியத்தாவுக்கும் நடுவே உட்கார்ந்து கொண்டாள். நாளைக்குச் சாயங்காலம் வரைக்கும் சாப்பிடவோ, தண்ணீர் குடிக்கவோ முடியாது. அதனால் வயிறு நிறைய சாப்பிட்டுக் கொள்ள வேண்டும் என்று மனதில் நினைத்துக்கொண்டவள் பாவாடை முடிச்சைத் தளர்த்திவிட்டு மறுபடி முடிச்சிட்டுக் கொண்டாள். தட்டில் சோறு வைக்கப்போன அத்தாவிடம், “நானே வச்சுக்கிறேன்” என்றபடி தட்டுநிறைய சோற்றை அள்ளி வைத்துக் கொண்டாள். மனம் திருப்தியாக இருந்தது.

இவ்வளவையும் எப்படியாவது சாப்பிட்டு முடித்துவிட்டால் போதும். நாள் முழுக்க பசிக்கவே பசிக்காது என்று தனக்குள்ளாக முனகியபடி சோற்றின் மேற்புறம் முழுக்க நனையும்படி சாம்பாரை

அள்ளி அள்ளி ஊற்றினாள் “சிந்தாம, சிந்தாம” பதற்றத்துடன் சொன்ன பெரியத்தாவிடம், “இல்லெ, சிந்தாது” என்று பதில் சொன்னபடி ஊற்றி முடித்து ஆவலாகத் தட்டின் நடுப்பகுதியில் கைவைத்துப் பிசைய ஆரம்பித்தாள்.

கண்கொட்டாமல் இவளையே கவனித்துக் கொண்டிருந்த பெரியத்தா, “இந்தா நிறுத்து” என்று தடுத்து, “ஆமா நீ சோறு பிசையுறயா, இல்லெ சிமெண்டு குழைக்கிறயா? சோத்தை மொத ஒரு ஓரத்துல பிசைஞ்சு கொஞ்சங்கொஞ்சமா சாப்புடணும்னு ரஸூலுல்லா சொல்லியிருக்காங்க இல்ல? இப்புடியா போட்டு உழப்புவாங்க” என்று மென்மையாகவும் அதேசமயம் கண்டிப்புடனும் சொன்னார். ராபியாவுக்கு வெட்கமாக இருந்தது. “சரிங்க பெரியத்தா” என்றபடி முதல்வாய் சோற்றைத் தலையைக் குனிந்து கொண்டு கூச்சத்துடன் வாயில் வைத்து சாப்பிட ஆரம்பித்தாள். சிறிது நேரம் இவள் சாப்பிடுவதையே கவனித்துக்கொண்டிருந்தவர், “ராபியாம்மா, கொஞ்சம் இங்கெ வாங்க” என்று அடுப்படியை நோக்கித் தலையைத் திருப்பி அம்மாவைக் கூப்பிட்டுக் குரல் கொடுத்தார். எதற்காகக் கூப்பிடுகிறார் என்பது புரியாத குழப்பத்தில் அடுத்தவாய் சாப்பிடாமல் அத்தாவையும் பெரியத்தாவையும் மாறி மாறிப் பார்த்தாள் ராபியா.

“இதோ வந்துட்டேன் மச்சான்” என்றபடி தலை முக்காட்டை முன்பக்கமாக இழுத்துவிட்டுக் கொண்டபடி அவர்களை நோக்கி வந்த சொஹ்ரா தூணருகில் மறைவாக நின்றுகொண்டு என்ன என்பது மாதிரி பார்த்தாள். எதையுமே கவனிக்காதவராக அத்தா சாப்பிட்டுக் கொண்டிருந்தார். இப்பொழுது ராபியா குழப்பத்துடன் அம்மாவையும் பெரியத்தாவையும் மாறி மாறிப் பார்த்தாள். அம்மாவின் பக்கமாகத் தலையைத் திருப்பிய அவரிடம், “சஹர் நேரம்

போய்க்கிட்டு இருக்கு, இன்னும் நீங்க சாப்பிட ஆரம்பிக்கவேயில்லை” என்றாள் அம்மா. அவள் குரலில் கவலை நன்றாகத் தெரிகிறது.

“சாப்புடுவோம், இன்னுந்தான் நேரம் கிடக்குதுல்ல” என்று அசிரத்தையாகச் சொன்னவர், “என்ன ராபியாம்மா, நீங்க பொம் பளப்பிள்ளைக்கி ஒரு பழக்கமும் சொல்லிக் குடுக்காம இருக்கீங்க” என்றார். வருத்தம் மண்டியிருந்தது அவர் குரலிலும் முகத்திலும்.

அவர் கேட்பதன் அர்த்தம் விளங்காமல் அம்மா விழித்தபடியிருந்தாள். பதில்சொல்லத் தெரியாமல் அமைதியான அவளின் பார்வை ராபியாவின் மீது விழுந்தது. தான் செய்த தவறு என்னவென்பது புரியாமல் பரிதாபமாக அம்மாவைப் பார்த்தாள் அவள்.

“இங்கெ பாருங்க, தலையில துணியில்ல. சாப்புடுறப்போ தலையில துணி போடாம சாப்புடுறது என்ன பழக்கம் சொல்லுங்க? சோத்தை ஒரேயடியா போட்டு ஒழப்பி சாப்புடுறா. கொஞ்சங் கொஞ்சமா பிசைஞ்சு சாப்புடுறதுல என்ன நன்மைங்கறது தெரியல. தட்டைச் சுத்தி எத்தினி பருக்கை சிந்திக் கிடக்குது பாருங்க. பிஸ்மில்லாவாவது சொல்லிச் சாப்பிட்டாளா என்னான்னு தெரியல. பொம்பளைப் புள்ளைய கொஞ்சம் இல்மோட வளருங்க, அதபு மரியாதையைக் கத்துக்குடுங்க. இன்னின்னதுல இத்தினி பர்ளு இருக்கு, இத்தினி நபில் இருக்குன்னு சொல்லிக்குடுங்க.” மூச்சு விடாமல் சொல்லும் அவர் குரல் மென்மையாகவும், அக்கறையாகவும் ஒலிக்க, வலதுகை ராபியாவின் தலையின் மீது அன்போடு வருடிக்கொண்டிருந்தது.

அம்மா ஒன்றும் சொல்லத் தோன்றாதவளாக அங்கேயே நின்றுகொண்டிருந்தாள். அவளது பார்வை முழுக்க ராபியாவின் மீது நிலைத்திருந்தது. ஓடுகாலிச்சிறுக்கி, உன்னால எனக்குல்ல கெட்ட பேரு என்று சொல்வது போலிருந்தது அந்தப் பார்வை.

ராபியாவின் பார்வை பெரியம்மாவைத் தேடி உள்ளறைக்குள் துழாவி மீண்டது. கைவிரல்களுக்கிடையே சோற்றுப் பருக்கைகள் நசுங்கியிருந்தன. அவள் மௌனமாகத் தலைநிமிர்ந்து பெரியத்தாவைப் பார்த்தாள். கனிவாகப் பார்த்துச் சிரித்துக்கொண்டே தனது மடியிலிருந்த கர்ச்சீப்பை எடுத்து அவள் தலையில் விரித்துவிட்டு "உம் சாப்புடு" என்றபடியே தனக்கெதிரே இருந்த தட்டில் சோற்றை அள்ளி வைக்க ஆரம்பித்தார். அவரது முகத்தில் சொல்ல வந்த விஷயத்தைச் சொல்லிவிட்ட திருப்தி தெரிந்தது. கரீம் சாப்பிட்டுக் கொண்டிருந்ததை நிறுத்திவிட்டு நிலைமையைச் சரிசெய்யும் விதமாக, "உம் சீக்கிரம் சாப்புடுங்க, டயமாவுதுல்ல" என்றான்.

"சொஹ்றா, இந்த அப்பளத்தை வந்து எடுத்துக்கிட்டுப்போ." அடுப்படியிலிருந்து பெரியம்மாவின் குரல் கேட்கவும் அவசரமாகவே அங்கிருந்து சென்ற அம்மாவைப் பயத்துடன் பார்த்தாள் ராபியா.

"லொள் லொள்" எனக் குரைத்தபடியே கிரவுண்டில் ஓடிக் கொண்டிருந்தது கட்டையன் வீட்டு நாய். அது எழுப்பிய சத்தத்தில் தன்நினைவுக்கு வந்த ராபியா நாயைப் பின்தொடர்ந்து தன் பார்வையைக் கொண்டு சென்றாள். அது மலையடிவாரத்தை நோக்கி வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. "கிறுக்கு! எதுக்காக இம்புட்டு ஸ்பீடா ஓடுது" என தனக்குள்ளாக முணுமுணுத்துக் கொண்டாள். மனதில் பாவம் இன்றைக்குத் தன்னிடமிருந்து மதியச் சாப்பாடு அதற்குக் கிடைக்காது என்பதை நினைத்துப் பரிதாபப்பட்டுக் கொண்டு தலையை அண்ணாந்து சரசரக்கிற மரத்தைப் பார்த்தாள். மரத்தின் கிளைகளுக்கிடையே ஓடிக்கொண்டிருந்த அணில் சற்று நிதானித்து நின்று தன் மணிக்கண்களால் இவளையே பார்த்தது. அதன் பார்வையில் என்னவோ ஓடியதுபோதும் என்று இவள்தான் அதற்குக் கட்டளையிட்டது போலிருந்தது. ராபியா தனது வலது கையைத்

தலைக்கு மேலாக உயர்த்தி “ச்சூ” என்று அசைக்க பயத்தில் ஒரே குதியில் ஓடி மறைந்தது அணில். மரக்கிளைகளுக்கிடையே அதனைத் தேடியலைந்த பார்வை கடைசியில் மரமெங்கும் பாய் விரித்திருக்கிற பூக்களின் மீது விழுந்தது.

“அம்மாடியோவ் எம்புட்டுப்பூ பாருவே” என்று புத்தகத்தில் எதையோ தேடிக்கொண்டிருந்த மதினாவின் தொடையில் கை வைத்து உலுக்கினாள். “உம்” என்றபடியே தலையை அண்ணாந்து பார்த்துவிட்டு மறுபடியும் புத்தகத்தைப் புரட்டியபடி இருந்தாள் அவள்.

“இந்த வருஷம் நிறைய மாம்பழம் தோட்டத்திலிருந்து வரும்” என்று முணுமுணுத்த ராபியாவின் மனம் சந்தோஷத்தால் நிரம்பியது.

தோட்டத்திலிருந்து பறித்த மாங்காய்களைப் பத்தி புருஷன் பாண்டி மாட்டுவண்டி நிறைய நிரப்பிக் கொண்டு வந்து வீட்டு உள்ளறைக்குள் தரையில் சாக்கை விரித்து ஜாதி வாரியாகப் பிரித்து தனித்தனியே கொட்டிவைப்பான். மொத்தம் பத்து வண்டி காய்கள் தேறும். ஒரு நாளைக்கு இரண்டு வண்டியாகக் கொண்டு வந்து சேர்த்து வைக்கோலும் சாக்கும் போட்டு மூடி எலி நுழைந்து விடாமல் சந்துகளில் துணியைத் திணித்து வைத்துவிட்டு அறையை இறுக்கி அடைத்துப் போவான். இரண்டு நாளைக்கு ஒருதரம் பூட்டைத் திறந்து அம்மாவோ, பெரியம்மாவோ உள்ளேபோய் கதவைத் தாளிட்டுக் கொண்டு பழுத்துவிட்டதா என்று பார்த்து வருவார்கள். இவளை உள்ளே விடமாட்டார்கள். நானும் உள்ளே வருவேன் என்று அடம்பிடிக்கும் இவளிடம் பெரியம்மா கண்டிப்புடன் சொல்வாள்: “உள்ளே ஒரு எலி போச்சுன்னாலும் தொலைஞ்சது ராபியா, அடம் பிடிக்காதே.”

பழுத்த மாம்பழங்களைக் கூடைகளில் அள்ளி பெரியத்தா

ஒவ்வொரு உறவுக்கார வீடுகளுக்கும் மாரியாயியிடம் கொடுத்தனுப்பும் போது பழங்களை ஏக்கத்துடன் பார்த்தபடியே உட்கார்ந்திருப்பாள் இவள்.

"மாம்பழம் ரொம்பத் தின்னு தொலைக்காதே. சூடு! சட்டுனு ஒக்காந்துருவே." குறுக்கும் நெடுக்கும் நடந்தபடியே கறுவிக் கொண்டிருப்பாள் அம்மா. "ஆமாம் எம்புட்டு காய்ச்சு என்னாவப்போவுது நானா திங்க முடியும்? ஏன்தான் வளந்து தொலைச்சோமோ, சின்னப்பிள்ளையாகவே இருந்துருக்காமல்" என்று தனக்குள்ளாகச் சொல்லி மனதைத் தேற்றிக் கொண்ட ராபியா, "என்னத்த தேடிக்கிட்டு இருக்க, ரொம்ப நேரமா?" என்றாள்.

"ஒண்ணுமில்ல, அஞ்சு ரூபா பணம் வச்சிருந்தேன். இந்த புக்குலதான் வச்ச ஞாபகம். ஆனா காணலை. அதுதான்." ரூபாயைக் காணாத வருத்தம் மதினாவின் குரலில் இருந்தது. அதோடு ஸஹர் முஸாபரைப் பார்க்க முடியவில்லையே என்று ஆதங்கமும் இருந்திருக்கவேண்டும்.

கொஞ்ச நேரம் இருவரும் எதுவும் பேசிக் கொள்ளாமலிருந்தார்கள். காற்று இதமாக வீசியது. மாமரத்திலிருந்து பூக்கள் உதிர்ந்து தரையில் விழுவதைக் கவனித்துக் கொண்டிருந்த ராபியா, திடீரென நினைவு வந்ததுபோல, "ஆமா, நீ வீட்டுப்பாடம் எழுதிட்டியா?" என்றாள்.

"இல்ல." அலட்சியமாகப் பதில் சொன்னாள் மதினா.

"ஏன், சார் அடிக்க மாட்டாங்க?" தன் பயத்தை வெளிப்படுத்தினாள் ராபியா.

"நான்தான் நோன்பு வச்சிருக்கேன் இல்ல, சார் அடிக்க மாட்டாங்களே" என்றாள் மதினா சிரித்துக்கொண்டே.

ரம்ஜான் மாதத்தில் அவர்களுக்குக் கிடைக்கும் சிறு சலுகை ஆசிரியர்கள் யாரும் அடிக்கமாட்டார்கள் என்பதுதான். அந்தப்

பெருமை எல்லாப் பிள்ளைகளுக்குமே உண்டு.

மதினாவின் தலையில் செல்லமாகக் குட்டி, “நீ சரியான ஆளு” என்றவளின் குரலில், தான் மட்டும் வீட்டுப்பாடத்தைக் கை வலிக்க எழுதிவிட்டோமே என்கிற வருத்தமிருந்தது.

# 6

நடு இரவில் திடுக்கிட்டுக் கண் விழித்தாள் ஆமினா. கை அவளையறியாமலேயே தன்னருகில் பாயைத் துழாவிற்று. பிர்தவ்ஸின் கதகதப்பான உடல் கையில் தட்டுப்பட்டவுடன் நிம்மதியடைந்தவளாக 'யாஅல்லாஹ்' என முனகினாள். பிர்தவ்ஸை இன்னும் எத்தனை காலத்துக்குத்தான் இப்படி வயிற்றுக்குள் போட்டு படுத்திருக்கப் போகிறோமோ என்கிற எண்ணம் எழுந்து துக்கமாக மாறித் தொண்டையை அடைத்தது. மனதொடிந்த நிலையில் ஏதாவது செய்து உயிரைப் போக்கிக் கொள்ளக்கூடாதே என்ற பயம் ஆமினாவைத் தூங்க விடாமல் செய்து கொண்டிருந்தது.

அவளுக்கு ஏனோ தன் திருமணம் நடந்த விதமும் தன் தாய், தந்தை, தங்கை ஞாபகமும் வந்தது. கனி ராவுத்தரின் நிறம் தொட்டுப் பொட்டு வைத்துக் கொள்ளலாம் போல ஒரு கறுப்பு. அம்மாதான் எத்தனை வெண்மையாக அழகாக இருப்பாள். அவள் ஒரு அறைக்குள் உட்கார்ந்திருந்தாள் என்றால் ஒரு மின்னல் கீற்று உள்ளேயிருப்பது போல பிரகாசமாக இருக்கும். விளக்காங் குழியிலிருக்கும் சிம்னி விளக்கின் ஒளியில் அவள் நிறம் தகதகக்கும். என்றாலும் அம்மாவுக்கும் அத்தாவுக்கும் எப்போதாவது சண்டை வந்திருக்குமா?

கனி ராவுத்தர் தனது வியாபாரத்தை முடித்து விட்டு ஊர் திரும்பினாரென்றால் ஆர்ப்பாட்டமாகத்தானிருக்கும். தான் கொண்டு வந்த பணத்தைத் தடபுடலாகச் செலவு செய்து ஊரையே கலக்கிக் கொண்டிருப்பார். கறிக்கார நைனார் கடையில் போய் நான்கு ஆட்டுத் தலையை வாங்கி, தெருவில் அனைவரும் பார்க்கும்படி இரண்டு கைகளிலும் இரண்டிரண்டாகக் காதைப்பிடித்துத் தூக்கிக் கொண்டு

வருவார். தெருப் பெண்கள், "இவருக்கு எதுக்கு இத்தினி பவுசு" என்று பேசிக் கொள்வார்கள்.

பொழுது போகாத நேரத்தில் அரசமரத்தடியில் அமர்ந்து சீட்டாடுவார். அப்படி சீட்டாடும் போதுதான் இஸ்மாயிலும் வந்து கூட ஆடத் துவங்கினான். ஒரு நாள் விளையாட்டாகப் பேசிக் கொண்டிருந்த இஸ்மாயில் கனியிடம், "பணம்வெச்சு விளையாடப் புடிக்கலே மாமு. பணம் என்ன எங்கிட்டே இல்லாததா?" என்று சொல்லி எழுந்தான்.

"பிறகென்ன மாப்பிளே வச்சு வெளையாடுறதுக்கு? சொல்லு" என்று குஷியாகக் கேட்டார் ராவுத்தர்.

"உங்க பொண்ணை வச்சு ஆடலாம், நான் ஜெயிச்சா அவளைக் கட்டிக்கிறேன்" என்று சொல்லியிருக்கிறான்.

"ஒனக்குப் பொண்ணுக்குடுக்க கசக்குதா? இருந்தாலும் வெளையாடிப் பாத்துருவோம்" என்று ஆட்டத்தை ஆரம்பித்திருக்கிறார்.

அன்று மாலை பள்ளிகூடத்திலிருந்து திரும்பிவந்து தெருவில் நின்றபடி எதையோ தின்று கொண்டிருந்த ஆமினாவை ஒரே சந்தோஷமும் பாட்டுமாக வந்த ராவுத்தர், "ஏண்டி பொண்ணு இங்கெனெ அத்தாகிட்ட வா" என்று கூப்பிட்டார்.

"ஏய் கத்துஜா, வா இங்கே, உம்மகளுக்குக் கல்யாணம் பேசிட்டு வந்திருக்கேன் ஓடிவா" என்று உற்சாகமாகக் கூப்பிட்டவர் அடுப்படியை நோக்கித் தலையை எட்டிப் பார்த்துவிட்டு தன் மீசையை முறுக்கி விட்டுக் கொண்டார்.

அரைகுறையாகக் காதில் விழுந்த விஷயத்தைத் தெளிவாக்கிக் கொள்ளும் பொருட்டு வந்தாள் கதிஜா. சிறு வயதில் காலில் அம்மி

விழுந்து நைத்து விட்டதால் அவளுக்கு நடை நேராக வராது. இழுத்துவைத்துதான் நடப்பாள்.

அவரது அருகில் வந்தவள் தரையில் விரித்திருந்த தடுக்கில் அமர்ந்தபடி, “என்ன சொன்னீங்க” என்றாள் ஆர்வத்துடன்.

“பெரிய வீட்டு இஸ்மாயில் இல்ல, அவன் ஒம் பொண்ணைக் கட்டிக்குடுன்னு கேட்டான். சரி, கட்டிக்கடான்னு சொல்லிட்டேன்” என்று சொல்லி சத்தம்போட்டுச் சிரித்தார், எப்படி என் சாமர்த்தியம் என்பது போல.

அவர் எதிர்பார்த்தபடி கதிஜாவின் முகத்தில் பெரிய சந்தோஷம் எதுவும் தோன்றாதது அவருக்கு ஏமாற்றமாக இருந்தது. அதனை மறைத்துக்கொண்டபடி, “ஏன் ஒண்ணும் சொல்ல மாட்டிகளோ” என்று கிண்டலாகக் கேட்டு அவளைக் கூர்ந்து நோக்கினார்.

“அதுக்கில்லேங்க. இவளுக்கு இப்போதான் பத்து வயசு முடிஞ்சிருக்கு. என்ன அவசரம்னுதான். அந்த இஸ்மாயிலும் கூட மொதத்தாரம் கட்டி இழந்து, வயசும் முப்பதத் தாண்டிக் கெடக்குமுல்ல” என்று தயக்கத்துடன் தன் அதிருப்தியை வெளிப்படுத்திவிட்டு அவரது பதிலை எதிர்நோக்கி உட்கார்ந்திருந்தாள்.

“இம்புட்டுத்தானாக்கும். நான்கூட என்னவோ ஏதோன்னுல்ல நெனைச்சேன். போடி போ. இதெல்லாம் ஒரு காரணமா? ஊர் உலகத்துல இல்லாததச் செய்ற மாதிரியில்ல சலிச்சுக்கிற்ற. நான் வாக்குக் குடுத்தாச்சு. அடுத்த வாரத்துல ஜும்மாவுல நிக்கா. சரி, சரி! போய் எனக்குக் குடிக்கக் கொஞ்சம் தண்ணி வெச்சுக்குடு” என்று சொல்லிவிட்டு துண்டை உதறித் தோளில் சுற்றிப் போட்டபடி மிடுக்காக நடந்து திண்ணைக்குப் போனார்.

அடுத்த சில நாட்களில் திருமணம் நடந்தபோது ஆமினாவுக்கு

எதுவும் புரிந்தமாதிரி இல்லை. ஊரெல்லாம் ஆச்சர்யப்படும் விதத்தில் சாப்பாடும் குதிரை ஆட்டமும் நடந்தது. கனி ராவுத்தர் புளியங்கொம்பு பார்த்துப் பிடித்ததையே ஊரெல்லாம் பேசிப் பொறாமைப்பட்டது. அதே கனி ராவுத்தர் தன் இரண்டாவது பெண் மைமூனுக்கு தன் வியாபாரத் தொடர்புகள் மூலம் மாப் பிள்ளை பார்த்து முடித்தபிறகுதான் அவரது சந்தோஷமும் உற்சாகமும் பறிபோனது.

மணமான இரண்டே மாதத்தில் வீடு வந்து சேர்ந்தாள் மைமூன். அவனோடு வாழவே மாட்டேன் என்றபடி வீட்டின் மச்சு அறையில் நெற்குதிரை ஓட்டி ஒடுங்கிப்போய் அமர்ந்திருந்த அவளிடம் ஆமினாவும் கதிஜாவும் புத்திமதி சொல்லித் திருப்பி அனுப்பிவிட எவ்வளவோ முயற்சித்தும் மன்றாடிப் பார்த்தும் அவள் அசைந்து கொடுக்கவேயில்லை. “முடியாது” என்று மட்டும் சொல்லியபடியேயிருந்தாள். சிம்னி விளக்கின் ஒளிபட்டுத் தெறித்த அவளது பிஞ்சு முகத்திலிருந்த பிடிவாதத்தையும் வைராக்கியத்தையும் இவர்களால் தெளிவாகப் பார்க்க முடிந்தது. யாரும் இனி இது குறித்துப் பேசக்கூடாது என்கிற கட்டளையும் அதிலிருந்தது.

தன் குடும்பத்திற்கு நேர்ந்த அவமானம் கதிஜாவைக் காட்டிலும் கனி ராவுத்தரை ரொம்பவே பாதித்து இருந்தது. அவர் தனது சிரிப்பு, பாட்டு, கிண்டல் அனைத்தையும் மறந்து வீட்டிற்குள்ளேயே முடங்கிக் கிடக்க ஆரம்பித்தார். கதிஜா அழுததெல்லாம், “நாமதான் பொட்டச்சிக, வீட்டுக்குள்ள கிடக்கறோம். அவரு ஆம்பளை, நாலு இடம்போகக் கொள்ள, கடைத்தெரு போகக்கூட வழியில்லாமப் போயிருச்சே” என்றுதான்.

கனி ராவுத்தருக்கு ஆமினாவைப் பார்க்கும் பொழுதெல்லாம் கண்களில் நீர் கோர்க்கும். “என் பிள்ளை” என்று தனக்குள் முனகிக் கொள்வார். தான் சொன்ன மாப்பிள்ளையை ஒரு மறுப்பும்

சொல்லாமல் கட்டிக் கொண்ட தியாகியாகத்தான் அவர் அவளை நினைத்துக் கொள்வார். இப்போதெல்லாம் வெளி உலகத்திற்கோ, வியாபாரத்திற்கோ போகாத நிலையில் ஆமினா, இஸ்மாயில் தயவில்தான் குடும்பம் ஓடிக்கொண்டிருந்தது. அவன் எத்தனை தங்கமானவன் எனத் தன் மருமகனை நினைத்துப் பூரித்துப்போவார். முன்பு மாதிரி வெளியில் வியாபாரத்திற்குப் போவதில்லை என்றாலும், ஏதோ வீட்டிலிருந்தேனும் கொஞ்சம் வருமானத்திற்கு வழிபார்ப்போமென தினமும் காலை உணவுக்குப் பின் உட்காரும் பலகையை எடுத்துப் போட்டு முற்றத்தில் அமர்ந்து மொத்த விலைக்கு வாங்கி வைத்திருக்கும் ஊதுபத்திக் கட்டை அவிழ்த்து நான்கு நான்காகப் பிரித்து, எடுத்துக் கொள்வார். பிறகு தனது சிறிய மரப்பெட்டியிலிருக்கும் சென்ட் குப்பிகளை வரிசையாக எடுத்து தரையில் அடுக்கி ஒவ்வொன்றாகத் திறந்து, முகர்ந்து பார்த்து ஒவ்வொன்றிலிருந்தும் ஒரு சில துளி அத்தரை உள்ளங்கையில் விட்டு ஒன்றாக்கிக் கொள்வார். அதை நான்கு ஊதுபத்திகளின் மீதும் மிருதுவாகத் தடவித்தடவி விடுவார். பிறகு வாசனை சரியாக இருக்கிறதாவென முகர்ந்து பார்ப்பார். அவருக்கு திருப்தியாகும்போது அதனை ஒரு முறத்தில் அடுக்கி வைத்து முற்றத்து இளம் வெயிலில் காயவைப்பார். நாள் முழுக்க அத்தர் பூசிய ஊதுபத்திகளை ரோஸ் வண்ண ஜரிகைக் காகிதங்களில் பத்துப் பத்தாக அடுக்கி நுனி வரை சுருட்டி மடித்து ஒரு அட்டைப் பெட்டியில் அடுக்கத் துவங்குவார். யாருடைய ஒத்தாசையையும் அவர் விரும்புவதில்லை. மிகச்சன்னமான குரலில் தனக்குள்ளாகவே ஒரு பைத்தை முணுமுணுத்தபடி வேலை செய்து கொண்டிருப்பார். யாரும் இடையூறு செய்யவோ பேசவோ தயங்கும் விதத்தில் அக்குரல் வருத்தம் தோய்ந்து நெஞ்சைப் பிழிவதாக இருக்கும். பிறகு மரப்பெட்டியில் அத்தர் பாட்டில்களை வரிசையாக அடுக்கத்

துவங்குவார்.

ஆமினாவுக்கு அந்த பாட்டில்களைப் பார்க்கப் பார்க்க ஆசையாக இருக்கும். விதவிதமான வடிவங்களில் அவை இருக்கும். மூடிகளும் அழகழகான வடிவங்களில் இருக்கும். நடுங்கும் தன் கரங்களில் அவற்றை ஒவ்வொன்றாக எடுத்து இறுக அடைத்திருக்கிறதாவென சரிபார்த்து பத்திரப்படுத்துவார். ஒரு சில நாட்களில் தெரிந்த வியாபாரி ஒருவன் வந்து ஊதுபத்திக்கட்டுகளைப் பணம் கொடுத்துப் பெற்றுச் செல்வான். அந்தப் பணத்தை நடுங்கும் கைகளினால் பெற்றுக்கொள்கையில் தன் தந்தையின் முகத்தில் தெரியும் பெருமிதம் ஆமினாவின் சின்னஞ்சிறிய விழிகளைக் கண்ணீரால் பளபளக்கச் செய்யும்.

திடீரென ஒருநாள் மைமூன் வாந்தி எடுத்தாள். கதீஜா ஓடிவந்து ஆமினாவை அவளது வீட்டிலிருந்து கூட்டிக்கொண்டு வரும் வழியில், "நீ வந்து அவகிட்டக் கேளு. பாவிமக எதையுமே சொல்ல மாட்டேங்கிறா" என்றாள் நடுக்கமுற்ற குரலில். கையில் அரிக்கேன் விளக்கோடு அவர்கள் தெருவில் இறங்கி நடந்து செல்லும் போது, தெருவெங்கும் மணலோடு இருள் கலந்து கிடந்தது. யாராவது பார்த்து, "என்ன, இந்நேரத்துல எங்கெ போற ஆமினா?" என்று கேட்டால் என்ன பதில் சொல்வது என யோசித்தபடியே மெதுவாக அடியெடுத்து வைத்து நடந்து கொண்டிருந்தாள். இந்த வயதில் தான் பிள்ளை பெற்று குடும்பம் நடத்துவதே பெரிய விஷயமாக இருக்கும்பொழுது இவளது பிரச்னைகளை வேறு தலையில் சுமக்க வேண்டியிருக்கிறதே என்று அவளுக்குச் சலிப்பாக இருந்தது. கல்யாணம் முடிந்து விட்ட பிறகு கணவனோடு வாழ்வதைத் தவிர வேறு நினைப்பும் பெண்களுக்கு வரும் என்பதையே மைமூனிடமிருந்துதான் தெரிந்து கொண்டாள். ஊரில் தலைகாட்ட முடியாத கேவலத்தைத் தன் குடும்பத்திற்குத்

தந்துவிட்ட பிறகு அவள் உயிரோடு இருக்கத்தான் வேண்டுமா என்றிருந்தது. வீட்டை நெருங்கி மரப்படலைத் திறந்து மெதுவாக உள்ளே நுழைந்தார்கள் இருவரும். அத்தாவுக்கு எதுவும் தெரியக் கூடாது; ரொம்பவே மனமொடிந்து போவார் என்கிற கவலை வேறு அவளை அரித்தது. இவள் தலாக் வாங்கின ஒரு கேவலம் போதாது என்று இதுவேறா என்று அவர் உயிர் போய்விடும். தெருவில் நாய் ஊளையிடும் சத்தம் பயத்தை உண்டுபண்ணிற்று. இந்நேரம் சொஹ்ரா தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டு அழுதால் கணவனும் எழுந்து தன்னைத் தேடுவான் என நினைத்துக் கொண்டாள். விஷயம் தன் மாமியார் ஒருத்திக்கு மட்டும் தெரிந்தால் போதும். வேறு வினையே வேண்டாம் என்றெல்லாம் நினைத்தபடி மைமூன் படுத்திருக்கும் அறைக்குள் நுழைந்தாள்.

மறுநாள் மாலை வீட்டிலுள்ள மாட்டு வண்டியைப் பண்ணையாள் மருதுவிடம் கட்டச்சொல்லியிருந்தாள். அவனது மனைவி முருகி பக்கத்து ஊரிலிருக்கும் மருத்துவச்சியைப் பற்றி சொல்லியிருந்தாள். “அவளால ஆகாதது எதுவுமேயில்லை.” தானே போய் மாட்டு வண்டியில் கையோடு அவளைக் கூட்டி வருவதாகவும் சொன்னாள். பக்கத்து ஊர்தான் என்றாலும் இப்பொழுது போனால் வருவதற்கு இரவு பத்து மணிக்கு மேலாகும். அதுதான் சரியான நேரமும் கூட என்பதனால் மருதுவும் முருகியும் போயிருந்தார்கள்.

இருள் நாலாபுறமும் பரவ இருட்டிக் கொண்டிருந்தது. சொஹ்ராவுக்குச் சீக்கிரமே சாப்பாடு கொடுத்துத் தூங்க வைத்திருந்தாள். இஸ்மாயில் வியாபார விஷயமாக ஊரிலில்லை என்பதால் தோதாக இருக்கும் என்றுதான் இந்த நாளைத் தேர்ந்தெடுத்திருந்தாள். என்றாலும் அவளது மனம் கட்டுக்கடங்காதபடிக்குப் பயம் கொண்டிருந்தது. நடக்கவிருக்கும்

செயலின் விபரீதம் முழுமையாக மனதில் படிய மறுத்தது. இதைவிட்டாலும் வேறு வழி இந்தக் கிராமத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. தங்கையின் வயிற்றுப் பாரம் கரைந்தால் போதுமென்றிருந்தது. ஊரில் இவள் உண்டாகியிருப்பது தெரிந்தால்? நினைக்கையிலேயே மனம் நடுங்கிற்று. குழந்தையைப் பெற்றெடுக்க முடியாத நிலையில் இதைத்தான் செய்ய வேண்டும். அவளை வேறொரு இடத்தில் உடனடியாகக் கட்டிக் கொடுப்பதாக இஸ்மாயில் சொல்லியிருந்தான். தலாக் வாங்கின இத்தா முடியட்டுமென்றுதான் காத்திருந்தார்கள். அதற்கிடையில் இந்தக் குழந்தை எதற்காக?

ஊர் அடங்கிய பிறகு மெதுவாகத் தெருவில் இறங்கி நடக்கத் தொடங்கினாள். நிலவொளி அதிகமில்லாதது வசதியாக இருந்தது. நடப்பதற்குச் சிரமமாக இல்லையெனினும் தரையைக் கூர்ந்து பார்த்தபடியே நடந்தாள். கையில் வெளிச்சத்திற்கென்று விளக்கு எதுவும் எடுத்து வரும் துணிவு இல்லை. யாராவது பார்த்து விடக் கூடும் என்ற பயம். அடுத்த தெருதான் என்பதால் ஒன்றும் பிரச்னையில்லை என்றாலும் தெருவின் இருளுக்குள் தயங்கித் தயங்கிச் சென்று கொண்டிருந்தாள். இன்னும் கொஞ்ச நேரத்தில் நிகழப் போகும் விபரீதத்தினைத் தன்னுள்ளே புதைத்துக் கொள்ள முயன்றவளாகத் தெருக்களினூடே நகர்ந்தது துயரத்தினால் தொய்ந்துபோன அவளது உடல். அஸரத் வீடு, போதும் பொண்ணு வீடு, காட்டுவா வீடு, டைலர் வீடு எல்லாம் தாண்டியாயிற்று. பாக்கி செல்லத்துரை வீடும் பொன்னையா வீடும்தான். மனதிற்குள்ளாக நினைவூட்டிய படி ஒவ்வொரு வீடாகக் கடந்தாள். ஒவ்வொரு வீட்டுத் திண்ணையிலும் யாராவது காற்றுக்காகப் படுத்து உறங்கிக் கொண்டிருப்பது வேறு பயத்தைப் பன்மடங்காக்கிக் கொண்டிருந்தது. அவளையும் மீறி “அல்லா, அல்லா” என வாய்

முணுமுணுத்தபடியிருக்க, சத்தமேயின்றி முடிந்தவரை மெதுவாக நடந்தாள். வானத்திலிருந்து விழுந்துகொண்டிருந்த சன்னமான நிலவொளி இன்று இல்லாமல் இருந்திருக்கக் கூடாதா என்கிற ஆதங்கம் மனதினுள் தோன்றியபடியிருக்கிறது. நடமாட்டமில்லாத தெருவில் தன்னைக் கடந்து ஓடிக் கொண்டிருக்கிற காற்றையும் தனிமையையும் பொருட்படுத்தாதவளாகச் சென்று கொண்டிருந்தாள் ஆமினா. காற்றின் சீழ்க்கை ஒலி வழக்கமாய் தனக்குள் உருவாக்கக்கூடிய திகிலோடு, நடையைத் துரிதப்படுத்த வேண்டியதன் அவசியத்தையும் உணர்த்தவே வேகத்தைக் கூட்டினாள்.

வீட்டை அடைந்து படலைத் திறந்து கொல்லைப் புறத்தை நோக்கிப் போனாள். அங்கே பின்புறத் திண்ணை அருகே இருளில் முருகியும் ஒருவயதான பெண்ணும் குத்தவைத்து உட்கார்ந்திருந்தார்கள். இவளைப் பார்த்ததும் எழுந்து நின்று இவள் முகத்தைப் பார்த்தார்கள். இவள் தன் வாயில் கைவைத்து யாரும்பேச வேண்டாமென்பதுபோல சைகை செய்தாள். வீட்டின் பின்புறக்கதவு தாழிடப்படாமல் சும்மா சாத்தியிருந்தது. கதவைத் தள்ளியதும் உடனே திறந்து கொண்டது. ஆமினா முதலில் உள்ளே நுழைந்து திரும்பிப் பார்த்தாள். பிறகு அவர்களும் உள்ளே நுழைந்ததும் கதவைத் தாழிட்டுவிட்டு அம்மாவைத் தேடினாள். கதீஜா கூடத்தில் தூணில் உடலைச் சாய்த்து அமர்ந்திருந்தாள். இவர்கள் வருகையை எதிர்பார்த்தபடி. இவர்களைப் பார்த்ததும் தட்டுத்தடுமாறி எழுந்து தூணைப்பற்றிக் கொண்டாள். “அவ எங்கே?” கிசுகிசுப்பான குரலில் கேட்டாள் ஆமினா. மச்சு மேலே என்பதுபோல கை காட்டிவிட்டு அதை நோக்கி நடக்க ஆரம்பித்தாள் கதீஜா. நடை தளர்வுற்று சோர்ந்திருந்தது. இப்படிப் பாதி ராத்திரியில பழி எடுக்கிறாளே எனத் தனக்குள் நொந்து கொண்டவளுக்கு ஆமினாவை நினைக்கையில் கண்ணில் நீர் சுரந்தது. என் பொன்னுமக,

தங்கமக இந்த வயசுல இம்புட்டுக் காரியமா இருக்காளே என்று நினைத்தாள். அதேசமயத்தில் மைமூனின் வயதும் ஞாபகத்திற்கு வந்தது. இந்தப் பிஞ்சு வயித்தில் இப்படி ஒரு பிள்ளைய ஏண்டா அல்லா உண்டாக்கினே என்று வாய்விட்டு அரற்றிக்கொண்டாள்.

அவர்கள் நால்வரும் ஒருவர் பின் ஒருவராக மரப்படிகளில் ஏறி மாடியை அடைந்தார்கள் அங்கே மெலிதான சிம்னி விளக்கொளியில் சுருண்டுபோய் படுத்திருந்தாள் மைமூன். “அல்லா, இவள பாக்கையில ஏங் கொலைய புடிக்குதே” என்று சொல்லி பொங்கி வந்த அழுகையை சேலைத் தலைப்பை வாய்க்குள் வைத்து அடக்கினாள் கதீஜா. “சரிசரி, அழாதீங்க” என்றபடி தன் தாயைத் தேற்றினாள் ஆமினா, தன்னுள்ளிருந்த பயத்தை வெளிக்காட்டாதபடி!

இவர்களுடைய அழுகையில் விழித்தெழுந்த மைமூன் மிரள மிரளப் பார்த்தாள். அவளது இளம் தேகம் மெதுவாக நடுங்கிக் கொண்டிருந்ததை விளக்கொளியில் பார்க்கமுடிந்தது. ஆமினா இப்போதுதான் மருத்துவச்சியை நேராகப் பார்த்தாள். அவளுக்கு நாற்பத்தைந்து வயதிருக்கும் என்று தோன்றியது. சட்டை போடாமல் சேலையைச் சுற்றிக் கட்டியிருந்தாள். காதுகளில் சிகப்புக் கல் வைத்த தோடு மின்னியது, கைகளிரண்டிலும் தேளின் உருவம் பச்சை குத்தியிருந்தது பொருத்தமானதாக இருந்தது. அவளது முகத்திலும் கண்களிலும் ஒருவிதமான அலட்சிய பாவம் இருந்தது. இது தனக்கொன்றும் புதிதில்லை என்கிறமாதிரி. அந்த பாவனை ஆமினாவுக்குத் தெம்பூட்டுவதாகவே இருந்தது. அவள் ஆமினாவையும் கதீஜாவையும் கேலி செய்யும் விதத்தில் பார்த்து முறுவலிப்பது போலிருந்தது. இதற்கெல்லாமா பயப்படுவீர்களெனக் கேட்காதது தான் குறை.

“சரி சரி, நேரமாச்சு, நான் வந்த வேலையைப் பாக்கறேன்” என்று தன்

பாட்டுக்குச் சொல்லிவிட்டு தன் அக்குளில் இடுக்கியிருந்த பையை எடுத்து தரையில் வைத்தாள். அதிலிருந்து ஒரு எருக்கஞ்செடியின் தண்டை எடுத்தாள். பிறகு ஒரு நூல் கண்டு, இறுதியாக ஒரு களிம்பு டப்பி. அவள் அதன் பிறகு செயல்பட்ட விதம் கைதேர்ந்தவள் எனச்சொல்லக் கூடியதாக இருந்தது மைமூனுக்கு. அவள் அதனை வெறித்து பார்த்தபடியிருந்தாள். அவளிடமிருந்து ஒரு வார்த்தையும் வரவில்லை. பயமும் வார்த்தைகளுமற்ற விரக்தியோடு உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

இலைகள் நீக்கிய எருக்கஞ்செடியின் தண்டின் ஒரு முனையில் தான் கொண்டு வந்திருந்த டப்பியிலிருந்து கருமையான களிம்பைத் தோய்த்தெடுத்தாள் மருத்துவச்சி. மறு முனையில் நூல் கண்டிலிருந்து நூலைப் பிரித்தெடுத்து குச்சியில் நன்கு இறுக்கிக் கட்டி தன் விரலில் சுற்றிக் கொண்டாள். குச்சியின் அடிப்பகுதியோடு சேர்த்து நூல் அவள் விரல்களுக்குள் இறுக்கமாகப் பிடிக்கப்பட்டிருந்தது. தான் செயல்படலாமா என்பது போல் அவள் இவர்களது முகத்தை ஏறிட்டுப் பார்க்க, ஆமினாவுக்குத் தன் இதயத்திலிருந்து ஏதோ ஒன்று நழுவி விழுவதைப் போலிருந்தது. அது இழப்பு பற்றியதாக இல்லாமல், இயலாமையின் ஒட்டு மொத்த உணர்வாக மாறிக் கொண்டிருந்தது. இறைவனால் தான் கைவிடப்பட்டுவிட்டதான ஒரு மனநிலையும் இனி என்னவும் நடக்கலாம் என்கிற அவநம்பிக் கையும் ஒன்றுசேர அவள் திடீரெனத் தன் தங்கையை இறுகக் கட்டிக்கொண்டு அழத்தொடங்கினாள். ஒரு குழந்தையைப் போன்ற அவளது உடல் முழுக்க பரவிக்கொண்டிருந்த நடுக்கம் இவளையும் பற்றிக் கொள்ள மௌனமான உள்நோக்கியதொரு கேவல் இருவரிடமிருந்தும் எழுந்தது. மருத்துவச்சியின் கடினமான உரமேறிய கைகள் ஆமினாவின் தோளைப் பற்றி பலவந்தமாக இழுத்த பிறகு தன்நிலை

உணர்ந்தவளாக, “பயப்படாதேம்மா. ஒண்ணும் இல்ல. நான் ஏதோ ஒரு ஞாபகத்துல அழுதேன். இனி உனக்கு ஒண்ணும் இல்ல, எல்லாப் பிரச்னையும் முடிஞ்சுடும், என்னம்மா” என்று தங்கையின் முகத்தைத் தன் புடவைத் தலைப்பால் துடைத்துவிட்டு அவளைத் தைரியப்படுத்த முயற்சித்தாள். “சரி சரி, நேரமாச்சு இல்ல. நான் எப்பொ முடிச்சிட்டு போறது” என்று மருத்துவச்சி அவசரப்படுத்தவும் அவர்கள் அவ்விடத்திலிருந்து விலகிக்கொள்ளத் தொடங்கும்போது மைமூன், “அக்கா, நீ மட்டும் ஏங்கூட இருக்கமாட்டியா?” என்றாள் கெஞ்சலுடன். “இல்லம்மா நான் உன்கூடத் தான் இருக்கப்போறேன்” என்று அவள் கைகளைத் தன் கைகளுக்குள் எடுத்து வைத்துக் கொண்டாள் ஆமினா.

மருந்து வைத்த பிறகு ஏற்பட்ட வேதனையில் அவள் துடித்ததும், அவளைக் கத்தவிடாமல் இவர்கள் நால்வருமாக மடக்கிப் பிடிப்பதுவும், விடிய விடிய தொடர்ந்து கொண்டிருந்தது. அந்நேரத்தின் நினைவுகள் கொடிய நரக வேதனையாக பிறகு நீண்ட நாட்கள் ஆமினாவைத் துன்புறுத்தியிருக்கின்றன. ரத்தத்திட்டாகச் சிதைந்து வெளியேறிய சிசுவின் உயிரோடு மைமூனின் உயிரும் அடங்கிப் போய்விட, மறுநாள் காந்தியின் படுகொலை வெளி உலகத்தை உலுக்கிக் கொண்டிருக்கும்போது மைமூனின் மரணச் செய்தி அந்த ஊரைப் பதறி எழச்செய்தது. விழுங்க முடியாத துக்கம் ஆமினாவின் தொண்டையை அடைக்க கடுமையான வலி உண்டாயிற்று. தலையணை நனைந்துகிடக்க எழுந்து உட்கார்ந்தாள். அவள் நினைவுகள் நெடுந்தொலைவு பயணித்துவிட்டுத் திரும்பியிருந்தன.

விடியத் தொடங்கியாயிற்று என்பதைச் சேவல் கூவும் சத்தமும், பாங்கு சொல்லும் ஓசையும் உணர்த்தியது. பக்கத்தில் படுத்திருந்த பிர்தவ்ஸின் முகத்தைப் பார்த்தாள். தன் அம்மாவைப் போன்ற

அழகும், தங்கையின் பிடிவாதமும் அவளிடம் ஒன்று சேர்ந்திருப்பதாகத் தோன்றியது. அவளைப் போலவே இவளும் தன் கணவனை விலக்கி விட்டு திரும்பியிருக்கிறாள் என்பது நினைவுக்கு வந்து அவளுக்குள் வெறுப்பு மண்ட, அசதியுடன் கையூன்றி எழுந்தாள். தொழுக நேரமாகிவிட்டது நினைவுக்கு வந்தது.

# 7

“ஏண்டி ராபியா, அஹமது அங்க இருக்கானா?” ராபியாவின் வீட்டுவாசற்படியில் ஏறிய நபிஸா கேட்டாள். ராபியா வாசலில் இருந்த திண்ணையில் நின்றபடி “இல்லையே” என்று எதிர்க் குரல் கொடுத்தாள். “எங்கே போயிருப்பான் காலை நேரத்துல” என்றவாறு வீட்டுக்குள் நுழைந்த நபிஸா சுற்று முற்றும் பார்த்தாள். “ஏன் யாரும் இன்னும் எழுந்திரிக்கலை?” நின்றுகொண்டிருந்த ராபியாவின் அருகில் அமர்ந்தவள், அலுத்துக்கொண்டாள். “ஊரு உலகத்துல இப்புடித்தான். சஹுரு செய்தோமா, கொஞ்சநேரம் விழுந்து கெடந்தமான்னுட்டு, என்னயை தலை சாய்க்க விடுறானா இந்தப் பய. மொஸாபிர் காசு டப்பா நிறைய போட்டு வச்சுட்டு வாறவுகளுக்குக் குடுடான்னு அந்தப் பயகிட்ட சொல்லிட்டு சித்த நேரம் தூங்கலாம்னு பாத்தா அவன ஆளக்காணோம். சரி போனது தான் போனானே வீட்ட தொறந்து போட்டுட்டா போவான்? வர்ற மொஸாபிருக வீட்டுக்குள்ள வந்து எதையாவது திருடிட்டுப் போக மாட்டானுகளா? காசையும் அள்ளிக்கிட்டுப் போயிட்டானே, உங்கவீட்டுல இருப்பான்னு நெனச்சு வந்தேன். இங்கியும் இல்லெ. எங்கே தொலைஞ்சான்னுந் தெரியல. எனக்கு சஹுருக்குச் சாப்பிட்டு தூங்காதது நெஞ்சைக் கரிச்சுக் கெடக்குது. எங்கிட்டுக் கெடந்து வாறாளுகளோ இந்த மொஸாபிர் கூட்டம். முப்பது நாளைக்கும் மனுஷ உசுர எடுக்க.” ஒரே மூச்சாகப் புலம்பி முடித்தவள், “சரி நான் போறேன். வந்தான்னா சொல்லு” என்றவள், “ஆமா நோன்புப் பெருநாள் துணிமணியெல்லாம் எடுத்திட்டிங்களா?” என்று கேட்டாள் ஆர்வமாக.

ராபியாவுக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. என்ன

சொன்னால் அம்மா திருப்திப்படுவாள் என்பது தெரியாததனால் "ஊம்? அதுவந்து தெரியல" என்று மென்று விழுங்கினாள். "உங்கம்மா உண்மைய சொன்னா திட்டுவாளாக்கும்" என்றவாறு எழுந்து போனாள் நபிஸா. புதுத்துணி வாங்கின விபரத்தைத் தெரிந்து கொள்ளத் தான் எடுத்த முயற்சி தோல்வியுற்றதில் ஏமாற்றம் உண்டாயிற்று அவளுக்கு. சின்னப் பிள்ளையா இருந்தாலுங்கூட கெட்டிக்காரி என்று தன் மனதிற்குள் ராபியாவைப் பாராட்டவும் செய்தாள். அவள் போவதைப் பார்த்துக்கொண்டிருந்த ராபியாவுக்கு இரண்டு விஷயத்தில் பெருமையாக இருந்தது. ஒன்று, நபிஸாவிடம் புதுத்துணி வாங்கிவிட்ட விபரத்தை மறைத்தது. அம்மா கேட்டால் சந்தோஷப்படுவாள். அம்மாதான் சொல்லியிருக்கிறாளே, யாரிடமும் சொல்ல வேண்டாம், திருஷ்டி படும் என்று. இன்னொன்று, அஹமது, முஸாபிர் காசைத் திருடிய விஷயம்! இது ஒன்று மட்டும் போதும் அவன் மூக்கை உடைக்க! திடீரென அவளுக்குள் உற்சாகம் கொப்பளித்தது. அவன் இதற்கெல்லாம் அசைந்து கொடுப்பானா என்கிற சந்தேகம் இருந்தாலும், சரி முடிந்தவரை பார்க்கலாம் என்று நினைத்துக் கொண்டாள்.

அவளுக்குத் தலைவெடித்து விடும்போலிருந்தது. உடனேயே இவ்விஷயத்தை மதினாவிடம் சொல்லிவிட வேண்டும். அவள் ரொம்பவே சந்தோஷப்படுவாள். என்ன செய்யலாம் என்று யோசித்தவள் வேகமாக ஓடித் தெருவுக்கு வந்தாள். தெருக்கதவை வெளித் தாழ்ப்பாள் போட்டு விட்டு எதிர் வீட்டை நோக்கி ஓடினாள். அவளுக்கு மதினாவிடம் சொல்வதற்கு இன்னும் ஒரு முக்கியமான விஷயமும் இருந்தது. இன்று ஊரிலிருந்து றைமா பெரியம்மாவின் மகள் வஹிதா வருகிறாள் பெருநாளுக்காக! அவள் நகரத்தில் தனது உம்மும்மா வீட்டில் தங்கி கான்வென்ட் ஸ்கூலில் படிக்கிறாள். அவள்

வரப்போவது குறித்த சந்தோஷத்தையும் மதினாவிடம் பகிர்ந்து கொள்ள வேண்டியிருந்தது.

அஹமது காலை ஊன்றி சைக்கிளை நிறுத்தினான். சட்டையிலிருந்த மண்ணைத் தட்டிவிட்டான். கீழே விழுந்ததால் செம்மண் ஒட்டியிருந்தது சட்டையின் நெஞ்சுப் பகுதியில்! நெற்றி வியர்வையை காலரில் ஒற்றியெடுத்தான். முழங்கால் சிராய்த்து எரிந்தது. எச்சிலைத் தொட்டு அதில் தடவினான். இன்றைக்கு ஒரு முறை தவறி விழுந்தாலும்கூட அதன்பிறகு பிரமாதமாக சைக்கிள் விட முடிந்ததை நினைத்து சந்தோஷப்பட்டான். தான் சைக்கிள் ஓட்டுவதை மதினாவும் ராபியாவும் பார்க்க வேண்டும் என்று விரும்பினான். ஆனால் அவர்களைக் கண்ணிலேயே காணவில்லை. எங்கே போய்த் தொலைந்தார்கள்? நிச்சயமாக அவர்கள் இருவரும் தன்னிடம் சைக்கிள் கற்றுத்தரச் சொல்லிக் கேட்பார்கள். அப் பொழுது முடியாது என்று பிகு பண்ணி மறுத்துவிட வேண்டும் என்று நினைத்தான். “ஆமா, பொட்டச்சிகளுக்கு எதுக்கு சைக்கிள் பழகணும்” என்று சொல்லிக்கொண்டான். நேற்று அவர்கள் தன்னை எப்படி கேலிசெய்தார்கள்! முஸாபிர் காசு திருடுறவன் என்று! அவனுக்கு இப்பவும் வெட்கம் பிடுங்கித் தின்றது. அம்மாவால் வந்த வினை என்று அம்மாவை மனதிற்குள் நொந்து கொண்டான். அவர்களது கிண்டலைச் சமாளிக்க என்னவெல்லாம் சொன்னான். அவர்கள் ஓய்ந்தால்தானே? “எங்க வீட்டுக் காசத் தானே எடுத்தேன், ஒங்க வீட்டுல வந்து திருடலயே?” என்றுகூட சொல்லிப் பார்த்தான். சைக்கிள் விட கற்றுக் கொள்ளும் ஆர்வத்தினால் கொஞ்சம் பைசாவை எடுத்ததற்கு இவ்வளவு அவமானப் படுத்துகிறார்களே என்று வருத்தமாக இருந்தது. இன்று நான் சைக்கிள் ஓட்டும் ஸ்டைலைப் பார்த்தால் அசந்து போவார்கள். அதன் பிறகு எப்படி கேலி

செய்யப்போகிறார்கள் பார்ப்போம் என்று சொல்லிக்கொண்டான்.

சைக்கிளைக் கடையில் சேர்க்கும் நேரம் நெருங்கிக்கொண்டிருந்தது. இன்னும் ஒரு மணி நேரம் ஓட்டலாம் என்றால் அதற்கும் காசு வேண்டும். அவனிடமிருந்த பைசாவெல்லாம் தீர்ந்து போயிருந்தது. மணி என்ன இருக்கும் என்று தெரியவில்லை நோன்பு திறக்கும் நேரம் நெருங்கியிருக்கும். சைக்கிளிலே கடை வீதிக்குப் போய் அத்தாவிடம் பணம் வாங்கி பள்ளிவாசல் வெளியே இருக்கும் கடையில் அம்மாவுக்கு வடையும் பஜ்ஜியும் வாங்க வேண்டும் என்ற நினைவு வந்தது. சைக்கிளை வேகமாக மிதிக்கத் தொடங்கினான்.

கடை வீதியிலிருந்து பள்ளி வாசலை நோக்கி வேகமாக வந்து, பள்ளிவாசல் முன்பாக பிரேக் போட்டு சைக்கிளை நிறுத்தினான். நோன்பு திறக்கும் நேரம் நெருங்கிக் கொண்டிருப்பதால் பள்ளிவாசலின் முகப்பை நோக்கி ஆண்கள் கூட்டங் கூட்டமாக வர ஆரம்பித்திருந்தார்கள். ஊரின் மத்தியிலிருக்கும் பள்ளிவாசல் என்பதால் மூன்று முக்கியமான தெருக்களும் அதன் முகப்பை ஒட்டியே வந்து முடிந்தன. கடைவீதியிலிருந்தும் பள்ளிவாசலை நோக்கிக் கூட்டம் வந்து கொண்டிருந்தது. மற்ற இரண்டு வீதிகளில் ஒன்றின் வழியாக அஹமது வீட்டுக்குச் செல்லத் திட்டமிட்டான். அந்த இரண்டு வழிகளில் எதன் வழியே சென்றால் வீட்டின் தூரம் அதிகமிருக்கும் என்று பார்த்து அதன் வழியே செல்லலாம் என்று முடிவு செய்தான். சைக்கிளை அதிக நேரம் விடப்போகிற பெருமை மனதில் தோன்றிய உடனே தனக்கெதிரே இருந்த ரோட்டில் அவன் பார்வை சென்றது. பள்ளிவாசலை அடுத்திருந்த காஜாவின் பெட்டிக்கடையை ஒட்டி மதினாவும் ராபியாவும் வீட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். இருவரது கைகளிலும் வடை, பஜ்ஜி பொட்டலங்கள் இருந்தன. பேப்பரில் எண்ணெய் பளபளத்தது.

தூக்குகளில் நோன்புக் கஞ்சியும் வாங்கி வைத்திருந்தார்கள்.

அஹமது வேகமாக சைக்கிளை ஓட்டி அவர்கள் முன் நிறுத்தி, "எங்கே போயிட்டு வர்றீங்க?" என்றான். "தெரியல? நோன்புதிறக்க கஞ்சியும் வடையும் வாங்கிட்டு வாறம்" என்று மிடுக்காகப் பதில் சொன்னாள் மதினா. தான் சைக்கிளில் வந்து இறங்குவதை அவர்கள் கவனித்ததாகவே தெரியவில்லை. அவனுக்கு ஆத்திரமாக வந்தது. திமிர்பிடித்தவர்கள் என்று மனதிற்குள் கறுவிக் கொண்டான். "நானும் அதுக்காகத்தான் போறேன்" என்றான். "இவ்வளவு லேட்டாவா? இன்னும் பத்தே நிமிஷத்துல நகரா அடிச்சிருவாங்க. பள்ளிவாசல்ல கஞ்சி தீரப்போவுது! போச்சு, உங்கம்மா திட்டப் போறாங்க" என்றாள் ராபியா. "ஹூம், பத்து நிமிஷம் என்ன, இன்னும் அஞ்சே நிமிஷம்தான். நான் ஒண்ணும் உங்கள மாதிரியில்ல. சைக்கிள்ள நொடியில போய்ட்டு வந்துருவேன்." இந்தச் சந்தர்ப்பத்தை விட்டால் இவர்களை மடக்க வேறு வாய்ப்புக் கிடைக்காது என்பதை அவன் தெரிந்து வைத்திருந்தான். அவர்கள் அப்பொழுதும்கூட அவனைப் பொருட்படுத்துவதாகவே இல்லை. அவனுக்கு ஏமாற்றமாக இருந்தது.

"சரி சரி, நான் வர்றேன்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான். மதினாவும் ராபியாவும் சிரித்துக் கொண்டார்கள். சைக்கிள் விடுறானாம். பெரிய சைக்கிள். நாங்களும்தான் கத்துக்கப் போறோம் சீக்கிரமே என்று நினைத்துக் கொண்டாலும், எப்படிக் கற்றுக் கொள்ளபோகிறோம். என்ற கேள்வி எழத்தான் செய்தது. யார் கற்றுத் தருவார்கள் என்றும் தெரியவில்லை. ராபியாவுக்கு அஹமதுவை ரொம்பவும்தான் கேலி செய்துவிட்டோமோ என்று சங்கடமாக இருந்தது. எவ்வளவு கம்பீரமாக சைக்கிள் விடுகிறான். அவனுக்குத் தெரியாதது எதுவுமே இல்லை. பட்டம் செய்வதிலிருந்து, நுங்கு வண்டி செய்வது, புத்தகங்களுக்குப் பிரமாதமாக அட்டை போடுவது என்று

என்னவெல்லாமோ தெரிகிறது அவனுக்கு. அவனை நினைக்கும் பொழுதெல்லாம் பிரமிப்பாகத்தானிருக்கிறது ராபியாவுக்கு. மதினா மட்டும் அவனைப் பற்றி பேச்சே எடுக்க விடமாட்டாள். மதினா வேண்டுமென்றே அவனை மட்டம் தட்டுவதாகத் தன்னிடம் காட்டிக்கொள்கிறாளோ என்று ராபியாவுக்குத் தோன்றும். அவனுடைய திறமைகளை ஒப்புக் கொள்வதைத் தனது தோல்வியாகக் கற்பனை செய்கிறாளோ என்னவோ? பள்ளிவாசல் மைக்கிலிருந்து ஓங்கி ஒலிக்கிறது, மோதினார் பாவா நோன்பு திறப்பதற்காக அடிக்கும் நகரா ஓசை. செவியே கிழிந்துவிடும் போலிருந்தது. நோன்பு திறக்கும் நேரமாகியும் இன்னும்கூட வீடுபோய்ச் சேராத பயத்தில் தெருவில் தலைதெறிக்க ஓட ஆரம்பித்தார்கள் இருவரும்.

ராபியாவுக்கு ஓட்டத்தினூடாகவே இதே பள்ளிவாசல் நகராவை ஒவ்வொரு ரம்ஜான் பெருநாளன்றும் ஆண்களும் மோதினார் பாவாவும் தொழுகைக்கு கொத்பா மேடைக்குப் புறப்பட்டு சென்ற பிறகு தானும், மற்ற பிள்ளைகளும் அடித்து ஓசையெழுப்பி சந்தோஷம் அடைவது நினைவுக்கு வந்தது. ஆனால் இந்த அளவுக்குச் சத்தம் வராது. ‘இந்தப் பெருநாளன்னிக்கி இதே மாதிரி கணீர் கணீர்னு சத்தம் வற மாதிரி அடிக்கிறேனா இல்லையான்னு பாரு’ என்று தனக்குள்ளேயே வைத்துக்கொண்ட உறுதியுடன் அவளது வேகம் இரண்டு மடங்காயிற்று.

# 8

வஹிதா ஊரிலிருந்து வந்தபிறகு வீடே சந்தோஷத்தில் மிதப்பதாகத் தோன்றியது ராபியாவுக்கு! பெரும்பாலான நேரம் அவள் வீட்டை விட்டு வெளியே போவதேயில்லை. விளையாடுவதைக்கூட மறந்து விட்டாள். தன்னை யாராவது விளையாடக் கூப்பிட்டு வந்தால்கூட போவதில்லை. அவர்களிடம், "எங்க அக்கா ஊர்லேர்ந்து வந்திருக்கா, அதனால எனக்கு வரமுடியாது" என்று பெருமையாகச் சொல்லித் திருப்பி அனுப்பிவிடுவாள். வஹிதா சிரிப்பாள். "ஏய், இனி நான் இங்கெதானே இருக்கப்போறேன். போய் விளையாடிட்டு வா" என்பாள் தங்கையிடம். "இல்லேக்கா. நான் உங்கூடயே இருக்கேனே" என்று கொஞ்சலாக மறுத்து விடுவாள் ராபியா. அவள் பிரியத்தை நினைத்து வஹிதா சந்தோஷப்பட்டுக் கொள்வாள். இனி தான் படிக்கவென தன் பாட்டி வீட்டுக்குப் போகப் போவதில்லை. இங்கேயேதான் இருக்கப் போகிறோம் என்று அவளிடம் சொன்னாலும் கூட, அவளுக்கு நம்பிக்கையில்லை. அத்தாவுக்கு இந்த ஆறு நோன்பு முடிந்ததுமே அவளின் நிக்காஹை முடித்துவிட வேண்டும் என்கிற எண்ணமிருப்பதாகத் தெரிந்தது. அம்மாவுக்குத்தான் அதில் விருப்பமில்லை. எஸ்.எஸ்.எல்.சி முடிச்ச கையோட எதுக்காகக் கல்யாணம் வைக்கணும். அந்தக் காலத்துல மாதிரி பச்சைப் பிள்ளைய கட்டிக்குடுக்கணும்னு நஸீபா எழுதியிருக்கு என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

வஹிதாவுக்குக் குழப்பமாக இருந்தது. இந்த ஊரில் வயதுக்கு வந்த பெண் பிள்ளைகள் வீட்டு வாசல் படியைத் தாண்டுவதே இல்லை; வெளியிலிருந்து வீட்டுக்குள் எந்த அன்னிய ஆண் வந்தாலும் அவர்

முன் தலைகாட்டக் கூடாது. அதனால்தான் றைமா மகளை வயதுக்கு வருவதற்கு முன்பே நகரத்திலிருந்த தன் தாய் வீட்டில் விட்டு மதரஸாவில் படிக்க வைத்தாள். அங்கே றைமாவுக்கு அம்மா இல்லையென்றாலும் வாப்பா இருந்தார். வீட்டில் ஏராளமான வேலைக்காரர்கள் இருந்தார்கள். வஹிதாவுக்கு அங்கிருந்து படிக்கவும் ஓதவும் முடிந்தது. இனி அவளும் இந்த ஊரில் இந்த வீட்டுக்குள்ளிருந்தபடியேதான் பொழுதைக் கழிக்க வேண்டியிருக்கும். அத்துடன் திருமணப் பேச்சு வேறு நடப்பது அவளுக்கு ரொம்பவுமே வருத்தமாக இருந்தது.

ராபியாவிடம் தனது நகரத்து வாழ்க்கை குறித்த கதைகளைச் சொல்வதிலேயே வஹிதாவுக்கு பொழுது போய்க்கொண்டிருந்தது. அவளுக்கு நிறையக் கேள்விகள் இருந்தன. ஆச்சர்யப்படும் விஷயங்களே அதிகமாக இருக்கும். அங்கே சினிமா தியேட்டர்கள் இருப்பதுவும் அதில் தினமும் மேட்னி ஷோ போடுவார்கள் என்பதுவும்தான் மிகப்பெரிய ஆச்சரியம். இங்கே ஒரே ஒரு தியேட்டர்தானிருக்கிறது. அதிலும் இரவுக் காட்சி மட்டும்தான். பகல் நேரக்காட்சி பொங்கல், தீபாவளி, நோன்புப் பெருநாள் இம்மூன்று நாட்களில் மட்டும் தான். வீட்டில் இரவுநேரக் காட்சிக்கு ஆயிரம் யோசனை செய்து விட்டுத்தான் அனுப்புவார்கள். பகல் நேரக் காட்சி தினமும் போட்டால் நன்றாக இருக்குமே என்று ரொம்பவே ஆதங்கப்படுவாள்.

அவள் வஹிதாவிடம் கேட்டாள், “அங்கே தினமும் பகல் காட்சிக்கு யாரெல்லாம் வருவாங்க?” இவளுக்கும் சொல்லத் தெரியாது. இவள் போயிருந்தால்தானே? பள்ளிக்குச் செல்லும் நேரம் தவிர ஏனைய நேரம் இவள் அங்கேயும் வீட்டிற்குள்தான் இருப்பாள். சினிமாவென்ற பேச்சையே எடுக்க முடியாது நன்னாவிடம். அவர் அனுமதிக்கவும்

*மாட்டார். வயசுக்கு வந்த பொண்ணா லட்சணமா இருக்கணும். கல்யாணம் நடக்கட்டும், பிறகு சினிமா பார்த்துக்கலாம், அங்கெ இங்கே போகலாம் எங்கே ஓடிப் போவப் போகுது சினிமா என்பார். இருந்தாலும் தனக்குத் தெரிந்த விபரங்களை வைத்தே ராபியாவுக்கு விளக்கம் கொடுப்பாள் வஹிதா. ராபியாவுக்கு ஆறவே ஆறாது. "நீ சினிமாவுக்கு அங்கே போனதில்லையா? ஏன் படிக்க மட்டும் வெளியே போறயில்ல?" என்பாள்.*

*"மக்கு! படிக்க மட்டும்தான் வெளிய போகலாம். அப்புறம் இங்கே மாதிரிதான் அங்கேயும்! வீட்டுக்குள்ளயே அடைஞ்சு கிடக்கணும். வயசுக்கு வந்திட்டேனில்லையா? உன்னை மாதிரி சின்னப் பிள்ளையா இருந்தா எங்கே வேணாலும் போகலாம். சரி, நீ இப்ப ஒரு வேல செய்றியா? இந்தப் பேச்சைவிட்டுட்டு" என்று செல்லமாக அவள் தலையில் குட்டுவாள். ராபியாவுக்குப் புரியவேயில்லை. டவுனிலும்கூட இப்படித்தான் வீட்டுக்குள் அடைந்து கிடக்கணுமா? சினிமாவில் வருவது மாதிரி டவுனில் பெண்கள் வெளியே எங்கே வேண்டுமானாலும் போகலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தவளுக்கு இவள் சொல்வது ஏமாற்றமாக இருந்தது.*

*"சரி ராபியா, நீ எனக்கு ஒருவேலை செய். லைப்ரரிக்குப் போய் படிக்க புத்தகம் வாங்கிட்டு வர்றியா" என்று அவளது நினைவுகளைக் கலைத்தாள் வஹிதா. "இப்பவேயா?" என்றாள் ராபியா. "ஆமா. எனக்கு பொழுது போகணுமில்ல? பணம் தர்றேன், கட்டிட்டு நான் சொல்ற புத்தகம் வாங்கிட்டுவா" என்றாள். "அக்கா, நான் வர்றப்ப உன்னப் பாக்க என்னோட படிக்கிற பிள்ளைகளைக் கூட்டிவரட்டுமா?" ஆர்வத்துடன் கேட்டாள் அவள். "ஏன், எதுக்காக என்னப் பார்க்கணும்?" கண்களில் ஆச்சர்யம் பொங்கக் கேட்ட வஹிதாவிடம், "ஆமா, பாக்கணும்னு சொல்லியிருக்காங்க உன்ன, அதான்"*

என்றுசொல்லி வெட்கப்பட்டாள். வஹிதாவுக்குச் சிரிப்பு வந்தது. சரி, வரட்டும் என்று தலையாட்டினாள்.

ராபியாவுக்குப் பெருமையும் சந்தோஷமும் பிடிபடவில்லை, தன் சகோதரியின் படிப்பையும் அழகையும் பற்றி எத்தனை நாள் தான் பீற்றிக்கொண்டிருப்பது. இன்றைக்கு அவர்களாகவே பார்த்துத் தெரிந்து கொள்ளட்டுமே! அக்காதான் எவ்வளவு அழகு! பளீரென்ற நிறமும் உயரமும் நீளமான மூக்குமாக. அம்மா அடிக்கடி சொல்வாள், வஹிதா அழகுக்கு ஏத்தமாதிரி மாப்பிள்ளை கிடைக்கறது கஷ்டம் என்று. ராபியா தன் கையை வஹிதாவின் கைக்கருகில் வைத்து ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்வாள். அவளது கையின் நிறத்திற்கு இவளது நிறம் பாதிகூட வராது. அவளது நீண்ட தலை முடியைத் தன் சின்னக் கைகளால் அளவெடுத்து பிறகு தன் முடியை அளந்து பார்த்துச் சலித்துக் கொள்வாள். பிறகு சொல்வாள், "ச்சே!, நான் ஏங்கா ஒம் மாதிரி அழகாயில்ல. பாரேன், என் மூக்கு பெரிசா இருக்குல்ல. அஹமது கூட சமயத்துல என்ன கறுப்பின்னு கேலி செய்றான்" என்பாள். வஹிதா அவளை மடியில் சாய்த்து அணைத்துக் கொள்வாள், "மக்கு, மக்கு. நீயும் வயசுக்கு வந்து வீட்டுக்குள்ளே இருக்கறப்ப வெயில்படாம என்ன மாதிரியே ஆயிருவே வெளுத்துப்போய். இப்ப வெயில்ல ஆட்டம் போடுற இல்ல, அப்புறம் எப்படி உடம்பு கறுக்காம இருக்கும்?"

சொஹ்ரா இடையில் புகுந்து, "நல்லா சொல்லு. அவளுக்கு எப்பப் பாரு ஆட்டமும் ஓட்டமும்தான், பய கணக்கா. சரி நேரா நேரம் முகம் கழுவி பவுடர் போட்டுக்குவாளா? அதுவும் இல்ல. எப்பப்பாரு எண்ணெய் வழிய விட்டுக்கிட்டுத்தான் இருப்பா" என்று தன் பங்குக்கு அங்கலாய்த்தாள். "போம்மா நீ வேற" என்ற ராபியாவுக்கு சீக்கிரமே வயசுக்கு வரவேண்டும் என்ற ஆசை வந்தது. ஆனாலும்

வீட்டுக்குள்ளேயே கிடக்க வேண்டி வருமே என்பதை நினைத்துப் பயமாகவும் இருந்தது.

அவள் லைப்ரரிக்குப் போகக் கிளம்பினாள். சோப்பை நன்றாகத் தேய்த்து நீண்ட நேரம் முகத்தைக் கழுவியிருந்தாள். கண்ணாடியில் பார்த்த பொழுது முகம் பளிச்சென்றிருந்தது. வஹிதா மிக அழகாக ரெட்டை ஜடை போட்டு மையிட்டு விட்டிருந்தாள். பவுடர் போட்டுக் கொண்டபொழுது தானும் அழகாகத்தானிருக்கிறோம் என்று தோன்றியது, மறுபடி மறுபடி கண்ணாடியைப் பார்த்துவிட்டுக் கிளம்பினாள். தோட்டத்திலிருந்த பட்டு ரோஸ் இரண்டைப் பறித்து வந்து அவளுக்குக் காதோரம் செருகிவிட்டாள் வஹிதா. அவளுக்கு வெட்கமாக இருந்தது. திடீரென இத்தனை அலங்கரித்துக் கொண்டு வெளியில் போனால் அஹமது நிச்சயம் கேலி செய்வான். இருந்தாலும் அவளுக்குப் பிடித்திருந்தது. “நான் வர்றேன்க்கா” என்று சொல்லிவிட்டு மதினா வீட்டுக்குப் போனாள். அவளையும் கூடவே அழைத்துப் போவதற்காக.

இரண்டே எட்டில் எதிரிலிருந்த மதினாவின் வீட்டை அடைந்துவிட்டாள். ஆனால் உள்ளே போவதற்குத் தயக்கமாக இருந்தது. மதினாவின் அம்மா ஏதாவது சொல்லுவாளோ? மூடிக் கிடந்த கதவின் மீது கையை வைத்தபடி அமைதியாக நின்று கொண்டிருந்தாள். கனமான முரட்டுக் கதவில் தொங்கும் இரும்பு வளையத்தைத் தொட்டு மரக்கதவின் மீது மெலிதாக சப்தம் வரும்படி மோதிவிட்டுக் காத்திருந்தாள். அப்பாடி! எவ்வளவு கனமான கதவு? திருடனால உடைக்கவே முடியாது என நினைத்துக் கொண்டாள். யாரும் வராதது ஏமாற்றமாக இருந்தது. இந்த சத்தம் யாருக்கும் கேட்டிருக்காது என்று நினைத்தவள், கதவின்மீது கைவைத்து அழுத்தித் தள்ளினாள். கிரீச் என்ற ஒலியுடன் கதவு உள்புறமாகத் திறந்தது.

ஒருவித எச்சரிக்கை உணர்வோடு வலது காலை எடுத்து வைத்து உள்ளே சென்றாள். பார்வை ஹாலைச் சுற்றிச் சுழன்றது.

முற்றத்தை ஒட்டிக்கிடந்த சோபாவில் அமர்ந்து கொண்டிருந்த மதினாவுக்கு இவளைப் பார்த்ததும் ஆச்சர்யமாக இருந்தது. “எங்கே கிளம்பிட்ட, சீவிச்சிங்காரிச்சுக்கிட்டு” என்று கேட்டாள். ராபியாவுக்கு வெட்கமாக இருந்தது. “லைப்ரரிக்குப் போறேன். வர்றியா?” மதினாவின் அக்கா பரிதாவுக்கும் புத்தகம் மாற்ற வேண்டியிருந்தது. “ஏண்டி மதினா, நீயும் போயேன்” என்றாள். “சரிக்கா போறேன். நீ எனக்கு ஒரு ரூபாய் கொடுக்கிறியா?” என்றாள், சந்தர்ப்பத்தை நழுவ விடாமல். “உம் தறேன்” என்றவாறு தனது அலமாரியைத் திறந்து பழைய புத்தகத்தை எடுத்தபடியே, “நீயும் முகம் கழுவி பவுடர்போட்டுக்கோ ராபியா மாதிரி” என்று தங்கைக்குச் சொல்லிவிட்டு, ராபியாவிடம் பேச்சுக்கொடுக்க ஆரம்பித்தாள்.

“இன்னைக்கு உங்க வீட்டுல என்ன சமையல், விஷேசம்தானே, உங்கக்கா வந்திருக்கிறதனால?”

“தெரியலேக்கா. வீட்டுல எல்லோருமே நோன்புதானே. நான் மட்டும்தான் நோன்பு இல்லெ. என்ன செய்றாங்கன்னு தெரியல” என்றாள் ராபியா. அவள் சொன்னதைத் தலையாட்டியபடி கேட்டுக்கொண்டிருந்தாள் பரிதா. அவளது குட்டையான சிவந்த உடலும், உருண்டை முகமும் கவர்ச்சியான கண்ணும் பேசும்போது அசையும் உதடுகளும், ரொம்பவும் அழகாக இருந்தன. அவளை ராபியாவுக்கு ரொம்பப் பிடிக்கும். வஹிதாவைப் போலவே இவளிடம் மிகுந்த பிரியமாக இருப்பாள். “ராபியா, நான் கட்டியிருக்கிற பாவாடை, தாவணி நல்லாருக்கா பாரு, இது மாதிரிதான் இந்தப் பெருநாளைக்கு மதினாவுக்கும் எடுத்திருக்கு” என்றாள்.

துணிதுவைக்கிற முற்றத்துக் கல்லில் குத்துக்காலிட்டு முகம் கழுவிக்

கொண்டிருந்த மதினாவுக்கு ராபியா என்ன சொல்லப் போகிறாள் எனக் கேட்க ஆவலாக இருந்தது. அங்கிருந்தபடியே கழுத்தை வளைத்து ராபியாவைப் பார்த்தாள். “உம் ரொம்ப நல்லாருக்கு, எங்கெ எடுத்தது?” என்றாள். மதினாவுக்கு முகம் சந்தோஷத்தில் விரிந்தது. அங்கிருந்தபடியே, “நிஜமா உனக்குப் புடிச்சிருக்கா?” என்று சத்தமாகவே கேட்டாள், உறுதி செய்து கொள்வதைப்போல.

“இது சிங்கப்பூர்ல இருந்து வந்துருக்கு ராபியா. எங்கண்ணன் அனுப்பிச்சது. நான் ஒரு செட்டு எனக்குப் போனமாசம் தைச்சுக்கிட்டேன். மீதித் துணிய இவளுக்குப் பாவாடை ஜாக்கெட் தைக்கலாம்னு பெட்டியில வைச்சாச்சு, நல்லாவே இல்லென்னு நேத்திலேருந்து இவ புலம்பிட்டுருக்கா பாரு” என்று அங்கலாய்த்தாள் பரிதா.

“ஏன் நல்லாத்தானே இருக்கு, பிறகென்ன?” என்று மதினாவின் முகத்தைப் பார்த்தாள். மதினாவும் பார்க்க நன்றாகத்தான் இருப்பாள். அவளுக்கு எது போட்டாலும் அழகாகத்தானிருக்கும்.

“அதில்லே, உனக்கு வாங்கியிருக்காங்கல்ல. ஜமிக்கி வச்ச பாவாடைத் துணி, அது மாதிரி வேணும்னு கேட்டேன். அது பக்ரீத்துக்கு வேணா வாங்கித் தர்றேன்னு அம்மா சொல்லிட்டாங்க” என்று சொன்னாள் மதினா. அவளுக்கு ராபியாவின் ஒவ்வொரு அசைவின் மேலும் தீவிரமான ஆசை இருந்தது. அவள் என்ன செய்தாலும் தானும் செய்ய வேண்டும். எதை வாங்கினாலும் தானும் அதை வாங்க வேண்டுமென விரும்புவாள். பரிதா இதை நன்றாகப் புரிந்து வைத்திருந்தாள். அவர்களது ஆழமான நட்பு இவளுக்கு மிகுந்த ஆச்சர்யத்தை உண்டு பண்ணக் கூடியதாக இருந்தது. ராபியாவும் இப்படித்தான். தனது வீட்டில் என்ன நடந்தாலும் விசேஷமாக எதுவும் சாப்பிடக் கிடைத்தாலும் உடனே எதிர்வீட்டை நோக்கித்தான் ஓடி

வருவாள், மதினாவிடம் பகிர்ந்து கொள்ள! சமயங்களில் வீட்டில் எல்லோரும் சொல்லிச் சிரிப்பார்கள் ஒரே பையனைப் பார்த்து இவ ரெண்டு பேருக்கும் சேர்த்துத் தாலியக்கட்டி வச்சாத்தான் சரி என்று!

"சரிக்கா, நாங்க கிளம்பறோம்" என்ற போது பரிதாவுக்கு ஞாபகம் வந்ததுபோல, "ஆமா ராபியா உங்க வீட்டு கார் எங்கே காணோம்? புழக்கத்திலேயே இல்லை?" என்றாள்.

"அது ஒரு ரிப்பேருக்காக டவுனுக்குப் போயிருக்கு. ஒருவாரமாவுது. முத்தண்ணன்தான் கொண்டுபோயிருக்காரு" என்று சொல்லிவிட்டு மதினாவுடன் வீட்டு வாசற்படியை விட்டு கீழே இறங்கும் பொழுது வெளியிலிருந்து வீட்டுக்குள் வந்தாள் சைனு. எங்கே போறாங்க ரெண்டு பேரும் என்ற கேள்வி அவள் முகத்தில் தெரிந்தது. "டியூசன் சார் வீட்டுக்கு" என்று மதினா சொல்ல, சிட்டாக பறந்தார்கள் இருவரும்.

வேகமாக ஓடியதில் மூச்சுவாங்கிற்று. தெரு முனைக்கு வந்ததும் சற்று நின்று ஆசுவாசப்படுத்திக் கொண்டார்கள். "நல்லவேளை அம்மாவுக்குச் சொல்லாம வந்தாச்சு. இல்லெ எல்லோருக்கும் திட்டுதான். கழுதைகளுக்கு என்ன புஸ்தகம் வேண்டிக் கெடக்குது? நோன்பு நாள்ல குரானை எடுத்து வச்சு ஓத வேண்டியதுதானே, என்று கத்துவாள்" என்றாள் மதினா.

"எங்க வீட்டுல மட்டும் எங்க பெரியத்தா என்னையவே குரான் எடுத்து வச்சு ஓதும்மா நோன்பு நாளுலேன்னு எப்பொப் பாத்தாலும் சொல்லிக்கிட்டு இருப்பாங்க. நான் எட்டு ஜுஸ்வு ஓதி முடிச்சிருக்கேன் நோன்பு ஆரம்பிச்சதிலிருந்து. நீய்யி?" என்றாள் ராபியா. "நானா?" ஒரு நிமிடம் இழுத்த மதினா, "நான் வந்து பன்னெண்டு முடிச்சிட்டேன். பரிதாக்கா முப்பதும் முடிச்சிட்டு மறுபடி ஆரம்பிச்சிட்டா." இதைச் சொல்வதற்கு ஏனோ மதினாவுக்குச் சங்கடமாக இருப்பது போல

ராபியாவுக்கு தோன்றிற்று. தனக்கு இதில் வருத்தமேதுமில்லை என்பதுபோல, “நான் பாரு இன்னிக்குள்ள நாலு ஜுஸ்வு ஓதி உன்னோட வந்துருவேன்” என்றாள். ரொம்பவும் ஆறுதலாக ஒலித்தது அவளது குரல்.

எவ்வளவு நேரம்தான் ஓதிக்கொண்டேயிருப்பது? போரடிக்கும் பொழுது பரிதா கதைப்புத்தகம் படிப்பாள், அம்மாவுக்குத் தெரியாமல். மதினாவும் காமிக்ஸ், மாயாஜாலக் கதைகள், அம்புலிமாமா இதெல்லாம் லைப்ரரியிலிருந்து எடுத்து வந்து படிப்பாள். ராபியா எப்பொழுதும் இவர்கள் வீட்டுக்குள்தான் இருந்து கொண்டிருப்பாள். “கோழி அடைகாக்கன, ரூமுக்குள்ள அடைஞ்சிக்கிட்டு பொழுதுக்கும் என்னாதான் செய்றாளுகளோ சிறுக்கிக.” சலித்துக் கொள்வாள் சைனு.

# 9

*தெருமுனையில் சற்று தயங்கி நின்றாள் ராபியா. அங்கேதான் அஹமதுவின் வீடு இருந்தது. மதினா வீட்டிலிருந்து இரண்டு வீடு தள்ளி. அஹமது இன்று தன்னைப் பார்க்க வேண்டும் என விரும்பினாள். அவன் வீட்டுத் திண்ணையை நோக்கி அவளது கண்கள் நீண்டன. மதினா அவளைப் பிடித்திழுத்தாள். "ஏன் இங்கெ நின்னுட்டே? வா போகலாம், நேரமாச்சு இல்ல, வெயில் வேற பார் வேர்த்துக் கொட்டுது" என்று புறங்கையால் கழுத்தில் வடிந்த வியர்வையைத் தடவி பாவாடையில் துடைத்தாள். இரு வரும் சேர்ந்து நடக்க ஆரம்பித்தார்கள். பங்குனிமாத வெயில் நன்றாகக் கொளுத்தியது. மதினா கேட்டாள். "உங்கக்காவைக் கட்டிக் கொடுக்கப் போறாங்களாமே? எங்கம்மா சொன்னாங்க."*

*"தெரியல. பெரியத்தாதான் சபியா குப்பி மகனுக்குக் கட்டித் தரணும்னு சொல்லிட்டிருக்காங்க. பெரியம்மா இப்ப அவசரமில்லென்னு சொல்லிக்கிட்டு இருக்காங்க, என்னன்னு தெரியல." இழுத்தவாறு சொன்னாள் ராபியா.*

*"உங்க நன்னி ஊருதான?" என்று கேட்ட மதினா 'அய்யே' என்று முகம் சுளித்தாள். "அங்கேயா, அது ரொம்பப் பட்டிக்காடு இல்ல" என்றாள். ராபியாவால் அதனை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. வருத்தத்துடன், "சின்ன ஊருதான். ஆனா எனக்கு ரொம்பப் புடிக்கும்" என்றாள் விட்டுக்கொடுக்காமல். "அதுக்காகச் சொல்லலை. வஹிதா டவுன்ல படிச்சவ, அங்கெ எப்பிடி இருப்பா, புடிக்காது இல்லெ? உனக்குன்னா உங்க உம்மும்மா வீடும் உம்மும்மாவும் சித்தியும் அங்கே இருக்காக. அதனால அந்த ஊரை உனக்குப் புடிக்கும். வஹிதாவுக்கு?"*

என்று தன் சந்தேகத்தைச் சொன்னாள் மதினா. அவள் பெரிய மனுஷியைப்போல கேட்டதும் அதிலுள்ள உண்மையும் ராபியாவுக்கும் புரிந்தது. அவளுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. "தெரியல" என்று சொல்லி பேச்சை முடித்துக் கொண்டாள். வஹிதாவின் திருமணம் அத்தனை சீக்கிரம் நடக்காது என்று தோன்றிற்று. அவளுக்கு றைமா பெரியம்மாவை நன்றாகத் தெரியும். அவள் அம்மாவைப் போல பயப்படக்கூடியவளோ, அசடோ அல்ல. அவளுக்கெனத் தனியாக யோசிக்கவும் அதைச் செயல்படுத்தவும் தெரியும். அவளுடைய பேச்சைக் காதர் பெரியத்தா எப்போதுமே தட்டுவதில்லை.

லைப்ரரிக்குப் போகும் வழியில்தான் உமாவின் வீடு இருந்தது. அவளையும் தங்களோடு கூட்டிப்போக வேண்டும் என்று தோன்றியது ராபியாவுக்கு. மதினாவிடம் கேட்டாள். "சரி!" என்று அவளும் ஒப்புக்கொண்டதும் இருவருமாக அந்தச் சிறிய ஓட்டு வீட்டின் முன் நின்றார்கள். கதவு லேசாகத் திறந்திருந்தது. வெளித் திண்ணையில் உட்கார்ந்து கொண்டபடி, "உமா. . .! உமா. . . !" என்று சத்தமாகக் கூப்பிட்டாள் மதினா. "யாரது?" என்ற குரல் உள்ளிருந்து வந்ததோடு, தகரக் கதவைத் திறந்து கொண்டு உமாவின் அம்மா எட்டிப்பார்த்தாள்.

திண்ணையில் ராபியாவையும் மதினாவையும் பார்த்தவுடன் கண்கள் ஆச்சரியத்தில் விரிய, "வா ராபியா, வா மதினா, ஏன் அங்கேயே உக்காந்துட்டீங்க. உள்ள வரலாமில்ல?" என்று கதவை விரியத் திறந்து வைத்தாள். அவளது பரபரப்புக்குக் காரணம் அவளது மகன் முத்து ராபியாவின் வீட்டில் டிரைவர் வேலை பார்ப்பதுதான். இவர்களுக்குக் கூச்சமாக இருந்தது நமக்கு எதுக்கு இவ்வளவு மரியாதை என்று! "ஒண்ணுமில்ல, உமா இருக்காளா? அவளப் பாக்கத்தான்" என்றாள் மதினா. "இருக்காளே இதோ கூப்புடறேன்" என்றபடியே, 'உமா . . .! உமா . . .!' என்று உள்பக்கமாகப் பார்த்துக்

குரல் கொடுத்தாள். “இதோ வந்திட்டேன்” என்று சொல்லிக் கொண்டே உமா ஓடிவந்தாள். “இன்னிக்குக் கொஞ்சம் பாத்திரம் தேய்க்க வேண்டியிருந்தது. அதான் செய்திட்டிருந்தா. நான் துணி துவைச்சிட்டுருந்தேன். புத்தகமும் கையுமா நீங்க எங்கெ கிளம்பிட்டீங்க?”

“அக்கா ஊர்லேர்ந்து வந்திருக்கா, லைப்ரரியில புத்தகம் எடுத்திட்டுவரச் சொன்னா. அதுதான் வந்தோம்” என்றாள் ராபியா. “வஹிதா வந்தாச்சா, எப்போ? முத்துகூட சொல்லலை? தெரிஞ்சிருந்தா நான் பார்க்க வந்திருப்பேனே” என்றாள் அமுதாம்மா. அவளது முகம் கனிவு மிக்கதாயிருந்தது. உமாவும் அப்படித்தான்! வீட்டில் எவ்வளவு கஷ்டம் இருந்தாலும் வெளியில் காட்டிக்கொள்ளவே மாட்டாள். பள்ளியிலும் அவள்தான் நிறைய மார்க் வாங்குவாள். இவர்கள் பேசிக்கொண்டு இருக்கும் பொழுது உமாவும் முகம் கழுவி இவர்களோடு சேர்ந்து கொண்டாள். “நாங்க வர்றோம்” என்று சொல்லி விட்டு வீட்டை விட்டு வெளியே வந்தார்கள்.

லைப்ரரிக்கு வெளியே அஹமது நின்று கொண்டிருந்தான். தூரத்தில் இவர்கள் வருவதைப் பார்த்ததும் இவர்களிடம் வம்பிழுக்கும் எண்ணம் அவனுக்கு உண்டாயிருக்க வேண்டும். இங்கிருந்து பார்க்கையில் உமாவின் கருப்பு நிறம் வெயில்பட்டு மினுமினுத்தது. “ஏய், கருப்பி” என்றான், அஹமது. மூன்றுபேரும் நிமிர்ந்து பார்த்தார்கள், உமா தலையைக் குனிந்து கொண்டாள். மதினாவுக்குத் தாங்க முடியாதபடி கோபம் வந்தது. “என்னடா, நீ ரொம்ப செகப்போ? நாய் கூடத்தான் சிகப்பு” என்றாள் பதிலுக்கு. “அப்புடித் தான் சொல்லுவேன், நீங்கள்ளாம் என்ன சினிமாவுலயா நடிக்கப் போறீங்க? இவ்வளவு பவுடர் அப்பி வச்சிருக்கீங்க” என்று முகத்தை

அஷ்ட கோணலாக்கிக் காட்டினான். "போடா மூதேவி" என்றாள் மதினா. அவனுக்குச் சரியான பதில் சொல்ல அவர்களுக்குத் தெரியவில்லை. ராபியா அதட்டினாள். வாங்க போகலாம்; அவன் கூட என்னபேச்சு என்று.

அவன் தன்னையும் கிண்டல் செய்தது அவளுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. அவன் ஏன் இப்படி நடந்து கொள்ளுகிறான்? அவனோடு சேர்ந்து விளையாடவும் பழகிக்கொள்ளவும் நிறைய விஷயங்கள் இருந்தன. அவன் எப்போதுமே இப்படியே வம்பு பண்ணிக் கொண்டிருப்பதால் ஒன்றுமே முடியவில்லை. லீவு நாட்களில் அவனோடு சேர்ந்து தட்டானும் வண்ணத்திப் பூச்சியும் பொன்வண்டும் பிடித்து விளையாடலாம், சைக்கிள்விட, பட்டம் செய்ய, இன்னும் எவ்வளவோ விளையாட்டுகள் அவனுக்குத் தெரியும். இன்னும்கூட சின்னவயதில் அவன் தனக்கு நுங்கு வண்டி செய்து கொடுத்தது நன்றாக நினைவிருந்தது. இப்போதுதான் அவன் ரொம்ப மாறிப்போய்விட்டான். எப்பொழுதும் கிண்டலும் கேலியும் செய்து வம்பிழுக்கிறான். இவர்களே பழம்போட நினைத்தாலும் அவன் இவர்களை நெருங்க விட்டால்தானே? என்ன செய்ய என்று நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டாள்.

இவர்கள் லைப்ரரிக்குள் நுழையும்போது பின்னாலேயே வந்த அஹமது, "யாரெல்லாம் சினிமாவுக்கு வர்றது? இன்னிக்கு ஞாயித்துக்கிழமை. காலையில படம் காட்டுறாங்க" என்று சொல்வது கேட்டுது. திரும்பிப் பார்த்தாள் ராபியா. அவன் தனது கூட்டாளிகளான இலியாஸிடமும் ரசாக்கிடமும் கேட்டுக் கொண்டிருந்தான் இவர்கள் காதில் விழுவது போல. அவர்கள் மூவருக்கும் லைப்ரரிக்குள் ஒரு வேலையும் இல்லையென்பது மதினாவுக்கும் ராபியாவுக்கும் தெரியும். அவன் தங்களைக் கேலி

செய்யத்தான் இங்கே வந்திருக்கிறான் என்பதைப் புரிந்துகொண்டபடி அங்கிருந்த நாற்காலிகளில் அமர்ந்து கொண்டார்கள்.

லைப்ரரி இந்த ஊரில் ஆரம்பித்து ஒரு வருடம்தானிருக்கும். ராபியாவுக்கு லைப்ரரி ஆரம்பித்த அன்று ஏகப்பட்ட சந்தோஷம். இனி நிறைய காமிக்ஸ் படிக்கலாம் என்று இப்போதுகூட அன்று தனக்கு உண்டான சந்தோஷத்தை நினைவுபடுத்திக் கொண்டாள். ஒரே ஒரு அறை மட்டும் கொண்டதுதான் லைப்ரரி. அதனுள் ஐந்தாறு மர அலமாரிகளில் புத்தகங்கள் அடுக்கப்பட்டிருந்தன. லைப்ரரியனிடம் யாராவது என்ன இவ்வளவூண்டு புத்தகம் தானா என்று கேட்டால் அவர் சொல்வது; “இப்பதான ஆரம்பிச்சிருக்காங்க. அடுத்த வருஷத்துல நிறைய புத்தகம் வரும்.” அவரைப் பார்த்தால் ராபியாவுக்கு பாவமாக இருக்கும். விபத்தில் அவருடைய ஒரு கால் போய்விட்டதால் மரத்தாலான காலொன்றை அவர் பொருத்தியிருந்தார். யாருக்காவது புத்தகம் வேண்டுமென்றால் அவரே எழுந்து தேடிக்கொடுத்து உதவுவார். இவர்கள் எவ்வளவு நேரம் அங்கே இருந்தாலும் ஒன்றுமே சொல்ல மாட்டார்.

“படிங்க, கண்ணுகளா படிங்க. நீங்கள்ளாம் இங்கெ வந்து படிக்கிறது எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா? ஒண்ணும் பிரச்னையில்ல, எங்கால் நொண்டியா இருக்குன்னு பரிதாபப் பட்டுக்கிட்டு எந்தப் புஸ்தகமும் கேட்காம இருந்திராதீங்க. நான் ஒரு நொடியில தேடி எடுத்திடுவேன் என்ன?” இவர்கள் அங்கு வரும் ஒவ்வொரு முறையும் அவர் இதேதான் சொல்லிக் கொண்டிருப்பார்.

புத்தகம் தேடித்தரக் கேட்க முடியாத சங்கடத்தைத் தனது உற்சாகமான பேச்சினால் துரத்திவிட அவர் செய்யும் முயற்சி இவர்கள் மூவருக்குமே நெகிழ்ச்சியூட்டுவதாய் இருக்கும்.

இவர்கள் அங்கிருந்த ஒரு மணிநேரத்தில் ஐந்து நிமிடத்திற்கு ஒரு

முறை மெனக்கெட்டு எழுந்து கட்டைக்கால் அதிர நடந்து வந்து, “என்னம்மா, வேறென்ன புத்தகம் வேணும் சொல்லுங்க. எடுத்துத்தரேன்” என்பார் கம்பீரமான குரலில்.

பல நாட்கள் அவரே சில புத்தகங்களை இவர்களுக்குப் பிடித்தமானவையாக இருக்கும் என்று எடுத்துத் தனியாக வைத்திருப்பார். “இதப்பாருங்க, நேத்து தற்செயலா புத்தகம் அடுக்கையில இது கண்ணுல பட்டுச்சு. எடுத்து வச்சேன். படிச்சுப் பாருங்க” என்று சொல்லி பெருமையாகக் கொடுப்பார். மதனகாமராஜன் கதைகள், விக்ரமாதித்யன் கதைகள், ஆயிரத்தோரு அராபிய இரவுகள், துப்பறியும் சாம்பு இதெல்லாமும் அவர்தான் இவர்களுக்கு எடுத்துத் தந்து படிக்கச் சொல்வார்.

ராபியாவுக்கு நன்றாகத் தெரியும், அவர் எடுத்துத்தரும் புத்தகம் அத்தனையுமே நிச்சயமாகத் தனக்கு ரொம்பவும் பிடித்தமானவையாகத்தான் இருக்கும் என்பது.

லைப்ரரியின் மேலே தண்ணீர் டாங்க் இருந்தது. ஊர் முழுவதற்குமாகக் குடிதண்ணீர் அதிலிருந்துதான் பைப்பின் மூலம் சப்ளையாகும். அதில் ஏறுவதற்கு ஒரு இரும்பு ஏணி கட்டிடத்தோடு சேர்த்து பொருத்தப்பட்டிருந்தது. பக்கத்திலேயே குடிதண்ணீர் பைப் ஒன்றும், பெரிய அரசமரமும் என அந்த இடம் இவர்களுக்கு விளையாட ஏற்ற விதத்தில் இருந்தது. இரும்பு ஏணியில் ஏறி தண்ணீர்த்தொட்டியை எட்டிப்பார்த்து, கைவிட்டு அள்ளிக் குடிப்பார்கள். மிகப்பெரிய தொட்டி. அதில் ஒரு பகுதி எப்பொழுதும் திறந்தே கிடக்கும். தொட்டிக்குள் கைவிடுவதை யாரும் பார்த்து விடுவார்கள் என்கிற பயத்தோடுதான் தண்ணீர் குடிப்பார்கள். தண்ணீரில் அரசமரத்தின் நிழலும் உள்ளிருக்கும் பாசானும் சேர்ந்து இருட்டாக இருக்கும். மஞ்சள்நிற அரசமர இலைகள் உதிர்ந்து

மிதக்கும். அந்த ஏணிப்படியின் மீதேறி அதையொட்டியிருக்கும் பெரிய குழாயைக் கட்டிப் பிடித்து மெதுவாகச் சறுக்கி கீழே வருவார்கள். உடல் அசரும் வரைக்கும் அந்த விளையாட்டு நீடித்துக் கொண்டிருக்கும்.

இன்று ஏனோ மனம் படிக்கவோ, விளையாடவோ விருப்பமில்லாமல் இருந்தது. பக்கத்திலிருந்த சினிமா தியேட்டரிலிருந்து காற்றில் மிதந்து வந்து கொண்டிருக்கும் சினிமா பாடல் காதில் ஒலிக்கிறது. இன்னும் சிறிது நேரம் வரை பாட்டு ஏதாவது போட்டுவிட்டுப் படம் ஆரம்பித்து விடுவார்கள். இன்று எதற்காக மேட்னிஷோ போடுகிறார்கள் என்கிற யோசனை இவர்களைக் குடைந் தெடுத்துக் கொண்டிருந்தது.

அஹமது தன் நண்பர்களோடு வெளியே சென்ற பிறகு மதினா கேட்டாள், “நாமும் சினிமாவுக்குப் போகலாமா” என்று. “போகலாம் ஆனா. . .” என்று இழுத்தாள் ராபியா. “காசுதானே? என்கிட்ட இருக்கே. பரிதா கொடுத்த ஒரு ரூபா.” “ஒரு டிக்கெட் 35 பைசா மூணு பேருக்குச் சரியா இருக்கும்” என்றாள் மதினா. “ஆமா அஞ்சு காசு குறையுதில்ல” என்றாள். உமா, “நான் போய் எங்கம்மா கிட்ட வாங்கிட்டு வரட்டா” என்றாள் சந்தோஷம் பொங்க, அவளுக்கும் படம் பார்க்க விருப்பமாக இருந்தது. “சரி ஒரு அஞ்சே அஞ்சு காசுமட்டும் போதும். ஓடு” என்று அவளை விரட்டினாள் ராபியா. பாவம் அதற்கு மேல் கேட்க மனசில்லை அவளுக்கு.

ஒரே ஓட்டமாக ஓடினாள் உமா. “வீட்டுக்குத் தெரிஞ்சிடுமா ராபியா? திட்டுவாங்களே, என்ன செய்றது?” என்றாள் மதினா. ராபியாவுக்கும் பயமாக இருந்தது. நோன்பு நாளில் சினிமாவுக்குப் போகக் கூடாது என்று ஏற்கனவே அம்மா சொல்லியிருந்தாள். “இந்தமாசம் பூராவும் நன்மையை மட்டும்தான் சம்பாரிக்கணுமாம்.

தெரிஞ்சா திட்டுவாங்க அதுவும் அஹமதுவும் இருக்கானே? கோள் மூட்ட." என்ன செய்றது? "அவனும் தானே சினிமா பார்க்கிறான். அதை நாம அவங்கம்மாகிட்ட சொல்லிடுவோம்னு அவனை மிரட்டிவைப்போம்" என்றாள் மதினா. அவளது யோசனை ராபியாவைத் தைரியம் கொள்ளச் செய்தது. "சரி, அப்ப வீட்டுக்கு தெரிய வழியேயில்ல. நாமும் போகலாம்" என்றாள் உற்சாகமாக.

லைப்ரரியில் வஹிதாவும் பரிதாவும் கேட்ட புத்தகங்களை வாங்கிக் கொண்டு வெளியே வந்தார்கள். உமா மூச்சிறைக்க ஓடி வந்தாள். அவள் கையில் ஐம்பது பைசா நாணயம் ஒன்று இருந்தது. "ஏதுடி இவ்வளவு காசு?" என்றாள் மதினா. "எங்கம்மா தான் தந்தாங்க. முறுக்கும் கடலைமிட்டாயும் வாங்கிச் சாப்பிடலாம்" என்றவள், "தண்ணித் தாகமா இருக்கு. முதல்ல தண்ணி குடிச்சிட்டுப் போவோம்" என்று தண்ணீர் குடித்த பிறகு ராபியா குழாய் அருகில் போனாள். இவர்களுக்கும் தாகமாக இருந்தது. மதினாவும் உமாவும் பாவாடையைத் தூக்கி நனைந்து விடாமலிருக்க முழங்கால்களுக்கிடையில் சொருகிக் கொண்டாள். இருகைகளிலும் தண்ணீர் பிடித்து குனிந்து குடிக்கும் போது வழிந்தோடிய நீர் சட்டையின் முன்புறங்களை நனைத்து விட்டிருந்தது. நிமிர்ந்தவள் சட்டை நனைந்து போயிருப்பதைப் பார்த்து அலுத்துக் கொண்டாள். "இருந்தா என்ன?, காய்ஞ்சு போயிடும். வா சீக்கிரம்" என்று அவசரப்படுத்தி முன்னே நடந்தாள் மதினா. ராபியாவுக்கு இந்நேரம் அம்மாவின் ஞாபகம் வந்தது. அவள் இதைப் பார்த்தால் கோபித்துக் கொள்ளுவாள். பொம்பிளப் பிள்ளைக்கு கூச்சம் இல்ல? அப்பிடியே தெரியுதுபார்! என்று. ராபியா தன் நெஞ்சின் மீது புத்தகங்களை அணைத்தபடி அவர்களோடு நடக்க ஆரம்பித்தாள்.

லைப்ரரிக்கு அடுத்ததாக கணபதி பிள்ளையின் யூகலிப்டஸ்

மரக்காடு இருந்தது. அதைத் தாண்டினால் பழனி தியேட்டர் தான். அங்கிருந்து இன்னும் கொஞ்ச தூரம் நடந்தால் ஸ்கூல். தியேட்டரில் கடைசிப் பாட்டு ஒலித்துக் கொண்டிருந்தது. நடையை எட்டிப் போட்டு மூவரும் நடக்க ஆரம்பித்தார்கள். சினிமா பார்க்கப் போகிறோம் என்கிற சந்தோஷத்துடன் பயமும் போட்டி போட்டுக் கொண்டிருந்தது இருவருக்கும். தியேட்டர் வாசலில் அஹமது நின்று கொண்டிருந்தான். அவனுக்கு நிச்சயமாகத் தெரியும் இவர்கள் வருவார்களென்று. இவர்களைக் கண்டதும் அவன் முகத்தில் வெற்றிப் புன்னகை பூத்தது. இவர்கள் அவனைக் கவனிக்காத மாதிரியாக வேகமாக நடந்து பெண்கள் டிக்கெட் வாங்கும் இடத்திற்குப் போய் நின்றார்கள். அந்த அறையில் யாரும் இல்லை என்பதை டிக்கெட் கொடுக்கும் ஓட்டையினூடே பார்த்து என்ன செய்வது என்கிற யோசனையில் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

காலைக் காட்சிக்குப் பெண்கள் வரமாட்டார்கள் என்பதால் அங்கே டிக்கெட் கொடுக்க யாரையும் நிறுத்தவில்லை. இப்பொழுது தான் புரிந்தது அஹமது இவர்களைக் கண்டவுடன் சிரித்ததற்கான அர்த்தம். வேறு வழி இல்லை, ஆண்கள் பக்கம்தான் போய் டிக்கெட் எடுக்க வேண்டும். என்னசெய்வதென்று தெரியாமல் தியேட்டரின் முகப்புக் கேட்டில் வந்து நின்று கொண்டார்கள். அஹமது இவர்களை நெருங்கி வந்தான். “என்ன டிக்கெட் எடுக் கலை?” என்று கேட்டான். ராபியா மட்டும் ‘உம்!’ என்று மெலிதாக முனகினாள். அவனிடம் அவர்கள் உதவிகேட்க வேண்டும் என்று அவன் நினைப்பது இவர்களுக்கும் புரிந்தது. ராபியா யாரிடமும் யோசனை கேட்க விரும்பவில்லை. அவனது உதவி இன்று கட்டாயம் வேண்டியதாக இருந்தது. அவனிடம் சண்டையிடாமல் இன்று நடந்து கொள்வதன் மூலம் வீட்டில் அவன் கோள்மூட்டுவதை தவிர்க்கலாம் என்று நினைத்தாள்.

இன்றில்லாவிட்டால் என்றைக்காவது ஒரு நாள் அவன் இந்த விஷயத்தை வீட்டில் சொல்லாமல் இருக்க மாட்டான் என்று தெரிந்தாலும் இன்றைக்கு இருக்கும் நிலையில் கிடைக்கும் தண்டனை சில நாள் கழித்து ஆறிப்போய் விடும் என்பதால் அவனை இன்று மட்டும் நயந்து வைத்துக் கொள்ளவேண்டும் என நினைத்துக் கொண்டாள்.

"அஹமது, நீ எங்களுக்கு டிக்கெட் எடுத்துத் தறியா" என்று அவனிடம் மிகத் தாழ்வாகக் கெஞ்சிக்கேட்டுகொண்டாள். அவனுக்குப் பெருமை தாங்க முடியவில்லை. 'அப்பாடா!' ஒரு வழியாக இவர்கள் திமிர் அடங்கிடுச்சு என்று மனதில் நினைத்துக் கொண்டான். "ஓ! எடுத்தாப்போச்சு, என்ன டிக்கெட்?" என்றான் "பெஞ்ச் தான். முப்பத்தைஞ்சு பைசா டிக்கெட்" என்று அவனிடம் காசைக் கொடுத்தாள். இதோ, என்றபடி அவன் ஆண்கள் பகுதிக்குப் போனான். அவன் போன பிறகு மதினா முனகினாள். "ச்சே . . .! அவன்கிட்ட போய் பேசி டிக்கெட் எடுக்கச் சொல்லிட்டியே" என்று ஆதங்கப்பட்டாலும் படம் பார்க்காமல் திரும்ப யாருக்குமே மனதில்லாமல்தான் இருந்தது.

ராபியாவுக்கு இப்பொழுதுதான் ஞாபகம் வந்தது. என்ன படம் போட்டிருக்கிறார்கள் என்றே பார்க்கவில்லை. தியேட்டர் வாசலில் ஒட்டியிருந்த போஸ்டரை எழுத்துக்கூட்டிப் படித்தாள். யாரோ ஒரு நடிகனும் நடிகையும் கட்டி அணைத்தபடி நின்று கொண்டிருந்தார்கள். அவனை யாரென்றே தெரியவில்லை. ஜெய்சங்கரா, சிவாஜியா? மதினாவிடம் கேட்டாள். அவளுக்கும் அவர்களைத் தெரியவில்லை. உமா, "யாரா இருந்தா என்னா? படம்னு பாத்தாப் போதாதா" என்று பிரச்னையை முடித்து வைத்தாள். அதற்குள் அஹமது டிக்கெட்டோடு வந்து விட்டான். "சரி, உள்ள போகலாம் வாங்க" என்றாள் மதினா.

டிக்கெட் கிழிக்கும் கேட்டின் முன் நின்றபடி ராபியா அஹமதுவை வேண்டிக் கேட்டுக் கொண்டாள் தாங்கள் சினிமா பார்க்க வந்ததை யாரிடமும் சொல்ல வேண்டாம் என்று. அவன் “சேச்சே!” என்று பெரிய மனிதனாட்டம் சொல்லிய பொழுது ரொம்ப நல்ல பிள்ளையாகத் தெரிந்தான்.

டிக்கெட் கிழிப்பவன் இவர்கள் மூவரையும் சற்று கிண்டலாகப் பார்த்துச் சிரித்தான். “என்ன பொண்ணுகளா, சினிமா பார்க்கவா? போங்க போங்க” என்று சொல்லி தகரக் கதவைத் திறந்து விட்டான். உள்ளே நுழைந்ததும் அங்கிருந்த அரைகுறை இருட்டில் ஒன்றுமே புலப்படவில்லை. ஆண்கள் பகுதியில் நிறையவே ஆட்கள் அமர்ந்திருந்தார்கள், பெண்கள் பகுதியில் மட்டும் யாருமே இல்லை. மதினா பயப்பட ஆரம்பித்தாள். “பயமா இருக்கே, யாருமே இல்லை. நாம மூணு பேர் மட்டும் எப்படி” என்று ராபியாவின் தோளை இறுகப் பற்றிக் கொண்டாள். திரையில் படம் ஓடிக்கொண்டு இருந்தது. ராபியா, “வா உட்கார்” என்று ஒரு பெஞ்சை நோக்கி நகர்ந்தாள். பிறகு மூவருமாக ஒரே பெஞ்சில் நெருக்கமாக அமர்ந்து கொண்டார்கள்.

திரையில் ஏதேதோ அசிங்கமான காட்சிகள் வந்து போயின. படத்திலிருந்த இரண்டு பெண்கள் அடிக்கடி குளித்துக் கொண்டேயிருந்தார்கள். இவர்களுக்கு வெட்கமாக இருந்தது. பல காட்சிகளின் போது தத்தமது மடியில் குனிந்து முகம் புதைத்துக் கொண்டார்கள். ஆண்கள் பகுதியிலிருந்தவர்களெல்லாம் இவர்களைத் திரும்பித் திரும்பிப் பார்ப்பதை நன்றாகவே உணர்ந்துகொள்ள முடிந்தது. தலை நிமிரும் பொழுதெல்லாம் திரையில் மோசமான காட்சிகளையோ, ஆண்களின் கூர்மையான பார்வையையோ சந்திக்க வேண்டியிருந்தது. அவமானத்தில் அங்கேயே உயிர் போய் விட்டால் தேவலை என்றிருந்தது. அதோடு வீட்டு நினைவும் அம்மாவின்

நினைவும் வந்து வயிற்றைக் கலக்கிற்று.

மதினா "போயிருவோமா" என்று கேட்டாள். "போக முடியாது. கேட்ட பூட்டிட்டாங்க. படம் முடியறப்போதான் தொறப்பாங்க" என்றாள் ராபியா. உமா இவர்களது பயத்தில் பாதியும் இல்லாமல் இருந்தாள். அம்மாவுக்குச் சொல்லிவிட்டு வந்ததனால் கொஞ்சம் தைரியமாக இருந்தது அவளுக்கு. ரம்ஜான் மாதத்தில் உமா படம் பார்ப்பது குற்றம் ஒன்றுமில்லை. படம் முடிந்ததும் உடனே போவதற்காக எழுந்த உமாவை, "இருடி ஆம்பளைங்கல்லாம் போய் முடிச்ச பிறகு நாம போகலாம். சேர்ந்து போனோம்னா நம்மையே எல்லோரும் பார்ப்பாங்க" என்று இழுத்து உட்கார வைத்தாள் ராபியா.

எல்லோரும் வெளியேறிய பத்து நிமிஷம் கழித்து தியேட்டரிலிருந்து மெதுவாக மூவரும் வெளியே வந்தார்கள். பேயறைந்தாற் போல அவர்களது முகங்கள் மாறியிருந்தன. அஹமது போய் விட்டிருந்தான். வெளியே கண் கூசுமளவுக்குச் சுள்ளென்று வெயில் அடித்துக் கொண்டிருந்தது. தெருவில் நடந்து கொண்டிருக்கும்போது, மதினாவின் கை ராபியாவின் கையை இறுக்கமாகப் பற்றியிருந்தது. உமா மட்டும் ஒரு பிரச்னையுமில்லாத மாதிரி தன்பாட்டுக்கு நடந்து வந்து கொண்டிருந்தாள். ராபியா பயத்தைவிட அவமான உணர்வினால்தான் நடுங்கிக் கொண்டிருந்தாள். தங்களுக்குள்ளேயே ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்ள முடியாத கூச்சத்தில் குனிந்த தலைநிமிராமல் அடிஎடுத்து வைத்து நடந்து கொண்டிருந்தார்கள். அம்மா, அக்கா, பெரியம்மா, பெரியத்தாவெல்லாம் தன்னைப்பற்றி என்ன நினைப்பார்கள் . . . நினைக்கையிலேயே அருவருப்பாக இருந்தது. வீட்டிற்குப் போய்த்தான் ஆக வேண்டுமா என்கிற கேள்வி மனதைக் குடைந்தெடுத்தது. வரிசை வரிசையாக அணிவகுத்து நிற்கிற யூகலிப்டஸ் மரக் காட்டுக்குள்ளேயே

எதையாவது செய்து உயிரை விட்டுவிடலாமா என யோசித்தாள். ரம்ஜான் மாதத்தில் செத்தால் சொர்க்கத்திற்குப் போய்விடலாம் என்பதும் இன்று தான் செய்த பாவத்திற்கு தண்டனையில்லாமல் போய்விடும் என்பதும் நினைவுக்கு வந்தது. மறுவினாடியே அவளது கண்முன்பாகப் பெருநாளைக்கு எடுத்திருக்கிற ஜமிக்கி வைத்த பாவாடை தெரிய, ச்சீ. . .! என்ன யோசனை இது எனத் தன்னையே கடிந்து கொண்டவள், குனிந்து தரையில் உதிர்ந்து கிடக்கும் யூகலிப்டஸ் இலைகளைக் கையில் எடுத்து விரல்களினால் கசக்கி மூக்கின் அருகாகக் கொண்டுசென்று முகர்ந்து பார்த்தாள்.

"என்ன யோசனை, வேகமாக நடக்காம?" மதினாவின் குரல் செத்துக்கிடந்தது.

"இல்லெ, நாம ஒடனே வீட்டுக்குப் போக வேணாம், மூணு மணிவரை லைப்ரரியில் இருப்போம், இப்ப சரியா படம் விடுற நேரம். லேட்டாப் போனம்னாதான் அஹமது பொய் சொல்றான். நாங்க லைப்ரரியிலருந்தோம்னு சொல்லிக்கலாம்." ராபியாவுக்கு ஏதேனும் ஒரு விதத்தில் நடக்கவிருப்பதைத் தள்ளிப்போட வேண்டியிருந்தது. அவர்கள் ராபியாவின் யோசனைப்படியே மூன்று மணிக்கு லைப்ரரியிலிருந்து வீட்டை நோக்கிச் சென்றார்கள்.

தயங்கித் தயங்கி வீட்டு வாசற்படியில் கால் வைத்த ராபியாவை, "வாங்கம்மா" என்கிற குரல் வரவேற்றது. யார் என்கிற குழப்பத்தில் திடுக்கிட்டு நிமிர்ந்தவளுக்கு எதிரில் நிற்கும் அம்மாவின் முகம் தெரிந்தது. அஹமது சொல்லியிருக்க மாட்டான் என்கிற கடைசி நம்பிக்கையும் போய்விட ராபியா கோழிக்குஞ்சென நடுங்கும் உடலோடு மறு அடி எடுத்து வைக்காமல் அதே இடத்தில் உறைந்து போய் நின்று விட்டாள்.

இவள் வரவேண்டுமென்கிற அவசியமே இல்லாதபடிக்கு வேகமாக

இவளை நோக்கி வந்த சொஹ்ராவின் முகம் ஆத்திரத்தினால் சிவந்து போயிருந்தது. இத்தனை ஆவேசமாக அம்மாவை எப்பொழுதாவது பார்த்திருக்கிறோமா என்ற நினைவோடு அப்படியே அசைவற்று நிற்கும் ராபியாவுக்கு தான் லைப்ரரியில்தான் இருந்து விட்டு வருகிறேன் என்கிற பொய்யைச் சொல்வதன் அர்த்தமின்மை விளங்க, அமைதியாகவே அவளை எதிர் கொண்டாள்.

" 'ஏ' படமா பார்த்துட்டு வர்றே, நாயே."

முதல் அடியே அவளது கன்னத்தில்தான் விழுந்தது. அதன் பிறகு தொடர்ச்சியாகத் தன் உடல்மீது விழும் அடிகளை மௌனமாகவே வாங்கிக் கொண்ட ராபியாவின் கண்கள் வீட்டுக்குள்ளேயே சுற்றி பெரியம்மாவையும் வஹிதாவையும் தேடியது. அவர்களுக்கும் விஷயம் தெரிந்திருக்குமோ என்கிற கவலையில் விழும் அடிகளின் வலி தெரியவில்லை. தனக்கு நினைவு தெரிந்த நாளில் இன்றுதான் முதன்முதலாக அம்மாவிடமிருந்து அடிவாங்குகிறோம் என நினைத்தவளுக்கு, தான் செய்த தவறின் அர்த்தம் முழுமையாக புரிய ஓங்கி அழ ஆரம்பித்தாள்.

ராபியாவின் அழுகைக் குரல் கேட்டுத் தனது அறையிலிருந்து ஓடி வந்த றைமா, "சீ, விடு . . .! பிள்ளைய ஏதோ தெரியாம செய்திருச்சு" என இவளை அணைத்துக்கொண்டாள். "இதை இத்தோட விட்டுடு. ஆம்பளைங்களுக்குத் தெரிஞ்சா அசிங்கம்" என்றபடி ராபியாவைத் தன் அறைக்குள் அழைத்துச் சென்றாள் றைமா. அதன் பிறகு நீண்ட நேரம் அம்மாவின் அறையிலிருந்து அழுகை ஒலி கேட்டுக் கொண்டிருந்தது.

# 10

*கடையில் கல்லாப்பெட்டியின் அருகே உட்கார்ந்திருந்த காதருக்கு மனம் ரொம்பவுமே சஞ்சலப்பட்டது. வஹிதாவைத் தன் சகோதரியின் மகனுக்குத் தருவதாக வாக்குக் கொடுத்திருந்தது நிறைவேறாமல் போய் விடுமோ என்று! சபியா அக்காவின் கோபத்தை நினைத்து பயமாகவும் இருந்தது. இந்தத் திருமணம் நடக்கவில்லையென்றால் அவள் ஆதியிலிருந்து அந்தம் வரைக்கும் பட்டியல் போட்டுத் திட்ட ஆரம்பிப்பாள். அவளுக்கும் றைமாவுக்கும் எப்போதுமே ஒத்துப் போனதில்லை. பெண்டாட்டி பேச்சைக் கேட்டு வஹிதாவைப் படிக்க வைத்துப் பாழாக்கிக் கொண்டிருப்பதாக ஒவ்வொரு நாளும் குறை சொல்லிக் கொண்டிருப்பாள். சபியா ஊரிலிருந்து வருகிறாள் என்றால் போதும் அவள் என்னவெல்லாம் சொல்லித் தங்களை ஆட்டிப் படைக்கப் போகிறாளோ என்று சொஹ்ராவும் றைமாவும் கவலைப்பட ஆரம்பிப்பார்கள். அவளுக்குத் தன் பிறந்த வீட்டிலுள்ள உரிமையை நிலை நாட்ட வேண்டும் என்பதற்காகவாவது தன் தம்பிகளையும் அவர்களது மனைவிகளையும் குறை சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். அதன் மூலம் தனது உரிமையை நிலை நாட்டுவதாக அவள் நம்பிக் கொண்டிருந்தாள். ஆனால் பிரியமாகவும் இருப்பாள்.*

*றைமாவிடம், "இப்பிடி வயசுக்கு வந்த பிள்ளைய வீட்டுல வச்சு உடம்பைத் தேத்தாம உங்கம்மா வீடுன்னு விட்டுட்டு வந்தியே, என்னா படிப்பு வேண்டிக்கிடக்கு பொட்டப்புள்ளக்கி? அங்க உங்கம்மாவா இருக்கா, அவள நல்ல விதமா கவனிக்கறதுக்கு? வேலைக்காரி ஆக்கி வைக்கிறத அந்தப்புள்ள என்ன சாப்பிடவா போவுது? உங்க*

வாப்பாவாலதான் இதையெல்லாம் கவனிக்க முடியுமா? அவரு என்ன செய்வாரு ஆம்பள? இருந்தாலும் ஒனக்கு இம்புட்டு பிடிவாதம் ஆகாது” என்று வருத்தப்படுவாள்.

அவளுடைய பேச்சுகளுக்கு சொஹ்ராதான் பயப்படுவாள். றைமா காதிலேயே வாங்கிக் கொள்ளமாட்டாள். சிவந்த உருண்டை முகம் கோபத்தில் சிவந்து பளபளக்க ஒரு வார்த்தைகூட பேசாமல் இறுக்கமாகத் தன்வேலைகளைக் கவனிப்பாள். காதர் எவ்வளவோ எடுத்துச் சொல்வான். அவள் வஹிதா மேலிருக்கிற பிரியத்தில் தானே இப்படியெல்லாம் சொல்கிறாள். கோபப்பட என்ன இருக்கிறது என்று! அவள் அதை ஏற்றுக் கொண்டாலும் வஹிதாவை சபியாவின் மகனுக்குத்தர அவளுக்குத் துளியும் விருப்பமில்லை. இந்த விஷயத்தை எப்படிக் கையாள்வது என்று காதருக்குப் புரியவில்லை. இது குறித்து இன்று தன் தம்பியிடம் பேசிப்பார்க்கலாம் என்று நினைத்திருந்தான். கரீம் வீட்டுக்குப் போயிருந்தான். இன்னும் சிறிது நேரத்தில் வந்துவிடுவான்.

காதர் ரோட்டைப் பார்த்துக் கொண்டிருந்தான். பஸ் ஒன்று புகையைக் கக்கியபடி கடந்து சென்றது. வெயில் அனலாகத் தகிக்க, வியர்த்துப்போய் சோர்வாக உணர்ந்தான். கடையின் உள்புறம் மாரியாயி வெங்காயம் புடைத்துக் கொண்டிருந்தாள். வேலைக்காரப் பையன்கள் அவள் புடைத்துவைத்திருந்த வெங்காயத்தைச் சாக்கில் அள்ளிப் போட்டுக்கொண்டிருந்தார்கள். வேலை சாவகாசமாக நடந்து கொண்டிருந்தது. வெயில் நேரமென்பதால் கூட்டமில்லை. நோன்புக் கஞ்சி காய்ச்சுவதற்காக இந்த மாதம் முழுவதும் நிறைய வெங்காயம் விற்கும் என்பதால் வாங்கிக் குவித்திருந்தார்கள். அதிலுள்ள சருகுகளைப் புடைத்துச் சுத்தமாக வைத்தால்தான் வாங்குவார்கள். அந்த வேலையை வேறு யாரையும்விட மாரியாயிதான் நன்றாகச்

செய்வாள். அவளைக் கூர்ந்து பார்த்தான் காதர். நாற்பது வயதிருக்கும். உழைத்து உரமேறிய உடம்பும் களையான முகமுமாக இருந்தாள்.

கரீம் அவளோடு நீண்ட நாட்களாகத் தொடர்பு வைத்திருக்கிறான். இவ்விஷயம் எல்லோருக்குமே தெரியும். சொஹ்ரா எவ்வளவோ சொல்லிப் பார்த்த பின் விட்டு விட்டாள். அவனுடைய போக்கை மாற்ற யாராலும் முடியாது. இவனும் பேசாமல் இருந்து விட்டான். தோட்டத்தில்தான் அவளது வீடு இருந்தது. தோட்டத்தையும் மாடுகளையும் ரொம்பவும் பொறுப்போடு அவள்தான் பார்த்துக் கொண்டாள். அவளுக்கு இது பெருமையும் சந்தோஷமும் தரக்கூடிய விஷயமாக இருக்கும் போலும்! கரீமின் தொடர்பைத் தனக்கு கிடைத்த மிகப்பெரிய அங்கீகாரமாக அவள் நினைத்ததால்தான் கரீம் அவளைக் கூட்டிப்போய் கர்ப்பத்தடை செய்து வந்ததையும் அவளால் ஏற்றுக்கொள்ள முடிந்தது. சொஹ்ராவோடு ஒப்பிட்டால் இவளிடம் அழகு என்று மயங்க எதுவுமிருப்பதாகவே தெரியவில்லை. “என்ன இழவோ” என்று வாய்விட்டு முணுமுணுத்துக் கொண்டான். வியர்த்தது. பேனைத் தட்டிவிட்டு விட்டு கர்ச்சீப்பால் முகத்தையும் பிடரியையும் துடைத்துக் கொண்டிருந்த போது டிவிஎஸ் 50 யிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்தான் கரீம். வந்ததும் உள்ளே தலைநீட்டி, “என்ன, வேலை நடக்குதா?” என்று ஒரு குரல் கொடுத்து விட்டு அண்ணனுக்கு எதிரிலிருந்த ஸ்டூலில் அமர்ந்து கொண்டான்.

காதர் தம்பியை ஒரு நிமிடம் உற்றுப் பார்த்தான். வெடவெடவென ஒல்லியான சிவந்த தேகம். அகலமான தாடையும் சப்பையான மூக்கும் சின்னஞ்சிறிய கண்களும், அப்படியே தன் தந்தையின் ஜாடை அவனிடம் இருப்பதாக நினைத்தான். தன்னைப்போல சாது இல்லை. கோபக்காரன். எந்த விஷயத்திலும் வெட்டு ஒன்று, துண்டு ரெண்டு என முடிவெடுப்பான். இவனிடம் யோசனை கேட்பது தன்னைத்

தைரியப்படுத்திக் கொள்ள உதவும் எனத் தோன்றியது. அவன் தன்னை நோக்கித் திரும்பும் தருணத்திற்காகக் காத்திருந்த காதர் மெதுவாகத் தம்பியிடம் பேச்சை ஆரம்பித்தான்.

“வஹிதாவுக்கு ஆறு நோன்புல நிக்கா முடிச்சுடலாம்னு நினைக்கிறேன்” என்றவாறு தம்பியின் முகத்தை நேருக்கு நேராகப் பார்த்தான். அதற்கென்ன என்கிற கேள்வி கண்களில் தெரிய இவனை ஏறிட்டுப் பார்த்தான் கரீம். அண்ணன் நேரடியாகத் தன்னிடம் இவ்விஷயத்தை ஆரம்பித்தது அவனுக்கு ஆச்சர்யமாக இருந்தது.

“றைமாவுக்கு இதில இஷ்டமில்ல, இப்ப என்ன அவசரங்குறா, சபியா அக்காவோ மகன் சிங்கப்பூர்லருந்து வரப்போறான். முடிவச் சொல்லுன்னு அவசரப்படுத்துது. என்ன செய்றதுனு தெரியல” என்றான். கரீமுக்குப் புரியவில்லை, அண்ணி எதுக்காக மறுக்கிறாள் என்று. “இஷ்டமில்லயா?” என்றான் “வஹிதாவை விட சிக்கந்தருக்குப் பதினஞ்சு வயசு அதிகம் தெரியுமில்ல, அதுக்காகத்தான்.”

“ப்பூ, இது ஒரு காரணமா? நான்கூட என்னவோன்னுல்ல நினைச்சேன். இது ஒண்ணும் பெரிய அதிசயம் இல்லையே? ரொம்ப வீட்டுல இப்பிடித்தானே நடக்குது, நம்ம அக்கா மகனுக்கு நம்ம வீட்டுலதான பொண்ணு கட்டணும், சொந்தம் விட்டுப் போயிடும் இல்ல, இதையெல்லாம் யோசிக்கறதில்லையா?” என்றான். அவனுக்கு அண்ணன் அதிகமாகவே தன் மனைவியின் பேச்சைக் கேட்பதாக ஒரு எண்ணம் இருந்து கொண்டிருந்தது. ஒரு துளிக்கூட பொம்பளைகளுக்கு இடம் கொடுக்கக் கூடாது என்பதில் அவன் உறுதியாக இருந்தான். அதில் அவனுக்குப் பெருமையும் கூட. “அதில்லை, எனக்கும் கூட கொஞ்சம் யோசனையாகத் தான இருக்கு” என்றான் காதர்.

“வயசையெல்லாம் பார்த்தா முடியுமா? சேகு மகளுக்கும் அவ

மாப்பிள்ளைக்கும் பதினேழு வயசு வித்தியாசம். பாரூக் மகள அப்பிடித்தானே கட்டிக் குடுத்திருக்கு. பொண்ணக் கட்டிக் குடுத்து ரெண்டு பிள்ளைய பெத்தா சரி. அக்காகிட்ட நமக்குச் சரியா சொத்து இருக்கு. வீடு இருக்கு. பையனும் வெளிநாடு போறான். எல்லாத்துக்கும் மேல சொந்தம் வேற. பேசாம ஆறு நோன்புல முடிச்சுக் குடுத்துட்டு வேலையை முடிங்க! அதுவுமில்லாம நீங்க பொண்ணு தர்றதா வாக்குக் குடுத்திருக்கீங்க, இப்ப முடியாதுன்னு சொல்றது சரியில்லே.” அண்ணனின் முகத்தை நேருக்கு நேராகப் பார்த்துப் பேசாமல் தலைகுனிந்தபடியே சொன்னான் கரீம்.

அவன் சொல்வதும் சரியென்றே பட்டது காதருக்கு. இனி மேலும் யோசித்துக் கொண்டிருக்க நேரமில்லை. ஊர் உலகத்தில் நடக்காத அதிசயமில்லை என்று றைமாவைச் சமாதானம் செய்வது மட்டும்தான் பாக்கி என்று நினைத்து நிம்மதியடைந்தான். அவளிடம் சம்மதம் கேட்பது தேவையில்லாமல் அவளுக்கு முக்கியத்துவம் கொடுப்பதாக மாறக்கூடும். திருமண வேலைகளைத் தொடங்கி விடுவதன் மூலமே அவளது கருத்துக்கு மதிப்பில்லை என்பதை அவளே உணரும்படி செய்யலாம். வேறு வழி ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை.

தராவீஹ் தொழுகைக்குப் பிறகு ஹாலில் விரித்திருந்த சாப் பாட்டுப் பாயில் அமர்ந்த காதர் ஒருவார்த்தையும் பேசாமல் அமைதியாகச் சாப்பிட ஆரம்பித்தான். எப்படி விஷயத்தை ஆரம்பிப்பது என்ற குழப்பத்தில் மூழ்கியிருந்தது மனம். தலைநிமிர்ந்து வாசலைப் பார்ப்பதும், பின்னர் தனக்கெதிராக அமர்ந்திருந்த றைமாவைப் பார்ப்பதுமாகச் சாப்பிட்டு முடித்தான். எதிரே உள்ள கல்வாசலை அடுத்திருந்த அடுப்படியை ஒரு நிமிடம் நோட்டம் விட்டான். அங்கு ஏதோ வேலையில் ஈடுபட்டிருந்த சொஹ்ராவைப் பார்த்து, “ராபியாம்மா இங்கெ கொஞ்சம் வரமுடியுமா” என்று அழைத்தான்.

பெரிய மச்சான் தன்னை எதற்காக அழைக்கிறார் என்பது புரியாமல் அடுப்படி வேலையைப் போட்டது போட்டபடி வேகமாக நாலே எட்டில் வாசலைத் தாண்டி ஹாலுக்கு வந்த சொஹ்ரா தலைமுக்காட்டை இன்னும் நன்றாக இழுத்து முகத்தை மூடி தூணோரம் சாய்ந்து நின்றபடி, "என்னங்க மச்சான்" என்றாள். அவ்வார்த்தையைச் சொல்வதற்குள் நாவில் நீர் வறண்டு போனது அவளுக்கு. தனது ஒடிசலான தேகத்தைத் தூணோடு தூணாக இணைத்துக் கொண்டாள்.

றைமா இப்பொழுதும் கூட ஒன்றும் புரியாமல் கணவனையும் சொஹ்ராவையும் மாறி மாறிப் பார்த்தபடியிருந்தாள். "புள்ளைகள் லாம் தூங்கியாச்சுதானே" என்றவன், "இந்த ராபியாப் புள்ளைக்கி மஃரிபு நேரத்துல என்னா விளையாட்டு? பள்ளிவாசப் பொட்டிக் கடையில எப்பொப்பாரு பசங்களோட ஆட்டம் போட்டுக்கிட்டு நிக்கிது. நானும் பலதடவை பார்க்கிறேன். வீட்டுல மஃரிபுக்கு வஹிதாவை தஃலிம் கிதாபை எடுத்து வைச்சு படிக்கச் சொல்லி பொம்பளைக கேக்கலாமில்லெ, இனிமே நாள் தவறாம தஃலிம் கிதாபை மஃரிபு நேரம் எடுத்து வாசிங்க. பழக்கத்துக்கு வரும். ராபியாவையும் வாசிக்கச் சொல்லுங்க." யாரும் எந்தச் சமாதானமும் சொல்ல வேண்டாம் என்கிற தோரணையோடு ஒலிக்கிறது அவனது குரல். "இன்னும் ஏன் இவனைக் காணம்?" என்றபடி பார்வையை மறுபடியும் கல்வாசல் நெடுக ஓட்டி தெருக்கதவின் மீது பதித்த நேரம் கதவைத்திறந்து கரீம் உள்ளே நுழைந்து கால் செருப்பை வேகமாக உதறிவிட்டுக் கதவைத் தாழ்ப்பாளிட்டான்.

வாசலுக்கு வருமுன்பாக பாத்ரூமுக்குப் போகலாமா என நினைத்து பக்கவாட்டிலிருக்கும் பாத்ரூமை நோக்கி அடிஎடுத்து வைத்தவன், தனக்கு நேராக ஹாலில் அண்ணனும் அண்ணியும்

அமர்ந்திருப்பதையும், தூணோரம் தனது உடலைச் சாய்த்து வைத்தபடி சொஹ்ரா நின்று கொண்டிருப்பதையும் கவனித்து விட்டு அவர்கள் காத்திருப்பது தனது வருகைக்காகத்தான் என்பது புரிய அவர்களை நோக்கி வந்தான்.

"என்ன சாப்பிடணுமா?" தம்பியிடம் கேட்டான் காதர். "இல்லை, பசிக்கலை" என்று சொஹ்ராவைப் பார்த்துப் பதில் சொல்லியவன், தலையிலிருந்து தொப்பியைக் கழற்றி எடுத்து மடித்து சட்டைப்பையில் வைத்தபடி ஹாலின் ஓரமாகச் சென்று தரையில் அமர்ந்து சுவரில் சாய்ந்து கொண்டான்.

தம்பியின் பக்கமாகத் திரும்பி, "தொழுகிற உடுப்போட தரையில் உக்காந்துட்ட?" என்ற அண்ணனிடம், "பரவால்லை, அழுக்குதான்" என்றான்.

றைமாவின் முகம் ஒன்றும் புரியாத குழப்பத்தோடு சொஹ்ராவை நோக்கித் திரும்பியது – உனக்காவது ஏதாவது புரிகிறதா என்பது மாதிரி.

க்கும் . . .! என்று தொண்டையைச் செருமிக் கொண்ட காதர், "இன்ஷா அல்லாஹ்! இந்த ஆறு நோன்பு பிறையில நம்ப வஹிதாவுக்கும் சிக்கந்தருக்கும் நிக்காஹ் வைக்கலாம்னு இருக்கேன். துஆ செய்யிங்க" என்று சொன்ன நொடியிலேயே றைமாவின் சிவந்த முகம் கறுத்துச் சுண்டிப்போயிற்று.

"என்னசொல்றிங்க நீங்க . . ?" கரீமின் முன்பாகத் தனது ஆத்திரத்தை முழுவதுமாகக் காட்ட முடியாத நிலையில் தன் குரலைச் சற்று உயர்த்தி அழுத்தமாகக் கேட்டாள் றைமா.

"எதுக்கு இவ்வளவு பதட்டப்படுறே? பொண்ணைப் பெத்தா கல்யாணம் செஞ்சு குடுத்துத்தானே ஆகணும்." இதமாகவும், அதே சமயத்தில் அதிகாரத் தோரணையோடும் ஒலித்தது காதரின் குரல்.

அவனுக்கும் தன் மனைவிடம் இப்படி இந்த விஷயத்தை சொஹ்ராவையும் கரீமையும் வைத்துக் கொண்டு சொல்வதில் துளியும் விருப்பமில்லைதான். தானும் அவளும் தனித்திருக்கும் சமயத்தில் இவ்விஷயத்தை ஆரம்பிப்பதற்கான தைரியம் தனக்கில்லை என்பதாலேயே இப்படிச் செய்ய வேண்டியதாயிற்று.

"எங்கிட்டே கலக்காம எப்புடி நீங்க முடிவெடுக்கலாம்? எனக்குன்னு ஒரு அபிப்ராயம் இருக்காது?" ஆத்திரத்தினாலும் அவமானத்தினாலும் குலுங்குகிறது அவளது சதைப்பிடிப்பான தேகம். துக்கம் தொண்டையை அடைக்க, கண்களில் நீர் முட்டிக் கொண்டிருக்கிறது. சொஹ்ராவுக்கும் கரீமிற்கும் தர்ம சங்கடமாக இருந்தது. தலையைக் குனிந்தபடி தன்பாதத்தின் பின்புறமாகக் குதிகாலில் இருக்கும் பித்தவெடிப்பைத் தன் விரல் நகத்தினால் பிய்த்து எடுப்பதுபோல பாவனை செய்து கொண்டிருந்தான் கரீம்.

அவளது அழுகையும் ஆத்திரமும் காதருக்கு வருத்தத்தை ஏற்படுத்தியது. இருந்தாலும் இன்று இவ்விஷயத்திற்கு ஒரு முடிவு காண வேண்டியிருந்தது. கரீமையும் சொஹ்ராவையும் பார்த்து இனி நீங்கள் சரிக்கட்டுங்கள் எனத் தன் கண்களால் பணித்துவிட்டு விருட்டென எழுந்தான் "யாரும் அழுகவேணாம். மொதல்ல நஸீபை நம்புங்க போதும். அவன் நினைக்காம எதுவும் நடக்காது" என்றபடி தன் அறைக்குள் நுழைந்து கொண்டான்.

கரீமிற்கும் அந்த இடத்தில் இருப்பதற்கே சங்கடமாக இருந்தது. ஒரு வார்த்தையும் பேசாமலேயே அங்கிருந்து எழுந்து குளியலறையை நோக்கிச் சென்றான். அவனுக்கு ரொம்பவே ஏமாற்றமாக இருந்தது. இவ்வளவு நேரமாகத் தன் வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்து விட்டு ஒரு யோசனையும் கேட்காமல் சட்டென விஷயத்தை முடித்துவிட்டு அண்ணன் ஓடிப்போய்விட்டதாக உணர்ந்தான்.

“அப்படி என்னதான் பொண்டாட்டியின் மீது கரிசனமோ? ஒருதுளி கண்ணீரைப் பார்த்ததுக்கே மனுஷன் இவ்வளவு நடுங்குறானே” என அலுத்தபடி கைலியை மடித்துத் தூக்கி இடுப்பில் கட்டுக் கொண்டு கால் கழுவ ஆரம்பித்தான்.

சொஹ்ராவுக்கும் கூட ஏமாற்றமாகவே இருந்தது. இவ்வளவு முன் தயாரிப்போடு பேச்சை ஆரம்பித்தவர் நிதானமாக அனைவரிடமும் பேசிக் கலந்து ஒரு முடிவுக்கு வராமல், இப்படி ஓடுகிறாரே என எண்ணிக் கொண்டாள். றைமா ஒருவார்த்தையும் பேசாமல் மௌனமாக அப்படியே உட்கார்ந்திருந்தாள்.

டாக்டரின் யோசனைப்படி காதருக்கே தெரியாமல் கருத்தடை செய்துவிட்டு வந்தபொழுது ஷரியத்தை மீறி நடந்து கொண்டதாகக் கூறி கொஞ்ச காலம் றைமாவிடம் பேசாமல் இருந்தான். றைமா அதனைக் கண்டுகொள்ளாமலிருக்கவே முயற்சி செய்தாள். அவளுக்குத் தெரியும், கருத்தடை செய்யும் அனுமதி காதரிடமிருந்து எந்தக் காலத்திலும் பெறமுடியாதென்பது. ஷரியத்தைமீறி ஒரு அடிகூட எடுத்து வைக்க அவனால் முடியாது. இவளுக்கோ அடுத்ததாகக் குழந்தை உண்டாகிவிடுவது நல்லதில்லை என்று டாக்டர் சொல்லிய பிறகு வேறு வழிதெரியாமல் தன் தந்தையின் துணையோடு ஆபரேஷன் செய்து கொண்டாள். காலப்போக்கில் காதர் தன் வருத்தத்தை மறந்திருந்த சமயத்தில்தான் சாகுல் இறந்தான்.

சாகுல் இறந்தபிறகு ரொம்பவே துக்கமாயிருந்தது. அவனைச் சமாதானம் செய்து வருத்தத்தைப் போக்க றைமா மிகுந்த பிரயாசைப்பட்டாள். காதர் கரீமைவிட எவ்வளவோ நல்லவன். இந்தத் திருமண விஷயம் அவனது விருப்பம். அதனை ஓரளவுக்கு மட்டும் தான் எதிர்க்க முடியும். வஹிதா இருவருக்குமே உயிர். அவளுக்கு தீங்கான விஷயத்தைக் காதரால் பண்ண முடியாது. இறைவன் என்ன

*விதித்திருக்கானோ அவளது தலையில் அதுவே நடக்கட்டும் என்று தன் மனதைத் தேற்றிக்கொண்டாள் றைமா. தன் முகவாட்டம் ஒன்றுமறியாத தன் பிள்ளையின் மனதை நோகடிக்கக் கூடும் என்கிற நினைவில் அடுத்த வேலைகளைக் கவனிக்கத் தயாரானாள்.*

# 11

காலை எட்டு மணியிருக்கும், வெள்ளிக்கிழமை என்பதால் ஆற்றுக்குச் குளிக்கக் கிளம்பினாள் ஆமினா. துவைக்க வேண்டிய துணிகளை ஒரு மூட்டையாகக் கட்டினாள். சோப்பு, சீயக்காய் பொட்டலத்தையும் உள்ளே திணித்துக்கொண்டாள். கூட வருவதற்கு யாரும் இல்லை. பக்கத்து வீட்டு சபியா வருவதாகச் சொல்லியிருந்தாள். திடீரென மகன் இன்றைக்கு சிங்கப்பூரிலிருந்து வருகிறானாம், அதனால் வரவில்லை என்று சொல்லிவிட்டாள். பெருமைக்காரி. தான் நினைத்தபடியே தன் தம்பி மகள் வஹிதாவை மகனுக்கு முடித்து விட்டாள். சில பேருக்கு மட்டும் இந்த அல்லா நினைத்ததையெல்லாம் முடித்து வைக்கிறான். அவனும் அவர்கள் கைக்குள்ளே இருப்பது மாதிரி! இந்த விஷயத்தைக் கூட அவள் சொல்லவில்லை. சொஹ்ராதான் சென்றமுறை வந்திருந்தபொழுது அம்மாவிடம் சொல்லியிருந்தாள்.

ஆற்றுக்குப் போகும்போது யாராவது கூட வந்தால் நன்றாக இருக்கும். நடக்கும்போதும் துணி துவைக்கும்போதும் பேசிக் கொண்டிருந்தால் தோணாது. பிர்தவ்ஸின் துணைக்கு யாரும் இல்லை. அவளைத் தனியாக விட்டுப்போகவும் மனமில்லாமல் இருந்தது. தன்னுடைய எதிர்வீட்டில் ஒரு இந்துக் குடும்பத்தைப் புதிதாகக் குடிவைத்திருந்தாள் ஆமினா. இந்த ஊர் ஸ்கூலில் வாத்தியார் வேலை பார்க்கிறானாம். அவனுக்கு மனைவியும் ஒரு குழந்தையும் உண்டு. அந்தப் பெண்ணோடு கொஞ்சம் பேசிப்பழகியிருந்தாலாவது பிர்தவ்ஸைப் பார்த்துக் கொள்ளச் சொல்லலாம். வேறு வழியிருப்பதாகத் தெரியவில்லை, பிர்தவ்ஸ் உள்ளேயிருக் கட்டும். வெளிக்கதவைப் பூட்டி விட்டுத்தான் போகவேண்டும் என்ற முடிவுக்கு

வந்தவள் பூட்டையும் சாவியையும் எடுத்துக்கொண்டாள். அவள் என்ன செய்யப்போகிறாள் என்பது தெரிந்ததும் பிர்தவ்ஸுக்கு மிகவும் வருத்தமாகவும் கேவலமாகவும் இருந்தது.

"எதுக்காகப் பூட்டப் போறீங்க, நான் உள்ளே பூட்டிக்குவேன் இல்ல?" என்று சற்று கோபமாகவே கேட்டாள்.

"உனக்கு ஒண்ணுந்தெரியாது. ஊர்ல நாலுபேர் நாலு விதமா பேச இடம் கொடுக்கக் கூடாது. நீ இப்ப இருக்கற நிலையில உன்ன வச்சு என்னென்ன கதை கட்டலாம்னு ஊர் காத்துக்கிட்டிருக்கு தெரியுமா? நீ வீட்டுக்குள்ளிருந்து ஒன் வேலையைப்பாரு போதும்" என்று கடுப்பாகச் சொல்லிவிட்டு வெளியே போய் நின்று கதவை இழுத்துச் சாத்த முயன்றாள் ஆமினா. அவளால் இழுக்க முடியவில்லை. காலில் இடித்துக் கொண்டாள். பெருவிரலில் லேசாக ரத்தம் கசிந்தது. பிர்தவ்ஸ்தான் உள்ளிருந்து தள்ளி சாத்த உதவினாள்.

எவ்வளவு கனமான கதவு! இந்த வீட்டைத் தனக்காக எவ்வளவு தூரம் இஸ்மாயில் பார்த்துப் பார்த்துக் கட்டினான். இந்தக் கதவு செய்வதற்குத் தேக்கு மரம் வாங்கி வந்ததும், அதைப் பெருமையுடன் செய்யச் சொல்லியதும் நினைவுக்கு வந்தது. அன்று சாயங்காலம் தான் மைமூன் தன் மாமியாருடன் மாட்டு வண்டியிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்தாள். ஆமினாவுக்கும் இஸ்மாயிலுக்கும் அவர்களைக் கண்டவுடன் முதலில் திகைப்பாகவும் பிறகு சந்தோஷமாகவும் இருந்தது. "வாங்க மாமி. என்ன இது இந்த நேரத்துல?" என்று அவர்களை வரவேற்றாள். ஆனால் மைமூனின் மாமியாரின் முகம் சுண்டிப்போய் இருந்தது. அவள் எதுவுமே பேசாமல் வீட்டிற்குள் வந்து ஏற்கனவே விரித்திருந்த பாயில் உட்கார்ந்தாள். மைமூன் வேகமாகப் பின்னறைக்குள் போய் நுழைந்து கொண்டாள். நிலைமை ஏதோ வித்தியாசமாக இருப்பதை உணர்ந்து கொண்ட இஸ்மாயில் மரத்தை

அளந்துகொண்டிருந்த அந்தோணி ஆசாரியைக் கூப்பிட்டு, “சரி! கதவு விஷயத்த, நாளைக்குப் பேசலாம் காலையில என்னெ வந்து பாருங்க” என்றான். அவரும் “சரி அய்யா” என்று சொல்லிவிட்டு அங்கிருந்து கிளம்பினார்.

அவர் போன பிறகு மைமூனின் மாமியார் பேச்சை ஆரம்பித்தாள். “உன் தங்கச்சிய விட்டுட்டுப் போகத்தான் வந்தேன். கிளம்புறேன்” என்று சில வார்த்தைகளை மட்டும் பேசிவிட்டு இவர்களைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் எழுந்து போய்க் கொண்டிருந்தாள். அவளை மறிக்கப்போன ஆமினா தாழ்வாரத்தில் கிடந்த மரத்தில் கால் தடுக்கி விழ இஸ்மாயில் வந்து அவளைத் தூக்கினான். அவளுடைய பதற்றத்தை அவனால் புரிந்து கொள்ள முடிந்தாலும் மனைவியைக் கடிந்து கொண்டான்.

“எதுக்காக இவ்வளவு பதட்டப்படுற? இப்ப என்ன நடந்து போச்சு? அந்தம்மா போனா போகட்டும். பிறகு என்ன ஏதுனு விசாரிச்சுக்கலாம்.” ஆமினாவின் கால் கட்டைவிரலில் நகம் பிய்ந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது. உத்தரத்தில் செருகியிருந்த பழைய துணியைக் கிழித்து கால் விரலில் கட்டுப்போட்டு ரத்தம் வருவதை நிறுத்தினான். காலிலிருந்து தேக்கு மரத்தில் சொட்டுச் சொட்டாக ரத்தம் விழுந்து பரவியிருந்தது. ஆமினாவுக்கு வலி தெரியவில்லை. குழப்பமாக இருந்தது. என்ன ஏது என்று புரிபடவில்லை. மைமூன் அறைக்குள்ளிருந்து வெளியே வரவேயில்லை. இஸ்மாயில் மிகவும் நிதானமாக இருந்தான். “இன்னும் கொஞ்சம் இருட்டுனபொறகு அவளை உங்கம்மா வீட்டுல கொண்டுபோய் விட்டுட்டுவா. நாளைக்குப் பேசிக்கலாம் மேற்கொண்டு ஆகவேண்டியத” என்று சொல்லிவிட்டு வெளியே போனான்.

இஸ்மாயில் கட்டிக்கொண்டிருந்த வீட்டைப் பார்த்து ஊரே

அதிசயித்தது. சின்னப்பொண்ணக் கட்டிட்டோமுன்னு பாரேன் இவனுக்குப் பெருமைய! அவள சந்தோஷப்படுத்த என்னவெல்லாம் செய்றான் என்று வயிறெரிந்து புலம்பிக்கொண்டிருந்தார்கள். அவனது அம்மா எந்நேரமும் முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். ஆட்டுக்கல்லில் வாகாக உட்கார்ந்து கொண்டு வெற்றிலையைக் குதப்பியபடியே அவளது வாய் முனங்கிக் கொண்டிருக்கும். பக்கத்தில் எச்சில் துப்பும் பணிக்கத்தை வைத்திருந்தாலும் எச் சிலைத் துப்பமாட்டாள். வாயில் எச்சிலோடு முணுமுணுத்தால் தான் கேட்பவர்களுக்குத் தான் திட்டுவது புரியாது என்கிற தந்திரம் அது. இப்போதிருக்கும் வீட்டிற்கு எதிராகக் கட்டி எழுப்பிக் கொண்டிருந்த பெரிய வீட்டை அடிக்கடி முற்றத்திலிருந்தபடி அண்ணாந்து பார்த்துக் கொள்வாள். “ஹும் இந்த வீட்டுக்கு என்னான்னு இவ்வளவு பெரிய மச்சுவீடு கட்டுறான். அவ கெட்ட கேட்டுக்கும் ஒடஞ்ச ஓட்டுக்கும் இது பத்தாதோ? அவ வாங்கி வந்த வரம் அப்புடி! என்னா செய்ய? யாரப்பு, நீ கேளு” என்று புலம்புவாள்.

ஒருநாள் இஸ்மாயில் அவளெதிரில் முக்காலியைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான். கைலிக்குள் சுருட்டி வைத்திருந்த இனிப்புப் பொட்டலத்தை எடுத்து அம்மாவிடம் கொடுத்தான். தனது நடுங்கும் கைகளால் அதனை வாங்கி மடியில் வைத்துக்கொண்டாள். மூப்பேறித் தளர்ந்து சுருங்கிய உடலும், இடுங்கிய கண்களுமாகப் பார்க்கவே பாவமாக இருந்தது அவனுக்கு. “அம்மா உனக்கு ஏதாவது கொறை இருக்கா இங்கே?” ஆதரவாக வாஞ்சையுடன் கேட்டான்.

பீவியம்மாளுக்கு ஒன்றும் சொல்லத் தெரியவில்லை. அவளுடைய ஒரே மகன் அவளிடம் பிரியமாகக் கேட்கிறான். அவள் தனது வாழ்க்கையில் அடைந்த பேறு சந்தோஷம் எல்லாமே இவன் மட்டும்தான். அவளை பாரூக் முகமதுக்கு மூன்றாம் தாரமாகக் கட்டிக்

கொடுத்தபொழுது அவருக்கு ஐம்பத்தைந்து வயதிருக்கும். இவளுக்குப் பனிரெண்டு அல்லது பதிமூன்று வயதிருக்கும். அவருக்குக் காசநோய் வேறு. ஊரே வயிற்றெரிச்சல் பட்டது இப்படியும் நடக்குமாவென! வீட்டின் ஏழ்மையும் இயலாமையும் ஒன்று சேர தகப்பனில்லாத நிலையில் அவளது அம்மா சொல்லிவிட்டாள், “இதவிட்டா குமரக் கரையேத்த எனக்கு வேறவழி தெரியல. கஞ்சிக்கே வழியில்லாம இங்கெ கிடந்து சாகறதுக்கு, எம் மக வயிறார கஞ்சி குடிச்சாபோதும். அதுவுமில்லாம ரெண்டு புள்ளய பெத்தா சரி, அப்புறம் என்ன பொம்பளக்கி வாழ்க்க? புள்ளைய வளத்துக்கிட்டு வீட்டுல கிடக்கறதுதானே? சொத்து பத்து கெடக்கு.” பாரூக் முகமது திருமணம் செய்து கொள்வது தனக்கொரு துணை வேண்டுமென்பதற்காகத்தான். முதல் இரண்டு மனைவிகளில் ஒருத்தி இறந்துபோய்விட இன்னொருத்திக்குப் பிள்ளை பிறக்கவில்லை என்று தலாக் கொடுத்து அனுப்பிவிட்டார். இனி தனது கடைசிக் காலத்தில் தன்னைப் பார்த்துக்கொள்ள ஒரு ஆள் வேண்டிய நிலையில்தான் பீவியைக் கல்யாணம் பண்ணினார்.

திருமணம் முடிந்த பதினைந்து நாட்களுக்குப்பிறகுதான் பீவி வயதுக்கே வந்தாள். முதல் ஒரு வருடத்திற்குள் நிகழ்ந்ததுதான் இஸ்மாயிலை உண்டானதும் நோயின் தீவிரத்தினால் பாரூக் இறந்து போய் விட்டதும். பீவியம்மாவுக்குத் திருமணமான ஒரே வருடத்தில் நான்கு “நாப்பது” நாள் விசேஷம் வந்து போனது ஊரில் பெரிய அதிசயமாகவும் பெரிய சங்கதியாகவும் இருந்தது. திருமணமான நாற்பதாவது நாளில் மடிநிரப்பிய புதுப்புடவையும்! புதுசு மங்கவில்லை, மறு நாற்பது, வயதுக்கு வந்த நாற்பது. மூன்றாவது, இஸ்மாயில் வயிற்றில் இருக்கும்போது பாரூக் மௌத்தான நாற்பது, நான்காவது, குழந்தை பிறந்து பெயர் வைத்த நாற்பது. நான்குமே

ஒருவருடத்தில் நடந்து முடிந்தது. அவள் கைம்பெண்ணான பிறகு எத்தனையோ பேர் அவளிடம் நெருங்க முயற்சித்திருப்பார்கள், அவளது வயது அவளைச் சோரம் போகத் தூண்டும் என்று! யாரிடமும் அவள் மசியவில்லை. தன் உணர்ச்சிகளையெல்லாம் துறந்து ஒரு தவம்போல் தன் மகனை வளர்ப்பதில் மட்டுமே கவனம் செலுத்தி அவனை ஆளாக்கிக் காட்டினாள். ஊரே அவளது தியாகத்தையும் வைராக்கியத்தையும் புகழ்ந்து பேசிக் கொண்டிருந்தது.

இப்படியெல்லாம் பெற்று சீராட்டி வளர்த்த மகன். அவனை நினைத்து மனதில் பெருமிதம் பொங்கிற்று அவளுக்கு. "ஏத்தா அப்பிடிக் கேக்கிற? எனக்கென்னா கொறை, ஒண்ணுமில்லயே. கண்நிறைஞ்ச மவன அல்லா கொடுத்திருக்கான். தங்கப் பதுமையாட்டம் பேத்தி இருக்கா, எனக்கென்ன?" என்று பெருமூச்சு விட்டாள். இஸ்மாயிலுக்குப் புரிந்தது ஆமினாவுக்கும் அம்மாவுக்கும் சரிப்பட்டு வரவில்லை என்பது. அதற்குக் காரணம் நிச்சயமாக ஆமினா இல்லை. அம்மாதான்! அவளுக்கு வாழ்க்கையில் கிடைத் திராத சந்தோஷம் ஆமினாவுக்குக் கிடைத்துக் கொண்டிருப்பதை நிச்சயமாக அவளால் தாங்கிக் கொள்ள முடியாது. தான் மாமியார் என்கிற நிலையும் மூப்பின் தனிமையும் ஒன்று சேர்ந்து ஆமினாவின் பெயரில் கடும் வெறுப்பை உண்டு பண்ணியிருக்கிறது. அவன் மறுபடி பேச ஆரம்பித்தான்.

"இல்லேம்மா. உனக்குப் புதுசா கட்டுற வீடு புடிக்கலை போல இருக்கே. அத நிறுத்திரட்டுமா? உனக்கு விருப்பமில்லேன்னா வேண்டாம்" என்றான். மகன் என்ன சொல்ல வருகிறான் என அவளுக்குப் புரிந்தது.

"ஆமாய்யா, இப்ப எதுக்காக அந்தோத்தண்டி வீடு? இது நல்லாதானே இருக்கு. பிறகென்ன?" தன் கருத்தைச் சொல்லிவிட்டு

பணிக்கத்தில் எச்சிலைக்கூட்டித் துப்பினாள். அவனிடம் தெளிவாகப் பேச எச்சில் தடையாக இருந்துவிடப் போகிறது என்கிற கவலை அவளது சுருங்கித்தொய்ந்த முகத்தில் படர்ந்திருந்தது.

அவளிடம் மேற்கொண்டு எப்படிப் பேசவேண்டும் என்பது இஸ்மாயிலுக்குத் தெரியும். "சரிம்மா, இதே போதும்தான். நான்தான் புத்தி கெட்டுப் போனேன்" என்று ஆமோதித்தான். "புத்தி கெட்டுன்னா யாராலே" கிழவி கேள்வியெழுப்பினாள். மருமகளை மகன் திட்டப்போகிறான் என்கிற சந்தோஷம் பொங்கிற்று அவளுக்குள்!

"அம்மா, இப்ப சொஹ்ரா பொறந்திருக்கா. அவளப் பார் ஒன்னமாதிரியே இல்ல? சின்னவயசுல நீ இப்பிடித்தான் இருப்பேன்னு நேத்துக்கூட ஷம்சு சச்சா சொன்னாங்க. அச்சு அசலா ஒன்ன உரிச்சு வச்சுருக்கான்னு! அவ எங்கம்மா மாதிரி. அவளுக்குப் பேருகூட சொஹ்ரா பீவின்னுதான வைச்சிருக்கேன். அவபேர்ல ஒனக்கும் உசிர்தான? அவ ஓடியாட இந்தப் பழைய வீடு போதுமா, நீயே சொல்லு. அவள புதுவீடு கட்டி வழுவழுப்பான பளிங்குத்தரை போட்டு நடக்கவிட்டுப் பாக்கணும். எங்கம்மாவே ஓடி விளையாடுற மாதிரி. அத நான் பாக்க வேணாமா? அவ உன் பேத்தி, உனக்குப் பிறந்த ஒரே ஒரு மகனோட வாரிசு. இது உனக்குப் பிடிக்காதுன்னு தெரிஞ்சிருந்தா வீட்டை ஆரம்பிச்சுருக்கவே மாட்டேன் தெரியுமா. கனி ராவுத்தர் மவளுக்கா இந்த வீட்டக் கட்டுறேன். பிச்சைக்காரப் பய மகளுக்காகவா செய்றேன்?" என்று தன் மனைவியையும் ஒரு வார்த்தை திட்டிக்கொண்டான்.

அவனது குரல் ரொம்பவே உணர்ச்சிவசப்பட்டிருந்தது. நெகிழ்ந்து போயிருந்தான். தன் தாய் பட்ட கஷ்டங்களை அவனால் மறக்க முடிவதேயில்லை. பீவியம்மா மகனின் கைகளை இழுத்து நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள். தன் துயரங்களை மகன் நினைவில்

வைத்திருக்கிறான் என்பதே அவளுக்குப் போதுமானதாக இருந்தது. “என்னைப்பெத்த ராசா, நீ நல்லாருப்பா! எம்மனசப் புரிஞ்சு வச்சிருக்க” என்று கண்ணீர் விட்டாள். அன்றிலிருந்து சாகும்வரை அவளிடமிருந்து வீட்டைப் பற்றி எந்த எதிர்ப்புக்குரலும் எழவேயில்லை.

இஸ்மாயில் வீட்டைப் பிரமாதமாகக் கட்டி முடித்ததும், ஊரில் முதல் முறையாக கரண்ட் கனெக்ஷன் தன் வீட்டிற்கு வாங்கியதும் பிர்தவ்ஸ் பிறந்த நேரம் என்று நீண்ட நாட்கள் சொல்லிக் கொண்டேயிருந்ததும் ஆமினாவுக்கு நினைவுக்கு வந்தது. ஊரே இஸ்மாயிலை “மச்சு வீட்டு இஸ்மாயில்” என்றுதான் பெயர் சொல்லிக் கூப்பிட்டது. சின்னச் சின்ன குழந்தைகளும் கூட அப்படித்தான் அழைத்தார்கள்.

கண்களில் நீர் கோர்த்தது ஆமினாவுக்கு. காலில் இடித்துக் கொண்டதுகூட வலி தெரியவில்லை அவளுக்கு. அவனது செல்ல மகளின் வாழ்க்கைதான் எப்படியெல்லாம் சீரழிந்து போயிற்று என்பதை அவளால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. அவன் இருந்திருந்தால் அவனால் இதனைத் தாங்கிக் கொண்டிருக்க முடியுமாவென்கிற கேள்வி எழுந்து அவளைச் சங்கடப்படுத்தியபடியிருக்க ஆற்றுக்குபோகும் ஒற்றையடிப் பாதையில் கூடவே வருகிற நிழலோடு தன்னந்தனியே செல்ல ஆரம்பித்தாள்.

அஸருக்கும் மஃரிபுக்கும் இடைப்பட்ட நேரம். மாலை நேரக் காற்று இதமாக வீசிக்கொண்டிருக்க, அடுப்படியை ஒட்டிய திண்ணையில் அமர்ந்து ஏதோ யோசனை செய்து கொண்டிருந்தாள் பிர்தவ்ஸ். வெள்ளிக்கிழமை என்பதால் தலைக்குக் குளித்து ஓரளவுக்குப் புதிதென்று சொல்லக்கூடிய புடவையை உடுத்தியிருந்தாள். ஜும் ஆவுக்கு கோடி உடுத்தித் தொழுவது நன்மையாம். நாளையிலிருந்து

அம்மா பழைய புடவைகளை கட்டச் சொல்லிவிடுவாள் என்பது நினைவுக்கு வர பரவாயில்லை, வாரம் ஒரு நாளாவது தன்னை லட்சணமாக இருக்க அனுமதிக்கிறாளே என ஆறுதல் அடைந்தாள். காற்றில் பறந்தலைந்த முடியைக் கையால் தொட்டுக் கோதிவிட்டுக் கொண்டவள் எவ்வளவு நீளம் என்பது போன்ற பெருமிதம் முகத்தில் வந்தது. எழுந்து நடந்தால் இடுப்புக்குக் கீழே கற்றையாகக் கிடக்கும் அழகு இவளுக்கு ரொம்பவும் பிடிக்கும். இவளைப் பார்ப்பவர்கள் யாராக இருந்தாலும் முடியைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லாமல் இருந்ததேயில்லை என்கிற நினைவும் லேசான கர்வத்தை உண்டு பண்ணுவதாகயிருந்தது.

மல்லிகைப்பூவின் மணம் காற்றில் மிதந்துவர, எழுந்து கிணற்றை நோக்கிச் சென்று துவைக்கிற கல்லை ஒரே எட்டில் தாண்டி தோட்டத்திற்குள் சென்றாள். மல்லிகைப் பந்தலை நெருங்கி பூ எங்கெல்லாம் இருக்கிறது என உற்றுக் கவனித்தாள். தழை மண்டிக் கிடக்கிற கொடிக்குள் பூ அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தலை நீட்டிக் கொண்டிருக்கிறது. ‘இவ்வளவு தழை மண்டிக்கிடந்தா எப்புடி பூத்துக்கொட்டும்’ எனத் தனக்குள்ளாகச் சொல்லிக் கொண்டாள். ஒவ்வொரு வருடமும் பூப்பூக்கும் சீஸன் வருமுன்பே இலைகளை உருவி எடுத்துவிடுவாள். பூவும் நிறையக் கிடைக்கும். இந்த வருடம் இந்த நினைவு எப்படி வரும்? அப்படிப் பூத்தால்மட்டும் என்ன பிரயோஜனம் என்கிற நினைவு ஓடிற்று. இதிலிருக்கிற இந்தப் பத்திருபது பூவை வைக்கக்கூட அம்மா தன்னை அனுமதிக்க மாட்டாள். அவள் மனம் ரொம்பவும் சோர்வாக இருந்தது.

மௌனமாக இலைகளுக்குள் கையை விட்டு ஒவ்வொரு பூவாகப் பறிக்க ஆரம்பித்தாள். இடையிடையே மடியிலிருக்கும் பூக்களை அப்படியே முகத்தருகில் கொண்டுபோய் முகர்ந்து மூச்சை

உள்ளிழுத்து அதன் நறுமணத்தில் மூழ்கிப்போய் ஒருநொடி அசையாமல் நின்றுவிட்டு மறுபடி பறிப்பதைத் தொடர்ந்தாள். அவ்வப்போது அம்மாவின் ஞாபகம் வேறு வந்துகொண்டிருந்தது. அவள் எப்பொழுது வெளியிலிருந்து வருவாளோ? அதற்குள் பறித்துவிட்டால் தேவலை என்ற நினைவோடு அவசர அவசரமாகப் பறித்தவள் வேகமாக ஓடிவந்து அடுப்படிக்கருகிலிருந்த திண்ணையில் பூக்களைக் கொட்டிவிட்டு, உத்தரத்தில் செருகியிருந்த நூல்கண்டை எடுத்து உதறி விரித்துக் கட்டிமுடித்தாள். இடையிடையே சபியா வீட்டிற்குப்போன அம்மாவை நோன்பு திறக்க ஏன் இன்னும் காணோம் என்கிற யோசனை வந்தது. நல்லதுதான் சாவகாசமா வரட்டுமே என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள். வேக வேகமாகத் தலைமுடியைப் பின்னி அதற்குள்ளாகப் பூவைச் சொருகிக் கொண்டையிட்டு அதனை மறைத்துக் கொண்டவளுக்கு ஏனோ சிவாவின் ஞாபகம் வர உடனேயே அவளது பார்வை தனக்கெதிராக உள்ள வாசற்கதவின் மீது படிந்தது. கதவு தாளிட்டிருந்தது, எழுந்துபோய் திறந்து எதிர்வீட்டைப் பார்க்கலாமா என நினைத்தவளுக்கு உடலெங்கும் ஒருவிதமான குறுகுறுப்பு ஓடிமறைந்தது.

இப்பொழுதெல்லாம் தினமும் காலை வேளையிலும் மாலை நாலரை மணிக்கும் இந்த வாசல் கதவில் ஒன்றைத் திறந்துவைத்து விட்டுத்தான் வீட்டிற்குள்ளாக நடமாடுகிறாள். இந்த வீட்டின் அமைப்பும் தோதாகவே இருப்பதில் பெரிய சந்தோஷம் இவளுக்கு. பெரிய கல்வாசலின் ஒருபக்கம் அடுப்படி துண்டாகக் கட்டப்பட்டிருக்க, அதற்கு எதிர்புறமாக அந்தப் பிரமாண்டமான வீடு கட்டப்பட்டிருந்தது. இரண்டையும் இணைக்கும் விதமாக உள்ள கல் வாசலை ஒட்டி பெரிய சுற்றுச்சுவரும் தகரத்தினால் செய்த கதவும்

இருந்தன. அடுக்களையிலிருந்து வாசல்தாண்டி வீட்டிற்குள் போக கல்வாசலை ஒட்டி ஒரு வாசற்படியும், தேக்குமரத்தினால் செய்த பெரிய கதவு முகப்பும் உண்டு. மழைக்காலங்களில் பிர்தவ்ஸ் ரொம்பவே சலித்துக் கொள்வாள். "இப்படியா அடுப்படியைத் துண்டா கட்டி வைப்பாங்க? தொறந்த வெளியிலயிருக்கிற வாசலைத் தாண்டி அடுப்படிக்குப் போக வேண்டியிருக்கு, உடுப்பெல்லாலம் நனைஞ்சு போயிருது" என்று! இனி இப்படியெல்லாம் தோணாது என்பது நிச்சயமாக இருந்தது. சிவாவைப் பார்த்ததிலிருந்தே இவள் மனம் நிலைகொள்ளாமல் தடுமாறி கொண்டிருந்தது. திறந்திருக்கும் தகரக் கதவின் வழியே எதிர்வீட்டிலிருக்கும் அவனைப் பார்ப்பதற்காகவே தனது நடமாட்டத்தை அதிகரிக்கச் செய்து கொண்டிருந்தாள். ஆமினா சமயங்களில் சிடுசிடுப்பாள். "சமைக்கறதுக்குத் தேவையான அரிசி, பருப்ப ஒருவழியா மச்சுவீட்டுல இருந்து ஞாபகமா எடுத்துட்டுப் போவியா பொம்பளை, அதுக்கும் இதுக்குமா ஒரேயடியா ஓடிக்கிட்டிருக்க" என்று! அவளுக்குத் தனது நடமாட்டத்தின் காரணம் புரிந்துவிடக் கூடாதென்பதில் கவனமாயிருந்தாள் பிர்தவ்ஸ்.

முக்கியமாக மாலை நாலரை மணிக்கு ஆமினா பகல் நேர உறக்கத்திலிருந்து எழுந்திருக்காதது வசதியாக இருக்கும். சிவா அந்த நேரத்தை ஒட்டித்தான் ஸ்கூலிலிருந்து வருவான். இவள் அவனுக்காக அவன் பார்வையில் படும்விதத்தில் வாசற்கதவை லேசாக ஒருக் களித்துத் திறந்து வைத்து பாதி உடல் உள்ளேயும், பாதி வெளியேயும் இருக்கும் விதத்திலும் முகம் மட்டும் முழுவதுமாக வெளித்தெரியும் படியும் எங்கேயோ பார்ப்பதுபோன்ற பாவனையுடன் நின்று கொண்டிருப்பாள். அவன் வருவதைக் கொஞ்சமும் எதிர்பார்க்காதது மாதிரி! அவன் ரொம்பவும் கிட்டத்தில் வந்த பிறகே அப்பொழுது

தான் கவனித்தவள் போல, திடுக்கிட்டு விழித்துவிட்டு பிறகு மெலிதாக வெட்கப்பட்டுத் தலையை உள்ளுக்குள்ளாக இழுத்துக் கொண்டு ஓடிமறைவாள். இது தினமும் நடக்கும்.

தான் அவனால் கவனிக்கப்படுகிறோம், ரசிக்கப்படுகிறோம் என்பது ஏன் இத்தனை சுவாரஸ்யமானதாகவும் மயக்கம் தரக்கூடியதாகவும் இருக்கிறது என்பது அவளுக்குப் புரிந்தும் புரியாமலும் இருந்தது. இந்த மாலை நேரத்தில் அவன் தன்னோடு இருக்க முடிந்தால் எப்படியிருக்கும் என்கிற கற்பனையும் உருவாக, கூடவே அது நடக்குமா என்ற எண்ணமும், இந்த இளமைப் பருவத்தில் வேண்டியிருக்கிற துணையொன்றின் அருகாமை தனக்கு மறுக்கப்பட்டிருப்பதும், தொடர்ந்து கொண்டிருக்கிற தனிமையும் இப்பொழுதெல்லாம் பெரிய ஹிம்சையாக மாறிக்கொண்டிருப்பதை எண்ணி வேதனையடைந்தாள்.

பிர்தவ்ஸுக்கு ஏனோ அழ வேண்டும்போலிருந்தது. ஆமினா வரும் காலடி ஓசையும் கதவு திறக்கும் சத்தமும் எழ, அவள் வேகமாக வீட்டிற்குள் நுழைந்து மாடிப்படியேறிப் போய் மொட்டை மாடியில் நின்று கொண்டாள். அம்மாவுக்குத் தெரியும் இவள் கீழே இல்லையென்றால் மொட்டைமாடியில்தான் இருப்பாள் என்பது. தேடமாட்டாள். இந்த நினைவே பெரிய நிம்மதியைத் தருவதாக இருந்தது. இருட்டத் துவங்கியிருந்ததால் அங்கிருப்பதற்கு மேலும் இதமூட்டுவதாகயிருந்தது. வானத்தின் மீது ஒன்றிரண்டு நட்சத்திரங்களும் பிறையும் தென்படுகின்றன. பிர்தவ்ஸ் தலையை மெதுவாக நீட்டித் தெருவைப் பார்த்தாள்.

சிவா வீட்டுத் திண்ணையில் குழந்தையை மடியில் இருத்திய படி படித்துக் கொண்டிருந்தான். தலையை நிமிர்ந்து தன்னைப் பார்க்க மாட்டானா என்கிற ஏக்கம் மனதிற்குள் பெருகி இதயம் கனப்பது

போல உணர்ந்தாள். மொட்டைமாடியின் திறந்தவெளியில் தோட்டத்தில் பறிக்காமல் விடுபட்டிருந்த மலர்களின் நறுமணத்தைக் காற்று அள்ளிக் கொண்டுவந்து வீச, அவிழ்ந்துவிழுந்த தலைமுடி பிரிந்து அவளது முகத்தின் மீது உரசி அவளை என்னவோ செய்கிறது. தனக்குள் உறைந்து கிடந்த பெண்மையை இவ்வளவு உக்கிரமாக வெளிக்கொண்டுவர இந்த மாலை நேரத்திற்கு எப்படி முடிகிறது என யோசித்தவள், தன் உடலெங்கும் சிலிர்த்து நிற்கிற முடியைத் தன் கைகளால் தொட்டு உணர்ந்து மறுபடியும் அவன்மீது தன் ஆர்வம்பொங்கும் விழிகளைப் பதித்தாள். மின் விளக்கின் வெளிச்சத்தில் வெறும் பனியனும் கைலியும் உடுத்தியிருந்த அவனது உடலின் கம்பீரம் மனதினுள்ளே நிறைக்கிற ஆசையை மிகுந்த அச்சத்துடன் எதிர்கொண்டவள், “நோன்பு வைத்திருக்கையில் எதற்காக இந்த நினைவுகளெல்லாம்” என்று முணுமுணுத்தபடியே தரையின்மீது அமர்ந்து தன் உள்ளங்கைகளுக்குள் முகத்தைப் புதைத்துக்கொண்டு சத்தமில்லாதபடிக்கு விசும்ப ஆரம்பித்தாள்.

# 12

வீட்டு வாசலைப் பெருக்கிக் கொண்டிருந்தாள் ஷெரிபா. கைவலித்தது. றைமாக்கா வீட்டில் நோன்புக்கஞ்சி இன்றைக்கு. ராபியா வந்து ஷெரிபாவையும் அவள் அம்மா சவுராவையும் ஒத்தாசை செய்யக் கூப்பிட்டுப் போயிருந்தாள். சீக்கிரமாக வேலையை முடித்துவிட்டு அங்கே போக வேண்டியிருந்தது. நோன்புக் கிறக்கத்தில் சவுரா இன்னும் தூங்கிக் கொண்டிருந்தாள். அம்மாவை எழுப்ப வேண்டாம் என நினைத்துக் கொண்டாள் ஷெரிபா. சத்தமிடாமல் கதவைத் திறந்து வெளித்தாழ்ப்பாள் போட்டு விட்டு தலையில் முக்காடை இழுத்துவிட்டுக் கொண்டு தெருவில் இறங்கி இரண்டு வீடு தள்ளியிருந்த ராபியா வீட்டுக்குள் நுழைந்தாள். நீண்ட வாசலில் ஒருகணம் தயங்கி நின்றவள், தனக்கெதிரேயிருக்கும் பெரிய கல்வாசலையும், அதைத்தாண்டிய பரந்த தாழ் வாரத்தையும் ஒரு முறை கவனமாக நோட்டமிட்டாள். ஆண்கள் யாரும் இருந்துவிடப் போகிறார்கள் என்கிற கவலை அப்பார்வையில் இருந்தது. தாழ்வாரத்தை ஒட்டி வரிசையாக இருக்கிற அறைகள் ஒவ்வொன்றின்மீதும் பார்வையை நிறுத்தி மேலும் ஆழமாக நோட்டமிட்டவளுக்கு வீட்டில் ஆண்கள் யாரும் இல்லை என்கிற நிச்சயம் உண்டாக மிகுந்த ஆசுவாசம் கொண்டாள்.

ஒரு சத்தமுமில்லாமல் வீடே அமைதியாக இருந்தது. ராபியா வந்து தன்னை எதற்காகக் கூப்பிட்டாள் என்ற சந்தேகத்தை எழுப்பியது. வாசலைத் தாண்டி கால்வைத்ததும் சொஹ்ராவின் தலை தெரிந்தது. முற்றத்து நிழலில் கொட்டிக்கிடந்த வெங்காயத்தை முறத்தில் அள்ளிக் கொண்டிருந்த சொஹ்ரா சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்து, “வா

ஷெரிபா” என்றாள். “வர்றேன்க்கா” என்றவாறு அவளருகில் வந்து அமர்ந்தாள் ஷெரிபா. “இரு இரு தரையிலயா உட்காரப்போறே, தொழுகற சேலையோட? பலகக்கட்டை எடுத்திட்டு வரச்சொல்றேன்” என்றவள், “ராபியா ஏ, ராபியா” என்று உள்ளறையைப் பார்த்துக் குரலை உயர்த்தி அழைத்தாள்.

உள்ளேயிருந்து வஹிதாதான் வெளியே வந்தாள். கைகளில் விரித்தபடி இருந்த குரானுடன். அருகில் வந்து, “என்னவேணும்? சித்தி” என்றாள். “நீ ஏன் வந்த? ஓதிக்கிட்டுருக்கறப்ப, போய் ஓது. அவ எங்கே போனா, உதவிக்கு இல்லாம?” என்ற சொஹ்ரா, தானே எழுந்து அடுக்களையை நோக்கிப் போனாள். அதற்குள் தரையில் அமர்ந்து விட்ட ஷெரிபா வஹிதாவைப் பார்த்துச் சிரித்து, “நல்லாருக்கியா?” என்று கேட்டாள். “நல்லாருக்கேன்க்கா” என்ற வஹிதாவிடம், “குரான ஏன் கையில வச்சு ஓதுற. ரேகாளி இல்ல?” என்றாள் “இருக்கு, சும்மாதான்” என்று முறுவலித்தவள், “நான் போய் ஓதறேன்” என்று விடை பெறும் தோரணையில் சொல்லிவிட்டு அறைக்குள் போனாள். ஷெரிபா மனதிற்குள் அம்மாவைப் போலவே நல்ல பாந்தமான பொண்ணு என நினைத்துக் கொண்டாள்.

சொஹ்ரா பலகைக்கட்டையை எடுத்தபடியே ‘இந்த ராபியா எங்க தொலைஞ்சா’ என்று சத்தமாகவே முணுமுணுத்துக் கொள்வது காதில் விழ, வஹிதா அறையிலிருந்தபடியே பதில் சொன்னாள். “அவ நபிஸாக்காவக் கூப்பிடப் போயிருக்கா சித்தி.”

“அங்க போயிருக்காளா? அப்ப சரி, பொழுது விடிஞ்சதும்தான் வருவா. அங்க என்னதான் இருக்குமோ தெரியல. அஹமதுகூடவும் சண்ட நாறுது. அப்புறம் எதுக்கு அங்கெயே கிடக்குறாளோ தெரியல” என்றபடி ஷெரிபாவின் எதிரில் வந்து அமர்ந்து கொண்டாள்.

ஹாலில் ஒருபுறம் பூண்டு, வெங்காயம், தக்காளி, தேங்காய்,

பச்சைமிளகாய் இன்னும் கஞ்சிக்குத் தேவையான அத்தனை காய் கறிகளும் பாய்களிலும் சாக்கிலுமாகக் கொட்டிப் பரப்பப்பட்டிருந்தன. “இந்தக் கூலிக்காரப் பொம்பளைகளும் இன்னும் வந்துசேரல, இப்பொ ஆரம்பிச்சாதான வேல சரியா இருக்கும்” என்ற சொஹ்ராவின் புலம்பலை ஷெரிபாவும் ஆமோதித்தபடி, “ஆமா, றைமாக்காவ எங்கெ காணோம்” என்றாள். “அக்காவுக்கு லேசா தலைவலி. கொஞ்ச நேரம் படுத்துக் கிடக்கட்டும் பிறகு வேலை பார்க்கலாம்னு சொல்லிப் படுக்க சொல்லியிருக்கேன்” என்றாள். அவர்கள் இருவருமாக அருவாமனையில் வெங்காயத்தைத் தலையும் வாலும் நறுக்கிப் போட ஆரம்பித்தார்கள்.

“ஆமா, உங்க வஹிதாவுக்குக் கல்யாணமாமில்ல? கேள்விப்பட்டேன்” என்றாள் ஷெரிபா. இனி வேலையோடு வேலையாக வெட்டிப் பேச்சுகள் துவங்கிவிடும் என்று நினைத்தபடி, “ஆமா ஆறு நோன்பு பிறையில” என்றாள் சொஹ்ரா. ஷெரிபாவிடம் திருமண விஷயம் பேச சற்று சங்கடமாக இருந்தது சொஹ்ராவுக்கு. அவளுடைய அழகும் வனப்பும் மனதைக் குத்திக்கிழிக்கக் கூடியதாக இருந்தது. அந்த அல்லாவுக்கு எப்படி மனசு வந்ததோ, இந்த வயசுல இவள கைம்பொண்ணாக ஆக்க என்று மனதினுள் சலித்துக் கொண்டாள்.

இந்த நேரத்தில் மாரியாயி தன்கூட இரண்டு பெண்களை வேலைக்குக் கூட்டிவந்தாள். அவள் வீட்டுக்குள் வந்தவுடனேயே சொஹ்ராவுக்கு அப்பாடா என்றிருந்தது. இனி பொறுப்பாக வேலைகளையெல்லாம் அவளே செய்வாள், இவள் ஏவிக் கொண்டிருந்தாலே போதும். வந்த உடனேயே மாரியாயி உரிமையுடன் வேலைகளைத் தொடர ஆரம்பித்தாள். கூடவந்தவர்களுக்கு என்ன வேலை என்பதைச் சொல்லிவிட்டு, இஞ்சியை எடுத்துத் தண்ணீரில் ஊறப்போட்டு உரச ஆரம்பித்தவளிடம், “ஏன் இத்தன லேட்டு

மாரியாயி. இந்நேரம் பாதி வேலை முடிஞ்சிருக்கும்” உரிமையோடு கடிந்து கொண்டாள் சொஹ்ரா.

“நான் என்னா தோட்டத்துல சும்மாவ கிடக்கறேன்? மாடு பாத்து கன்னுபாத்து வேலை முடிச்சில்ல வரக்கெடக்கு, நீங்க வேற” என்று பதிலுக்கு அவளும் சலித்துக் கொண்டாள். ஷெரிபா சொஹ்ராவைப் பார்த்து மெலிதாகச் சிரித்தாள். அந்தச் சிரிப்பிற்குப் பின்னால் கிண்டல் நிறைந்திருந்தது. சொஹ்ராவுக்குப் புரியாமலில்லை. பதிலுக்கு அவளும்கூட சிரித்துக்கொண்டாள். உலகத்துல எங்க சுத்தினாலும் இப்பிடி ஒரு வேலையாள் கிடைக்குமா நீயே சொல்லு என்கிற பதில்தான் அந்தச் சிரிப்பில் இருந்ததே தவிர, தன் கணவனுக்கும் அவளுக்குமுள்ள உறவின் சிறு வெறுப்புகூட அதில் இல்லை.

“வேலையெல்லாம் நடந்துக்கிட்டிருக்கா” என்றபடி நபிஸா வீட்டிற்குள் வந்தாள். அவளுடன் ராபியாவும் மதினாவின் அண்ணி மும்தாஜும். “வாங்க எல்லாரும்! மும்தாஜு எப்ப அம்மா வீட்டுலருந்து வந்த? வந்த சுவடே தெரியல” என்று சொஹ்ரா வரவேற்றாள். “நேத்துத்தான் வந்தேன் அண்ணி.” பதில் சொல்லிவிட்டு அவளும் நபிஸாவுடன் சேர்ந்து இறைந்து கிடந்த பூண்டு, வெங்காயத்தின் முன் அமர்ந்து உரிக்கத் தொடங்கினாள். “இன்னிக்கு உங்க கஞ்சி, எங்க வீட்டுல என்னிக்கி” என்று கேட்ட மும்தாஜைப் பார்த்துத் தலையைச் சாய்த்து ஒரு தினுசாகச் சிரித்த நபிஸா, “அம்மா என்னா கேட்டிங்க, உங்க கஞ்சி என்னக்கின்னா? சரி, சரி, சரி!” என்று நீளமாக இழுத்தவள், “இத ஒன் மாமியாமுன்ன கேட்டிருந்தியானா நல்லாவே வாங்கிக் கட்டியிருப்ப. என்னமோ புதுசா கல்யாணம் பண்ணி இன்னிக்குக் குடித்தனம் வந்தவ மாதிரியில்ல கேட்கிற? கழுத, வருஷாவருஷம் வர்ற கெடுதான” என்று அவளை முகத்தில் இடித்துக் கிண்டலாகச் சிரித்தாள். “அட மனுஷாளுக்கு மறதி வர்றதில்லையா?

இவ வேற” என்று மும்தாஜும் சிரிக்க வீடே களைகட்டத் தொடங்கிற்று.

“என்ன சமையலெல்லாம் முடிச்சாச்சா, இல்ல இனிமே தான் ஆரம்பிக்கணுமா?” நபிஸாவிடம் கேட்டாள் சொஹ்ரா. “நோன்பு நாளுதான, பகல்ல என்ன சமைக்க? நானும் அஹமது அத்தாவும் நோன்பு. அஹமதுக்கும் ரபீக்குக்கும் சோறு மட்டும் வடிச்சேன். சஹருக்கு ஊத்தின தயிர் மிச்சமிருக்கு, ஐஸ் பொட்டியில சாம்பார் இருக்கு, அப்புறம் என்ன” என்ற நபிஸா, “ஆமா நோன்புத் துணியெல்லாம் எடுத்தாச்சா? உங்களுக்கு ரெண்டு செலவு இந்த வருஷம், ஒண்ணு நோன்புத்துணி எடுக்கறது, இன்னொண்ணு கல்யாணத்துக்கு எடுக்கறது” என்று சொல்லி நிறுத்தினாள், திருமண விஷயமாக சொஹ்ரா என்ன சொல்லப் போகிறாள் என்பதை அறியும் விதமாக அவளது முகத்தைப் பார்த்தபடி!

“ஆமாமா” என்று ஆமோதித்தாள் மும்தாஜும். நேற்றுதான் அவள் அம்மா வீட்டிலிருந்து வந்திருக்கிறாள். அதற்குள்ளாகத் திருமண விஷயம் தெரிந்திருக்கிறது. இந்த ஊர் இருக்கிறதே! எப்படித்தான் விஷயம் பரவுமோ என்று எண்ணியபடி, “நோன்புக்குப் பிள்ளைகளுக்கு மட்டும்தான் எடுத்திருக்கு, இனிதான் மதுரைக்குப் போய் எங்களுக்கு எடுக்கணும். இப்பதான பத்து நோன்பு போயிருக்கு, மெதுவா எடுக்கலாம்” என்றாள் சொஹ்ரா.

“எங்கே பிள்ளைகளுக்கு எடுத்ததைத்தான் காட்டுங்க பாக்கலாம்” ஆர்வமாகக் கேட்டாள் நபிஸா. “இதோ வர்றேன்” என்று சொஹ்ரா எழுந்து அறைக்குள் போனாள். ராபியாவின் முகத்தில் ஈயாடவில்லை. நபிஸாவும் குறும்புச் சிரிப்புடன் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள், அன்னைக்குக் கேட்டதுக்கு என்ன சொன்ன என்ற கேள்வி முகத்தில் ஓடிக்கொண்டிருந்தது.

*ராபியாவுக்கு அம்மாவின் மேல் கோபம் கோபமாக வந்தது. "ச்சே! யார்கிட்டேயும் சொல்ல வேணாம்" என்றுவிட்டு இப்போது இப்படி செய்கிறாளே என்று! அதற்குள் சொஹ்ரா ஒரு பையை பீரோவிலிருந்து எடுத்து வந்து நபிஸாவின் முன் வைத்தாள். நபிஸா, ஷெரிபா, மும்தாஜ் மூவருமாக ஆளுக்கொரு துணியைக் கையிலெடுத்துப் பார்த்தார்கள். ராபியாவுக்கும் வஹிதாவுக்கும் ஆளுக்கு இரண்டு செட் இருந்தது. பாவாடை சட்டை ராபியாவுக்கு, கூடவே இரண்டு தாவணி வஹிதாவுக்கு, ஒரு செட்டுத்துணி லைலத்துல் கதிரன்று உடுத்தித் தொழுக! இன்னொன்று பெரு நாளன்று உடுத்த! சாட்டின் துணியின் வழவழப்பும் ஜமிக்கி பாவாடையின் மினுமினுப்பும் அவர்கள் மூவருக்குமே மிகவும் பிடித்திருந்தது. இருந்தாலும் சேலைகளைப் பார்க்க முடியாத ஏமாற்றம் மூவருக்குமே இருந்தது. சேலையும் எடுத்திருப்பார்கள் காட்ட மாட்டார்கள் என்று மனதிற்குள் எண்ணிக் கொண்ட நபிஸா, "ஏக்கா, இதெல்லாம் எந்தக் கடையில எடுத்தீங்க?" என்றாள். "எங்கெ எடுக்க, எல்லாம் ஹாசிமூசாவுலதான்" என்றாள் சொஹ்ரா. "சினிமாவுக்குப் போகல?" தொடர்ந்து கேட்ட நபிஸாவிடம், "அது சரி, நோன்பு நாள்ல தியேட்டருக்குப் போயி படம் பார்க்கச் சொல்றியாக்கும், அந்தப் பாவத்தை என்னா செய்றது?" சலிப்புடன் சொல்லிய சொஹ்ராவுக்குக் குரலில் படம் பார்க்க முடியாத வருத்தம் இழையோடியது.*

*ஊரில் யாருக்கும் உடல் நலமில்லையென்றாலும் சரி, விஷேஷங்களுக்குத் துணிமணி எடுக்கவென்றாலும் மதுரைக்குத்தான் போவார்கள். போகும்பொழுது பெண்களுக்குக் கட்டாயமாக சினிமா பார்க்கும் வாய்ப்புக் கிடைக்கும். நோன்பு நாளில் மட்டும் அது முடியாது. நபிஸா மறுபடியும், "ஏன்க்கா என் மருமக ராபியா இருக்காளே, அவமாதிரி கெட்டிக்காரிய நான் பார்த்ததேயில்ல. துணி*

எடுத்தாச்சான்னு கேட்டதுக்குத் தெரியலன்னுல்ல சொன்னா. பரவால்ல, எம்மருமகதான, சமத்தா இருந்தா எனக்கு நல்லதுதான? ஏன் ராபியா" என்று இவளைப் பார்த்துக் கண்ணடித்துச் சிரிக்க, அங்கிருந்த அனைவருமே சிரிக்கத் துவங்கியதில் ராபியா வெட்கம் தாள முடியாமல் தூணின் பின்னால் சென்று ஒளிந்து அதைக் கட்டிக் கொண்டாள்.

"ராபியாவுக்கு இந்த ஜாக்கெட்டை யாரு தைச்சுக் குடுத்தது? சொஹ்ராக்கா கையில வச்சிருக்கற பஃப் நல்லாவே இல்ல, சுருங்கிப் போய் கிடக்கு, என்னவோ மாதிரி" என்று கிண்டல் செய்தாள் மும்தாஜ். "ஆரம்பிச்சிட்டீங்களா ஒங்க பேச்சை. ஒம்மாதிரி உதாரணம் சொல்ல யாராலயும் முடியாதுடியம்மா" என்று சொல்லிச் சிரித்தாள் சொஹ்ரா. "மச்சான் வெளி நாட்டுல இருக்காகல்ல? இங்க காய்ஞ்சு போய் கிடக்கிறா, அப்பிடித் தான் பேசுவா" என்று மும்தாஜின் தலையில் குட்டினாள் நபிஸா. "ஆமா, இவளுக்கு ஒண்ணுமே பேசவும் தெரியாது, செய்யவும் தெரியாது. வாயில கைய வச்சா கடிக்கக் கூடத் தெரியாது" என்று பதிலுக்கு வாயடித்த மும்தாஜி, "நீயே பாரு இந்த ஜாக்கெட்ட! டைலர் எப்பிடி தைச்சிருக்கான்னு, பார்க்கறதுக்கு அப்பிடித்தான இருக்குது?" என்று மறுபடியும் சொல்லிச் சிரித்தாள். ராபியா தலையைக் குனிந்து கொண்டாள். இப்பிடியா கெட்ட வார்த்தை, பேசுவாக என்று மனதிற்குள் நினைத்தபடி.

மாரியாயி வாசலின் ஓரத்தில் கிடந்த துவைக்கும் கல்லில் வைத்து இஞ்சியை உரசிக் கொண்டிருந்தாள். கடுமையான வெயில் வியர்த்துக்கொட்டிற்று. உடுத்தியிருந்த சேலை முந்தானையால் கழுத்தைச்சுற்றி அழுந்தத் துடைத்துக் கொண்டாள். தொட்டியில் கிடந்த தண்ணீரில் ஒரு குவளை மொண்டு முகத்தில் கைபடாமல் ஊற்றினாள். இஞ்சி உரசின கையால் முகத்தைக் கழுவினால் முகம்

எரியும். கொஞ்சம் டீ குடித்தால் தேவலை போலிருந்தது. அங்கிருந்தபடியே பெண்கள் உட்கார்ந்திருக்கும் இடத்தைப் பார்த்துக் கழுத்தை நீட்டி ஒரு சத்தம் கொடுத்தாள். “கதை பேசுறத நிறுத்திட்டு காப்பித்தண்ணி இருந்தா குடுக்கறது, தலைய வலிக்குது இல்ல?” அவள் குரலில் கொஞ்சம் அதிகாரமும் சேர்ந்தே வந்தது. இந்த அநியாயத்தைப் பாரு, பண்ணைக்காரி பேசுகிற தோரணையை, என்கிறதுபோல் மும்தாஜைப் பார்த்துக் கண்ணடித்து, “அம்மா போங்கம்மா, போயி, உங்க யஜமானியம்மாவுக்குக் காப்பித்தண்ணி குடுங்க” என்று சொஹ்றாவைக் கிண்டல் செய்தாள் நபிஸா.

“ப்ச்! சும்மா இருடி நீ வேற, அவ பாக்கிற வேலை யாரு பாப்பாக. நீ கிண்டல் பண்ணுனா எனக்குக் கோபம் வரப்போவுதா? உங்க அண்ணன் பண்ணியிருக்கிற ஒரே நல்லகாரியம் இவள சேத்து வச்சிருக்கிறதுதான் அப்புடின்னு நான் நினைச்சுக்கிட்டு இருக்கேன்” என்று சாவகாசமாகப் பதில் சொல்லிவிட்டு அடுக்களைக்குப் போக எழுந்த சொஹ்றா, “உங்க யாருக்கும் டீ வேணும்னா சொல்லுங்க. தொழுகையில்லாம போயிருந்து நோன்பு இல்லேன்னா, அத சொல்றதுல ஒரு கூச்சமும் படாம” என்றாள்.

ஷெரீபாவுக்கு இன்று தீட்டு வந்து நாலுநாள்தான். ஏழுநாள் தலை குளித்துத்தான் தொழுகவோ, நோன்பு வைக்கவோ முடியும். இருந்தாலும் அவளுக்கு இதை வெளியில் சொல்ல வெட்கமாக இருந்தது. அதனால் பேசாமல் இருந்து கொண்டாள். சொஹ்றா ஷெரீபாவை மறுபடியும் கேட்டாள், “நீ நோன்பு இல்லியா” என்று. “நோன்புதான்க்கா” என்றாள் அவள். “இல்லையே, நேத்திக்கு நீ தராவீஹ் தொழுக வீட்டுக்கு வரலியே? எதுக்கு இதப்போயி மறைக்கிற, இங்க வெறும் பொம்பளைகதான இருக்கோம்? கிறுக்கு” என்று அவளைச் செல்லமாகக் கடிந்து கொண்டு அடுக்களைக்குள் நுழைந்து

அடுப்பை மூட்டினாள் சொஹ்ரா.

வெங்காயத்தை உரித்துக் கொண்டிருந்த ராபியாவுக்குச் சந்தேகமாக இருந்தது. ஷெரீபா தொழுகையில்லாமல் இருக்கிறாள் என்றால் என்ன அர்த்தம் என்று. நபிஸாவிடம் கேட்கலாமா என்று யோசித்தாள். வேண்டாம், அவள் கேலி செய்வாள். வேறு யாரிடம் கேட்கலாம்? வஹிதா ஞாபகம் வர, எழுந்திருந்து அறைக்குள் ஓடினாள்.

வஹிதா குர்ஆனை முடித்து வைத்துவிட்டுத் தாவணியைச் சரிசெய்து கொண்டிருந்தாள். அவளருகில் வந்து நின்ற ராபியா மெதுவாக அவளை இடுப்பில் கட்டிக் கொண்டு சிரித்தாள். வஹிதாவும் அவளை ஆதரவாக அணைத்தபடி என்ன என்கிற பாவனையில் முகத்தைக் காட்டினாள். “நான் ஒரு சந்தேகம் கேட்பேன் சொல்வியா?” என்றவளிடம், “என்ன சந்தேகம் ராபியா குட்டிக்கு?” என்று கேட்டாள். “அதுவந்து, தொழுகையில்லேன்னா என்னா, ஷெரிபாக்காவுக்கு அதாமுல்ல?” என்று கேட்டுவிட்டுப் பதிலை எதிர்பார்த்து விலகி நின்றாள்.

“ஐயையே, நீதான் சின்னப் பிள்ளையாச்சே உனக்கு இதெல்லாம் தெரியக் கூடாது” என்று சிரித்த வஹிதா ராபியாவைக் கையைப்பிடித்து வெளியில் கூட்டி வந்து எல்லோர் முன்னும் நிறுத்திவிட்டு, “நபிஸாக்கா ஒங்க மருமக ஏதோ சந்தேகம் கேட்கிறா பதில் சொல்லுங்க” என்று சொல்லிவிட்டுத் தானும் அவர்களருகில் வந்து அமர்ந்து கொண்டாள்.

“அது என்னா சந்தேகம், எங்கிட்ட கேட்க வேண்டியதுதான? உள்ள போயி அக்காகிட்ட குசுகுசுன்னு கேட்கிறதுக்கு” என்றாள் நபிஸா. அதெல்லாம் ஒண்ணுமில்லை என்று சொல்லிவிட்டு அங்கிருந்து தெருவை நோக்கி ஓடினாள் ராபியா.

சொஹ்ரா டீ கொண்டுவந்து வேலையாட்களுக்குக் கொடுத்து விட்டு

ஷெரிபாவுக்கும் தந்தாள். “இருக்கட்டும்க்கா, பிறகு குடிக்கறேன். நோன்பாளிக முன்ன எப்பிடி பாக்கவச்சுக்கிட்டு நான் மட்டும் குடிக்க. பாவம் இல்லெ?” என்றாள். “சரி அப்பிடி உள்ளபோய் குடி. றைமாக்காவையும் எழுப்பிக் கூட்டிட்டுவா. அந்த அறையிலதான் படுத்திருக்கு” என்றாள் சொஹ்றா. ஷெரிபா எழுந்து போனதும், “பாவம் ரொம்ப நல்லபிள்ள, அல்லா இப்பிடிப் பண்ணிட்டானே” என்றாள். மும்தாஜும் நபிஸாவும் அதனை ஆமோதிக்கும் விதத்தில் தலையாட்டினார்கள்.

மும்தாஜ் மறுபடி பேச்சை ஆரம்பித்தாள். “ஏன்க்கா, உங்க வஹிதா திருமணப் பிரச்னை எப்பிடி, மச்சான் பிடிவாதத்துலதான் நடக்குதாமே, றைமாக்காவுக்குத் துளிகூட இஷ்டம் இல்லையாமே? ஊருக்குள்ள பேசிக்கிறாக.” இவர்களுக்கு எப்படியும் வம்பு பேசியாக வேண்டும், இல்லாவிட்டால் தலை வெடித்துப் போய் விடும். அதுவும் வஹிதாவின் முன்பாகத்தான் இதைக் கேட்க வேண்டுமா என்று நினைத்துக் கொண்ட சொஹ்றா, “அப்பிடியெல்லாம் இல்லியே? வஹிதாவுக்கு வயசு பத்தாது. கொஞ்சம் நாளாகட்டும்னுதான்” என்று சொல்லிவிட்டு நிறுத்திக்கொண்டாள்.

“ஏன், சின்ன வயசா இருந்தா படுக்கத் தெரியாதாக்கும்? நீங்க வேற” சலித்துக்கொண்ட நபிஸா, “ஏன் வஹிதா, ஒனக்கு என்னா சந்தேகம் வந்தாலும் எங்கக்கிட்ட கேளு சொல்லித்தாறோம். இந்த மும்தாஜ் கிட்ட கேஸட்டுகூட இருக்கு, போட்டுக் காட்டச் சொன்னா காட்டிட்டுபோறா, மிச்சத்த மாப்பிள்ள பாத்துக்குவாரு” என்றாள். வஹிதாவின் சிவந்த முகம் ரத்தச்சிவப்பாக மாற வேகமாக எழுந்து அங்கேயிருந்து ஓடி விட்டாள்.

“அவகிட்டப்போயி என்னா பேச்சு பேசுற” சற்று எரிச்சலாகவே சொஹ்றா கடிந்துகொண்டாள் நபிஸாவை. “ஆமா இந்தக் காலத்துப்

பிள்ளைகளுக்கு ஒண்ணுமே தெரியாதாக்கும். இன்னும் ஒரு மாசத்துல கலியாணம் பண்ணி புருஷன்கிட்ட படுக்காமயா போகப் போவுது. நீங்கவேற" என்று சொல்லிச் சிரித்தாள் மும்தாஜ்.

"தெரியிறப்போ தெரியட்டுமே, இப்ப என்னா அதுக்கு அவசரம்" என்றாள் சொஹ்ரா.

மாரியாயி டீ குடித்துவிட்டு சில்வர் டம்ளரைக் கழுவி அடுக்களைக்குள் போய் வைத்துவிட்டு இவர்கள் முன்னே வந்து நின்றாள். "இஞ்சியெல்லாம் உரசிக் கழுவியாச்சு. உரல்ல போட்டு இடிக் கட்டுமா?" சொஹ்ராவிடம் கேட்டு விட்டுப் பதிலை எதிர்பார்த்து நின்றாள். "இதென்னது புதுசா கேட்கிற? இத்தினி வருஷமா செய்யிற வேலைய என்னமோ நேத்து தாலிகட்டி இன்னிக்குச் சுருவாக் கூட்டுன மாதிரி, போய் இடிப்பியா" என்று சலித்துக் கொண்டாள் சொஹ்ரா. "தெரியாம இல்லெ, சும்மாதான் கேட்டு வச்சேன், ஒரு பேச்சுக்காண்டியும்" என்று அங்கலாய்த்தபடி அங்கிருந்து நடு வாசலுக்குப் போனாள் உரலை இழுத்துக் போட!

நபிஸாவுக்குச் சந்தேகம் மண்டையைக் குடைந்து கொண்டிருந்தது. "நீங்க புளங்கற லோட்டாவுலயா அவளுக்கு டீ குடுத்தீங்க?" என்று அருவருத்த பாவனையில் முகத்தை வைத்துக் கொண்டு சொஹ்ராவிடம் கேட்டாள் கிசுகிசுப்பாக.

"சேச்சே! அவளுக்கு அலுமினிய லோட்டாவுல குடுத்தா கோபம் வருதுன்னுட்டு தனியாவே ஒரு சில்வர் தட்டும் சில்வர் லோட்டாவும் வாங்கிப் போட்டுருக்கோம்" என்றாள் சொஹ்ரா. "அதானே பாத்தேன்" என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டாள் நபிஸா. மும்தாஜ் மட்டும் க்ளுக்கென்று சிரித்தாள். அவளது சிரிப்பில் மிகவும் வித்தியாசமான கிண்டலும் கேலியும் நிறைந்திருந்தது. "நீ ஏண்டி இப்பிடிச் சிரிக்கிறே?" என்றாள் சொஹ்ரா.

“இல்லெ, அவளுக்குத் தனியா பாத்திரம் போட்டு வச்சிருக்கீங்க, அத நீங்க யாரும் புளங்கமாட்டிங்க. கரீம் மச்சான் அவகிட்ட போயிட்டு வர்றாரே அவர மட்டும் புளங்காமயா இருக்கீங்க?” என்று சொல்லிச் சிரித்தாள். மும்தாஜின் வார்த்தைகளை எப்படி எதிர் கொள்வது என்று தெரியாமல் ஸ்தம்பித்துப்போய் மௌனமாக இருந்தாள் சொஹ்ரா. சிறிது நேரம் யாரும் பேசவில்லை. “பெரிய்ய அதிசயத்தக் கண்டுபிடிச்சிட்ட மாதிரித்தான் இவ பேசுவா” என்று மௌனத்தைக் கலைத்தாள் நபிஸா. “ஆம்பள வைப்பாட்டி வச்சிருக்கறது ஊரு ஒலகத்துல புதுசு பாரு, யாருதான் யோக்கியன்?” என்று தலையை ஆட்டி மும்தாஜுக்குத் தன் எதிர்ப்பைக் காட்டினாள்.

நபிஸா இவ்விஷயத்திற்கு வக்காலத்து வாங்கியதை மும்தாஜால் தாங்கிக் கொள்ள இயலவில்லை. அவளது பேச்சுக்குப் பின்னால் இருக்கும் விஷயம் அவளுக்குத் தெரியும். ஒரு தற்காப்பு நடவடிக்கையாகத்தான் அவளால் இதைப் பார்க்க முடிந்தது. அதை உடைக்காவிட்டால் மண்டையே வெடித்துவிடும் போலிருந்தது. மறுபடி பேச்சை ஆரம்பித்தாள். “என்னதான் இருக்கட்டும், ஆம்பள தேவுடியாட்டப் போறதையாவது ஒத்துக்கலாம். இந்தப் பொட்டச்சிகளுக்கு எப்பிடி ஒப்புதுன்னு தெரியலையே, பல பேர்ட்ட படுக்க! என்னா ஜென்மங்களோ தெரியலை” என்று சொல்லி அங்கலாய்த்தாள். நபிஸாவுக்கு அவளது பேச்சின் உள்ளர்த்தம் புரிந்தது. அதிலிருந்த குத்தலும் ஜாடையும் தனக்குத்தான் என்றாலும் அவள் அதனைப் பொருட்படுத்தாமலிருக்க முயன்றாள்.

பேச்சு இத்தனை மோசமான கட்டத்திற்கு வரும்போது அறைக்குள்ளிருந்து றைமா வெளியில் வந்து கொண்டிருந்தாள். “வாங்கம்மா எல்லாரும்” என்றபடியே இவர்களோடு சேர்ந்து அமர்ந்தாள். “பாதி வேலெ முடிஞ்சு போச்சு போலேருக்கே, நான்தான்

முடியாமப் படுத்திட்டேன். நீங்க எல்லாருமா சேர்ந்து நன்மையக் கொள்ளையடிச்சிட்டிங்க, போங்க” என்று தன்பாட்டுக்குப் பேசியவள், “நேத்து ராத்திரி சங்கதி தெரியுமா? தராவீஹ் தொழு கறப்போ பள்ளிவாசலுக்கு முன்னெ நின்னு காபிர் பயலுக தப்படிச் சானுகளாமே, ஊக்கத்தப் பாத்தியா?” என்று கன்னத்தில் கைவைத்த படியே சொன்னாள். இந்த அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ள முடியாத மாதிரி பாவனை காட்டிய அவளது வட்ட முகம் கவலை யோடிருப்பது தெளிவாகவே தெரிந்தது.

“ஆமா, நானும்தான் கேள்விப்பட்டேன். எந்தநாளும் இல்லாத புது வழக்கமாயில்ல இருக்கு? அந்தக் காலத்துலருந்து பள்ளிவாசத் தாண்டிப்போறப்போ தப்பு அடிக்கமாட்டானுகளே? இப்ப அவனுகளுக்குத் தலைவரா இருக்கற ஆறுமுகத்தோட வேலையிதுன்னு அஹமது அத்தா சொல்லிக்கிட்டு இருந்தாக, இத எங்க போயி சொல்லுறது?” என்றாள் நபிஸா.

“ஹும் . . .! காலம் கெட்டுப்போச்சு! வேற என்னத்தச் சொல்ல. ஆறுமுகத்துக்கும் நாட்டாமை மூசாவுக்கும் இடையில் ஏதோ வரப்புப் பிரச்னை இருக்காம். தன் சொந்தப் பிரச்னையை இப்பிடி பொதுப் பிரச்னையாக்குறாகளாம், அந்தக் கேடு கெட்டவனுக” என்றாள் சொஹ்ரா. இப்படியாகப் பேச்சு திசைமாறிச்செல்ல அடுத்ததாகப் பார்க்க வேண்டிய வேலைகளில் அவர்கள் மும்முரமாக இறங்கினார்கள். நூறு தேங்காயையும் துருவி மிஷினில் ஆட்டக் கொடுத்துவிட்டு, இடித்த இஞ்சியுடன் பூண்டையும் சேர்த்து அரைக்கச் சொல்லிவிட்டு வெங்காயம், மிளகாய், வெந்தயம், மல்லி, புதினா, விறகு எல்லாவற்றையும் தயார் செய்து பள்ளி வாசலுக்குக் கொடுத்தனுப்பும் வரை எல்லோருக்குமே நல்ல வேலையிருந்தது.

# 13

*உடம்பெல்லாம் அசதியாக இருந்தது நபிஸாவுக்கு. நாக்கு வறட்சியாக இருந்தது. குளித்துவிட்டுத் தொழுகலாம் என்று நினைத்தாலும் முடியாமல் பேசாமல் படுத்துக் கொண்டாள். மனசுக்குள் ஏனோ வெறுமை பொங்கிற்று. மேலே சுற்றிக் கொண்டிருந்த மின்விசிறியின் இறக்கைகளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அழவேண்டும் போலவும் அழ முடியாத மாதிரியுமாக இருந்தது.*

*தன்மீது கொண்டிருக்கும் அபிப்ராயத்தின் ஒரு துளியை மும்தாஜ் சொல்லிக் காட்டிவிட்டுப் போய் விட்டது மாதிரி இருந்தது. எவ்வளவோ முயன்றாலும் கூட அவளது வார்த்தைகளை ஒதுக்க முடியவேயில்லை. ஒழுக்கம் குறித்த மற்றவர்களின் வரையறைக்குள் தான் வர முடியாமல் ஒதுக்கப்பட்டிருப்பதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். அதே சமயம் பிறரது பார்வையையொட்டி இந்த வாழ்க்கையின் எல்லா விஷயங்களையும் விட்டுக் கொடுத்துவிட முடியும் என்றும் தோன்றவில்லை. அவளுக்கும் அஜீஸுக்கும் இடையே உள்ள ஆழ்ந்த பிணைப்பினை மற்றவர்கள் இப்படித்தான் புரிந்துகொள்ள முடியும். அதற்காக அவளால் அவனை விட்டு விலக இயலும் என நினைத்துக்கூட பார்க்க முடியவில்லை.*

*தன் கணவன் பஷீர் இவ்விஷயம் தெரிந்துதான் கண்டுகொள்ளாமல் இருக்கிறானா, இல்லை நிஜமாகவே அவனுக்கு எதுவும் தெரியாதா? அவளால் யூகிக்கவே முடியவில்லை. அவளுக்கு பஷீரின் மீதும் ஆழமான அன்பு இருந்தது. அவனை வெறுக்கக் காரணம் எதுவும் இல்லை. அவனுக்கும் இவளுக்குமிடையிலான இடைவெளி என்பது வயது சம்பந்தப்பட்டது. சொந்தம் விட்டுப் போய் விடக்கூடாது என்ற*

நோக்கத்தில் நடந்த திருமணம். அவன் இவள் பேரில் மிகுந்த பிரியமாகத்தான் இருக்கிறான். பதிலுக்கு இவளும் பிரியத்தைக் காட்டத்தான் செய்கிறாள். அதையும் தாண்டி ஏதோ ஒன்று இவளுக்கும் அஜீஸுக்கும் இடையே உருவாகியிருந்தது. இந்த உறவைத் தவறு என நினைக்க அவளால் முடியவில்லை. ஏதோ ஒரு காரணத்தினால் இப்படி ஒரு பிணைப்பு அஜீஸோடு ஏற்பட்டிருக்கிறது. அது மிகவும் இதமான ஒன்றாகவும் இருக்கிறது. அதற்கு மேலே சிந்திக்கவோ விளங்கிக்கொள்ளவோ தனக்கு அறிவில்லை என நினைத்துக் கொண்டாள்.

நேரம் அஸரைத் தொட்டிருந்தது. பல விஷயங்களையும் நினைத்துக் கொண்டிருந்ததில் நேரம் போனதே தெரியவில்லை. இப்பொழுது ஆரம்பித்தால்தான் வேலை சரியாக இருக்கும். அஹமதுவைக் காணோம். அவன் வந்தவுடன் பள்ளிவாசலுக்குப் போய் நோன்புக் கஞ்சியும் வடையும் வாங்கி வரச்சொல்ல வேண்டும். நோன்பு திறக்க பஷீர் வீட்டுக்குத்தான் வருவான். நபிஸாவும் பிள்ளைகளும் அவனோடு அமர்ந்து சாப்பிடுவதை மிகவும் விரும்புவான். அந்த நேரத்தில் ரபீக், அஹமது யாராவது ஒருவர் விளையாடப்போய் வராமலிருந்து விட்டால் கடுமையான கோபம் வரும் அவனுக்கு. பிள்ளைகளின் மீது அவ்வளவு பிரியம்.

வாசல் கதவை யாரோ தள்ளித் திறப்பது காதில் விழ அடுக்களையிலிருந்து எட்டிப் பார்த்தாள் நபிஸா. கையில் ஒரு தூக்குடன் ராபியா வந்து கொண்டிருந்தாள். “என்ன ராபியா, மாமியாருக்கு என்னவோ கொண்டு வந்திருக்கே போலயிருக்கு?” என்றவளிடம், “அம்மா நோன்புக் கஞ்சி குடுத்து விட்டாங்க. அதுதான்” பெருமையோடு சொன்னாள். “நல்லவேளை, பள்ளிவாசலுக்குக் கஞ்சி வாங்க ஆள் அனுப்ப நினைச்சுக்கிட்டுருந்தேன். கொண்டு வந்திட்ட.

இருக்கட்டும், தூக்கு அப்புறம் அஹமது கிட்ட குடுத்தனுப்புறேன்" என்றவள், "ராபியா நா ஒண்ணு கேட்கறேன் மறைக்காமல் பதில் சொல்வியா" என்று கேட்டாள். ராபியாவுக்குக் குழப்பமாக இருந்தது, என்ன கேட்கப் போகிறாளோ என்று. என்ன என்கிற பாவனையில் முகத்தை வைத்துக்கொண்டு அண்ணாந்து நபிஸாவின் முகத்தைப் பார்த்தாள். "பயப்படா தேடிம்மா, சும்மாதான். நீ ஏன் உங்க உம்மும்மா வீட்டுக்குச் சரியா போறதில்ல? வாரம் ஒருதரம் போவெ இல்லெ" என்றாள்.

"தெரியல மச்சி, அம்மா அனுப்புறதே இல்லை."

"அதான் ஏன்னு கேட்கறேன்."

"பிர்தவ்ஸ் சித்திமேல அம்மாவுக்கு என்னமோ கோபம். அதனாலதான்."

"என்ன கோபம், அவ புருஷன்கிட்டேருந்து வாழாம வந்துட்டா அப்பிடின்னுதானே?"

ராபியாவுக்கு என்னவோபோலிருந்தது. பதில் சொல்லத் தெரியவில்லை. "அதெல்லாம் எனக்குத் தெரியாது. நான் போறேன்" என்று அடுத்த கேள்விக்கு இடம் கொடுக்காமல் அங்கிருந்து சிட்டாகப் பறந்து தெருவுக்குவந்து 'அப்பாடா தப்பித்தோம்' என நிம்மதிப் பெருமூச்சொன்றை விட்டாள்.

நபிஸாவுக்கு ஏமாற்றமாக இருந்தது. பிர்தவ்ஸ் பற்றி முழு விபரமும் அறிந்துகொள்ள வாய்க்கவில்லை. யாரிடம் கேட்பது என்றும் தெரியவில்லை. அவளை நினைக்கையில் வருத்தமாகவும் இருந்தது. அந்தக் காலத்துலதான் சரியான பொருத்தம் பாக்காமல் பெண்களைக் கல்யாணம் கட்டிக் கொடுத்து வீணாக்கினார்கள் என்றால் இந்தக் காலத்துலேயும் அப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது. பணமும் சொந்தமும் பார்த்தாப் போதும். மத்தபடி வயசையோ உருவப்

பொருத்தத்தையோ யாரு பாக்கிறா? பொண்ணுக நஸீபு இப்பிடித்தான் போலருக்கு என்று முணுமுணுத்துக் கொண்டாள். பொண்ணுககிட்ட யாராவது அபிப்ராயம் கேட்கிறாங்களா, என்ன என்று நினைத்துக்கொண்டபடி குளிப்பதற்காகக் குளியலறைக்குள் போனாள்.

நபிஸாவிடமிருந்து தப்பித்துத் தலைதெறிக்க ஓடிக்கொண்டிருந்தாள் ராபியா. வீட்டு வாசற்படிக்கட்டினை இரண்டிரண்டாகத் தாண்டிக் குதித்து ஓடியதில் மூச்சிறைத்தது. மதினா வீட்டு வாசல் படியில் வந்து நின்று மூச்சு வாங்கினாள். நன்றாக வியர்த்திருந்தது. பாவாடையை லேசாகத் தூக்கித் தலையைக் குனிந்து நெற்றியைத் துடைத்தாள். அவள் நபிஸா வீட்டிற்குப் போனதே அஹமதுவைப் பார்க்கத்தான். அவன் எங்கேதான் போவானோ, இவளுக்கு அவனோடு எந்த நேரமும் சேர்ந்து விளையாட, அவன் கூடவே இருக்க ரொம்பவும் ஆசையாக இருந்தது. அவன்தான் சேர்த்துக் கொள்ள மாட்டேனென்கிறானே? இனியாவது அவனோடு பழம் போட்டுக் கொள்ள வேண்டும் என்று தோன்றிற்று. அவன் சைக்கிள் விடக் கற்றுத் தருவான் என்ற நம்பிக்கையேற்பட்டது. அவனோடு சேர்வதற்கு மதினாதான் ஒப்புக் கொள்ள மறுக்கிறாள். அவளை எப்படியாவது ஒப்புக்கொள்ள வைக்க வேண்டும்.

வழக்கம்போல அன்றிரவும் தெருப்பெண்கள் அனைவரும் தராவீஹ் தொழுகைக்காக ராபியா வீட்டில் வந்து சேரத் துவங்கினார்கள். ஆண்கள் பள்ளிவாசலுக்குத் தொழுகைக்குப் போய்விட்ட பிறகுதான் இங்கு இவர்களின் தொழுகை ஆரம்பிக்கும். சொஹ் ராவோ, றைமாவோ இருவரில் ஒருவர்தான் தொழுகை நடத்துவார்கள். அனேகமாக எல்லோருமே தத்தமது வீடுகளில் ஒலுச் செய்துவிட்டே வந்து விட்டதனால் றைமா தொழுகையைத் துவங்கத் தயாரானாள்.

ஹாலில் வரிசையாகச் சுத்தமான முஸல்லா விரிக்கப்பட்டிருந்தது. அதை மறந்தும்கூட தாண்டவோ மிதிக்கவோ கூடாது. ராபியா தவறிப் போய் கால் வைத்தால் அம்மா சிடுசிடுப்பாள். ஹால் ஓரத்தில் கிடந்த சோபாவில் குத்தவைத்து உட்கார்ந்து கொண்டு வந்திருந்தவர்களை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தாள். மதினாவின் அம்மாவும் அண்ணி மும்தாஜும் ஏற்கனவே வந்து சேர்ந்திருந்தார்கள். நபிஸா, சவுராக்கா என்று ஒவ்வொருவராக வந்து சேர்ந்தாயிற்று. “எங்கே பாத்திமாவைக் காணல” என்றாள் நபிஸா றைமாவிடம்.

“அவளுக்கு இந்த ரெண்டு நாளாவே சரியான வேலை. உடம்பு சுகமில்லாம வீட்டுல இருக்கறா, அதான்” என்றாள் றைமா. “அதானே!” என்ற நபிஸா ராபியாவிடம், “ஏன் தனியா உட்காந்திருக்கே, தூங்கறது” என்றாள்.

“அது கண்ணுக்கா தூக்கம் வரும். வேடிக்கை பார்க்கறதுக்கு உட்கார்ந்திருக்கா, போய்ப் படுடின்னா” என்றாள் றைமா செல்லமாக. ராபியாவுக்கு வெட்கமாக இருந்தது. முழங்காலுக்குள் முகம் புதைத்துக் கொண்டாள். “வீட்டுல அஹமதுவும் ரபீக்கும் இருக்காங்க. நீ வேணா அங்கே போய் பேசிக்கிட்டு இரு, நாங்க தொழுக முடிக்கறது வரைக்கும்” என்றாள் நபிஸா. ‘ஊஹூம்’ என்று தலையசைத்தாள் ராபியா. அவளது கண்கள் தயக்கத்துடன் சொஹ்ராவைப் பார்த்தன. “உங்கம்மாவுக்குப் பயப்படுறியா? போ, ஒண்ணும் சொல்லமாட்டாங்க” தைரியமூட்டினாள் அவள்.

சொஹ்ரா ஒலுச்செய்துவிட்டு அப்பொழுதுதான் வந்திருந்தாள். இன்னும் ஒலுவு நபில் தொழுகாததனால் பேச முடியாமல் எந்தப் பதிலும் சொல்லாமல் தக்பீர் கட்டினாள். மதினா இருந்தால் பேசிக் கொண்டிருக்கலாம் என்று எண்ணினாள் ராபியா. அவள் தான் எட்டு மணிக்கே தூங்கி விடுகிறாளே, எப்படித்தான் இவ்வளவு சீக்கிரம்

தூக்கம் வருமோ? தொழுகை ஆரம்பமாகி விட்டிருந்தது. வீடு மிகவும் நிசப்தமாக இருந்தது. இடையிடையே பெண்கள் குனிந்து நிமிரும்போது கேட்கும் வளையல் ஓசையும் கொலுசுச் சத்தமும் தவிர நிசப்தமாயிருந்தது. இவளுக்கு போரடித்தது. அஹமதுவோடு பேசிக் கொண்டிருந்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றிற்று. மதினா இல்லாத இந்தச் சமயத்தில் அவனிடம் பேசிப் பழம் விட்டுக்கொள்ளலாம் என்று நினைத்தாள். அதே சமயம் அம்மா எதுவும் சொல்வாள் என்ற யோசனை வேறு மறுபடியும் வந்தது. நபிஸா மச்சி கூட இருக்கிற தைரியத்தில் அங்கிருந்து எழுந்து மெதுவாகக் கதவைத் திறந்தாள். தெரு விளக்கு எரிந்து கொண்டிருந்ததால் பயம் இல்லை. நாய் அடுப்படிக்குள் நுழைந்து விடும் என்ற நினைவு வர கதவை இழுத்துச் சாத்தி வெளிப்பக்கமாகத் தாளிட்டாள். திருப்தி உண்டானபின் தெருவில் இறங்கி நடந்தாள்.

நாலே எட்டில் அஹமதுவின் வீட்டையடைந்து கதவைத் திறந்தாள். யாரது என்று எட்டிப்பார்த்தான் அஹமது. நான்தான் என்று சொல்லியவாறே கதவைச் சாத்தி விட்டு முற்றத்தைத் தாண்டி ஓடி ஹாலில் வந்து நின்றாள். கயிற்றுக்கட்டிலில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தான் அவன். எதுக்கு வந்தாள் என்கிற மாதிரி இவளை நிமிர்ந்து பார்த்தான். அவனருகில் கட்டிலின் ஓரத்தில் பாவாடையை ஒடுக்கிப் பிடித்தபடி அமர்ந்தவள், “நீ தூங்கலையா? சும்மாதான் வந்தேன்” என்றாள் தயக்கத்துடன். “இல்லை படிச்சிக்கிட்டு இருக்கேன்.” “என்ன படிக்கிறே?” “அது உனக்குத் தேவையில்லை” என்றான் தோளைக் குலுக்கியபடி. ராபியாவுக்கு அவமானமாக இருந்தது. சற்று நேரம் ஒன்றும் பேசாமல் இருந்தாள்.

டிவியில் இலங்கை ரூபவாஹினி ஓடிக்கொண்டிருந்தது. ரபீக் குப்புறப்படுத்து கால்களை வானத்தை நோக்கி உயர்த்திவைத்தபடி

ஆர்வமாகப் பார்த்துக்கொண்டிருந்தான். அவன் இவள் வந்ததைக்கூட கவனிக்கவில்லை. மறுபடி பேச்சை ஆரம்பித்தாள். “நான் இன்னியிலேர்ந்து உங்கூட பழம் போடுறேன். இனிமே உன்னோட விளையாட்டுக்கு என்னையும் சேர்த்துக்குவியா?” என்று மிகவும் பரிதாபமாக முகத்தை வைத்துக் கொண்டு கெஞ்சினாள், அவன் இனி மறுக்கமாட்டான் என்கிற நம்பிக்கையோடு! அவன் இவள் முகத்தைத் தனது சிறிய கண்களால் ஒரு கணம் உற்றுப்பார்த்தான். பிறகு தலை முடியை ஒருபுறமாகத் தள்ளிக் கோதிவிட்டுக்கொண்டு போனால் போகிறது என்கிற ரீதியில், “சரி, சரி! நானும் பழம்தான்” என்றான். இந்தச் சந்தர்ப்பத்தை விட்டால் இந்த வெற்றி கிடைக்காது என்பது அவனுக்கும் புரிந்துதான் இருந்தது. ஆனால் இந்த மதினா . . .?

“ஆமா, அவ எப்பிடி? அவ என்கூட பழம் போடமாட்டாளோ?” என்று அலட்சியமாகக் கேட்டான். தன்னோடு அவன் பழம் போட்டதில் ஏற்பட்ட சந்தோஷத்துடன், “அவளா? தெரியலையே” என்று முகத்தை அப்பாவியாக வைத்துக்கொண்டு பதில் சொன்னாள். “அப்ப ஒண்ணு சொல்றேன், கேட்டுக்க. நான் ஒங்கூட மட்டும்தான் பேசுவேன். விளையாட்டுக்கு ஒன்ன மட்டும்தான் சேர்ப்பேன். சைக்கிள் ஓட்ட ஒனக்குக் கத்துத்தருவேன். ஆனா நீ அவளுக்கு சைக்கிள்விட கத்துத்தரக் கூடாது. ஞாபகம் வச்சிக்க” என்று அதிகாரம் தோய்ந்த குரலில் மிரட்டினான். இவளுக்குச் சந்தோஷம் கரைபுரண்டு ஓடியது. இதுபோதும். இனி எந்தக் கவலையும் இல்லை என்று நினைத்துக்கொண்டதோடு, நல்லவேளை மதினாவிடம் காய் போட்டால்தான் உன்னோடு பழம்போடுவேனென்று சொல்லாமல் விட்டானே என்றும் மனதில் நினைத்துக் கொண்டாள்.

சிறிது நேரம் ஒன்றும் பேசத் தோன்றாமல் அமர்ந்திருந்தவள் தலையைத் திருப்பி டி.வியைப் பார்த்தாள். சிங்கள நாடகம் ஒன்று

ஓடிக் கொண்டிருந்தது. அவள் ஆர்வமாகப் பார்க்க ஆரம்பித்தாள். வீட்டிலிருந்த டி.வியைப் பெரியத்தா அட்டைப்பெட்டியில் வைத்து ஸ்டோர் ரூமுக்குள் வைத்துவிட்டார். நோன்பு நாளில் டி.வி. பார்க்கக்கூடாதாம். பாவமாம்! அவர் எப்பொழுதும் இப்படித்தான் ஒவ்வொரு வருடமும் ரம்ஜான் ஆரம்பமாவதற்கு முதல் நாளே டி.வியைத் தூக்கிக் கட்டிவைத்துவிட்டு, "இந்த மாசமாவது நன்மையைக் கொள்ளையடிங்க" என்பார். ராபியாவுக்கு வருத்தமாக இருந்தது. ரபீக் இன்னும் தன் கால்களை வானத்தை நோக்கி உயர்த்தியபடி தான் குப்புறப்படுத்திருந்தான், இவளுக்கு அஹமதுவின் முன்பாகத் தன்னை உயர்வாகக் காட்டிக்கொள்ள வேண்டியிருந்தது என்பதனால், "நந்தன – விந்தன தானே?" என்றவள், "ரபீக் காலைக் கீழே போடு" என்றாள். அவன் ஒன்றும் புரியாத குழப்பத்துடன் டி.வி. திரையிலிருந்து பார்வையை விலக்கி இவளை நோக்கித் தலையைத் திருப்பினான். அஹமதுவும் என்ன என்கிற மாதிரி இவளது முகத்தை பார்த்தான்.

"வானத்தைப் பாத்து காலை ஒசத்திவைக்கக் கூடாதுதானே? அங்கெ அல்லா இருக்கறான் இல்லை, அதுதான்." ரபீக்கிற்கென ரொம்பவும் அக்கறைப்பட்டது அவளது குரல். இவள் சொன்ன மறுவினாடியே ரபீக் பயந்துபோய் கால்களைக் கீழே போட்டுக் கொண்டான். ராபியாவுக்கு அஹமது தன்னைப் பற்றி என்ன நினைத்திருப்பான் என்று தெரியவேண்டி இருந்தது. நிச்சயமாக உயர்வாகத்தான் நினைத்திருப்பான் என்று தோன்றிற்று. அவன் ஏன் சரியாகப் பேசமாட்டேனென்கிறான் என யோசித்தவள், தானாகவே, "நீ ஏன் தொழுகப் போகலை?" என்றாள்.

"பரிட்சைக்குப் படிக்கணும் இல்ல. அதனாலதான். அப்புறம் தம்பியை வேற பாத்துக்கிறச் சொல்லிட்டு அம்மா தொழுகப்

போயிட்டாங்க. ஆமா, நீ படிக்கல?”

“நான் எல்லாமே படிச்சிட்டேன். வஹிதா அக்காகிட்ட ஒப்புச்சு பாத்தாச்சு” என்றாள் பெருமையாக.

“அவதான் இங்கிலீஷ் கான்வெண்ட்ல படிச்சவளாமே, தமிழ் தெரியுமா?” என்று ஆச்சர்யமாக கேட்டான்.

“ஓ. . .! தெரியுமே. அவளுக்கு இங்கிலீஷ் தெரியும், தமிழும் தெரியும். நமக்குத் தமிழ் மட்டும்தான தெரியும்” என்று அக்காவைப் பற்றிச் சொல்லிப் பெருமையடித்துக் கொண்டாள்.

அஹமது இப்போது ஒன்றும் சொல்லவில்லை. குனிந்து புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தான். அவனுக்கு எவ்வளவோ விஷயங்கள் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது. அவனுக்குத் தெரியாமல் இந்த உலகத்தில் எதுவுமே இருக்கக் கூடாது என்று நினைத்துக் கொண்டான். இந்த ராபியாவைப் போல நிறையப் பெண்கள் வந்து தன்னிடம் சந்தேகம் கேட்க வேண்டும். நான்தான் எல்லாரையும் விட பெரியவன் என்று எல்லோருமே சொல்ல வேண்டும் என்று அவன் மனதில் ஓடிக்கொண்டிருந்தது.

ராபியா அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். பனியனும் டிரவுசரும் மட்டும் அணிந்திருந்தான். ஒல்லியான உடல்வாகு, நீளமான கால்கள். அதனால்தான் சீக்கிரமாகவே சைக்கிள் விட முடிந்தது அவனால் என நினைத்துக் கொண்டாள். என்னவோ அவனை அவளுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது. அவன் கூடவே நிறைய நேரம் இருந்தால் நன்றாக இருக்கும் எனவும் தோன்றியது. ஆனால் அவன் தன்னைக் கண்டு கொள்வதில்லை என்ற வருத்தம் அவளை அங்கிருக்க விடாமல் துரத்தியது.

“அப்ப நான் வர்றேன்” என்று சொல்லிக் கட்டிலிலிருந்து எழுந்தாள். ஒரு நிமிஷம் தலை நிமிர்ந்து அவளைப் பார்த்தான். “ஏன் அதுக்குள்ள

போற. தொழுகதான் இன்னும் முடியலையில்ல” என்றான். அவன் இப்படிச் சொன்னதும் அவளுக்குச் சந்தோஷம் தாங்கமுடியாதபடி உண்டாயிற்று. மறுபடி கட்டிலில் உட்காரப் போனவளுக்கு அம்மாவின் நினைவு வந்தது. அவளிடம் திட்டு வாங்க வேண்டும் என்ற நினைவில், “இல்லை நான் போறேன். நாளைக்கு வர்றேன் அம்மா தேடுவாங்க” என்று சொல்லிவிட்டு வீட்டை நோக்கி ஓடத் துவங்கினாள்.

அஹமதுவுக்கு வியப்பாக இருந்தது, அவள் ஏன் இத்தனை வெட்கப்படுகிறாள் என்று! அவன் எவ்வளவுதான் அவளைக் கிண்டல் செய்தாலும்கூட அவளுக்குத் தன்னோடு விளையாட ரொம்பவே ஆர்வம் இருப்பதை அவன் தெரிந்தே வைத்திருந்தான். எப்பொழுதும் அவளைச் சீண்டிக் கொண்டிருப்பது அவனுக்கும் பிடித்திருந்தது. அம்மாதான் அடிக்கடி சொல்வாள் அவளை வம்புக்கிழுக்கலேன்னா உனக்கு ஒத்து வராதே என்று. ஆனால் அவனுக்கு மதினாவின் மீதுதான் கடுமையான கோபம் வந்தது. அவளை எப்படியும் வழிக்குக் கொண்டு வரவேண்டும் என்று மனதிற்குள் கறுவிக்கொண்டான். இன்னும் ஒரு வாரத்தில் பரீட்சையெல்லாம் முடிந்து லீவு ஆரம்பித்துவிடும். நீண்ட நாள் லீவு. அப்பொழுது விளையாட ஆளில்லாமல் அவளாகவே வந்து தான் தீர வேண்டும் என்று நினைத்தபடியே படிக்க ஆரம்பித்தான்.

# 14

மாரியாயி துரட்டியால் வைக்கோல் போரிலிருந்து வைக்கோலை உருவிக்கொண்டிருந்தாள். தேவையான அளவு சேர்ந்ததும் துரட்டியைப் படலில் சாய்த்து வைத்துவிட்டு வைக் கோலை ஒன்று சேர்த்துத் திரட்டிக் கைகளில் அணைத்து அள்ளிக் கொண்டு போய் மாட்டுக்கருகில் போட்டாள். மாடு சாவகாசமாக எழுந்து வைக்கோலை நெருங்கி வரவும் அவள் அங்கிருந்து விலகி வேப்பமரத்தடி நிழலில் போய் அமர்ந்து கொண்டாள்.

நேற்றிலிருந்தே விரக்தியாக இருந்தது அவளுக்கு. தன் வாழ்க்கையின் எஞ்சிய காலத்தை நினைத்துக் கொண்டாள். நேற்று கரீம் வீட்டில் நோன்புக் கஞ்சி வேலைப் பார்த்துக் கொண்டிருக்கையில் பெண்கள் பேசிச் சிரித்தது லேசுபாசாகக் காதில் விழுந்திருந்தது. என்றாலும் காட்டிக் கொள்ளாமல் இருந்து விட்டாள். தெரிந்த மாதிரி காட்டித்தான் என்ன செய்யப் போகிறோம் என்ற நினைவு வந்து கண்களில் நீர் கோர்த்தது. வஹிதாவுக்குத் திருமணம் நிச்சயித்ததைக் கூட கரீம் தன்னிடம் சொல்லாமல் மறைத்து விட்டதில் தாங்க முடியாத வருத்தம் ஏற்பட்டது. என்ன இருந்தாலும் ஆசைக்கு வர்றவ தாசிதானே? பட்டத்து ராணியில்லையே என்று சமாதானம் செய்தாலும் கரீம் தினமும் தன்னை பார்த்துக் கொண்டுதானே இருக்கிறான். ஏன் ஒரு செய்தியாக வேனும் இதைச் சொல்லியிருக்கக் கூடாது என்றிருந்தது. தான் அளவுக்கு மீறி உரிமை பாராட்டுகிறோமோ என்றும் அவளுக்குச் சந்தேகம் உண்டாயிற்று.

இந்த வாழ்க்கை அவளாகத் தேடிக் கொண்டதுதானே? குறை சொல்லவும், உரிமை கொண்டாடுவதும் எப்படி முடியும்? கரீமுக்குத்

*தன் பேரில் இருக்கும் ஆசையை வைத்து பெரிய எதிர்பார்ப்புகளை வளர்த்துக் கொள்வது பெரிய முட்டாள்தனம்தான். இவனோடு வாழ ஆரம்பித்தபோது எத்தனையோ காரணங்களையெல்லாம் சுட்டிக்காட்டி அம்மா தன்னை வேறு எங்காவது போக அழைத்த பொழுது அவன் மீதிருந்த மயக்கத்தினால் பிடிவாதமாக மறுத்துவிட்டாளே. அப்பொழுதே இதையெல்லாம் யோசித்தாளா?. குழந்தை பிறந்து விடக்கூடாது என்று ஆபரேஷன் செய்யச் சொல்லி அனுப்பினானே அப்பொழுதும்கூட ஒத்துக்கொண்டுதானே இருந்தாள். இப்பொழுது மட்டும் என்ன புதிதாக என்று மனதைத் தேற்றிக் கொள்ள முயன்றாள். இன்னும் கொஞ்சம் ரத்தம் சுண்டுனதும் அவன் தன்னை விட்டுப் போனாலும் போய் விடுவான். "இருந்தா என்ன, ஏழைக்குத் துணை ரெண்டு கையும் ரெண்டு காலும்தானே? உழைச்சு கஞ்சி குடிக்க எடமில்லாமப் போகுமா என்ன?" என்று தனக்குள் முனகிக் கொண்டாள்.*

*கரீம் ஓட்டு வீட்டுக்குள் கட்டிலில்தான் படுத்திருந்தான். ரொம்ப நேரமாகவே மாரியாயியைக் காணாததால் உள்ளிருந்தபடியே குரல் கொடுத்தான். "என்ன பண்ணுற? கொஞ்சம் காலப் புடிச்சுவிடு" என்று கத்தினான். முந்தானையை உதறிவிட்ட படி எழுந்து வீட்டுக்குள் வந்தாள், 'இதுக்கு ஒண்ணும் குறைச்சலில்லே' என்று முனகியபடியே! "என்னமோ முனங்குறாப்போல இருக்கே" என்று அவளைத் திரும்பிப் பார்த்துக் கேட்டவன், "சொல்றதக் கொஞ்சம் சத்தமா தான் சொல்றது. நானும் கேட்பேனில்ல" என்றான்*

*"ஒண்ணுமில்ல! நான் என்னத்த சொல்லப் போறேன். சாதியில இளைச்சவ" என்றபடி அவன் கால் அருகில் அமர்ந்து பிடித்துவிடத் துவங்கினாள். அவள் முகம் சோர்ந்து போய் இருப்பது தெளிவாகத் தெரிந்தது. "ஏன் இன்னக்கி ஒனக்கு என்ன ஆச்சு?" என்றான்.*

*“வஹிதாவுக்குக் கல்யாணமாமுல்ல! ஒருவார்த்த என்கிட்ட சொல்லாம மறைச்சிட்டீங்க இல்லெ” அவள் முடிக்கும் முன்பாக. “ஓ! அதுவா?” என்று இடைமறித்துச் சொல்லிச் சிரித்தான். “ஆமா, அதுக்கென்ன இப்பொ? இன்னக்கி தெரிஞ்சுக்கிட்டேயில்ல, வெத்தல பாக்கு வைச்சு சொல்லணுமோ ஒனக்கு. இதப்போய் பெரிசு பண்ணிக்கிட்டு.” அலட்சியமும் கிண்டலும் தொனிக்க அவன் பேசியது இன்னும் அவமானமாக இருந்தது அவளுக்கு.*

*“ஏன், வெத்தல பாக்க வச்சு எனக்குச் சொன்னா ஆகாதோ? ஆமா! எனக்கு என்னா தகுதியிருக்கு. சேத்து வச்சுக்கிட்டவதானெ?” என்று ஓவென்று அழத் துவங்கினாள். இது என்ன பெரிய வம்பாயிருக்கே என்பது போல அவளையே உற்றுப்பார்த்தவன், “மறைக்கணும்ணு நினைக்கலே, தற்செயலா சொல்ல மறந்திட்டேன்” என்று சமாதானம் செய்யும் விதத்தில் சொன்னான். பிறகு, “இப்ப என்னை என்னா செய்யச் சொல்லுற? கலியாண வேலையைப் பார்க்கப் போற, சேலை வாங்கிக் குடுத்தா கட்டிக்கப்போற. அதுக்குமேல என்ன?” என்று சற்று அதட்டும் குரலில் சொன்னான்.*

*மாரியாயிக்குச் சுரீரென்றது. அவன் சொல்வதும் உண்மைதான். தன்னைக் காட்டிலும் தன் இடத்தை அவன் சரியாகவே தெரிந்து வைத்திருக்கிறான். இது ஏன் தனக்குப் புரியவே மாட்டேனென்கிறது என்று மனதில் நினைத்தபடி முகத்தைச் சேலை முந்தானையினால் அழுத்தித் துடைத்துக் கொண்டாள். இனியும் அழுதால் அவனுக்குப் பிடிக்காது, கோபித்துக்கொண்டு போய்விடுவான் என்பதால் அமைதியடைந்தாள். அதற்கு மேல் சிறிதுநேரம் இருவருமே பேசிக் கொள்ளவில்லை. அவள் கைகள் மட்டும் அவனது கால்களை விடாமல் பிடித்துவிட்டபடியிருந்தன. இடையிடையே சேலை முந்தானையில் மூக்கை சீந்திக்கொண்டாள்.*

கரீமுக்கு அவளைப் பார்க்க பாவமாகவும் இருந்தது. அவளுக்குத் தனது இடம் எதுவென்பதே அவ்வப்போது மறந்து போய்விடுகிறது. அதை நினைவூட்டியதும் அடங்கிப் போய் விடுவாள். சுலபத்தில் ஏமாந்தும் போய் விடுவாள். தோட்டத்தில் மொத்தமாக வரும் வருமானத்தைச் சிந்தாமல் சிதறாமல் வீடுவந்து சேர்த்துவிடுவாள். தக்காளியோ, பருத்தியோ, வெண்டைக்காயோ எதுவாகயிருந்தாலும் அதை விற்று, பால் விற்று, கோழி வளர்த்து முட்டை விற்று தனக்காகச் சேமித்து வைத்திருப்பாள். குறிப்பிட்ட அளவு பணம் சேர்ந்ததும் அதையும் இவனிடம்தான் தருவாள். இவனுக்கு வாங்கிக் கொள்ளப் பிடிக்காது. "நீ பாடுபட்டு சம்பாதிச்சு சேத்ததுதானே? நீயே வச்சுக்க" என்பான். "எனக்கெதுக்கு புள்ளையா, குட்டியா? சேத்து வைக்க" என்று அவனிடமே தருவாள். அதில் ஒரு பெருமிதம் அவளுக்கு.

வீடு அமைதியாக இருந்தது. வெளியிலிருந்த மரத்தில் ஒரு காகம் விடாமல் கரையும் சத்தமும் கிணற்று நீர் காற்றில் சல சலக்கும் மெல்லிய ஓசையும் தவிர நிசப்தமாக இருந்தது. அவனே மறுபடி பேச்சை ஆரம்பித்தான். "ஆமா, உன் மகளுக்குக் கல்யாணம், நீ என்ன பண்ணப்போற?" அவன் கேட்டதுதான் தாமதம் அவள் முகம் சந்தோஷத்தில் மலர்ந்தது. "நானா? கொஞ்சம் பணம் சேர்த்து வச்சிருக்கேன். அதுக்கேத்தா மாதிரி ஒரு மோதிரம் வாங்கட்டுமா?" என்றாள் ஆர்வமாக! அவ்வளவுதான் இனி உற்சாகம் கரைபுரண்டு ஓடும். அவன் சொன்ன அந்த ஒரே வார்த்தைக்காக. "உன் மகள்" என்று வஹிதாவைக் குறிப்பிட்டுத்தான் சொன்னான். இது போதும்! இன்னும் எவ்வளவோ நாளைக்கு. சரியான கிறுக்கி என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

"ஆமா உனக்குச் சேலை சொஹ்ராவையே எடுக்க சொல்லட்டுமா, இல்ல நான் டவுனுக்குப் போறப்போ எடுத்துட்டு வரட்டுமா?"

என்றான், மேலும் உற்சாகமூட்ட வேண்டும் என்ற நோக்கத்துடன்!

"அக்காவே எடுத்தாரட்டும்." இதைச் சொல்லும் பொழுது அவளது கறுத்த முகம் உற்சாகமிகுதியால் வசீகரம் மிக்கதாக மாறியிருந்தது. பின்னே, சொஹ்ராவே தன்கையால் புடவை எடுத்துத் தருவதில் உள்ள கவுரவம் எப்பேர்ப்பட்டது. நினைக்கையிலேயே உடம்பெல்லாம் புல்லரித்தது.

அவளுக்கு அனேகமாக ஒவ்வொரு வருஷ ரம்ஜான் பெரு நாளைக்கும் டவுனுக்குப் போய் சொஹ்ராதான் துணி எடுத்து வருவாள். இவள் கரீமோடு வாழத் துவங்கியதிலிருந்து தீபாவளிக்குக் கோடி உடுத்தியதில்லை. பொட்டும் வைத்துக் கொள்வதில்லை. தானாகவே சந்தையில் வாங்கிக் கோர்த்த கருப்பு மணியைக் கழுத்தில் கட்டி, மானசீகமாக ஒரு இஸ்லாமிய பெண்ணாகவே வாழ்ந்து கொண்டிருந்தாள். அவளைப் பொறுத்தவரைக்கும் அவன் தான் கணவன். அவனது சுகதுக்கம்தான் தன்னுடையதும் என்று ஒரே ஓர்மையோடு இருந்தாள். இன்று வரைக்கும் வேறு எந்த ஆணும் அவளைச் சீண்டியதில்லை. கரீமோட ஆள் என்கிற நினைவில் ஒதுங்கிப் போய் விடுவார்கள். யாரும் தன்னை வேசியாக நினைத்ததில்லை என்பதையும் அப்படி நினைக்காததால்தான் தன்னை அவர்களில் யாரும் தவறான நோக்கத்துடன் அணுகியதில்லை என்பதையும் எண்ணிப் பெருமைப்பட்டுக் கொள்வாள். அந்த ஒரே ஒரு கவுரவமே போதும் என்று திருப்திப்பட்டுக் கொள்வாள்.

தம் சாதிப் பெண்களை இந்த ஊர் ஆண்கள் படுத்தும் பாட்டை நினைத்தால் ரொம்பவே கஷ்டமாக இருக்கும். அவனுகளுக்குத் தின்னுட்டு சும்மாயிருக்க முடியல. கன காசு பணம் கிடக்கு. அப்புறமென்ன. ஒருத்தனுக்கு இன்னிக்கு ஒருத்தி வேணும், நாளக்கி

வோறொருத்தி வேணும். அவ மாட்டேன்னு சொல்ல முடியுமா? இதுல எத்தினபேரு புள்ளய உண்டாகி அதக் கலைக்கிறதுக்கு ரோஸி நர்ஸ்கிட்ட போயிருக்கா என்று நினைத்துப் பெருமூச்சுவிட்டாள்.

கரீம் சொல்லியிருக்கும் ஒருவிஷயம் அவளுக்கு நினைவுக்கு வந்தது. ஊர் நாட்டாண்மை மூசா தனக்குப் பிடித்த பொம்பளையைத் தனியே கூட்டிப்போய் நின்றபடிக்குச் சிறுநீர் கழிக்கச் சொல்வாராம். சிறுநீர் தொலைவில போய் விழுந்தாதான் அவனுக்கு அவகூட உறவு வைக்கப் புடிக்குமாம். கிட்டக்க விழுந்தா அவ புள்ளயப் பெத்து கிழவியாப் போனவள்னு விரட்டிவிட்டுருவானாம். இதைச் சொல்லிவிட்டு கரீம் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டேயிருப்பான். இதைத் தன் நண்பன் இஸ்மாயில் தன்னிடம் சொன்னதாகச் சொல்லிச் சிரிப்பான். இவளுக்கு ஆத்திரமும் அருவருப்புமே மிஞ்சும். கரீமிடம் சண்டை போடுவாள். “இந்தக் கருமம் பிடிச்ச பேச்சையெல்லாமா பேசிக்கிடுவீங்க. கர்மம், கர்மம்” என்று தலையிலடித்துக் கொள்வாள். “இதுக்குப்போய் ஏண்டி தலையில அடிச்சுக்கிற, சொஹ்ராகிட்டயும்தான் சொன்னேன். அவளும் சேர்ந்து சிரிச்சாளே, நீயும் சிரிச்சிட்டுப் போவியா, ரொம்பத்தான அலட்டிக்கிறே” என்று சொல்வான். அவன் சொல்லும் விதம் அவளைக் குத்திக் காட்டுவதுபோல இருக்கும். நீ ரொம்ப யோக்கியமோ, என்று. பிறகென்ன சொஹ்ராவைப் போன்ற குடும்பபெண்ணே இதைக் கேட்டுச் சிரித்துக் கொள்கிறாள். பக்கத்து வீட்டுப் பெண்களிடம் இதனைச் சொல்லி அவர்கள் எப்படியெல்லாம் ரசித்துச் சிரித்தார்கள் என்று தன்னிடம் சொல்லுகிறாள். இவள் மட்டும் கர்மம் என்று சொன்னால்?

“என்ன, பலமான யோசனை போலருக்கு” என்று அவளது நினைவுகளைக் கலைத்தான் கரீம். “அதெல்லாம் ஒண்ணுமில்ல” என்று

சொல்லி விட்டு தொடர்ந்து அவனது கால்களைப் பிடித்துவிட ஆரம்பித்தாள்.

கரீம் கண்களை மூடிக்கொண்டான். அசதியாக இருந்தது. நோன்பு கிறக்கத்தில் தூக்கம் வர மறுத்தது. சிறிது நேரம் நிம்மதியாகத் தூங்கலாம் என்றுதான் வந்தான். வஹிதாவைத் திருமணம் செய்து கொள்ளப்போகும் மாப்பிள்ளை சிக்கந்தர் வெளிநாட்டிலிருந்து வந்திருக்கிறான். ஒருநடை அவனைப் பார்த்துவிட்டு வரலாம் என்றால் பக்கத்து வீட்டில்தான் மாமியாரும் பிர்தவ்ஸும் இருக்கிறார்கள். அங்கே போய் வரும் மனநிலையில் அவன் இல்லை.

அந்த வீட்டிற்குத் தலை மருமகனாக முன்னின்று தான் பார்த்து முடித்த மாப்பிள்ளையை வேண்டாம் என்று வெட்டிவிட்டு வந்த பிர்தவ்ஸை நினைத்தாலே ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது அவனுக்கு. அவள்தான் புரியாமல் செய்தாள் என்றால், மாமியார்க்காரிக்கு புத்தி எங்கே போயிற்று? இது தன் மருமகனின் கௌரவப் பிரச்னை, அவர் நின்று முடித்து வைத்த திருமணம் என்று வாதாடி அவளைப் புருஷன் வீட்டுக்கு அனுப்பியிருக்க வேண்டாமா. 'நல்ல பொம்பளை.' லேசாகத் தனக்குள் முணுமுணுத்துக்கொண்டான்.

மாப்பிள்ளை பொருத்தமில்லையாமே, பொருத்தம்! இப்ப கமுக்கோட்டுக்குள்ள மகள வச்சுக்கிட்டு கஷ்டப்படுறது யாரு? தொடர்ந்து முணுமுணுத்தபடி புரண்டு படுத்தவனுக்கு மாப்பிள்ளை யூசுபு வீட்டாரின் ஞாபகம் வந்தது. ஊரில் ஏகப்பட்ட சொத்து அவனுக்கு! அவன் பிர்தவ்ஸைக் கேட்டு வந்ததே தனது பழக்கத்திற்குத் தான். மாமனார் இறந்தபிறகு சிரமப்படுகிறார்களே, இதை விட நல்ல இடம் தேடிப் போனாலும் கிடைக்காதே என்கிற எண்ணத்தில் தான் முடித்துவைத்தான். பெண் அழகு என்பதனால் சீர்வரிசை நகை என்று எல்லாமே உங்கள் விருப்பம் என்று பெருந்தன்மையோடு யூசுபு

ஒத்துக்கொண்டான். மற்ற எவனாக இருந்தாலும் இத்தனை பவுன், இத்தனை ஆயிரம், நாத்தனார் பணம், சீர்வரிசை என்று பட்டியல் போட்டுக் கேட்டிருப்பான். நமக்கும் செலவோ, பிரச்னையோ இல்லை, அவளும் நன்றாக இருக்கட்டும் என்று மனக்கணக்கு போட்டது இப்படியாகிவிட்டது. இப்பொழுது யூசுபு குடும்பத்தாரின் முகத்திலும் விழிக்க முடியாமல் ஆகிவிட்டதே என்கிற வருத்தம் வேறு கரீமிற்கு வேதனையை உண்டுபண்ணியது. தனக்கு, தன் முடிவிற்கு மரியாதை தராத அந்த வீட்டு வாசற்படியை இனி ஒருநாளும் மிதிக்கக்கூடாது என்று வைராக்யத்தோடு இருந்தான். இந்தச் சமயத்தில் சபியா அக்கா வீட்டிற்குப் போனால் மாமியார் வீட்டிற்குப் போகாமல் திரும்ப வேண்டியிருக்கும். அதை சபியா ஊரில் எல்லோரிடமும் சொல்லி அலப்பி விடுவாள். அது ஆமினாவிற்கு வேதனையாக இருக்கும். அதோடு இங்கே சொஹ்ராவும் அழுது தீர்த்துவிடுவாள், ‘எங்க வீட்டை அவமானப்படுத்தத்தானே போனிங்க’ என்று சொல்லி.

கரீமிற்குக் குழப்பமாக இருந்தது. சிக்கந்தரைப் பார்க்கப் போவதால் ஏற்படும் பிரச்சனைகளை விட, போகாமல் இருப்பதனால் ஏற்படும் பிரச்னை பெரிதாக ஒன்றுமில்லை. சபியாக்கா நாலு கத்து கத்துவாள், ‘என் மகனப் பாக்க வரக்கூட ஒனக்கு கஷ்டமோ’ என்று. அது ஒன்றும் பெரிய விஷயமில்லை என எண்ணிக் கொண்டான்.

அவனுக்கு மறுபடியும் பிர்தவ்ஸின் ஞாபகம் வந்தது. ‘எவ்வளவு திமிர் இந்தச் சின்னக்குட்டிக்கு’ என நினைத்துக் கொண்டான். சொஹ்ராவும் நானும் எத்தனை நாட்கள் பக்கத்திலிருந்து புத்தி சொல்லியிருப்போம். எதற்காவது அசைந்து கொடுத்தாளா? போதாக்குறைக்கு, ‘உங்க காசு குறைஞ்சுறக்கூடாது, செலவு உங்க கையைப் புடிச்சுராக்கூடாதுன்னுதானே இப்படி மாப்பிள்ளையைப் பாத்திங்க?’ என்ற குற்றச்சாட்டை வேறு வைத்ததுதான் இவனுக்கு அவமானமாக

இருந்தது.

நான் என்ன கெட்ட எண்ணத்திலா இதைச் செய்து வைத்தேன்? இல்லை, ஊர் உலகத்தில் நடக்காததைச் செய்து வைத்தேனா? சிக்கந்தருக்கும் வஹிதாவுக்கும் முழுப்பொருத்தத்துடனா பேசி முடித்திருக்கிறோம். நபிஸாவுக்கும் பஷீருக்கும் துளிப்பொருத்தமாவது இருக்கிறதா? 'நாலு பேரைப் பாத்தால்தானே தெரியும்? கிணத்துத் தவளையாட்டம் இருந்தால் இப்புடி தன் தலையில் தானே மண்ணள்ளிப் போட்டுக்க வேண்டியதுதான்.' அவனது முணுமுணுப்பில் ஆதங்கமும் வருத்தமும் சேர்ந்தே ஒலித்தது என்றாலும் இப்படியெல்லாம் நடக்கணும்னு அவன் எழுதியிருக் கையில நடந்துதான ஆகும்? "யாரைச் சொல்லி என்ன ஆகப் போகுது" என்று வாய்விட்டுச் சொன்னவன் நோன்பு திறக்கும் நேரம் நெருங்குவதை உணர்ந்து எழுந்து உட்கார்ந்தான்.

அவன் எழுந்துகொள்வதற்கு ஏதுவாக அவள் கட்டிலிலிருந்து கீழே இறங்கி ஒதுங்கி நின்று கொள்ள, போய் வருவதாகக் கூட சொல்லாமல் ஏதோ யோசித்தபடி வெளியே போய் நிறுத்தி வைத்திருந்த மோட்டார் சைக்கிளை ஸ்டார்ட் செய்து கிளம்பிப் போனான். அவன் போய்விட்ட பிறகும், அவள் நீண்டநேரமாக அதே இடத்தில் நின்று கொண்டிருந்தாள், மனம் நிறைந்த கவலைகளுடன்! இனி அவன் மறுபடி வரும்வரைக்கும் தானும் இந்த மரங்களும் கோழிக்குஞ்சுகளுமாகத்தான் இருக்கவேண்டும். முன்பெல்லாம் அவன் போய் விட்டாலும் தனிமை அத்தனை கஷ்டமாகத் தோன்றியதில்லை. இப்பொழுதெல்லாம் தனித்திருக்க ரொம்பவே வெறுப்பாக இருந்தது. அவனது பேச்சைக் கேட்டு கர்ப்பத்தடை செய்து கொண்டது எத்தனை பெரிய முட்டாள் தனமென்று இப்பொழுதுதான் உறைத்தது. அப்படிப் பண்ணாமலிருந்தாலும் குழந்தை பெற அவன் ஒப்புக்கொள்ள

மாட்டான். ஆரம்பத்தில் ஒரு முறை கருத்தரித்தவுடன் அவனிடம் ரொம்பவும் தயங்கித்தான் விஷயத்தைச் சொன்னாள். அதிர்ச்சியடைந்துபோய் நீண்ட நேரம் உட்கார்ந்திருந்து விட்டுச் சொன்னான், “போய் கலைச்சிட்டு வந்திரு.” அவள் இதை எதிர்பார்த்திருந்ததால் அமை தியாக அவனது முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். அவன் கறாராகச் சொன்னான். “இதில் யோசிக்க ஒண்ணுமில்லை, நான் ஒன்னயை சேத்து வச்சுருக்கறது ஊருக்கே தெரியும். ஒனக்கு இப்பொ குழந்தை பிறந்தா அது என் குழந்தைங்கறதும் எல்லாருக்கும் தெரியும். அது நல்லாவா இருக்கும்? நீயே யோசிச்சுச் சொல்லு. நீ பலபேர் கிட்ட பழகிட்டு இருந்தா அப்பொ என் குழந்தைதான் உனக்குள்ள வளருதுன்னு யாருக்கும் தெரியப் போறதில்ல, எனக்கு அது பெரிசுமில்ல. இப்பொ பகிரங்கமா அது என் குழந்தைன்னு அடையாளம் தெரியறது சரியில்ல. கசாப்புக்கடை மைதீன் ஒருத்திய சேத்து வச்சிருந்து அச்சு அசலா அவனமாதிரி பிள்ள பொறந்து, அவ தட்டுக்கெட்டுத் திரியறது ஒனக்குந்தான் தெரியுமே. ஊர்ல என்ன சொல்லிக்கிறாங்க, மைதீன் மக என்றுதானே சொல்லிச் சிரிக்கிறானுக. வேணாம்! நான் பணம் தாரேன். பக்கத்து ஊருல இருக்கற ஆஸ்பத்திரியில போயி கலைச்சிட்டு வந்துரு.”

அவன் குரலில் கண்டிப்பும் அவள் ஒரு வார்த்தை மறுத்து பேசிவிடக்கூடாது என்கிற எச்சரிக்கையுமிருந்தது. அவளுக்குமுன் இரண்டு முடிவுகள்தான் இருந்தன. ஒன்று பிள்ளையைக் கலைத்து விட்டுக் கருத்தடை செய்து கொள்வது, இன்னொன்று அவனை விட்டு விலகி நிரந்தரமாகப் போய்விடுவது. அவனை விட்டுப் பிரிவதை அவளால் கற்பனை செய்யவே முடியவில்லை. அவன் மேல் அவளுக்கு அளவில்லாத பிரியம் இருந்தது. அழகு, அந்தஸ்து இத்தனையுமிருந்தும்

அவனுக்குத் தன்னிடத்திலிருந்த ஆசை கர்வத்தைத் தந்துகொண்டிருந்தது.

அவன் சொல்வதிலுள்ள நியாயத்தையும் அவளால் ஒதுக்கித் தள்ளிவிட முடியவில்லை. வேறுவழி தோன்றாமல் கருவைக் கலைக்க ஒத்துக்கொண்டாள். இப்போதெல்லாம் தனக்கென யாருமில்லை என்கிற நினைவு அடிக்கடி வந்து துன்புறுத்தத் துவங்கியிருக்கிறது.

# 15

றைமா அன்று அதிகாலையிலேயே எழுந்துவிட்டாள். நோன்பு நாளில் பஜர் தொழுத கையோடு தூங்கிவிட்டு, காலை தாமதமாக எழுவதுதான் வழக்கம். இன்று நிறைய வேலையிருந்தது. சொஹ்ராவையும் எழுப்பி விட்டிருந்தாள். ராபியாவை அனுப்பி பாத்திமாவைக் கூட்டிவரச் சொன்னாள். பாத்திமா இன்னும் தூக்கம் கலையாமல்தான் எழுந்து வந்தாள். "என்னக்கா இவ்வளவு சுருக்க எழுந்திருச்சிட்டீங்க?" என்றபடி வந்தவளின் தலைமுடி அவிழ்ந்து கிடந்தது. மாநிறமும் குட்டையான உடம்பும் அவளை ரொம்பவும் சின்ன வயதாகக் காட்ட, 'அப்புறம் அவ சின்னப் புள்ளைதானே' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். "ஆமாண்டி, இன்னிக்கி நிறைய வேலை கிடக்கு. ஊருலேருந்து சபியாக்காவும் மருமகனும் வராங்க. இப்தார் விருந்துக்கு வஹிதாவோட அத்தா போய் மருமகனை அழைச்சிட்டு வந்தாக இல்லெ? அதுதான்" என்றாள் சாவகாசமாக! "அதா சேதி!" உற்சாகமானாள் பாத்திமா. தலைமுடியை உதறி இரண்டு தட்டுத்தட்டிவிட்டுக் கொண்டு கொண்டையாக முடிந்து கொண்டாள். சேலையை முழங்கால் தெரிய வரிந்து கட்டிக்கொண்டு அடுப்படிக்குள் நுழைந்து வேலையைக் கவனிக்க ஆரம்பித்தாள்.

இனி பம்பரமாகச் சுற்றுவாள். யாரும் இடையில் புகுந்து விட முடியாது. எல்லாவற்றையும் தானே இழுத்துப்போட்டுக் கொண்டு செய்ய ஆரம்பிப்பாள். இந்த உற்சாகம் வீட்டு விசேஷங்களுக்கு மட்டும்தான். மற்றபடி அன்றாட வேலைகளை ரொம்பவே சாவகாசமாகச் செய்வாள். ஒரு வேலை செய்ய ஆயிரம் எதிர்ப்பேச்சு பேசுவாள். விசேஷ நாட்களில் மட்டும் இவளுக்கு ஜின்னு கின்னு

ஏறிரும் போல என்று றைமாவும் சொஹ்ராவும் அவளிடமே சொல்லிச் சிரிப்பார்கள். “ஆமா ஒரு உற்சாகம் இருந்தாத்தான வேலெ பாத்துக்க” என்று சொல்லி அவளும் சிரிப்பாள்.

றைமாவும் சொஹ்ராவும் முதல் நாளிரவே மறுநாள் என்ன சமைக்கலாம் என்று முடிவு செய்து வைத்திருந்தார்கள். வரப் போவது மாப்பிள்ளையும் சபியாவும்தான். அதிகமாகச் சமைக்க வேண்டியிருக்காது. நோன்பு திறக்க வடையும், பஜ்ஜியும் சுட வேண்டும். சுண்டல் அவித்து பாயாசமும் கடல்பாசியும் காய்ச்ச வேண்டும். கூடவே நோன்புக் கஞ்சி, பேரீச்சம்பழம், ஆப்பிள், ஆரஞ்சு. போதும்! அதன் பிறகு இரவுச் சாப்பாட்டுக்கு இடியாப்பம், கோழிக் குருமா, கோழி வறுவல், இட்லி, தோசை, கறி சூப். இடியாப்பத்தைக் கொஞ்சமாக வதக்கி வைத்து விடலாம் என்று நினைத்திருந்தார்கள். இப்போதிலிருந்தே வேலை ஆரம்பித்தால் தான் சரியாக இருக்கும். அதோடு சஹருக்கு அவர்களுக்கும் சேர்த்துச் சமைக்க வேண்டும்.

நினைக்கும் பொழுதே மலைப்பாக இருந்தது றைமாவுக்கு. “இந்த வேலையெல்லாம் எப்பொ முடியப்போகுதோ” என்று சொல்லிப் பெருமூச்சு விட்டாள். “அது சரி! இனிமேதான் கல்யாண வேலை கெடக்கு, சம்மந்தப்புரத்துக்குப் பலகாரம் செஞ்சு சீர் செய்யிற வேலெ இருக்கு. இப்பொவே சும்மா அலுத்துக்கிறீங்களே? தலைக்கு மேல வேலெ இருக்குங்கறதையே மறுந்துட்டீங்க போல.” கிண்டல் செய்தாள் பாத்திமா. “அந்த வேலைக்குத் தான் கூலி ஆள் போட்டுருவோமே? பத்தாததுக்கு நீ இருக்க, மாரியாயி இருக்கா. வெளுத்துக்கட்டிர மாட்டிங்க?” என்றாள் றைமா.

பாத்திமா பல்லைக் கடித்தபடி பாத்திரத்தை அழுத்தித் தேய்த்துக் கொண்டிருந்தாள். “உம் எம்புட்டுக் கரி, பாருங்க போவுதான்னு? எங்கையிதான் தேயும் போலருக்கு, சாம்பல் போட்டாலும் சரி, தவுடு

போட்டாலும் சரி போகுதா? நீங்க இம்புட்டு காசு வைச்சிருந்து என்னா புண்ணியம், ஒரு கேஸ் அடுப்பு வச்சு புளங்கத் தெரியுதா? அது இருந்தா இம்புட்டுக் கரிக்கு இங்கெனெ வேலை இருக்கா?" முகத்தை அஷ்டகோணலாக்கிச் சலித்துக் கொண்டாள். "டவுன்ல எங்க வீட்டுலயெல்லாம் கேஸ் அடுப்புதான வைச்சிருக்காக, இங்க இந்தப் பட்டிக்காட்டுல சிலிண்டர் வாங்கிக் கொள்ள வசதியா இருக்கு?" என்றாள் றைமா. அவளுக்குச் சமாதானம் சொல்லும் விதத்தில், "அதோட சொஹ்ராவுக்கு அதுன்னா பயம் வேற! வெடிச்சிடுமாம்" என்று சொல்லிச் சிரித்தாள். "ஆமா அது என்னமோ பயங்கரமானதுன்னுதான கேள்விப்பட்டிருக்கேன். இந்த மவராசி கொஞ்சநாள் டவுன்ல தாசில்தார் வீட்டுல வேலெ பார்த்தாலும் பாத்தா பொழுதுக்கும் அந்தப் பெருமைதான். அங்க அது இருக்கு, இது இருக்கு அப்புடின்னு! சும்மா வேலையப் பாப்பாளா." தரையில் அமர்ந்து பாத்திரம் விளக்கிக்கொண்டிருந்த பாத்திமாவின் தலையில் செல்லமாக ஒரு குட்டு வைத்தாள் சொஹ்ரா. "ஆ!"வென பொய்ச் சிணுங்கல் சிணுங்கிய பாத்திமா, "ஆமா, அன்னக்கி நோன்புக் கஞ்சிக்கு வெங்காயம் உரிச்சப்போ என்னா நடந்துச்சு? நான் ஒரு விஷயம் கேள்விப்பட்டேனே" என்றாள். "ஊர் வம்ப அலசிக் குடிக்கலன்னா ஒனக்குத் தூக்கம் வராதே, யாரு ஒனக்குச் சொன்னா" என்றாள் சொஹ்ரா. "எதையும் எங்கிட்டயிருந்து மறைக்க முடியுமோ?" தெனாவெட்டாகக் கேட்டவள், "எனக்கு யாரோ சொன்னாக, அந்த ஓட்டு முகட்டுல உக்காந்திருந்த காக்கா சொல்லுச்சு. சொல்லுவிங்களா?" உரிமையோடு அதட்டினாள் பாத்திமா. றைமா சொஹ்ராவிடம் கண்ணைக் காட்டினாள் "பேசாதே!" என்கிற அர்த்தத்தில்.

"அது ஒண்ணுமில்லடியம்மா, இங்க நடந்ததத்தான் ஒந்தோழி

ஷெரிபா சொல்லியிருப்பாளே? அதுதான். பெரிசா ஒண்ணுமில்ல. நீ போயி யாரு கிட்டயும் சொல்லி வக்காதே” கண்டிப்புடன் ஒலித்தது சொஹ்ராவின் குரல்! பாத்திமா பாத்திரம் தேய்க்கிறதை நிறுத்தி விட்டு, “ஆமா, எனக்கு வேற வேலை வெட்டி இல்லை வெளிய போயி சொல்லிக்கிட்டுத்திரிய. நீங்க வேற, என்னமோ கேள்விப்பட்டோமே என்னான்னு கேட்கலாம்னு பாத்தா, சொல்லாட்டி விடுங்க” என்று முறைத்துக் கொண்டாள். இந்தப் பேச்சை இத்தோடு விட்டு விடுவதே நல்லது என்று சொஹ்ராவுக்குப்பட அவள் மேற்கொண்டு காரியங்களைக் கவனிக்க ஆரம்பித்தாள். வேலை ஏகப்பட்டது கிடக்கும்போது பாத்திமாவிடம் பேசி அவளைக் கோபப்படுத்தி பொழப்புக் கெட்டுப்போனால் என்ன செய்வது என்று பயமாக இருந்தது.

அன்று அனைவருக்குமே சரியான வேலையிருந்தது. உட்காரக் கூட நேரமில்லை. பள்ளி வாசலில் சில அஸரத்களுக்கும் வீட்டிலிருந்து சாப்பாடும் நோன்பு திறக்கப் பலகாரங்களும் கொடுத்தனுப்ப வேண்டும் என்று சொல்லியிருந்தான் காதர். “அஜரத்துகளுக்குதான் எப்பவும் குடுத்துக்கிட்டுதானே இருக்கு, இன்னக்கி வேலையோட அவுகளையும் சேத்துக்கிட்டு கஷ்டப்படணுமா?” முணுமுணுத்த றைமாவைத் தனது கடுமையான பார்வையினால் அடக்கிவிட்டிருந்தான். எல்லாமே நிறைய செய்ய வேண்டியிருந்தது. இடுப்பே ஒடிந்துவிடும் போலிருந்தது. சாயங்காலமே சபியாவும் சிக்கந்தரும் வந்து விட்டார்கள். சபியா உள்ளே வந்த உடனேயே வீடு அமளி துமளிப்பட ஆரம்பித்தது. சிக்கந்தரைப் பார்த்தது ஒருசில வருஷங்களுக்கு முன்! றைமாவும் சொஹ்ராவும் அவனை வரவேற்க வாசலுக்கு முன்னே வந்து தலைநிறைய முக்காடிட்டபடி தூணோரத்தில் மறைவாக நின்று “வாங்க” என்று ஒரு வார்த்தை

சொல்லி விட்டு அடுக்களைக்குள் நுழைந்து கொண்டார்கள். மருமகன் முன்னே மாமியார் நிற்பது வழக்கமில்லை. வஹிதா அன்று மதியமே மாடியறைக்குள் ஒளிந்தவள்தான். கீழே வரவேயில்லை. சிக்கந்தர் ரொம்பவே கூச்சப்பட்டபடி சோபாவில் உட்கார்ந்து கொண்டான். கூட யாராவது ஆண் துணையிருந்தால் தேவலை போலிருந்தது. ராபியா எங்கிருந்தோ ஓடிவந்தாள். வீட்டுக்குள் மிக உயர்ந்த சென்ட் வாசம் நிரம்பியிருந்ததை வைத்தே அவர்கள் வந்துவிட்டதை உணர்ந்து கொண்டாள். அவளுக்கு மச்சானைப் பக்கத்தில்போய்ப் பார்க்க வேண்டுமெனக் கொள்ளை ஆசை இருந்தது. வாசலைத் தாண்டி ஹால் பக்கம் முகத்தைத் திருப்பாமலேயே அடுக்களைக்குள் ஓடிவந்து எட்டிப் பார்த்தாள்.

சபியா ஏதோ சத்தமாகப் பேசிச் சிரிக்க, அம்மாவும் பெரியம்மாவும் அருகில் நின்று கொண்டிருந்தார்கள். இவளைப் பார்த்ததும் சபியா பேச்சை நிறுத்தி விட்டு, “வாடி, என் சின்ன மருமகளே, ஒன் மச்சானப் பார்க்கல? அங்கெ சோபாவுல ஒத்தையா இருக்கான் போ” என்றாள் பவிசாக! சொஹ்ரா சிரித்தாள். “இப்பிடியே போய் அவங்க முன்னெ நிக்காதே, சீப்பை எடுத்து தலைமுடியை ஒதுக்கிட்டு, முகம் கழுவித் தொடைச்சிட்டுப் போ” என்றாள், கண்டிப்பான குரலில்! ராபியா பதில் எதுவும் சொல்லாமல் ஹாலுக்கு ஓடினாள். அவளுக்கு வஹிதாக்காவின் கணவனை உடனே பார்த்தாக வேண்டும். இல்லையென்றால் மண்டை வெடித்துச் சிதறி விடும் போலிருந்தது. ஹாலில் இருட்டுவதற்கு முன்பே விளக்கு போட்டிருந்தார்கள். தூணோரம் ஒளிந்துகொண்டு அவனைப் பார்த்தாள்.

குனிந்த தலையுடன், வெள்ளைக் கைலியும் வெள்ளைச் சட்டையும் அணிந்து மாப்பிள்ளை உட்கார்ந்திருந்தான். எட்டி நின்று பார்த்தாள். அக்கா அளவுக்கு நிறமில்லை என்றாலும், கூரான மூக்கும் சுருள்

முடியும் அளவான மீசையுமாக நன்றாகத்தானிருந்தான். ஏதோ யோசனை செய்தபடி காலை ஆட்டிக்கொண்டிருந்தான். கால்களை உற்றுக் கவனித்தாள். பாதம் சுத்தமாக வெள்ளை வெளேரென்றிருந்தது. நல்ல சுத்தக்காரர்தான், அக்காவைப் போலவே என்று நினைத்துக் கொண்டாள். அவ ரொம்ப ஒல்லி, இவர் ரொம்ப வளர்த்தி, கொஞ்சம் குண்டு. இருந்தா என்ன என்று சொல்லிக் கொண்டாள். அவனுக்கு முன்னால் போக இவளுக்கும் வெட்கமாகத்தான் இருந்தது. அதே சமயம், வயதுக்கு வராமல் எதற்காக வெட்கப்படணும் என்றும் தோன்றியது. தைரியத்தை வரவழைத்துக்கொண்டு மெதுவாக அவன் இருக்கும் இடத்தை நோக்கிப் போக யத்தனிக்கும்போது, "ராபியா இங்கெ வா" என்று கூப்பிடும் அம்மாவின் குரல் கேட்டு மறுபடி அடுக்களைக்கே போனாள்.

பாத்திமாவும் அவளுமாக சுப்ராவைத் தரையில் விரித்து நோன்பு திறக்கும் பலகாரங்களை எடுத்து வைக்கும்படி அம்மா சொன்னதும் பாத்திமா பரபரப்பாகச் செயல்பட ஆரம்பித்தாள். சாப்பாட்டு அறையில் நான்கு புறமும் பாய் விரித்து நடுவில் சுப்ராவை விரித்துத் தண்ணீர் தட்டுகளையும் பலகாரங்களையும் பழங்களையும் பார்க்க மிகவும் அழகாக வைத்துப் பரப்பியிருந்தாள். ராபியாவுக்கு உடனே உட்கார்ந்து சாப்பிடவேண்டும் போலிருந்தது, வாசனை மூக்கைத் துளைக்க நாவில் எச்சில் ஊறியது. இன்னும் அத்தாவும் பெரியத்தாவும் வரவில்லை. நோன்பு திறக்கும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது.

சபியா எழுந்திருந்து சாப்பாட்டு அறைக்குள் நுழைந்தாள். பாத்திமா ஒரு ஓரமாக நின்று கொண்டிருந்தாள் மறக்காமல் ஒழுங்காக எல்லாவற்றையும் எடுத்து வைத்து விட்டோமா என்று யோசித்துப் பார்த்தபடி. அவளைப் பார்த்ததும் சபியாவின் முகம் சுருங்கியது. "ஒன் வேலை முடிஞ்சிதுண்ணா அடுப்படிக்குள்ள போய் நில்லேன். இங்க

என்ன சோலி? ஆம்பளைங்க வர நேரத்துல” என்று விரட்டினாள். அவளுக்கு அவமானமாக இருந்தது. பதில் எதுவும் பேசாமல் அங்கிருந்து அகன்று அடுப்படிக்குள் நுழைந்து கொண்டாள்.

சபியா சொன்னது றைமாவின் காதிலும் விழுந்தது. அவளுக்குச் சங்கடமாக இருந்தது. சபியா அடுத்ததாக இன்னொன்றும் சொல்லிக் கொண்டாள். “எதெயும் வைக்கிற இடத்துல வைக்கணும்னு இந்தப் பொண்ணுகளுக்குத் தெரிய மாட்டேங்கிது.” பாத்திமாவுக்குச் சமாதானம் சொல்லும் விதத்தில், “அந்தப் பொம்பள பேச்ச நீ மனசில வைச்சுக்காதே” என்று சொல்லிவிட்டு, “இவகிட்டே எம்பொண்ணு எத்தனை கஷ்டப்படப் போறாளோ தெரியலையே” என்றும் முணுமுணுத்துக் கொண்டாள் றைமா. பாத்திமாவின் முகம் சுண்டிப் போயிருந்தது. அடுக்களைப் பெஞ்சின் ஒரு ஓரமாகத் தரையில் குத்த வைத்திருந்த அவளைப் பார்க்கும்போது றைமாவுக்குப் பாவமாக இருந்தது.

றைமா திருமணம் முடித்து வரும்பொழுது பாத்திமா சின்னப் பெண்ணாக இருந்தாள். நூரம்மாதான் இந்த வீட்டில் பத்துப் பாத்திரம் தேய்ப்பாள். தன் மகளை நல்ல இடத்தில் கட்டிக் கொடுப்பதற்காக வாயைக்கட்டி வயிற்றைக்கட்டிப் பணம் சேர்த்துக் கொண்டிருந்தாள் நூரம்மா. பாத்திமாவை ஒரு வேலையும் செய்ய விடமாட்டாள். தகப்பனில்லாத புள்ளைய ஒரு இடத்துல புடிச்சுக் குடுத்துட்டா என் கவலை தீர்ந்துரும் என்று அடிக்கடி சொல்லிக் கொள்வாள். றைமாவின் மாமியார் ஜமிலா சொல்வாள்: “ஒனக்கு இருக்கறது ஒரு பொண்ணு, அதெ நாங்கட்டிக்குடுக்க மாட்டேனா ஊர் குமரையெல்லாம் எம் புருஷன் நிறைவேத்தி வைக்கிறார். நீ எதுக்காக இம்புட்டு வெசனப்படுறே?” இருந்தாலும் அது அவளுக்குக் காதில் ஏறியதில்லை. எவ்வளவோ கஷ்டப்பட்டு சிறுகச்சிறுகச் சிறுவாடு

சேர்த்து ஜமிலாவிடம் கொடுத்து வைத்திருந்து, தன் தூரத்து உறவுக்காரப் பையனுக்கு மணமுடித்துக் கொடுத்தாள்.

அவன் பாத்திமாவோடு வாழ்ந்தது மொத்தம் ஆறுமாதம் தானிருக்கும்! திடீரென ஒருநாள் காணாமல் போய்விட்டான். இன்று வரைக்கும் எங்கிருக்கிறான் என்றே யாருக்கும் தெரியாது. ஒரு தகவலும் இல்லை. பத்து வருஷத்துக்குக் குறையாமல் இருக்கும் காணாமல் போய்! பம்பாய் பக்கம் எங்கேயோ இருக்கிறான் என்று யாரோ சொன்னதாக பாத்திமாவே சொன்னாள். அவள், அவனைப் பற்றி அதிகமாக அலட்டிக் கொள்வதும் இல்லை. அவன் பேச்சை யார் எடுத்தாலும் போயிட்டுப் போறான் மூதேவி, என்று சொல்லி விடுவாள். கையில் ஒரு குழந்தையோடும் தன்தாய் நூரம்மாவோடும் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தாள்.

‘அவளை விழுந்து பிடுங்க எப்படித்தான் இந்தப் பொம்பளைக்கு மனசு வருதோ, ஒரு ஈவு இரக்கம் வேணாம் பொண்ணுக்குப் பொண்ணு’ என்று முணுமுணுத்துக்கொண்டாள் றைமா. குளியலறையிலிருந்து அப்போதுதான் ஒலுச்செய்துவிட்டு வெளியில் வந்த சொஹ்ரா, “அக்கா, நீங்களும் போயி ஒலுச்செய்துட்டு வாங்க, மச்சான்லாம்கூட வந்துட்டாங்க நோன்பு திறக்க. பாத்திமா நீயும் ஒலுச்செய்யி” என்று அவர்களைத் துரிதப்படுத்தினாள். தன் நினைவுகளிலிருந்து வெளிவந்த றைமா, பாத்திமாவையும் கையைப் பிடித்து இழுத்துக் குளியலறைக்குக் கூட்டிச் சென்றாள். அங்கு என்ன நடந்தது என்பது தெரியாததால் பாத்திமாவை றைமா வலுக்கட்டாயமாக இழுத்துப் போவதன் காரணம் புரியாமல் நின்று கொண்டிருந்த சொஹ்ரா ‘ராபியா’ எனக்கூப்பிட்டு சத்த மெழுப்பினாள். “இதோ வந்திட்டேம்மா” என்று கூறியபடி ஓடிவந்த ராபியாவிடம் இரண்டு பாத்திரங்களில் பலகாரங்களை நிரப்பி மூடிக்

கையில் திணித்தாள். “ஓடிப்போய் ஒண்ணை நபிஸா வீட்டுலயும் இன்னொண்ணை மதினா வீட்டுலயும் குடுத்திட்டு ஓடிவா. வந்து இந்தப் பலகாரங்கள மாடியில அக்கா இருக்கா, அவளுக்குக் குடுக்கணும். தண்ணியும் சேத்துக்குடு மறக்காம. நோன்பு திறக்க நேரமாயிடுச்சு” என்று அவசரப்படுத்தினாள்.

காதரும் கரீமும் மருமகனை ஸலாம் சொல்லி வரவேற்று தோளோடு அணைத்து முஸாபா செய்தார்கள். அவனைக் கையோடு கூட்டிவந்து விரிக்கப்பட்டிருந்த பாய் முன் உட்கார வைத்தார்கள். சபியா முன்கூட்டியே தயாராகியிருந்தாள். எப்பக்கா வந்தே என்று அவளையும் விசாரித்தபடி அருகருகே அமர்ந்து கொண்டார்கள். சிக்கந்தர் உட்காரத் தயங்கினான். “ஏன் கூச்சப்படுறீங்க, உட்காருங்க” என்று அவனை இழுத்து தன்னருகில் அமரச் செய்த கரீம், “ஒலுச்செய்யணுமோ?” என்று கேட்டான். “இல்லை ஒலுவோடத்தானிருக்கேன்” என்றவாறு தன் சட்டைப்பையிலிருந்து தொப்பியை எடுத்துத் தலையில் அணிந்து கொண்டான். சபியா அடுக்களையைப் பார்த்துக் குரல் கொடுத்தாள், “ஏங்கம்மா, நீங்களும் எங்ககூட வாரது” என்று. அவர்கள் வரப்போவதில்லை என்பது தெரிந்தாலும் சும்மா ஒரு பேச்சுக்கேனும் கூப்பிட்டு வைத்தாள். “இருக்கட்டும், நாங்க இங்கியே இருந்துக்குவோம்” என்று அங்கிருந்தபடியே பதில் சொன்ன சொஹ்ரா, “நீங்க கூச்சப்படாம சாப்பிடுங்க, மருமகனையும் சாப்பிடச் சொல்லுங்க” என்றாள். அதோடு “என்னஙக, நீங்க கவனிச்சிக்குங்க” என்று அங்கிருந்தபடியே தலையைமட்டும் நீட்டிக் கணவனைப் பார்த்தும் ஒரு வார்த்தை சொல்லி வைத்தாள்.

இங்கே அடுப்படியில் பாத்திமா, றைமா, சொஹ்ரா மூவரும் பலகை போட்டு சுற்றி அமர்ந்திருந்தார்கள். ராபியா, வஹிதாவுக்குத்

தேவையானதை மாடிக்கு எடுத்துப் போய்விட்டாள். பள்ளி வாசலிலிருந்து நகரா அடிக்கும் சத்தம் கேட்க ஆரம்பித்ததும் எல்லோருமாக இரண்டு கையேந்தி பாத்திஹா ஓதி, பேரீச்சம் பழத்தைச் சாப்பிட்டு, அன்றைய நோன்பை முடித்துவைத்துச் சாப்பிட ஆரம்பித்தார்கள். சபியா சாப்பிடும்போது சிரித்தாள். என்ன என்கிற ரீதியில் அவளைப் பார்த்தார்கள் கரீமும் காதரும்.

"ஒண்ணுமில்லெ, அந்த அல்லா, பட்டினியோட மகத்துவத்தைப் புரியவைக்க நோன்பு இரிங்கன்னு சொல்லியிருக்கான். நாம பசியைப் பத்தியே நினைக்காம நோன்ப முடிச்சிட்டு என்னெல்லாம் சாப்பிடலாமுன்னே யோசிச்சு இத்தினி வகை பலகாரம் செய்து சாப்பிட்டுக்கிட்டு இருக்கோம். நாள் பூராவும் சாப்பாட்டப் பத்தியே நினைச்சிக்கிட்டு இருந்த மாதிரித்தான இருக்கு?" என்று சொல்லி மறுபடியும் சிரித்தாள்.

"நீ சொல்றது ஒரு விதத்துல சரிதான். ஆனாலும், பர்லான நோன்ப இப்பிடிப் பலவகை பலகாரங்களும் வச்சு கவுரவப்படுத்தி முடிக்கிறதுல என்ன தப்பிருக்கு, இதெல்லாம் நமக்காக, தன் மக்களுக்காக அந்த ரஹ்மான் வகைஞ்ச கொடையில்லியா?" என்று பெருமை பொங்கச் சொன்னான் காதர். அவன் எப்போதுமே அல்லாவின் கிருபையைத்தான் புகழ்ந்து பேசுவான்.

கரீமும் சிக்கந்தரும் எதுவும் பேசாமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். கரீம் மருமகனைக் கவனிப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தான். அதன்பிறகு யாரும் பேசிக்கொள்ளத் தோன்றாமல் சாப்பிடத் துவங்கினார்கள். சபியா சாப்பிடுவதை அடுக்களையிலிருந்த ஜன்னல் வழியே அவ்வப்போது எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த சொஹ்ராவும் றைமாவும் சிரித்துக் கொண்டார்கள். நோன்பு வைத்துக் காய்ந்து கிடக்கும் வயிற்றில்

எப்படித்தான் இவ்வளவு சாப்பிட முடிகிறதோ என்று! "இனி தொழுகைக்குப் பின்னால சாப்பாடு வேற சாப்பிடக் கிடக்குது, வயிறா இல்ல சாலா? அட அல்லாவே!" அவர்கள் கேலியாகச் சொல்லிச் சிரித்தது பாத்திமாவின் மனதுக்கு மிகவும் இதமாக இருந்தது. சிறிது நேரம் முன்பு சுருங்கிப் போயிருந்த அவளது முகம் விரிந்து பிரகாசமடைந்திருந்தது.

ராபியா, வஹிதாவுடன் மாடியறையில் வடை சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். சாப்பிட ஆரம்பிக்கும் முன்பாக மறக்காமல் துவாலையை எடுத்து தலையில் போட்டுக் கொண்டிருந்தாள். அக்காவிடம் மாப்பிள்ளை பற்றி சொல்லலாமா, வேண்டாமா என்று யோசனையாக இருந்தது. அவளுக்குக் கல்யாணம் பண்ணிக்கிறதில் இஷ்டமில்லாத மாதிரி இருந்தது. ஒருநாள் அவளது திருமண விஷயமாக வீட்டிலுள்ளவர்கள் பேசிக்கொண்டிருந்த பொழுது அவளுக்கு முகமே சரியில்லாமல் இருந்தது. அறைக்குள் போய் படுத்து அழுதுகொண்டிருந்தாள். றைமா பெரியம்மா எவ்வளவோ கெஞ்சி அவளைச் சமாதானம் செய்துகொண்டிருந்தாள். ராபியாவுக்குச் சிரிப்பாக இருந்தது. 'யாராவது கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்னுவாங்களா, மக்கு! எவ்வளவு ஜோராக பட்டுப்புடவை கட்டி, நகைபோட்டு, மாலை போட்டு அலங்கரித்து விடுவார்கள். நானெல்லாம் எனக்குக் கல்யாணம் வைக்கும் பொழுது சந்தோஷமாகச் சிரித்துக் கொள்வேன்' என்று நினைத்துக் கொள்கையில் அவளுக்கு அஹமதுவின் ஞாபகம் வந்தது. வெட்கமாகவும் இருந்தது. வஹிதாதான் பேச்சை ஆரம்பித்தாள்: "யார், யார் ஊர்லேர்ந்து வந்திருக்காக ராபியா?"

ராபியாவுக்குக் கண்ணில் மின்னல் தெறிக்க உற்சாகம் பிய்த்துக் கொண்டது. "அது வந்து, சபியா மாமியும் மாப்பிள்ளையும்தான்

வந்திருக்காக. ஒனக்கு இங்க சென்ட் வாசம் தெரியுதில்ல, சூப்பரா இருக்குல்ல? மாப்பிள்ளைதான் அடிச்சிருக்காரு. அப்புறம் ஆள் பாக்க அழகா இருக்கார் தெரியுமா? அவர் பாதமெல்லாம்கூட வெள்ளையா ரொம்ப சுத்தமா இருக்கு. ஒனக்கும்கூட அவரப் பாத்தாக்க ரொம்ப புடிக்கும் தெரியுமா? நீ எப்பிடியாவது பாரேன்" என்று அளக்க ஆரம்பித்தாள்.

வஹிதாவுக்கு மனசுக்குள் குறுகுறுத்தது. சென்ற வாரம் வரைக்கும் கல்யாணம் என்றாலே பயமாகத்தான் இருந்தது. இன்று என்னவோ மனம் சஞ்சலப்பட்டது. தன்னை மணந்து கொள்ளப் போகும் மாப்பிள்ளையைப் பார்க்க வேண்டுமென்கிற ஆர்வம் உந்தித் தள்ளியது. ஆனால், வெட்கமாகவும் இருந்தது. அவனைத் தன் மிகச் சிறிய வயதில்தான் பார்த்திருக்கிறாள். இப் பொழுது சுத்தமாக அவன் முகம் ஞாபகத்திலேயே இல்லை. எவ்வளவு முயற்சித்தாலும் அவன் முகத்தைக் கற்பனை செய்ய முடியவில்லை. கொஞ்சமாவது நினைவு இருந்தால்தானே மேற் கொண்டு கற்பனை செய்ய?

ராபியா அவள் நினைவைக் கலைத்தாள். "அக்கா, அவர் பிளேன்ல எல்லாம் போயிருக்காராமே, அவங்க வீட்டுல இது மாதிரி சென்ட் பாட்டில் நிறைய இருக்கும் இல்லெ? அவர் உன்னையும்கூட பிளேன்ல வெளிநாட்டுக்கெல்லாம் கூட்டிப் போவாராமில்ல? மதினா சொன்னா. அவங்க அண்ணன் கூட அங்கெதானாமே இருக்காரு."

வஹிதாவுக்குப் பதில் சொல்லவே தெரியவில்லை. அவளது நினைப்பெல்லாம் அவனை எப்படியாகிலும் பார்த்துவிட வேண்டுமென்பதிலேயே இருந்தது. அவள் வயதுக்கு வந்த நாளிலிருந்தே சொஹ்ரா பயமுறுத்தி வைத்திருந்தாள். 'வேற்று ஆம்பளைக முன்னெ நின்னுடாதே, அவங்க உன் முகத்தெப் பார்த்தாலோ நீ அவங்க முகத்தெப் பார்த்தாலோ, உன் முகத்துல

இருக்கற ஒளி குறைஞ்சு, முகம் கறுத்துப் போய்டும்' என்று! அதனாலேயே அவள் வெளி ஆள் யார் முன்னேயும் நின்றதுமில்லை, பார்த்ததுமில்லை. வெளி ஆள் யார் வந்தாலும் வெளியில் நிலைப்படியில் இருக்கும் அழைப்பு மணியை அழுத்துவார்கள். அந்தச் சத்தம் கேட்டதுதான் தாமதம், விழுந்தடித்துக் கொண்டு ஓடி அறைக்குள் ஒளிந்து கொள்வாள். இங்கு மட்டுமில்லை. ஊரில் யார் வீட்டில் வயதுக்கு வந்த பெண்கள் இருந்தாலும் இப்படித்தான் ஓடி ஒளிவார்கள். டவுனில் உம்மும்மா வீட்டில் இருந்தாலும் அப்படித் தான். படித்ததும்கூட முஸ்லீம் பெண்கள் மதரஸாவில்தான். பர்தாவோடுதான் போய் வருவாள்.

இன்றைக்கு என்னவோ காரணமில்லாமல் மனம் அலை பாய்ந்தது. மனசெல்லாம் அவனைச் சுற்றியே வந்து கொண்டிருந்தது. எப்படியிருப்பான், முடி எப்பிடியிருக்கும், வளர்த்தியா, குட்டையா, கறுப்பா, சிவப்பா என்றெல்லாம் கணக்கிட்டுக் கொண்டிருந்தது. ராபியாவிடம் விசாரிக்கலாம் என்றால் அவள் அதைக் கீழே அம்மாவிடமோ சித்தியிடமோ உளறி அசிங்கப்படுத்திவிடுவாள் என்று தோன்றிற்று. கீழேயிருந்து சொஹ்ரா கூப்பிட்டாள். "ராபியா, அக்காவும் நீயும் கீழ வாங்க. ஆம்பளைங்க தொழுகப் போயிட்டாங்க."

மாடியிலிருந்து இறங்கியதும் முதல்வேலையாக சபியா மாமியைப் பார்க்கச் சொன்னாள் சொஹ்ரா. சபியா தொழுகும் அறையில் தொழுது கொண்டிருந்தாள். அவளைப் பார்த்தாலே நடுக்கமாக இருந்தது வஹிதாவுக்கு. ஸலாம் கொடுக்கும் வரைக்கும் பக்கத்திலேயே ஒரு ஓரமாக ஒதுங்கி நின்று கொண்டிருந்தாள். அவள் தொழுவது ரொம்பவும் வேடிக்கையாக இருந்தது. கால்களை ஒரு வகையாக அகற்றி வைத்திருந்தாள். குனிந்து நிமிரும்போது மூச்சு வாங்கியது. சஜ்தாவில் குனிந்து நிமிரும்போது ஒரு ஆமை கூட்டுக்குள்ளிருந்து

தலையை நீட்டி உள்ளிழுப்பது போலிருந்தது. வஹிதாவுக்குச் சிரிப்பு வந்தாலும் அடக்கிக்கொண்டாள். இரவு தராவீஹ் தொழுகைக்கென ஹாலைக் கூட்டிப் பெருக்கித் துடைத்து தயார் செய்து கொண்டிருந்த பாத்திமாவைக் கூப்பிட்டு அவளது மகன் இலியாஸுக்கும் நூரம்மாவுக்குமாக இரண்டு பெரிய பாத்திரத்தில் சாப்பாடு எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள் றைமா, சபியா தொழுது முடித்து வருவதற்குள்ளாக அவளை அங்கிருந்து அனுப்பி வைத்துவிடும் எண்ணத்துடன்! பாத்திமாவுக்கு இவ்வளவு சாப்பாடு கொடுத்தனுப்புவதைப் பார்த்தால் போதும் கண்டபடி பேசத்தொடங்குவாள். வீண் பிரச்சனை ஆரம்பமாகி விடும் என்று பயமாகவும் இருந்தது.

சபியா தொழுது துஆ கேட்டு முடித்தவளாக எழுந்து ஸலாம் சொன்னபடியே வஹிதாவை அணைத்து முஸாபா செய்தாள். “நல்லாருக்கியா, இத்தன நேரமா ஆளயே காணலையே, எங்கேருந்தே, ஏன் இம்புட்டு எளைச்சிருக்கே?” என்று அவளை அணைத்த வாறே இழுத்துக்கொண்டே போய் சோபாவில் உட்கார்ந்து அவளையும் பக்கத்தில் அமர வைத்துக் கொண்டு, “சொஹ்ரா, நாங்கொண்டு வந்த பையி அங்கெனெயா இருக்குது? செத்த எடுத்துட்டு வாயேன்” என்று குரல் கொடுத்தாள்.

வெகு அருகில் உட்கார்ந்திருந்த சபியாவுக்குத் தாட்டியான உடம்பு. வட்டமான, சிவந்த, நல்ல களையான முகம். அத்தாவின் ஜாடையும் தெரிந்தது. சொஹ்ரா கொண்டு வந்து தந்த கனமான பிளாஸ்டிக் பையில் கைவிட்டு ஒருகட்டு பூவும் ஒரு டின் பிஸ் கெட்டும் சாக்லேட் டப்பாவையும் எடுத்துக் கீழே வைத்துவிட்டு உள்ளேயிருந்த சேலைகளை எடுத்தாள் சபியா. மூன்று சேலைகள் இருந்தன அதில்! சாட்டின் துணியின் வழுவழுப்போடும் பிறையும் நட்சத்திரங்களும்

டிஸைன் செய்யப்பட்ட புடவை! அதோடு ஆண்களுக்குச் சட்டைத்துணியும் நூல் தொப்பியும் சென்ட் பாட்டில் இரண்டும் கொண்டு வந்திருந்தாள்.

“இந்தா, இதையெல்லாத்தையும் எடுத்து வைய்யி! வெளிநாட்டுலேர்ந்து உன் மருமகன் கொண்டு வந்தது” என்று சொல்லியபடி எடுத்து சோபாவில் வைத்தாள். “சேலை உனக்கும் றைமாவுக்கும். அப்புறம் வஹிதாவுக்கும் சேர்த்து இருக்கு. ஆளுக்கொண்ணா எடுத்துக்கங்க” என்று சொல்லிவிட்டு, “சேலை உனக்குப் புடிச்சிருக்கு தானே?” என்று வஹிதாவிடம் கேட்டாள். அவளுக்கு எதுவும் சொல்லத் தெரியவில்லை. மண்டையை ஆட்டிவைத்தாள், கேள்வியின் அர்த்தம் புரியாமலேயே.

சேலை டிஸைனைப் பார்த்து சொஹ்ராவும் றைமாவும் ஒருவருக்கொருவர் முகம் பார்த்துச் சிரித்துக்கொண்டார்கள். நல்ல பட்டிக்காட்டு டிஸைன். அழுத்தமான கலர். அதைச் சொல்ல முடியுமா என்ன? தொலைத்து விடுவாள் என்பதால் எதுவும் பேசாமல், “எதுக்கு? இதெல்லாம்!” என்று சொல்லி விட்டு கைகளில் எடுத்துக் கொண்டாள் றைமா. அதை உடனே கையில் எடுக்கவில்லையென்றால் போச்சு, தன்னை அவமானப்படுத்தி விட்டதாகவும் தான் கொண்டு வந்த பொருளை உதாசீனப்படுத்திட்டார்கள் என்றும் கூப்பாடு போடுவாள். “என்ன, சேலை புடிச்சிருக்கா? ஒங்க ரெண்டு பேருக்கும் ஒஸ்தியான துணியாம், வெலையும் கூடத்தானாம். இன்னும்கூட ஒரு பொட்டி சேலை துணிமணி வச்சிருக்கான். அதெல்லாம் அவன் பொண்டாட்டிக்காம். இதைக்காட்டிலும் ஒஸ்தின்னு சொன்னான். எல்லாம் எம்மருமகளுக்குத்தான்” என்று வஹிதாவின் மோவாய்க்கட்டையைத் தொட்டுக் கொஞ்சினாள். வஹிதா தலையை இன்னும் அதிகமாகக்

குனிந்து கொண்டாள். அவள் சொன்ன ஒஸ்தி துணி எந்த லட்சணமோ என்று சொஹ்ரா மனதுக்குள் நினைத்துக் கொண்டாள். றைமாவும் கூட அப்படித்தான் நினைத்திருப்பாள் போல! அவள் முகத்தில் அதற்கான அறிகுறிகள் தெரிந்தன.

சபியா, றைமாவுக்கும் சொஹ்ராவுக்கும் ஒரு பட்டப்பெயர் வைத்திருந்தாள். இவர்களின் நேரிலேயே அதைச் சொல்லிச் சில சமயம் கிண்டல் செய்வாள். சபியா சிறுபிள்ளையாக இருந்த பொழுது இந்த ஊரில் நல்லி, பதவி என்று இரண்டு கூலிக்காரப் பெண்கள் வீடுகளுக்கு வேலைக்கு வருவார்கள் இருவருமே ஒரு புருஷனுக்கு வாழ்க்கைப்பட்டவர்கள். என்றாலும், அப்படி ஒற்றுமையாக இருப்பார்கள். அவர்களது ஒற்றுமையைப் பார்த்து ஊரே ஆச்சர்யப்படும், சக்களத்திகளுக்குள் இத்தனை பிரியமா என்று! ஏனோ சபியாவுக்கு சொஹ்ரா, றைமாவின் ஒற்றுமையைப் பார்த்தால் நல்லி, பதவியின் ஞாபகம் வரும். அவர்களைச் சில சமயங்களில் அப்படி பேர் சொல்லிக் கூப்பிடக்கூடச் செய்வாள்.

கையில் நழுவிய சேலைத் துணியைப் பற்றி ஏதாவது அபிப்பிராயம் சொல்ல வேண்டிய கட்டாயம் றைமாவுக்கு இருந்தது. சொல்லாமலிருப்பது அத்தனை மரியாதையில்லை என்பதனால், “துணி ரொம்ப நல்லாருக்கு. கலரும்கூட, இங்கிலீஷ் கலரில்லாம எடுப்பா இருக்கு. அதுதான் நல்லாவும் இருக்கும்” என்று ஒப்புக்கு இரண்டு வார்த்தை சொல்லி வைத்தாள். ஒப்புக்குத்தான் சொல்கிறாள் என்பதே தெரியாதபடிக்கு நாசூக்காக இருந்தது அவள் சொல்லிய விதம். ராபியா தூணைக் கட்டிப்பிடித்தவாறு நின்று பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் பார்வை முழுவதும் அங்கிருந்த சாக்லேட் டின் மீதே பதிந்திருந்தது. சபியா குப்பி தன்னைக் கூப்பிட்டு அதனைக் கொடுத்துவிட மாட்டாளா என்கிற ஏக்கம் கண்களில்

படர்ந்திருந்தது. வஹிதா அவளையே குறும்பாகப் பார்த்து உள்ளுக்குள் சிரித்துக் கொண்டிருந்தாள்.

"இன்னொரு பையில் தலைவலித் தைல பாட்டிலும் கடல் பாசியும் எடுத்து வைச்சிருந்தேன். கிளம்புற நேரம் அந்த மூதேவி வந்துட்டாளா? மறந்து போயி வைச்சிட்டு வந்திட்டேன் பாரு" என்று சலித்துக் கொண்டாள் சபியா. "இனி அடுத்த வாட்டி வறப்போ எடுத்துட்டு வந்து தாறேன். தலைவலித் தைலம் மச்சினன் மாருக்குன்னு சிக்கந்தரோட வாப்பாவே கடைக்குப்போய் வாங்கி வந்து அனுப்பியிருக்காக" என்று பெருமையடித்துக் கொண்டாள். றைமாவுக்கு உள்ளுக்குள் சிரிப்பு வந்தது. அவரே குடுத்தனுப்பினாலும், இவளுக்குக் கொடுக்க மனசு வரணுமே? இந்நேரம் டவுன் பர்மாபஜாருக்கு அனுப்பி விற்றுக் காசாக்கியிருக்கமாட்டாள் என நினைத்துக்கொண்டு, "இருக்கட்டும்! பெறகு பாத்துக்கலாம், உடனே கொடுத்தாத்தானா?" என்று ஏதோ அவள் ரொம்ப கவலைப்படுகிறமாதிரியும் இவள் அவளைச் சமாதானப்படுத்துவது மாதிரியும் சொன்னாள். வேறென்ன செய்ய? தான் மூதேவி என்று குறிப்பிட்டுச் சொன்னதை இவர்கள் இருவருமே யாரு என்று கேட்கவேயில்லையே? சபியாவுக்கு மண்டை காய்ந்தது. அவர்களாகக் கேக்காட்டி என்ன, சொல்லி விட்டால் போச்சு. சொல்லாம இருக்க முடியுமா என்ன என்று யோசித்தவள், "அவதேன், அந்த மூதேவி, என் நாத்தனார் ஒருத்தி தட்டுக் கெட்டு அலையுறாளே? அவளத்தான் சொல்றேன். கட்டிக் குடுத்தம் கருமம் தீந்துச்சுன்னா இருக்கு? அவன் பெரும்பாடுல போயிட்டான். புள்ளைகளைக் கஞ்சிக்கு வழியில்லாமயோ, என்னமோ அவ புருஷன் வீட்டு ஜனங்க புடுங்கிக்கிட்டானுக இப்ப இவ இங்கெ வந்துதான கெடக்கறா, கேவலத்துக்கு எங்களெ ஆளாக்கிக்கிட்டு" என்று நீட்டி முழக்கிச்

சொல்லி முடித்ததுமே மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கியது.

"அடியே ராபியா, மாமிக்குக் கொஞ்சம் சுடு தண்ணி கொண்டு வா, குடிக்கறக்கு" என்று அவளை ஏவி விட்டாள். "சரி நான் கொஞ்ச நேரம் தலையச் சாய்க்கிறேன். அசதியா இருக்கு" என்று சோபாவிலேயே நீட்டிப் படுத்தாள். அப்பாடா என்றிருந்தது இவர்களுக்கு. மழையும் காத்தும் ஓய்ந்த மாதிரி! எழுந்து இரவுச் சாப்பாட்டுக்கான மிச்ச வேலைகளைக் கவனிக்கத் தொடங்கினார்கள். அவர்கள் இருவர் மனதிற்குள்ளும் ஏதோ ஒருவிதமான இறுக்கம் வளைய வந்துகொண்டிருந்தது. வஹிதா, இரவுச் சாப்பாட்டின் போதாவது தன் வருங்காலக் கணவனைப் பார்த்து விட முடியுமா என்கிற ஆவலிலும் யோசனையிலும் இருந்தாள். ராபியா சாக்லேட் டின்னை எடுத்துச் சாப்பிட ஆரம்பித்திருந்தாள், எதைப் பற்றியும் யோசிக்காமல்!

# 16

பாத்திமா கொண்டு வந்திருந்த சாப்பாட்டு வகைகளைப் பார்த்து நூரம்மாவுக்கு நாக்கில் நீர் ஊறியது. இத்தனை வகைச் சாப்பாட்டைச் சேர்ந்தாற்போல கண்ணால் பார்த்து எவ்வளவோ நாட்களாகியிருந்தன. வயசான காலத்தில் ரொம்பத்தான் நாக்கு எப்புக்கெட்டு அலைகிறது திங்கறதுக்கு எதுவும் கிடைக்காதா என்று. எங்கே போறது? வயித்துக்குக் கஞ்சி குடிக்கிறதே பெரும்பாடா இருக்கும்போது! ஒருத்தி பாடுபட்டு மூணு உசுரு வயிறு வளர்க்கணும்னா என்னா செய்ய என்று முணுமுணுத்துக் கொண்டாள். இலியாஸ் விளையாடப் போயிருந்தான். அவனைத் தேடி பாத்திமா போயிருந்தாள். நூரம்மாவுக்குப் பசித்தது. நோன்பு திறந்திட்டு எவ்வளவு நேரம் சாப்பிடாமல் இருப்பது? நாமாவது சாப்பிடலாம் என்று நினைத்தபடி உட்காரும் பலகையை எடுத்துப் போட்டு உட்கார்ந்தாள். முழங்கால் வலித்தது. "யா, அல்லா" என்றவாறு காலைப் பிடித்து நீவிவிட்டுக் கொண்டாள்.

அலுமினியத் தட்டில் இடியாப்பமும் குருமாவும் எடுத்துப் போட்டு சாப்பிடத் தொடங்கினாள். நல்ல ருசியாக இருந்தது. சொஹ்ரா மண முடித்து வந்தபுதிதில் அவளது சமையல் நன்றாகவே இருக்காது. அப்பொழுதெல்லாம் சாப்பாட்டுத் தட்டை கரீம் ஒரே விசிறாக விசிறி எறிந்துவிட்டுப் போவது அடிக்கடி நடக்கும். சொஹ்ரா அழுது அழுது மாய்வாள். இப்பொழுது ஜமிலாம்மாவின் கைப்பக்குவம் மருமகள்களுக்கும் வந்து விட்டது என்று நினைத்துக் கொண்டாள்! அந்தக் காலத்துல ஜமிலாம்மா ஆனம் வச்சா தெருவே மணக்குமே? இப்ப எவ வீட்டுல எது வெந்தாலும் வாசனையா வருது, என்னத்த

ஆக்குறாளுகளோ? கர்மம் என்று சலித்தவாறு சாப்பிட்டு முடித்தாள். காய்ந்து கிடந்த வயிற்றில் உணவு போய் விழுந்ததும் மயக்கமாக வந்தது. சிம்னி வெளிச்சத்தைக் குறைத்து வைத்து விட்டு நாற்காலியில் படுத்துக் கொண்டாள். மகனைத் தேடிப்போன பாத்திமா இன்னும் வரவில்லை. “எங்கே போய்த் தொலைஞ்சானோ? தட்டுக்கெட்ட பயகுட்டி, நாளெல்லாம் பாடுபட்டுப்புட்டு வந்து அவ தலை சாய்க்கறது இல்லெ?” என்றவாறு கண்களை மூடித் தூங்க ஆரம்பித்தாள்.

தெருவில் இருள் கவிந்து கிடந்தது. தெரு நாய்கள் ஒன்றிரண்டு, தொலைவில் ஊளையிடுவது காதில் மெலிதாக விழுந்து கொண்டிருந்தது. வானத்தில் நிலவோ, நட்சத்திரங்களோ இல்லாமல் வெறிச்சிட்டுப் போயிருந்தது. நூரம்மா வீட்டுக்கும் சவுரா வீட்டுக்கும் இடைப்பட்ட இரண்டடி இடைவெளி தொண்டில் அண்டாவை உருட்டும் கடகட சத்தம் கேட்க ஆரம்பித்தது. வெண்கல அண்டாவில் தங்கக் காசுகளை நிரப்பி தரையில் உருட்டிக்கொண்டிருப்பது போன்ற ஒலி. மிகக் கனமான அண்டாவை அனாயாசமாக உருட்டும் சத்தம் நூரம்மாவைத் தூங்கவிடாமல் பாதித்தூக்கத்தில் எழுப்பியது. மிக நீண்ட தொண்டு என்பதால் அதன் ஒரு முனையிலிருந்து மறு முனைக்கு உருட்டிக்கொண்டு வர எப்படியும் பத்து நிமிடமாவது ஆகும். இடையில் எந்த ஒரு தடங்கலுமில்லாமல் உருண்டு கொண்டிருந்தது அண்டா.

நூரம்மாவுக்குக் காதில் கேட்கும் சத்தத்தைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. கொல்லைக் கதவைத் திறந்து லேசாக எட்டிப் பார்க்கலாமா என்று நினைத்தாள். அம்மாடி, எதிர்க்க வர்றவுகளை ஒரே அடியில ஜின்னு அடிச்சுக் கொன்னு விடுமாமுல்ல என்று பயந்து அந்த நினைப்பை மாற்றிக் கொண்டாள். யார் வீட்டின் முன்பாவது அந்த ஒலி நிற்கிறதா என்று மட்டும் காது கொடுத்துக் கவனிக்க

ஆரம்பித்தாள். அண்டா, தொண்டின் ஒரு முனையிலிருந்து இன்னொரு முனைக்கு மறுபடி மறுபடி உருண்டு கொண்டிருந்ததே தவிர நிற்கவேயில்லை. சிறிது நேரத்திற்குப் பின் அந்த ஓசையும் நின்றுவிட்டது.

நூரம்மாவுக்கு ஏமாற்றமாக இருந்தது. இன்னைக்காவது ஜின்னு தன் வீட்டில் அந்தப் புதையலைப் போட்டு விட்டுப் போகக் கூடாதா என்று அங்கலாய்த்துக் கொண்டாள். எத்தனையோ வருஷமாக அவள் இந்தச் சத்தத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறாள். தான் பாதுகாத்து வரும் புதையலை யாரிடம் கொடுப்பது என்று புரியாமல் தூக்கிக் கொண்டு அலையும் ஜின்னின் மீது ஆத்திரம் வந்தது அவளுக்கு. தகப்பனில்லாப் பிள்ளைக இருக்கற இந்த வீட்டத் தாண்டிப் போக அதுக்கு எப்பிடி மனசு வருது? கல்பு கறுத்துப் போச்சோ இந்த ஜின்னுக்கு என்று எத்தனையோ முறை கேட்டுக் கொண்டாள். அவளுக்கு ஒன்றுமட்டும் நிச்சயமாகத் தெரியும். அந்தப் புதையலை அது தன் வீட்டில்தான் போடுமென்று!

ஒரு முறை அப்படித்தான், பாத்திமா சின்னவளாக இருந்த போது தன் சோடிப்பெண்டுகள் சிலரோடு கூடத்தில் அமர்ந்து சொட்டாங்கல் ஆடிக் கொண்டிருந்தாள். நேரம் நடுமத்தியானம் இருக்கும். முற்றத்தில் விழுந்து கிடக்கும் வெயில் கண்ணைக் கூசச்செய்தது. பல்லாங்குழிக் கட்டையும் தாயக்கட்டையும் அருகருகே கிடந்தன. புளிய முத்துக்கள் கூடத்தில் இறைந்து கிடந்தன. பக்கத்துவீட்டு சவுரக்கா இவ்வளவு நேரம் இங்கேயிருந்து நூரம்மாவோடு தாயம் ஆடிவிட்டு அப்போதுதான் போயிருந்தாள். பாத்திமாவுக்குப் பசிக்க ஆரம்பிப்பதற்கு முன் ஜமிலாக்கா வீட்டில் போய் சாப்பாடு வாங்கி வைத்துவிட வேண்டும். காலையிலேயே வேலைகளை முடித்துக் கொடுத்துவிட்டு வந்துவிட்டாள். கொஞ்ச

நேரம் கழித்து சாப்பாடு வாங்க ஜமிலாக்கா வரசொல்லியிருந்தாள். பசி எடுத்தால் பிள்ளை சுருண்டு போயிருவாள் என்று நினைத்ததுடன், பாவம் தகப்பனில்லாத புள்ளை என்று பச்சாதாபப் பட்டுக் கொண்டாள். பின்னெ, பொட்டப்பிள்ளைய கரையேத்தணும் என்றால் தகப்பன்தானே வேண்டும்? பொட்டச்சி, நான் இருந்து என்ன செய்யப் போறேன்? எப்பிடி சிந்தாம, சிதறாம வளர்த்தெடுக்கப் போறேன் என்கிற பயமும் பொறுப்பும் அவளைப் பாடாய் படுத்திக்கொண்டிருந்தன. ராவும் பகலும் இதைவிட்டால் வேறு சிந்தனையில்லாமல் போயிருந்தது.

அப்பொழுதுதான் அந்த சப்தம் கேட்டது. இடிஇடிக்கும் ஓசை. பளீரென மின்னல் முற்றத்து வெயிலில் தோன்றி மறைய ஒரு வெண்கல அண்டா வானத்திலிருந்து வருவதுபோலப் பளீரிட்டு மின்னி நடுமுற்றத்தில் வந்து விழுந்தது. ஒருகணம் நடப்பது என்னவெனத் தெரியாமல் திகைத்துப்போய் அவள் உட்கார்ந் திருக்கையில் முற்றத்து சிமெண்ட் தரை வெடித்து அண்டா அதனுள் புதைந்து மறுபடி மூடிக்கொண்டுவிட வீடே நிசப்தத்தில் உறைந்தது. நடந்தது என்னவென்பது புரியாமல் அம்மாவென அலறியவாறு பாத்திமா பயத்துடன் ஓடிவந்து இவள் மடியில் விழ மகளை அணைத்துக் கொண்டாள் நூரம்மா. பாத்திமாவோடு விளையாடிக் கொண்டிருந்த மற்ற பிள்ளைகள் இடிச் சத்தத்தில் மிரண்டுபோய் சுவரோடு சுவராக ஒண்டிப்போய் இருந்தார்கள்.

சுய நினைவு வந்தபிறகுதான் இவளுக்கு என்ன, ஏது என்று புரிய புலம்ப ஆரம்பித்தாள். தனக்காகப் புதையலைக் கொடுக்க வந்த ஜின்னு என்ன காரணத்தினாலோ கண்ணில் காட்டி விட்டு மறுபடி கொண்டு போய்விட்டதாகச் சொல்லி ஒரு பாட்டம் அழுது தீர்த்தாள். இப்பவும் அதை நினைத்து அழுது புலம்புவாள். அது மறுபடியும் தனக்கே

கொடுக்கும் என்கிற நம்பிக்கை அவளுக்கு இருந்தது. இன்னிக்கு இல்லென்னா நாளைக்கி குடுத்துட்டுப் போவுது! என் புள்ளையாவது கஷ்டப்படாம இருக்குமுல்ல என்று தன்னைத் தானே சமாதானம் செய்து கொண்டு நிம்மதியடைவாள்.

அன்றிலிருந்து இன்றுவரை அப்படித்தான் நினைத்துக் காலத்தைக் கடத்திக் கொண்டிருக்கிறாள். காலம்தான் ஓடுதே தவிர, ஒன்றையும் காணோம்! தன்னுடம்பிலும் சத்துக்கெட்டுப் போய்க் கொண்டிருக்கிறது. இன்னும் எத்தனை காலத்துக்கு இருக்கப் போறோமோ? நான் இருக்கறப்பவே அந்தப் புதையல் கிடைச்சிட்டா எவ்வளவோ சந்தோஷமாத்தான் இருக்கும். என் புள்ளைக்கும் ஒரு விடிவு காலம் பொறக்கும் என்று நினைத்துக் கொண்டாள்.

‘எம்மகளுக்குத் தகப்பனில்லை. சின்ன வயசுல புருஷன் ஓடிப் போக அவளும் தனி மரமா நிக்கிறா! அவ புள்ளைக்கும் தகப்பனில்ல. இது என்ன கோலம்? இந்த நஸீபை எழுத அவனுக்கு எப்பிடித்தான் மனசு வந்துச்சோ, இவனுக்கு நன்றி செலுத்த என்ன செய்திருக்கிறான் என் குடும்பத்துக்கு! நான் எதுக்காகத் தொழுகணும்’ என்று சலித்துக் கொண்டாள். காலில் கொசு பிடுங்கியது. காலைத் தட்டி விட்டுக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள்.

பாத்திமா, கூடத்தில் ஒரு ஓரமாகப் பாய் விரித்துக் சுருண்டு கிடந்தாள். அவளது கைக்குள் இலியாஸ் படுத்துக் கிடந்தான். மங்கிய வெளிச்சத்தில் பாத்திமாவின் அருகில் போய் நின்றுகொண்டாள். குனிந்து அவளை எழுப்பலாமா என்று யோசித்தாள். எழுப்பி உனக்கு ஏதாச்சும் சத்தம் கேட்டுச்சாவெனக் கேட்கலாம். ஆனால் அவளுக்குக் கோபம் வரும். சுள்ளென்று கோபிப்பாள். ஒனக்குப் பொழப்பு கிழப்பு இல்லெ, எத்தனை நாளைக்கு இப்பிடியே கேட்பே என்பாள். இல்லாவிட்டால் நோன்பு நாளில் ஜின்னாவது நடமாடுறதாவது

என்றுசொல்லி முடித்துக்கொள்வாள். அவளை எழுப்பும் எண்ணத்தைக் கைவிட்டுவிட்டுக் கொல்லைப்புறமாகப் போய் ஒண்ணுக்கு இருந்து விட்டு கால் கழுவிக் கொண்டாள். ஊரே பெரும் நிசப்தத்தில் மூழ்கியிருந்தது. இன்னும் கொஞ்ச நேரத்தில் முற்றிலுமாக இந்த அமைதி காணாமல் போய்விடும். சஹர் செய்வதற்காக எல்லா வீடுகளும் விழித்து, தெருவில் நடமாட்டம் தொடங்கிவிடும்.

தூரத்தில் எங்கேயோ சஹர் முஸாபிர் பாவாவின் பைத்து ஓதும் குரலும் தப்பபடிக்கும் ஓசையும் கேட்டுக் கொண்டிருந்தது. ஒவ்வொரு தெருவாகச் சுற்றிச் சுற்றி வருவார். அவர்கூடவே ஒரு பையன் அரிக்கன் விளக்கைப் பிடித்தபடி வருவான். சஹர் முஸாபருக்குக் காலை நேரத்தில் தெருவுக்குள் நல்ல வசூல் இருக்கும். இந்த மாதம் முழுவதும் ஏகப்பட்ட வருமானம். பத்து ரூபாய்க்குக் குறைவாக யாரும் தரமாட்டார்கள். வாரத்தில் இரண்டு நாள் வெள்ளியும் திங்களும் பகலில் வந்து விடுவார். நோன்புப் பலகாரமும் குறையாது. எல்லாம் இந்த ரம்ஜான் மாதத்தோடு சரி! அதற்குப் பிறகு அவர் தனது சொந்த ஊருக்குப் போய் விடுவார். அடுத்த வருஷம்தான் வருவார். பாத்திமா சின்னப்பிள்ளையாக இருந்த காலத்திலிருந்து இவர்தான் வந்து கொண்டிருக்கிறார் ஒவ்வொரு வருஷமும்! ரொம்பவும் நல்ல இதயம் உள்ள மனுஷன்! ஊரில் அனேகமாக ஒவ்வொரு வீட்டு விஷயமும் அவருக்குத் தெரியும். பாத்திமா புருஷன் வந்துட்டானா என்று தவறாமல் விசாரிப்பார். இல்லை என்றால், அல்லா கிட்ட நான் துஆ செய்யறேன், அவனுக்கு நல்ல புத்தியக் குடுன்னு என்று ஆறுதல் சொல்வார். “அந்தப் பட்டுக் கெடப்பான் எங்கே போய் தொலைஞ்சானோ, இனிவரவா போறான்” என்று கைவிரல்களை நெட்டி முறித்துச் சாபமிடுவாள்.

பாத்திமாவின் வயது அவளை வழி தவறச் செய்து விடுமோ என்கிற

கவலை அவளை அரித்துக் கொண்டிருந்தது. கொஞ்ச நாட்களாகவே அவள் போக்கில் வேறு மாறுதல் இருப்பதாகப் பட்டது. நன்றாகச் சீவி, சிங்காரித்துப் பூ வைக்கிறாள். எதற்கெடுத்தாலும் சிரித்துக்கொள்கிறாள். முன்பெல்லாம் காய்ந்து கிடக்கும் மூஞ்சியில் இப்போது புதுப் பொலிவு இருப்பது மாதிரி பட்டது. பஷீர் கடையில் வேலைக்கிருக்கும் முருகனோடு ஒன்றிரண்டு தடவை பேசிச் சிரித்துக் கொண்டிருந்ததைப் பார்த்திருந்தாள். 'அந்தப் பள்ளப் பயகூட ஒனக்கு என்னத்துக்குப் பேச்சு' என்று கேட்டதற்கு, 'ஒண்ணுமில்ல' என்று சொல்லி விட்டாள். அன்றிலிருந்து மகளைச் சற்று அதிகப்படியாகவே கண்காணிக்க ஆரம்பித்திருந்தாள் நூரம்மா. வயசுக்கோளாறுல ஒண்ணுகெடக்க ஒண்ணு நடந்திச்சுன்னா, என்ன பண்ணித் தொலைக்கிறது என்று தனக்குள் புலம்பிக் கொள்வாள்.

அவளைப் பல்வேறு விதமான நினைவுகள் ஆட்கொள்ள, இனி தூங்குவது இயலாத காரியம் என்று தெரிந்து வெத்தலைப் பெட்டியை எடுத்துக்கொண்டு வந்து, முற்றத்தில் கிடந்த ஆட்டுரலில் உட்கார்ந்து வெற்றிலை போட ஆரம்பித்தாள்.

# 17

ராபியாவும், மதினாவும் பள்ளிக்கூடத்திற்குச் செல்லும் பொதுத் தெருவில் நடந்து கொண்டிருந்தார்கள். வீட்டிலிருந்து நேராகவே பள்ளிக்குச் செல்கிற வழியில் செல்லலாமா என யோசித்து ஒருநிமிடம் தயங்கி நின்ற ராபியா, "எந்த வழியாப் போவோம்" என்றாள் மதினாவிடம். "நேராப் போயிருவோம். என்கிட்ட காசு இருக்கு, போற வழியில பெட்டிக்கடையில ஏதாவது வாங்கித் தின்றுக்கிட்டுப் போகலாம்" என்றாள் மதினா.

"அப்ப, உமா வீட்டுக்குப் போய் அவளைக் கூட்டிக்கிட்டுப் போகவேணாம்?" சந்தேகத்துடன் கேட்டாள் ராபியா. "போகலாம். ஆனா, தீனி எதுவும் வாங்க முடியாதே, அவ வீட்டுக்குப் பக்கமா போனா" என்று இழுத்தவாறே சொன்னாள். "சரி பரவால்லை. ஸ்கூல் வெளிய மரத்தடியில விக்கிற தீனியை வாங்கித் தின்னுக்கலாம்" என்று கூறிப் பக்கவாட்டில் பிரியும் குறுக்குப்பாதையின் வழியே மதினா நடக்கத் தொடங்க, ராபியாவும் அவளைப் பின் பற்றி நடந்தாள். காலையிலேயே வெயில் உறைக்க அடித்துக்கொண்டிருந்தது. எட்டி நடந்து வேகத்தைக் கூட்டியவள், "மதினா சட்டுனு நட, வெயில் தாங்கமுடியல" என்றாள். மதினாவும் அவளுக்கு ஈடுகொடுத்து நடக்க ஆரம்பித்தாள்.

போகும் வழியில் கணக்காப்பிள்ளை சேது வீட்டருகிலிருந்த அரசமரத்து நிழலின் குளிர்ச்சி இதமாக இருக்க, "கொஞ்ச நேரம் இங்கென நிப்போமா, நல்லாருக்கு" அனுமதிகேட்கும் விதமாக ஒலித்த ராபியாவின் குரலை, "ப்ச் . . . ! அதெல்லாம் வேணாம் வா, நேரமாயிடும், பெல்லடிச்சுடுவாங்க" அலட்சியப்படுத்திவிட்டுத்

தொடர்ந்து நடந்துகொண்டிருந்தாள் மதினா. இவளுக்கு வருத்தமாக இருந்தது! 'கொஞ்சம் நேரம் நின்னா என்னவாம்?' எனத் தனக்குள்ளாக முணுமுணுத்தபடி மனமில்லாமல் அந்த மரநிழலைக் கடந்து சென்றாள். தரையில் உதிர்ந்து கிடக்கும் இலைகளைக் காலால் சிராட்டியபடி நடந்து கொண்டிருந்தவளுக்கு இதை அம்மா பார்த்தால், 'பொட்டச்சி என்னா தரையைச் சிராட்டி நடக்கறது' என எரிந்து விழுவாள் என்பது ஞாபகம் வந்தது. தானாகவே நடையை மாற்றியவள், 'ஆமாம் அம்மாதான் இங்கெ இல்லையே, அப்புறம் என்ன' என்று தைரியம் வந்தவளாக மறுபடியும் தரையைச் சிராட்டியபடி நடக்க ஆரம்பித்தாள்.

உமாவின் வீட்டை அடைந்ததும் வீட்டுக்கு வெளியேயிருந்த திண்ணையில் உட்கார்ந்தபடி "உமா" என்று குரல் கொடுத்தாள் ராபியா. இவர்களுக்காகவே காத்திருந்தமாதிரி, "இதோ வந்திட்டேண்டி" என்று சொல்லியபடி வெளியே ஓடிவந்தாள் உமா. ராபியாவுக்குக் கோனார் நோட்ஸ் தொலைந்து போயிருந்தது. பரீட்சைக்குப் படிக்க என்னசெய்வது என்று தெரியவில்லை. உமாவிடம் இருந்தால் வாங்கிக் கொள்ள நினைத்திருந்தாள். உமா ஏற்கனவே தலைகீழாகப் படித்து ஒப்பிப்பாள். அதனால் அவளுக்குத் தேவைப்படாது என்று தெரியும். மதினா வைத்திருக்கிறாள். அது அவளுக்குப் படிக்க வேண்டும் என்பதால் அவளிடம் கேட்க முடியாது. "உமா உன்னோட கோனார் நோட்ஸ் வேணும் தர்றியா?" என்றாள் ராபியா. "என்னோடதா? நேத்துதானே பிரபாவுக்குக் கொடுத்தேன். அவளோடது தொலைஞ்சிருச்சாம், நீ நேத்தே கேட்டிருக்கலாமில்ல" என்றாள் வருத்தத்துடன். ராபியா ஒரு பொருளைத் தன்னிடம் கேட்டதே பெரிய விஷயம், அந்த உதவியைத் தன்னால் செய்ய முடியவில்லையே என்கிற ஆதங்கம் உமாவின் முகத்தில் தெரிந்தது.

“அதுதான் என்கிட்டே இருக்கு இல்ல, நாம ரெண்டு பேரும் சேர்ந்து படிக்கலாம்” என்றாள் மதினா. “இல்லெ என்கிட்டேயே அது இருந்தாதான் வஹிதா அக்காவுக்கு நேரம் கிடைக்கறப்போ படிச்சு ஒப்பிக்கலாம்” என்ற ராபியாவுக்கு ரமேஷின் ஞாபகம் வந்தது. “உமா, உங்க வீட்டுக்குப் பின்னாடி வீட்ல இருக்கற ரமேஷ்கிட்ட கேப்போமா? அவனும் நல்லாதான படிப்பான்? இந்நேரம் மனப்பாடம் செய்திருப்பான். நீ கேட்டுப் பாரேன்” என்றாள்.

“ரமேஷ் வீட்டுக்கா? நான் போக மாட்டேன்ப்பா” என்று பட்டென்று பதில் சொன்னாள் உமா. அவள் முகமே பேயறைந்தாற் போல் மாறியிருந்தது. ஆச்சரியப்பட்ட ராபியா, “ஏன், அங்கெ போனா என்ன?” என்றாள். “அது வந்து, எங்கம்மா அங்கேயெல்லாம் போகக் கூடாதுனு சொல்லியிருக்காங்க” என்றாள். “அதுதான் ஏன்னு கேட்கறோம். உங்கம்மாவுக்கும் அவங்கம்மாவுக்கும் சண்டையா?” என்று கேட்டாள் மதினா. “சேச்சே . . .! அதெல்லாம் இல்லெ. எங்கம்மா நேத்துகூட ரமேஷம்மாகூட பேசிட்டு இருந் தாங்களே. ஆனா என்னை அங்கெயெல்லாம் போகக் கூடாதுனு சொல்லியிருக்காங்க” என்று போக மறுத்து விட்டாள் பிடிவாதமாக! ராபியாவுக்கு வேறுவழி இருப்பதாக தெரியவில்லை. “சரி, நானே போய் வாங்கிட்டு வர்றேன், இருங்க” என்றபடி எழுந்து போனாள்.

உமா வீட்டுக் கொல்லைக்குப் பின்புறம் அடுத்த தெரு இருந்தது. அதில் முதல் வீடு ரமேஷ் வீடு. ரமேஷ் இவர்களுடைய கிளாஸ்தான். ரொம்பவும் நன்றாகப் படிப்பான். அவனுடைய அப்பா கரண்ட் ஆபீஸில் வேலை செய்கிறார் என்பதால் அவர்கள் வீட்டை கரண்டுக்காரவுக வீடு என்றுதான் எல்லோரும் சொல்வார்கள். அவனுக்கு ராபியாவைப் பார்த்தால் வெட்கமாக இருக்கும் போல. எப்பொழுது இவள் அவனைப் பார்த்தாலும் தலையைக் குனிந்து

கொள்வான். இவள் பார்க்காத போது இவளையே பார்த்துக் கொண்டிருப்பான். பெஞ்ச் அருகருகே என்பதால் அவன் தன்னைப் பார்ப்பதை இவளும் தெரிந்துகொள்வாள். சமயங்களில் இவளுக்கும் வெட்கமாக இருக்கும். இப்பொழுது அவன் வீட்டுக்குப் போக வேண்டுமாவென நினைத்துத் தயங்கிக் கொண்டிருந்தால் நோட்ஸ் கிடைக்காது. வேறு வழியில்லை என்றுதான் தானே கிளம்பினாள்.

சிறு ஓட்டு வீடு அது. வெளிவாசலில் சிமெண்ட் பூசி அதன் மேல் கோலம் போட்டிருந்தது. திண்ணையில் ஒரு கிழவர் படுத்திருந்தார். ஐம்பது வயதிருக்கும். அவரது கால் மட்டும் தன்னிச்சையாக ஆடிக்கொண்டிருந்தது. முகத்தை ஒரு துண்டால் மூடியிருந்தார். கைகளை மடித்துத் தலைக்கு வைத்திருந்தார். சிட்டுக்குருவி ஓட்டுக் கூரைக்குள் கூடு கட்டியிருந்தது. ராபியா வெளியிலிருந்து லேசாக எட்டிப்பார்த்தபோது கூடு தெரிந்தது. சற்று நேரம் அதையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஒன்றிரண்டு வைக்கோல் பிரிந்து தொங்கிக் கொண்டிருந்தது. உள்ளே நிச்சயமாகக் குஞ்சுகள் இருக்கும் என்று தோன்றியது.

“யாரும்மா பொண்ணே, என்ன வேணும் உனக்கு” என்று திடீரெனக் குரல் கேட்கவும் திடுக்கிட்டுத் திரும்பினாள் ராபியா. அந்தக் கிழவர்தான் எழுந்து உட்கார்ந்திருந்தார். தலைமுடி சுத்தமாக வெள்ளையாகியிருந்தது. வெளுத்த முகத்தில் லேசான மீசையும் கறைபடிந்த பற்களுமாக இருந்தார். அவரது பார்வை அவள் மீது மிகுதியான பரிவைக் காட்டியது. மறுபடியும் கேட்டார், “என்னம்மா யார்வேணும் உனக்கு” என்று. நல்ல கம்பீரமான குரல். “ரமேஷப் பார்க்கணும் தாத்தா” என்றாள் மெதுவாக. தாத்தா என்றதும் அவரது கண்கள் வியப்பால் விரிந்தன. “முடியெல்லாம் நரைச்சுப் போச்சுல்ல, அதனால தாத்தான்னு சொல்ற. பரவால்ல, பரவால்ல” என்றவாறு

தலையைத் தடவிக் கொண்டார். பிறகு எழுந்து நின்று வேஷ்டியை உதறிக் கட்டினார். உள்ளே பார்த்து “ரமேஷ்” என்று குரல் கொடுத்தார். ‘என்னப்பா?’ என்றபடி வெளியே வந்தவன் இவள் நிற்பதைப் பார்த்துத் தயங்கி நின்றான்.

அவள் தன்வீட்டுக்கு எதற்காக வந்திருக்கிறாள் என்கிற யோசனையுடன் அவளையே பார்த்தபடி நின்றான். அதற்குள் உள்ளேயிருந்து ஒரு அழகான நடுத்தர வயதுப் பெண் வெளியே வந்தாள். அவள் ரமேஷின் அம்மாவாக இருக்க வேண்டும். அவள் முகத்திலிருந்து கண்களை எடுக்கவே முடியவில்லை. அளவாகச் செய்து வைத்த மாதிரி முகம், மூக்கு, வாய் எல்லாவற்றோடும் சாந்தம் நிறைந்த ஒரு ஈர்ப்பு அம்முகத்தில் இருந்தது. வெள்ளை வெளேரென்று மாவினால் செய்த மாதிரி உடம்பு. ராபியாவுக்குப் பார்த்துக் கொண்டேயிருக்க வேண்டும் என்றிருந்தது. “வாம்மா, என்ன வேணும் உனக்கு” என்று அவள் கேட்டதும் தன் நினைவுக்கு வந்தாள் ராபியா. “அது வந்து, ரமேஷ்” என்று அவனைக் கைகாட்டினாள். அவனும், “என்ன . . . வேணும் உனக்கு” என்று பக்கத்தில் வந்து கேட்டான். “உன்னோட கோனார் நோட்ஸ் எனக்கு வேணுமே, கொஞ்சம் தரமுடியுமா?”

கொஞ்சம் கூட தயக்கமின்றி “ஓ தரேன்” என்றவாறு உள்ளே ஓடினான் எடுத்துவர. “உன்பேர் என்னம்மா” என்றாள் ரமேஷின் அம்மா. ‘ராபியா’ என்றாள் மெதுவாக. “இவன்கூட படிக்கிறியா என்ன? உள்ளே வாயேன், சாப்பிடலாம்” என்று கூப்பிட்டாள். அதற்குள் ரமேஷின் அப்பா, “நீ காதரோட பொண்ணுதானே” என்றார். “இல்லெ” என்று அவசரமாக மறுத்தவள், “அவரோட தம்பி கரீமோட பொண்ணு” என்றாள். “ஓகோ! அதான பாத்தேன். முகஜாடை தெரியுது இல்ல” என்றவர், “சாந்தா இவ யாருன்னு

தெரியுதா? மளிகைக்கடை கரீம் பொண்ணு" என்று அவளுக்கு விளக்கம் கொடுத்தார்.

அவளுக்கும் இப்போது இவளை அடையாளம் தெரிந்தது. "அப்பிடியா" என்றவள், "நீ இருந்து வாங்கிட்டுப் போம்மா. வேணும்னா திண்ணையில உட்காரேன்" என்று அவளைக் கையைப் பிடித்து இழுத்துத் திண்ணையில் அமர்த்தினாள். ராபியா பாவாடையை நன்றாகக் கால் தெரியாதபடிக்கு இழுத்துவிட்டுக் கொண்டாள். கூச்சமாக இருந்தது. ரமேஷ் சீக்கிரமாக வந்து சேர்ந்தால் தேவலை என்றிருந்தது. அவனது அம்மா, அப்பா இருவரும் அவளையே பார்ப்பதுபோல உணர்ந்தாள். தலையை இன்னும் அதிகமாகக் குனிந்து கொண்டவளின் கண்ணில் சாந்தாவின் பாதம் பட்டது. மெட்டியணிந்திருந்த நீளமான, வெண்மையான விரல்கள் அழகாக இருந்தன. வஹிதாக்காவின் பாதமும் இப்படித்தான் இருக்கும் என்று மனதில் நினைத்துக் கொண்டாள். "நீங்க சாப்பிடறீங்களா?" என்று சாந்தா தன் கணவரிடம் கேட்டாள். அவர், "எனக்குப் பசியில்லை, பிறகு பார்க்கலாம்" என்றார்.

வெளி வாசலில் யாரோ செருப்புக்காலைத் தட்டுவது காதில் விழ, தலையைத் திருப்பி யாரெனப் பார்த்தாள் ராபியா. பேண்ட் சர்ட் அணிந்த கம்பீரமான ஒருவர் திண்ணைக்கருகிலிருந்த படியில் ஏறிக் கொண்டிருந்தார். திண்ணையிலிருந்த ராபியாவைப் பார்த்தபடியே எதிரே இருந்த இன்னொரு திண்ணையில் அமர்ந்து கொண்டவர், "அப்பாடா, காலையிலேயே என்னமா வேர்க்குது" என்று முணுமுணுத்தபடி, "சாந்தா சாப்பாடு வைக்கிறயா" என்றார். "இதோ வைக்கிறேன்" என்றவள், "இந்தப் பொண்ணு யாருனு கேக்கலையே?" என்றாள். "ஆமா, யார் இது தெரியலையே" என்று இவள் முகத்தை உற்றுப்பார்த்தார், அடையாளம் கிட்டுமாவென்கிற ஆர்வத்துடன்!

ரமேஷின் அப்பாதான் பதில் சொன்னார். மளிகைக் கடை கரீம் பொண்ணு என்று அறிமுகம் செய்து வைத்தார். "ஓஹோ, அப்பிடியா? பெரிய எடத்துப் பொண்ணாச்சே. இங்கே எப்பிடி? அதுவும் திண்ணையில போய் உட்காந்துக்கிட்டு" என்று ஆச்சரியம் நிரம்பிய விழியோடு சொன்னவர், "ரமேஷோடதான் படிக்கிறியா?" என்றார். "ஆமாம்" என்றாள் ராபியா. இந்த ரமேஷ் உள்ளே என்னதான் செய்கிறான் இன்னும் வராமல்? கையில் நோட்ஸ் கிடைத்தால் ஓடியே போய்விடலாம் என்ற யோசனையுடன் வீட்டின் உள்புறத்தைக் கண்களால் மேய்ந்து கொண்டிருந்தாள். "நானும் உங்க அப்பாவும் நல்ல பழக்கம் தெரியுமா?. முன்னாடியெல்லாம் உங்க வீட்டுக்கு அடிக்கடி வந்திருக்கேன். இப்பொதான் அதிகமா வர்றதில்ல. மத்தபடி கடைவீதியில பாத்து பேசிக்குவோம். தீபாவளிக்கு, ஆடி பதினெட்டுக்கு எல்லாம் ஸ்வீட் கொடுத்தனுப்புவோம் வீட்டுக்கு. அதேமாதிரி உங்க வீட்டுலருந்தும் பலகாரம் எல்லாம் ரம்ஜான், பக்ரீத்துக்கு அவரே என் கையில கொடுத்து விடுவாரு தெரியுமா?" என்றார் புதிதாக வந்தவர். இவள் பதில் சொல்லத் தெரியாமல் விழிக்க ஆரம்பித்தாள். அதனை ரமேஷின் அப்பா புரிந்துகொண்டார். "நீ என்ன சின்னப் பிள்ளை கிட்ட போய் இதெல்லாம் கேட்டுக்கிட்டு? அதுக்கென்ன தெரியும்" என்று சொல்லி அவளைப் பதில் சொல்லும் பொறுப்பிலிருந்து விடுவித்தார். ராபியாவுக்கு அப்பாடா என்றிருந்தது. தீபாவளிக்கு யார் யாரோ தம் வீடுகளிலிருந்து ஸ்வீட் கொடுத்தனுப்புவார்கள். வீடே நிரம்பிக்கிடக்கும். இவளுக்கு ரொம்பவே கொண்டாட்டமாக இருக்கும். கண்டபடி தின்றுவிட்டு இருமிக் கொண்டு கிடப்பாள். அம்மாதான் கத்தித் தீர்ப்பாள், 'அதிகமா இனிப்பு சாப்பிட்டா சீக்கிரமா வயசுக்கு வந்துடுவேடி, சாப்பிடாதே' என்று! காதில் யார் வாங்கப்போகிறார்கள். வஹிதா லீவுக்கு வந்திருப்பாள். அவள் மட்டும் எவ்வளவு சாப்பிட்டாலும் அம்மா

கண்டு கொள்ள மாட்டாள்.

"இந்தா வாங்கிக்கோ" என்ற குரல் அவளது நினைவுகளைக் கலைக்க, தலை நிமிர்ந்து பார்த்தாள். ரமேஷ் நோட்ஸை நீட்டிக் கொண்டிருந்தான். அதைக் கையில் வாங்கிய ராபியா, "படிச்சிட்டுத் தர்றேன்" என்றவளாகத் திண்ணையிலிருந்து குதித்துக் கீழே இறங்கி, "அப்பொ நான் வரேங்க" என்று பொதுவில் சொல்லிவிட்டு அங்கிருந்து கிளம்பினாள்.

நோட்ஸோடு உமாவின் வீட்டு வாசலுக்கு வந்து நின்றவளை, உமா ஆச்சர்யமாகப் பார்த்தாள். "பரவால்லையே, போய் வாங்கிட்டு வந்துட்டியே?" என்றாள். "ஆமா, நீதான் போக மாட்டேன்னு சொல்லிட்டியே?" என்றாள் ராபியா வருத்தத்துடன். உமாவுக்குச் சங்கடமாக இருந்தது. "கோபிச்சுக்காதே ராபியா, எங்கம்மாதான் அவங்க வீட்டுக்குப் போகக் கூடாதுன்னு சொல்லியிருக்காங்க. அதனாலதான் போகலை. அம்மா வீட்டுலதான இருக்காங்க. நான் போனா நிச்சயம் தெரிஞ்சிடும். திட்டுவாங்க" என்றாள். "ஏன் அவங்க ரமேஷ் வீட்டோட சண்டையா" என்று மறுபடியும் ஆச்சரியமாகக் கேட்டாள் ராபியா. "சேச்சே! அதெல்லாமில்லெ. எங்கம்மா அவங்கம்மா கூட பேசுவாங்க, வீட்டுக்குப் போவாங்க. ஆனா என்னைத்தான் விட மாட்டாங்க. ஏன்னாக்க ரமேஷ் அம்மாவுக்கு ரெண்டு புருஷனாம். அதனாலதான்."

ராபியாவுக்கும் மதினாவுக்கும் அவள் சொல்வதே புரியவில்லை. "அது எப்படி ரெண்டு புருஷன் இருக்க முடியும்?" "அதான் சொன்னேன் இல்ல, நீ கூட பார்த்திருப்பே. ரெண்டு பேர்தான். எனக்கு அவங்கள நல்லாவே தெரியும்" என்றாள் உமா. "அவங்கம்மாவைப் பாத்தா ரொம்ப ரொம்ப நல்லவங்களாத் தெரியறாங்களே, அழகா வேற இருக்காங்க இல்லே?." "ஆமா என்கிட்டேகூடத்தான் ரொம்ப

பிரியமா இருப்பாங்க, எங்க வீட்டுக்கு வருவாங்க, நல்லாவே பழகுவாங்க, என்னமோ புரியல” என்றாள் உமா. கொஞ்சதூரம் யாருமே எதுவும் பேசாமல் பள்ளியை நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள்.

மதினாவுக்கு மண்டை வெடித்துவிடும் போலிருந்தது. ஊரில் நிறையப் பேருக்கு ரெண்டு பொண்டாட்டி இருப்பதைப் பார்த்திருக்கிறாள். இரண்டு புருஷன் இருப்பதைப் பார்த்ததில்லை. அது எப்படி இருக்க முடியும்? இதை யாரிடம் கேட்டால் விஷயம் பிடிபடும் என்று யோசித்தாள். ராபியாவின் பெரியம்மாவிடம் ராபியாவையே கேட்கச் சொல்லலாம் என்று தோன்றியது. அவளது அம்மாவும் சரி, தன் அம்மாவும் சரி இதைக் கேட்டால் தோலை உரித்துவிடுவார்கள். ராபியாவின் பெரியம்மாதான் அவளுக்கு என்ன சந்தேகமிருந்தாலும் தீர்த்து வைப்பாள்.

அவள் இவ்வாறு நினைத்துக் கொண்டிருக்கையில் ராபியாவின் மனதிற்குள்ளும் இதே சிந்தனை ஓடிச் கொண்டிருந்தது. இன்று இரவுக்குள் பெரியம்மாவிடம் இது பற்றி பேசி விபரம் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற எண்ணத்தோடு வேறு விஷயங்கள் குறித்தும் பேச நினைத்தாள். அவளுக்கு அஹமதுவோடு தான் பழம் விட்டிருப்பதை மதினாவிடமும் உமாவிடமும் சொல்ல வேண்டியிருந்தது. ஆனால் எப்படி ஆரம்பிப்பது என்றுதான் தெரியவில்லை.

கொஞ்ச நேரம் யாரும் எதுவும் பேசாமலிருந்து கொண்டிருந்தார்கள். ராபியாதான் பேச்சை ஆரம்பித்தாள். “மதினா, நான் ஒரு விஷயம் சொல்வேன், கோவிச்சுக்கமாட்டே இல்ல?” அவள் என்ன சொல்ல இத்தனை தயங்குகிறாள் எனப் புரியாமல் மதினா அவளை நிமிர்ந்து பார்த்தாள். அதுவும் தன்னிடம் சொல்ல? அவளும் நீண்ட நேரமாகக் கவனித்துக் கொண்டுதானிருந்தாள். ராபியா எதனையோ

சொல்லவந்து மென்று விழுங்கிக்கொண்டு இருப்பதை! அவள் என்னவென்று கேட்காமலேயே நடந்து கொண்டிருந்தாள். உமாவுக்கும் என்ன என்று கேட்கக் தோன்றவில்லை. அவளாகவே சொல்லட்டும் என்கிற மாதிரி கூடவே நடந்து கொண்டிருந்தாள்.

"அது வந்து, நானும் அஹமதுவும் பழம் போட்டுக்கிட்டோம். அது மாதிரி நீங்களும் அவன்கூட பழம் போட்டா எல்லாரையும் அவன் விளையாட்டுல எல்லாம் சேத்துக்குவான் இல்லையா? நீங்களும் பழம் போடுங்கப்பா" என்றாள், கெஞ்சலாக! மதினாவுக்கும் உமாவுக்கும் இதைக் கேட்டதும் அதிர்ச்சியாக இருந்தது என்பது அவர்கள் முகத்தில் தெரிந்தது. "அது எப்பிடி நீ அவன்கூட சேரலாம். அதுவும் எங்ககிட்டகூட சொல்லாம. உனக்குக் கொஞ்சம் கூட வெக்கமாயில்லையா" என்றாள் மதினா. அவளுக்குக் கடுமையாகக் கோபம் வந்தாலும் ராபியாவிடம் அதை முழுவதுமாகக் காட்ட முடியவில்லை. அவளது முட்டாள்தனத்தை நினைத்துதான் ஆத்திரமாக இருந்தது. எதற்காக இப்படிச் செய்தாள் தன்னிடம் கூட ஒரு வார்த்தை கேட்காமல் என்று வருத்தமாகவும் இருந்தது. சைக்கிள் ஓட்டப்பழக வேண்டுமென்றுதான் அவள் இப்படிச் செய்திருக்க வேண்டும் என்றும் அவளுக்குப் புரிந்தது. "அவன் கூட நீ பேசுறதாருந்தா பேசு, நான் எல்லாம் சேரமாட்டேன். என்னை அவன் எப்பிடியெல்லாம் திட்டினான்" என்றாள் உமா முகத்தைப் பரிதாபமாக வைத்துக் கொண்டு. "சண்டையா இருந்தாதான திட்டுவாங்க, பழம் போட்டா யாராச்சும் திட்டுவாங்களா? பழம் போட்டா அவன் திட்டவே மாட்டான். நாம கூடத்தான் அவனத் திட்டியிருக்கோம்" என்றாள் ராபியா, அவளைச் சமாதானம் செய்யும் விதத்தில்.

"அதெல்லாம் முடியாது. நாங்க அவன்கூட சேர முடியாதுன்னா

*முடியாது. நீ அவன்கூட பேசுறதாகயிருந்தா எங்க கூட இனிமே பேச வேண்டாம்” என்றாள் உமா சற்று கடுமையாகவே. உமா இப்படிச் சொல்வாள் என்று மதினா நினைத்தே பார்க்கவில்லை. அவளது முடிவில் தன்னையும் சேர்த்துக் கொண்டு விடுவாளென்று எதிர்பார்க்கவேயில்லை அவள். அவளுக்கு வேறு யாரைக் காட்டிலும் எதைக் காட்டிலும் ராபியாவின் நட்பு தான் முக்கியமானது. அவளைப் பார்க்காமலோ பேசாமலோ ஒருநாள்கூட அவளால் இருக்க முடியாது. பிறந்ததிலிருந்தே அவளும் ராபியாவும் இணை பிரியாமல் தானிருந்து வந்திருக்கிறார்கள்.*

*மிகுந்த வருத்தத்துடன் ஒன்றுமே பேசாமல் தரையைப் பார்த்தபடி நடந்து கொண்டிருந்தாள் மதினா. அவளுக்கும் ராபியாவுக்குமிடையில் அஹமது வந்து விட்டிருக்கிறான். தனக்கு மட்டுமே சொந்தமான ஒரு பொருளை யாரோ தட்டிப் பறித்தது போலிருந்தது. அவளுக்கு ராபியாவின் மீது வருத்தமும் தன்மீது அவள் வைத்திருக்கும் பிரியத்தின் பேரில் மெலிதான சந்தேகமும் தோன்றி மிகுந்த மனச் சோர்வு உண்டாயிற்று. தான் ராபியாவிடம் காட்டும் பிரியம் அவளுக்குத் தன்னிடத்தில் இருந்திருந்தால் அவள் தனக்குப் பிடிக்காத அஹமதுவிடம் பழம் போட்டு இருந்திருப்பாளா? அல்லது தன்னிடம் ஒரு வார்த்தையாவது கேட்டிருக்கலாமில்லையா? அதுவும் கூட செய்யவில்லையே?*

*அவள் ஒரு கணம் நிமிர்ந்து தன்னோடு நடந்து கொண்டிருக்கும் ராபியாவின் கவலை தோய்ந்த முகத்தைக் கூர்ந்து பார்த்துவிட்டு அவள் பார்க்கும் முன்பாகத் தலையைக் குனிந்து கொண்டாள். “சரி, சரி! அவ வேணும்னா பேசிக்கட்டும். அவன்கூட நாம பேச வேணாம். அதுக்காக நமக்குள்ள சண்டைபோட வேணாம்” என்று சொல்லி அப்பேச்சை முடிவுக்கு கொண்டு வந்தாள் மதினா. இருந்தாலும்*

ராபியாவின் முகத்தில் திரண்டிருந்த கவலையை எப்படிப் போக்குவது என்று அவளுக்குத் தெரியவில்லை. அது குறித்து ஆழ்ந்த கவலை மதினாவைப் பற்றிக்கொள்ள மிக அமைதியாகப் பள்ளியை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள்.

# 18

ரபிக்காவும் சித்திக்காவும் நடையில் உட்கார்ந்திருந்தார்கள். சித்திக்கா குத்த வைத்து அமர்ந்திருந்தாள். பாவாடையைக் கீழே விழாதபடி சுருட்டி மடிக்குள் திணித்துக்கொண்டு, ரபிக்கா சம்மணமிட்டு உட்கார்ந்திருந்தாள். சைனு கோபால் பல்பொடியை எடுத்து வந்து உள்ளங்கையில் கொட்டினாள். பாக்கெட்டை எட்டி அடுக்களை ஜன்னலுக்கு வெளியே வைத்து விட்டு இவர்கள் முன்போய் குனிந்து நின்று கொண்டாள். முதலில் ரபியை வாயைத் திறக்கச் சொன்னாள். அவள் ஒருவிதமான கெக்கெலிப்புடன் ஆவென வாயைத் திறந்தாள். தன் கையிலிருந்த பல்பொடியை விரலில் தொட்டு அவளது பற்களை அழுத்தித் தேய்த்தாள். இடையில் ரபி வாயை மூட முயற்சிக்க, தலையில் ஒரு குட்டு வைத்தாள். "சனியனே, மூடாதே அம்புட்டுத்தான்." பக்கத்திலிருந்த சித்திக்கா இவர்களையே உற்றுப்பார்த்துக் கொண்டிருந்துவிட்டு அம்மா திட்டும், அம்மா திட்டும் என்று தனக்குள்ளாகவே சொல்லிப் புலம்பத் தொடங்கியிருந்தாள்.

சைனுவுக்கு அலுப்பாக இருந்தது. காலையில் எழுந்திருந்து இவர்களுக்குப் பல் துலக்கி, வெளிக்குப் போக வைத்துக் கால் கழுவி முடிப்பதற்குள் உயிர் போய்விட்டு வரும். குளிக்கும் நாளென்றால் முதுகெலும்பு ஒடிந்துவிடும். இதுகளைக் குளிப்பாட்டித் தலை துவட்டி துணி உடுத்தி முடிப்பதென்றால்? நாய் தலையில நல்ல எழுத்தும் கோழி தலையில குரான் எழுத்தும் எழுதுற இந்த அல்லா, இருந்தாலும் இப்பிடி ஒரு விதியை எந்தலையில போட்டுருக்கக் கூடாது என்று முணுமுணுத்தபடி அவர்களை வாய் கொப்பளிக்க வைத்து

அடுப்படிக்குக் கூட்டிவந்து உட்கார வைத்தாள்.

மும்தாஜ் காய்கறி நறுக்கிக் கொண்டிருந்தாள். நோன்பு நாளாகயிருந்தாலும் பகலிலும் சமைத்தாக வேண்டியிருக்கிறது இந்த இரண்டு தெங்கணங்களுக்காக என்ற ஆத்திரம் அவள் முகத்தில் தெரிந்தது. “தாஜு, இதுகளுக்கு ரெண்டு தோசை சுட்டுக்குடு” என்றாள் சைனு. “இதோ சுடுறேன்” என்று சொல்லிவிட்டு அடுப்பை மூட்டித் தோசைக் கல்லை வைத்தாள். விறகு பச்சையாக இருந்தது. புகை கண்ணை எரியச்செய்தது. மண்ணெண்ணெய் பாட்டிலை எடுத்து லேசாகக் கவிழ்த்து, பிறகு மறுபடியும் பற்ற வைத்தாள். நெருப்பு குபீரெனப் பிடித்து எரிந்தது. மாவைக் கரைத்து தோசை ஊற்றத் தொடங்கினாள். எங்கிருந்தோ ஓடி வந்தாள் மதினா. “அண்ணி எனக்கும் சாப்பாடு, பரிட்சைக்குப் போகணும்.” சொல்லிவிட்டுத் தன் சகோதரிகளோடு அருகில் உட்கார்ந்தாள். சைனு கடுகடுத்தாள். “மாடு மாதிரி வளர்றியே, ஒனக்கு அறிவு வளருதா? தட்டை, தண்ணிய முன்னாடி எடுத்து வைச்சுக்கிட்டு உக்காருவியா, பயமாதிரி வந்து உக்கார்ற? அக்காமாருக்கும் ஆளுக்கொரு தட்டை எடுத்து முன்னாடி வையி பொண்ணா, லட்சணமா” என்று சத்தம் போட்டாள். மதினா ஓடிப்போய் அலமாரியில் அடுக்கியிருந்த தட்டுகளில் மூன்றை எடுத்து வந்தாள். அடுப்பு மேடையிலிருந்த செம்பையும் ஒரு டம்ளரையும் எடுத்து வந்து குடத்திலிருந்து நீரை வார்த்தாள். ரபியின் முன்னாலிருந்த டம்ளரில் தண்ணீர் நிரப்பி வைத்துவிட்டுச் சொம்பைத் தன் பக்கத்தில் வைத்துக் கொண்டாள்.

சித்தி, ரபி இருவர் உடம்பிலிருந்தும் துர்நாற்றம் வீசியது. மூக்கைப் பொத்தியபடி அவர்களுக்கருகிலிருந்து விலகி வேறொரு இடத்தில் உட்கார்ந்து கொண்டாள். அவர்களிடமிருந்து வரும் நாற்றத்துக்கு எச்சில் வடிவதுதான் காரணம் என்று புரிந்தது. சனியன்

எச்சிலையாவது விழுங்கித் தொலைக்கத் தெரியாதா என்பது போலிருந்தது மதினாவின் முகபாவம். சாப்பாடு மட்டும் முழுங்கத் தெரியுதில்ல, இதுவும் தெரிய வேண்டியதுதானே? தானாகச் சாப்பிடக்கூட தெரியாமல் இருந்தவர்களை மும்தாஜ்தான் சாப்பிட வைத்தாள். சைனு ஊட்ட வந்தாலும்கூட விடமாட்டாள். “விடுங்க மம்மானி, தானா சாப்பிடட்டும்” என்பாள். அதே மாதிரி அவர்களும் தானாகவே சாப்பிட ஆரம்பித்திருக்கிறார்கள். மும்தாஜ் சமயங்களில் தன் மாமியாரைக் கடிந்து கொள்வாள். “இது மாதிரி ஒண்ணொண்ணையும் சின்னவயசுலயே பழக்கியிருந்தா இப்பிடி ஆயிருக்குமா? ஓரளவு ஒங்க கஷ்டம் கொறைஞ்சிருக்குமுல்ல? தேவையில்லாம இப்ப பல்வெளக்க, கால் கழுவிவிட, குளிக்கன்னு ஒங்களுக்குதானே கஷ்டம்” என்று.

சைனுவுக்கு ஒப்புக்கொள்ள மனம் வராது. “நீ சொல்லிட்ட, அதுகளுக்கு மூளை வளர்ச்சியில்லைங்கறப்போ எப்புடி இதெல்லாம் பழக்கறது? அதுல வேற என் உசுரு இருக்குந்தட்டியும்தானே? நானே எம்புள்ளைகளுக்குப் பாத்துட்டுப்போறேன்” என்று கண்கலங்குவாள். சமயங்களில் பரிதாவோ, மும்தாஜோ உதவிக்கு வந்தாலும் அவர்களுக்குப் பிடிக்காது. முரண்டு பிடிப்பார்கள். சைனு செய்தால் தான் எதிர்ப்புக் காட்ட மாட்டார்கள். இதில் எல்லாம் பெரிய சித்ரவதை மாதவிலக்கு ஆவதுதான்! மூளை வளர்ச்சி இல்லையென்றாலும், இது மட்டும் குறைச்சலில்லாத படிக்கு மாதாமாதம் ஆகிவிடும். அந்த நாட்களிலெல்லாம் தீட்டுத்துணி வைப்பது அதைக் கசக்கிக் காய வைப்பது என்று நாலைந்து நாள் படாதபாடு படுவாள். சாப்பிடப் பிடிக்காமல் கஷ்டப்படுவாள். ஒருத்திக்கு முடிந்ததும் இன்னொருத்திக்கு. அவளுக்கு முடிந்ததும் தனக்கு என்று, இதே வேலைதான் மாதத்தில் பாதி நாளைக்கும். அந்த

நாட்களிலெல்லாம் ஆற்றமாட்டாமல் அல்லாவைத் திட்டித் தீர்ப்பாள். "இதுக மண்டைய எடுத்துக்க மாட்டானா?" என்று அழுது புலம்பி துஆ கேட்பாள். இதையெல்லாம் பார்க்காமல் போய்ச் சேர்ந்துவிட்ட தன் கணவனை நினைத்து ஆறுதல் அடைவாள். எவ்வளவு பணம் இருந்து என்ன? வசதி வாய்ப்பு இருந்துதான் என்ன? இதுகளக் குணப்படுத்தவும் வழியில்லே, நிம்மதியடையவும் வழியில்லே என்று சொல்லிப் புலம்புவாள்.

மதினாவுக்குப் பள்ளிக்குச் செல்லும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. "அண்ணி எனக்கு மொத சாப்பாடு தாங்க, பெல் அடிச்சுருவாங்க" கெஞ்சினாள். 'இதோ சுட்டாச்சு' என்று அவள் தட்டில் முதல் தோசையை வைத்து சட்னியை ஊற்றினாள் மும்தாஜ். மதினா சாப்பாட்டுத் தட்டைத் தூக்கிக்கொண்டு ஒரே ஓட்டத்தில் ஹாலுக்கு வந்து உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தாள். அடுப்படியில் புகையும் ரபி, சித்தியின் மீதிருந்து வீசிய துர்நாற்றமும் சாப்பிடவிடாமல் அவளை அங்கிருந்து துரத்தியடித்தன. முற்றத்தில் கிடந்த பெஞ்சில் அமர்ந்திருந்த சைனு மதினாவைப் பார்த்து சத்தமிட்டாள். "எதுக்காகடி அங்க போற? சிந்தித்தொலைக்கறதுக்கா? தொழுகற எடம்." "இல்லெம்மா சிந்தாமல் சாப்பிடுறேன். அங்கெ புகை கண்ண எரிக்குது" என்றாள் மதினா.

அவர்களைப் பார்த்தால் மதினாவுக்கும் பாவமாகத் தானிருக்கும். ஆனால் இந்த நாற்றத்தைத்தான் போக்க வழியில்லை. அம்மாவும் ஒரு நாள் விட்டு ஒருநாள் அவர்களைச் சிலோன் லக்ஸ் போட்டுதான் குளிப்பாட்டி விடுகிறாள். இருந்தாலும் வாடை குறைவதில்லையே, என்ன செய்ய? மதினா மறந்தும்கூட தன் பள்ளித் தோழிகளை வீட்டுக்குக் கூட்டி வரமாட்டாள். ராபியாவைப் பற்றி பிரச்னையில்லை. ஆனால் மற்றவர்கள்? வீட்டுக்கு வந்து இதுகளைப்

பார்த்துவிட்டுப் போனால் பின்னாடி என்றைக்காவது சண்டை வந்தால் கேலி செய்வார்கள். அதோடு தன் தோழிகள் இவர்களைப் பார்ப்பதே இவளுக்குக் கௌரவ குறைச்சலாகப்பட்டது.

அம்மாதான் பாவம் இவர்கள்மேல் உயிரையே வைத்திருக்கிறாள். யாராவது ஒன்று சொன்னாலும் பொறுக்கமாட்டாள். மும்தாஜின் அம்மா ஒருநாள் யாரிடமோ கேலி செய்து சிரித்தாளாம். “ஏண்டி, மும்தாஜு நாத்தனாமார் ரெண்டு கிறுக்குக இருக்குல்ல, அதுகள மாப்பிள்ள பாத்துக் கட்டிக் குடுத்துருவாளோ சைனு” என்று. “அதுசரி! அதுகள எப்பிடிக் கட்டிக் குடுக்கறதாம்” என்றாளாம் இன்னொருத்தி. “அப்புறம் ஏன், அதுக கையிலயும் கழுத்துலயும் இம்புட்டு நகையைச் சுமத்தி வச்சிருக்கா? அதுகளுக்கென்னா நகைண்டு வெளங்கப்போகுதா, இல்லெ எவனும் நகையப் பாத்துக் கட்டிக்கிட்டுப் போகப்போறானா?” என்று சொன்னாளாம். அதைக் கூட இருந்து பேசின பொண்ணுகளே வந்து மூட்டிவிட்டுப் போனபிறகு, வீடே அதிரும்படி புலம்பித் தீர்த்து விட்டாள் அம்மா. மும்தாஜ் வாயே திறக்கவில்லை. பரிதாக்காதான் சமாதானம் செய்தாள்.

ஏற்கனவே மும்தாஜின் அம்மாவுக்குத் தன் பெண்ணை இங்கே தெரியாத்தனமாகக் கட்டிக்குடுத்து விட்டதாகக் குறை இருந்தது. அவளிடம் யாரோ சொன்னார்களாம். ‘ஒம்பொண்ண அங்கெ குடுத்திருக்கியே? அவளுக்கும் அதுமாதிரி கிறுக்குப்புள்ளை பொறந்துராம. பரம்பரையா வருமாமுல்ல!’ என்று. அதை வேறு சொல்லிப் புலம்பினாளாம் மும்தாஜின் அம்மா. கூடவே இதையும் சொல்லி அழுது தீர்த்தாள் சைனு. “ஊருல எவளோ சொன்னாளாமுல்ல, எம்மகனுக்கும் இப்பிடி புள்ள பொறக்கும்னு. அல்லாவே, றப்பே, நீ அவளுகள கேட்டுக்குடு. எனக்குப் போட்ட நஸீப அவளுகளுக்குத் திருப்பிப்போடு. எம்பொண்ணு புள்ளைகளுக்கு நல்ல

வழிய காட்டு” என்று.

அவளுக்குள்ளும் சில புரிதல்கள் இருக்கத்தான் செய்தன. பரிதாவை ஊரில் யாரும் பெண் கேட்டு வராதது இந்தக் காரணத்தினால்தான். நேத்துப்பிள்ளை வஹிதாவுக்கு இந்தா கல்யாணம். எம்பொண்ணுக்கு இந்த நோன்புப் பிறையோட பதினெட்டு வயசாகுது. என்னத்தில குறைச்சலா இருக்கு? நகையில்லையா, பணமில்லையா, அழகில்லையா என்று புலம்பிக் கொண்டிருப்பாள். சொந்தத்திலேயும் மாப்பிள்ளை இல்லை. சுலைமான் சொல்வது போல வெளியூரில் பார்க்கலாம்தான், காரேறிச்செல்லத் தன்னால் முடியுமா? இந்தப் பிள்ளைகளை விட்டுவிட்டுப் போக வரத்தான் முடியுமா என்ன? அதனால் அந்தப் பேச்சே வேண்டாமென மகனிடம் சொல்லி விடுவாள். பார்க்கலாம் அவளுக்கு இனிமேயா ஒருத்தன் பொறக்கப் போறான் என்று சொல்லித் தன்னைத்தானே சமாதானம் செய்து கொள்வாள்.

சைனுக்கு என்றுமில்லாதபடிக்கு இன்றைக்குத் துக்கமாக இருந்தது. கண்ணிலிருந்து தன் பாட்டுக்குக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. சேலைத் தலைப்பையெடுத்துத் துடைத்துக் கொண்டாள். மதினா சாப்பிட்டுவிட்டுப் போயிருந்தாள். வெயில் உறைக்க ஆரம்பித்தது. எழுந்து உள்ளே வந்தாள். முழங்கால் வலித்தது. பரிதா, பரிதா என்று கூப்பிட்டாள். தலைவாரிக் கொண்டிருந்த பரிதா, என்னம்மா என்று அம்மாவின் அருகில் வந்து நின்றாள். பாவாடை தாவணி அவளது உயரத்தை அதிகமாகக் காட்டியது. இவளுக்கு அத்தாவைப்போல படர்ந்த வட்டமுகமும் ரோஸ் நிறமும். நிக்கா செய்து குடுக்க வேண்டிய கட்டம் இந்தப் பருவம். இப்பிடித் தள்ளிப் போகுதே என்று நினைத்துக் கொண்டு, “உங்க அக்காமாருக்கும் தலைவாரி பின்னிவிடு, எண்ணெய் நல்லா வய்யி, நான் சித்த நேரம் தலையைச் சாய்க்கிறேன்” என்றாள். “அதுகளுக்குச் சீவி சிக்கெடுக்கறதுக்குள்ள கையெல்லாம்

வலிக்குதும்மா, இப்பிடியும் அப்பிடியுமா தலையைப் போட்டு அசைக்கிறாளுக. பேன் வேற புடிச்சுக் கெடக்குது, இம்புட்டு முடி என்னத்துக்கு? பேசாம கிராப் வெட்டி விட்டா என்ன?" என்றாள் பரிதா யோசனை சொல்லும் விதத்தில். சைனுவுக்கு இதற்கொரு கண்ணீர் வழிந்தது. "எம்புட்டு முடி ரெண்டுபேருக்கும், சுருட்டையா நெளிநெளியா இடுப்புக்குக்கீழே கெடக்குதே, அத மனசாற வெட்டச் சொல்லுறியே, எப்பிடிடி வெட்ட?"

"ஏம்மா, இதுக்குப் போய் அழுதுக்கிட்டு. தலைக்கு வாரா வாரம் குளிக்கவிட்டு நிமிர்றதுக்குள்ள உனக்கு எம்புட்டு பாடு, மயக்கமே வந்திருதில்ல? அதைத் தொவட்டி, காயவைச்சு, ஒனக்கும் தான் வயசாகுதுல்ல?." அவள் சொல்வதில் தன் பேரிலுள்ள பிரியம் வெளிப்படுவதைப் புரிந்துகொண்டதால் மறுபேச்சின்றி அமைதியாக இருந்தாள். இதே விஷயத்தை வேறு யாரும் சொல்லியிருந்தால் சும்மா விட்டிருக்க மாட்டாள்.

"ஆமாமா! நோன்புப் பெருநாள் வரைக்கும் முடி இருக்கட்டும். மறுநாள் வெட்டி விட்டுரலாம்." மகளுக்குப் பதில் சொல்லிவிட்டுப் படுக்கவென உள்ளறைக்குள் போனாள். அறை நல்ல வெளிச்சமாக இருந்தது. சன்னல் திரையை இழுத்து விட்டு கட்டிலில் படுத்தாள். இன்றைக்கு மட்டும் ஏன் மனதில் துக்கம் அதிகமாக இருக்கிறது என்று யோசித்தாள். அது இன்றைக்கென்று உண்டானதில்லை. கடந்த ஒரு வாரமாகவே இப்படித்தான் இருந்துகொண்டிருக்கிறது. வஹிதாவுக்குத் திருமணம் என்று கேட்ட நாளிலிருந்தே மனதுக்குள் கவலையாக இருந்து கொண்டிருக்கிறது. பரிதாவை இன்னும் நிறைவேற்றி வைக்க முடியவில்லையே என்கிற ஆதங்கத்தில் உருவான கவலை. அவ மனசுதான் என்ன பாடுபடும் என்று கவலையாக இருந்தது. "நாத்தனார் மகன் சலாத்துக்குத்தான் பரிதாவைக் கொடுக்கணும்னு

நெனைச்சோம். அவனோட அம்மா ஜீனத் கட்ட மனசில்லாம ஷெரிபாவைக் கட்டிக்கிட்டுப் போனா. அவ ஒண்ணு நெனைக்க அல்லா ஒண்ண நெனைச்சுட்டானே, என்ன செய்ய?”

சலாம் துபாயில் ஆக்ஸிடெண்டில் இறந்து போனபோது ஜீனத் சைனைக் கட்டிப்புடிச்சு அழுத அழுகை இப்பொழுது நினைத்தாலும் உடல் நடுங்கியது சைனுவுக்கு! “நான் ஏமாந்துட்டேனே மச்சி, ஒம்பொண்ணக் கட்டுனா எம்புள்ளக்கி ஊனமா புள்ளை பொறந்துருமுண்னு நெனைச்சு ஒதுக்கி வச்சிட்டு எங்க அக்கா மகளக் கட்டி வச்சேனே! இப்ப அவ வாயும் வயிறுமா நிக்கிறாளே!” என்று கதறினாள் ஜீனத். சைனு தனக்குள்ளிருந்த வருத்தத்தை வெளியில் காட்டிக்கொள்ளவேயில்லை. ஊரார், “என்ன ஒம்மக இருக்க, சலாத்துக்கு வேற இடத்தில் பொண்ணு கட்டுறாகளாமுல்ல?” என்று துக்கம் விசாரித்தபொழுது கூட, “ஆமா, அதுக்கென்ன இப்பொ? அவுக தோதுக்கு ஏத்த மாதிரி ஜீனத்து பொண்ணு கட்டுறா, அதே மாதிரி ஏந்தோதுக்கு ஏத்த பையனா நான் பார்க்க வேண்டியதுதான? அதுலயும் ஷெரிபா யாரு, என் இன்னொரு நாத்தனார் மகதான? வேற எங்கேயுமா போறா?” என்று சொல்லிவிட்டாள். தன் மகளை ஜீனத் ஒதுக்கிவிட்டதாக வெளியில் தெரிவதே அவமானம்! பரிதாவுக்கு அசிங்கம்! தன் கணவர் லத்தீப் ராவுத்தரை நினைத்துக் கொண்டவளுக்குத் துக்கத்தில் தொண்டை வலித்தது. ‘அவர் உயிரோடு இருந்திருந்தால் இப்படியெல்லாம் நடந்திருக்குமா என்ன?’

சலாம் இறந்த துக்கம் அவளை நீண்ட நாள் எழும்ப விடவில்லை. என்ன இருந்தாலும் அவள் நாத்தனார் மகன். சிறுவயதிலிருந்தே மருமகனே என்றுதான் அவனைச் சொல்லி வந்திருக்கிறாள். நினைத்திருந்திருக்கிறாள். ஒருவேளை ஜீனத் பரிதாவைக் கட்டியிருந்தால் அவள் விதவையாகியிருப்பாள் என்கிற நினைவு

மட்டும் சிறிது நிம்மதியைத் தந்தது. அல்லா, இந்த மட்டிலுமாவது தன்னைக் காப்பாற்றியிருப்பதாக நினைத்துக் கொண்டாள். இல்லையென்றால் புதுச்சட்டியைப் பழைய சட்டியாக்கியிருப்பாள். புதுசுக்கே மூடி தேட இயலாமல் கிடக்கையில் பழையதைப் பற்றி நினைக்கத்தான் முடியுமா? அதுக்கு மூடி போடத்தான் முடியுமா? பாவம், ஷெரிபா, அழகும் இளமையும் இருந்து என்ன, கையில ஒரு புள்ளையக் குடுத்துட்டானே? இனி அவ எதிர்காலம் என்ன ஆகுமோ என்று நினைத்து மனம் குமுறியது. சலாத்தின் தம்பி ஆஸிக்கிற்கு ஷெரிபாவை மறுமணம் செய்து வைக்கலாம்தான். அவதான் கல்யாணமே வேணாம் என்கிறாளே! என்ன செய்ய என்றும் நினைத்துக்கொண்டாள்.

# 19

தொட்டிலில் கிடந்த குழந்தை சிணுங்கும் சத்தம் காதில் கேட்க எழுந்து அறைக்குள் போனாள் ஷெரிபா. தொட்டில் நனைத்திருந்தது. தொட்டிலை விலக்கிப் பார்த்தாள். இவள் முகத்தைப் பார்த்ததும் அழுகையை நிறுத்தி விட்டுச் சிரித்தாள் யாஸ்மின். "புடி என் செல்லத்தை" என்று சொல்லிக் கையில் தூக்கிக் கொண்டு வெளியில் வந்து ஹாலில் கிடந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். சவுரா கட்டிலில் படுத்தபடி ஷெரிபாவையும் யாஸ்மினையும் பார்த்துக் கொண்டிருந்தாள். "என் செல்லக் குட்டி நன்னிகிட்ட வாங்க" என்று கை நீட்டிக் கூப்பிட்டாள். குழந்தை தாயிடமிருந்து இறங்கி அவளிடம் ஓடிற்று. அவளுக்குச் சாப்பாடு கொடுக்க வேண்டும் என்ற நினைவுடன் எழுந்து அடுப்படிக்குப் போனாள் ஷெரிபா. ஸ்டவ்வைப் பற்ற வைத்து நன்றாகப் பிடித்து எரியும் வரை காத்திருந்து பிஸ்மில்லா சொல்லி பாலை அடுப்பில் வைத்துவிட்டு அடுப்படியில் கிடந்த பெஞ்சில் உட்கார்ந்து ஜன்னல் வழியே தெரிந்த கொல்லைப்புறத்து மாமரத்தைப் பார்க்கத் தொடங்கினாள்.

நிறையக் காய்கள் மரமெங்கும் காய்த்து கிடந்தன, பூவும் பிஞ்சுமாக! ஒவ்வொரு வருடமும் தொடர்ந்து காய்த்துக் கொண்டுதானிருக்கிறது இந்த மரம். அவளுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து! தான் மட்டும் ஒரே ஒரு முறை காய்த்ததோடு பட்டுப்போய் விட்டோம் என்று நினைத்துக் கொண்டாள். மனம் இப்போதெல்லாம் ரொம்பவுமே அலைபாய்ந்து கொண்டிருப்பதை அவளால் தடுக்கவோ, தவிர்க்கவோ முடியவில்லை. இன்னும் எத்தனை காலம் இப்படியே பட்டுப்போய் நின்று கொண்டிருக்கப் போகிறோம் என்பதை நினைக்கையில்

நீண்டபெருமூச்சு அவளிடமிருந்து வெளிப்பட்டது. சாகும்வரைதான் என்கிற உண்மை அவள் காதுகளுக்குள் ஒலிப்பது போன்ற பிரமை தோன்றியது, அது மிகுந்த சுய இரக்கத்தைத் தூண்ட, கண்களில் நீர் நிரம்பி வழியத் தொடங்கிற்று. இந்த இளமை இவ்வளவு பெரிய சித்ரவதையாக மாறுமென்று முன் எப்போதாவது நினைத்திருப்போமா என்று எண்ணிக் கொண்டாள். இதே இளமை எத்தனை களிப்பு மிக்கதாக, சந்தோஷமான உணர்வாகத் தனக்கு இருந்திருக்கிறது என்பதை நினைக்கும் பொழுது எத்தனை ஆச்சர்யமாக இருக்கிறது. இந்தச் சில வருட காலத்தில் எவ்வளவு பெரிய மாற்றத்தைக் காலம் விதித்திருக்கிறது? அவளுக்கு இப்போதெல்லாம் இரவு நேரங்களில் தூங்க முடிவதில்லை. அவள் எவ்வளவுதான் புறக்கணித்தாலும் உடலின் வேட்கை குறைவதில்லை. அது மிகப்பெரிய ஹிம்சையை உண்டு பண்ணிக்கொண்டிருந்தது.

இப்போது சலாம் மௌத்தாகி இரண்டு வருடங்கள் முடியப் போகிறது. அவன் அவளைத் திருமணம் செய்து ஒரு சில வருடங்கள் உயிரோடு இருந்தாலும் அவர்கள் சேர்ந்திருந்த நாட்களை எண்ணி விடலாம். நிக்காஹ் முடித்த கையோடு ஒருமாதம் இருந்து விட்டுப் போனான். பிறகு இரண்டு வருடம் கழித்து வந்து நாற்பது நாள் இருந்து விட்டுப்போனான். அவ்வளவுதான். அதோடு திரும்பவில்லை.

மூன்று வருட மணவாழ்க்கையில் மொத்தம் எழுபது நாள்தான் அவன் அவளோடு வாழ்ந்திருந்தான். முன்பு அவன் துபாயில் இருக்கும்போதெல்லாம் தூக்கம் வராத இரவுகளில் அவன் விரைவில் வந்து விடுவான் என்கிற நம்பிக்கை பெரிய ஆறுதலாக, மனதையும் உடலையும் கட்டுப்படுத்தி வைக்கும். இப்போதுதான் அப்படியில்லையே? இனி எந்த எதிர்பார்ப்பும் அவளுக்கென்று இல்லையே? எந்த நம்பிக்கை அவளை அமைதியுறச் செய்யப் போகிறது

என்று நினைக்கும்போது மெல்லிய விசும்பல் அவளுக்குள் தொடங்கி உள்ளேயே அடங்கிற்று. கண்ணாடியில் முகத்தைப் பார்க்கும் போதெல்லாம் இந்த இளமை தன்னை இன்னும் என்ன பாடுபடுத்தப் போகிறதோ என்று நினைப்பாள். அந்நினைவு அவளை வேதனைப்படுத்தவும் துன்புறுத்தவும் செய்தது.

சலாத்தினுடைய முதல் வருட பாத்திஹா முடிந்த பிறகு அவளை அம்மாவும் அத்தாவும் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தார்கள் மறுமணம் செய்து வைப்பதற்காக! அவள்தான் பிடிவாதமாக மறுத்துவிட்டாள். இனிமேல் தன் மகள் யாஸ்மின் மட்டுமே போதும். இன்னொரு வாழ்க்கை வேண்டாம் என்று! அத்தா எத்தனையோ ஹதீஸ் சொல்லிப் பார்த்தார்: கதிஜா நாயகியை நபிகள் நாயகம் மண முடிக்கவில்லையா? நம் சட்டத்தில் மட்டும் தான் அல்லா விதவைக்கு மறுமணம் தாராளமாகச் செய்து வையுங்கள் என்றிருக்கிறான் என்றெல்லாம்! ஷெரிபா சொன்னாள், “நீங்க எனக்கொரு கணவனைத்தானே தேடித்தருவீங்க? எம்புள்ளைக்கு ஒரு தகப்பனையில்லையே” என்று!

அதன்பிறகு வீட்டில் யாரும் அவளை வற்புறுத்தவில்லை. அவளுக்கும்கூட மறு விவாகத்தில் தடை எதுவும் இல்லைதான். ஆனால் அதன் மூலம் தன் குழந்தை பாதிக்கப்படக்கூடாது என்பதில் மட்டும் உறுதியோடு இருந்தாள். தன் கணவனாக வரப் போகிறவன் தன் பிள்ளையைப் பிரியமாக நடத்துவான் என்று நிச்சயம் இருக்கிறதா? தனக்கு அவன் மூலம் பிறக்கும் குழந்தைகளை நடத்துற மாதிரி யாஸ்மினையும் நடத்துவானா என்றெல்லாம் நிறைய கேள்விகள் அவளை இந்த முடிவுக்குக் கொண்டு வந்தன. இருந்தாலும் கஷ்டமாகத்தானிருந்தது இதிலிருந்து விடுபட. வருடத்தில் பாதி நாள் நோன்பும் நாளெல்லாம் தொழுகையும் ஓதுகையுமாக இருந்தாலும் அதையும் மீறி அவ்வுணர்வுகள் தலை தூக்கத்தான் செய்கின்றன.

*என்ன செய்ய?*

*திடுக்கிட்டு தன் நினைவுக்கு வந்தாள் அவள். ச்சே! நோன்பு நாளும் அதுவுமா எதுக்காக இந்தக் கெட்ட சிந்தனை. நோன்பே முறிஞ்சு போயிருமே என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். அடுப்பில் வைத்திருந்த பால் ஞாபகம் வர 'அய்யய்யோ!' என்றபடி திடுக்கிட்டு எழுந்தாள். பால் பொங்கி வழிந்து ஸ்டவ் அணைந்து கிடந்தது. அடடா! திரியெல்லாம் நனைஞ்சு இனி அடுப்பு புடிச்சுத் தொலைக்காதே என்று முனகியபடி ஸ்டவ்வைக் கழட்டித் துடைக்க ஆரம்பித்தாள்.*

*"பால் பொங்கி ஊத்திருச்சா? வீச்சம் வருதே." ஹாலிலிருந்தபடியே குரல் கொடுத்தாள் சவுரா.*

*"ஆமாம்மா," எரிச்சலோடு பதில் சொல்லியபடி அடுப்பைத் துடைத்து முடித்து, பாலை அகன்ற பாத்திரமொன்றில் ஊற்றி ஒரு கையில் எடுத்துக்கொண்டு, இன்னொரு கையால் ஷெல்பிலிருந்த பால் பாட்டிலை எடுத்துக் குழாய்த் தண்ணீரில் நன்றாகக் கழுவி உதறியபடி ஹாலுக்கு வந்தாள்.*

*"அதென்னது பொம்பளை? கையை உதர்ற தரித்திரம்." கண்டிக்கும் விதத்தில் வெடுக்கெனச் சொன்ன சவுரா அப்பொழுது தான் பாட்டிலைக் கவனித்தவளாக, "பாட்டிலா?" என்று சமா தானம் சொல்லும் வகையில் இழுத்தாள்.*

*"ஆமா," என ஒற்றை வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு, ஃபேனுக்கு நேராகத் தரையில் அமர்ந்து பாலைக் கீழே வைத்து ஆறவிட்டாள்.*

*"தொழுகுற சேலையெ தரையில போட்டு உக்கார எப்புடி மனசு வருது ஒனக்கு. வீடு முழுக்க ஒம்மக மூத்திரம் பெய்ஞ்சு கிடக்கு." சிடுசிடுத்த சவுரா, "பாலை அடுப்புல வைச்சா கவனமா இருக்கறது இல்லெ, நல்லாவந்தே" என முனங்கினாள்.*

“மூத்தரமா? சரியாப்போச்சு! நான்தான் ஒடனுக்குடனே தொடைச்சுடுறேன்ல, அப்புறம் என்னவாம்.” அம்மாவின் தொண தொணப்புக்குக் கடுப்பாகவே பதில் சொன்ன ஷெரிபாவுக்கு வருத் தமாகவும் இருந்தது. கவலை அவளை இப்படி தொண தொணக்க வைக்கிறது. இதில் ஆத்திரப்பட என்ன வந்தது என நிதானித்தவள் எழுந்து போய் படுக்கையில் கிடந்த யாஸ்மினைக் கையில் எடுத்துக் கொண்டு மறுபடியும் பழைய இடத்தில் வந்து அமர்ந்தாள். பால் ஆறிவிட்டதா எனப் பாத்திரத்தின் அடிப்பகுதியைத் தொட்டுப்பார்த்தவள், பாலின் மேற்புறத்தில் படர்ந்து விட்டிருந்த ஆடையை, வலது கை ஆட்காட்டிவிரலையும் பெருவிரலையும் விட்டு மெதுவாகக் கலைந்துவிடாமல் கொத்தாக எடுத்து பாத்திரத்தின் விளிம்பின்மீது படியவைத்தாள்.

ஷெரிபாவின் மடியில் கைசூப்பியபடி படுத்திருந்தக் குழந்தையைக் கவனித்த சவுரா, “சீக்கிரமா பாலை ஆத்திக் குடு, பிள்ளைக்கி பசிக்கிது இல்லெ” என்றபடியே படுக்கையிலிருந்து எழுந்துநின்று சேலையை அவிழ்த்து ஒரு உதறு உதறிக் கட்ட ஆரம்பித்தாள்.

பாட்டிலில் பாலை ஊற்றிக் குழந்தைக்குக் கொடுத்த ஷெரிபா தலையை உயர்த்தி அம்மாவின் உருவத்தை உற்றுக் கவனித்தாள். கனமான உடம்பென்பதனால் மூச்சு வாங்கிற்று சவுராவுக்கு. அத்தா வெளிநாட்டிலிருந்து கொண்டு வந்த சேலையை உடுத்தியிருந்தாள். மெலிசான துணியானதனால் அவளது தாட்டியான உடம்பு அப்படியே, ஒவ்வொரு பாகமும் கூட வெளித்தெரிந்தது. இவளுக்கு வெட்கமாக இருந்தது. ஷெரிபா பல தடவை சொல்லிப் பார்த்து விட்டாள்.

“ஏம்மா, ஹஜ்ஜுக்கெல்லாம் போய் வந்துட்டு இப்பிடி உடம்பு தெரியற மாதிரி சேலை உடுத்துற, நம்ப ஊர்ல அம்பர் சேலை விக்கிது

வாங்கிக் கட்டலாம் இல்லெ?" எவ்வளவு சொன்னாலும் கேட்கமாட்டாள்.

"நீ சும்மா இரு, இதுதான் எனக்கு ராகத்தா இருக்கு" என்று சொல்லி இவளது வாயை அடைத்துவிடுவாள். "வீட்டுக்குள்ளே தான இருக்கோம், வெளிய போனா துப்பட்டி போட்டுருவோம் பெறகென்ன?" மகளைச் சமாதானம் செய்யும் விதத்தில் சொல்வாள்.

சேலையை முன்கொசுவம் வைத்து இறுக்கிக் கட்டியவள், "ஆமா அன்னக்கி சொஹ்றா வீட்டுல என்ன நடந்துச்சு? நபிஸாவுக்கும் மும்தாஜிக்குமிடையில்" ஆர்வமாகக் கேட்டவளிடம், "ப்ச் . . .! என்னத்தையோ பேசுறாளுக, உங்களுக்கு யாரு சொன்னாங்க இந்த வம்பை?" ஷெரிபாவுக்கு எரிச்சல் மேலிட்டது. யார்தான் இதையெல்லாம் அம்மாவிடம் சொல்கிறார்களோ என மனதிற்குள்ளாகவே சலித்துக்கொண்டாள்.

"யாரு சொன்னா என்ன? அவளுக என்னத்தைப் பேசிக்கிட்டாளுகன்னு சொல்லு." இன்னும் ஆர்வமாகக் கேட்டாள் சவுரா. இனி சொல்லாமல் விட மாட்டாள் என்பது ஷெரிபாவுக்கு நிச்சயமாகத் தெரிய, "நோன்பு நாள்ல ஏம்மா இந்தப் புரணியெல்லாம் பேசிக்கிட்டு" என்று சலித்துக்கொண்டவள், "ஒண்ணுமில்லே மாரியாயி வேலைபாக்க வந்திருந்தா, அப்பொ ஏதோ பேச்சுல மும்தாஜ் சொன்னா ஆம்பளை பலபேர்கிட்ட படுக்கறது சரி, பொம்பளைக்கி எப்புடி ஒப்புதுன்னா. அவ நபிஸாவை ஜாடை பேசுனாப்போல இருந்துச்சு, நபிஸா மூஞ்சி செத்துப்போச்சு அவ்வளவுதான்." முகத்தில் ஒருவிதமான தர்மசங்கடத்தோடு சொல்லி முடித்த ஷெரிபா, குழந்தையைப் பார்க்கத் தலையைக் குனிந்து கொண்டாள்.

"ஓஹோ! இதுதானாக்கும் சேதி, அந்த மொட்டைப் புண்டைக்கி

ஏனாம் மூஞ்சி செத்துப்போச்சு? உள்ளதைத்தான அவ சொல்லிக்காட்டுறா, இல்லாததையில்லையே? கூதிய உத்துப் பாத்துக்கிட்டு இருப்பாளா” ஆத்திரமும் நக்கலும் கலந்து ஒலிக்கிற சவுராவின் குரல், ஷெரிபாவிற்குக் கலக்கத்தை உண்டுபண்ணுவதாகயிருந்தது.

இனி யாராரிடமெல்லாம் இதைப்பற்றி பேசப் போகிறாளோ, என்கிற பயமுண்டாக, தலையை நிமிர்ந்து கொள்ளாமலேயே அமர்ந்திருந்தாள்.

சவுராவுக்கு மகள் ஒரு வார்த்தையும் பேசாமல் அமைதியாக இருந்ததால் அவளுக்குத் தன் பேச்சு பிடிக்கவில்லை என்பது புரிந்தது என்றாலும் அதனைப் பொருட்படுத்தாதவளாக மறுபடியும் பேச்சை ஆரம்பித்தாள்.

“ஆமா, நபிஸா மாசமா இருக்காளோ?” தலை நிமிராமலேயே, “உம்? தெரியல” என்ற ஷெரிபாவிடம், “இல்லெ, நேத்துப் பாத்தேன். மாரு பெரிசா இருக்கிற மாதிரி இருந்துச்சு, அதுதான்” என்றாள் சவுரா.

“இருக்காதும்மா, நீ பாட்டுக்கு யார்கிட்டேயும் ஔறி வைக்காதே” வெடுக்கென்று சொல்லி நிறுத்திய ஷெரிபா கூடவே, “ஊர்ல யார் பிள்ளை உண்டாகினா நமக்கென்ன?” என்றும் சொல்லி அப்பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தாள்.

சவுரா மேற்கொண்டு பேச ஒன்றுமில்லாமல் அங்கிருந்து அகன்று ஷெல்பின் மீதிருந்த சீப்பை எடுத்து, தெருவை ஒட்டிய ஜன்னலுக்கருகில் நின்று தலைமுடியை அழுத்திச் சீவ ஆரம்பித்தாள்.

ஷெரிபாவுக்கு அம்மாவின் மீது மிகுந்த இரக்கம் உண்டாகிற்று. அதனை மாற்றவென மறுபடி குழந்தையின் முகத்தின் மீது பார்வையைத் திருப்பினாள்.

இடதுகாலை உதைத்தபடியே வலது கையினால் பாட்டிலைப் பற்றிப் பிடித்துப் பால் குடித்துக்கொண்டிருந்த யாஸ்மின் அப்படியே சலாமை உரித்து வைத்துப் பிறந்திருந்தாள். சவுரா சமயங்களில் புலம்புவாள், "பிள்ளையாவது வேத்து முகமா பொறக்கக் கூடாது? அப்புடியே அச்சு அசலா அப்பனை உரிச்சு வைச்சாப் பொறக்கணும்? எம்புள்ளைய சித்ரவதை செய்றதுக்குன்னு."

இப்பொழுதுதான் இப்படியெல்லாம் புலம்புவதை நிறுத்தியிருக்கிறாள். ஷெரிபாவின் முன்பாகத் தனது கவலையை வெளிக் காட்டுவதில்லை. இவள் இல்லாத சமயங்களில் தனக்குத்தானே எதையாவது சொல்லிப் புலம்புவாள். அத்தா இங்கேயிருந்தாலாவது அவரிடம் தனது கவலைகளைச் சொல்லித் தீர்த்துக்கொள்வாள். அவரும் இரண்டு வருடத்திற்கு ஒரு முறைதான் சிங்கப்பூரிலிருந்து வருவார். இரண்டே மாதத்தில் கடைக்கு ஆளில்லை என்று பட்டமாகப் பறந்து விடுவார், ஏதோ விருந்தாளி மாதிரி. அவருக்கும் இங்கேயிருந்து பாக்க என்ன சந்தோஷம் இருக்கு? பொண்ணுக நிலைமையை நினைச்சா அவரும் பாவம்தான். என்னமோ ஆறுதலுக்கு ரசாக் இருக்கானே என்று திருப்திப்பட்டுக் கொண்டவள், "என்னமோ அவன் வகைஞ்சது அவ்வளவுதான்" என முனகிக்கொண்டாள்.

ஷெரிபாவுக்கு நேராகயிருந்த வீட்டுமுகப்புக் கதவை யாரோ தள்ளித்திறந்தார்கள். தெருவெளிச்சம் தனக்கு நேராக விழுந்ததும் தலையை நிமிர்ந்து உள்ளே நுழையும் றைஹானாவைப் பார்த்து. "சட்னு கதவைச் சாத்து! தெருவுல யாரும் ஆம்பளைங்க போகப் போறாங்க" என்றாள். "நீ ஏன் தெருக்கதவுக்கு நேரா ஒக்கார்றே?" என்றபடி கதவைச் சாத்தித் தாழிட்டவளிடம் சவுரா சத்தம்போட ஆரம்பித்தாள்.

“நோன்பு வச்சுக்கிட்டு இந்நேரம் எங்கெ போய் ஊரைச் சுத்திட்டு வர்ற மாடாட்டம்! செத்த நேரம் விழுந்து கிடக்கமாட்டே?” வெடுக்கெனக் கடிந்துகொண்ட சவுராவின் கழுத்து நரம்புகள் ஆத்திரத்தில் புடைத்துக்கொண்டன.

‘ப்ச்!’ என அலுத்துக்கொண்ட றைஹானா, “எப்பொப்பாரு, சும்மா தொணதொணப்ப நீ, இங்கெனதாம்மா சைனு மம்மானி வீடுவரைக்கும் போயிருந்தேங்கறேன். பரிதா கூட தாயம் ஆடிட்டு இருந்தேன்” என்றவள் குழந்தையை நோக்கிக் கையை நீட்டி, “வா . . . பெரியம்மாகிட்டே” என்றாள்.

நீட்டிய கைகள் குச்சியாகத் தோல்சுருங்கித் தொளதொளத்துப் போய் இருந்தன. இன்றுதான் புதிதாகப் பார்ப்பது போல அவளையே கவனித்துப்பார்த்தாள் ஷெரிபா. கட்டை குட்டையாகக் கரணித்துப் போயிருந்தது அவள் உடல். வயிறு மட்டும் பானையைப் போல முட்டியாக இருந்தது. தலை உடம்பின் கட்டைக்கு ஒத்துவராமல் சிறியதாக இருந்தது. அங்கெங்கே முளைத்திருந்த செம்பட்டை முடியை ஒன்று சேர்த்துப் பின்னி எலிவாலாக ரிப்பன் கட்டித் தொங்கவிட்டிருந்தாள். குழிவிழுந்த கண்ணும் வாயும் மூக்கும் சின்னச் சின்னதாகச் செய்துவைத்ததைப் போல இருந்தன. ஷெரிபாவை விட நாலு வயது மூப்பு இவள். ரத்தச்சோகை மாதிரி சுண்டிப்போன உடலும் விகாரமான தோற்றமும். தினமும் பார்த்துக் கொண்டிருந்தாலும்கூட வேதனைப்படத்தான் செய்தாள். ‘தலை நஸீபு என்னத்தச் செய்ய’ என்று அலுத்துக் கொண்ட ஷெரிபா மறுபடி அக்காவை கடிந்து கொண்டாள். “ஒனக்குதான் தீட்டு வராததுனால நோன்பும் இடையில விடுபடாது. பின்ன எதுக்காக இப்பிடி நோன்பும் வச்சுக்கிட்டு ஊர் வேலையும் பாத்துட்டுச் சுத்திட்டு வாற, மயக்கம் கிறக்கம் இல்லெ?”

“அதெல்லாம் ஒண்ணுமில்லடி நீ வேற, இப்பப்ப யாரும் என்கிட்ட வேலெ சொல்லி எங்கேயும் போகச் சொல்லுறது இல்லெ. அம்மாவுக்குப் பயம். கிறக்கமா இருந்துச்சு. அதான் சைனு, பரிதா எல்லாம் சேர்ந்து தாயம் ஆடிட்டிருந்தோம். சிலோன் ரேடியோவுல பாட்டுக்குப் பாட்டு கேட்டுக்கிட்டே” என்று சொல்லி விட்டுத் தன் தாவணியை அவிழ்த்து ஒருமுறை உதறி விட்டுக் கொண்டாள். “அங்கெ போயி நீ ஏன் விளையாடுற? அந்தத் தெங்கணம் ரெண்டும் நிக்குமே பக்கத்துலயே வந்து. நாத்தம் தாங்கமுடியாதே?” என்று முகம் சுளித்தாள் சவுரா. “ப்ச் . . .! மெதுவா பேசும்மா. நீ ரொம்பத்தான் பேசுவ, பாவமில்லெ அதுக! அதுவுமில்லாம உங்கண்ணன் பொண்டாட்டி! காதுல விழுந்துச்சோ, நம்மள சந்தி சிரிக்க வச்சுருவா. அதுக ரெண்டையும் தெய்வமா இல்ல கொண்டாடுறா. நீ என்னமோ . . .?” என்றாள் ஷெரிபா. “ஆமா! அவ கெடக்கிறா எடுபட்டவ! நான் என்ன இல்லாததையா சொல்லுறேன், உள்ளதுதானே” என்ற அம்மாவை, “சரி, சரி! இந்தப் பேச்சை விடுங்க” அடக்கினாள் ஷெரிபா. முற்றத்தில் வெயில் விழத்தொடங்கியிருந்தது.

ரசாக் இன்னும் வீடுவந்து சேரவில்லை என்பது நினைவுக்கு வர அவனைத் தேடித் தெருவுக்குப் போனாள் சவுரா. ‘மூதேவிப்பய! எங்கெ போயி தொலைஞ்சிதோ.’

# 20

*பிர்தவ்ஸ், அடைவைத்திருந்த கோழியைக் கூடையைத் திறந்து வெளியில் எடுத்தாள். அது கெக் கெக் என்று அடித்தொண்டையில் சத்தமெழுப்பியபடி அவள் கைகளுக்குள் உட்கார்ந்திருந்தது. அதைத் தூக்கிக் கொண்டு வேகமாக ஓடி வாசல் கதவை திறந்து வெளியில் எறிந்தாள். கோழி பறந்து போய் எதிர்வீட்டு வாசற்படியில் விழுந்து தடுமாறியது.*

*வாசல் திண்ணையில் அமர்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்த சிவா திடுக்கிட்டு எழுந்து கோழியை விரட்ட முயன்றான். பிர்தவ்ஸ் கோழியை விரட்ட இங்கிருந்தே சூ . . . சூ . . . வென கத்திக் கொண்டிருந்தாள். அடைக்கோழி கூடையை விட்டு வெளியில் எடுத்த உடனேயே கழிந்து விடும் என்பதால்தான் அதைக் கையோடு கொண்டு போய் தெருவில் எறிந்தாள். “அந்தச் சனியனுக்கு நாலு நாளா ஒரே இடத்தில் இருட்டுக்குள் இருந்ததனால் கண்ணும் தெரியல, கடவும் தெரியல போல, எதிர்வீட்டு வாசலில் கழியப் போகுதே” என்று முணுமுணுத்தபடி பதற்றத்தில் இன்னும் வேகமாகக் கையாட்டி சூ . . . எனக் கத்திக் கொண்டிருந்தாள். சிவா அதனைத் தன் கையிலிருந்த பேப்பரால் ஒரு அடிகொடுத்து விரட்டி விட்டு நிமிர்ந்து அவளைப் பார்த்துச் சிரித்தான்.*

*இப்பொழுதுதான் அவளுக்குச் சுயநினைவு வந்தது. அவனுக்கு எதிராக, நன்றாக அவன் பார்க்கும் தூரத்தில் நின்று கொண்டிருக்கிறோம் என்பது புரிய, வெட்கமும் பயமும் துரத்த ஒரே ஓட்டமாக வீட்டுக்குள் ஓடி உள்ளே நுழைந்து கொண்டாள். மூச்சு வாங்கியது. நல்லவேளை அம்மா அடுப்படிக்குள் இருந்ததனால்*

தப்பித்தோம் என்று நினைத்துக் கொண்டாள். "ச்சே! ஏன் இப்படி" என்று தன்னைத்தானே கடிந்து கொண்டாலும் அவன் தன்னைப் பார்த்துச் சிரித்தது மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தது அவளுக்கு! தான் வாசற்கதவைத் திறந்து நின்றது தற்செயலானதா இல்லை, வேண்டுமென்றுதானா என்று அவளுக்குக் குழப்பமாக இருந்தது. நீண்ட நாட்களுக்குப் பிறகு மனதில் சந்தோஷம் நிரம்பி வழிந்தது.

அவன் எதிர் வீட்டுக்குக் குடிவந்த பிறகு பல சந்தர்ப்பத்தில் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தாலும், இன்றுதான் நேருக்கு நேர் மிகவும் நெருக்கத்தில் பார்த்திருக்கிறார்கள். அவனைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவன் பேரில் உண்டாகியிருந்த ஈர்ப்பு அவளுக்கு மேலும் கூடிக்கொண்டிருந்தது. அவனுக்கு மனைவியும் குழந்தையும் இருந்தாலும் கூட அவளால் அவன் மீதான ஆசையை விலக்கிக் கொள்ள முடியவில்லை. ஜெயா தினமும் குழந்தையை இவளிடம் கொடுத்துவிட்டு வேலைகளைக் கவனிப்பாள். இரண்டு குடும்பத்துக்கும் இடையில் நெருக்கம் உண்டாகியிருந்தது என்றால், அதற்குக் காரணம் பிர்தவ்ஸின் தனிமையும் குழந்தை விஜியும்தான். தனக்கு சிவாவின் மீது ஏற்பட்டிருக்கும் ஆசை எவ்வளவு முறையற்றது என்பது புரிந்தாலும் கூட, தனிமை உண்டாக்கும் நெருக்கடி அதனைப் பொருட்படுத்துவதாகவேயில்லை. ஏனோ அவனைப் பார்த்தாலே மனதில் படபடப்பு உண்டாயிற்று. அவன் என்ன நினைக்கிறான் என்று சரியாகத் தெரியவில்லை, என்றாலும் மீண்டும் மீண்டும் அவன் மீதே நினைவுகள் போய் விழுந்து கொண்டிருந்தன. அதிலிருந்து விடுபட எந்த ஒரு தேவையும் இருப்பதாக அவள் நினைக்கவில்லை. ஏன் விடுபட வேண்டும் என்றுதான் நினைத்துக் கொள்வாள்.

ஏனோ சிவாவைப் பார்க்கும் போதெல்லாம் தனக்கொரு துணை வேண்டுமென்கிற ஏக்கம் அதிகமாகிக் கொண்டிருந்தது. அவனுடைய

ஒவ்வொரு அசைவிலுமே அவளைக் கவர்வதற்கான ஒரு பொறி இருந்து கொண்டிருப்பதாக அவளுக்குத் தோன்றிற்று. அவளுக்குள் மூள ஆரம்பித்திருக்கும் தீயை இனி யாராலும் அணைக்க முடியாது என்கிற உண்மை அவளுக்குப் புரிந்தே இருந்தது. இருந்தாலும் அது எவ்வகையிலும் தனக்கு நன்மையானதாக இருக்கப்போவதில்லை என்பதும்கூட புரியத்தான் செய்தது. அவள் தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

ஆமினா சில நாட்களாகவே பலத்த யோசனையோடிருப்பதாக பிர்தவ்ஸ் நினைத்தாள். கரீம் மச்சான் யாரிடமோ தன்னைப் பற்றித் திட்டியதாக வந்து ஆமினாவிடம் சொல்லியிருந்தார்கள். அதிலிருந்தே அவள் பிர்தவ்ஸை மறுமணம் செய்து கொடுப்பதில் அவசரம் காட்டத்தொடங்கியிருந்தாள். சொந்த மச்சானே இப்பிடி அசிங்கமாப் பேசினால் ஊர் உலகம் எப்பிடியெல்லாம் பேசும் என்று நினைத்து வேதனைப்பட்டாள். பிர்தவ்ஸுக்கு இத்தா நாள் கணக்கு முடிந்ததிலிருந்தே எடுத்த தேடல்தான். இருந்தாலும் நல்ல இடம் அமைய வேண்டுமில்லையா? ஆமினா இப்போதெல்லாம் மகள் வீட்டுக்கே போவதில்லை. சொஹ்ராவும்கூட இங்கே அறுதியாக வருவதில்லை. பிர்தவ்ஸின் பேரிலுள்ள கோபம் காரணமாக வருவதில்லையா இல்லை, கணவனுக்காகவேனும் விலகியிருப்பதாகக் காட்டிக் கொண்டிருக்கிறாளா என்று தெரியவில்லை.

வரும் மாப்பிள்ளைகளில் பாதிப்பேர் நாற்பது வயதுக்கு மேல் ஆனவர்களாகவும் முதல் மனைவி இறந்ததனால் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளும் தேவையிருப்பவர்களாகவுமே இருந்தார்கள். பிர்தவ்ஸ் சிரிப்பாள். ஆயாவேலைக்கு வேண்டி கல்யாணம் கட்ட வர்றானுகளோ? ஆமினா திட்டுவாள். “பொத்துடி வாயை! இந்த ஊரு உலகத்துல ஒரு பொட்டச்சி கேட்டு தலாக் நடந்தது ஒனக்கு

மட்டும்தான். அப்பிடியிருக்கையில ஒன்னைய கட்டுக்கிறதுக்கு எவனுக்குடி தைரியம் வரும்? எவனாவது நல்ல மனுஷன், நல்ல குடும்பத்து சனம், கேட்டு வருவானா? பொண்ணு எம்புட்டு ஊக்கக்காரி, திமிர்பிடிச்சவளா இருந்தா புருஷன வேணாமுன்னுட்டு வந்துருப்பான்னு பயப்படமாட்டானுக. நீ அழகாருந்தா என்னா, வயசுருந்தா என்னா, பழைய சட்டிதான? அத வாங்க எவன் வரப்போறான்? ஆயா வேலைக்குத்தான் நீ லாயக்கு இனிமேல." அம்மாவின் பேச்சைக் கேட்டு உள்ளுக்குள் அப்படியே நொறுங்கிப் போய் விடுவாள் பிர்தவ்ஸ். தான் மிகப்பெரிய முட்டாள்தனத்தைச் செய்து விட்டோமோ என்று மறுபடி மறுபடியும் தனக்குள் கேட்டுக் கொள்வாள். தன் குடும்பத்திற்கு, தன் பரம்பரைக்கு அழிக்க முடியாத கேவலத்தை உண்டுபண்ணி விட்டோமோ என்கிற குற்ற உணர்வு அவளைச் சித்ரவதைசெய்து கொண்டிருந்தது.

ஆமினா இப்போதெல்லாம் யார் வீட்டுக்கும் அதிகமாகப் போவதில்லை. குறிப்பாக விசேஷங்களுக்குப் போவதேயில்லை. ரொம்பவும் அக்கறையாகப் பேசுவது போல பிர்தவ்ஸின் நிலையைக் குத்திக் காட்டுகிறார்கள் என்று! பிர்தவ்ஸுக்குத் தெரியாததல்ல, இந்தப் பெண்கள் எப்படியெல்லாம் பேசுவார்கள் என்பது. போனால் போகிறது, தலைவிதி என்று வாழ்ந்து தொலைத்திருக்கலாம் தான். ஆனால் அப்போதைக்கு இப்படித் தோன்றவேயில்லையே?

கண்டதையெல்லாம் நினைத்துக் குழப்பிக் கொண்டிருந்ததில் தலையை வலித்தது. ஏதாவது வேலை இருந்தால் பார்க்கலாம் என்று நினைத்து எழுந்து உட்கார்ந்தாள். காலத்தையும் நினைவையும் கொல்வதற்காகவேனும் சில வேலைகளைச் செய்யலாம் என்று நினைத்து முற்றத்திற்கு வந்து நின்றாள். வெயில் சுள்ளென்று அடித்தது. "இந்த நோன்பை முடிக்கிறதுக்குள்ள வெயில் வறுத்து எடுத்துரும்

போல இருக்கு” என்று சொல்லியபடி கோழி வெளியிலிருந்து வீட்டுக்குள் வருவதற்காகக் கதவைத் திறந்து வைத்தாள். அவளையறியாமலேயே கண்கள் எதிர் வீட்டை நோக்கிப் போய்விட்டு அங்கு யாருமில்லை என்கிற ஏமாற்றத்தில் தாழ்ந்து கொண்டன. அடுப்படிக்குள் போய் வெண்கல அண்டாவைத் திறந்து குருணை அரிசியை இரு கை நிறைய அள்ளிக்கொண்டு வந்தாள். கோழி வீட்டுக்குள் வந்து நின்றுகொண்டிருந்தது. “பாவம் நல்ல பசியோட இருக்கும்” என்று சொல்லியவாறு வாசலில் வெயிலில்லாத இடத்தில் அரிசியைக் கொண்டுபோய் கொட்டினாள். கோழி ஓடிவந்து கொத்தித் தின்னத் தொடங்கிற்று.

முன் அறை ஜன்னல் கதவை மிக நாசூக்காக யாரோ தட்டும் ஓசை கேட்டது. யாராக இருக்கும் என்ற யோசனையுடன் ஜன்னல் கதவைத் திறந்தாள். சிவாதான் நின்று கொண்டிருந்தான். அவள் சுவரோரமாக ஒதுங்கிக் கொண்டு “என்ன?” என்றாள். “நான் ஸ்கூலுக்குப் போறேன், ஜெயா இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்திருவா. வந்தால் இந்தச் சாவியை கொடுக்கணும்” என்று சொல்லி ஜன்னல் வழியே சாவியை நீட்டினான். பிர்தவ்ஸுக்கு மனம் படபடத்தது. உடம்பெல்லாம் நடுங்க தனது கையை அவனை நோக்கி நீட்டினாள். அவளது மெலிந்த விரல்களை மிகுந்த ஆதரவுடன் தன் கரங்களால் பற்றி அதில் சாவியை வைத்து அழுத்திவிட்டு “வர்றேன்” என்று மட்டும் சொல்லிவிட்டுத் தெருவில் இறங்கி நடந்தான். ஒருபுறம் அதிர்ச்சியும் மறுபுறம் சந்தோஷமும் பொங்க அவன் தொட்டு அழுத்திய தன் விரல்களை உற்றுநோக்கி தன் முகத்தில் அழுத்திக் கொண்டாள் பிர்தவ்ஸ். அவளெதிரில் சுவரில் மாட்டியிருந்த நீள் சதுரக் கண்ணாடியில் தெரிந்த தன் முகம் ரத்தம் போல் சிவந்து பிரகாசிப்பதையும் இத்தனை காலமாகச் சோர்ந்து கிடந்த அதன் அழகு இந்தச் சமயத்தில்

உயிர்பெற்று விட்டிருப்பதையும் பார்த்துத் தாள முடியாத பரவசம் உண்டாயிற்று. ஓடிப்போய் தனது அறைக்குள் புகுந்து தாளிட்டுக் கொண்டு, சற்று முன் நடந்ததை மறுபடியும் மறுபடியும் அசை போட ஆரம்பித்தாள்.

ஒரு ஆணினுடைய ஸ்பரிசம் இத்தனை பரவசமூட்டக் கூடியதா என்பது நம்ப முடியாத அதிர்ச்சியாக எஞ்சி, பாடாய்படுத்திக் கொண்டிருந்தது பிர்தவ்ஸை. தனது உடல் தரையில் பதியாதபடி அந்தரத்தில் மிதப்பதாக உணர்ந்தவளுக்கு இந்த வினாடியே அவன் தன்னருகே வந்துவிட்டால் எப்படியிருக்கும் என்கிற ஆவல் உண்டாகி, அதுவே அவனது அணைப்பிற்கான ஏக்கமாக மாறிற்று. அவனில்லாத அவ்விடத்தில் அவனது இருப்பை நினைவில் இருத்தி கற்பனைகளால் அவனது தழுவலைத் தன் உடலின் மீதாக நிகழ்த்திப் பார்த்தாள். வேட்கையினால் தளரும் தனது மென்மையான உடலை, அவனது உறுதியான தோள்களுக்குள்ளாக பிணைத்துக் கொள்வதான கற்பனை வெட்கத்தை உண்டு பண்ணுவதாகயிருக்க, சிலிர்த்திருக்கும் தனது உடலைக் கட்டுக்குள் கொண்டு வர மிகுந்த பிரயாசை கொள்ள வேண்டியிருந்தது.

இத்தனை காலமாகத் தானறிந்திராத, இனி வாய்க்கவே செய்யாதோவென ஏங்கிக் கொண்டிருந்த ஆணின் ஸ்பரிசம், குளிர்ந்திருந்த அவ்விரல்களில் தகித்துக் கொண்டிருந்த கருணையும் காதலும், பரிச்சயமேயில்லாத தொடு உணர்வினை உண்டுபண்ணக்கூடியதாய் சலனங்களேயற்று உறைந்திருந்த வாழ்வின்மீது விழுந்த அப்பிரியத்தின் வேர்கள், தனது உடலெங்கிலும் கிளைத்துப் படர்ந்து நீள்கிற அக்கணத்திலேயே காலம் நிலைத்து விடக்கூடாதாவென்கிற விருப்பம் அவளிடத்தில் எழுந்தது.

தனதுடல் இளகிக் கரைந்து ஆவியாகிக் கொண்டிருக்கிறதோ என்ற

உணர்வு மேலிட இருபுறமும் தலையை அசைத்துத் தன்னிலைக்கு வந்தவள், வெட்கத்தினால் முகத்தைத் தனது முழங்கால்களுக்குள்ளாகப் புதைத்துக் கொண்டாள். இப்பொழுதெல்லாம் தனது ஒவ்வொரு செயலுமே அவனைப்பற்றிய நினைவுகளுடனேயே இணைந்து கொண்டிருப்பதாக எண்ணினாள். உடுத்தும் உடையிலும் சரி, தலைவாரிக்கொள்வதிலும் சரி, கண்ணை எரிக்கிற புகைமூட்டத்தினூடே சமைக்கும்பொழுதுகூட என்னவோ எல்லாவற்றையும் அவனுக்காகவே செய்வதுபோலத்தான் நினைத்துக்கொள்கிறாள். அப்படி நினைத்துக் கொள்வதன்மூலமாகத் தான் அடைகிற உற்சாகமும் தனக்குள்ளே துளிர்க்கிற சந்தோஷமும் மிக நன்றாகவே புரிகிறது, பிடிக்கவும் செய்கிறது. அதை அவனும்கூட அறிந்துதான் வைத்திருக்கிறான் என்பது, இன்று இந்த நிமிடத்தில் உறுதியாகிவிட்டதில் உண்டாகிய ஆனந்தம், அவளை நிலைகொள்ள விடாதபடி செய்தது.

# 21

இன்று லைலத்துல் கத்ரு. ராபியாவுக்கு உற்சாகத்தில் கால் ஓரிடம் தரிக்கவே இல்லை. வீடுகள் எல்லாம் முதல் நாளே கழுவி முடித்திருந்தார்கள். தெருவில் நின்று பார்த்தால் எல்லா வீடுகளுமே சுண்ணாம்பு பூசிப் பளிச்சென்றிருந்தன. இவளுக்குச் சுண்ணாம்பு வாசனை ரொம்பப் பிடிக்கும். வாசனை என்பதை விட அது தரக்கூடிய நோன்பு நினைவுகள்தான் அந்த வாசனையை அவள் விரும்ப வைக்கும். ரம்ஜான் மாதத்தோடு மட்டுமே அந்த நெடியைச் சேர்த்துப் பார்த்துப் பழகிப் போயிருந்தது. இந்த வருடம் ஒரு வீடு பாக்கியில்லாமல் சுண்ணாம்பு மெழுகியிருந்தார்கள். சென்ற வருடமும் அதற்கு முதல் வருடமும் ஏதாவது ஒரு வீடு விடுபட்டுப்போயிருந்தது நினைவுக்கு வந்தது. நபிஸா மச்சி வீட்டில் இந்த வருடம் ரம்ஜான் இல்லை. அவரது அம்மா மௌத்தாகி மூன்று மாதம்தான் ஆகிறது. இருந்தாலும் சுண்ணாம்பு அடித்திருந்தார்கள். நபிஸா மச்சி புதுத்துணி எடுக்கவுமில்லை. அதிரசம் பலகாரம் எதுவும் சுடவுமில்லை. அஹமதுக்கும் ரபீக்குக்கும் மட்டும் தான் புது ட்ரெஸ் எடுத்திருக்கிறதாக அம்மாவிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். அவர்கள் வீட்டில் எண்ணெய்ச் சட்டி வைக்கவில்லை என்று றைமா பெரியம்மா தட்டுநிறைய அதிரசமும் முறுக்கும் கொடுத்து அனுப்பினாள். ராபியாதான் கொண்டுபோய் கொடுத்துவிட்டு வந்தாள்.

நபிஸா, “வேணாம் ராபியா, எடுத்துட்டுப்போ” என்று சொல்லச் சொல்ல பெரிய மனுஷியைப்போல, “இருக்கட்டும் மச்சி” என்று சொல்லி ஒரு பாத்திரத்தை எடுத்துத் தானே கொட்டி வைத்து விட்டு

வந்தாள். மறுநாள் நபிஸா மச்சி அம்மாவிடம் பெருமையாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

“என் மருமக ரொம்ப வெவரம்” என்று! இவளுக்குத் தரையில் கால் பதியவில்லை. நபிஸா தன்னை மருமகள் என்று சொல்ல வேண்டுமென்பதற்காகவே அவளது முன்பாக சாமர்த்தியமாக எதையாவது செய்வாள் ராபியா.

முன்பெல்லாம் ரம்ஜான் மாதத்தில் தெரு ரொம்பவே கோலாகலமாக இருக்கும். வீட்டுக்கு வீடு மதுரைக்குப்போய் சேலை எடுப்பதும் அதைக் கொண்டுவந்து எல்லோரிடமும் காட்டிப் பெருமையடிப்பதும் லைலத்துல் கத்ரு இரவில் கோடி கட்டித் தொழுவதும் தொழுது முடிந்த கையோடு ஏகமாய் நகை போட்டு அலங்கரித்துக் கொண்டு வீடு வீடாகப்போய் காட்டி சந்தோஷப்படுவதும் பிறகு கூட்டமாகச் சேர்ந்து பள்ளி வாசலுக்குப் போவதுமாக விடிய விடிய தெருக்களில் சந்தோஷம் கரைபுரண்டோடும். பிள்ளைகள் அனைவரும் புது உடை போட்டுக் கொண்டு கால் வலிக்க வலிக்கத் தெருவுக்கும் பள்ளிவாசலுக்குமாக இரவெல்லாம் அலைந்து திரிந்து கொண்டிருப்பார்கள்.

பள்ளியில் ஆண்கள் தொழுவதைப் பெண்கள் வெளியில் இருந்தே வேடிக்கை பார்த்தபடி தங்கள் உடைகளையும் நகைகளையும் மற்ற பெண்களிடம் காட்டி சந்தோஷப்பட்டுக் கொண்டிருப்பார்கள். அஹமது, ராபியாவிடமும் மதினாவிடமும் சவால் விடுவான், “எங்கே, எங்களை மாதிரி உள்ள வந்து தொழுங்கடி பாப்பம்” என்று.

“போடா” என்று சொல்லி அவனை அலட்சியப்படுத்திவிட்டு இவர்கள் வெளியிலிருந்தபடியே சீரியல் லைட்டினால் அலங்கரிக்கப்பட்ட பள்ளிவாசல் மினாராவை ஏக்கத்துடன் பார்த்தபடி விளையாடுவார்கள். பிறகு பள்ளியை ஒட்டியிருக்கிற

வடிவேல் செட்டியார் வீட்டிற்குப் போய் ஊஞ்சல் ஆடுவார்கள். வடிவேல் செட்டியாரிடம் தான் ராபியாவின் அத்தா கரீம் கடலை விற்பார் என்பதால் அவர்கள் ஒன்றும் சொல்லமாட்டார்கள். ராபியாவோடு எத்தனை பேர் சேர்ந்து வந்தாலும் கூட ஊஞ்சல் ஆட அனுமதிப்பார்கள். இவர்களது ட்ரெஸ்ஸைத் தொட்டுப் பார்த்து நகைகளைப் பார்த்து எங்கே வாங்கியது என்றெல்லாம் அன்பாகக் கேட்பார்கள்.

அவர்கள் வீட்டு பெரிய ஹாலின் நடுவில் அந்த ஊஞ்சல் கிடக்கும். ஒரு ஆள் படுக்கலாம் போல பெரிய ஊஞ்சல். இவர்கள் சேர்ந்தாற்போல நான்குபேர் அமர்ந்து கொள்ள இரண்டுபேர் வீசி வீசி ஆட்டுவார்கள். வேறு ஏதோ ஒரு பாஷையில் பேசும் வடிவேலு செட்டியாரின் மனைவி இவர்களுக்குப் பலகாரம் கொடுத்துத் தின்னச் சொல்லுவாள். “கரீம் பொண்ணா?” என்று அங்கிருக்கும் மற்ற பெண்கள் வேறு இவளிடம் பிரியமாகக் கேட்டு விட்டுப் போவார்கள். இவளுக்கு மனதிற்குள் பெருமையாக இருக்கும் தன் தந்தையை நினைத்து!

மறுநாள் சொஹ்ரா திட்டுவாள்: “ஏண்டி, கூட்டத்தைக் கூட்டிப்போயி அவுக வீட்டுல அட்டகாசம் பண்ண? அவுகளையும் ராத்திரி ஒரு மணி வரை தூங்கவிடாம வருஷம் தவறாமத் தொல்லை குடுக்கிறியே நல்லாவா இருக்கு?”

“அவங்க போகச் சொல்லவே இல்லைம்மா” என்பாள் இவள். “ஆமா! சொல்வாங்களாக்கும் மூஞ்சியப்பாரு மக்கு, ஒங்க அத்தாவுக்காக ஒன்னயை ஆட விடுறாங்க, அப்புறம் எப்புடி போகச்சொல்லுவாங்களாம்” என்பாள். அது குறித்த சந்தோஷம் அம்மாவின் குரலில் தெறிக்கும்.

ராபியா சொல்வாள், “ஏம்மா நம்ப வீட்டுல ஒரு ஊஞ்சல் போட்டா

என்ன? நம்ம ஹால்தான் வடிவேல் செட்டியார் வீடு மாதிரியே பெரிசுதானே?” என்று. “அவசியம், அவசியம்! போட்டுருவோம்” இரண்டு முறை அழுத்திச் சொல்கிற சொஹ்ராவின் குரலில் தெரியும் கிண்டல் ராபியாவை அந்த இடத்தைச் சொல்லாமல் கொள்ளாமல் காலி செய்யவைக்கும்.

பெருநாளைக்கும் இப்படித்தான். அன்றைக்கு ஆண்கள் பள்ளிவாசலில் தொழுக மாட்டார்கள். பள்ளியைவிட்டு வெளியே, ஊரைவிட்டு சற்று தொலைவிலிருக்கும் குத்பாபள்ளியில் பந்தல் போட்டு அங்கே போய் தொழுவார்கள். அன்று, பெண்களும் குழந்தைகளும் பட்டுப்புடவையும் நகையும் அணிந்து அலங்கரித்துக் கொண்டு பள்ளிவாசலுக்கும் உறவுக்காரர்கள் வீடுகளுக்கும் போய்விட்டு ஆண்கள் திரும்புவதற்குள் வீட்டுக்குத் திரும்பி விடுவார்கள்.

கடந்த இரண்டு வருடங்களாக முன்பிருந்த பழைய உற்சாகமும் கொண்டாட்டமும் இப்பொழுது இல்லை. சென்ற வருடம் மதினாவின் அத்தா சிங்கப்பூரிலேயே மௌத்தாகி விட்டதில் அவர்கள் வீட்டில் நோன்பில்லை. தெருப்பெண்கள் அலங்கரித்துக் கொண்டு வெளியில்போகச் சங்கடப்பட்டுக் கொண்டு மதினா வீட்டிலுள்ளவர்களின் கண்களில் படாமல் பதுங்கிப் பதுங்கிப் போய்விட்டு வந்தார்கள். அன்று மதினாவின் வீடு காலையிலேயே தாளிடப்பட்டு இருந்தது. தெருவின் சந்தோஷம் உள்ளே வரவேண்டாமென்றோ, இல்லை அவர்களின் துக்கம் வெளியில் யாரையும் சங்கடப்படுத்த வேண்டாமென்றோ தெரியவில்லை. அன்றைக்கு ராபியாவுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது தன் புது ட்ரெஸ்ஸை மதினா பாரக்கவில்லை என்று.

அதோடு அன்று இவள் உமா, அஹமது, ரபீக், ரசாக் இவர்களோடு

சேர்ந்து மேட்னிஷோ பார்க்கப்போனாள். மதினா வராதது பெரிய வருத்தமாக இருந்தது. அம்மாவும், றைமா பெரியம்மாவும் சைனுவைத் தங்களுக்குள் திட்டிக் கொண்டிருந்தார்கள். “பெரிய மனுஷங்க புதுசு போடாட்டி பரவால்லெ! சின்னப்பிள்ளை மதினா, அவளுக்குப் போட்டு விடுறதுக்கென்ன? சரியான வங்குரங்கு.”

ஒரு வருஷம் ஷெரிபா அக்காவின் கணவன் இறந்து போய்விட்டார். இந்த வருடம் நபிஸா மச்சியின் அம்மா. அம்மா ஒருதரம் றைமா பெரியம்மாவிடமும் சவுராவிடமும் வருத்தப்பட்டாள்.

“என்னக்கா இப்பிடி, வருஷா வருஷம் நோன்புப்பெருநாள் ஒரு சந்தோஷமில்லாம ஆகிக்கிட்டிருக்கு, தொடர்ந்து மூணுவருஷமா நிம்மதியேயில்லாதபடிக்கு யார் கண்ணோ பட்டது மாதிரி.”

றைமா பெரியம்மா சிரித்தாள். “மௌத்து யாருக்கு எப்பவரணும்னு இருக்கோ அப்பவருது. இதுல கண்ணு பட என்ன இருக்கு?”

“அப்பிடிச் சொல்லாதே, கண்ணுதான் பட்டுப்போச்சு. எல்லாம் அந்தக் குடியானச் சனங்க கண்ணுதான் பட்டுப்போச்சு. பெருநாளன்னிக்குக் காலையில ஒத்தக் கோழி கூப்பிடயில கூட்டம், கூட்டமா வந்து ஒரு தெருவிடாம ஜகாத்து கேட்டுத் திரிவாளுக! அவளுக நம்ப பொண்டுக உடுத்தியிருக்கிற சேலை நகையைப் பாத்து அழகைப் பாத்து விட்ட மூச்சுதான் நம்பள உலர்த்தி உக்கார வைச்சிடுச்சு. காபிருக்குத் தர்மம் குடுத்தா தர்மத்துல சேராது. அப்புறம் எதுக்காகக் குடுக்கணும்? குடுக்கறதனாலதான வர்றாளுக. குடுக்காட்டி வருவாளுகளா? நாட்டாமைகிட்ட சொல்லி மொதல்ல இத நிறுத்தச் சொல்லணும்.” மூச்சேவிடாமல் ஆத்திரத்துடன் சொல்லி முடித்தாள் சவுரா. இவ்வளவுதூரம் ஆத்திரப்பட இதில் என்ன இருக்கிறது என்பது மாதிரி அவளையே உற்றுக் கவனித்த சொஹ்ரா, “பாவம் கேட்டு வருதுக, எப்புடி இல்லென்னு சொல்ல முடியும், நம்பிதான வருதுக”

என்றாள்.

“அதுக்காக இப்புடியா? பக்ரீத் அன்னைக்கும் இதே கதைதான, தெருவுல நாம நடக்க முடியுதா? இந்தச் சனங்க நம்ம மேல ஒரசி ஒரசிக்கிட்டுல்ல கறி வாங்கத் திரியுதுக. இப்ப இந்த நிலையில வந்து நிக்கிது.” கொஞ்சம்கூட விட்டுக்கொடுக்காமல் பேசிய சவுராவிடம் இம்முறை றைமாவிற்கு அடக்கமாட்டாத கோபம் உண்டாயிற்று என்றாலும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல், “ஆமாமா! அந்தச் சனத்துக்கு நாம போடுற பத்து பைசாவிலயோ, ஒருதுண்டு கறியிலயோ வாயும் வயிறும் ரொம்பப்போவுதாக்கும், அதுகிடையாது. ஏதோ நம்பகிட்ட பண்ணை வேலை பாக்கிற உரிமையிலதான் நம்பளத் தேடி வருதுக. அவுக இல்லேன்னா நம்ம தோட்டந்தொறவுல யாரு வேலை பாப்பாங்க?” என்று கடுப்புடன் சொல்லிவிட்டு அங்கிருக்கப் பிடிக்காத மாதிரி எழுந்து அடுப்படியைப் பார்க்கப் போய்விட்டாள். கோபத்தில் அவளது முகம் சிவந்து போயிற்று.

திடீரெனப் பேச்சுக் கலைந்து போய் வேறு வழியில்லாது சவுராவும் எழுந்து அங்கிருந்து போய்விட்ட பிறகு றைமா பெரியம்மாவிடம் அம்மா கேட்டாள்.

“ஏங்க்கா, அப்புடி மூஞ்சியில அடிச்சமாதிரி சொன்னிங்க?”

“அப்புறம் என்னவாம்? இந்தப் பொம்பள செஞ்ச பாவம் ஷெரிபா இந்தக் கதியில இருக்கிறா. றைஹானா எதுவுமில்லாம இருக்கா, இவகிட்ட காசு இருந்து என்ன, பணம் இருந்து என்ன? ஈனப்பொம்பள.” றைமா பெரியம்மா நன்றாக ஆத்திரம் தீரும்வரை திட்ட அம்மாவும் அதனை ஆமோதித்துத் திட்டித்தீர்த்தாள். ராபியாவுக்கும் கூட சவுரக்காவைத் திட்ட வேண்டும் போல இருந்தது.

ஏதோ யோசித்தபடி ராபியா தெருத்திண்ணையில் அமர்ந்திருந்தாள். சஹர் மொஸாபிர் தமுக்கடித்தபடி வந்து கொண்டிருந்தார். தூரத்தில்

அவரது சத்தம் கேட்டதுமே இவளுக்குள் உற்சாகம் பற்றிக் கொண்டது. வேகமாக ஓடி வீட்டிற்குள்ளாக வந்தவள், “அம்மா, சஹர் மொஸாபர் வந்திருக்காரு. அரிசி குடு” என்றாள். “எதுக்காக இப்புடி மூச்சுவாங்க ஓடிவர்றே? அவரு என்னமோ வாங்காமப் போகப்போறது மாதிரி,” என்று செல்லமாகக் கடிந்து கொண்டபடி அம்மா ஸ்டோர் ரூமிற்குள் போனாள்.

பெரிய சில்வர் தாம்பாளத்தில் ஒரு பக்கம் ஒருபடி அரிசியும் அதன் மேலே பத்து ரூபாயும் இன்னொரு பக்கமாக முறுக்கும் அதிரசமும் வைத்துப் பரப்பிக் கொண்டு வந்த அம்மாவிடமிருந்து வேகமாகத் தாம்பாளத்தைப் பறித்தாள் ராபியா. “அடியே, அடியே! கொட்டிரும்டி” என்று பதறியவளிடம், “இல்லெம்மா, நான் பத்திரமா குடுத்திருவேன்” என்று சமாதானம் சொல்லியபடி தூக்கிக் கொண்டு தெருவுக்குப் போனாள். பச்சைநிற ஜிப்பாவும் வெள்ளைக் கைலியும் உடுத்தி தொப்பையான வயிறைத் தள்ளியபடி தெரு வாசலில் நின்று தமுக்கடித்துக் கொண்டிருந்தவர், இவள் வந்ததும் அடிப்பதை நிறுத்திவிட்டு இவளிடமிருந்து தாம்பாளத்தை ஒரு கையினால் வாங்கித் திண்ணையின் மீது வைத்துவிட்டு இவளைப் பார்த்துச் சிரித்தபடியே முதலில் பணத்தை எடுத்துச் சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டார். பிறகு தட்டிலிருந்த ஒவ்வொன்றையும் தனித்தனியே பிரித்து தனது தோள்களில் மாட்டியிருந்த துணிப்பைகளில் போட்டுக் கொண்டிருந்தபோது இவள், அவரது இடதுகையில் வைத்திருந்த தமுக்கையே ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். அதை லேசாகவாவது தொட்டுப்பார்க்க வேண்டும்போல ஆசையாக இருந்தது. அவளது விருப்பத்தைப் புரிந்து கொண்டவர்போல அவளை நோக்கி அதனைநீட்டி, “இந்தா ரெண்டு தட்டு தட்டிப்பாரு, பரவால்லெ” என்றார். அவளுக்கு வெட்கமாகப்

போய்விட்டது. வேண்டாம் என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் ஓடிவிட்டாள்.

வீட்டில் காலையிலேயே எல்லோரும் குளித்துவிட்டுத் தலை முடியைக் காய்வதற்காக விரித்துப் போட்டபடி வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். அன்று வெள்ளிக்கிழமை வேறு. காலை பத்து மணிக்கு தஸ்பீஹ் தொழுக பெண்கள் எல்லோரும் ஒன்று சேர்வார்கள். அதற்கு முன்பாகக் கறி வாங்கிக் குழம்பு வைத்து வேலை முடிக்க வேண்டும். லைலத்துல் கதிர் இறங்கும் நாளென்பதால் எல்லா வீடுகளிலும் அப்படித்தான். தெருவில் எங்கு திரும்பினாலும் சுற்றிச்சுற்றிக் கறி வாசனை மிதந்து கொண்டிருக்கும். மதியம் பாத்திஹா ஓத வேண்டும். அஸரத் வந்து வீடுவீடாக ஓதிவிட்டுப் போவார்.

அதிகாலையிலேயே ராபியாவும் மதினாவும் யாஸின் அஸரத் வீட்டில்போய் அவரை பாத்திஹா ஓத வரச்சொல்லி அழைத்துவிட்டு வந்திருந்தார்கள். மதியம் சமையல் முடித்த கையோடு ஹாலில் பாய்விரித்து ஒரு பாத்திரம் நிறைய சோறு, இன்னொன்றில் நிறைய கறிக்குழம்பு, தட்டு நிறைய அதிரசம் எடுத்துவைத்து ஊதுபத்தி பற்றவைத்து அவருக்காக அம்மாவும் பெரியம்மாவும் காத்திருப்பார்கள். அவர் வந்து ஓதிவிட்டுப் போனபிறகு அந்தச் சோற்றையும் குழம்பையும் கொண்டுபோய் அவரது வீட்டில் கொடுத்துவிட்டு வருவாள் ராபியா. அவர் வீட்டில் ஏகப்பட்ட சோறும் குழம்பும் சேர்ந்து கிடக்கும். பெரிய சில்வர் அண்டாவில் சோற்றையும் ஒரு பெரிய அலுமினிய வட்டாவில் குழம்பையும் ஊற்றிவைத்து பிறகு உறவினர் வீடுகளுக்கு கொடுத்து அனுப்பிக் கொண்டிருப்பார்கள். எஞ்சிய சோற்றை மறுநாளைக்கு மொட்டை மாடியில் வடகமாகப் பிழிந்து விடுவார்கள்.

ராபியா சாயங்காலத்திற்காக வீட்டுத்திண்ணையின் மீது காத்திருந்தாள். அம்மா இன்று மதியம் மூன்று மணிக்கே நோன்புக் கஞ்சி கார்டையும் தூக்கையும் கடைப்பையன் ஒருவனிடம் கொடுத்தனுப்பி நோன்புக் கஞ்சியை வாங்கிவர அனுப்பிவிட்டாள். “நான் போறேனேம்மா” என்ற இவளிடம், “வேணாம், நீ கொஞ்ச நேரம் தூங்கு. நைட்டுக்கெல்லாம் முழிச்சிருக்கப்போறயில்ல?” என்று சொல்லி இவளைப் படுக்கச்சொன்னாள். இவளும் எவ்வளவோ நேரம் படுத்துத்தான் பார்த்தாள். தூக்கம் வந்தால்தானே? இருப்பே கொள்ளாமல் புரண்டு புரண்டு படுத்து நேரத்தை ஓட்டிக்கொண்டிருந்தவளை வஹிதாக்கா, “இந்தாம்மா, நீ தூங்குனது போதும். எழுந்திரி” என்று கிண்டல்செய்து விரட்டி விட்டுவிட்டாள்.

“அக்காவுக்கென்ன, அவள் ராத்திரிக்குக்கூட வீட்டை விட்டு வெளியே வரமாட்டா. என்னை மாதிரி ஜாலியா தெருவைச் சுத்த முடியாது.” மனதிற்குள்ளாக பெருமையாக உணர்ந்தவள் நொடிக்கொருதரம் அண்ணாந்து மணியைப் பார்த்துக் கொண்டிருந்தாள். “பாத்துடி! கழுத்து சுளுக்கிக்கிறப் போவுது.” உள்ளிருந்தபடியே அவளைக் கிண்டல் செய்தாள் வஹிதா.

தெருவில் வளையல்காரனும் பூக்காரனும் அலைமோதிக் கொண்டிருந்தார்கள். அம்மா ஏற்கனவே நிறைய பூ வாங்கியிருந்தாள். காலையிலேயே ஒரு வளையல்காரனிடம் இரண்டு கை நிறைய கண்ணாடி வளையல் வாங்கிப் போட்டாயிற்று. ராபியா தன் வலது கையை உயர்த்தி சிவப்புநிற வளையல்களை மூக்கின் அருகாக வைத்து முகர்ந்து பார்த்தாள். மணமாக இருந்தது. காலையில் மதினாவும் கூட இதே கலர் இதே டிசைனில்தான் வளையல் போட்டுக் கொண்டாள். இவர்களைப் பார்த்து பரிதா சிரித்தாள். “வேற வழியில்ல, ஒரே புருஷனப் பாத்துர வேண்டியதுதான்.”

காலில் புதுக்கொலுசும் கழுத்தில் தங்கச் சங்கிலியும் மனதை ரொம்பவே சந்தோஷம் கொள்ளச் செய்தன. அடிக்கடி யாருக்கும் தெரியாமல் அறைக்குள்ளிருந்த ஆளுயரக் கண்ணாடி முன்பாக நின்று தன்னைப் பார்த்துக் கொண்டாள்.

இவளது பரபரப்பைக் கவனித்தபடியிருந்த வஹிதா இவளது அருகாக வந்து தலையில் வலிக்காதபடிக்கு மெலிதாகக் குட்டினாள். "வாடி, தலைசீவி விடறேன். ட்ரெஸ்ஸும் போட்டுக்கோ, அதான் அஸர் நேரம் ஆயிடுச்சு இல்லெ?" என்று சொல்லி இவளது கையைப் பிடித்திழுத்து சோபாவில் உட்காரவைத்துத் தலை சீவிவிட ஆரம்பித்த வஹிதாக்கா வாய்க்குள்ளாக எதையோ முணுமுணுப்பது போலிருக்க அம்மாவைப்போல தஸ்பீஹ் ஓதுகிறளோ என்ற சந்தேகத்துடன் இன்னும் கவனமாகக் காதுகொடுத்துக் கவனித்துக் கேட்ட ராபியாவுக்கு அவள் சினிமாப் பாட்டு பாடிக்கொண்டிருப்பது புரிந்தது. அவள் எப்பொழுதுமே அப்படித்தான்.

ஏதாவது சினிமாப் பாட்டைப் பாடிக்கொண்டேதான் வேலை பார்ப்பாள். பொழுதிற்கும் கூட ரேடியோவில் பாட்டுக் கேட்பாள். சில சமயங்களில் அம்மா சொல்வாள்,

"வஹிதா, உன்னைப் பாத்தா ஓதுன பொண்ணாவே தெரியலை எனக்கு" என்று.

"ஏன், பாட்டுக் கேட்டாக்க என்னவாம்? ஓதியிருந்தா கேக்கக் கூடாதாக்கும்" என்பாள் அக்கா.

இருந்தாலும் ராபியாவுக்குச் சந்தேகமாக இருந்தது, நோன்பு முறிந்துவிடாதா என்று. அதனால் அக்காவிடம் வியப்போடு கேட்டாள்: "அக்கா நீ சினிமாப்பாட்டு படிக்கிற, நோன்பு முறியாதா?" "சேச்சே! அதெல்லாம் ஒண்ணும் தப்பு இல்லை. ஒலுவோட இருந்தாத்தான் சினிமாப்பாட்டு கேட்டாலும் படிச்சாலும் ஒலுவு

முறிஞ்சிடும்” என்றுசொல்லிவிட்டுத் தொடர்ந்து பாட்டுப்பாடிய படியே தலைவாரிவிட்டாள்.

அக்காவின் குரல் கேட்பதற்கு மிக நன்றாக இருந்தது. அவள் ரொம்பவே சந்தோஷத்துடன் இருப்பதுபோல இருந்தது. “அக்கா அழகுக்கு சினிமாவுல நடிச்சு பாட்டுப்படிச்சான்னா எப்படியிருக்கும்?” லட்சுமி, ஸ்ரீதேவி மாதிரி என்கிற கற்பனை தோன்ற அதை நினைத்துத் தனக்குள்ளேயே மகிழ்ந்துகொண்டாள். தலைமுடியிலிருந்து ஷாம்பு வாசனை வர முடியை வலது கையில் அள்ளி முகர்ந்து பார்த்தாள். லைலத்துல் கதிர் அன்றும் ரம்ஜான் பெருநாளைக்கும் மட்டும்தான் ஷாம்பு. மற்ற நாளெல்லாம் சீயக்காய்தான் போட்டு விடுவாள் அம்மா. இவள் ஆசைப்பட்டால்கூட அனுமதிக்க மாட்டாள். “மண்டு, இவ்வளவு நீளமா, அடர்த்தியா இருக்கிற முடி ஷாம்பு போட்டா கொட்டிப்போயிரும், சீக்கிரத்துல நரைச்சும் போயிடும்” என்பாள்.

“அக்கா, ரெட்டை சடை போட்டு விடு” என்றாள் ராபியா. “சரி” என்று சொல்லி விட்டு அவள் விருப்பப்படியே பின்னி விட்டு, தலை நிறைய பூவைத்து விட்ட வஹிதா, “போ, போய் முகம் கழுவிக்கிட்டு வா, வந்து பவுடர் மையெல்லாம் போட்டு விடறேன். அதுக்கு முன்னால ட்ரெஸ்ஸ எடுத்துப் போட்டுக்கோ” என்று விரட்டி விட்டாள்.

நேற்றே அவளது ட்ரெஸ்ஸை எடுத்து பீரோவில் மேலாகத் தயாராக வைத்திருந்தாள் சொஹ்ரா. ஓடிப்போய் பீரோவைத் திறந்து ட்ரெஸ்ஸை எடுத்தவள், பாவாடையையும் சட்டையையும் எடுத்து முகத்தில் வைத்து அழுத்தி முகர்ந்தாள். புதுத்துணியின் மணம் அவளுக்கு ரொம்பவே பிடிக்கும். மறுபடி முகர்ந்து பார்த்து விட்டு உள்பாவாடையோடு அம்மாவிடம் ஓடி, “அம்மா நான்

பாவாடையைக் கட்டட்டுமா” என்று கேட்டாள். “சரி, சரி! கட்டு” என்று அனுமதி கொடுத்தவள், “பாவாடையை என்கிட்ட குடு. நானே கட்டி விடறேன்” என்று சொல்லி அவளிடமிருந்து வாங்கித் தன்கையில் வைத்தவாறு ஏதோ வாயில் ஓதிவிட்டு, “உம்! நீயும் பிஸ்மில்லா சொல்லு” என்று சொல்லியபடி அவள் தலைக்குமேல் போட்டுப் பாவாடையை இடுப்பில் இறக்கிக் கயிறை இறுக்கிக் கட்டியவாறு, “இந்தச் சட்டையை உள்ள போய் நீயா போட்டுக்க” என்று சொல்லி அவள் கையில் கொடுத்து விட்டு வேலையைக் கவனிக்கத் தொடங்கினாள்.

அம்மா தாவணி போடச்சொல்லி விடுவாளோ என்கிற பயத்துடனிருந்த ராபியாவுக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை. வேலை பார்க்கிற பரபரப்பில் மறந்து போயிருப்பாள் என்று நினைத்தபடி ஓடிப்போய் அறைக்கதவைத் தாளிட்டு, பழைய ஜாக்கெட்டைக் கழற்றிவிட்டுப் புதுசை அணிய ஆரம்பித்தவளுக்குக் குனிந்து தன் மார்பகங்களைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. அவை தாவணி போட்டு மறைக்கக் கூடிய அளவுக்குப் பெரிதாகி விட்டிருக்கிறதா என்று தெரிய வேண்டும் அவளுக்கு! ஆனால் வெட்கமாக இருந்தது. தன் கண்களாலேயே தன் உடலைப் பார்த்துக்கொள்ள இயலாதபடிக்குக் கூச்சமும் அருவெறுப்புணர்வும் அவளுக்குள் மண்டிக்கிடந்தது. குளிக்கும்பொழுது கூட அவளால் தன் உடலை முழுவதுமாகப் பார்த்துக் கொள்ள முடிந்ததில்லை. துணியில்லாமல் குளித்தால் நரகத்திற்குப் போக வேண்டியதுதான் என்று அம்மா சொல்லியிருக்கிறாள். அதோடு தன் உடலின் மர்ம உறுப்புகளையோ பிறர் உடலின் மர்ம உறுப்புகளையோ பார்த்தால் முகத்தில் கறுப்பு விழுந்து விடுமென்றும் சொல்லியிருக்கிறாள். அப்புறம் எப்படி அவளால் தன் உடலை உற்றுப் பார்க்க முடியும்?

அவள் தன் பிளவுஸுக்கு மேல் மேடிட்டுத் தெரியும் மார்பகங்களை மிருதுவாகத் தொட்டுத் தடவிப் பார்த்தாள். உடலெங்கிலும் ஒரு விதமான கிளர்ச்சி படர்ந்து உடல் சிலிர்த்தது.

அவளுக்கு அஹமதுவின் நினைவு வந்தது. ஒரு வருடம் முன் ஒருநாள், அதுவும் ஒரு ரம்ஜான் மாதம்தான், அவள் வீட்டில் எல்லோரும் தராவீஹ் தொழுது கொண்டிருக்கையில், அவள் விளையாடவென அஹமது வீட்டிற்குப் போய் இருந்தாள். ரபீக் தூங்கி விட்டிருந்தான். அஹமது மட்டும் கட்டிலில் அவனருகே அமர்ந்து ஏதோ ஒரு புத்தகத்தைப் புரட்டிக்கொண்டிருந்தான். அவளுக்கு ஆச்சர்யமாக இருந்தது, அவனுக்குத் தனியே இருக்கப் பயமாக இருக்காதா என்று! அவனிடம் கேட்டால் ரொம்பவே பீற்றிக் கொள்வான். “நானாவது பயப்படுறதாவது, இந்த உலகத்துல யாருக்கும் இந்த அஹமது பயப்பட மாட்டான்” என்று சொல்லி நெஞ்சை நிமிர்த்திக் காட்டுவான். அதனால் அவள் இப்பொழுதெல்லாம் அவனிடம் எதுவும் கேட்பதில்லை. அவன்தான் முதலில் பேச்சை ஆரம்பித்தான், ஏதாவது விளையாடலாமா என்று. “என்ன விளையாட? ரெண்டு பேர்தானே இருக்கிறோம்” என்றாள். “அம்மா அத்தா விளையாட்டுத்தான்” என்றான் ஆர்வமாக! அவளுக்கும் அதுதான் சரி என்று பட்டது. அவன் ஓடிப்போய் ஒரு ஓலைக்கொட்டானைத் தூக்கி வந்தான். சட்டி பானை எல்லாமே அதில் இருக்கும். ராபியாவும் கூட இது மாதிரி கொட்டான் நிறைய வைத்திருக்கிறாள். மதுரை பொருட்காட்சியில் வாங்கியது. அவன் அதைக் கொண்டு வந்து அவள் முன் வைத்துத் திறந்தான். மரத்தால் செய்யப்பட்ட சின்னச்சின்னத் தட்டு, கரண்டி, டம்ளர், பானை, தோசை சட்டி என்று எல்லாமே இருந்தன. அவன் ஒன்றுகூட தொலைக்காமல் வைத்திருந்தது அவளுக்கு ஆச்சரியமாகயிருந்தது.

அவளது பொருட்களில் பாதிக்குமேல் தொலைந்து போயிருந்தன. எப்படித் தொலைந்தது என்றே தெரியவில்லை. அவளுக்கு அவன் பேரில் பொறாமையும் தன்மீது கோபமும் வந்தது. ஒரு ஆம்பளைப் பிள்ளை இவ்வளவு பொறுப்பா இருக்கான், ஒரு பொட்டச்சிக்குப் பொறுப்பே இல்லையே என்று தன்னைத் தானே மனதிற்குள் திட்டிக் கொண்டாள்.

அஹமது ஓடிப்போய் ஸ்டோர் ரூமிலிருந்து ஒரு கையில் கொஞ்சம் அரிசியும் இன்னொரு கையில் இரண்டு முறுக்கும் எடுத்து வந்தான். அவள் அந்தப் பாத்திரங்களையெல்லாம் ஹாலின் ஒரு ஓரத்தில் அடுக்கி வைத்து அடுப்படியாக மாற்றினாள். அவன் தந்த அரிசியில் சமைப்பதுபோல பாவனை செய்தாள். அவன், “என்னா, சீக்கிரம் சாப்பாடு வை. கடைக்குப் போகணும்” என்று குரலை உயர்த்திச் சொன்னான். “இதோ ரெடியாயிருச்சு, வாங்க” என்று பவ்யமாகச் சொல்லி ஒரு தட்டை எடுத்து வைத்து டம்ளரில் தண்ணீர் வைத்தாள். பிறகு அரிசியில் கொஞ்சமும் முறுக்கில் துளியை உடைத்தும் பாத்திரத்தில் வைத்து கரண்டியைப் போட்டு அவனுக்கு அள்ளி வைத்தாள். அவன் ஒன்றும் சொல்லாமல் சாப்பிட்டு முடித்தான். “சரி, சரி நான் கடைக்குப் போயிட்டு வர்றேன்” என்று சொல்லி விட்டு சற்று தள்ளிப் போய் நின்று விட்டு, மறுபடி வந்து, “அப்பாடா, கடையில இன்னக்கி நிறைய யாவாரம். சீக்கிரம் சாப்பாடு வை, நீயும் என்கூட சாப்பிடு” என்றபடி ஒரு நிமிஷம் என்று சொல்லி விட்டு ஓடிப்போய் பீரோவுக்குக் கீழே படுத்துக் கையை விட்டு ஒரு மரப்பாச்சிப் பொம்மையை எடுத்தான். தூசியாக இருந்த அதைத் தன் மேல் சட்டையின் மீது வைத்துத் துடைத்து இவளிடம் கொண்டு வந்தான். “இந்தா, இது நம்ம புள்ள. இவனுக்கும் பாலூத்திக் குடு” என்று சொல்லி இவள் கையில் கொடுத்தான். அது ஒரு அழகான ஆண் பொம்மை.

உடம்பு மொழு மொழுவென்று இருந்தது. அதைப் பதவிசாக ஒரு குழந்தையைத் தூக்குவது போலவே தூக்கி முத்தம் கொடுத்து மடியில் போட்டுக் கொண்டாள். “ஏங்க, இவனுக்கு ஒரு டவுசர் சட்டை வாங்கணுமே, மொட்ட மேலா இருக்கான், குளுருமுல்ல” என்றாள் அக்கறையுடன். “சரி, வாங்குவோம்” என்று சொல்லிவிட்டு, “சரி, சரி லைட்ட அமத்து, படுத்துக்கலாம்” என்று சொல்லி விட்டு சும்மாவேனும் விளக்கை அணைப்பது போல செய்துவிட்டுப் படுத்துக்கொண்டான். இவளும் அவனருகில் படுத்துக் கொண்டாள். “குழந்தை அழறான் இல்ல, பால் குடு” என்றான் எழுந்து உட்கார்ந்து கொண்டு, “ஏண்டா, செல்லம் அழாதே” என்று சொல்லிக் குழந்தையைத் தூக்கி மடியில் வைத்துத் தாலாட்டினாள். “பால் குடுங்கறேன்ல” என்றான் அஹமது. அவளுக்குப் புரியாமல் தலைநிமிர்ந்து அவனது முகத்தைப் பார்த்தாள். அவன் அவளது நெஞ்சைத் தொட்டுக் காட்டி “இங்கோர்ந்து குடு” என்றான். அவளுக்கு வெட்கமாக இருந்தது. அவன் அவசரப்படுத்தினான், “குடுடி. அழுது இல்ல” என்று!

அவளுக்குக் கூச்சமாக இருந்தாலும் ஒருவிதமான குறுகுறுப்பு உடம்பெல்லாம் ஊடுருவியது. பொம்மையைத் தன் கைகளில் எடுத்தபடி, “நீ அந்தப் பக்கமா திரும்பிக்கோடா” என்றாள். சரி என்று சொல்லிவிட்டு அவன் திரும்பி உட்கார்ந்து கொண்டான். ராபியா தன் மேல் சட்டையைக் கீழிருந்தபடி லேசாகத் தூக்கிப் பொம்மையைத் தன் மார்பின்மீது வைத்து மேல்புறம் அழுத்திப் பிடித்துக்கொண்டாள். “என்ன குடிக்கிறானா? நானும் பார்க்கறேன்டி” என்று ஆர்வமாகக் கேட்டபடி அஹமது திரும்பி உட்கார்ந்து கொண்டு அவளது பக்கம் பார்த்தான்.

அவள் ஒன்றும் சொல்லவில்லை. அவன் மெதுவாகத் தவழ்ந்து வந்து

அவளது சட்டையைத் தூக்கிவிட்டு மார்பைப் பார்த்தான். லேசான இருளில் அவனது முகம் குழந்தையின் முகம் போலிருந்தது. கண்கள் எதையோ பார்க்கும் ஆர்வத்தில் ஒளிர்ந்தன. பொம்மையை எடுத்து கீழே வைத்து விட்டு அவளது மார்பை மிருதுவாக வருடினான். ஒரு சிறிய மென்மையான கோலிக் குண்டைப் போலிருந்த அது அவனுக்கு மிகுந்த ஆசையை உண்டு பண்ணிற்று. தன் விரல்களால் அதைப் பற்றி கைகளில் எடுத்துக்கொள்ள முயற்சிப்பது போல்செய்து விட்டு பிறகு தன் தலையைச் சாய்த்து உதடுகளால் மெதுவாக முத்தமிட்டான். பின் அதனைப் பற்றி உறிஞ்சத் தொடங்கினான் ஒரு குழந்தையைப் போல! அச்சத்தின் சுவடுகள் அவளது உடலைப் படபடக்கச் செய்ய, அப்படியே தன் இருகைகளால் அவனை இறுக்கமாகக் கட்டி அணைத்துக் கொண்டாள், எதையோ அறிய முயல்வது போன்ற ஆர்வத்துடனும் ஆசையுடனும்! அன்று நடந்த இச்சம்பவத்திற்குப் பிறகு ஒரு வாரம் அவள் அவன் வீட்டுப் பக்கமே போகவில்லை. அவனைப் பார்க்கவே அவளுக்குக் கூச்சமாக இருந்தது.

# 22

பிறை தெரிகிறதா, எனத் தெரிந்து கொள்வதற்காக மொட்டை மாடிக்கு வந்தாள் சொஹ்றா. அனேகமாக ஒவ்வொரு வீட்டின் மாடியிலும் ஒரு தலை தெரிந்தது. அவளுக்கு மனம் ரொம்பவும் ஆயாசமாக இருந்தது. வானில் நட்சத்திரங்களே இல்லை. இருள் தெருவெங்கும் பரந்து கிடந்தது. மெலிய சல்லாத்துணியென தெருவில் விழுந்த இருள், பார்த்துக் கொண்டிருக்கும்போதே கனத்த போர்வையாக வலுக்கத் துவங்கியது. ஆங்காங்கே தெருக்களில் தெருவிளக்கு வெளிச்சத்தில் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். நொண்டி விளையாட்டுப் போலிருந்தது. அவளுக்கு ஒரு விஷயம் ஆச்சரியமாக இருக்கும். ஒவ்வொரு விளையாட்டு ஒவ்வொரு சீஸனுக்கும் இருக்கும். கொஞ்சநாள் தெல்லுக்காய் விளையாடினால் அடுத்த சில மாதங்களில் கபடி மட்டும் விளையாடுவார்கள். அப்புறம் பம்பரம். 40 காய் பல்லாங்குழி. இப்படியே மாறி மாறி விளையாடினாலும் ஒரு சீஸனில் ஒரு தெருவில் பிள்ளைகள் விளையாடும் ஆட்டம்தான் ஊர் முழுக்க ஆடப்பட்டுக் கொண்டிருக்கும். வேறு ஒரு விளையாட்டைச் சற்றுமுன் மாற்றி விளையாடமாட்டார்கள்.

அவளுக்குத் திடீரென தானும் ஒரு குழந்தையாக மாறினால் என்ன என்று தோன்றிற்று. இத்தனை மனச்சுமைகள் இருக்காது இல்லையா என்று நினைத்துக் கொண்டாள். பிறை பார்த்தபிறகு தான் நாளை பெருநாள் என்று முடிவு செய்வார்கள். இங்கே சரியாகத் தெரியவில்லை என்றால் சிலோன் ரேடியோவில் எட்டு மணி செய்தியில் அவர்கள் பார்த்ததாகச் சொன்னாலே போதும். இங்கேயும் அதே முடிவுதான்! அதன் பிறகுதான் காலையில் வடைக்கு உளுந்து

ஊறவைத்துவிட்டு, வெங்காயம் நறுக்க வேண்டும். கேசரிக்கும் பணியாரத்திற்கும் ஏற்பாடு செய்ய வேண்டும். கட்டிப் போட்டிருக்கும் கோழியைப் பள்ளிவாசலுக்குக் கொடுத்தனுப்பி அஸரத்திடம் அறுத்து வாங்கி வந்து அதனைச் சுத்தம்செய்து வைத்துவிட்டு, நாளை மதிய பிரியாணிக்கான காய்கறிகளை நறுக்கி வைக்க வேண்டும். எல்லாமே பிறை தெரிந்த பிறகுதான்! ஒவ்வொரு வீட்டிலும் பெண்கள் ரொம்பவும் ஆர்வத்துடன் செய்யக் காத்திருக்கும் வேலைகள்தான் என்றாலும் இவளுக்குச் சலிப்பாக இருந்தது. மனதில் சந்தோஷம் இருந்தால்தானே எதையும் ஈடுபாட்டுடன் செய்ய முடியும்? மனம்தான் எந்நேரமும் ஆழமான கவலைகளைச் சுமந்து கிடக்கிறதே என்று நினைத்துக் கொண்டாள்.

பிர்தவ்ஸுக்கு உடனடியாக மறுமணம் செய்து வைத்துவிட அம்மா துடித்துக் கொண்டிருக்கிறாள் என்பதும், அதிலிருந்த நியாயங்களும் அவளை ரொம்பவே அலைக்கழித்துக் கொண்டிருந்தன. ஊரில் ஆளுக்கொன்று பேசுவார்கள்தான். அதற்காக அவசரப்பட்டு இன்னொரு முறையும் அவளைப் பாழும் கிணற்றில் தள்ளிவிட முடியுமா என்ன? அவளும் ஒரு பெண்தானே? அவளுக்கென்று ஆசைகள், எதிர்பார்ப்புகள் இருக்கக் கூடாதா என்ன? அம்மாதான் அவளை ரொம்பவே படுத்தி எடுக்கிறாள். பொட்டச்சிக்கு இவ்வளவு திமிரா, ஆசையா என்றெல்லாம்! பிள்ளைகுட்டிகளோடு பாதி வயது கழிந்து விட்ட கிழவன் எவனையாவது பார்த்துக் கட்டிக் கொள்ளச் சொல்லிவிட்டு, அவள் மறுத்தால் அதனைத் திமிர், ஆசை என்றா சொல்வது? அம்மாவைச் சொல்லியும் குற்றமில்லை. ஊரோடு ஒத்து ஓடினால்தானே நல்லது. சொஹ்ராவுக்கு இருக்கும் ஒரு நிம்மதி அவளது கணவன் பிர்தவ்ஸின் மறுமணத்தில் தலையிடாமல் இருப்பதுதான்! அவனது குறுக்கீடு தான் இத்தனை பெரிய

அசிங்கத்தைக் குடும்பத்துக்கு உண்டு பண்ணிற்று. இனி எத்தனை காலமானாலும் இந்த அவப்பெயர் தன் குடும்பத்தை விட்டு நீங்கப் போகிறதா? சபியா கூட ஒரு நாள் யாரிடமோ கேலி செய்து சொன்னாளாம், ஆமினா குடும்பத்தில வெட்டிக்கிட்டு வாறது என்னா புதுசா? அவ தங்கச்சி செஞ்சத இப்ப அவ மக தொடர்ந்திருக்கா, சாதிப்புத்தி என்று! அதைக் கேட்டபிறகுதான் சொஹ்ராவுக்கு ரொம்பவே கலக்கமாக இருந்தது. ஒருவேளை இது தொடர்ந்து விடுமோ? எதிர்காலத்தில் ராபியாவைப் பெண் கேட்டு வருபவர்கள் கூட இதனை யோசிப்பார்களோ? குடும்பம் சரியில்லை என்று சொல்வார்களோ என்றெல்லாம் கூட யோசிக்க ஆரம்பித்திருந்தாள்.

அதன் விளைவாகத்தான் அவள் இப்போதிலிருந்தே ராபியாவைக் கொஞ்சம் அதிகமாகவே அதட்டி வைக்கத் தொடங்கியிருந்தாள். ஊரில் மற்ற பிள்ளைகளுக்கு இருக்கும் ஓரளவு சுதந்திரம்கூட தனக்குக் கிடைக்க ராபியா இவளிடம் கொஞ்சம் போராட வேண்டியிருந்தது. பொட்டப்பிள்ளைய அடக்கி வளர்க்கிறதுல தப்பு ஒண்ணுமில்ல என்று தனக்கே சமாதானம் செய்து கொள்வாள் சொஹ்ரா.

அவளுக்கு வஹிதாவின் ஞாபகம் வந்தது. இன்னும் பத்து நாளில் அவளுக்குத் திருமணம் என்று நினைக்கும்பொழுது பாவமாக இருந்தது. சபியா குரங்கிடம் இந்தப் பச்சைப் பிள்ளை என்ன பாடுபடப் போகிறதோ என்று நினைத்துக் கொண்டாள். அதோடு சிக்கந்தரின் பழக்க வழக்கம் ஒன்றும் சரியில்லை என்று மும்தாஜ் சொஹ்ராவிடம் தனித்துச் சொல்லியிருந்தாள். "எம் மாப்பிள்ளையும் சிக்கந்தரும் ஒரே நாட்டுலதான இருக்காங்க? அவருதான் சொல்வாரு. பொம்பள சகவாசம், தண்ணி இதுக்கெல்லாம் கொறவில்லையாம். நல்ல கொணமணம் இருந்து என்னா, சம்பாரிச்சு என்னா" என்று சலித்துக் கொண்டாள். "அப்புறம் சொஹ்ராக்கா, நான்

சொன்னேன்னு றைமாக்காகிட்ட சொல்லிப்புடாதீங்க, நமக்கேன் வம்பு? அப்புறம் என்னோட தலைதான உருளும். அதுவும் சபியா காதில விழுந்தா என்னையக் கொன்னு போட்டுடுவா. என் மாமியார்க்காரி வேற விழுந்து புடுங்குவா" என்று சொல்லித் தப்பித்துக் கொண்டாள். இதே விஷயத்தை நபிஸாவும் சொஹ்ராவிடம் சொல்லியிருந்தாள். அவளுடைய அத்தா கமால் சிங்கப்பூரில் தானே இருக்கிறார். அவர்கள் இரண்டு பேரும் இதுபற்றி கூடிப்பேசியிருப்பார்கள் என்று சொஹ்ராவுக்குத் தெரியும்.

சொஹ்ரா, கரீமிடம் இதுபற்றி மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள். "ஏங்க, வஹிதா மாப்பிள்ளைக்கு சிங்கப்பூரில் பொம்பள சகவாசமல்லாம் இருக்காமே?" என்று! அதற்கு அவன் ரொம்பவும் சாவகாசமாக, "ஏன் அதுக்கென்ன?" என்று சொல்லிவிட்டு, "இதையெல்லாம் பாத்துக்கிட்டு இருந்தா முடியுமா? ஊர்ல எவன்தான் ஒழுங்கு சொல்லு பாப்பம்? ஆம்பள அப்படித்தான் இருப்பான். பொம்பள அப்பிடி இருந்தாத்தான் தப்பு. இப்பவும் அவனுக்குக் கலியாணம் பண்ண கொஞ்சம் லேட்டாகிருச்சு. அதுவரைக்கும் ஆம்பளயால அடக்கிக்கிட்டா இருக்க முடியும்" என்று பேச்சை அடைத்து விட்டான். கிண்டல் நிரம்பியிருந்தது அவன் குரலில்! அவன் சொல்வது உண்மைதான். இது ஒன்றும் இங்கே பெரிய விஷயம் இல்லைதான்.

கரீம் சொன்னான், "இதப்பத்தி ஒனக்குத் தெரிஞ்சதையெல்லாம் றைமா அண்ணிகிட்ட சொல்லி வைக்காதே. அவுங்களுக்கும் எல்லாம் தெரிஞ்சுதான் இருக்கும்" என்று. கரீம் ஏற்கனவே பெரும் மனக்குழப்பத்தில் இருந்தான். நோன்புச் செலவு ஜகாத் குடுத்தது, துணிமணி எடுத்தது என்று முடிந்த உடனேயே கல்யாணச் செலவுக்கு ஏகப்பட்ட பணம் தேவைப்படுகிறது. ஒரே சமயத்தில் இவ்வளவு

பெரிய தொகையைத் தொழிலிலிருந்து எடுப்பதன் மூலம் சமாளிக்க முடியுமா என்று யோசித்துக்கொண்டிருந்தான். அவனுக்கு அண்ணன் மேல்தான் கோபம் வந்தது. அவனுடைய மாமனாருக்கு டவுனில் ஏகப்பட்ட சொத்து. அவரிடம் கொஞ்சம் பணம் உதவியாகக் கேட்டால் நிச்சயம் தந்து உதவுவார். அவருக்கும் றைமா அண்ணியைத் தவிர வேறு பிள்ளைகளுமில்லை. எனக்கு வாய்த்தவள்தான் ஒன்றுமில்லாதவள்.

காதர் ஏன் இப்படி இருக்கிறான்? கல்யாணச் செலவு நாலைந்து லட்சம் ஆகுமென்றால் ஒரு ரெண்டு மூணு லட்சம் அங்கே வாங்க வேண்டியதுதானே? இதை எப்படி யார் மூலம் அண்ணனுக்குப் புரிய வைப்பது என்ற குழப்பத்தோடு இருக்கையில் இவள் ஒண்ணுமில்லாத விஷயத்தையெல்லாம் கேட்டுக் குழப்பிக் கொண்டிருக்கிறாளே என்று யோசித்தவன் தனது குழப்பத்தை மனைவியிடம் காட்டிக் கொள்வது அவளுக்கு இடம் கொடுத்தது போலாகிவிடுமென்பதில் உறுதியாக இருந்தான். முதலில் கல்யாணம் முடியட்டும், பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று பேசாமல் இருந்தான். இருந்தாலும் தூங்க முடியாமல் இரவெல்லாம் புரண்டு புரண்டு படுத்துக்கொண்டிருந்தவனிடம், “என்னாச்சு” என்ற சொஹ்ராவை, “ஒண்ணுமில்லை” என்று அடக்கினான்.

மாடிப்படிகளில் யாரோ ஏறி வரும் சத்தம் கேட்டது. றைமா தான் வந்து கொண்டிருந்தாள். பூமி அதிராதபடிக்கு மிக அமைதியாக நடந்து மேலேறி வந்து அவளருகில் நின்றவள், “என்ன பிறை தெரிஞ்சிதா” என்று இவளிடம் கேட்டாள். அவளது சாந்தமான முகம் அந்த இருட்டில் சரியாகத் தெரியாவிடினும் குரலில் மிகுந்திருந்த ஒரு விதமான சோர்வினை சொஹ்ராவினால் உணர முடிந்தது. தன்னைப் போன்றே அவளும் கூட ஏதோ குழப்பத்தில் ஆழ்ந்திருப்பதாகத்

தோன்றிற்று. "இல்லெ! தெரியலை" என்றவள், "ராபியாவும் வஹிதாவும் எங்கே" என்று கேட்டாள். "ராபியாவுக்கு வஹிதா மருதாணி போட்டு விட்டுக்கிட்டு இருக்கா. காலையிலேர்ந்து உன்மக ஒரே ஆட்டம் போட்டுத் தீர்த்துட்டா மருதாணி மருதாணின்னு. எங்கேயோ போய் அவளும் மதினாவுமா பறிச்சிட்டு வந்ததைப் பாத்துமா இப்பத்தான் அரைச்சுக் குடுத்திட்டுப்போனா. வஹிதா மஃரிபு தொழுத கையோட அவளுக்குப் போட்டுவிடுது. அதிலயும் ஒன் மகளுக்குக் கை நிறைய பூ டிஸைன்தான் வரையணு மாமுல்ல" என்றவள், "ஆமா, சிக்கந்தரப் பத்தி மும்தாஜ் உன்கிட்ட எதுவோ சொன்னாளாமே? கேள்விப்பட்டேன், என்ன சொன்னா?" என்றாள்.

சொஹ்ராவுக்குத் தூக்கி வாரிப்போட்டது, இவளுக்கு எப்படித் தெரியும் என்று. ஒரு நிமிஷம் யோசித்தவள், "அதெல்லாம் ஒண்ணுமில்லையே" என்றாள். சொஹ்ராவுக்குத் தான் ஒரு பெரிய இக்கட்டில் மாட்டிக் கொண்டது புரிந்தது. மும்தாஜ் தன்னிடம் பேசியதைப் பாத்திமா பாத்திரம் கழுவியபடி கேட்டிருக்க வேண்டும். அவள்தான் சொல்லிக்கொடுத்திருப்பாள் என்று புரிந்து பாத்திமாவின் மேல் எரிச்சலும் கோபமும் உண்டாயிற்று. "அதெல்லாம் ஒண்ணும் சொல்லலியே! அவ புருஷன் சிங்கப்பூர்ல இருக்கிறதுனால அடிக்கடி சிக்கந்தரைப் பார்ப்பாருன்னு சொன்னா" என்று இழுத்தாள். "சும்மா மழுப்பாதே சொஹ்ரா, எனக்குத் தெரியும். அவ என்ன சொன்னான்னு. அவ உன்கிட்ட மட்டும்தான் சொல்லியிருக்கப் போறாளா, இந்நேரம் ஊர்ல பாதிப்பேர்கிட்டச் சொல்லி முடிச்சிருப்பா. நபிஸாவும் தன் பங்குக்கு யார் யார்கிட்டச் சொன்னாளோ? ஒரு விஷயம் இவளுகளுக்குத் தெரிஞ்சிச்சுனா, பாங்கு சொல்லிர மாட்டாளுக, அது ஊருக்கே தெரியவேணாம்? மனுஷள முன்னே விட்டு ஒரு பேச்சும் பின்னெ விட்டு ஒரு பேச்சும் இவளுக

மாதிரி யாராவது பேச முடியுமா? இதே மும்தாஜும் நபிஸாவும் உன்கிட்ட உன் தங்கை பிர்தவ்ஸப் பத்தி ரொம்ப அக்கறையா உருகி உருகிப் பேசுவாளுக. நீயில்லாதப்போ ஏங்கிட்ட திமிர் பிடிச்சவ, எல்லாத்தையும் உதுத்தவம்பாளுக. நான் உன்கிட்ட எவ்வளவு ஒட்டுதலா இருக்கேன்னு அவங்களுக்குத் தெரியும், நான் உன்கிட்டே சொல்லுவேன்னும் தெரியும், ஆனா பயப்படமாட்டாளுக. நாம பங்காளிகங்கற ஊக்கம்" என்றாள் றைமா. அவளுக்கு ஆத்திரத்தில் முகம் கண்டிப்பாகச் சிவந்திருக்க வேண்டும். இருளில் எதுவும் தெரியவில்லை.

சொஹ்ராவுக்கு அவமானமும் கோபமும் ஒரே சமயத்தில் உண்டாயிற்று. தன்னிடம் பிரியமாக இருப்பது போலப் பேச முடிகிற அவர்களுக்கு இப்படியும் பேச எப்படி முடிகிறது? அதே நேரம் இதுதானே மனித இயல்பு என்பதும் புரிய, கோபம் மட்டுப்பட்டது. இப்படியெல்லாம் மற்றவர்கள் பேசக்கூடிய இந்த நிலைக்குக் காரணமான பிர்தவ்ஸின் பேரில் அவளது கோபம் திரும்பியது. "பேசிட்டுப்போறாளுக, பேசற வரைக்கும் பேசித் தீர்க் கட்டும். இந்த ஊர்ல யாரு யாரைப் பேசல? பொறாமையும் கெட்ட நினைவும் பிடிச்ச ஊருல்ல இது. நமக்குப் பிள்ளை சரியில்லெ, அது தப்பு செய்ததனாலதான ஆளுக்கொண்ணு பேசுறாங்க" என்று சொல்லும்பொழுது அவள் குரல் தழுதழுத்து கண்ணிலிருந்து கரகரவென்று கண்ணீர் வழிந்தது.

றைமாவுக்குத் தர்மசங்கடமாக இருந்தது. "கிறுக்கு, ஏன் இதுக்கெல்லாம் அழுதுக்கிட்டு இருக்கே?" என்று சொல்லி அவளைத் தேற்ற முயன்றாள். அவளுக்குத் தான் பேச ஆரம்பித்த விஷயம் இப்படித் திசை மாறிப்போய் சொஹ்ராவை அழச்செய்யும்படி ஆகிவிட்டதில் வருத்தம் உண்டாக, "பொண்ணுகளுக்கு மட்டும்

அல்லா நல்ல நஸீப போடணும். இல்லாட்டி அது ஏழேழு தலைமுறையைப் பாதிக்கும் போலருக்கு” என முனகிக்கொண்டாள். அவள் குரல் விரக்தியின் புதைசேற்றில் அமிழ்ந்து கிடப்பதை சொஹ்ரா கவனித்தாள். அச்செய்தியில் பொதிந்திருந்த அர்த்தமும் இயலாமையின் துக்கமும் சூழ அங்கு பெரும் மௌனம் குடி கொண்டது. பெருநாளைக்கு முந்தைய நாளிரவின் வேலைகள் முரட்டுச் சங்கிலியென அவர்களை நெருக்கிக்கொண்டிருக்க இரு வரும் கீழே இறங்கிவந்தார்கள்.

# 23

அதிகாலையில் மூன்று மணிக்கே எழுந்து விட்டார்கள் பெரியம்மாவும் அம்மாவும். வேம்பாவில் கரியைப் போட்டுத் தீ மூட்டித் தண்ணீர் காய வைத்து முதலில் தாங்கள் இருவரும் தலைகுளித்து ரமலான் நபில் தொழுதார்கள். ஆண்கள் எழுவதற்கு நேரம் ஆகும் என்பதனால் அடுப்படியில் வேலைகளை ஆரம்பித்தார்கள். ராபியாவும் இவர்கள் எழும்போதே எழுந்து விட்டிருந்தாள். "உன் மக ஒரு துனியாக் கவுஸீ, ராத்திரியெல்லாம் கூட தூங்கியிருக்க மாட்டா போல" என்று அம்மாவிடம் சொல்லி பெரியம்மா சிரிக்க, "அவதானே, நைட்டு பத்துப் பதினொரு மணி வரைக்கும் தெருவுல பிள்ளைகளோட சேர்ந்துக்கிட்டு ஒரே ஆட்டம் இல்ல போட்டா, அவ எப்பிடித் தூங்குவா?" என்றாள் அம்மாவும்.

அம்மாவும் பெரியம்மாவும் கேலி செய்தது ராபியாவுக்கு வெட்கமாக இருந்தது. எப்பொழுதுமே அப்படித்தான். பெருநாளைக்கு முதல் நாள் ரொம்பவே உற்சாகமாக இருக்கும் அவளுக்கு. இரவில் தெருவில் யாரும் தூங்கமாட்டார்கள். வீட்டுக்கு வீடு கடைகளிலிருந்து நாளைக்குச் சமைக்கத் தேவையான பொருட்களை ஆட்கள் வாங்கி வருவதும், கோழி அறுத்துக் கொண்டு வருவதும், பூக்காரர்கள் சாயங்காலத்திலிருந்து சுற்றி வருவதுமாகத் தெரு முழுவதும் ஜே ஜே என்று இருக்கும். அதோடு தெருக் குழாய்களில் தண்ணீர் பிடிக்க வரும் பெண்களின் கூட்டமும் வெளியூரிலிருந்து பெரு நாளைக்காக ஊருக்கு வந்திருப்பவர்களின் நடமாட்டமும் தெருவும் ஊரும் ரொம்பவே கலகலப்பாக இருக்கும். தெருவில் பிள்ளைகள் அனை வரும் கூடி விளையாடிக் கொண்டிருப்பார்கள். ராபியா மஃரிபுக்கே மருதாணி

போட்டுவிடுவாள். அது கலைந்து போய்விடும் என்பதால் தெருத்திண்ணையில் கைகளை விரித்து வைத்தபடி உட்கார்ந்து தெருவை வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பாள். அவளுக்கு இரவு தூங்கும் பொழுது மருதாணி வைத்துக் கொள்ளப் பிடிக்காது. அந்தச் சமயத்தில்தான் கொசுகடிக்கும். சொறிந்து கொள்ள முடியாமல் ரொம்பவே கஷ்டமாக இருக்கும். சனியன் பிடித்த கொசு மற்ற நாட்களை விட அன்றுதான் பிடுங்கித் தீர்க்கும். அதனால் இரவில் கால்களுக்குப் போட்டுக் கொண்டு தூங்குவாள்.

நேற்றுக்கூட அப்படித்தான், சாயங்காலத்திற்குப் பிறகு வஹிதா அக்காவைக் கெஞ்சி அவளுக்குத் தெரிந்த பூ டிஸைனை இரண்டு உள்ளங்கை நிறைய போட்டிருந்தாள். தெருத்திண்ணையில் வழக்கம் போல அமர்ந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தாள்.

மருதாணி காய்ந்து உதிரும் வரை அசையாமல் உட்கார்ந்திருப்பதுதான் கஷ்டம். கட்டிப் போட்டது மாதிரி இருக்கும். ஒருமணி நேரம்தான். அப்புறம் ஆட்டம் ஆரம்பமாகிவிட்டது. அஹமது, ரபீக், ரசாக், இலியாஸ், மதினா, ராபியா எல்லோரும் வந்தபிறகு சேர்ந்து கல்லா, மண்ணா விளையாடத் தொடங்கினார்கள். அஹமதுவுக்கும் மதினாவுக்கும் இடையில் பேச்சு வார்த்தை மட்டும் இல்லை. மற்றபடி சேர்ந்தே விளையாடினார்கள். ஓய்ந்திருந்த நேரத்தில் ராபியா பெருமையடித்தாள். “எங்க வீட்டுல எங்க பெரியத்தா ஆயிரம் ரூபாய்க்குச் சில்லறைக் காசு வாங்கிட்டு வந்து வைச்சிருக்காங்க தெரியுமா, நாளைக்கு ஜகாத் குடுக்க! அதை நான்தான் எல்லாருக்கும் எடுத்துக் குடுப்பேன். அப்புறம் பஜர் நேரம் கோதுமைப் பணம் குடுக்கச் சொல்லி அம்மாவும் பெரியம்மாவும் என்னைத்தான் அனுப்புவாங்க. இருட்டோட ஒவ்வொரு வீடாப்போய் விடியறதுக்குள்ள குடுத்துட்டு வருவேன்.”

"ஏன், நாங்களும்தான் ஆயிரம் ரூபாய்க்கு மேல சில்லறைக்காசு மாத்தி வைச்சிருக்கோம். எங்க அத்தா பணத்தை எங்கிட்ட குடுத்து, நானே சினிமாத் தியேட்டர்ல போய் சில்லறை வாங்கிட்டு வந்தேன், கணக்கா எண்ணி! தெரியுமில்ல? உங்களுக்கு யாருக்கா வது ஆயிரம் ரூபாய் எண்ணி சரியா வாங்கத் தெரியுமா?" என்றான் அஹமது. தன் சாதனையை எண்ணி அவன் முகத்தில் பெருமிதம் பொங்கி வழிந்தது. ராபியா, "பொய், பொய்! அதெல்லாம் உன்னால சரியா கணக்குப் பண்ணி வாங்க முடியாது. பொய், பொய் சொல்ற" என்றாள் சத்தம்போட்டு. அவளுக்கு அவனிடம் வம்பிழுக்கும் எண்ணம் துளிக்கூட இல்லை. உண்மையிலேயே அவன் ஆயிரம் ரூபாய் சில்லறையை எண்ணி வாங்கியிருந்தானென்றால் அந்தக் கெட்டிக்காரத்தனத்தை மற்றவர்களுக்கு முன் நிரூபிக்கவும், தானும் கூட அதனை அவன் சொல்லக் கேட்டுப் பெருமைபட்டுக் கொள்ளவும் வேண்டியிருந்தது. அவன் என்ன செய்தாலும் இவளுக்கு உள்ளுக்குள் தாங்க முடியாத சந்தோஷம் உண்டாயிற்று.

"ஏய், நீங்க யாரும் நம்பலை இல்ல? வா, இப்பவே! எங்கம்மாகிட்டப் போய் கேட்போம். இல்லாட்டி, சத்தியம் பண்ணறேன்" என்றவன் திடீரென வானத்தை நோக்கி அண்ணாந்து பார்த்துக் கொண்டு, "அந்த அல்லா மேல, இந்த நோன்பு மேல சத்தியம்" என்று ஆவேசமாக உணர்ச்சி வசப்பட்டுச் சொல்லி, தன் இடது உள்ளங்கையின் மீது வலது உள்ளங்கையினால் அடித்துச் சத்தியம் செய்தான். ஒரு நிமிஷம் யாரும் எதுவும் பேசவில்லை. ஒரே சத்தியத்தில் அனைவரின் முகங்களிலும் நம்பிக்கை உண்டானதோடு கண்களில் அவன் குறித்த ஆச்சரியம் நிரம்பியது. இலியாஸும் ரசாக்கும் ஒரே சமயத்தில், "எப்பிடிடா?" என்று அவனிடம் கேட்டார்கள். "ஐயா, யாரு?" என்று பெருமையாகத் தன் சட்டைக் காலரைக் தூக்கி விட்டுக் கொண்டு ராபியாவையும்

ஓரக்கண்ணால் மதினாவையும் பார்த்துச் சிரித்தான். "நானெல்லாம் ஆயிரம் ரூபாய் பணத்தைச் சேர்ந்தாப் போல கண்ணுலகூட பாத்ததில்லப்பா" என்று சொல்லி வருத்தப்பட்டான் இலியாஸ். ரசாக்கிற்கு அவமானமாக இருந்தது. "எங்க வீட்டுலயும்தான் கட்டுக் கட்டா பணம் இருக்குது" என்று முனகிக் கொண்டான். மனதில் அம்மாவின் ஞாபகம் வந்தது. "அந்தப் பொம்பள ஜகாத் குடுத்தாத்தானே" என்று திட்டிக்கொண்டான்.

இலியாஸுக்கு அஹமதுவை ஏதாவது சொல்லி மட்டம் தட்ட வேண்டும் போலிருந்தது. ராபியா மதினாவுக்கு முன் அவன் ரொம்பவும் பீற்றிக் கொள்வது எரிச்சலாக இருந்தது. "உங்க வீட்டுலதான் நாளைக்கு நோன்பு கொண்டாடலை" என்று சொல்லி நிறுத்தினான். அப்பேச்சு அஹமதுவைக் குத்திக் காட்டுவது போல இருந்ததை ராபியா புரிந்து கொண்டாள். "இல்லையே, எங்கம்மா அத்தா மட்டும்தான் ட்ரெஸ் எடுத்துக்கலை. எனக்கும் தம்பிக்கும் இருக்கே, ரெடிமேடுல எடுத்தது" என்றான் அஹமது. அவன் எதையும் விட்டுக் கொடுக்கும் நிலையில் இல்லை. "வடை சுட மாட்டாங்க, பிரியாணி செய்ய மாட்டாங்க, அதுமட்டும்?" என்றான் இலியாஸ். அஹமதுவுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. ஆமாம் நோன்பு கொண்டாடுவது என்றால் புதுத்துணி உடுத்துவதும், வடை பலகாரம், பிரியாணி செய்து சாப்பிடுவதும் மட்டும்தான். இதில் ஒன்றை மட்டும்தானே செய்ய முடியும்? இன்னொன்று இல்லை என்றால் எப்படி நோன்பு கொண்டாடியதாகச் சொல்ல முடியும்? அவன் குழப்பத்தில் ஆழ்ந்தான். நேற்றே அம்மாவிடம் கெஞ்சிப் பார்த்துவிட்டான். அதெல்லாம் முடியாது, அது தப்பு. நன்னி மௌத்தாகி ஒருவருஷம் முடியவில்லை. எண்ணெய்ச் சட்டி வைக்க முடியாது என்று சொல்லிவிட்டாள்.

ராபியாவுக்கு அஹமதுவை இந்த இக்கட்டிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று தோன்றிற்று. “ஏன்? எல்லோருக்கும் அப்படித் தான்! ஒருதடவை மதினா வீட்டுல நோன்பு இல்ல. ஒருதடவை ரசாக் வீட்டுல நோன்பு இல்ல. இந்த வருஷம் அஹமது வீட்டுல. உங்க வீட்டுலயும் எப்பவாவது உங்க நன்னி மௌத்தாறப்போ, நோன்பு கொண்டாடக் கூடாது தெரியுமுல்ல?” என்றாள் பெரிய மனுஷித்தன்மையுடன். உடனே இலியாஸுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. “என்ன சொன்னே, எங்க நன்னி செத்துப் போகணுமின்னா சொல்றே? இரு எங்கம்மா கிட்டே சொல்றேன்” என்றான் கோபத்துடன். அவன் உடல் ஆத்திரத்தில் நடுங்கிக் கொண்டிருந்தது.

ராபியாவுக்குப் பயம் பிடித்துக் கொண்டது. “ச்சேச்சே! நான் அப்பிடிச் சொல்லலடா, சும்மா ஒரு பேச்சுக்காகத்தான் சொன்னேன். ஏன் மதினா?” என்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த மதினாவைத் துணைக்கழைத்தாள். மதினாவுக்கு ராபியா அஹமதுவுக்காகப் பரிந்து பேசியது கொஞ்சம்கூட பிடிக்கவில்லை என்றாலும், ராபியாவை இந்தச் சிக்கலிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று நினைத்தாள். “ஆமாண்டா, வயசானவுங்கதான சீக்கிரம் செத்துப் போவாங்க, அதனால அவ சும்மா சொன்னா. இதைப் போயி உங்க வீட்டுலயெல்லாம் சொல்லாதே” என்று அவனைச் சமாதானம் செய்யும் விதமாகச் சொன்னாள். இருந்தாலும் அவனது முகம் அழுது விடும் நிலையில் இருந்தது. அதோடு அன்று இரவு அப்போதே அவர்கள் வீடுகளுக்குத் திரும்ப வேண்டியிருந்தது.

ராபியாவுக்குக் காலையிலும் அதே பயம்தான். பாத்திமா, அம்மாவிடம் எதுவும் சொல்லிச் சண்டை பிடிப்பாளோ என்று! பெரு நாளன்று மட்டும் அவள் வீட்டு வேலை செய்ய வரமாட்டாள். அதனால் தோட்டத்திலிருந்து மாரியாயி காலையிலேயே வந்து

*விடுவாள் வேலைபார்க்க. அம்மா அவளுக்குக் கொடுத்த புதுச் சேலையைக் கட்டிக்கொண்டு வேலையெல்லாம் செய்வாள். அதனால் நாளைக்குத்தான் பாத்திமா அம்மாவைப் பார்த்து இந்த விஷயத்தைச் சொல்லக்கூடும். அதையே நினைத்துக் கொண்டிருந்ததில் மனதிலிருந்த உற்சாகமெல்லாம் போய் சோர்வாகயிருந்தது அவளுக்கு. கோதுமைப் பணம் கொடுக்க நாலைந்து வீடுகளுக்குப் போய்விட்டு வந்ததில் கால் வேறு வலித்தது. முதல்நாளே குடுத்துவிட்டால் என்னவாம், இந்தப் பணத்தை. காலையில் அம்மா குளித்த பிறகு தான் குடுக்கணுமாம் என்று முனகிக் கொண்டாள். அடுப்படியிலிருந்து அம்மா அதட்டினாள். "ராபியா, நீ இன்னும் குளிக்கலை?" என்று! சரி, வர்றப்போ வரட்டும் பார்க்கலாம், அதுக்காக ஏன் இப்பிடிப் பயந்து சாகணும். யாரும் தலையைச் சீவப்போறாங்களா என்ன என்று தைரியத்தை வரவழைத்துக் கொண்டாள்.*

*வழக்கம்போல காலையில் ஏழரை மணிக்கெல்லாம் சாப்பிட்டு முடித்து புதுத்துணி உடுத்த அம்மாவிடம் போனாள். துஆ ஓதி ட்ரெஸ்ஸை உடுத்திவிட்டு, "பொம்பளப்புள்ளையா பாவாடையை அழுக்காக்காம வச்சுக்கணும் என்ன?" என்று அதட்டினாள் அம்மா. "சரிம்மா" பொறுப்பாகப் பதில் சொல்லித் தலையாட்டிய படி அறையைவிட்டு வெளியில் வந்தவளின் எதிரே ஹாலில் பெரியத்தா நின்று கொண்டிருந்தார்.*

*வெள்ளைவெளேரெனப் புதுக்கைலி, வெள்ளைச்சட்டை தொப்பிபோட்டு பார்க்க ஜம்மென்று இருந்தார். ராபியாவின் வாய் தன்னையறியாமலேயே, "அம்மாடி! எம்புட்டு வெளுப்பு, இதுல அழுக்குப் படாம எப்புடித்தான் வச்சுக்க முடியுதோ?" என்று முனங்கிற்று. அவர் மீதிருந்து வீசும் அத்தர் வாடையில் வீடே மணத்தது. எப்பொழுது தொழுகப் போனாலும் பெரியத்தா அத்தர்*

போடாமல் போகமாட்டார். பெரியம்மாவுக்கு மட்டும் இந்த வாசம் பிடிக்காது, தலையை வலிக்குது இந்த வாடை என்பாள். அப்போது பெரியத்தா சொல்வார், "அத்தர்போட்டுத் தொழுகறது சுன்னத் தெரியுமில்ல?" என்று. ராபியா தானும் பெரியத்தாவிடம் போய் தன் புது ட்ரெஸ்ஸுக்கு அத்தர் போட்டுக்கொள்ளவேண்டும் என்று நினைத்துக்கொண்டாள்.

"றைமா, தொழுகைக்கு நேரமாச்சு. சாப்பாடு எடுத்து வைய்யி" என்று அவசரப்படுத்தியபடி தானாகவே ஹாலில் பாயை உதறி விரித்த பெரியத்தாவின் முன்பாகப் போய் நின்றுகொண்டு, "பெரியத்தா என் ட்ரெஸ் நல்லாருக்கா?" என்றவள், "எனக்கும் அத்தர் பூசிவிடுறிங்களா?" என்று ஆர்வமாகக் கேட்டாள். பெரியத்தா தலைநிமிர்ந்து அவளைப் பார்த்து, "சுபஹானல்லாஹ்! எப்புடி நீ இவ்வள பெரிய பெம்பளையா ஆன?" ஆச்சரியப்படுபவர் போல கண்களை அகல விரித்துக்காட்டியவர், "அத்தர்தானே? வா, பூசிவிடுறேன். அதுக்கு மொத இந்தா நோன்புக்காசு, வச்சுக்க!" என்று ஐம்பது ரூபாய் சலவை நோட்டொன்றைச் சட்டைப்பையிலிருந்து உருவி எடுத்து அவளது உள்ளங்கைகளுக்குள்ளாக வைத்து அழுத்தி, "பிஸ்மில்லா சொல்லி வாங்கு" என்றார். ஐம்பது ரூபாய் நோட்டைப் பார்த்ததும் மூச்சே நின்றுவிடும்போல திகைத்து நின்றவள், அது அவருக்குத் தெரிந்துவிடக் கூடாது என்கிற நினைப்புடன் முகத்தைச் சாதாரணமாக வைத்துக்கொள்வதற்கு ரொம்பவும் சிரமப்பட்டாள்.

பெரியத்தா தொழுகக் கிளம்பு முன்பாக முற்றத்தில் சேர் போட்டு உட்கார்ந்து கொண்டு இவளைக் கூப்பிட்டுப் பக்கத்தில் உட்காரவைத்துக் கொண்டார். கூட்டம் கூட்டமாகக் குடியானப் பெண்களும் ஆண்களும் குழந்தைகளும் வர, அவர்களுடன் முஸ்லீம் குழந்தைகளும் பெண்களும் இருந்தார்கள். அதிகப்பேர்

குடியானவர்கள்தான். இவளுக்கு அவர்களைப் பார்க்கும்போது பாவமாக இருந்தது. கையைக்கட்டி பவ்யமாக நின்று கொண்டிருந்தார்கள். ராபியாதான் பக்கத்து ஸ்டூலில் ஒரு பெரிய சில்வர் சகுனில் காசைக் கொட்டி வைத்திருந்தாள். சின்னப்பிள்ளைகளுக்கு கால் ரூபாயும் பெண்களுக்கு ஐம்பது காசும் ஆண்களுக்கு ஒரு ரூபாயும் பெரியத்தா கொடுக்கச் சொல்ல, கை நிறைய காசை அள்ளி வைத்துக்கொண்டு பட்டுப்பாவாடையும் நகைகளுமாக அலங்கரித்திருக்கிற பெருமையோடு காசை எடுத்து ஒவ்வொருத்தருக்காகத் தந்தாள். அவர்கள் எல்லோரும் தன்னையே ஏக்கத்துடன் உற்றுப்பார்ப்பது ஆனந்தமாகவும். தன்னைப் பற்றிய மிதமிஞ்சிய கர்வமாகவும் இருந்தது.

தோட்டத்தில் கூலி வேலை செய்பவர்கள், “மொதலாளி, இது நம்ம பொண்ணுங்களா?” என்று கேட்க, “ஆமடா, நம்ம தம்பி மகதான்” என்று சொல்லிவிட்டு அவர்களுக்கு மட்டும் தன் சட்டைப் பையிலிருந்து புத்தம் புது பத்து ரூபாய்க் கட்டிலிருந்து பத்து ரூபாய் எடுத்து இவளிடம் கொடுத்து கொடுக்கச் சொன்னார். தொழுகை நேரம் எட்டு மணிக்கு என்பதால், நேரமானதும் அவரும் அத்தாவும் கிளம்பி விட அவளும் மதினாவும் பள்ளி வாசலுக்குக் கிளம்பிப் போனார்கள். அங்கிருந்து ஆண்கள் அனை வரும் ஒன்றுகூடி பைத் ஓதியபடி ஊரை விட்டு சற்று தள்ளியிருக்கும் குத்பா மேடைக்குப் போய் தொழுக ஆரம்பிக்க ஆண் பிள்ளைகளும் கூடவே தொழுதார்கள். ராபியாவும் மதினாவும் இன்னும் மற்ற பெண் குழந்தைகளும் மாமரத்தடியில் நின்று ஆண்கள் ஒன்று சேர்ந்து தொழுவதை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இன்றும் அஹமதுவின் முகத்தில் ஏளனம் பொங்கிற்று, உங்களால் இங்க வந்து தொழுக முடியுமா என்கிற மாதிரி! அடிக்கடி அம்மாவிடம் கேட்பாள்

ராபியா. “ஏன் நாமும் போய் பள்ளிவாசலுக்குள்ளேயோ கொத்வா பள்ளியிலயோ ஆண்களோடு சேர்ந்து தொழுகக் கூடாது?” அம்மா சொல்வாள், “ஊஹும்! பொம்பளைங்க பள்ளிக்குள்ள போகக்கூடாது.”

“ஏன்?”

“கூடாதுன்னா, கூடாதுதான்!” ஒரே வார்த்தையில் முடித்துக்கொள்வாள் அம்மா.

ஊருக்குள் பெண்கள் தங்களை அலங்கரித்துக்கொண்டு தம் சொந்தக்காரர்கள் வீட்டிற்கும் பக்கத்து வீடுகளுக்கும் போய் வந்து கொண்டிருந்தார்கள். தெருவெல்லாம் பெண்கள் கூட்டம் பேச்சும் சிரிப்புமாகக் காற்றைப்போல் அலைமோதிக் கொண்டிருந்தது. எல்லாம் ஆண்கள் ஊருக்குள் திரும்பி வரும் வரைக்கும்தான்.

மதியம் சாப்பாட்டிற்குப் பின் மதினாவுடனும் அஹமதுவுடனும் இலியாஸுடனும் சேர்ந்து சினிமாவுக்குப் போக வேண்டும் என நினைத்துக்கொண்டாள். அதற்கு முன்பாக காலையில் தன் வீட்டிற்கு வந்த சொந்தக்காரர்கள் தனக்குக் கொடுத்துவிட்டுப் போன பணத்தை அறைக்குள் தனியாக இருந்து எண்ணிப் பார்த்தாள். தொழுகைக்குப் போகுமுன் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் ஆண்கள் தத்தமது உறவினர் வீடுகளுக்கும் பக்கத்து வீடுகளுக்கும் போய் தொழுகைக்குப் போவதாகப் பயணம் சொல்லிவிட்டு வீட்டிலுள்ள பெண்கள், குழந்தைகளுக்குப் பணம் கொடுப்பார்கள். அஹமதுவின் அத்தா இங்கே வந்து எல்லோருக்கும் கொடுத்தார். அதே மாதிரி அத்தாவும் பெரியத்தாவும் அஹமது வீடு, மதினா வீடு, ஷெரிபாக்கா வீடு எல்லோர் வீட்டுக்கும் போய் விட்டு வருவார்கள். தனக்குச் சேர்ந்த பணத்தில் பத்து ரூபாயை மட்டும் எடுத்துக்கொண்டு, மீதியைச் சந்தையிலிருந்து தயாராக வாங்கி வைத்திருந்த மண் உண்டியலில்

போட்டு வைத்தாள். பத்து ரூபாய் சினிமாவுக்கும் அங்கு ஏதாவது வாங்கிச் சாப்பிடுவதற்கும் தேவைப்படும். ஒருமுறை அம்மா இந்த உண்டியல் ரொம்புனதும் உன் சிறுவாட்டுக்காசைக் குடு, உனக்கு ஒரு தங்கத்தோடு வாங்கலாம் என்று கேட்டாள். இவளுக்கு அதில் விருப்பமில்லை. நகை யாருக்கு வேண்டும்? அதனால் அம்மாவிடம் சொன்னாள், “எனக்கு ரயில்ல போகணும்னு ஆசையா இருக்கு. கூட்டிட்டுப் போவியா? அப்டி இல்லைன்னா ஒரு சைக்கிள் வாங்கிக்குடு” என்று. “பொம்பளப் புள்ளக்கி சைக்கிள் எதுக்கு? வேணாம்” என்றவள், “ரயில்ல நானே இன்னும் போனதில்ல, உங்க அத்தாகிட்டப் போயி கேளு” என்று கைவிரித்து விட்டாள். அவரிடம் போய் என்ன கேட்க? அதற்குப் பேசாமல் இருக்கலாம் என்று இருந்து விட்டாள். வஹிதாக்கா சொல்லியிருக்கிறாள், அவளுக்குக் கல்யாணம் ஆனதும் அவள் சிங்கப்பூருக்கு பிளேனில் போவாளாம். அப்பொழுது என்னையும் கூட்டிப் போவதாக! அங்கே ட்ரெயின் இருக்கிறதாம். அப்பொழுதுதான் இந்த உண்டியலை உடைத்துப் பணத்தை எடுத்துக் கொண்டு போக வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்.

கிணற்றுமேட்டில் அமர்ந்து பல்விளக்கிக் கொண்டிருந்த பிர்தவ்ஸுக்குத் தோட்டத்திலிருந்து வந்த காற்று உடலில்பட்டதும் குளிரத்தொடங்கியது. “உஷ் . . . ஆ!” என முனகியவாறே சேலை முந்தானையை இழுத்துத் தோள்மீது போர்த்திக் கொண்டாள். யார் வீட்டிலிருந்தோ டேப் ரிக்கார்டரில் நாகூர் ஹனிபாவின் பாடல் ஒலித்துக் கொண்டிருந்தது. யார் வீடாயிருக்கும் என்று யோசித்தவள், “யார் வீடா இருக்கப்போவுது? சபியா வீடாத்தான் இருக்கும்” என்ற முடிவுக்கு வந்தாள். ஹனிபா தன் கணீர்க்குரலில், “இறைவனிடம் கையேந்துங்கள் அவன் இல்லையென்று சொல்லுவதில்லை” என்று பாடிக்கொண்டிருந்தார். பிர்தவ்ஸுக்குச் சிரிப்பு வந்தது. “நானும்தான்

என்னென்னவோ கேட்டேன், எதைக்கொடுத்தானாம்?” சலிப்போடு முனகியவள் எழுந்து வாய் கொப்பளிக்க ஆரம்பித்தாள்.

இன்று ரம்ஜான் பெருநாள். என்றாலும் மனது துளிக்கூட உற்சாகம் இன்றி வறண்டிருந்தது. இன்னும் விடிய நீண்டநேரம் இருந்தது. கல்வாசல் முழுக்க இருள் விலகாமல் படுத்துக்கிடந்தது. “இவ்வளவு பெரிய வாசல் எவ்வளவு இருளைவேண்டுமென்றாலும் கொள்ளும்” என நினைத்துக் கொண்டாள். சீக்கிரத்தில் எழுந்து என்ன செய்யப்போகிறோம் என்று சலிப்பாக இருந்தது. சந்தோஷப் பட எதுவுமில்லை, இதில் என்ன பண்டிகை கொண்டாட என யோசித்தவள், திண்ணையின் மீதமர்ந்து கால்களைக் குத்தவைத்து இறுக்கிக் கட்டிக்கொண்டாள். அந்த நேரத்துக் குளிர் ரசிக்கக் கூடியதாக இருக்க, ஆழமாக மூச்சை உள்ளிழுத்துச் சுவாசித்தாள். மிதமான குளிர், விரிந்த ஆகாயம், கூடவேயிருக்கும் இருள், மனதை என்னவோ செய்வதாக இருந்தது. ஆழ் மனதின் இறுக்கங்களெல்லாம் நெகிழ்ந்து, உருகிக் கரைந்து மூச்சுக்காற்றின் வழியே வெளியேறி அகன்ற வானத்திடம் போய்ச் சேர்ந்து கொள்ள, ஒரு குழந்தையின் பரிசுத்தமும் உற்சாகமும் தன்னுள் வேரூன்றிக் கிளைப்பதாக உணர்ந்தாள். உள்ளங்கைகளைக் கன்னங்களின் மீது வைத்து அழுத்தி அதன் ஜில்லிப்பைக் கண்களை மூடி அனுபவித்தாள். தோட்டத்து முருங்கை மரம் தன் இலைகளை அசைப்பது தனக்காகத்தானோ என்றிருந்தது. எப்போதும் போல கூடவேயிருக்கிற தனிமையினூடேயும், இந்த ஆகாயமும் இந்தக் காற்றும் இந்தக் குளிரும் ஏனோ தனக்காகவே இருந்து கொண்டிருக்கிறதோ என்கிற எண்ணம் திடுமென சிறு சந்தேகம் இன்றி உருக்கொண்டது.

இத்தனைக் காலமாகத் தன்னை வாட்டிக்கொண்டிருந்த இதே காற்றும் பனியும் தன் இயல்பு நிலைக்குத் திரும்பியதன் விசித்திரம்

எதன் பொருட்டென்பதில் எந்தக் குழப்பமும் தனக்கில்லை என நினைத்துக் கொண்டவளுக்கு, சிவாவின் நினைவு குளிர்ந்த காற்றாய் உடலை வருடியது. தோட்டத்துக் காற்றில் விரிந்துகிடக்கும் ஆகாயத்தில், கிணற்றடியில், அழுத்தமாகக் கால் பதித்திருக்கும் இருளில் எல்லாவற்றிலும் அவன்தான் நிறைந்திருந்தான். தனது கருணை பொங்கும் விழிகளால் அவளை வருடியபடி, ஏதொரு குற்றவுணர்வையும் பயத்தையும் இவள் உணர்ந்துவிடாதபடி, மிருதுவான தழுவலைத் தன் பார்வையினால் தரமுயன்றவனாக!

"இன்னும் குளிக்கலையா நீ?" நெருக்கத்தில் கேட்ட அம்மாவின் குரல் திடுக்கிட வைக்க அதிர்ந்துபோய் தன் நிலைக்குத் திரும்பியவள், தனக்கெதிரே இடுப்பில் கையூன்றியபடி நின்றுகொண்டிருக்கும் அவளிடம், "இல்லெம்மா குளிர் நடுக்குது அதான்" என இழுத்தபடி பதில் சொல்லியவாறு திண்ணையிலிருந்து எழுந்து நின்றாள்.

"இப்புடி ஒக்காந்திருக்கத்தானாக்கும் வெள்ளனத்துல எந்திரிச்ச?" என்று அலுத்துக்கொண்டவளாக, "வேம்பாவுல சுடுதண்ணி போடுறதுதானே? நல்லாத்தான் திண்ணையில குத்த வச்சு உக்காந்து கனாக்கண்டுக்கிட்டு இருக்க" என்று முணுமுணுத்தபடி வேம்பா இருக்கும் இடம் நோக்கிச் சென்றாள்.

அம்மாவைப் பின்தொடர்ந்து எட்டிநடந்து அவளுக்கு முன்பாக முந்திக்கொண்டு கரிமூட்டை இருக்கும் இடத்திற்குப்போய் மூட்டையிலிருந்த கரியை இரண்டு கைநிறைய அள்ளிக் கொண்டு வந்து வேம்பாவின் தூம்புக்குள் கொட்டிவிட்டுக் கைகளைத் தூசு தட்டிவிட்டாள்.

"நான் மண்ணெண்ணெய் ஊத்திப் பத்தவைக்கிறேன். நீ போயி சின்ன ஒழக்குல ஒரு ஒழக்கு உளுந்த எடுத்து ஊறவைய்யி, வடை சுடுவோம்" என்றாள். பதில் பேசாமல் நின்ற இவளை நிமிர்ந்து பார்த்து,

“ஆமா, நல்ல நாளும் அதுவுமா எண்ணெச்சட்டி வைக்காம இருக்கக்கூடாது. ஒரு வருஷம் தட்டுப்பட்டுச்சுன்னா தொடர்ந்து மூணுவருஷத்துக்குத் தட்டுப்படும். என்னத்துக்குத் துக்கிரி புடிச்சாப்புல இருக்க.” மகளின் முகத்தைப் பார்த்தபடி தனது செயலுக்கு விளக்கம் தருகிற அம்மாவின் குரலில் என்றுமில்லாதபடிக்கு அமைதி குடிகொண்டிருந்தது.

“மொதல்ல நான் குளிச்சிட்டு தொழுகறேன். இவளது பதிலுக்குக் காத்திராமல் தொழுதுட்டு விடியுமுன்ன கோதுமைப்பணம் குடுக்கணும்.” உடுத்துவதற்குத் துணி எடுக்க வீட்டுக்குள் போன அம்மாவின் ஒடுங்கிய ஒற்றைநாடிச் சரீரம் காற்றினூடே சருகென மிதந்து செல்வது மனதின் ஆழம் வரை குத்திக்கிழிப்பதாகயிருந்தது.

அம்மாவின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தவளாக ஒரு பதிலும் சொல்லாமல் அடுப்படி வாசற்படியில் ஏறி சுவிட்சைப் போட்டுவிட்டுக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்தாள். சட்டெனப் பரவுகிற ஒளிப்பிரவாகத்தில் திடுக்கிட்டுத் தடுமாறி ஓடுகிற பல்லிகளும் புணர்ந்தபடி அசையாமல் நிற்கிற கரப்பான்களும் அருவெறுப் பூட்டுவதாய் இருக்க, தனது பார்வையை அங்கிருந்து விலக்கிக் கொண்டு மரஅலமாரியை நோக்கி நடந்தாள்.

இறுகிக்கிடந்த அலுமினியச் சம்படத்தைப் பற்களால் கடித்து நெம்பித்திறந்தவள் உளுந்தை அளந்து எடுத்து சட்டியில் போட்டு அடுப்படி மேடைமீதிருந்த வெண்கலச் சருவத்திலிருந்த நீரை அதனுள் வார்த்து களையத் துவங்கினாள்.

வடை சின்ன வயதிலிருந்தே பிர்தவ்ஸுக்கு ஆகாத பலகாரம். முன்பெல்லாம் அக்காவும் மச்சானும் வரும்பொழுதெல்லாம் அம்மா வடை சுடுவாள். சாப்பிட மாட்டேன் என்று அடம்பிடிக்கும் இவளிடம் அம்மாவுக்குக் கேட்க ஒரு காரணமுமிருக்காது.

“புடிக்காட்டி விடு. ஆப்பக்கார பிச்சையம்மாகிட்ட ஆப்பம் வாங்கிச் சாப்புடு” என்பாள். இன்று? மாப்பிள்ளையைப் பிடிக்கவில்லை என்பதற்கான காரணங்களை மட்டும் பட்டியலிடக் கேட்டு அனத்தி எடுக்கிறாள். இவள் சொல்லும் எந்தக் காரணமும் அவளுக்குச் சரியென்றே படமாட்டேன் என்கிறது.

“நேற்றுக்கூட ஒருத்தனின் போட்டோ ஒன்றை இவளிடம் காட்டி இவரைத்தான் நோன்பு முடிஞ்சு பேசி முடிக்கலாம்னு இருக்கேன். ரெண்டே ரெண்டு பொண்ணு இருக்காம். ஒந்திருப்திக்காக போட்டோவை கேட்டுவாங்கினேன். ஊரு ஒலகத்துல இல்லாத அதிசயமா உங்கக்காகிட்ட காட்டணும்னு பொய் சொல்லி! பாக்கறதுக்கு லச்சணமாத்தான் இருக்காரு, ஒனக்குப் புடிச்ச மாதிரி!” கடைசி வார்த்தையை அவள் உச்சரித்த விதம் இவளது உடம்பையே கூசச்செய்வதாக இருந்தது.

பிர்தவ்ஸின் நீண்டு சிவந்த விரல்களூடாக உருண்டு, உருண்டு வெண்மையாகிக் கொண்டிருந்தது உளுந்து. தனது மனதின் அழுத்தங்களெல்லாவற்றையும் அதன்மீது செலுத்திவிட விரும்புவது போலக் களைந்து கொண்டிருந்தாள். யார் என்றே தெரியாத ஒருத்தனுக்குக் கட்டி வைத்து அவனது வீட்டில் இரண்டு நாள்கள் இருந்ததற்காக, தன்னைவிட இருபது வயது மூத்த, இரண்டு குழந்தைகளின் தகப்பனைத் திருமணம் செய்து கொள்வது எப்படி சாத்தியம்? எப்படி யோசித்தாலும் எத்தனை முறை யோசித்தாலும் புரியவே மாட்டேனென்கிறது பிர்தவ்ஸுக்கு.

“ஒனக்குப் புடிச்ச மாதிரி.” அழுத்தமான அம்மாவின் வார்த்தைகளில் மனம் சிக்கிக்கொள்ள கூனிக்குறுகிப்போனது உடல். தன்னை இத்தனை அற்பத்தனமாகப் புரிந்து வைத்திருக்கிற அம்மாவின் கால்களில் விழுந்து கதறிஅழுதேனும் அந்த

நினைப்பிலிருந்து அவளை விடுபடச்செய்ய வேண்டும்போலிருந்தது இவளுக்கு.

"இன்னுமா உளுந்து களையிற? நல்லா வந்தபோ." குளித்து விட்டு அடுப்படிக்குள் வந்து நின்று ஆச்சரியமாகக் கேட்கும் அம்மாவிடம், "இதோ முடிஞ்சுச்சும்மா" எனப் பதற்றமாகச் சொல்லிவிட்டு அவ்விடத்திலிருந்து அகன்ற பிர்தவ்ஸிடம், "கொல்லையில நான் கட்டிக்குளிச்ச பாவாடை ஈரமாக் கிடக்குது. அதை அலசிப்போட்டுரு" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து வெளியே சென்ற ஆமினா, வாசலில் கொடியில் காயப்போட்டிருந்த முஸல்லாவை எடுத்து உதறிக்கொண்டே தொழுவதற்காக வீட்டுக்குள் போய் மறுபடியும் வீட்டுக்குள்ளிருந்து வாசலைப் பார்க்க எட்டிப்பார்த்து, "சுருமாக்கல்லைக் காணோமே, எங்கென வச்சிருக்க?" என்று கேட்டாள். "தெரியலையே, வெள்ளிக்கிழமை லுஹர் தொழுதப்போ எடுத்துப் போட்டுட்டு அங்கியேதான வச்சேன். நல்லாத் தேடிப் பாருங்கம்மா." கிணற்று மேட்டிலிருந்தே சத்தமாகச் சொன்னாள் பிர்தவ்ஸ்.

தனக்காக அம்மா சீயக்காய்த்தூள் கரைத்துவைத்திருந்த பிளாஸ்டிக் குவளையை எடுத்து வலதுகையை உள்ளே விட்டுக் கரைத்தவளின் உடல் அதன் குளிர்ச்சியில் ஜில்லிட வெடுக்கெனக் கையை வெளியே எடுத்து உதறிவிட்டு உடையைக் களைய ஆரம்பித்தாள். இருள் விலகத்தயாராகிற வானம், வேகமாகக் குளித்து முடித்துவிட வேண்டுமென்பதை அறிவுறுத்த, உச்சந்தலையில் மீது சீயக்காய் கரைசலை அள்ளிவைத்துப் பரபரவென தேய்த்தாள். சபியாவின் வீட்டிலிருந்து டேப் ரெக்கார்டரில் நாகூர் அனிபாவின் பாடல்கள் ஓய்ந்து சைத்தூன் பீவி கிஸ்ஸா ஒலிப்பதைக் கவனித்தாள்.

இந்த நேரத்தில் எதற்காக இதைப்போட்டுப் கேட்கிறார்கள் என்று

யோசித்தவளின் கவனம் முழுக்கப் பாடல்வரிகளின் மீது விழுந்தது.

நாலைந்து பேர் ஒன்றுசேர்ந்து தம் துயரமான குரல்களினால் சைத்தூன்பீவி பட்ட கஷ்டங்களைப் பாட்டாகப் பாடியும் கதையாகச் சொல்லியும் கேட்பவர்களின் மனங்களை உருகச்செய்து கொண்டிருந்தார்கள். இவளும் எத்தனையோமுறை இந்தக் கதையைக்கேட்டுத் துக்கம்மேலிட அழுதிருக்கிறாள். அதெல்லாம் திருமணத்திற்கு முன்! இப்பொழுது தன் வாழ்க்கையை நினைத்துப் பார்த்தால் அதெல்லாம் ஒன்றுமே இல்லை என்றிருந்தது. கதை சொல்பவர் தனது வெண்கலக்குரலில் திரும்பத் திரும்ப, “கேளுங்கள்! சைத்தூன் பீவி பட்ட துயரங்களை” என்று பாடிக்கொண்டிருந்தார். சீரற்று வீசுகிற காற்று யார் என்ன செய்துவிட முடியும் என்கிற தப்புடன் தன் இஷ்டத்திற்கு அக்குரலைச் சிதைத்துக் கொண்டிருந்தது.

அக்குரலின் கம்பீரமும் பாடலின் ராகமும் பயாஸ்கோப் படம் காட்டுகிற ஆசீர்வாதம் தாத்தாவை நினைவூட்டுவதாயிருக்க கண்களை இறுகமூடி அவரது உருவத்தை மனதிற்குள் கொண்டு வந்தாள். சிரித்த உருண்டையான முகம் அவருக்கு, நல்ல வழுக் கைத்தலை, பார்க்க காந்தித் தாத்தாவைப் போலிருப்பார். சட்டை போடாத கறுத்த உடம்பு, கழுத்தை ஒட்டி இறுக்கிக்கட்டிய கறுப்புக்கயிற்றில் தொங்கிக் கொண்டிருக்கும் சிலுவை அசைந்தாட, தனது இரண்டுகை விரல்களாலும் தகரப்பெட்டியின் மீது தட்டித் தட்டி அவர் செய்யும் ஜாலத்தைப் பார்க்கவே வேடிக்கையாக இருக்கும்.

சுவர்ப் பல்லியைப்போல இடுப்பில் ஒட்டியிருக்கும் ராபியாவைக் கதறக்கதற இறக்கி அவருக்குப் பக்கத்தில் நிற்க வைத்துவிட்டு பெட்டியின் பக்கவாட்டில் குனிந்து கண்களை அதில் பதித்து ஆர்வமாகப் பார்ப்பாள் பிர்தவ்ஸ். “பாரு, பாரு பயாஸ்கோப்புப் படத்தப்பாரு.” உச்சஸ்தாயியில் குரலை எழுப்பிப்பாட ஆரம்பிக்க,

நேரு மாமா, காந்தித் தாத்தா, தாஜ்மஹால் என்று வைத்த கண்ணை எடுக்காமல் கவனமாகப் பார்ப்பாள் பிர்தவ்ஸ். இந்நேரத்தில் அவரது பாட்டுச் சத்தத்தில் அரண்டுபோய் ராபியாவின் வாய் மூடியிருக்கும்.

பிர்தவ்ஸ் பார்த்து முடித்த கையோடு குழந்தையைத் தூக்கி இடுப்பில் வைத்தபடி கேட்பாள்: "குதிரைமேல ஒக்காந்துருக்க பொம்பள பேரு என்னா சொன்னீங்க?"

"உம்! அது ஜான்ஸிராணி. ஏன்கேட்கிற? அந்தப் பொம்பளைய ஒனக்கு ரொம்பப் புடிச்சுப்போச்சோ" என்பார் கிண்டலாக.

ஆமாம் என்று சொல்ல நினைத்து அவரது குரலில் தெரியும் கிண்டலைப் புரிந்துகொண்டு, "இல்லெ தாத்தா, அந்தப் பொம்பள ரொம்ப பெரிய துணிச்சல்காரி போலக் கையில பெரியகத்தியோட குதிரை மேல ஒக்காந்துருக்கறதப் பாக்கப் பாக்க ஆசையா வருது, அதுதான்" என்பாள். தான் முன் எப்போதோ டூரிங் டாக்கீஸில் பார்த்த ராஜா ராணி படத்தில் ஜான்ஸிராணி என்ற சொல்லி வந்த பெண்ணை நினைவுறுத்திக் கொண்டாள் பிர்தவ்ஸ். ஏனோ இவளுக்கு அவளைச் சுத்தமாகவே பிடிக்கவில்லை. இந்தப் பெட்டிக்குள் இருக்கும் படத்தில் இருக்கும் பெண்ணின் படம்தான் இவளுக்கு ரொம்ப பிடிக்கும்.

தனது அழுக்கடைந்த நீலக்கலர் சுருக்குப்பையிலிருக்கும் சில்லறைக் காசுகளைக் கைகளில் கொட்டி, "ஒரு காசு ரெண்டு காசு" என எண்ணிக் கொண்டிருக்கும் அவரிடம், "மேக்கொண்டு அந்தப் பொம்பளை ராணியப்பத்தின கதை தெரியுமா ஒங்களுக்கு?" ஆர்வமாகக் கேட்பாள். அதைக் கேட்பதற்குள்ளாக வெட்கம் அவளைப் பிடுங்கித் திங்கும்.

காசு எண்ணுவதை நிறுத்திவிட்டு அவளைத் தலை நிமிர்ந்து பார்த்து, "மேக்கொண்டு எனக்கு என்னாத்தத் தெரியும், நான் என்னா

*படிச்சாருக்கேன்?" அலுத்துக் கொண்டவராக மறுபடி விட்ட இடத்திலிருந்து காசை எண்ண ஆரம்பிப்பார்.*

*இப்பொழுது அவர் எங்கே இருப்பார்? உயிரோடுதான் இருப்பாரா, இல்லை மௌத்தாகியிருப்பாரா? அந்த நாளைய நினைவுகளிலிருந்து விடுபட்டது மனம்.*

*அப்பொழுதெல்லாம் வாழ்க்கை எவ்வளவு சந்தோஷமாக இருந்தது என்கிற நினைவினாலான துக்கமும் சிறுமியாகவே இருந்திருக்கக் கூடாதாவென்கிற ஏக்கமும் கூட, வெதுவெதுப்பான தண்ணீரை மொண்டு தலையில் தொடர்ச்சியாக ஊற்றி உடலை நடுக்கும் குளிரை விரட்டினாள்.*

*பள்ளிவாசலிலிருந்து பாங்கு சொல்லும் சத்தமும் சொல்லி முடித்த கையோடு, "தூக்கத்தைவிட தொழுகை மேலானது" என்று சொல்ல ஆரம்பிக்கிற மோதினார் பாவாவின் குரலும் அவளைச் சுயநினைவுக்கு இட்டுச்சென்றது.*

# 24

கட்டிலில் றைமாவின் அருகில் உட்கார்ந்து என்னவோ எழுதிக்கொண்டிருந்தான் காதர். றைமாவுக்குக் கடந்த சில தினங்களாகவே மனம் ஒருநிலையில் இல்லை. இன்னும் பத்து நாளில் வஹிதாவின் திருமணம். மாப்பிள்ளை பற்றி அவளுக்குத் திருப்தியில்லாததால் கல்யாண வேலைகளில்கூட முழு ஈடுபாட்டுடன் அவளால் இயங்க முடியவில்லை. பத்திரிகைகள் அடித்து வந்து விட்டன. இனி அதனைத் தெரிந்தவர்கள், உறவினர்களுக்குக் கொடுக்க வேண்டும். நாளைக் காலையில் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் துணி எடுக்கவெனப் பணம் வைத்து மாப்பிள்ளை வீட்டார் கையில் கொடுக்க வேண்டும். அதற்கடுத்த நாளில் மதுரைக்குப் போய் துணி எடுக்க வேண்டும். இரண்டு வீட்டாரும் சேர்ந்துதான் போவார்கள். ஊருக்குள் போய் ஒவ்வொரு வீடாகத் திருமணத்திற்கு வரச்சொல்லி அழைக்க வேண்டும். சாப்பாட்டு அரிசியைப் புடைக்க வேண்டும். நெருங்கிய உறவினர்களை அழைக்கவும் இவள்தான் போக வேண்டும். அதுதான் ஊர் வழக்கம். நினைத்தாலே தலை சுற்றியது. எடுத்த துணிகளைத் தைக்க வேண்டும். சீருக்குப் பாத்திரம் பண்டம் வாங்கி மாப்பிள்ளை வீட்டுக்கு அனுப்ப வேண்டும். “ஒரே பொண்ணு; ஞாபகத்துல வச்சுக்கோ.” தன் சகோதரனிடம் எச்சரித்துவிட்டுப் போயிருக்கிறாள் சபியா. நகை 100 பவுனுக்கு மேல் செய்து தயாராக இருக்கிறது. எல்லாமே சிறப்பாகத்தான் செய்யப் போகிறோம் என்றாலும் மனதுக்குத்தான் திருப்தியில்லாமல் இருந்தது. தன் கணவன் பேரில் ஆழ்ந்த வருத்தம் உண்டாயிற்று. இவனுடைய பிடிவாதம் இல்லாவிட்டால் அவசரப்படாமல் வஹிதாவை அவளுக்கேற்ற ஒரு

பையனைப் பார்த்துக் கொடுத்திருக்கலாம் என்று ஆதங்கமாகவும் இருந்தது. இனி இது பற்றி பேசுவதோ, யோசிப்பதோ அல்லாவை மறந்தது போல என நினைத்து அந்நினைவை உதறி எறிந்தாள்.

எழுதுவதை நிறுத்திவிட்டு தலைநிமிர்ந்த காதர் கேட்டான், "ஊருக்குள்ள அழைக்க என்னைக்குப் போறிங்க?" அவள் தன் யோசனைகளிலிருந்து விடுபட்டு, "இன்னிக்குதான்! வெளியூர்களுக்கு நாளைக்குப் போய்க்கலாம், காரிலேயே" என்றாள். "ஆமா, நீதான் ஆறு நோன்பு வச்சிருக்க இல்ல, ஊருக்குள்ள அலையறது கஷ்டமா இருக்காது?" அக்கறையோடு கேட்டவனிடம், "இருந்தால் என்ன, சொல்லித்தான ஆகணும்?" என்றாள். அவள் முகத்தில் சிறிதுகூட சந்தோஷம் இல்லாத மாதிரிப்பட்டது காதருக்கு. "ஏன் என்னவோ போல இருக்கே?" என்றான்.

"ஒண்ணுமில்ல. மாப்பிள்ளைக்கு அங்கே பழக்க வழக்கம் சரியில்லன்னு கேள்விப்பட்டேன். அதுதான் மனசு சரியில்லை" என்றாள். காதர் நிமிர்ந்து அவளைக் கூர்ந்து பார்த்தான். அவன் முகத்தில் ஒரு கணம் குழப்பமும் கோபமும் மிகுந்து பிறகு தெளிந்தது. ஓரளவு நிதானத்தை ஏற்படுத்திக் கொண்டான். "இங்கே பாரு! ஆம்பளைன்னா அப்பிடி இப்பிடித்தான் இருப்பான். இதையெல்லாம் நீ பெரிசு படுத்திட்டு இருந்தா அது சரியில்ல. ஊரு உலகத்துல எவன் உத்தமனானவனா இருக்கான் சொல்லு? அப்பிடி ஒருத்தனத்தான் உன் மகளுக்குக் கட்டி வைக்கணும்னு நினைச்சேன்னா, இந்த ஜென்மத்துல அவளுக்குக் கல்யாணம் நடக்காது. அதை ஞாபகத்துல வச்சுக்கோ! ஆம்பள கெட்டுப் போறது பெரிய விஷயமில்லையே, கல்யாணம் ஆயிட்டா இன்ஷாஅல்லாஹ்! அப்புறம் திருந்திட்டுப் போறான். போ, போயி வேலையைப்பாரு. அந்தப்புள்ள முன்னால் முகத்தக் காட்டி வைக்காதே. எனக்கு அவமேல உன்னைவிட அக்கறை இருக்கு" என்று

அமைதியும் கண்டிப்பும் தொனிக்கும் குரலில் சொன்னவன், எனக்கென்னவோ ஒன்னோட ஈமான் மேலயே சந்தேகமா இருக்கு. அவன் நாடாம துரும்பாவது அசையுமா சொல்லு?

"நல்லதோ கெட்டதோ, அவனுக்கு ஸுக்கூர் சொல்லிட்டு நிம்மதியா இருங்க" என்றான். இவ்விஷயத்தைத் திரும்பத்திரும்ப அவன் மறுபரிசீலனை செய்வதன்மூலம் நஸீபையே கேள்விக்குள்ளாக்கிய பாவத்திற்கு ஆளாகிறாளே என்கிற கவலையோடும் வருத்தத்தோடும் ஒலித்தது காதரின் குரல்.

றைமாவுக்குக் கஷ்டமாக இருந்தது. இதுவரைக்கும் அவள் என்ன சொன்னாலும் கேட்டு வந்தவனுக்கு இந்த விஷயத்தில் மட்டும் இவ்வளவு பிடிவாதம் ஏன் என்று புரியவில்லை. தன் சகோதரியோடு நெருங்கிய உறவு உண்டாவதற்குத் தான் தடை சொல்வதாக அவன் எண்ணுகிறானோ என்று தோன்றியது. அவன் சொல்வதிலும் நியாயம் இல்லாமல் இல்லை. அதையும் கூட அவளால் புரிந்துகொள்ள முடிந்தது. ஆண்களில் எவனும் யோக்கியன் இல்லை தான். என்றாலும், தெரிந்தே ஒரு தவறை ஏன் செய்ய வேண்டும் என்றும் புரியவில்லை. அவளுக்குத் தலை வலித்தது. இனியும் இப்படியே குழப்பிக் கொண்டிருந்தால் ஒன்றும் ஆகப்போவதில்லை. அல்லா மேல் பாரத்தைப் போட்டுவிட்டு வேலையைப் பார்க்க வேண்டியது தான். அவன் பார்த்துப் போட்ட நஸீபை யாரால் மாற்ற முடியும்?

"றைமா" காதர் கூப்பிட்டான். "இங்கே பார், கல்யாணத்துக்கு ஊருக்குள்ள அழைக்கிறப்போ, கரண்ட் ஆபீஸர் பாலகிருஷ்ணன் வீட்டுக்குப் போய் கட்டாயம் வரணும்னு சொல்லிடு! வீடு தெரியலன்னா, டிரைவர் முத்துகிட்ட கேளு. பாலகிருஷ்ணன் பையன் ரமேஷ் கூடத்தான் ராபியா படிக்கிறா. அவளைக் கேட்டுக்க" என்று கட்டளையிட்டுவிட்டு மறுபடி குனிந்து கணக்கை எழுத

ஆரம்பித்தான். ஒன்றும் சொல்லாமல் வெளியில் வந்தாள் றைமா. சொஹ்ராவின் ரூமில் கரீமின் கோபமான குரல் கேட்டுக் கொண்டிருந்தது. அவன் என்ன பேசுகிறான் என நின்று கவனித்தாள். வேகமாகப் பேசிக் கத்திக் கொண்டிருந்ததால் ஒன்றும் காதில் விழவில்லை. "சரி விடுங்க, யார் காதிலும் விழப்போகுது. இனிமே சொன்னா பாத்துக்கலாம்" என்று இடையிடையே அவனைச் சமாதானம் செய்து கொண்டிருந்தாள் சொஹ்ரா. அவனுக்கு மட்டும் கோபம் வந்தால் ஒரு மிருகத்தைப் போல மாறி விடுவான். யாராலும் தடுக்க முடியாது. சொஹ்ரா எப்படித்தான் அவனது மூர்க்கத்தனத்தை பொறுத்துக் கொள்கிறாளோ தெரியவில்லை. ஒவ்வொரு நேரமும் சாப்பாடு எடுத்துவைக்கும் பொழுதெல்லாம் பயந்து நடுங்கியபடிதான் பரிமாறவேண்டும் அவனுக்கு. அவன் வீட்டிற்கு வரும் நேரத்திற்கு சொஹ்ரா சாப்பாடை எடுத்து வைத்துக்கொண்டு தயாராக இருக்கவேண்டும். கொஞ்சம் தாமதமானாலே கண்டபடி திட்டியபடி சாப்பிடாமலேயே ஓடிப் போய் விடுவான்.

"சரியான இபுலீஸு" முணுமுணுத்த றைமா, அவன் அறையிலிருந்து படாரெனக் கதவைத் திறந்து வெளியேறி வீட்டை விட்டுச் செல்வதைப் பார்த்தாள். அவன் பின்னாலேயே அறையிலிருந்து வெளியே வந்த சொஹ்ரா, றைமாவைப் பார்த்து மெலிதாகச் சிரித்தாள். றைமாவின் முகத்தில் தெரிந்த கேள்வியைப் புரிந்து கொண்டவள்போல, "ஒண்ணுமில்லக்கா, இப்பொ இவர் சாப்பிட்டுக்கிட்டு இருந்தாரு, தோசை சுட்டுக்கிட்டு இருந்தேன். சட்னி இருந்தால் பிள்ளைகளுக்குக் கேட்டு வந்தா நபிஸா. வந்தவ சும்மா இருக்காம, 'என்னங்க மாமு மகளுக்குக் கல்யாணம் வச்சிட்டிங்கபோல' அப்பிடின்னு கேட்டாளா? 'ஆமா, வந்திரு அப்பிடின்னாரு.' 'வர்றேன். உங்க அக்கா வீட்டுல ஒரு பொண்ணக்

குடுக்கிறீங்க. அது மாதிரி எனக்கு ஒரு பொண்ணக் குடுங்க, கூட பொறக்கலண்ணாலும் எங்க அம்மாவும் ஒங்களுக்கு அக்கா மொறைதான் மறந்துராதிங்க, ராபியாவை என் மருமகள்னுதான் நினைச்சுக்கிட்டு இருக்கேன். ஏமாத்திப்புடாதீங்க'ன்னு சொல்லிட்டு சட்னியை வாங்கிட்டுப் போயிட்டா. அதுக்கு இவரு பதில் ஒண்ணும் சொல்லலை. எனக்குக் கஷ்டமா இருந்துச்சு. அவ போனதுதான் தாமதம், 'இவளே தட்டுக்கெட்டுப் போய்த் திரியறா, இவ வீட்டுல நான் பொண்ணக் குடுக்கணுமா?' அப்பிடின்னு ஒரே சத்தம். சும்மா ஒரு பேச்சுக்குச் சொல்றதுதான, அதுக்காக இன்னைக்கே கல்யாணம் பண்ணப் போறமா? எவ்வளவு ஆத்திரம், கோபம். இவர் பேச்சு பஷீர் காதுக்குப் போனா அவருதான் எவ்வளவு சங்கடப்படுவாரு."

ஒரே மூச்சில் சொல்லி முடித்த சொஹ்ராவின் முகம் மிகவும் தர்மசங்கடத்தில் ஆழ்ந்து இருந்தது. "பகலில் அக்கம் பக்கம் பார்த்துப் பேசுறது இல்லெ" என்று சலித்துக் கொண்டாள். றைமாவுக்கு ஒரு நிமிடம் இதயம் திடுக்கிட்டு, பதை பதைத்து ஓய்ந்தது போலிருந்தது. அவள் ஒன்றும் சொல்லவில்லை. இதைப் பற்றி யோசிக்கவே அவளுக்குப் பிடிக்கவில்லை. அவள் மனதிற்குள் ஒருவிதமான தடுமாற்றம் புகை மூட்டத்தைப்போல எழுந்து அவளை ஆழ்த்தியது. "அவ எப்பிடிப்போனா உன் புருஷனுக்கு என்னா? தன் மகளக் கட்டிக்குடுக்கப் புடிக்கலைன்னா அதோட நிறுத்திக்கணும். தேவையில்லாமப் பேசிக்கிட்டு" என்ற றைமாவின் முகம் சங்கடத்தினால் கறுத்துப்போயிருக்க, "வீண் பிரச்னை பண்ணி என்னத்துக்குப் பகைய உண்டுபண்ண? நாளைக்கு நம்ம வீட்டுல கல்யாணம் இருக்கு. அவங்கள்ளாம் வர்றதா இல்லையா?" என்றாள். அவளுக்குச் சோர்வாகயிருந்தது. "சரி, கிளம்பு! இப்ப நாம ரெண்டு பேருமா போயி ஊருக்குள்ள கல்யாணத்துக்கு அழைச்சிட்டு வரணும்

என்ன” என்று சொஹ்றாவைக் கிளம்பச் சொன்னாள். இந்தப் பேச்சைத் தொடர்வது அவளுக்குப் பிடிக்கவேயில்லை என்பதை முகம் தெளிவாகக் காட்டியது.

இருவருமாக ஓரளவுக்குத் தங்களை அலங்கரித்துக் கொண்டு நகைகளை அணிந்து கிளம்பத் தயாரானார்கள். துப்பட்டியை எடுத்துச் சேலைக்கு மேலாகப் போர்த்திச் சொருகி தலையையும் மூடி முக்காடிட்டபின், வஹிதாவைக் கூப்பிட்டு, “நாங்க வெளிய போய் கல்யாணத்துக்குச் சொல்லிட்டு வர்றோம். ராபியாவை துணைக்கு வச்சிக்க. கதவைச் சாத்திக்க” என்று சொல்லி விட்டு, வெளியில் இறங்கினார்கள். றைமாவின் மனம் கரீம், நபிஸா பற்றிச் சொன்ன அந்த வார்த்தையைச் சுற்றியே அலைந்து கொண்டிருந்தது. மனதில் வேதனை கூடி அழுத்தத் துவங்கிற்று.

ஒரே நாளில் ஏறக்குறைய ஊரில் முக்கால்வாசி வீடுகளுக்கு மேல் போய் சொல்லியாயிற்று என்கிற நிம்மதியில் றைமாவும் சொஹ்றாவும் வீடு வந்து சேர்ந்திருந்தார்கள். ஆறு நோன்புக் கிறக்கம் ஒரே மயக்கமாக இருந்தது. ஒவ்வொரு வீட்டிலும் இவர்களுக்கு அன்பான திட்டு கிடைத்தது. “இப்புடியா பொம்பளைக இருப்பீக? நோன்ப வச்சிக்கிட்டு அலைஞ்சு திரியிறீகளே, நோன்பெல்லாம் முடிஞ்ச மறுநாள் சொல்லிக்கலாம் இல்ல? நல்லா வந்தீங்க இந்த வெயில்ல! ஒருவாய் தண்ணி கூட எங்க வீட்டுல குடிக்காம” என்று. அதற்கெல்லாம் றைமா பதில் சொல்லிச் சமாளித்து விடுவாள். “இல்லெக்கா, தலைக்குமேல ஏகப்பட்ட வேல கிடக்கு. ரம்ஜான் மாசம் என்கிறதனால ஒரு வேலையும் பாக்க முடியல. இன்னும் ஒருவாரம்தான இருக்கு கல்யாணத்துக்கு? விட்டா முடியாதுன்னுதான். படுத்தாக்கூட தூக்கம் வரமாட்டேங்குதே வேலைய நினைச்சு.”

“உள்ளதுதானே? தலைப்பிள்ள காரியம். உங்க வீட்டுல மொத மொத

காரியம் வேற. ஊரெல்லாம் எப்போன்னு இருக்கு, பெரிய விருந்தை எதிர்பார்த்து. பெரிய கல்யாணம். வேலை இருக்காதா பின்னே" என்று அவர்களும் சேர்ந்து பேசினார்கள். சொஹ்ராவிடம், "அடுத்தது ஒன்மக சடங்குக்கு நீ ஊருக்குள்ள சொல்லி வரணும், விருந்து வைக்கணுமாக்கும்" என்று சொல்லிச் சிரித்தார்கள்.

தெருவுக்குள் நடக்கும்பொழுது றைமா, சொஹ்ராவிடம் கேலி செய்தாள். "சாப்பாடுன்னா போதும் சனத்துக்கு. மொத ஆளா நிப்பாளுக. என்ன விருந்து போடாமலா போகப் போறோம். அதையே ஞாபகமா பேசிக்கிட்டு இருக்கிறாளுகளே?" சொஹ்ராவும் ஆமோதித்தாள். "ஆமக்கா, எங்க ஊர்ல எல்லாம் கூட இப்பிடி சோத்துக்கும் கறிக்கும் சனம் பறந்து நான் பாக்கல. இங்கதான் இப்பிடி" என்றாள்.

ஊருக்குள் அலைந்த அசதியில் அன்று இரவு சீக்கிரமே படுத்துத் தூங்கி விட்டார்கள். பாதி இரவுக்கு மேல் கதவு தட்டும் சத்தம் கேட்டு எல்லோருமே விழித்தெழுந்தார்கள். கரீம்தான் கதவைத் திறந்தான். வெளியில் கையில் டார்ச்சோடு தோட்டத்துப் பண்ணையாள் பரமன் நின்று கொண்டிருந்தான். அவனுக்குப் பின்னே பத்துப் பதினைந்து பேர் ஆண்களும் பெண்களுமாகக் கூட்டமாக நின்று கொண்டிருந்தார்கள். கரீமுக்கு ஒன்றும் புரியாமல் முகம் குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது. "என்னடா, இந்நேரத்துல?" என்று அவனை அதட்டினான். "ஐயா, இந்தக் கேவலத்த பாருங்கய்யா" என்று சொல்லி எதுவோ சொல்ல முயற்சித்தான். ஏதோ விபரீதமாக நடந்திருப்பதாகத் தோன்றி கரீம் வழியை விட்டு ஒதுங்கி, "மொதல்ல எல்லோரும் உள்ள வாங்க" என்றான். அவர்கள் அனைவரும் கூட்டமாக உள்ளே வந்து பெரிய முற்றத்தில் ஒரு ஓரமாக ஒதுங்கி கைகட்டி நின்றார்கள். அப்பொழுதுதான் கரீம் கவனித்தான், அவர்களுக்கிடையே ஒரு

அழகான, ஓரளவு நாகரீகமான பெண்ணும் தனித்து ஒதுங்கி நிற்பதை.

அதற்குள் காதரும் எழுந்து முற்றத்திற்கு வந்து விட்டிருந்தான். முற்றத்தில் கிடந்த கயிற்றுக் கட்டிலின் மீது தூக்கம் கலையாத முகத்தோடும் மூடிய கண்களோடும் வந்து அமர்ந்தபடி, “ஏண்டா பரமா, எதுவாயிருந்தாலும் காலையில வரலாம் இல்ல? இப்ப என்ன தூக்கத்தைக் கலைச்சுக்கிட்டு” என்று எரிச்சலாகக் கேட்டான். அவனது நீளமான சிவந்தமுகம் அலுப்பினால் சோர்ந்து கிடந்தது. கண்களை அகலத்திறந்து அங்கிருந்தவர்களை உற்றுக் கவனித்தவனுக்குத் தான் வெறும் பனியனோடு வந்து அமர்ந்திருப்பது ஞாபகம் வர, “கரீம், அந்தக் கொடியில கிடக்கிற துண்டை எடு” என்று கேட்டு வாங்கித் தன் உடம்பின் மீதாகப் போர்த்திக் கொண்டான். றைமாவும் சொஹ்றாவும் அவரவர் அறைகளுக்குள்ளிருந்து ஆர்வமுடன் ஜன்னல் வழியாகக் கவனிக்கத் தொடங்கினார்கள். றைமாவுக்கு விஷயம் ஓரளவுக்குப் புரியக்கூட ஆரம்பித்திருந்தது.

“இல்லெ எசமான், இப்பவே இதப் பேசி முடிவு செய்யாட்டி எம்மானம் மரியாதையெல்லாம் போயிடும். நான் நாண்டுக்கிட்டு சாகறதுதான் வழி. இந்தக் கோனானுக்கு மானத்தவிட உசுரு பெரிசுல்ல” என்று சொல்லித் தன் நெஞ்சில் ஆவேசமாகத் தட்டினான். கையிலிருந்த துண்டால் வாயை மூடிக்கொண்டு கேவிக்கேவி அழ ஆரம்பித்தான். அவன் மனைவி ராமாயி ஒரு சலனமுமில்லாமல் ஒரு ஓரத்தில் நின்று அவனையே கவனித்து கொண்டிருந்தாள்.

“ஏம்புள்ள ராமாயி, என்னா நடந்துச்சு சொல்லு” என்றான் காதர் அசுவாரஸ்யமாக. கரீமுக்கு அண்ணன் முன்னாடி எதுவும் பேச முடியாமலிருந்ததால் அப்படியே நின்று கொண்டிருந்தான். மனதுக்குள் எரிச்சலாகவும் இருந்தது.

அவனோ, “இவ என்னா சொல்லுறது முண்ட” என்று

ஆக்ரோசமாகச் சொல்லியபடி அவளை நோக்கி ஓடி வந்தான், தன் இடுப்பிலிருந்த கத்தியை உருவியபடி. அவனோடு வந்தவர்கள் சேர்ந்து அவனை இழுத்துப் பிடித்துக்கொள்ள, "வாடி, ஒன்னைய நான் பொறவு பார்த்துக்கறேன்டி" என்று கறுவினான். காதர் அவனை அடக்கினான். "இந்தா, சாமத்துல என்னா சத்தம் போட்டுக்கிட்டு, சும்மா இருக்கமாட்டே?" என்று அதட்டியவன் அப்பொழுதுதான் கவனித்தான். பரமனின் மகன் கோயமுத்தூரில் இருக்கும் தங்கைய்யா வந்திருப்பதையும் புதிதாக ஒருபெண் நின்றுகொண்டிருப்பதையும். இப்பொழுது காதருக்கு விஷயம் புரிந்திருக்க வேண்டும். "இப்ப சொல்லு பரமா, என்னா நடந்துச்சு?" என்று ஆர்வமாகக் கேட்டவன், "இவன் எப்ப வந்தான்?" என்றான் தங்கையாவைக் காட்டி.

"இந்தப் பாழாப்போறவனாலதாய்யா நான் கேவலப்பட்டு நிக்கிறேன். இவன நான் எம்புட்டுக் கஷ்டப்பட்டு வாயக்கட்டி வயித்தக்கட்டி எஸ்ஸெல்சி படிக்கவச்சு ஆளாக்கினேன். நம்பள மாதிரி நம்ப புள்ளையும் பண்ணக்காரன் வேலை பாக்கவேணாம், நல்ல உத்தியோகம் பாக்கட்டுமுன்னு. இவன் என்னா வேல பாத்தான்னு இப்பத்தான்யா புரியுது. இந்தா, இந்தக் குட்டிய இழுத்துக்கிட்டு வந்துருக்கான்யா, எம்மானம் மருவாத என்னாகிறது? நீங்கதாய்யா என்னையக் காப்பாத்தணும். இப்பவே இந்த நிமுஷமே இந்தப்புள்ளைய விரட்டுனாத்தான் நான் நிம்மதியா இருப்பேன். இல்லென்னா நாண்டுக்குவேய்யா" என்று சொல்லிவிட்டு அப்படியே சரிந்து காதரின் காலில் விழப்போனான். காதர் பதறிப்போய் காலைத்தூக்கிக் கட்டிலில் வைத்துக் கொண்டான். "டேய் எந்திரிடா, கால்லயெல்லாம் விழுந்து என்னைய பாவத்த சுமக்க வைக்காதே" என்று சொல்லிவிட்டு, என்ன செய்யலாம் என்பது போல தம்பியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். கரீமும் அண்ணனின் முகத்தை

ஒருகணம் பார்த்துவிட்டுத் தலையைத் திருப்பிக் கொண்டான்.

காதர், தங்கையாவை அருகில் கூப்பிட்டான். "யாருடா அந்தப் பொண்ணு, என்னா விஷயம்?" என்று கேட்டான். அவன் குரலில் கடுமை ஏறியிருந்தது. தங்கையா தயங்கியவாறு அவனருகில் வந்தான். தோட்டத்துப் பண்ணையாளின் மகனா இவன் என்று காதரே ஆச்சர்யப்படும் விதத்தில் நாகரிகமாக இருந்தான் அவன். நகரத்திற்கேற்ற மாதிரி, உடையும் கிராப்பும். மாநிறம்! களையான முகமும் கூட. நல்ல வளர்த்தியாக இருந்தான்.

"முதலாளி கும்புடுறேங்க! நான் அங்கே ஒரு கடையில வேலைக்கிருந்தேய்யா. அங்கெ இந்தப் பொண்ணு வீடு பக்கத்துல. அவுகப்பா ஒரு டாக்ஸி டிரைவரு. நாங்க ஒருத்தர ஒருத்தர் விரும்புனோமுங்க. அதுதான் அவள இங்க கூட்டிட்டு ஓடியாந்துட்டேன். கோயில்ல வச்சு தாலியும் கட்டிட்டேன். அப்பாரு என்னைய அடிச்சுக் கொல்லுறாரு. என்னைய நீங்கதான் காப்பாத்தணுமுங்க" என்று சொல்லி அவனும் அழுதான். அவன் குரலில் பணிவு மிகுந்திருந்தது. காதர் நினைத்தால் தங்களைப் பிரித்து விட முடியுமென்பதால் அவன் மிகவும் பயந்து போயிருந்தான். காதர் சற்று நேரம் ஒன்றும் பேசாமல் தலைகுனிந்து அமர்ந்திருந்தான். அவனுக்குக் குழப்பமாக இருந்திருக்க வேண்டும். றைமா இங்கிருந்து அவனைப் பார்த்தபடியிருந்தாள். அந்தப் பெண் மிகவும் அழகாக இருந்தாள். முற்றத்து விளக்கின் மஞ்சள் ஒளியில் தெரிந்த அவளது முகம் அவள் மிகவும் பயந்துபோயிருக்கிறாள் என்பதை றைமாவுக்கு உணர்த்தியது.

காதர் அந்தப் பெண்ணை நிமிர்ந்து பார்த்து, "வாம்மா, இங்கே" என்றான். அவள் மெதுவாக நடந்து அவனருகில் வந்து நின்றாள். நல்ல விலையுள்ள சேலை உடுத்தியிருந்தாள். தங்கையாவைப் போலல்லாமல்

கொஞ்சம் வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவளாக இருக்க வேண்டும். "ஏம்மா, உன் பேரென்ன?" என்றான் காதர். அவள் மிருதுவான குரலில், "என்டெ பேரு கோமதி" என்றாள். அவள் ஒரு மலையாளி என்பது இப்பொழுது புரிய காதருக்கும் கரீமுக்கும் ஒரே சமயத்தில் அதிர்ச்சி உண்டாயிற்று. "மலையாளியா?" என்று ஒரே நேரத்தில் இருவருமாகச் சேர்ந்து கேட்டார்கள். அவர்கள் அதிர்ச்சியடைந்த இந்தச் சந்தர்ப்பத்தை விட்டுவிடக்கூடாதென்கிற எண்ணத்தில் பரமன் மறுபடி குதிக்க ஆரம்பித்தான். "பாருங்க எசமான், நம்ம சாதி என்னா, குலம் என்னா, ஒரு மலையாளச்சிய கூட்டிட்டு வந்து நிக்கிறான்." அவனோடு வந்திருந்தவர்களுக்கு அவனை அடக்குவது பெரும் பாடாக இருக்க கரீம் அவனை அதட்டினான். "விசாரிக்கிறோமில்ல, சித்த சும்மா கிடக்க மாட்டே?"

"நீ சொல்லும்மா, தமிழ் தெரியுமில்ல? என்னா சங்கதின்னு சொல்லு" என்றான் காதர் அப்பெண்ணைப் பார்த்து. அவள் ஒன்றுமே சொல்லாமல் சிறிது நேரம் தலைகுனிந்து கொண்டிருந்துவிட்டு, "நான் இங்கென எப்பிடி இரிக்கப் போறேன்னு தெரியல. அங்கெ ஒரு பாத்ரூம்கூட இல்லெ" என்று தட்டுத்தடுமாறி சொல்லியபடி அழ ஆரம்பித்தாள்.

பரமன் மறுபடி துள்ளிக் குதித்தான். "ஆமா, என்வீடு ஒரு ஓலைக்குடிசைதான். இப்பத் தெரியுதுல்ல? ஓடு உங்கப்பன் வீட்டுக்கு." அவனுக்கு அவள் அப்படிச் சொன்னது மேலும் அவமானமாக இருந்தது. காதர், "உஸ்! சும்மா இருடா" என்று அவனை அதட்டினான். பிறகு கரீமை என்ன செய்யலாம் என்கிற ரீதியில் பார்த்தான். கரீம் ஏற்கனவே முடிவு செய்திருந்தான். இனி இங்கிருக்கும் யார் முயற்சி செய்தாலும் அவளை அனுப்பி வைக்க முடியாது என்பதை முகத்தை வைத்தே புரிந்து கொண்டான் காதர், "இங்கெ பாரு பரமா, இனி

இவதான் ஒனக்கு மருமக, தாலி கட்டியாச்சு. இனிமேல அவளத் திருப்பி அனுப்புறது மனசாட்சியோட செய்யிற காரியமல்ல. நீ சாதி கெட்டுப்போச்சு, குலம் போச்சுன்னு ஒப்பாரி வக்கிறது சரியில்ல. அந்தப் பொண்ணத் திருப்பி அனுப்புனா அவ கதி என்னான்னு பாரு. யாரு அவள கட்டுவானுக? இவுகளும் ஒருத்தர ஒருத்தர் விரும்புறாங்க. அதனால நீ வானத்துக்கும் பூமிக்கும் குதிக்கிறத விட்டுட்டு சும்மா இரி. இல்லெ நாண்டுக்குவேன்னு சொன்னாலும் சரி, செய்தாலும் சரி" என்று நிதானமாகச் சொல்லிவிட்டு அண்ணனைப் பார்த்தான் கரீம். அவனுக்கும் தம்பி சொல்வது தான் சரியெனப்பட்டது. அதனால் மௌனமாகத் தலையசைத்து அதனை ஆமோதித்தான்.

கரீம் திடீரென இப்படி ஒரு முடிவைச் சொன்னபிறகு பரமன் ஒன்றும் பேசமுடியாமல் நிலைகுலைந்து போய் நின்றான். அவன் மனைவி ராமாயிக்கு இதில் பூரண சம்மதமிருப்பதை அவள் முகம் உணர்த்திற்று.

இப்பொழுது பரமன் கூட வந்திருந்த அவனது உறவுக்காரர்களுக்கு முகம் தொங்கிப் போயிற்று. அப்பெண்ணை விரட்டிவிடும் எண்ணத்துடனும் ஆவேசத்துடனும் வந்தவர்களுக்கு ஒன்றும் பேசக்கூட முடியாதபடிக்கு கரீம் வாயை அடைத்து விட்டான். தங்களது ஜாதிப் பெயரைக் காப்பாற்ற நாலு வார்த்தை பேசக்கூட வழியில்லாதபடிக்கு ஆன ஏமாற்றம் வேறு அவர்களுக்கு.

காதர் அங்கிருந்தவர்களிடம் தனித்தனியே அவர்களது தோட்டம், வயல் விளைச்சல் பற்றியெல்லாம் ஒன்றிரண்டு வார்த்தை விசாரித்தான். பிறகு, "சரி, கிளம்புங்க எல்லோரும். நடந்தது நடந்துருச்சு. நம்ப பயல நம்பி அந்தப் பொண்ணு வந்துருச்சு. நாமதான் ஆதரிக்கணும். எந்திரி பரமா, ஒன் கோபம் தணியறதுக்கு ரெண்டு நாளாவது ஆவும். அதுவரைக்கும் இந்தப் பொண்ணு நம்ம வீட்டுல

இருக்கட்டும். என்னா நான் சொல்லுறது? டேய் தங்கையா நீயும் உங்கப்பன்கூடப் போயி அவன சமாதானம் பண்ணு போ” என்று சொல்லி அவர்களை வலுக்கட்டாயமாக அனுப்பி வைத்தான். அவனுக்கு எரிச்சலாகவும் வருத்தமாகவும் இருந்தது என்பதை அவனது முகம் தெளிவாகக் காட்டிற்று. அவர்கள் எல்லோரும் போனபிறகு றைமா அப்பெண்ணை மாடியிலிருந்த ஒரு அறையில் கொண்டு போய் விட்டு, படுக்கச் சொல்லிப் பாய் தலையணை விரித்துக் கொடுத்தாள். அவள் முகம் மிகவும் சோகம் நிரம்பியதாகவும் ஏமாற்றத்தாலும் அவமானத்தாலும் வெளிறிப்போயிருந்தது. “ஏம்மா இப்பிடிப் பண்ணுன? உங்க அப்பா அம்மா மனசு எவ்வளவு கஷ்டப்படும். ஒருத்தன் நல்ல விதமா ட்ரெஸ் பண்ணி நாலு பொய்யச் சொன்னா அதை நம்பி வரலாமா?” அவளது தோளைத்தொட்டு ஆதரவாகக் கேட்டவுடன் அவள் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள். அவளுக்கு இவர்கள் பேசுவதைப் புரிந்துகொள்ள முடிந்ததே தவிர தெளிவாகப் பேச வரவில்லை என்பதனால் அழுதே தன் உணர்வுகளை வெளிப்படுத்த பெரும் பிரயத்தனம் செய்தாள். அவளது அழுகைச் சத்தம் கேட்டு மாடியறைக்கு வந்த காதர் தயக்கத்துடன் கதவருகே அமைதியாக நின்றுகொண்டு இருந்தான். அக்குரலில் நிரம்பியிருந்த பாதுகாப்பற்ற தன்மை அவனை நிலைகுலையச் செய்வதாயிருந்தது. மரண வீட்டில் ஒலிப்பதுபோல, இழப்பின் துயரையும் நிராதரவின் தடுமாற்றத்தையும் ஏங்கி ஏங்கி அழுகிற குரல் மனச்சங்கடத்தை யூட்டுவதாயிருக்க, அவன் தலையை நிமிர்த்தி அப்பெண்ணின் முகத்தை உற்றுக் கவனித்தான்.

இன்னும்கூட குழந்தைமை மாறாத முகம், மருண்டு மருண்டு விழிக்கும் கண்கள், மெலிந்து சிவந்து நடுங்கும் உடல், எல்லாமும் சேர்ந்து மனதைப் பிழிவதாயிருந்தது. இவளது பயத்தையும்

துயரத்தையும் போக்கி, முழுப்பாதுகாப்பையும் தரக்கூடிய ஒருவனாக தங்கையா இருப்பானா என்கிற கவலை உண்டாக, ஒரு தகப்பனின் பொறுப்புணர்வும் பரிவும் சூழ அவளைப் பார்த்து, "சரிம்மா, அழுகாதே, நான் இருக்கேன். உன்ன ஒரு பிரச்னையுமில்லாமப் பாத்துக்குவேன்" என்றான். அவ்வார்த்தைகளோடு தனது குரலில் கசியும் பிரியத்தின் மொழி இதுவரை காலமும் அவனே அறியாததாயிருந்தது. றைமாவின் கரத்தினுள்ளாகத் தனது வலது கையைப் பிணைத்திருந்த அவள் சட்டெனத் தனது இரு கைகளையும் நன்றி தெரிவிக்கும் விதமாகக் கூட்டி தன் அழுகையை முடிவுக்குக் கொண்டுவந்தாள்.

இத்தனை நேரமாக மௌனித்திருந்து அனைத்தையும் கவனித்துக் கொண்டிருந்த றைமாவின் முகம் தன் கணவனது கருணையை நினைத்துப் பெருமிதத்தால் நிறைய அவளது கண்களிலிருந்து ஏனோ கண்ணீர் வழிந்தது.

அடுத்த இரண்டு நாள் ஊரில் உள்ள அத்தனை வீட்டுப் பெண்களும் அவளை வந்து பார்த்துவிட்டுப் போனார்கள், வினோதமான ஒரு வஸ்துவைப் பார்ப்பதுபோல! ஆளுக்கொரு கேள்வி கேட்டு அவளையும் சொஹ்றா, றைமாவையும் குடைந்து எடுத்துவிட்டதில் றைமா ரொம்பவே வெறுத்துப்போய்விட்டாள். "இவளுகளுக்கு வம்பு பேசுறதுன்னா இப்பிடியா திரிவாளுக. அவ அவ வீட்டுல நடக்குறத உத்துப்பாத்துக்கிட்டு இருக்க மாட்டேங்கிறாளுகளே. எவளையும் நம்மால வரவேணாம்னு சொல்ல முடியுமா? அத்தனையும் நம்ம சாதி சனம்" என்று நொந்து போய் திட்டித்தீர்த்தாள் சொஹ்றாவிடம். அவளுக்கு ஏகப்பட்ட கல்யாண வேலைகள் பாக்கி இருக்கும் அவசரம் வேறு தலைக்கேறியிருந்தது.

ராபியாதான் அந்த இரண்டு நாளும் சந்தோஷத்தில் மிதந்தாள். தன்

தோழிகளை எல்லாம் கூட்டி வந்து கோமதியைக் காட்டிப் பெருமைப்பட்டாள். அவளது அழகு ஊரெல்லாம் தீப் போலப் பரவியிருந்தது. அடுத்த இரண்டு நாட்களுக்குள் தங்கையா தன் தகப்பனைச் சமாதானம் செய்து விட்டு வந்து முதலாளி வீட்டிலிருந்து அவளை அழைத்துச் சென்றான். றைமா அவளுக்குப் புத்தி சொல்லி அனுப்பி வைத்தாள். "குடிசை வீடுதான். அதை நினைச்சுக்கிட்டு இருக்காதே, தங்கையா உன்னை நல்லவிதமா வச்சுக்குவான்."

# 25

*ஊரில் திருவிழா! தொலைவில் ஒலிக்கும் ரேடியோச் சத்தம் கனத்துக்கிடந்த இருளைத் துளைத்து தெரு நெடுக ஓடிக்கொண்டிருந்தது. அம்மா தூங்கியிருந்தாள். அவளுக்குச் சில நாட்களாக உடல் நலமில்லை. பிரஷர் இருப்பதாகச் சொல்லி டாக்டர் மாத்திரை கொடுத்திருந்தார். அதோடு மூட்டுவலி வேறு இருந்தது. காலையில் தோட்டத்தில் தேங்காய் வெட்டுகிறார்கள் என்று அங்கே போய்விட்டு வந்த அசதி வேறு. வலி மாத்திரை போட்டுக் கொண்டதனால் சீக்கிரத்திலேயே படுத்துத் தூங்கிவிட்டாள். பிர்தவ்ஸுக்குத் தூக்கம் வரவில்லை. எழுந்து வாசல் கதவைத் திறந்து முற்றத்தில் இருந்த திண்ணையில் அமர்ந்தாள். வானம் பளிச்சென்றிருந்தது, ஒரு துளி மேகம் கூட இல்லாமல். அடுத்த தெருவில்தான் 'வள்ளி திருமணம்' நாடகம் நடந்து கொண்டிருந்தது. ஊரில் ஒரு பெண் கூட பாக்கி இல்லாமல் பத்துமணிக்கே தலையில் முக்காட்டை இழுத்து விட்டுக் கொண்டு வேடிக்கை பார்க்கப் போய்விட்டார்கள். இவர்கள் வீட்டு வழியேதான் அங்கே போக வேண்டும். அவர்களது தயங்கி நகரும் பாதச்சுவடுகளைக் கேட்டபடியேதான் இவள் படுத்திருந்தாள். ஒவ்வொரு வருடமும் திருவிழாவுக்கு ராபியா வருவாள். ராட்டினம் சுற்றவும் விளையாட்டுச் சாமான் வாங்கவும் நாடகம் பார்க்கவும் அவளுக்கு ரொம்பவே இஷ்டம். ஆனால் இந்த வருடம் அவள் வரவில்லை. அவளை அக்காவோ மச்சானோ இனி அனுப்பப் போவதில்லை. அவளைப் பார்க்க வேண்டும் போலிருந்தது பிர்தவ்ஸுக்கு. மடியில் வைத்துக் கொஞ்ச வேண்டும் போல இருந்தது. தனக்குள் சிரித்துக் கொண்டாள்,*

அதில் வேதனை மிகுந்திருந்தது. அவளுக்கும்கூட நாடகம் பார்க்கப்போக ஆசையாகத்தானிருந்தது. அம்மா விடமாட்டாள். மட்டுமல்ல அவளோடு யார் சேர்ந்து வருவார்கள்? அவளைத்தான் ஊரில் எல்லோரும் ஒதுக்கி வைத்தது மாதிரி ஒருவித வெறுப்புடன் பார்க்கிறார்களே!

வானத்தில் ஏராளமான நட்சத்திரங்கள் கூட்டம் கூட்டமாக மினுங்கிக் கொண்டிருந்ததைப் பார்க்க மிகவும் அழகாக இருந்தது. ஒரு நட்சத்திரம் எரிந்து விழுந்தது. அந்த எரிந்த நட்சத்திரம் தானேதான் என்று தோன்றியது. நிச்சயமாக அது தான்தான் என்று நம்பினாள். வானில் இருக்கும் இத்தனை கோடி நட்சத்திரங்கள் மின்னிக் கொண்டிருக்கையில் ஒரே ஒரு எரி நட்சத்திரம் எரிந்து விழுந்த மாதிரித்தானே நானும்! சிறுவயதில் வானில் எரிந்து விழும் நட்சத்திரத்தைப் பார்க்க நேர்ந்தால் உடனே அம்மா சொன்னபடி பச்சை மரத்தைப் பார்ப்பாள். இல்லையென்றால் ஞாபக மறதி உண்டாகுமாம்! இப்பொழுது தான் பார்த்த எரிநட்சத்திரம் பழையதையெல்லாம் மறக்கச் செய்யக்கூடாதா, ஞாபக மறதியை உண்டாக்கக் கூடாதா என்று ஏக்கமாக இருந்தது. தான் மட்டும் நடந்ததையெல்லாம் மறந்தால் எல்லாம் சரியாகி விடுமா என்ன? இந்த ஊரே மறந்தால்தான் நன்றாக இருக்கும். குறிப்பாக அம்மா, அக்கா இருவருக்காவது பழசெல்லாம் மறந்து போனால் நன்றாக இருக்கும். என்னைப் பற்றிய கவலை எதுவுமின்றி நிம்மதியாக இருப்பார்கள் என்று நினைத்துக் கொண்டாள்.

இந்த வானத்தையொட்டித்தான் எத்தனை நம்பிக்கைகள்? சிறுவயதில் மூன்று கொக்குகள் சேர்ந்து பறந்ததைப் பார்த்ததாகச் சொன்னால் அம்மா சொல்வாள், உனக்குப் படிப்பு நல்லா வரும் என்று! நன்றாகத்தான் படித்தேன். படிக்க வைத்தால்தானே?

நாடகத்தில் ‘காயாத கானகத்தே’ என்று சொல்லி யாரோ பாடுவது கேட்டது. காற்று வீசியது. லேசான குளிரில் உடல் நடுங்க கால்களை இறுக்கிக் கட்டிக் கொண்டாள். தெருவில் யாரோ நடமாடும் சத்தம் கேட்டது. யாராவது தூக்கம் வந்துவிட்டதால் பாதி நாடகத்தோடு வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருக்கலாம் என்று நினைத்துக் கொண்டாள். எதிர்வீட்டில் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. சிவாவாகத்தானிருக்கும். அவன்தான் பாதியில் வந்திருக்க வேண்டும். ஜெயா வேறு ஊரில் இல்லை. குழந்தைக்கு ஜுரம் என்று அம்மா வீட்டிற்குப் போயிருந்தாள். பெரும்பாலான நாட்கள் அவள் இங்கிருப்பதேயில்லை என்பதும் நினைவுக்கு வர இவளுக்குத் திடீரென அவனைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. மெதுவாக நடந்து சென்று ரொம்பவும் மெதுவாகத் தெருக்கதவைத் திறந்து தலையை மட்டும் வெளியே நீட்டினாள். தகரக்கதவின் கிறீச்சிடும் ஒலி அவனைச் சட்டெனத் திரும்ப வைத்தது. அவள் நிற்பதைப் பார்த்ததும் ஒரு கணம் திகைத்து நின்றான். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்தபடி பேசாமல் நின்று கொண்டிருந்தார்கள். தன்னையும் மீறி ஓடிஒளியத் தவிக்கிற அவளது பாதங்களைத் தரையோடு பிணைத்தது அவனது பார்வை.

சன்னமான தெரு விளக்கின் ஒளியோடு தன்மீது வந்துவிழும் அவனது பார்வையில் திரளும் பிரியமும், நடுங்கும் உடலைத் தழுவி விலகும் காற்றும், மனதை என்னவோ செய்வதாகயிருக்க அவளுக்கு ஏனோ மறைந்து கொள்ளத் தோன்றவில்லை. அவன் அங்கிருந்தபடி இரண்டு கைகளையும் நீட்ட அதற்காகவே காத்திருந்தாற்போல அவள் எந்த ஒரு எதிர்ப்புமின்றி அவனையே பார்த்தவாறு பறவையின் உதிர்ந்த சிறகென மிதந்து அவனது கைகளுக்குள் ஒடுங்கினாள். வருடக்கணக்காக அவளுக்குள் தேங்கிக்கிடந்த உணர்வுகள் உடைந்து வெள்ளம்போல ஓடத்துவங்க அதன் ஆற்றலுக்கு வேகத்திற்கு

ஈடுகொடுக்க முடியாமல் திணறினான் சிவா. ஒரு கோழிக் குஞ்சைப்போல ஒடுங்கிய இளம் தேகத்தினுள்ளிருந்து பொங்கிப் பெருகிய வேகம் அவனைப் பயம் கொள்ளச் செய்தது. அவனுக்குள்ளாகக் கரைந்து போய்விடத் தவிக்கும் மனதோடு அவனது ஆதரவான அணைப்பின் வழியே அவனுக்குள் மூழ்கிப் போய்விட வேண்டுமென்கிற வெறியுடன் அவனது உடலோடு தன்னைப் பின்னிக் கொண்டிருந்தவளை, வியர்த்து வழிந்த அவனது முதுகிலிருந்து அவளது கைகளுக்குள் சிக்கிய பூணூல் நிலைதடுமாறச் செய்ய, நொடிப்பொழுது தன்நினைவுக்கு வந்து அம்மாவை நினைத்தாள். இது அவளுக்குத் தெரிந்தால் எப்படித் துடித்துப் போவாள் என்பதும் உடனே அவள் உயிர் பிரிந்துவிடக்கூடும் என்பதும் ஞாபகத்தில் வர, வலுக்கட்டாயமாக அந்நினைவை அகற்றினாள். அவளுக்கு அந்த நேரம் தன்னைச் சுற்றியுள்ள எவ்வளவோ விஷயங்களைவிட, அம்மாவை விட, தனது சந்தோஷம் மட்டுமே முக்கியமென உணர்ந்தவளாக அவனை இன்னும் அதிக தீவிரமான வெறியுடன் அணைத்துக் கொண்டாள். தூரத்தில் ஒலித்த நாடகத்தின் வசனங்களும் பாடல்களும் அவளிடமிருந்து வெளிப்பட்ட ஆவேசமான பெருமூச்சில் தேய்ந்து கொண்டிருந்தன. கூடவே கண்களிலிருந்து கண்ணீரும் வழிந்தோடிக் கொண்டிருந்தது. அவள் வீடு திரும்பும் பொழுது எங்கோ சேவல் கூவியது.

பூனையைப் போல மெதுவாக அடிஎடுத்து வைத்து நடந்து வந்து அம்மாவின் அருகாகப் படுத்தவளுக்கு நடந்தது கனவா நனவா என்று இன்னும் முடிவுக்கு வர இயலவில்லை. ஒரு கனவு இத்தனை அழுத்தமாக மனதில் தங்கிவிடுவதில்லை. அத்தனை அழுத்தமாகப் பதிந்திருப்பது நிஜமன்றி வேறெதுவும் இருக்காது என்று மனதில் தோன்ற, பயத்தாலும் பரவசத்தாலும் அவளது உடல் சிலிர்த்தது.

சிவந்த உடலெங்கும் முடிகள் குத்திட்டு நிமிர்ந் தடங்குவதை அவளால் தொட்டு உணர முடிந்தது. இது நிஜமென்றால் எப்படி சாத்தியமாயிற்று? எது தன்னை இத்தனை பெரிய விஷயத்தைச் செய்ய வைத்தது என்று தனக்குள் ஆச்சரியப்பட்டாள். அல்லாவின் பேரில் தனக்கிருக்கும் பயம், மதத்தின் மீது இருக்கும் நம்பிக்கை, ஊர் குறித்த பயங்கள், தயக்கங்கள், அப்புறம் தன் குடும்பத்தின் பேரில் தனக்குள்ள பற்று இப்படி எவ்வளவோ விஷயங்கள் இருந்தாலும்கூட, எல்லாவற்றையுமே ஒரு நொடியில் தூக்கி எறியச்செய்தது எது? தன்னை இவ்வளவு பெரிய துணிச்சல் காரியாக அடையாளம் காட்டியது எது? இந்த உடல்தானா, அதன் தேவைதானா? கணநேர இன்பத்துக்காக, எல்லாவற்றையுமே துறந்து விட முடியுமா? குழப்பத்தினால் மண்டையே வெடித்துவிடும் போலிருந்தது.

அவளுக்கு சிவாவின் நினைவு வந்தது. அவன் அவள் மீது கொண்டிருப்பது உடல் மீதான பிரியம் மட்டுமில்லை என்பதை அவள் அறிவாள். இரவு அவன் அவளோடிருந்த சமயத்தில் அவனுடைய கைகளில் அதன் ஸ்பரிசத்தில் அவள் மீதான அன்பை, காதலை ஓரளவு முழுமையாக உணர்த்திவிட அவனுக்கு முடிந்தது என்பதை நினைக்கும்போது அவளுக்குள் சந்தோஷம் பொங்கி வழிந்தது.

ஒருவேளை இதை யாராவது பார்த்திருந்தால். . . என்கிற எண்ணமும் கூடவே எழுந்து குலைநடுங்கச் செய்தது. நிச்சயமாக அவளும் அவனும் பள்ளிவாசலில் ஊர் ஜமாஅத் முன்னிலையில் நிறுத்திக் கேவலப்படுத்தப்பட்டு மிகமிகக் கடுமையான தண்டனைக்கு உள்ளாக்கியிருப்பார்கள் என்பது புரிந்து அவளது பயம் அதிகரித்தது. மரண பயத்தைவிட அது கொடுமையானதாகயிருந்தது. நிஜமாகவே யாரும் பார்க்கவில்லையா, இல்லை பார்த்திருப்பார்களா என்று சந்தேகமாகயிருந்தது. பார்த்திருந்தார்களென்றால் இந்நேரம் ஊரை

அலப்பியிருப்பார்களே! நிச்சயமாக இருக்காது என்று தன்னைத் தானே சமாதானம் செய்து கொண்டவள், தனக்குத்தானே எதையெதையோ யோசித்துக் குழப்பிக் கொண்டே தூங்கிப்போனாள்.

ஆமினா தன் உடலில் ஏதோ வெப்பம் தாக்கிய அதிர்ச்சியில் திடுக்கிட்டு எழுந்தாள். பிர்தவ்ஸின் கொதிக்கும் உடல் குளிரில் தூக்கித் தூக்கிப் போட்டுக் கொண்டிருந்ததைக் கண்டு பதறி எழுந்தாள். "ராத்திரி நல்லாத்தானே படுத்தா, இப்பொ இப்பிடிக் குளிர் காய்ச்சல் வாட்டுதே?" என்று தனக்குள்ளாக முணுமுணுத்தவள் பயந்து போய் எழுந்து ஈரத்துணியைப் பிழிந்து கொண்டுவந்து அவளது நெற்றியிலும் கழுத்திலும் துடைத்து எடுத்தாள். "பிர்தவ்ஸ்! பிர்தவ்ஸ்!" என்று அவளை உலுக்கி எழுப்ப முயன்றாள். அவளுக்கு நினைவேயில்லாதது மாதிரி இருந்தது. டாக்டரிடம் கூட்டிப்போக முடியாது. பஸ் இல்லை. டாக்டரைக் கூட்டி வரச் சொல்லலாம் என்றால் யாரை அனுப்புவது என்றும் புரியவில்லை. ஆமினாவுக்கு நெஞ்சுவலித்தது. தான் ரொம்பவும் திக்கற்றவளாகப் போய் விட்டோமோ என்று பீதியுண்டாயிற்று. சபியா வீட்டுக்குப்போய் சிக்கந்தரை உதவச் சொல்லலாம் என்று நினைத்து வேகமாக எழுந்து பக்கத்து வீட்டுக்குப் போனாள். சபியாதான் வெளித் திண்ணையில் தஸ்பீஹ் மணியை உருட்டியபடி உட்கார்ந்திருந்தாள். ஆமினாவின் பதற்றமான முகம் அவளை எழுந்து நிற்க வைத்தது. "என்னாச்சு ஆமினா?" என்று கேட்டாள். அவளுக்குக் கவலையாக இருந்தது, எதுவும் கெட்ட செய்தியோ என்று. நிக்காஹ் வைத்திருக்கிற நேரத்தில் யாருக்கும் எதுவும் ஆகிவிட்டால் என்னாவது என்ற கவலை அவளுக்கு.

"ஒண்ணுமில்ல சபியா, பிர்தவ்ஸுக்குக் கடுமையான காய்ச்சல் அடிக்குது, டாக்டரக் கூட்டி வரணும். சிக்கந்தர் இருந்தா செத்த பைக்ல போகச் சொல்லணும்" என்றாள். சபியாவுக்குப் பதற்றம்

குறைந்து நிம்மதி உண்டாயிற்று. “அவன் ராத்திரியெல்லாம் திருவிழா பாத்துட்டுத் தூங்குறானே ஆமினா, இப்போதைக்கு எந்திரிக்க மாட்டானே, என்ன செய்யறது?” என்று சலித்துக்கொண்டவள், “ஏன், கஷாயம் போட்டுக் குடுவே பார்க்கலாம். சளிபிடிச்சிருக்கோ?” என்று கேட்டாள்.

“அதெல்லாமில்லே, ராத்திரி நல்லாருந்தது. திடீர்னுதான்” என்றாள் ஆமினா.

“வேணும்னா ஒண்ணுசெய். என்கிட்ட வெளிநாட்டுக் காய்ச்சல் மாத்திரை இருக்கு, அதக் குடுத்துப்பாரு உடனே கேக்கும்” என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் போனாள் சபியா. ஆமினாவுக்கு அங்கு நின்று கொண்டிருக்க முடியவில்லை. அவள் வருவதற்குள் வீட்டுக்குள் ஓடினாள்.

மாத்திரை எடுக்க வீட்டுக்குள் போன சபியா கட்டிலில் படுத்து தன்னை மறந்து தூங்கிக் கொண்டிருந்த மகனைப் பார்த்தாள். பிர்தவ்ஸுக்குக் காய்ச்சல்! டாக்டரைக் கூப்பிட்டு வரணும் என்று ஒருவார்த்தை சொல்லி எழுப்பினால் போதும், பறந்து கொண்டு போய்வருவான். அவனுக்கு அவள் அழகுமேல் ஒரு கண்ணிருப்பது சபியாவுக்குத் தெரியும். மொட்டை மாடியில் நின்றுகொண்டு அவள் வீட்டு வாசலையே பார்த்துக் கொண்டிருப்பான், அவள் தலை தட்டுப்படுகிறதா என்று! சபியாவுக்கு எரிச்சலாக இருக்கும். இருந்தாலும் சும்மா சொல்லக் கூடாது. பிர்தவ்ஸ், சிக்கந்தர் கண்ணில் படக்கூடாது என்று வாசல் பக்கம் நடமாடவே மாட்டாள். ஆமினாவும் கொன்று போட்டு விடுவாள். எப்படி இருந்து என்ன, கடைசியில வாழ்க்கையக் கோட்டை விட்டுட்டாளே என்று தனக்குள் முனகிக் கொண்டாள். ஒரு நிமிடம் மகனை எழுப்பலாமா என்று தயங்கினாள். ஆம்பளத் துணையில்லாத வீடு. நாளைக்கி

சொஹ்ராவுக்குத் தெரிந்தால் வருத்தப்படுவாள். உதவி செய்யக்கூட யோசித்தீங்களா என்று கேட்டாலும் கேட்பாள். என்ன இருந்தாலும் சொஹ்ரா தன்னோட தம்பி பெண்டாட்டி. அவளது தயவும் உறவும் வேணுமே என்றெல்லாம் யோசித்தவள், “ஏத்தா, சிக்கந்தரு, சித்த எழுந்திரி! பிர்தவ்ஸுக்குக் காய்ச்சலாம், போயி டாக்டர கூட்டிட்டு வர்றியா?” என்று சொல்லித் தட்டி எழுப்பினாள். என்னவோ அவன் மாட்டேன் என்று சொல்லப்போவது மாதிரி.

அம்மா தன்னை எழுப்புகிறாள் என்பதைவிட, பிர்தவ்ஸ் என்று எதுவோ சொல்கிறாளே என்று அரைகுறை விழிப்பில் எழுந்து உட்கார்ந்து கொண்டு, “என்னம்மா, யாருக்கு என்ன?” என்று ஆர்வத்துடன் கேட்டவன் வாயை ஆவெனப் பிளந்து கொட்டாவி விட்டான். அதிகாலை நாலுமணிக்குத்தான் வந்து படுத்திருந் தான் என்பதால் நல்ல தூக்கம் கண்களில் மிச்சமிருந்தது. இதே நேரம் அம்மா வேறு ஏதாவது வேலை சொல்லி எழுப்பியிருந்தாள் என்றால் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருப்பானே தவிர, சாமான்யத்தில் எழுந்திருக்க மாட்டான். அவள் தனக்குள் சிரித்துக் கொண்டாள். “ஒண்ணுமில்ல, பிர்தவ்ஸுக்குக் காய்ச்சல் கொளுத்துதாம். பக்கத்து ஊருல போயி டாக்டர கூப்புடணுமாம். நீ கொஞ்சம் போயிட்டு வருவியாம் ஆமினா கேட்டாள். அதுதான்!” என்றாள்.

“இதோ போறேன்” என்று சொல்லி வேகமாக எழுந்தான், தனது ஆர்வத்தைத் தன் தாயிடம் காட்டிக் கொள்ளாமல் மறைத்தபடி. “சரி, நீ கிளம்பு, நான் போயி அவளப் பார்த்துட்டுவர்றேன்” என்று சொல்லிவிட்டுப் பக்கத்து வீட்டிற்குக் கிளம்பினாள் சபியா. அவளுக்கும் முட்டியில் நல்ல வலியிருந்ததனால் மெது மெதுவாகத் தான் படிகளில் ஏற முடிந்தது. ஆமினா அடுப்பில் கஷாயம் வைத்துக் கொண்டிருந்தாள். வறுத்த மல்லியின் வாசனை வீடெங்கும்

நிரம்பியிருந்தது. “என்னாச்சு? இப்ப எப்பிடியிருக்கா பிர்தவ்ஸ்” என்று கேட்டபடி அறைக்கு வெளியே நின்று ஆமினாவை நோக்கிக் குரல் கொடுத்தாள். அடுப்படியிலிருந்தபடியே, “வா, சபியா” என்று சொல்லிவிட்டு, “அப்பிடியே தான் இருக்கு, இப்பதான் சிவாவை அனுப்பியிருக்கேன் டாக்டரக் கூட்டி வரச்சொல்லி” என்று அங்கிருந்தபடியே குரல் கொடுத்தாள்.

“அடடா! ஆளனுப்பியாச்சா, நான் சிக்கந்தரையில்ல கிளம்பச் சொல்லியிருக்கேன். அப்ப வேணாமா” என்று கேட்டவாறு மறுபடி வெளி வாசலுக்கு வந்து நின்று தன் வீட்டைப் பார்த்து சற்று உரக்கக் குரல் கொடுத்தாள். “அத்தா சிக்கந்தரு!” அவன் அதற்குள்ளாகக் கிளம்பி வெளிவாசலுக்கு வந்திருந்தான். பைக்கை ஸ்டார்ட் செய்வதற்காக உதைத்தவன், “என்னம்மா” என்று அங்கிருந்தபடியே குரல் கொடுத்தவனாக பைக்கை ஸ்டாண்ட் போட்டு நிறுத்திவிட்டு ஆமினாவின் வீட்டை நோக்கி வந்தான். “நீ போக வேணாம், சிவா போயிட்டானாம்” மகனிடம் சொன்னாள் சபியா. சிக்கந்தருக்கு மிகவும் ஏமாற்றமாக இருந்தது. தனக்குக் கிடைக்க இருந்த பெயரைச் சிவா தட்டிக் கொண்டு போய்விட்டானே என்கிற ஆதங்கம் முகத்தில் தெரிந்தது. அவளிடம் ஒரு நல்ல அபிப்ராயத்தைப் பெற கிடைத்த வாய்ப்பு இப்படி ஆகிவிட்டதே என்றும் நினைத்து வருந்தினான். அவனுக்குத் தன் அம்மாவின் மேல்தான் கோபம் உண்டாயிற்று. அவள்தான் நான் தூங்குவதாகச் சொல்லி ஆமினாவை விரட்டியடித்திருப்பாள் என்று அவனுக்குத் தெரியும். அவன் ஒரு வார்த்தையும் பேசாமல் மறுபடி வீட்டுக்குள் போனான். தூக்கமும் கெட்டுப் போனதில் எரிச்சலாக இருந்தது. மறுபடி தூங்கலாம் என்று சட்டையைக் கழற்றிக் கொடியில் போட்டுவிட்டுக் கட்டிலில் படுத்துக்கொண்டான்.

நாளை காலை அத்தா இலங்கையிலிருந்து வர இருப்பது நினைவுக்கு வந்தது. அவரை விமான நிலையத்தில் போய் கூட்டி வரத்தேவையில்லை. தானாகவே வந்து விடுவார். நீண்டநாள் அனுபவம். அவருக்குப் பார்க்கவெனத் திருமண வேலைகள் பாக்கி ஏதும் இல்லை. அம்மாவும் அவனுமே பெரும்பாலான காரியங்களை முடித்திருந்தார்கள். அம்மா அடிக்கடி புலம்புவாள்: "இந்த மனுஷனப் பாரு, இன்னும் வந்து சேரல. கொஞ்சமாச்சும் பொறுப்பு இருக்கா. நான் தனியாளா நின்னு கஷ்டப்பட்டுக்கிட்டு இருக்கேன்."

மாப்பிள்ளை வீட்டுக்குப் பெரிதாகக் கல்யாண வேலை இருப்பது போல அலட்டிக்கொள்ளுவாள். அவள் புத்தியே அப்படித்தான்! எதையும் பெரிதுபடுத்திப் பேசுவாள். ஊருக்குள் போய் அழைப்பதும் தெரிந்தவர்களுக்குப் பத்திரிகை கொடுப்பதும்தான் முக்கியமான வேலை. எல்லாச் செலவையும் மாமு வைத்துக்கொடுத்த பணத்தில் தான் செய்தாள். வெள்ளையடிக்கும் வேலையும் ரம்ஜானுக்காகச் செய்யக் கூடிய ஒன்றுதான் என்பதால் அந்த வேலையும் மிச்சம். அவன் படுக்கையிலிருந்தவாறே மேலே உத்தரத்தைப் பார்த்தான். சுண்ணாம்பின் வெண்மையில் சுவர் பளிச்சென்றிருந்தது. அவன் எவ்வளவோ மன்றாடிப் பார்த்தான். வீட்டுக்கு பெயிண்ட் அடிக்கலாம் என்று! அவள் பிடிவாதமாக மறுத்துவிட்டாள். "நீயும் அவரும் வெளிநாட்டுக்குப் போவீக, பொம்பளைக நாங்க மட்டும் தானே இங்கெ கிடக்கப்போறோம். கலியாணத்துக்காகன்னு பெயிண்ட் அடிச்சு வீண் செலவு எதுக்கு? அதுவுமில்லாம நாம பொண்ணு ஊருலதான போயி நிக்காவ முடிக்கப் போறோம்" என்று சொல்லி விட்டாள்.

அவளது கஞ்சத்தனத்தை நினைத்து வெறுப்பேற்பட்டது அவனுக்கு. அவள் எது சொன்னாலும் அத்தாவும் தலையாட்டுவார். "எவ்வளவு

பணமிருந்து என்ன? வாழத்தெரியாத ஜன்மங்கள்” என்று முணுமுணுத்தான். இன்னும் நாலைந்து நாளில் கல்யாணம். வீட்டில் கல்யாணக்களை கொஞ்சம்கூட இல்லை. நாலு காசு செலவழித்தால்தானே? தன் தாய் பிள்ளைகளைக்கூட அண்ட விடமாட்டாள். அப்புறம் எப்படி அத்தாவின் உறவுக்காரர்களை வரவிடுவாள் என்று நினைத்துக் கொண்டான்.

நேற்று அத்தாவின் தங்கை நூர்நிஷா வந்திருந்தாள். சபியா வழக்கம்போல அவளிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. அவளாகவே வலிய, “ஏன் மதினி, என் மருமகனுக்கு கல்யாணம் வச்சிருக்கே, எனக்கெல்லாம் கோடிச்சீல இல்லையா?” என்றாள் உரிமையாக! சிக்கந்தரும்தான் அப்போது ஹாலில் இருந்தான். என்றாலும் கவனிக்காததுபோல இருந்து கொண்டான். “ஏன், நீ எம்புள்ளைய வளர்த்து எடுத்தது கெட்டுப் போச்சோ? உரிமை பாராட்ட வந்துட்ட!” என்றாள் சபியா வெடுக்கென்று. “ஏன் வளர்த்து எடுத்தாத்தான் உரிமை இருக்குமா என்ன? என்னாருந்தாலும் அவன் என் மருமகன்தானே? ஒங்களுக்கு ஒத்தப்புள்ள, சீரும் சிறப்புமா பண்ணி வச்சிங்கண்ணா நாங்கல்லாம் வாழ்த்துவோமுல்ல?” என்றாள் அவளும் விட்டுவிடாமல்.

அவளுக்கு சபியாவின் குணம் தெரியும். எதுவும் காரியம் ஆகப்போவதில்லை என்பதும் தெரியும். இருந்தாலும் சும்மாவேனும் வாய்விட்டுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அம்மா இத்தனை கடுப்பாகப் பதில் சொல்லியும்கூட அவளுக்கு ரோசம் வரவில்லை. அவள் போனதும் சபியா நீண்ட நேரம் கத்திக் கொண்டிருந்தாள். “ரோசங்கெட்ட முண்டை! அவுசாரி முண்டை! இவ நடத்தை சரியில்லாததனாலதான அவ மூஞ்சியில முழிக்காமக் கிடக்கிறேன். என்னா நெஞ்சழுத்தம் இருந்தா, உரிமை பாராட்ட வருவா,

வெளக்குமாத்துக்கட்டை” என்று கண்டபடி கத்தித்தீர்த்தாள்.

நூர்நிஷாவைப் பக்கத்தில் ஒரு ஊரில்தான் மணமுடித்துக் கொடுத்தார்கள். அவளது கணவனுக்கு வெளி மாநிலத்தில் நடை பாதையில் ரெடிமேடு துணிகளை விற்கும் வியாபாரம். தீபாவளி, ஓணம் மாதிரி பண்டிகை சீஸன்களுக்குப் போய்வருவான். முதலில் ஒரு ஆண்குழந்தையும் அடுத்தது இரட்டைப் பெண்குழந்தைகளும் பிறந்தன. ஓரளவு நல்ல நிலைமையில் தானிருந்தார்கள். சிக்கந்தருக்கு ஞாபகம் இருக்கிறது. திடீரென அவளது கணவனுக்கு உடல் நலமில்லாமல் போய் இறந்து விட்டான். ஏதோ பெண் நோய் என்று ஊரில் பேசிக் கொண்டார்கள். அதன்பிறகு மூன்று குழந்தைகளுடன் அவள் இங்கேதான் திரும்பினாள். சபியா ஆதரவு தராதநிலையில், இவனது தந்தை சையது தனியாக ஒரு வீட்டை வாடகைக்குப் பிடித்துக் கொடுத்து அவளை இருக்க வைத்து விட்டு சிலோனுக்குப் போனார். தனது தங்கைக்கு ஏதாவது உதவி செய்ய வேண்டுமென்கிற எண்ணத்தில்தான் அவர் இருந்தார். அவ்வப்போது பணம் அனுப்புவார். நாளடைவில் சபியா அதனை நிறுத்திவிட்டாள். மனைவியை மீறி தன் விருப்பத்திற்கு ஒரு துளி மூத்திரம்கூட சையது ராவுத்தர் பெய்ய மாட்டார் என்று ஊருக்குள் ஒரு பேச்சு உண்டு. அந்த அளவுக்கு அவள் பேரில் உயிரை வைத்திருந்தார் அவர். நூர்நிஷா பிள்ளைகளை வைத்துக் கொண்டு சாப்பாட்டுக்கு ரொம்பவே கஷ்டப்பட்டாள். அதன் பிறகு வேற்று ஆண்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளவும் ஆரம்பித்தாள். வேறு எங்காவது பெண்கள் தப்புதண்டா பண்ணினால் ஊரைக் கூட்டிப் பஞ்சாயத்து வைத்துவிடுவார்கள். ஊர் நாட்டாண்மை, முத்தவல்லி இருவருக்கும் கூட அவளோடு தொடர்பு இருந்ததனால் அவளுக்கு அந்தப் பிரச்னையில்லை. இதற்கிடையில் அவளது கொழுந்தன்

இதையெல்லாம் கேள்விப்பட்டு வந்து விட்டான், அவளிடமிருந்து தங்களது வாரிசை பறித்துக்கொண்டு போக! அவள் அழுது கதறக் கதற ஆண் குழந்தையை அவன் வலுக்கட்டாயமாக தூக்கிச் சென்ற காட்சி இன்னும் கூட இவனுக்கு ஞாபகத்திலிருந்து வருத்திக்கொண்டிருந்தது. அதன் பிறகு இவளுக்கு என்ன தோன்றியதோ, தன் இரண்டு பெண் குழந்தைகளையும் கூட யார் யாருக்கோ தத்துக் கொடுத்து விட்டாள். சாப்பாட்டுக்கு வழியில்லாமல் வளர்த்து ஆளாக்கித் திருமணம் செய்துவைக்க வழியில்லை என நினைத்தாளோ அல்லது தன்னிடமிருந்தால் அவர்களுக்கு எதிர்காலம் எப்படிப்பட்டதாக இருக்கும் என நினைத்தாளோ, இது இரண்டுமில்லாமல் சபியா சொல்வதுபோல தன் தட்டுக்கெட்ட தனத்திற்கு இடைஞ்சலாக இருக்குமென நினைத்தாளோ, அந்த அல்லாவுக்குத்தான் தெரியும்!

இருந்தாலும் இவனுக்கு என்னவோ நூர்நிஷா குப்பியின் மீது நிறைய பாசமும் கருணையும் இருந்தது. பொதுவாக யார் கஷ்டத்தில் இருந்தாலும் தன்னாலான உதவிகளைச் செய்யாமல் இவனால் இருக்க முடியாது. சிங்கப்பூரில் தான் சம்பாதிக்கும் பணத்தில் பாதியை எப்படியும் தர்மத்திற்கு ஒதுக்கிவிடுவான். முக்கியமாக இந்தியாவிலிருந்து மலேசியாவிற்கு வேலை தேடிவந்து, வேலை கிடைக்காமல் சிரமப்படுபவர்களுக்கு நிறைய பணஉதவி செய்வான். அங்கிருக்கும் நண்பர்கள் கேலியாகச் சொல்வார்கள், “கர்ணனோட வாரிசுடா நம்ப சிக்கந்தரு” என்று! நூர்நிஷா குப்பிக்குக் கூட மாதம் தவறாமல் தன் நண்பன் மளிகைக்கடை சாகுல் மூலமாகப் பணம் அனுப்பிக் கொண்டிருந்தான். நூர்நிஷா சொல்வாள், “ஏங்க, மருமகனே! ஒங்கம்மாவுக்குத் தெரிஞ்சா கொன்னுபோடுவாளே என்னயை” என்று. “தெரிஞ்சாத்தானே குப்பி” என்பான். நாளைக்குள் எப்படியாவது ஒரு புதுப்புடவை அவளுக்கு எடுத்துக் கொடுக்க

வேண்டும். பாவம் ஆசைப்பட்டு அம்மாவிடம் கேட்டுக் கொண்டிருந்தாள் என்று நினைத்துக் கொண்டவனுக்கு ஏனோ தூங்கப் பிடிக்கவில்லை. நினைவுகள் எங்கேயோ ஆரம்பித்து எங்கேயோவந்து முடிந்துவிட்டது.

அவனுக்கு வஹிதாவின் நினைவு வந்தது. தன் வயதுக்கேற்ற பெண்ணே இல்லை. இவனுக்கு அவளைக் கட்டிக்கொள்ள கொஞ்சம் கூட விருப்பம் இல்லை. ஆரம்பத்திலிருந்தே பிர்தவ்ஸை மணம் செய்து கொள்ளத்தான் இவனுக்கு ஆசை. தனக்கேற்ற வயது, சொந்தம் கூட. முதலில் ஜாடை மாடையாகச் சொல்லிப் பார்த்தான். பிறகு வெட்கத்தைவிட்டுக் கேட்டு வாதாடியும் பார்த்துவிட்டான். அம்மாதான் ஒத்துக்கொள்ள மாட்டேன் என்று சாதித்தாள். “அங்கெ என்னா இருக்குதுன்னு ஆடுற. பத்துப் பவுனுக்கு வழியில்லாத எடத்துல என் ஒத்தப்புள்ளையக் கொண்டு போய்விட எனக்கென்னா கிறுக்கா புடிச்சிருக்கு? ஆமினாவால் நம்ப அந்தஸ்துக்குச் சீரு செய்ய முடியுமா? இல்லெ, மருமகனுக்கு நாலுவகை சாப்பாடு செய்துபோட முடியுமா? ஒனக்கு மாமியா வீடுன்னு போய்ட்டுவர, திங்கறதுக்கு, உங்கறதுக்கு உடுத்துறதுக்கு என்னா இருக்கு? நல்லாத்தான ஆசைப்படுற” என்று செல்லிவிட்டாள். அதோடு சொந்தம் விட்டுப் போகக் கூடாதென்று தன் தம்பி மகளைத்தான் கட்டுவேன் என்று ஒத்தைக்காலில் நின்றாள்.

இப்பொழுது கூட அவனுக்கு பிர்தவ்ஸை மணம் செய்துகொள்ள ஒரு ஆட்சேபனையுமில்லை. கடைசியில் வயது ஏறியது தான் மிச்சம். அது கூட அம்மாவுக்குச் சோதிக்கவில்லை. அவனுக்கு ரொம்பவே அலுப்பாக இருந்தது. இரவெல்லாம் தூங்காமல் நாடகம் பார்த்ததில் அசதியாக உணர்ந்தான்.

அம்மா வீட்டுக்குள் வருவது தெரிந்தது. அவள் தனக்குள்ளாகவே

முணுமுணுத்துக் கொண்டு வந்தாள். “என்னதான் அதிசயக் காய்ச்சலோ. அவசரமுன்னா அதுக்காக ஒரு குடியானவீட்டு ஆம்பளகிட்டயெல்லாமா உதவி கேக்கிறது?” என்று அங்கலாய்த்துக் கொண்டிருந்தாள், இவன் காதில் விழும்படி! இவனுக்கும் சிவாவின் பேரில் ஏனோ எரிச்சல் உண்டாயிற்று. சந்தர்ப்பம் கிடைத்தால் உடனடியாக இந்தத் தெருவிலிருந்து, முக்கியமாக, இந்த வீட்டிலிருந்து அவனைக் காலி செய்ய வைக்க வேண்டும். ஒரு முஸ்லீம் தெருவுக்குள் காபிரைக் கொண்டு வைத்தால் எது வேண்டுமானாலும் நடக்கும் என்று நினைத்ததோடு அப்படி எதுவும் நடந்தால் எவ்வளவு பெரிய அவமானத்துக்கு ஆளாக நேரும் என்று நினைத்தும் கவலைப்பட்டான். முதலில் திருமணம் நல்ல விதமாக முடியட்டும். பிறகு அவனைப் பார்த்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்து கொண்ட பின்தான் அவனுக்கு நிம்மதியாக இருந்தது. இரவு, நாடகத்தில் நடித்த வள்ளியின் ஆட்டத்தை நினைத்தபடியே அவன் தூங்க ஆரம்பித்தான். இனி அவனுக்குக் காலைச்சாப்பாடு தேவையிருக்காது என்பதைப் புரிந்து கொண்ட சபியா, குளித்து முடித்து நகைகளை அள்ளி அணிந்து கொண்டாள். இன்று மாலை ஐந்து மணிக்குத்தான் நல்ல நேரம் இருந்தது. கருகமணி கோர்த்துவிடலாம். அதற்கென முக்கியமானவர்களை அழைக்க வேண்டும். நாளைக் காலையில் முகூர்த்தக் கால்வேறு ஊன்ற வேண்டும். அதன்பிறகு செய்வதற்கு நிறைய வேலைகள் இருக்கும் என்று நினைத்தபடி துப்பட்டியை எடுத்து அணிந்து கொண்டு தன் உறவுக்காரர்கள் வீடுகளுக்குக் கிளம்பினாள்.

# 26

*யாஸீன் அஸரத்தின் அம்மா, ஆயிஷம்மா மௌத்தாகி விட்டதாக ராபியா ஓடிவந்து சொஹ்ராவிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். செய்தியைக் கேட்டதும் தலையில் முக்காட்டைப் போட்டுக்கொண்டு ஒரே சமயத்தில், "இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஹூன்" என்று வாய்விட்டுச் சொன்ன சொஹ்ராவும் றைமாவும் ஒருத்தர் முகத்தை ஒருத்தர் பார்த்து அங்கு எப்பொழுது போகலாம் என்ற யோசனையில் ஆழ்ந்தார்கள். ரொம்ப வயதான மனுஷி! கொஞ்ச நாளாகவே நோய் வந்து படுக்கையில் கிடந்தாள். அவள் மௌத்தான வரைக்கும் நல்லது என்று நினைத்தாள் சொஹ்ரா. "பாவம், நல்ல மனுஷி, கிடையாக் கிடந்து கஷ்டப்பட்ட உசுரு" என்று றைமாவிடம் சொல்லிவிட்டு, "நாம இப்பவே போயிட்டு வந்துருவமாக்கா?" என்றாள். நேரம் லுஹரைத் தொட்டிருந்தது. "இப்ப போனால்தானே வாசல் பந்தலில் ஆம்பளங்க இருக்க மாட்டாக? தொழுகப் போயிருப் பாங்க" என்றும் சொன்னாள். றைமாவுக்கும் அதுதான் சரி என்று பட்டது. "நாமகூட வந்து தொழுகலாம், சரி கிளம்பு" என்று சொன் னாள். ஆளுக்கொரு துப்பட்டியை எடுத்து உடம்பில் சுற்றிக் கொண்டு கிளம்பினார்கள்.*

*தெருவில் மும்தாஜும் நபிஸாவும் கிளம்பி நின்று கொண்டிருந்தார்கள் "மவுத்து வீட்டுக்குத்தானே போறீங்க? நாங்களும் கூட வர்றோம் துணைக்குத் துணையா" என்றாள் மும்தாஜ். "ஆமா, உன் மாமியா சைனு எங்கே, வரல?" றைமா கேட்டாள். "அதுவா? அது போயிருச்சே, அப்பவே" என்று கிண்டலாகச் சொல்லிச் சிரித்தாள். றைமா மறுபடி வீட்டுக்குள் போய் செருப்பைக் கழட்டிப் போட்டு*

விட்டு வஹிதாவிடம், "அத்தா வந்தா சாப்பாடு எடுத்து வையும்மா" என்று சொல்லியபடி வெளியே வந்தாள். தரையில் கால் வைக்க முடியாதபடி சுட்டுப்பொசுக்கியது. "என்னக்கா, நீங்களும் செருப்பக் கழட்டிட்டீங்க போல!" என்றாள் நபிஸா. "ஆமா, அதுதான் கல்யாண வீட்டுலயும் சரி, மௌத்து வீட்டுலயும் சரி, செருப்பு களவாங்கன்னே வர்றாளுகளே? திருட்டு நாய்கள்! காலத் தரையில வைக்க முடியல சுடுது" என்று சலித்துக் கொண்டாள் றைமா. "பேசாம போட்டுக்கிட்டு வாங்கக்கா! பக்கத்துல யார் வீட்டுலயாவது கழட்டிப் போட்டுக்கலாம்" என்றாள் சொஹ்ரா. "அது சரி, மௌத்து வீட்டுக்குப் போகையில அடுத்தவுங்க வீட்டுக்குள்ள நுழைஞ்சா, தொலைச்சுப்புடுவாக" என்று சொல்லிச் சிரித்தாள் நபிஸா. அவள் சொல்வது உண்மைதான். அப்படிப் போனால் அது பெரிய தவறு என்பது எல்லோருக்குமே தெரியும். சமயங்களில் சொஹ்ராவுக்கு இப்படி முட்டாள்தனமான யோசனைகள் வரும் என்று நினைத்துச் சிரித்துக் கொண்ட றைமா, "சரி! கிளம்புங்கம்மா, இங்கியே நின்னு பொழுதைக் கழிக்காம" என்று சொல்லிவிட்டு நடந்தாள். அடுத்த தெருதான். ஒரே சந்தில் நுழைந்து போய்விடலாம். சந்தைத் தொட்டபடிதான் பாத்திமா வீடிருந்தது. வீட்டுப் படலின் வாசலில் தொங்கிக் கொண்டிருந்த சாக்குப்படுதாவை விலக்கியபடி, "பாத்திமா இல்லெ?" வெளியிலிருந்தபடியே குரல் கொடுத்தாள் சொஹ்ரா. "யாரு? சொஹ்ராவா, எங்கெ கிளம்பிட்டீங்க? மவுத்தான வீட்டுக்கா?" என்று கேட்டபடி உள்ளேயிருந்து வேகமாக நடந்து வந்தாள் நூரம்மா. "பாத்திமா வெளிய போயிருக்கா, ஒருவேள அங்கெதான் போயிருப்பா. ஏன் என்னமும் சொல்லணுமா?" என்று கேட்டாள். "அவ வந்ததும் வீட்டுக்குப் போய் வீடு பெருக்கித் தொடைக்கச் சொல்லுங்க. நாங்க போறோம்" என்று சொல்லி விட்டுப் போனார்கள். நேற்றுதான் மதுரைக்குப் போய் கல்யாணச்சேலை துணி வாங்கி வந்திருந்தார்கள்.

நல்ல அலைச்சல் றைமாவுக்கும் சொஹ்றாவுக்கும். சபியாவும் வந்திருந்தாள். இவர்கள் வரதட்சணையாக முப்பதாயிரம் ரூபாய் சபியாவுக்கு வைத்துக் கொடுத்திருந்தார்கள். முப்பதாயிரம் பெண் வீட்டில் கொடுத்தார்கள் என்றால், அதில் 1000த்திற்கு 50 எனக் கணக்கிட்டு சபியா அவர்கள் ஊர் பள்ளிவாசலுக்கு கமிஷனாகக் கொடுத்துவிட வேண்டும் என்பது வழக்கம். அதுபோக, அவள் பையனுக்குத் துணி எடுக்க பணத்தை எடுத்துக்கொண்டு, பெண்ணுக்குக் கூரைச்சேலை ஒன்றும் தாலிகட்ட முகூர்த்தச்சேலை ஒன்றும் நிச்சயம் வைக்கும் சேலை ஒன்றும் எடுத்தாள். மொத்தம் பத்தாயிரத் திற்குள்ளே முடித்துவிடுவதிலேயே அவள் குறியாக இருந்தது இவர்கள் இருவருக்கும் எரிச்சலாக இருந்தது. ஒரே மகன், அவன் கல்யாணத்தில் கூட இத்தனை கணக்குப் பண்ணுகிறாளே என்று! அதே பத்தாயிரத்திற்குள்ளாகப் பெண்ணுக்கு வளையல், சோப்பு, சீப்பு, கண்ணாடி, பவுடர், ஹேர்பின், செருப்பு, கண்மை எல்லாமே சீரில் வைக்கவென வாங்கி முடித்துவிட்டாள். றைமா, சொஹ்றாவின் முணுமுணுப்புகளைக் கூடவேயிருந்த காதர் அடக்கிவிட்டான்.

நபிஸா ஆர்வமாகக் கேட்டாள், “சேலையெல்லாம் நல்லா டிஸைனா வந்திருக்கா மதுரை கடைகள்ல?” “உம்! ஏதோ பரவாயில்ல! எல்லாம் நம்ம ஊர்ல வழக்கமா எல்லோரும் எடுக்கறது மாதிரித்தானே? புதுசா என்னத்த எடுக்கப் போறோம். அஸர் நேரம் நீயும் மும்தாஜும் வாங்கம்மா சேலையப் பாக்கலாம்.” கூப்பிட்டுக் காட்டுவது ஊர்வழக்கம் என்பதால் றைமா அவர்களைக் கூப்பிட்டாள். “உம், வர்றோம்க்கா” என்றார்கள் இருவரும்.

அவர்கள் மௌனமாகத் தெருவைக் கடந்து கொண்டிருந்தார்கள். தெருவை இறுகிய வெயில் நிறைத்திருந்தது. அதன் தகிப்பை

வெறுத்தவர்களாக நால்வரும் போய்க்கொண்டிருந்தார்கள். பேச்சைத் தொடர்வது வேகத்தை மட்டுப்படுத்திவிடும் என்கிற எண்ணத்தை மனதில் ஊன்றியிருந்தது. சேர்ந்தே சென்றுகொண் டிருந்தாலும் ஒவ்வொருவரின் மனதிலும் எண்ணற்ற நினைவுகள் அலைக்கழித்தபடி இருந்தன.

யாஸீன் அஸரத் வீட்டின் முன் பெரிய பந்தல் போட்டிருந்தார்கள். ஆண்கள் இல்லாததால் முகத்தை மூடத் தேவையில்லை. உள்ளே ஹாலில் கிடந்த பெஞ்சில் மேற்கு நோக்கிக் கால்களை நீட்டிப் படுக்க வைத்திருந்தார்கள் மைய்யித்தை. இனி பேர் சொல்லக் கூடாது. உள்ளே நுழையும்போதே ஊதுபத்தி வாடை முகத்தில் வந்து மோதியது. வயதான மனுஷி என்பதால் அழுகைச் சத்தம் எதுவுமில்லாமல் வீடு அமைதியாக இருந்தது. ஆயிஷம்மாவின் மகள் இருக்கும் அறையிலிருந்து மட்டும் அவ்வப்போது ஒரு கேவல் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. இவர்கள் நான்கு பேரும் மைய்யித்தின் முகத்தைத் திறந்து பார்த்து ஸலவாத்து சொன்னார்கள். நோயுற்றிருந்ததனால் உடலிலிருந்து துர்வாடை வீசியது. சதைப் பிடிப்பில்லாமல் ஒட்டிக் கிடந்த முகம் கறுத்துப் போயிருந்தது. நபிஸாவும் மும்தாஜும் முகத்தைப் பார்க்காமல் தவிர்த்துவிட்டு அறைக்குள் வந்தார்கள்.

அந்த அறை மிகவும் சிறியதாக இருந்தது. அதற்குள் பத்து பேராவது உட்கார்ந்திருந்தார்கள். மூலையில் ஆயிஷாவின் மகள் அழுதுகொண்டிருந்தாள். சத்தமில்லாதபடி மெதுவான குரலில். இவர்களும் நெருக்கியடித்து அதற்குள்ளேயே உட்கார்ந்து கொண்டார்கள். தலை நிறைய முக்காடிட்டு முகத்தை மூடியபடி அவள் அழுது கொண்டிருந்தாள்.

றைமாவின் பின்னாலிருந்து யாரோ தோளைத் தொட்டார்கள் திரும்பிப் பார்த்தாள். காதரின் தூரத்து உறவுப்பெண் ஒருத்தி,

*“நல்லாயிருக்கியா றைமா?” என்று கேட்டுச் சிரித்தாள். உம் என்கிற ரீதியில் தலையாட்டினாள் இவளும். “உன் மக நல்லாருக்காளா? பாத்து நாளாச்சு, கல்யாணமாமுல்ல? எனக்கெல்லாம் சொல்லல” என்றாள். றைமாவுக்குத் தர்மசங்கடமாக இருந்தது, ஆயிஷம்மாவின் மகள் என்ன நினைப்பாள் என்று. “உம், சொல்ல வரணும்” என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு அவசரமாக முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.*

*வெளியூரிலிருந்து அப்பொழுதுதான் யாரோ ஒரு பெண் வந்திருப்பாள் போலிருக்கிறது. திடீரெனப் பெரும் குரலில், “என்னப்பெத்த தாயி, போயிட்டியா!” என்று ஒப்பாரி வைத்தாள். அறைக்குள் கதவையொட்டி அமர்ந்திருந்த பெண்கள் இந்தச் சத்தத்தைக் கேட்டு, தலையை முடிந்தவரை வெளியில் நீட்டி யாரெனப் பார்த்தார்கள். நபிஸாவும் மும்தாஜும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். அவர்களது முகங்களில் ஒரு நமுட்டுச் சிரிப்பு ஒரு கணம் தோன்றி மறைந்ததை சொஹ்ரா கவனித்தாள். அச்சிரிப்புக்கு வயசாகி நோயில கிடந்து செத்த கிழவிக்கு இவ்வளவு அழுகை தேவையா என்கிற அர்த்தம் இருந்தது. அந்த அழுகைக்குரல் ஆயிஷம்மாவின் மகளது தேய்ந்திருந்த உணர்ச்சிகளைத் தூண்டியிருக்க வேண்டும். இங்கே இவள் பெரும் குரலெடுத்து, “அம்மா! என்னை விட்டுட்டுப் போயிட்டியே” என்று கதற ஆரம்பித்தாள்.*

*நபிஸா, மும்தாஜிடம் கிசுகிசுத்தாள். “இந்தச் சேலை எங்கே எடுத்தது? நல்லாருக்கு, அப்பவே கேக்கணுமின்னு நினைச்சேன், மறந்துட்டேன்” என்றாள். அவள் சொல்வது சொஹ்ரா காதிலும் மற்ற பெண்களின் காதிலும் விழுந்தது. றைமா இப்பொழுதுதான் கவனித்தாள். மும்தாஜும் நபிஸாவும், முகத்திற்கு லேசாக பவுடர் போட்டு, கண்களுக்கு மையிட்டு இருந்தார்கள்.*

*மும்தாஜின் பின்னாலிருந்து யாரோ துப்பட்டியைப் பிடித்து இழுத்தார்கள். யாரது என்று திரும்பிப் பார்த்தவளிடம், "என்னம்மா, மாப்பிள்ளை வர்றாராமே? சத்து ஊசி போடுறதுக்கு, தயாரா இரு! உடம்பத் தேத்திவை" என்று சொல்லிக் கிண்டல் செய்தாள் ஒருத்தி. அவள் இந்த ஊர்க்காரிதான். றைமாவுக்கு அடையாளம் தெரியவில்லை. மும்தாஜின் வயதுதான் இருக்கும் அவளுக்கு. நெடு நெடுவென நல்ல வளர்த்தியாக இருந்தாள். மாநிறம் என்றாலும் துறுதுறுப்பான முகம். பெரிய கண்களில் துடுக்குத்தனம் அதிக மிருந்தது. யாராக இருக்கும் என்று மறுபடி மறுபடி நினைவு படுத்திக்கொள்ள முயன்று தோற்றாள் றைமா. "ஆமா, வர்றாரு புருஷன பக்கத்துலயே வச்சுருக்க, ஒனக்கு என்னையப் பாத்தா கிண்டலா இருக்காக்கும்" என்று மெலிதான குரலில் சொல்லிச் சிரித்தாள். கணவன் வரப்போகும் சந்தோஷம் முகத்தில் வெளிப்படையாகவே தெரிந்தது அவளுக்கு. றைமா அவர்களையே கவனித்துக் கொண்டிருந்தாள்.*

*அதற்குள் நபிஸா, "வந்த உடனேயே புள்ளைய உண்டாயிக்க. ஆமா, இல்லென்னா காய்ஞ்சிபோய் கிடந்ததுக்கு அவரு வந்து உன்னைய நோக வச்சுருவாரு" சொல்லிவிட்டுக் குறும்பாகச் சிரித்தாள்.*

*அவளது கிண்டலை முகமலர்ச்சியுடன் ரசித்த மும்தாஜ், "ஆமாமா, அவருதான் காய்ஞ்சுபோய் கிடக்கிறார், இவ சொல்லிட்டா! என்னையச் சொல்லு ஒத்துக்கிர்றேன், ஆம்பளைக்கு மேய அங்கெ எத்தனை வைக்கப்போரோ, நமக்கு . . .?" சலித்துக் கொண்டாள்.*

*சொஹ்ராவுக்கு ஏனோ தர்மசங்கடமாக இருந்தது அவர்களது பேச்சு. எங்கே வந்து என்ன பேசுகிறார்கள்? எரிச்சலாக உணர்ந்தவள் தனது தொடையை ஒட்டி நெருக்கமாக உரசிக்கொண்டிருந்த நபிஸாவின் தொடையில் தன் விரல் நகத்தினால் லேசாக*

நிமிண்டிவிட்டாள், சும்மாயிருங்கள் என்கிற மாதிரி. இவளது விரல்கள் நபிஸாவை நிமிண்டுவதை ஓரக்கண்ணால் பார்த்த மும்தாஜ், பார்க்காத மாதிரி பார்வையைத் திருப்பிக் கொண்டாள்.

நபிஸாவோ இவளைப் பொருட்படுத்துவதாகவேயில்லை. "சும்மா இருங்கக்கா! என்னத்தைப் புதுசாப் பேசப் போறோம், யாருக்கும் தெரியாத விஷயத்தை." சொஹ்ராவைச் சமாதானம் செய்யும் விதத்தில் அவளது காதோரமாகக் கிசுகிசுத்தாள்.

"சைத்தானுக அடங்காதுக விடு!" இதுவரை இவர்களது பேச்சுகளையும் சொஹ்ராவின் குறுக்கீட்டையும் கவனித்தபடியிருந்த றைமா மெதுவாக சொஹ்ராவிடம் சொன்னாள். நபிஸாவுக்கும் மும்தாஜுக்கும் றைமா சொன்னது காதில் விழுந்தது என்றாலும் அதை அவள் கோபத்துடன் சொல்லியதாக இல்லாமல் பெருந் தன்மையோடு சொன்னதாக எடுத்துக்கொண்டதையும் அது அவர்களுக்குப் பெருத்த நிம்மதியை உண்டுபண்ணுவதாக இருந்ததையும் சொஹ்ரா கவனித்தாள்.

மும்தாஜைக் கிண்டல்செய்த அதே பெண் நபிஸாவின் பின்புறம் அவளது காதருகில் ஒட்டி வந்து கிசுகிசுப்பாக, "ஆமா, நீ ரெண்டோட நிறுத்திப்புட்ட ரொம்ப வெவரமா, நானும்தான் இருக்கேனே? ஏழு வருஷத்துல நாலு! படுக்கவும் பெக்கவும்தான் நேரம் சரியாப்போச்சு" என்று ஆதங்கத்துடன் சொல்லி அலுத்துக் கொண்டவள், "நீ புள்ளைக்குத் தாய்ப்பால் குடுத்தியா, குடுக்கலையா? ஒன்னோட பால்கோவாவைப் பாத்தா குடுத்ததுமாதிரியே தெரியலை" என்று சொல்லிவிட்டுக் கண்ணடித்துச் சிரித்தாள்.

தலையைப் பக்கவாட்டில் திருப்பி, "உம்? பாத்தாக்க எப்புடித் தெரியுது, குடுக்காதது மாதிரியா தெரியுது?" அப்பெண்ணின் முகத்தைப் பார்த்து இடக்காகக் கேட்ட நபிஸாவின் முகத்தில்

பெருமை பொங்கிற்று.

“குடுக்காத மாதிரித்தான் தெரியுது,” மறுபடியும் சொன்ன அப்பெண், “எனக்குப்பாரு, பிளவுஸைக் கழட்டுனா அவுத்துவிட்ட கண்ணுக்குட்டியாட்டம் திசைக் கொண்ணாவுல ஓடுது” என்றாள். அவளது குரலில் கிண்டலை மீறிய வருத்தம் தெரிவதை றைமாவால் கவனிக்க முடிந்தது.

“அது சரிதான்! பிள்ளைக்கி . . . நான் . . . பால்குடுக்கலை” நீளமாக இழுத்த நபிஸா, “நீ பாத்தியாக்கும்?” என்றவள், “நீ பிள்ளைக்கி மட்டும் பால் குடுத்துருந்திருந்தா அது இப்புடி ஓடுமா? பாலை நீ மச்சான்கிட்ட குடுத்திருப்ப, அவரு ராத்திரியெல்லாம் தஸ்பீஹ் உருட்டியிருப்பாரு, அதுதான் ஒன்னோடது தொங்கிப் போயிருச்சு” என்றாள்.

அங்கிருந்த பெண்களுக்கு இவர்களுடைய பேச்சில் பெரும் சுவாரஸ்யம் உண்டாகியிருந்ததை றைமா கவனித்தாள். அனைவரது பார்வையும் இவர்களை நோக்கியே திரும்பியிருந்தது. ஆயிஷம்மாவின் மகள் அழுவதை நிறுத்தியிருந்தாள். அருகிலிருந்த வயதான பெண்ணின் மடியின் மீது தலைசாய்த்துப் படுத்து முகத்தைச் சேலைத் தலைப்பினால் மூடியிருந்தாள். சற்று நேரம் அங்கு அமைதி நிலவிற்று. சிறிய அறையில் நிறையபேர் அடைந்தபடி உட்கார்ந்திருந்ததனால் றைமாவுக்கு வேர்த்துக் கொட்டியது. துப்பட்டித் துணியினால் அழுத்தி முகத்தையும் புறங்கழுத்தையும் துடைத்துக் கொண்டவள், “சித்திரை முடிஞ்சும் வெயில் கொழுத்துறதப் பாரு” என்று தனக்குள்ளாக முனகிக்கொண்டாள்.

நபிஸா மறுபடி அந்தப் பெண்ணோடு பேச ஆரம்பித்தாள். தங்களைச் சுற்றியுள்ள பெண்கள் தங்களுடைய பேச்சை ரசிப்பது இவர்களுக்குப் பிடித்திருந்தது. சுற்றியுள்ளவர்களின் கவனத்தைத் தம் பேச்சின் வழியே ஈர்த்துக்கொண்டிருக்கிறோம் என்கிற பெருமை

நபிஸா, மும்தாஜ் மற்றும் அந்தப் பெண் மூவர் முகத்திலும் நிரம்பியிருந்தது. தாங்கள் இருப்பது ஒரு மௌத்தான வீட்டில் என்கிற பிரக்ஞையும் பயமும் துளிகூட அவர்களிடம் இல்லாதது றைமாவுக்கு வெறுப்பையும் ஆச்சரியத்தையும் ஒருசேர உண்டு பண்ணிற்று.

"ஏன் நஜிமா? உன் புருஷனுக்கும் உனக்கும் சண்டையாமே கேள்விப்பட்டேன்." திடீரென நினைவு வந்தாற்போலக் கேட்டாள் மும்தாஜ்.

றைமாவுக்கு இப்பொழுதுதான் அவள் யாரென்பது நினைவுக்கு வந்தது. கறிக்கார தாவூது மகள். முன்பு பார்த்த பொழுது நன்றாகக் கொழு கொழுவென்று இருப்பாள். இப்பொழுது மெலிந்து போய் ஆளே அடையாளம் தெரியாதபடி இருந்தாள். ரத்தமேயில்லாமல் வெளுத்துக்கிடந்தது அவளது முகமும் உடலும்.

"நான் கொஞ்சநாள் எங்க அம்மா வீட்டுல இருந்திட்டுப் போகலாம்னு ரம்ஜானுக்கு முன்னெ வந்தேன். அவருக்கும் என்னோட அண்ணனுக்கும் இடையில என்னவோ பிரச்னைபோல, வரலேன்னுட்டாரு. எங்கெ போகப்போறாரு? வந்தா வரட்டும் வராட்டிப் போகட்டும்! வந்தாலும் என் சாமானுக்குத்தான் கேடு. கடுப்பு வந்தாக்க தன்னால வரட்டும். அடுத்த தெருவுதான? பஸ்ஸுப் புடிச்சா வரப்போவுது? ஒருவாரம் படுக்கலைன்னா சாமான் நகச்சுத்தி வந்த மாதிரி விண்விண்ணுன்னு தெறிக்க ஆரம்பிச்சுடுமுல்ல அப்ப வந்துதான ஆகணும்?"

மெலிதான குரலில் விடாமல் பேசி நிறுத்திய நஜிமா, றைமாவைப் பார்க்க முகத்தைத் திருப்பினாள்.

றைமா சட்டெென முகத்தை வேறு திசைநோக்கித் திருப்பிக் கொண்டு அவர்களைக் கவனிக்காத பாவனையை முகத்தில் காட்டினாள். எதிரிலிருந்த சொஹ்ரா றைமாவைப் பார்த்து நமுட்டுச்

சிரிப்பொன்றை உதிர்த்தாள்.

"இந்தாடி இவ நம்பிக்கிட்டு இருக்கிறதை?" மும்தாஜ் வலது உள்ளங்கையை வாய் மீது வைத்து சிரிப்பை அடக்குவதுபோல பாவனைசெய்துவிட்டு, "அதுசரி? அவருக்கு கடுப்பு வந்தா ஓங்கிட்டத்தான் வரணுமா? வேற ஆளேயில்லாமக்கிடக்குது பாரு, வயவரப்புல எத்தினி பொண்டாட்டிக இருக்காளுக. ஏமாந்துராதே, சொல்லிப்புட்டேன்," என்று எச்சரிக்கை செய்கிற தொனியில் சொல்லிச் சிரித்தாள். சிரிக்கும் பொழுது அவளது கண்களிலிருந்து நீர் வழிய, அதனைக் கண்மை கலைந்துவிடாதபடிக்குச் சுண்டுவிரலால் லாவகமாகத் தொட்டு எடுத்துச் சுண்டிவிட்டாள்.

அதற்கு நஜிமா துளிக்கூட அலட்டிக்கொள்ளாமல் தோள்களைக் குலுக்கி, "இவ வேற, என்னமோ அதிசயத்த சொல்லுற மாதிரி! போனா போகட்டுமே, வந்தா வரவுல வைப்போம், வராட்டி செலவுல வைப்போம்" என்றாள். அவளது குரல் அலட்சியத்தோடும், இந்தப் பேச்சை முடிவுக்குக் கொண்டு வருவோமென்பது போலவும் இருந்தது.

என்னவோ காரணம் இருப்பதுபோலச் சட்டென முடிவுக்கு வருகிறது அவர்களது பேச்சு. அறை வெப்பத்தினால் புழுங்கிக் கொதித்துக் கொண்டிருந்தது, கூடியிருந்தவர்களின் சீரான மூச்சொலியினூடே! சிறு சிறு இடைவெளிவிட்டு மேலெழுந்தபடியிருந்தது தாஹிராவின் கேவல். யாருடைய ஆறுதல் வார்த்தைகளும், அனுதாபப் பார்வைகளும் தனக்குத் தேவையில்லை என்பதை மிக ஆணித்தரமாகச் சொல்வதாகயிருந்தது அவளது துணி போர்த்திய முகம். ஒவ்வொருவரின் முகத்திலும் பட்டு தட்டுத்தடுமாறி விலகி ஓடுகிற பார்வையை ஏதேனும் ஓரிடத்தில் பொருத்திவிடத் தவித்த நஜிமா திடீரென நினைவு வந்தவளாக, "ஏன் மும்தாசு, ஒனக்கு யாரு ஜாக்கெட் தச்சுக் குடுக்கறது? ரொம்ப நாளா கேக்கணும்னு

நெனைச்சுக்கிட்டு இருக்கேன். நல்லா தைக்கிறானே” என்று கேட்டபடியே, எங்கே பாக்கலாம் என்று மும்தாஜின் தலைமுக் காட்டை இழுத்து துப்பட்டியை உரிந்துவிட்டு முதுகுப்பகுதியையும், முன்புறப் கழுத்தையும் பாத்தவளாகத் திடீரென அவளது மார்பை மறைத்திருந்த முந்தானைச் சேலையைப் பிடித்திழுத்து உரிந்து முன்பக்கத்தைப் பார்க்க, “அடியேய்!” என்று பதறியவளாகச் சேலையை இழுத்து மார்புப் பகுதியை மூடிய மும்தாஜ், “நல்லாத் தான் வந்த போ . . .!” என்று வெட்கத்தோடு சிரித்துக் கொண்டாள். அவளது முகம் ரத்தம் போலச் சிவந்து போயிற்று. என்றாலும், கோபத்திற்கான அறிகுறியே அதில் இல்லை என்பதையும் றைமா கவனித்தாள்.

“ஆமாமா, யாருக்கும் இல்லாததா ஒனக்கு மட்டும் இருக்கு? இல்லெ, பாத்தாத்தான் கொறைஞ்சு போயிடப்போகுதா?” சாவகாசமாகச் சொன்னவள், “கேக்கறேன்ல யாரு தைச்சுக்குடுக்கிறதுன்னு?” என்றாள்.

“அந்தப் பட்டாணி பாய் இருக்கான்ல, அவன்தான். ஒனக்கு எவன் தைக்கிறான், நல்லால்லையா?” மும்தாஜுக்குப் பதிலாகத் தானே பதில் சொன்னாள் நபிஸா.

“யாரோ ஒரு கலுச்சல்லபோயி கிடப்பான்கிட்ட குடுத்து, துணியை வீணாக்கிப்புடுறான். இங்கெபாரு முன்னாடி எப்புடிப் சுருங்கிக் கிடக்குதுன்னு.” ஒருநொடி தன் சேலை முந்தானையை விலக்கிக் காட்டிவிட்டு மூடிக்கொண்ட நஜிமா, “உம் . . .! நாம சட்டை தைச்சுப் போட்டா என்ன, இல்லெ போடாட்டி என்ன? எவ புருஷனாவது பொண்டாட்டிய ரசிக்கிறானாக்கும், ஆடு மாடு ஐவான் கணக்கா இருட்டுல தடுக்கி விழுந்து எந்திரிச்சுப் போவானுக.” ஆதங்கம் மேலிட சொல்லிவிட்டுக் களுக்கெனச் சிரித்து, “சேலை கட்டுனாலும் பாக்க மாட்டானுக, அம்மணமா நின்னாலும் கண்டுக்க மாட்டானுக, என்ன?” என்றாள்.

றைமாவுக்கு அங்கிருப்பதற்கே சங்கடமாக இருந்தது. அழுது ஓய்ந்து இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருக்கும் ஆயிஷம்மாவின் மகள் என்ன நினைப்பாள் என்று நினைத்து ரொம்பவே கவலை கொண்டாள். சொஹ்ராவின் முகம் படிப்படியாக வெறுப்பினால் இறுகிக் கொண்டிருப்பதையும் அவளால் கவனிக்க முடிந்தது. நபிஸாவும் மும்தாஜும் அவளது பேச்சை ஆமோதிக்கும் விதமாகவும் ஆதங்கத்தோடும் தலையசைத்தார்கள். நபிஸா மட்டும், "நல்லாக் கூட எவனோ பொண்டாட்டிய ரசிக்கிறானுக, அதெல்லாம் சினிமாவுலதான்" என முனகிக்கொண்டாள்.

அந்த அறையின் இறுக்கத்தினாலும் பேசுகிற விஷயத்தினாலும் மூச்சுமுட்டுவதுபோல உணர்ந்தாள் றைமா. இந்த நொடியிலேயே இங்கிருந்து போய்விட முடிந்தால் நன்றாக இருக்கும் போலிருந்தது. இருந்தாலும் வந்த உடனேயே போவது சரியில்லை என்கிற கட்டாயத்தின்பேரில் பல்லைக் கடித்தபடி அமர்ந்திருந்தாள். வீட்டிற்குப் போய் தொழுக வேண்டிய வேலை வேறு நினைவுக்கு வந்து கவலையை உண்டு பண்ணிற்று.

இவர்களிருந்த அறைக்குள்ளாக வந்த யாஸின் அஸரத்தின் மனைவி சைத்தூன் தான் உட்கார எங்கேனும் இடம் இருக்கிறதா என்பது மாதிரி அறையைத் தன் பார்வையினால் துழாவ றைமா கையசைத்து, "இங்கே வா" என்று அழைத்துவிட்டு, தனக்கருகாக அவளுக்கென இடம் ஒதுக்கினாள். சைத்தூனுக்கு மூச்சு வாங்கிற்று. நிறைமாத கர்ப்பம் வேறு! அவள் உடுத்தியிருந்த வாயில் புடவை அவளது வயிற்றின் மீது சுருண்டு வயிற்றையும் பின்புறத்தையும் ரொம்பவும் பெரிதாகக் காட்டியது.

"உஸ் . . . ! அல்லாஹு" என்றபடி பெருமூச்சொன்றை உதிர்த்தவளாக இரண்டே எட்டில் கூட்டத்தைக் கடந்து

இவர்களுக்கருகில் வந்து, கைகளைத் தரையில் ஊன்றி அமர்ந்து அங்கு விட்டுவிட்டுக் கேட்டுக் கொண்டிருந்த கேவலைக் கவனித்து, "தாஹிரா இன்னுமா அழுவுது?" என றைமாவைப் பார்த்துக் கேட்டாள்.

றைமா 'ஆமாம்' என்கிறது மாதிரி தலையசைக்க, "சரி, முடியாத மனுஷி அழுது தவிச்சு என்னா ஆவப்போவுது" என ஆறுதலுக்காகச் சொன்னவள், றைமாவிடம், "உன் மகளுக்கு எப்பொ நிக்கா வைச்சுருக்கு, வேலையெல்லாம் எந்தமட்டுக்கு நடந்திருக்கு. பணமெல்லாம் வச்சுக்குடுத்தாச்சா?" என்று அடுக்கடுக்காகக் கேட்டாள்.

"அதெல்லாம் வச்சுக்குடுத்தாச்சு. முப்பதாயிரம்," றைமாவின் குரல் சலிப்புடன் ஒலித்தது.

"முப்பதாயிரமா . . .?" சைத்தூன் இழுத்தவாறு கேட்டு நிறுத்திவிட்டு, "அம்மாடி, ரொம்பவுல இந்த அறைக்குள்ள புழுங்குது, தெரியாம இல்லெ வந்து மாட்டிக்கிட்டேன். அந்தக் காத்தாடியைக் கொஞ்சம் எம்பக்கமா திருப்பி விடுங்கம்மா" என்றாள். அந்த அறையின் மூலையில் ஓடிக்கொண்டிருந்த டேபிள்ஃபேனை யாரோ ஒருத்தி அவளது பக்கமாகத் திருப்பிவிட்டாள். சைத்தூனின் உடல் தொப்பலாக நனைந்திருந்தது. வயிற்றைத் தவிர உடலில் ஒரு சதையுமில்லாமல் எலும்பும் தோலும்தானிருந்தது. பாவமாகயிருந்தது றைமாவுக்கு. அவளுக்கு ஏற்கனவே ஆறுபிள்ளைகள். இது ஏழாவது! "ஏன் இப்புடி வருஷத்துக்கொரு புள்ளையப் பெத்துக்கிட்டு ஒடம்ப வீணாக்குற சைத்தூனு?" மனவருத்தத்துடன் கேட்டாள் றைமா.

சைத்தூன் வந்தபிறகு அங்கிருந்த இளம் பெண்களுக்கிடையே நடந்த பேச்சுக்கள் முடிந்து விட்டிருந்ததையும் றைமா கவனித்தாள். சுற்றிலுமிருந்து அவர்களின் பேச்சுக்களைக் கவனித்துக் கொண்டிருந்த பெண்கள் முகத்தில் ஒரு விதமான அசுவாரஸ்யம் வந்திருந்தது.

“என்ன கேட்டே, ஏன் புள்ளை பெக்கிறன்னா, என்னா செய்யச் சொல்லுற? இவுகளுக்கு நான் கர்ப்பத்தடை செய்யக் கூடாதாம், அல்லாவுடைய கோபத்துக்கு ஆளாக வேண்டிவருமாம். நீயே சொல்லு இன்னும் எத்தனை பிள்ளைய என் உடம்பு தாங்கும், எனக்கென்னா வலு இருக்குது? உடம்புல கிள்ளிப் புடிக்க துளி சதை இல்லை. டாக்டரம்மாட்டப் போனா அவ கண்டபடி திட்டுறா, ரத்தமேயில்லன்னு! இந்தப் பத்து வருஷத்துல ஏழு பெத்தா இனி சொச்சக் காலம் எப்பிடிப்போவும்? பிள்ளை அல்லா குடுக்கறது, பரக்கத்! அதைக் கட்டுப்படுத்துறது பெரிய பாவமுன்னு ஷரியத் சொல்றாரு, ஹதீஸ் சொல்றாரு. பட்டுத் தவிக்கிறது யாரு, ஆம்பளையா பொட்டச்சிதானே?” என்று ஆத்திரத்துடன் ஒரு மூச்சு சொல்லி முடித்துத் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டாள்.

“அது சரி, அல்லா சொல்றான்னு நாம ஒவ்வொண்ணையுமா செய்திட்டு வர்றோம்? அவன் சொல்லக் கேட்டு ஒழுங்கா யாரு இருக்காக? அப்பிடி இருந்தாத்தான் ஊரு ஒலகம் நல்லாருக்குமே. இந்தா, கைக்கூலி குடுக்குறது வாங்குறது பாவம்னு அல்லா சொல்லியிருக்கானே, யாரு அதக் கேக்கிறாக? அது பாட்டுக்கு நடக்குது. பள்ளிவாச ஜமாத்துலகூட எவுகளும் இதைக் கண்டுக்கிர்றதில்ல, அவுக ஒரு பங்க வாங்கிக்கிட்டு கம்முன்னு இருந்துக்கிறாக. நம்ம இருக்கறவுக குடுக்குறோம். இல்லாதவுக, ஏழை எளியது வரதட்சணை குடுக்க என்னா பாடுபடுது. புருஷனுக்காகக் கேக்குற விஷயத்தக் கேட்கலாம், இப்பிடி வருஷத்துக்கு ஒரு புள்ளபெற யாரால முடியும். நீ அவருக்கே தெரியாமப் போயி காந்தி கிராமத்து ஆஸ்பத்திரில கர்ப்பத்தடை பண்ணிக்கிட்டு வா. ஆமா! என்னமோ அவரு மாட்டேங்கிறாராம், இவ பெத்துக்கிட்டு இருப்பாளாம்” என்று சொல்லி உரிமையுடன் கண்டித்தாள் றைமா.

“நீ சொல்லிட்டுப் போவம்மா, இங்கெ இருந்து வாழுறது நானுல்ல? ஊருக்கு அஸரத்தே சட்டத்த மீறி நடந்தா மத்தவுக என்னாகுறதுன்னு ஒரே போடாப் போட்டு என் வாயை அடைச்சிருவாரு. என்னமோ போ, பெக்க முடியிற வரை பெக்கிறேன், இல்லென்னா போயிச் சேர்றேன்” என்றாள் சைத்தூன். அவளது குரல் இயலாமையுடன் ஒலித்தது. இவ்விஷயத்தில் அவளுக்குத் தன் எண்ணப்படி நடக்கும் உரிமையில்லை என்பதன் துயரம் றைமாவை அதிருப்திக்குள்ளாக்கிற்று. “சரி, இப்படியே போனால் இதற்கு ஒரு முடிவுதான் என்னவாம்? ஒம்புருஷன் கிட்ட கேக்கறது தானே?” என்றாள் ஆத்திரமாக! சைத்தூன் மெலிதாகச் சிரித்தபடி, “முடிவா? படுக்காம இருக்கணும். அது முடியுமாக்கும்?” என்றாள்.

நபிஸா இடைமறித்து, “அவருக்கு நீங்க பலூன மாட்டிவிடுங்க” என்று சொல்லிக் களுக்கென்று சிரித்தாள். “அல்லா! அல்லா!” தன் இருகைகளையும் உயர்த்தி இரண்டு பக்க காதுகளையும் பொத்தியபடி பதறினாள் சைத்தூன். “என்னடி, இப்பிடிப் பேசுற? அசிங்கம்புடிச்சாப்புல” என்று நாக்கைக் கடித்தாள். “எது அசிங்கம், இது அசிங்கமா? என்னமோ போங்க, வருஷத்துக்கொரு புள்ள உண்டாகி வயித்தத் தள்ளிக்கிட்டு நிக்கிறதவிட மத்த எதுவுமே அசிங்கமில்ல” என்றாள் அவள். சைத்தூனின் வருகையால் பாதியில் தடைபட்டிருந்த நபிஸாவின் பேச்சு விட்ட இடத்திலிருந்து மறுபடி தொடர்வது உற்சாகமூட்ட, ஒன்றிரண்டுபேர் நபிஸா சொன்னதற்கு ஆமோதித்து, ‘ஆமாம்!’ என்கிற மாதிரி தலையசைத்து வைத்தார்கள்.

மௌத்தான வீட்டிலிருந்து கொண்டு இப்படியெல்லாம் எப்படிப் பேச முடிகிறது இவர்களுக்கு? வயதான கிழவி என்பதால் அதிகமாக அலட்டிக் கொள்ள ஏதுமில்லை என்று நினைக்கிறார்களா என றைமா யோசித்தாள்.

சைத்தூன் சொன்னாள், “ரொம்பவும்தான் இவளுக கெட்டுப் போயிட்டாளுக, பேசுற பேச்சைப்பாருவே” என்று. இந்தச் சந்தர்ப்பத்தை விட்டுவிடக்கூடாது என்ற எண்ணத்தில் சொஹ்ரா, “இவ ரெண்டு பேருக்கும் ஆளுக்கொரு பதினெட்டு வயசுப்பயல கட்டி வச்சா சந்தோஷமா கட்டிக்குவாளுக.” குத்தலாகவேச் சொல்லிவிட்டுத் திருப்தியாகச் சிரித்தாள்.

“சொஹ்ராக்கா சமயம் பாத்துப் பேசுறிங்க, சரி, பேசுங்க” என்று அவள் சொன்னதைத் தான் விளையாட்டாக எடுத்துக் கொண்டதாகக் காட்டிக் கொண்டாள் மும்தாஜ்.

“ஏன் மும்தாஜு, உம் புருஷன் வாறாராமுல்ல?” என்று கேட்டாள் சைத்தூன். “அல்லான்னு இந்த ஸபராவது புள்ளை உண்டாகணும்” என்றாள் அக்கறையுடன். “ஆமாமா, வாறாரு முந்தாசு பொட்டி ஒடைக்கப்போறா, ரெண்டு பொட்டி!” முந்திக் கொண்டு இரட்டை அர்த்தங்கள் தொனிக்க சொன்னாள் நபிஸா. “ஆமா” என்று சலித்துக் கொண்ட மும்தாஜ், “என் மாமியாதான் என்ன நடுவுல உக்கார வச்சு பொட்டி ஒடச்சு அம்புட்டயும் ஏங்கிட்ட அள்ளிக் குடுக்கப்போவுதாக்கும்? ஆக்குற கறி மீனையே ஒளிச்சு வச்சுட்டு ஒன்னொன்னுதான் எனக்கே அந்தப் பொம்பள குடுக்கும்” என்றாள் ஆத்திரமாக! “மாமியாவ விடு, மாப்பிள்ளை யாருக்கும் தெரியாம பனியனுக்குள்ள ஜட்டிக்குள்ள ஒளிச்சு வச்சு தங்க பிஸ்கெட்ட ஒன்கிட்ட குடுப்பாரு. இல்லாட்டி பொண்டாட்டி படுக்க மாட்டான்னு அவருக்குத் தெரியாதாக்கும்” என்றாள் நபிஸா. “சேச்சே . . .! அப்பிடியெல்லாம் இல்லை, அவருக்கு அம்மா கிட்ட பயம்” என்ற மும்தாஜின் குரலில் அப்படியெல்லாம் இல்லவே இல்லை என்பதை அனைவரின் முன்பாக நிரூபித்துவிட வேண்டும் என்கிற வேகம் அதிகமாக இருந்தது. “ஏன் பொய் சொல்ற? எல்லாம் குடுத்திருப்பாரு,

இப்பவும் குடுப்பாரு” என்றாள் நபிஸா மறுபடியும். “ஹக்கா, சொல்றேன் அதெல்லாம் அப்பிடி மறைச்சு ஒளிச்சு அவரு இதுவரை குடுத்தது இல்லெ” என்றவள், “அப்பிடிக் குடுத்திருந்தா அது ஹராமாயிருக்கும்” என்றாள் சற்று உணர்ச்சி வசப்பட்டு. அவளது கோபத்தைக்கண்ட சைத்தூன் அவளைச் சரிசெய்யும் விதமாக, “அட, புருஷன்தான தர்றாரு, வேற யாருமா தர்றாக? ஆமா, அப்புடித்தான் எம்புருஷன்கிட்ட நான் வாங்குவேன்னு சொல்லுவியா, பொம்பளப்புள்ளை இப்புடி ரோசப்படுற?” என்று அப்பிரச்னையை முடித்து வைத்தாள்.

தான் விளையாட்டாகப் பேசியது இப்படி அவள் கோபம் கொள்ளுமளவுக்கு ஆகும் என்று நபிஸா எதிர்பார்க்கவில்லை. ஊர் வழமையைத்தானே சொன்னோம், இதில் ரோஷப்பட என்ன இருக்கிறது என்று அவளுக்குப் புரியவில்லை. வருத்தத்தில் நபிஸாவின் முகம் சுருங்கிப்போயிற்று. நடிப்புக்காரி என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டவள் அத்தோடு இந்தப் பேச்சைக் கைவிட்டாள்.

அங்கே நிலவிய நீண்ட அமைதி வியப்பூட்டுவதாய் இருந்தது. மரணம் தன் அர்த்தத்தை இழந்து ஒரு கேலிச்சித்திரமாக ஆயிஷம்மாவின்மீது வீற்றிருக்கிறது. இத்தனை இயல்பாகத் தான் எதிர்கொள்ளப் படுவதன் புரிபடாத வினோதம் அதனிடம் எஞ்சியிருக்க, அமைதியுற்றிருந்த முகங்களின் மீதெல்லாம் தன்னைப் பற்றிய பயத்தை உண்டுபண்ணுவதற்கான வழியுண்டா என்பதுபோல பார்த்துக் கொண்டிருந்தது.

சரி, கிளம்புவோம் என்கிற மாதிரி றைமா சொஹ்ராவைப் பார்த்தாள். அவளுக்கும் கிளம்பலாம் என்று தோன்றிற்று. இருவருமாக எழுந்து, “அஸ்ஸலாமு அலைக்கும்” என்று சொல்லிவிட்டுக் கிளம்பவும் நபிஸாவும் மும்தாஜும்கூட சேர்ந்தே போய்விடலாமென

எழுந்தார்கள்.

வெளி ஹாலில் நிறையப் பெண்கள். நடுத்தர வயதைத் தாண்டியவர்கள் எல்லோரும் அங்கேதான் உட்கார்ந்திருந்தார்கள். ஹாலில் ஒரு மூலையில் மும்தாஜின் மாமியார் சைனு உட்கார்ந்து யாரிடமோ பேசிக்கொண்டிருந்தவள் இவர்களைப் பார்த்ததும் தலைமுக்காட்டை இழுத்துவிட்டபடி எழுந்து ஒரே பாய்ச்சலில் இவர்களோடு சேர்ந்து கொண்டாள். வெளியே பந்தலில் இருந்த ஆண்களின் கூட்டத்தை முகத்தை மூடியபடி கடந்து தெருவுக்கு வந்தார்கள்.

“நானும் அப்பவுலருந்து கிளம்பப் பாக்குறேன். தனியாப் போகச் சங்கடமாருந்துச்சு, ஆம்பளைக இருப்பாகளே வெளியிலன்னு” என்றாள் சைனு, றைமாவிடம். “நீங்கதான் முன்னாலயே வந்துருப்பீங்களே இன்னுமா போகாம இருந்தீங்க” என்றாள் றைமா. சைனுவுக்குத் தன் மருமகள் யாரிடம் பேசினாலும் பிடிக்காது. அவளுக்குக் கெட்ட புத்திகளை மற்றவர்கள் சொல்லிக் கொடுத்து விட்டுக் குடும்பத்தில் குழப்பத்தை உண்டு பண்ணிவிடுவார்களென்று பயம்! அவளது வேகம் மும்தாஜைத் தன் கையோடு கூட்டிச் சென்றுவிடவென்றே காத்திருந்திருந்தது போலிருந்தது. சொஹ்ரா, றைமாவிடம் சொல்லிச் சிரிப்பாள். “மும்தாஜுக்கு வேற யாருமா வந்து எதையும் கத்துக் குடுக்கணும். பாவம் ரொம்பப் பதூசு இல்லெ” என்று.

“இன்னேரம் போயிருந்திருக்கணும். பாவம் அங்கெ அதுகள வச்சுக்கிட்டு பரிதா என்னா கஷ்டப்படுறாளோ” என்று சலித்துக் கொண்டவள், “நான் வீட்டுக்கு வந்தப்புறம் நீ வர வேண்டியது தான, ரெண்டு பேரும் ஒரே நேரத்தில வந்திட்டா வீட்டுக்கு ஆளு வேணாமாக்கும். பரிதா தனியா இருப்பா இல்லை?” என்றாள் மும்தாஜைப் பார்த்துக் கோபமாக. மும்தாஜ் அவளது காதில்

விழாதபடிக்கு முணுமுணுத்தாள், “ஆமா இந்தப் பொம்பளையோட மகளை யாரோ தூக்கிட்டுப் போறது மாதிரித்தான்” என்று.

வீட்டிற்குள் அடைந்து கிடந்து விட்டு வெளிச்சத்திற்கு வந்தது றைமாவுக்கு மனதிற்கு இதமாக இருந்தது. வெளிக்காற்று லேசாக முகத்தில் பட்டதே சுகமாக இருந்தது. கடுமையான இறுக்கத்திலிருந்து விடுபடும்போது வரும் ஒருவிதமான சுதந்திர உணர்வு உண்டாயிற்று. நாக்கு வறண்டிருந்தது. வீட்டிற்குப் போனவுடன் குளித்தால்தான் புழுக்கம் தீரும் என்று நினைத்துக் கொண்டாள். மனம் ஒரு நிலையில் இல்லாதபடி அலைபாய்ந்து கொண்டிருந்தது. மௌத்தான வீட்டில் நடந்த பேச்சுகள் குறித்து யோசித்தபடி நடந்துகொண்டிருந்தாள். இப்பெண்கள் இப்படிப் பேசுவதொன்றும் புது விஷயமில்லை. எப்பொழுது நாலு பெண்கள் ஓரிடத்தில் கூடினாலும் பேச்சு இப்படித்தான் இருக்கும். இவர்கள் மட்டுமல்ல, ஊர்ப் பெண்களில் அனேகம் பேர் இப்படித்தான் பேசிச் சிரித்துக் கொள்வார்கள். இவளுக்கு நன்றாகவே தெரியும். ஆனால் எங்கே வேண்டுமானாலும் பேச இவர்களால் எப்படி முடிகிறது என்பது தான் வியப்பாக இருந்தது. மரணம் தமக்குள்ளாக உண்டுபண்ணக் கூடிய பீதியை அது நினைவூட்டும் யதார்த்தத்தைக் கொஞ்சம்கூட உணரமுடியாமல் எப்படி இவர்களால் இருக்கமுடிகிறது என்கிற கேள்வி எழுந்து ஆச்சரியமுண்டாக்கியது. மரணத்தைபற்றி அதிகமாக யோசிக்கத் தெரியாத அவர்களின் பேரில் ஆழமான கருணை உண்டாயிற்று. சொஹ்றாவைப் போல் அவர்கள் பேரில் கோபம் வராமல், பாவமாகத்தான் இருந்தது. சொஹ்றாதான் வீடுவந்து சேர்ந்ததிலிருந்து ஒரேயடியாகத் திட்டித் தீர்த்துக் கொண்டிருந்தாள். என்னவோ அவள்தான் இந்தப் பெண்களின் ஒட்டுமொத்த ஒழுக்கத்தைக் காப்பாற்ற வந்தவள் மாதிரியும் அவர்கள் அதை

அசிங்கப்படுத்தவென்றே பிறந்தவர்கள் மாதிரியும். "விடு சொஹ்ரா, அவளுகளுக்கு எசையுறத பேசிட்டுப் போயிருக்காளுக" என்று சொல்லி றைமாவுக்கு அவளைச் சமாதானம் செய்து வைக்கவே போதும் போதுமென்றாகி விட்டது.

# 27

மாமியாரும் மருமகளும் வீடுவந்து சேர்ந்த போது வீட்டுக்குள்ளிருந்து முத்து வெளியே வந்தான். என்ன என்று கேட்கிற மாதிரி அவனை உற்றுப் பார்த்தாள் சைனு. அவன் "ராபியா இங்கே இருந்தா கூட்டி வரச்சொல்லி அய்யா சொன்னாங்க அதுதான்!" என்றான். அவனது படர்ந்த பெரிய முகம் ஏதோ கவலையோடிருப்பதுபோலச் சோர்ந்துபோய் இருந்ததைக் கவனித்த மும்தாஜ் வாசற்படியிலேயே நின்றுகொண்டு அவன் முகத்தைக் கூர்மையாகக் கவனித்தாள். "அத வெளிய நின்னு கேக்க வேண்டியதுதான நீ, எதுக்காக உள்ளுக்குள்ள போன?" சைனு ஆத்திரமாகச் சொல்ல, மும்தாஜ் வாய்மூடி வீட்டுக்குள் விசுக்கென்று நுழைந்து கொண்டாள். இன்றைக்கு இவன் செத்தான் என்கிற மாதிரி சிரித்தபடி.

"வெளிய நின்னுதாம்மா கூப்பிட்டுப் பாத்தேன் யாருமே காணலியே அதுதான்!" என்றான் அவன்.

"அதது இருக்கிற இடத்துலதாண்டா இருக்கணும். உம் . . .! உன்னச் சொல்லி என்னா பண்ண? காலம் அப்பிடிக் கெட்டுக் கிடக்கு. முன்னெயெல்லாம் வேலைக்காரனுக, பண்ணைக்காரனுக துண்ட இடுப்புல கட்டிக்கிட்டுத்தேன் பண்ணை வீட்டுக்கு வருவானுக. இப்பொ . . ." என்று அங்கலாய்த்தபடி, "சரி, சரி, நீ போ" என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் வந்தாள். வாசலில் இருந்த தொட்டியிலிருந்து தண்ணீரைக் குவளையால் மொண்டு முழங்கால் முழங்கை வரை மூன்று முறை கழுவினாள். முகத்தையும் காலையும் மும்மூன்று முறை கழுவிவிட்டு ஹாலுக்கு வந்தாள். அவளைத் தொடர்ந்து மும்தாஜும் கைகால் கழுவ ஆரம்பித்தாள். பரிதா, ஒரு

சேரில் உட்கார்ந்து சாய்ந்தபடி சோபாவின் மீது காலைப் போட்டவாறு புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள். தாவணி விலகி ஒருபக்க மார்பு வெளியில் தெரிந்தது. ‘பொட்டக் கழுத உட்காந்திருக்கிறதப் பாரு, ஒழுக்கம், சழுக்கம் இல்லாம’ என்று மனதில் நினைத்தபடி, “அம்மா பொம்பளப்புள்ள, முந்தானைய ஒழுங்காப் போடு, காலக் கீழ போட்டு ஒக்காரு பயலாட்டம் இருக்காம” என்றாள் சைனு கோபமாக.

பரிதா உடனேயே காலை எடுத்துக் கீழே போட்டு நெஞ்சில் தாவணியை இழுத்து மூடினாள். மும்தாஜுக்குத் தெரியும் இன்று மாமியார் ஏதோ கோபத்திலிருப்பதால் வீட்டில் அத்தனை பேருக்கும் நல்ல திட்டு கிடைக்கப் போகிறதென்று. அவள் கண்ணில் படாமலேயே இன்றைய பொழுதை ஓட்டிவிட்டால் தப்பித்தோம் என்று நினைத்து அறைக்குள் முடங்கிக் கொண்டாள். அதோடு சுலைமான் வரப்போவதால் அறையைச் சுத்தம் செய்து ஓரளவுக்கு நல்ல விதமாக அலங்கரித்துவைக்கும் வேலை வேறு அவளுக்கிருந்தது. திடீரென அவனது நினைவு வந்து உடம்பெல்லாம் சிலிர்த்தது. இடுப்பில் செருகியிருக்கிற கொத்துச் சாவியை உருவி எடுத்து அவன் சமீபத்தில் எழுதிய கடிதத்தை பீரோவைத் திறந்து எடுத்தாள். கதவைத் தாளிட்டு விட்டு கட்டிலில் படுத்தபடி படிக்கத் தொடங்கினாள். இதோடு பத்துமுறையாவது படித்திருப்பாள் கடிதத்தை. ஓரளவு மனப்பாடம் கூட ஆகியிருந்தது. தான் கடைசியாக எழுதிய கடிதத்தில் சேக் முகமது பாடிய,

கப்பலுக்குப்போன மச்சான்

கண்நிறைஞ்ச ஆசை மச்சான்

எப்பத்தான் வருவீங்க

எதிர்பார்க்கிறேன்

என்ற பாடலை முழுவதுமாக எழுதி அனுப்பியிருந்தாள். அதைப் படித்துவிட்டு அவன் ரொம்பவும் கிண்டல் செய்து இந்தக் கடிதத்தில் பதில் எழுதியிருந்தான். இம்முறை அவனை மறுபடி வெளி நாட்டுக்கு அனுப்பக் கூடாது என்று நினைத்திருந்தாள். எவ்வளவு நாள் இந்த இளமையைத் தனிமையில் கழிக்க முடியும்? அவனுக்குத் தெளிவாக எழுதியும் விட்டாள்.

அவன் என்ன வேண்டுமானாலும் கிண்டல் செய்யட்டும், புருஷன்தானே? அதோடு, இன்ஷா அல்லாஹ்! இந்த வருடத்திலாவது குழந்தை உண்டாகிவிட வேண்டும் என்று நினைத்திருந்தாள். இப்படியே வந்துவந்து போய்க்கொண்டிருந்தால் இன்னும் எத்தனை வருடம் ஆகுமோ பிள்ளை பெற என்ற கவலை வேறு அவளுக்கிருந்தது. டாக்டரம்மாவிடம் கேட்டதற்கு, குறைந்தது ஒரு வருஷமாவது உன் கணவனை இங்கே இருக்க வை என்று சொல்லியிருந்தாள். அதையும் கூட அவனுக்கு எழுதியிருந்தாள். அவனும் ஒத்துக்கொண்டுதான் வருகிறான்.

வெளியில் ஹாலில் உட்கார்ந்திருந்த சைனு வெற்றிலைப் பெட்டியை எடுத்துத்தரச் சொல்வதற்காக "மதினா!" என்று கூப்பிட்டாள். "மதினாவைக் காணோம் எங்கேன்னு தெரியலை" என்றாள் பரிதா. "எங்கே போனா அரசாளுவா, இந்த வெயில்ல?" என்று மகளிடம் கேட்டவள், ஒரு நொடி யோசித்துவிட்டு, "அப்ப நீ இந்நேரம் தனியாத்தான் இருந்தியா?" மனதின் அடியாழத்திலிருந்து துடித்து வருகிறது சைனுவின் குரல். "ஏன்? ரபி, சித்தி இருக்காக இல்லெ? இப்பத்தேன படுத்துத் தூங்குச்சுக. சாப்பிட வச்சு தூங்க வைச்சேன். அவ சாப்பிடக் கூட வரலை" என்றாள் பரிதா அலட்சியமாக. சைனுவுக்கு மனதில் ஏதோ நெருடியது. வீட்டில் ஆளில்லாத நேரத்தில் முத்து உள்ளிருந்து போகிறான் என்றால் அதற்கு என்ன அர்த்தம்

என்று மனம் நடுங்கிற்று. இந்தப் பாவி மக ஏதும் தப்புத் தண்டா பண்ணித் தொலைச்சிட்டாக்க நான் என்னா செய்வேன்? யாராவது பாத்திருந்தால் என்னவெல்லாம் கதைகட்டிப் பேசுவார்கள். அதைக் காட்டிலும் வீட்டிலேயே வினையாக மும்தாஜ் இருக்கிறாளே? இதை அவள் எப்படியெல்லாம் திரித்துப்பேசுவாள்? இது போதாதா அவளுக்கு? அட அல்லாவே என்று நினைத்துக் குறுகிப்போனாள்.

அதே சமயம் அவன் இங்கே வந்து விட்டுப்போன உண்மையான காரணம் என்னவாக இருக்கும் என்று மனம் கணக்கிட்டுப் பார்த்தது. மகளை நம்பினாலும் அவளது வயதை நம்ப அவள் மனம் இடம் கொடுக்கவில்லை. ஏதாவது விபரீதமாக நடந்துவிட்டால். . .? அவளுக்குக் குலை நடுங்கிற்று. வரட்டும் அவன் என்று சுலைமானை நினைத்தாள். அடுத்த மாதத்தில் எவனையாவது பிடித்து அவன் கையில் இவளை ஒப்படைக்கவேண்டும் என்று உறுதி எடுத்துக் கொண்ட பிறகுதான் அவளுக்கு நிம்மதியுண்டாயிற்று.

தானே எழுந்து போய் வெற்றிலைப் பெட்டியை எடுத்து வந்து தூணோரத்தில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு காலை நீட்டிக் கொண்டாள். உடல் எல்லாம் புண்ணாக வலித்தது. அறைக்குள்ளிருந்து சித்திக்கா எழுந்து வந்தாள். தூக்கத்தில் வாயோரத்தில் வழிந்த எச்சில் காய்ந்துபோய் வெள்ளைநிறக் கோடாகி இருந்தது. “அம்மா, அம்மா” என்று சொல்லியபடி பக்கத்தில் வந்து பரப்பிக்கொண்டு உட்கார்ந்தாள். “பாவாடையைச் சுருட்டி உக்காருடி” என்று அதட்டினாள் சைனு. அவள் அதைக் கவனிக்காமல், “அம்மா எங்கெ போயிருந்த . . . எங்கெ போயிருந்த” என்று திரும்பத் திரும்பக் கேட்டாள். “பரிதா அடிச்சா, அடிச்சா” என்று அவளை நோக்கிக் கை காட்டினாள். அவளது கண்கள் ஓரிடத்திலும் நிலையாகப் பார்க்காமல் அலை பாய்ந்தபடியிருந்தன. “நான் எங்கெ போனேன், பக்கத்து

வீட்டுலதான் இருந்தேன். ஏண்டி அடிச்ச புள்ளைய?" என்று பரிதாவைப் பார்த்துப் பொய்யாக அதட்டினாள்.

சைனு வெளியிலிருந்து வந்தால் போதும். வந்து அம்மாவிடம் சலுகை சொல்லியாக வேண்டும் இவளுக்கு. இவள் பரிதாவைத் திட்டாதவரை அதையே மறுபடி மறுபடி சொல்லிக் கொண்டிருப்பாள். பரிதாவை அதட்டிவிட்டு, "சாப்பிட்டியா?" என்றபடி அவளது பாவாடையின் ஓரத்தைத் தூக்கி அதிலேயே அவள் வாயைத் துடைத்து விட்டவள், பாவாடையில் ஈரம் தட்டுப்படுவதைப் பார்த்துத் திகைத்தாள். "ஏண்டி மூத்திரம் பேஞ்சியா? அடிமொட்ட, பட்டப்பகல்ல என்னா கேடு ஒனக்கு? எந்தலை நஸீபு" என்று தலையில் அடித்துக் கொண்டாள். "பரிதா இங்கே பாருடி இவள" என்று சொல்லிக் கூப்பிட்டாள். இங்கு நடப்பதைக் கவனித்தபடியே படித்துக் கொண்டிருந்தவள், "போம்மா! நீயே சுத்தம் செய். எனக்கு முடியல" என்று சலிப்புடன் சொல்லிவிட்டுப் படிப்பதைத் தொடர்ந்தாள்.

"ஆமடி! எனக்குப் போட்ட விதிய நான்தானே பாக்கணும்? செத்த நேரம் விழுந்துகிடக்கலாம் இடுப்புக் கடுக்குதேன்னு நினைச்சு வந்தா, முடியுதா? மருமகளக் கட்டி வச்சு எதுக்காவது பிரயோசனப் படுதா? அது தான் உண்டு தன் வேலை உண்டுன்னு அடைக்கோழியாட்டம் அறைக்குள்ள அடைஞ்சுக்குது சொகுசா! அது வாங்கி வந்த வரம் அப்பிடி! நான் மாட்டமா வரம் வாங்கி வரணும்?" என்று தன் கோபத்தை எல்லாம் மும்தாஜின் மேல் திருப்பி சத்தமாகக் கத்த ஆரம்பித்தாள் அவளுக்குக் காதில் விழட்டுமென்று. அறையிலிருந்தபடியே மும்தாஜ் கேட்டுக் கொண்டுதானிருந்தாளே தவிர வெளியே வரவில்லை.

சைனு, ஓராயிரம் கிறுக்கு மொட்டை என்று சொல்லியபடியே அவளுக்குத் துணி மாற்றி விட்டு, அவள் படுத்திருந்த அறையைச்

சுத்தம் செய்யத் தொடங்கினாள். ரபி ஒரு ஓரத்தில் ஒருக்களித்துப் படுத்திருந்ததால் அவள் மீது மூத்திரம் பட்டிருக்கவில்லை. சித்தி ஒன்றும் புரியாதபடி தன் தலையில் கை வைத்துத் தன்னிச்சையாகப் பேன் உருவிக் கொண்டிருந்தாள்.

மதினா வெளியிலிருந்து அப்போதுதான் வீட்டுக்குள் ஓடி வந்தாள். "என்னா, என்னமோ நாறுது?" என்று மூக்கைச் சுளித்தவள், "சித்தி மூத்திரம் பேய்ஞ்சிருச்சா?" என்று அம்மாவிடம் கேட்டாள். இதுவரை தன் ஆத்திரத்தைக் காட்ட ஆளில்லாத தனிமையில் புலம்பிக் கொண்டிருந்த சைனுவுக்கு, ஆள் கிடைத்த திருப்தி உண்டாகி, "அடி ஊரு சுத்தி முண்ட, எங்க போயி தொலைஞ்சிட்டு வாற? பொட்டக் கழுதக்கிக் காலு எதுக்கு, ஒடிச்சு அடுப்புல வைக்கிறன்டி, பாரு செய்யுறேனா இல்லையான்னு. நீ என்னா இன்னமும் சின்னப்புள்ளைன்னு நினைச்சுக்கிட்டு ஊரச் சுத்துறியா, நெஞ்சப்பாரு உத்துக்கிட்டு! ஆளாகத்தக்கன வளந்துட்டியே, கொஞ்சமாச்சும் ஒழுக்கம் வேணாம்? வீட்டுல அக்கா தனியா இருக்கையில, நீ வீட்ட விட்டு எப்பிடிப் போவ?" ஆத்திரத்தில் வார்த்தைகள் தடைகளற்று வளர்ந்துகொண்டேபோக ஆக்ரோஷமாகக் கத்தினாள் சைனு. அவளது கனமான உடல் கீசுமூசென்று மூச்சு வாங்கியது. பரிதாவுக்கு ஆத்திரம் பொங்கிற்று. அரண்டு போய் தூணைக் கட்டிப் பிடித்தபடி நின்ற மதினாவைப் பார்க்கப் பரிதாபமாக இருக்க, "ஆமா, நீ எதுக்காக அப்பதிலேர்ந்து இப்பிடிக் கத்தித் தீக்கிற? என்னமோ மோசம் போனது மாதிரி! நான் தனியா இருந்தா என்னா யாரும் தூக்கிட்டுப் போயுட்டாகளா?" பதிலுக்கு அவளும் சத்தம் போட்டுக் கத்தியவள், "பிரஷர் இருக்குதுன்னு டாக்டர் சொல்லி இருக்காருல்ல அப்பவும் ஒனக்குப் பொறுமை வேணாம்? வயசாவுதே தவிர பொறுமையில்லை." கவலையுடன் உள்ளொடுங்குகிறது பரிதாவின் குரல்.

சைனு ஒன்றும் பேசாமல் அடங்கிப்போய் உட்கார்ந்திருந்தாள். அவளைப் பார்க்க மதினாவுக்கும் பரிதாவுக்கும் பரிதாபமாக இருந்தது. மேலே யாரும் ஒன்றும் பேசவில்லை. பரிதா, மதினாவைக் கையைப் பிடித்துத் தரதரவென்று அடுப்படிக்குள் இழுத்துப் போனாள். “ஏண்டி! உனக்கு ராபியாகூட இருந்தா சோத்து ஞாபகம் கூட வராதா? நான் தெரியாமத்தான் கேக்குறேன்” என்று அதட்டி விட்டுத் தட்டில் சோற்றைப் போட்டு அவளருகில் வைத்துவிட்டுக் குழம்பை ஊற்றினாள். ஒன்றும் சொல்லாமல் சாப்பிட ஆரம்பித்தவளிடம், “உன் பாவாடையில பாரு, எவ்வளவு அழுக்கும் புழுதியும் இருக்குன்னு. மண்ணுல விளையாடினியாக்கும்? அம்மா இதப் பாத்தா இதுக்கொரு கத்துக் கத்தியிருக்கும்” என்றவள், “ஆமா, பாதாம்பருப்பு ஒரு டின்னுல இருந்துச்சே அதைக் கொட்டிக்கிட்டுப் போனியோ?” என மறுபடி அதட்டினாள். மதினா திருட்டு முழி முழித்துவிட்டு, “ஆமா, ராபியாவுக்குக் கொண்டு போய் குடுத்தேன்” என்றாள். “அது அம்மாவுக்குத் தெரிஞ்சா என்னாவும்னு தெரியுமில்ல? இப்ப சொல்றதுதான் கேட்டுக்கோ. நாளைக்கி அண்ணன் வருது இல்ல? இதுமாதிரி ஊர் சுத்துறது, விளையாடுறது அதுக்குச் சுத்தமா புடிக்காதுன்னு தெரியுமில்ல? ஜாக்கிரதையா இருந்துக்க, திட்டு வாங்கிச் சாகாதே!” கவலையுடன் தங்கைக்குப் புத்தி சொல்லிவிட்டுத் தன் அறைக்குள் நுழைந்து கொண்டாள்.

சாப்பிட்ட கையோடு மதினா அம்மாவிடம் ஓடி வந்தாள். அவள் ஏதோ யோசனையிலிருப்பதை நெற்றிச் சுருக்கம் காட்டியது. மறுபடி அக்காவிடம் ஓடி, “அக்கா, சாயங்காலம் கல்யாண ஜவுளி பாக்க அம்மாவையும் மும்தாஜண்ணியையும் சொஹ்ராக்கா வரச்சொன்னாங்க” என்று சொல்லி விட்டு மறுபடியும் தெருவுக்கு ஓடினாள்.

ராபியாவும் அவளும் டைலர் வீட்டுக்குப்போய் துணி தைக்கக் கொடுக்க அவரைக் கூட்டிவர வேண்டும் என்று றைமா கூப்பிட்டிருந்தாள். இவள் போகையில் ராபியா முகம் கழுவி பவுடர் பூசிக் கிளம்பியிருந்தாள். அப்பொழுதுதான் மதினாவுக்கு ஞாபகம் வந்தது தான் ஒன்றுமே செய்யாமல் இருப்பது. வீட்டில்தான் ஒரே சத்தமாக இருக்கிறதே, எதுதான் செய்ய முடியும் என்று நினைத்தவாறு, "இரு, நானும் முகம் கழுவிக்கிறேன்" என்று அங்கேயே முகம் கழுவி ராபியாவிடம் துண்டுவாங்கித் துடைத்துக் கொண்டாள். வஹிதாதான் பவுடர் போட்டு விட்டாள் அவளுக்கு.

போகும் வழியில் அஹமது நின்று கொண்டிருந்தான். இவர்களைப் பார்த்ததும் ஓடி வந்து, "ஏய்! வர்றீயா சைக்கிள் கத்துத்தாரேன்! இந்தா காசு, சைக்கிள் எடுக்க." கையை விரித்துக் காட்டினான். ராபியா தயக்கத்துடன் மதினாவைப் பார்த்தாள். "நாளைக்கி எங்கண்ணன் வருது. அவருக்கு இதெல்லாம் புடிக்காது." அவன் முகத்தைப் பார்க்காமல் ராபியாவைப் பார்த்தே பதில்சொன்னாள் மதினா. ராபியாவுக்கு ஆசைதான். ஆனால் இப்போதைக்கு நேரமில்லாமல் இருந்தது. வீட்டில் இவள் உதவி எப்பொழுதும் தேவையாக இருந்தது. அதனால், "இப்பொ வேண்டாம் அஹமது. கல்யாணம் முடியட்டும். அப்புறம் வர்றேன்" என்றாள். அவள் முகம் ஏமாற்றத்தினால் சுருங்கிப்போயிற்று. அதைப் பார்க்க அவனுக்குக் கஷ்டமாக இருந்திருக்க வேண்டும். அதை மறைத்துக் கொள்ள முயன்றபடி, "சரி, இப்பொ எங்கே?" என்று கேட்டவாறு அவர்களோடு சேர்ந்து நடக்கத் துவங்கினான். அவர்கள் போகுமிடத்தைச் சொன்னதும், "சரிசரி, போ"வென அனுமதி கொடுத்தவன், "ராபியா, அப்புறம் நீ எங்க வீட்டுக்கு வா! எங்க அத்தா புதுசா வாங்கின விளையாட்டுச் சாமான்லாம் காட்டுறேன்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து

ஓடினான். அவனது செயலும் பேச்சும் மதினாவை ஆதங்கப்படவைக்க வேண்டுமென்கிற மாதிரி இருந்ததை ராபியா கவனித்தாள்.

டைலர் வீடு இரண்டு தெரு தள்ளியிருந்தது. போகும்பொழுது மதினா கேட்டாள்: "நீ உங்கக்கா கூட கல்யாணம் முடிஞ்சதும் பொண்ணுக்குத் தோழியா போவியா?"

"ஆமா, போவேன். பெரியம்மா போகச் சொல்லிட்டாங்க. அங்கெ எங்க சித்தி பிர்தவ்ஸ பாக்கப் போறேன்" என்றாள் சந்தோஷமாக!

"வர எத்தினி நாளாகும்?"

"தெரியலையே, ஏழாம் நாள் விருந்து வச்சுதான் பொண்ண மறுபடி இங்கே கூப்பிடுவாங்களாம். வீட்டுல பேசிக்கிட்டாங்க" என்றாள் ராபியா.

"எனக்குதான் விளையாட ஆளில்லாமக் கஷ்டமா இருக்கும்" என்ற மதினா, "ஆமா, இனிமேல நான் முன்ன மாதிரி விளையாட முடியாது. எங்கண்ணனுக்கு நான் தெருவுக்குப் போனாலே புடிக்காது. பொம்பளைப் புள்ளைக்கி என்ன விளையாட்டுன்னு திட்டும். எடுத்து வச்சு ஓது, தொழுன்னு சொல்லிக்கிட்டே இருப்பாரு. உங்கம்மா மாதிரி" என்று சொல்லிக் கவலைப்பட்டாள்.

"அண்ணன் ரெண்டு மாசம்தானே இங்கெ இருக்கும் அப்புறம் என்ன?" அவளுக்கு ஆறுதல் சொன்னாள் ராபியா.

"இல்லெ" என்று அவசரமாக மறுத்த மதினா, "இந்த முறை ஒருவருஷம் இருக்கப் போறாராம். அண்ணிக்குக் குழந்தை உண்டான துக்கப்புறம்தான் போவாராம். வீட்டுல பேசிக்கிட்டாங்க" என்றாள்.

"ஏன் ராபியா, கல்யாணம் ஆகிட்டாலே பிள்ளை பிறந்துரும் இல்ல? அதுக்கு அவர் எதுக்காக இங்கேயே இருக்கணுமாம். ஒனக்கு எதாவது தெரியுமா?" அவள் கேட்டதற்குப் பதில் சொல்லாமல் கொஞ்ச நேரம்

யோசிப்பது போலிருந்துவிட்டு உதட்டைப் பிதுக்கினாள் ராபியா, தெரியாது என்கிற மாதிரி. அதற்குள் அவர்கள் டெய்லர் வீட்டை அடைந்திருந்தார்கள். வீட்டின் முகப்புக் கதவில் ஒரு பூட்டுத் தொங்கிக் கொண்டிருந்தது. "வீட்டில் ஆளில்லை போல" என்றாள் மதினா. "ஆமா, இப்பொ என்ன செய்றது" என்று இருவருமாகச் சிறிது நேரம் தயங்கியபடி நின்றார்கள்.

அது சிறிய ஓட்டுவீடு. வீட்டிற்குப் பின்புறமாகக் கொல்லைப்புற வழி ஒன்றிருப்பதும், அங்கே மாட்டுக் கொட்டமும் எலுமிச்சம்பழ மரம் ஒன்று இருப்பதும் இருவருக்கும் தெரியும். அந்தக் கதவு திறந்து கிடக்கிறதா என்று பார்ப்பதற்காக வீட்டின் பின்புறம் போனார்கள். கொல்லைக்கதவு திறந்தே கிடந்தது. சாயங்காலம் மாடு வந்து சேர்வதற்காகப் பெரும்பாலும் அந்தக் கதவு திறந்துதான் இருக்கும். இருவரும் உள்ளே போனார்கள். நிலை ரொம்பவும் தாழ்வாக இருந்தது. இருவருமே அதைவிட உயரமென்பதால், குனிந்துதான் போகவேண்டியிருந்தது. மாட்டுச்சாணி தரையெல்லாம் உழப்பிக்கிடந்தது. கால் வைக்கவே அருவெறுப்பாக இருந்தது. நுனிக்காலில் நடந்து உள்ளே போனார்கள். வீட்டின் பின்கதவு உள்ளே தாளிடப்பட்டிருந்தது. அங்கிருந்த எலுமிச்சை மரத்திலிருந்து கீச்கீச்சென குருவிகளின் ஓசையும் கொல்லை முழுவதுமாகப் படர்ந்திருந்த மர நிழலின் குளுமையும் உற்சாகமூட்டக்கூடியதாக இருக்க, மௌனமாக இருக்குமாறு மதினாவிடம் சைகை காட்டி விட்டுத் தலையை அண்ணாந்து மரத்தைக் கவனமாகப் பார்த்து குருவிக்கூடு இருக்கிறதாவெனத் தேடினாள் ராபியா. கொத்துக்கொத் தாய் எட்டும் தூரத்தில் காய்த்துக்கிடக்கும் பச்சை நிறக் காய்களைப் பார்த்தபடியே எட்டி ஒன்றிரண்டு இலைகளைப் பறித்துக் கைவிரல் இடுக்கிடையே தேய்த்து மூக்கினருகில் கொண்டு சென்று ஆழமாக

மூச்சை உள்ளிழுத்தாள். அதைப் பார்த்ததும், மதினாவும் தன் பங்குக்கு எட்டி இரண்டு பழங்களைப் பறித்தாள். “வேணாம்டி வா போயிருவோம், யாராச்சும் பாத்துருவாங்க.” அவளது கையைப் பிடித்து இழுத்த ராபியா பதறினாள். “யாரும் பாக்க மாட்டாங் கங்கிறீன்ல, இரு, இன்னும் நாலே நாலு புடுங்குவோம். ஆசையா இருக்கு” என்று மேலும் பறிக்க ஆரம்பித்தாள் மதினா. “அம்மாடி! களவாங்குறது தப்புல்ல, எனக்கெல்லாம் வேணாம்மா. யாரும் பாக்கலைன்னு நெனைக்காத, ரெண்டு பக்கத் தோள்லயும் மலக்குக இருந்து பாத்துக்கிட்டு இருக்கறத மறந்திட்டியா?” கடைசி முயற்சியாக மலக்குகள் தோளில் காவலிருக்கிறதை அவளுக்கு நினைவூட்டினாள் ராபியா.

மதினா ஒரு கணம் நிதானித்தாள். கையில் ஆறு பழங்கள் இருந்தன. அதை மட்டும் கொண்டு போகலாம் என்று முடிவுக்கு வந்தவளாக, “சரி, வா போவோம்” என்று கூப்பிட்டுவிட்டுத் திரும்பி நடந்தாள். இது மட்டும் கொண்டு போகலாமா என்கிற மாதிரி அவளை உற்றுப்பார்த்தாள் ராபியா. “சரி! புடுங்கியது புடுங்கியாச்சு இதக் கொண்டுபோவோம். நாளைக்கு வர்றப்போ காசு குடுப்போம்.” அவளைத் திருப்திப்படுத்த முயன்றாள் மதினா. அவள் காசு கொடுப்போம் என்று சொன்ன பிறகுதான் ராபியாவுக்கு நிம்மதி உண்டாயிற்று. குழம்பிய முகம் பளிங்குபோலத் தெளிவடைய, மறு பேச்சில்லாமல் அவளோடு சேர்ந்து வெளியில் வந்தாள். தெருவில் யாராவது தம்மைப் பார்க்கிறார்களா என்கிற மாதிரி இருபக்கமும் தலையைத் திருப்பிப் பார்த்துவிட்டு வேகமாக நடக்க ஆரம்பித்தார்கள்.

தெருவை அடைத்துப் பந்தல்போட்டது போல அடிக்கிற எதிர் வெயில் கண்ணைக் கூசச்செய்தது. தகிக்கும் வெயிலைக் கடந்துவிடும் உத்வேகத்துடன் முன்னேறிச் செல்லும் இருவரையும் பின் தொடர்ந்து

வந்துகொண்டிருந்த வெயில் அது. தன் சூடான கரத்தினால் அவர்களை இறுகத் தழுவிக்கொண்டது. தூரத்தில் அஸருக்கு பாங்கு சொல்கிற ஓசை காதில் விழ ராபியாவின் கையை இறுகப் பற்றியபடி மதினா ஒன்றும் பேசாமல் அமைதியாக நடந்து கொண்டிருந்தாள். அவளுக்கும் தெரியும் மலக்குகள் இரண்டு தோளிலுமிருந்து பார்த்துக் கொண்டிருப்பது. மதரஸாவில் அஸரத் அது பற்றி நிறையவே சொல்லியிருக்கிறார், சோற்றுக் கைப்பக்கம் இருக்கும் மலக்குகள் அவளது நன்மைகளை எழுதி வைப்பார்கள், பீச்சாங்கை பக்கம் இருக்கும் மலக்குகள் அவள் செய்யும் தீமைகளை எழுதி வைப்பார்கள் என்று. கியாமத் நாளில் இரண்டையும் கூட்டிக் கழித்து, பாவம் செய்தது அதிகமென்றால் நரகத்திற்கும் நன்மை செய்தது அதிகமென்றால் சொர்க்கத்திற்கும் அனுப்புவாராம் அல்லா. அங்கே ஏழாவது சொர்க்கமான ஜன்னத்துல் பிர்தவ்ஸுக்குப் போகவேண்டுமென்றால் ரொம்பவே நன்மை செய்திருக்க வேண்டுமாம். இவ்வளவும் தனக்குத் தெரிந்திருந்தும் இப்படிப் திருட நினைத்தோமே என்று அவளுக்கு வருத்தமாக இருந்தது.

ராபியா அவளது நினைவுகளைக் கலைத்தாள். “நாமதான் நாளைக்குக் காசு குடுத்திருவோம் இல்ல, அதையே ஏன் நினைக்கிற?” மதினா சமாளித்தாள். “அதெல்லாம் ஒண்ணுமில்லையே! நான் எங்கண்ணனப் பத்தி நினைச்சிட்டு வந்தேன். நாளையிலேர்ந்து நான் தாவணி போடணுமாம்! இனி கழட்டவே கூடாதுன்னு அம்மா சொல்லியிருக்காங்க. அண்ணன் திட்டுவாராம். இனி சினிமாவுக்குக் கூட என்னைப் போக விடமாட்டார்” என்றாள் மதினா. அவளது நினைவுகளில் அண்ணனைப் பற்றிய ஞாபகங்கள் பெரும் பயமாகப் பதிவாகியிருந்தன. அவன் இங்கு வரப்போவதைப் பெரிய தொல்லையாகவே அவள் உணர்ந்தாள்.

“நிச்சயமா நீ நாளைக்கே தாவணி போடுறதாயிருந்தா நானும் நாளையிலேர்ந்து போடுவேன்” என்றாள் ராபியா சந்தோஷமாக! “நாம சேர்ந்தே போடுவோம் என்ன” மறுபடி சொல்லி அவளுக்கு உற்சாகமூட்ட முயன்றாள். மதினாவுக்கு அவள் சொல்லியதும் முகம் சந்தோஷத்தில் மலர்ந்தது. “நிஜமாவா?” என்று கேட்டவள், “எனக்குப் புதுசா போடுறதுக்கு வெக்கமா இருந்துச்சு, பொம்பளைக எதாவது சொல்லிக் கேலி பண்ணுவாங்க அசிங்கமா பேசுவாங்கன்னு. இப்பத்தாண்டி நிம்மதியா இருக்கு” என்று சொல்லி ராபியாவின் கைவிரல்களை மேலும் இறுக்கமாகப் பற்றிக் கொண்டாள். அந்த இறுக்கத்தில் அவள் தனக்காக எதுவும் செய்யக் கூடியவள், தன்னுடையவள் என்கிற உணர்வு அதிகமாக இருந்தது.

# 28

ராபியாவின் வீட்டில் பெண்கள் கூட்டமாக அமர்ந்திருந்தார்கள். ஒரே சத்தமாக இருந்தது. ஹாலில் நாலைந்து பாய் விரித்து, அதில் மும்தாஜ், நபிஸா, சைனு, சவுரா, பாத்திமா எல்லோருமாக உட்கார்ந்து, நடுவில் விரித்து வைக்கப்பட்டிருந்த பட்டுப் புடவைகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சொஹ்ரா அவர்களுக்கு டீ ஊற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். வஹிதா தலையில் முக்காடிட்டு சேரில் குனிந்து உட்கார வைக்கப்பட்டிருந்தாள். அவளுக்கு ரொம்பவும் கூச்சமாக இருந்திருக்க வேண்டும். முகம் சிவந்திருந்தது. ராபியா ஓடிப்போய் அவளது காலடியில் இருந்து கொண்டு வேடிக்கை பார்க்கத் துவங்கினாள். றைமா அவளைப் பார்த்ததும், "டைலரைக் கூப்பிட்டியா" என்று கேட்டுவிட்டுப் பதிலை எதிர்பார்க்காமல் அடுப்படிக்குள் நுழைந்து கொண்டாள். "இல்லெ பெரியம்மா, வீடு பூட்டியிருக்கு, அப்புறமா போறேன்" என்று சத்தமாகச் சொன்னாள் ராபியா.

"ஏன் மச்சி, இந்தக் கூரைப்புடவை என்னா வெலை?" ஆர்வமாகக் கேட்டாள் நபிஸா. "அடியே, ஏன் இப்புடிக் கத்துற காது ஜவ்வே கிழிஞ்சு போறாப்புல," ராபியாவைப் பார்த்துக் கடிந்து கொண்டபடியே எதிர்த்தாற்போலிருந்த அடுப்படியிலிருந்து முகத்தைத் திருப்பி, "அதுதான் பில் இருக்குல்ல, பாத்துக்கோ" என்றபடி அடுப்படியிலிருந்து வெளியே வந்து அவளருகில் அமர்ந்து கொண்டாள் றைமா. "இல்லெ, தள்ளுபடி எதுவும் போட்டாங்களான்னு கேட்டேன். ரொம்ப நல்லாருக்கு சேலை எல்லாமே" என்று பாராட்டிய நபிஸாவிடம், "எல்லாமே சுத்தப் பட்டு.

கோஆப் டெக்ஸ் கடையில இல்ல வாங்குனோம். நல்ல ஜரிகையா ரொம்ப காலம் கறுக்காம இருக்கணுமில்ல, வச்சுவச்சுக் கட்டுற சேலையில்ல?" பெருமையாகச் சொல்லிக்கொண்ட றைமாவின் அடிமனதினுள், "ரொம்பக்காலம், வச்சுவச்சுக் கட்டுற" என்கிற வார்த்தைகள் ஏனோ அழுத்தம்பெற்று வேதனையூட்டியது. "இந்த வெங்காயச் சருகு கலர் வஹிதா நெறத்துக்கு ரொம்ப எடுப்பா இருக்கும்" என்ற மும்தாஜ், "துணியும் ரொம்ப மெதுவானதா இருக்கு இல்ல" என்றாள். "ஆமாமா" என்று தலையை ஆட்டி ஆமோதித்தாள் நபிஸா. "ஏங்க்கா, மொத்தம் எத்தினி ஆயிரம் வந்துச்சு சேலையெல்லாத்துக்கும்" என்று கேட்ட பாத்திமாவிடம், "அது வந்துருச்சு நெறைய! ஜாக்கெட்டு பாவாடை எல்லாம் நல்ல செலவு" என்றாள் றைமா.

"ஏன்தான் இப்பிடி ஒரே சேலையில பணத்தப் போடுறிங்க. இம்புட்டு ஜரிகைய உம்மக சத்துப்புடிப்புக்குத் தூக்க முடியுமா? கொஞ்சம் கொறைச்ச வெலைகள்ல ரெண்டு மூணு எடுத்துக்காம" என்று அக்கறையோடு அங்கலாய்த்துக் கொண்டாள் சைனு.

இதைக் கேட்டதும் முகம் ஆத்திரத்தில் சிவக்க மும்தாஜ் சொஹ்ராவின் காதோரம் கிசுகிசுத்தாள். "ஆமா, இந்த ஈன சொல்றதக் கேட்டுட்டாலும்! எனக்கு எங்கம்மா வீட்ல வச்சுக் குடுத்த பணத்தைப் பள்ளிவாசலுக்கு குடுத்ததுபோக மீதியை அப்புடியே அமுக்கிட்டு பாடாவதி சேலையில்ல எடுத்தா இந்தப் பொம்பள." சொஹ்ரா அவளைச் சும்மாயிரு என்பது மாதிரி கண்ஜாடை காட்டினாள். ரொம்பத் துணிச்சல் இவளுக்கு. பக்கத்தில் ஆள் இருக்கும் பொழுதே அவர்களைப்பற்றி எதையாவது பேசி விடுவாள் என்று மனதில் நினைத்துக் கொண்டவள், "ஊர் ஒலகத்துல முன்னாடிவிட்டு பின்னாடி பேசுறது வழக்கம். அதுலயும் நீ இருக்கியே, கண்ணுலயே

ஆயிரம் கதை பேசுவே" என்று மெதுவாகச் சொல்லிவிட்டுச் சிரித்தாள்.

சவுரா சேலைகளைப் புரட்டிப் பார்த்து விட்டு, "எல்லாம் நல்லாருக்கு. மகராசியா இருப்பா உம்மக, பதினாறும் பெத்து பெரு வாழ்வு வாழணும்!" தூரத்திலிருந்தவாறே இரண்டு கைகளையும் உயர்த்தி வஹிதாவை வாழ்த்தினாள்.

மகளை வாழ்த்திய அவளது வார்த்தைகளின் அழுத்தத்தில் நெகிழ்ந்த றைமா தன்னையுமறியாமல் கலங்கிய கண்களை யாரும் பார்க்காதபடிக்கு விரல்களினால் தொட்டுத் தடவியபடி, "பக்கத்துல போயி நின்னு தொட்டு வாழ்த்தி விடுங்கக்கா" என்றாள். "எந்திரிக்க முடியலையே பாழாப்போன மூட்டுவலி. போறப்போ தொட்டு வாழ்த்துறேன் புள்ளைய" என்று சொல்லிவிட்டு டீயை உறிஞ்சிக் குடிக்கத் தொடங்கினாள் சவுரா.

"சுலைமான் என்னா, காலையிலயா வாறாப்புல?" சைனுவிடம் ஆர்வமாகக் கேட்டாள் றைமா. அவளுக்கு மும்தாஜிடம் கேக்க பயம். "நான் பெத்தவ பக்கத்துல இருக்கிறப்போ எப்பிடி அவகிட்டே கேப்பே" என்று பேயைப்போலப் பிடித்து உலுப்பிவிடுவாள் சைனு என்பது றைமாவுக்குத் தெரியும். அதனால்தான் அவளிடமே கேட்டாள். மும்தாஜ் தனக்குள்ளாகச் சிரித்தபடி முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள். "ஆமா, பஸருக்கு இங்கெ வந்து இறங்கிடுவான்" என்றவள், "ஒனக்குச் சேதி தெரியுமா றைமா, அவனோட கடை கூட்டாளி அப்துல்லா இருக்காரே தெரியுமா சிங்கப்பூர்ல?" என்று கேட்டாள். "ஆமாம் தெரியும், மூணு கல்யாணம் பண்ணுனாரே அந்தக் கிழவன்தானே?" என்றாள் றைமா. அவளுக்குத் திகீரென்றது என்னமும் ஆகிவிட்டதோ என்று!

"ஏன்? அவருக்கெதுவும் ஆகிருச்சா?" என்றாள் பதற்றத்துடன். "நீ வேற, அந்தாளுக்கென்னா தங்கபஸ்பம் தின்னு கல்லுப்போல

இருக்கான். அந்தாளு நாலாவதா இப்ப ஒரு கலியாணம் பண்ண வாறானாம். எப்புடிச் சேதி" என்று சொல்லிவிட்டு இரு கை கொட்டிச் சிரித்தாள். "நிசமாவா? அடப்பாவி மனுஷா" என்று அங்கிருந்தவர்கள் அனைவருமே மோவாயில் கை வைத்தார்கள். ஆச்சரியம் தாங்க முடியாமல் "நெசமாவா?" சொஹ்ராவுக்கு நம்பவே முடியவில்லை. "போங்கக்கா, நீங்க சும்மா சொல்றிங்க" என்றாள். "அடி நெசந்தேங்கிறீன்ல. இந்தா கேளுவே அவள" என்று தன் மருமகளை நோக்கிக் கையைக் காட்டினாள்.

"ஆமா சொஹ்ராக்கா, இவுங்க எழுதியிருந்தாங்க" என்ற மும்தாஜிடம் நபிஸா, "அது எப்பிடி, அந்தாளு வயசுக்கு எந்திரிக்கிதா? ஆச்சரியமாவுல்ல இருக்கு," தான் வியப்பின் எல்லைக்கே சென்றுவிட்டதுபோல முகத்தை வைத்துக் கொண்டாள். "இல்லா மயா கல்யாணம் கட்டுறாரு? நீ வேற ரொம்பவுந்தேன் அதிசயப்படாத" என்றாள் மும்தாஜ். வஹிதா கூச்சத்தால் நெளிந்தாள். றைமாவுக்கு அவளது அவஸ்தை புரிந்தது. "நீ போயி உள்ள இரும்மா. ரொம்பநேரம் உக்காந்திருந்தா இடுப்புக்கடுக்கும்" என்று சொல்லி அவளை அங்கிருந்து போகச்சொன்னாள். "இங்க பாருவே றைமாக்காவ, மக வெக்கப்படுதாம் போகச் சொல்லுறத, இன்னும் நாலைஞ்சு நாளுதான இருக்கு எல்லாந்தெரியிறதுக்கு. இப்பவே தெரிஞ்சுக்கிடட்டுமே, தெரிஞ்சுக்கிட்டாக்க என்னா கொறைஞ்சா போயிரும்" என்ற மும்தாஜ், அவளை "நீ இரிம்மா" என்றாள்.

வஹிதா, அம்மா எப்பொழுது சொல்வாள் எனத் தவித்திருந்தது போல ஒரே ஓட்டமாக ஓடினாள். "அடியே, விழுந்துராதடி! கல்யாணப் பொண்ணு கை கால்ல அடிபட்டுரப் போவுது" என்று கத்தினாள் நபிஸா.

வெளியில் பந்தல் போட்டுக் கொண்டிருந்த ஆட்களில் ஒருவன்

வந்து, “அம்மா குடிக்கக் கொஞ்சம் தண்ணி” என்று வெளியிலிருந்தவாறே பவ்யமாகக் கேட்டான். அப்பொழுதுதான் ராபியா அங்கிருப்பதைக் கவனித்த சொஹ்ரா பதற்றத்துடன், “நீ இங்கியா இருக்க வாய்பாத்துக்கிட்டு? நல்லாவந்தபோ எழுந்திரு, வாய்பாக்காத போ, போயி சொம்புல தண்ணி எடுத்துக்குடு” என்று அவளை அங்கிருந்து விரட்டினாள். ராபியாவுக்கு அங்கிருந்து போகவே விருப்பமில்லை. மனதில்லாமலேயே எழுந்து போனாள்.

“ஒம்மக ரொம்பக் கருத்து! காரியத்துல கெட்டிக்காரி, கவனிக்கிறத பாத்தியா?” என்று அவளை நக்கலான தொனியுடன் பாராட்டினாள் சைனு. பாதியில் உடைந்துவிடக்கூடாதென்கிற ஆதங்கத்தில் அவசரமாகப் பேச்சை மறுபடி விட்ட இடத்திற்கே திருப்பினாள் நபிஸா. “போன தடவை அந்த ஆளு இங்கே வந்தப்ப ஒரு கல்யாணம் பண்ணி இங்கெ கூட உங்க வீட்டுக்குப் பொண்ணக் கூட்டி வந்தாரே? ஒரு ரெண்டு வருஷம் இருக்குமில்ல அது நடந்து! அதுக்குள்ள வேற பொண்ணக் கட்டப் போறாரா?” ஆச்சரியத்தை வேண்டுமென்றே கூட்டிக் காட்டின அவளது நீள விழிகள்.

மும்தாஜ், “ஆமாங்கறேன். மூணு கட்டுனதுல ஒண்ணுகூட சாகலை. இங்கெதான் டவுன்ல இருக்காளுக. தனித்தனி வீடு கட்டி ஒவ்வொருத்தியையும் குடித்தனம் வச்சிருக்காரு. நல்ல காசு பணம் இருக்குது, வாழ்க்கைய அனுபவிக்கிறான். இது எத்தினி நாளைக்கோ. அம்புட்டும் சின்ன வயசுப்பொண்ணுக. ஏழை வீட்டுல குமருக்கா பஞ்சம்? ஆனா ஒண்ணு, பொண்ணு பாக்க சிவப்பா லட்சணமா இருக்கணும், போட்டோ பாத்துதான ஐயா சம்மதிப்பாராம்” என்றாள். அடங்காத ஆத்திரத்துடனும் அடக்க முடியாத வெறுப்பின் சீற்றத்தோடும் வந்து விழுந்தன வார்த்தைகள்.

“அதுதான கேக்கிறேன், சின்ன வயசுப் பிள்ளைககிட்ட படுக்க

*அந்தாளுக்குத் தெம்பு இருக்கான்னு?" என்று சற்று அழுத்தமாகவே கேட்ட நபிஸா, "பாவம் அந்தப் பொண்ணுக! கிழவனக் கட்டிக்கிட்டு எம்புட்டுக் கஷ்டப்படுறாளுகளோ," அப்பெண்களுக்காக கவலைப்படும் வகையில் முகத்தை வைத்துக் கொண்டு சிரித்தாள்.*

*"நீங்க ரொம்பக் கவலைப்படாதீங்க நபிஸாக்கா. அவரு பாதாமும் பிஸ்தாவும் தின்னு உடம்ப கவனிச்சுக்கிடுவாரு" என்று பாத்திமா கிண்டல் செய்தாள் அவளை. "இது என்னடி வம்பாருக்கு உண்மையத்தான சொல்றேன். உள்ளதுதானே, ரிடையர் ஆகிற வயசுல கல்யாணம் பண்ணுனா அந்தப் பொண்ணுக பாவம் இல்லையா?" என்றாள் நபிஸா.*

*றைமாவும் ஆமோதித்தாள். "இவனுக இப்பிடிப் பண்ணி வச்சிட்டுப் போயிர்றது, அதுக கடைசியில வழி தவறாப்போயி தப்புத் தண்டா பண்ணிர்றது."*

*"அதுதான . . . அங்கெ . . . முடியாது" என்று நீட்டி முழக்கிய சைனு, "அவரு ஊர்ல இல்லாதப்போ அவ வீட்டு வாசப்படிய தாண்டக்கூடாது. வாட்ச் மேன் போட்டுருவாராமுல்ல. எதாச்சும் ஆச்சு, துப்பாக்கியால சுட்டுப்புடுவாராம். வேலையாளுக எல்லாமே பொம்பளைகதானாம். ஜெயில் கைதியாட்டம் உள்ளயேதான் இருக்கணுமாம்" என்று சொல்லிவிட்டு நக்கலாகச் சிரித்தாள்.*

*"ஆமா! இப்பிடியே பண்ணிக்கிட்டுப் போனா, இதுக்கு ஒரு முடிவு?" குழப்பத்துடன் கேட்ட றைமாவுக்கு சொஹ்ரா பதில் சொன்னாள். "ரஸுலுல்லாதான் பதினொண்ணு செய்திருக்காகளே, அது மாதிரி நாமளும் செய்யலாமுன்னு அந்தக் கிழவன் நினைக்கிறானோ என்னமோ?"*

*"அவுக செய்த காலம் என்னா? சூழ்நிலை அப்பிடி இருந்துச்சு! இந்தாளுக்கு என்னா கேடாம் சண்டாளப்பாவி" என்று சலிப்புடன்*

முனகினாள் றைமா.

“அடி கல்யாணம் பண்ணுறதுதான் பண்ணுறாரு, உடனே அந்தப் பொண்டாட்டிய ஒவ்வொருத்தர் கிட்டயா கூட்டிட்டு வந்துல்ல வெக்கமில்லாம காட்டுறாரு. பாரு, இந்த ஸபர் வர்றப்போ கல்யாணம் முடிச்ச கையோட எங்க வீட்டுக்கும் சவுரக்கா வீட்டுக்கும் விருந்துக்குக் கூட்டிட்டு வருவாரு, பெருமையா ஏதோ சாதிச்சது மாதிரி” என்று சொல்லிச் சிரித்த மும்தாஜின் குரலில் ‘விருந்து ஆக்கித் தொலைக்கணும்’ என்கிற கவலை தெரிந்தது.

ராபியா வெளித்திண்ணையில் இருந்தபடியே காதுகொடுத்துக் கேட்டுக் கொண்டிருந்தாள். உள்ளே வந்தால் அம்மா திட்டுவாள் என்கிற பயம் துடிக்கும் கால்களைக் கட்டிப்போட்டிருக்க, உள்ளே வராமல் அங்கிருந்தபடியே ஆர்வமாகக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

நூரம்மா தெருவிலிருந்து வந்து தட்டுத்தடுமாறியபடி வாசல் கதவருகில் நின்றாள். திண்ணையில் இருந்த ராபியாவிடம், “என்னடி பொம்பளை, இங்கென தனியா என்னா செய்யிற?” என்று கேட்டபடி தயக்கத்துடன் வீட்டிற்குள் நுழைந்தாள். உள்ளிருந்தபடியே நூரம்மா வருவதைப் பார்த்த றைமாவுக்குப் பரிதாபமாக இருந்தது. ரொம்பவே தளர்ந்துபோய் இருந்தாள். சற்று குள்ளமான வெடவெடத்த உடம்பு, வெளுத்த முடி, அழுக்கடைந்த வாயல் சேலை. நடந்து வரும்பொழுது கைவிரல்களை நெட்டி முறிப்பது போல பாவனை செய்தபடி கடுகடுத்த முகத்தோடு வந்து கொண்டிருந்தாள். அவள் அருகில் வந்ததும், “வாங்க நூரம்மா உக்காருங்க.” குரலில் அதிகப்படியாகவே உற்சாகத்தைக் கூட்டி அவளை வரவேற்று உபசரித்தார்கள் றைமாவும் சொஹ்ராவும்.

“வர்றேம்மா” என்றபடி அவர்களுக்கருகில் வந்தவள், “ஏண்டி யம்மா, எனக்கு ஆசையில்லையா சேலைபாக்க, சீர்வரிசை பாக்க! என்னைய

ஒருத்தரும் கூப்புடல?" ஆதங்கத்துடன் றைமாவைப் பார்த்துக் குறை கூறிவிட்டு, "வெலகுங்கம்மா கொஞ்சம் ஒக்காரத்துக்கு" என்று சொல்லி எல்லோரையும் ஒதுங்கச் செய்துவிட்டு நட்ட நடுவில் தரையில் சப்பணமிட்டு உரிமையோடு உட்கார்ந்தாள்.

"எம்மக இருக்காளே, இக்குமத்தா என்னைய கூப்பிட்டுக்காம வந்துட்டா." பாத்திமாவைப் பார்த்துத் தன் இடுங்கிய கண்களால் கோபத்தைக் காட்டினாள்.

"உனக்குத்தான் கண்ணும் தெரியல, கடவும் தெரியல, வீட்டுல விழுந்து கெடக்கட்டுமுன்னுதான் சொல்லலை. எப்புடியோ மோப்பம் புடிச்சுட்டு வந்து சேந்துட்ட." பதிலுக்குச் சலித்துக்கொண்ட பாத்திமா, "கிழட்டுப் பொம்பள, கிடக்கிறா இல்லெ" என்று முணுமுணுத்துக் கொண்டாள்.

"இருக்கட்டும். வயசான மனுஷி ஆசைப்படுது, பாத்துட்டு வாழ்த்திட்டுப் போகட்டுமே." அவளை அடக்கினாள் றைமா. "எங்கவீட்டு சீதேவி இருக்காளே, அவளுக்கென்னவாம்? நான் எம் மொதலாளி வீட்டுக்கு வருவேன், போவேன், அவளுக்கென்னா?" என்றவள், "எங்கெ, எதெது, என்னா சேலை? காட்டுங்க, பாப்பம்." ஆர்வமாகக் கேட்ட நூரம்மாவிடம் றைமா ரொம்பவும் பரிவோடு ஒவ்வொன்றாக எடுத்துக் காட்டி விளக்கம் சொன்னாள்.

"நாலு ஊமை சேர்ந்தாப்புல இல்லெ இருக்குது, இந்தக் கதை." றைமா நூரம்மாவுக்குப் பொறுமையுடன் விளக்குவதைப் பார்த்துக் கிண்டல் செய்து சவுரா சிரிக்க, 'உஷ் . . .! சும்மாயிருங்க' என்பது போல முகத்தைக் காட்டினாள் றைமா.

"இதப்பாருங்க, இது கூரைச்சேலை, இது தாலிகட்டுற சேலை, இது ஏழாம் நாள் சீருக்கு." மூச்சு விடாமல் ஒப்பித்த றைமாவிடம், "இருக்கட்டும், வெலையெல்லாம் சொல்லலை" ஆவலாகக் கேட்ட

நூரம்மாவிடம், “விலையா? இருங்க பார்த்துச் சொல்றேன்” என்று ரொம்பவும் பொறுப்பாக விலை அட்டையைத் தேடிப்பார்த்து விலை சொன்னாள் றைமா. றைமாவின் விளக்கத்தைப் பொறுமையிழந்து கேட்டுக்கொண்டிருந்த நபிஸாவின் முகத்திலும் மும்தாஜின் முகத்திலும் ரொம்பத் தேவைதான் என்கிற நையாண்டி தெரிய, அதைப் பொருட்படுத்தாதவளாகத் தன் காரியத்தில் கண்ணாக நூரம்மாவிடம் விலைகளைச் சொல்லி முடித்தவளாக, “என்ன நூரம்மா, நல்லாருக்கா?” என்றாள்.

“எந் தங்கமகளுக்கு எதக்கட்டுனாலும் நல்லாத்தானே இருக்கும்” என்றவள், “பிரமாதமா இருக்கு, மவராசியா கட்டிக்கட்டும்.” மனநெகிழ்ச்சியோடு வாழ்த்திவிட்டு, “வெலைதான் ரொம்ப ஒஸ்தி. சரிகைன்னா அப்புடித்தான்” என்றாள்.

“அந்தக்காலத்துல இதே சேலை இதே அளவு சரிகையோட அம்புட்டு சல்லிசாக் கிடைக்கும், இப்ப என்னா வெலையா இருக்கு” என்று அங்கலாய்த்துக் கொண்டாள்.

நடப்பதை வேடிக்கை பார்த்தபடியே டீயை ரசித்துக் குடித்துவிட்டு டம்ளரை எட்டி ஒரு ஓரமாக வைத்த சவுரா, தனக்கருகிலிருந்த சைனுவிடம், “ஏலே அண்ணன் பொண்டாட்டி, இந்த ஸபருக்கு சுலைமான் வந்ததும் பரிதா கல்யாணத்தை முடிச்சிர வேண்டியது தானே? தள்ளித்தள்ளிப் போடாம” என்றாள் அக்கறையாக.

தன் நாத்தனார் திடீரெனத் தன் மகள் மீது காட்டும் அக்கறையின் அர்த்தம் விளங்காத சைனுவுக்கு மனதிற்குள் ஆத்திரம் கனன்றது. சொந்த அண்ணன் மகன் சுலைமானுக்கு ஷெரிபாவைத் தரமாட்டேன்னு தன் அக்கா வீட்டுல சம்பந்தம் பண்ணவதானே? இவளுக்கென்ன பரிதா கல்யாணத்தைப் பத்தி எனக் கறுவிக்கொண்டவள் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், “ஆமா,

இன்ஷா அல்லா! அப்பிடித்தான் நெனைச்சுக்கிட்டு எம்புள்ளை வர்றான்." ஒரே வார்த்தையில் சுருக்கமாகத் தன் நாத்தனாருக்குப் பதில் சொன்னாள் சைனு. மேற்கொண்டு இதுவிஷயமாக அவள் எதையும் கேட்கக்கூடாது என்கிற தொனி குரலில் இருந்ததைப் புரிந்துகொண்ட சவுரா நமக்கென்னத்துக்கு இந்தப் பொல்லாப்பு என்பது போல வாயை மூடிக்கொண்டாள்.

சொஹ்ரா அவர்கள் எல்லோரையும், "வாங்க எல்லாரும், சீரைப் பாக்கலாம்" என்று எழுந்து வரச்சொல்லி அறைக்குள்ளாகக் கூப்பிட்டாள். "இந்தா வாரோம்" என்று சொல்லியபடி முதலில் சவுரா எழுந்தாள். அவளது பெருத்த உடலைத் தூக்கி நடப்பதும் உட்காருவதும் மிகவும் சிரமமான காரியம். அவளுக்கு முன்னால் மற்ற அனைவரும் எழுந்து அறைக்குள் நுழைந்திருந்தார்கள். "இங்க பாரு எங்கம்மாவ, ஆளுக்கு முந்தி உள்ள வந்துருச்சு. ஆவல் இருக்க விட்டாத்தானே." நூரம்மாவைக் கேலிசெய்து சிரித்தாள் பாத்திமா. "நீ சும்மா இருக்கமாட்டே, நான் வந்தா ஒனக்கு ஏன் பொசு பொசுங்குதுன்னு கேக்குறேன். ஒன்னோட இக்குமத்துல மண்ணு விழுக" என்று மகளை விளையாட்டாக அவளும் திட்டினாள்.

அந்தப் பெரிய அறையில் தரையில் பாய் விரித்து சில்வர் பாத்திரங்களை வரிசையாக அடுக்கிப் பரப்பியிருந்தார்கள். சில்வர் குடம் சிறியதிலிருந்து பெரியதுவரை, சருவத்திலும் அதே மாதிரி! பாத்திரங்கள் டிபன் பாக்ஸ் மூன்றடுக்கிலிருந்து ஐந்தடுக்கு வரை என்று எல்லாமே சில்வர் பாத்திரங்களாகத்தான் பளபளத்தன. ஒரு மூலையில் பீரோ ஒன்று, பெரிய சூட்கேஸ் ஒன்று. சிறியதாக இரண்டு சூட்கேஸ்கள், ஒரு அண்டாவின் மீது வைக்கப்பட்டிருந்த குர்ஆன், அரிக்கேன் விளக்கு என்று அறை முழுவதும் ஏகப்பட்ட பாத்திரங்கள் இருந்தன. இவற்றைக் கவனித்துப் பார்த்துக் கொண்டிருந்த சவுரா

கேட்டாள், “ஆமா, மண்பீங்கானெல்லாம் எங்கே காணோம்.”

“அதெல்லாம் ஒரு அட்டைப் பொட்டியில போட்டு அதோ அந்த மூலையில இருக்குது பாருங்க. உடைஞ்சு போயுறக் கூடாதுல்ல?” என்றாள் சொஹ்ரா.

அவள் கை நீட்டிய இடத்தில் குக்கர் அட்டைப் பெட்டிகளுக்கருகில் அந்த அட்டைப்பெட்டி இருந்தது. “என்னஙகக்கா எல்லாம் போதுமா, இன்னும் எதுவும் வாங்கணுமா? என்னமும் கொறை இருந்தா சொல்லுங்க. கட்டில் மெத்தையெல்லாம் நேராவே மாப்பிள்ளை வீட்டுல இறக்க சொல்லியாச்சு” என்று ஒரு பேச்சுக்காக கேட்டாள் றைமா.

சைனு, “நீ வச்சுருக்கிறது ஒரு பொண்ணு. அதுக்குக் குடுக்காம யாருக்குக் குடுக்கப் போற? உன் நாத்தனா சபியாவுக்கு யோகம். பொண்ணழகும் பொருளழகும் கூடிப்போய்ச் சேருது. அவ எப்பிடியாப்பட்ட காரியக்காரின்னு எனக்குல்ல தெரியும். தம்பி வீட்டுல கட்டணும்னு கட்டியே புட்டாளே, அவளுக்கு குடுப்பினை இருந்துச்சு, இம்புட்டு சீர்வரிசையோட மருமக வரணும்னு” என்று பெருமூச்சு விட்டாள். அவளது பேச்சில் மும்தாஜை மட்டம் தட்டும் நோக்கமிருந்ததை அனைவராலும் புரிந்துகொள்ள முடிந்தது.

மும்தாஜ் பல்லைக் கடித்துக் கொண்டாள். “பெட்டமுண்டை, இவகெட்ட கேட்டுக்குப் பொண்ணு கெடைச்சதே பெரிசு. இதுல சாடையா வேற இல்ல பேசுறா” என்று நபிஸாவின் காதில் முணுமுணுத்தாள். சைனுவின் பேச்சைத் திசை திருப்புவதற்காக றைமா முந்திக்கொண்டு அவளிடம், “நீங்க இன்னும் உடுத்துமாத்து சேலையெல்லாம் பாக்கலை இல்ல. பீரோவுல இருக்குது” என்றபடி இடுப்பிலிருந்த சாவியை எடுத்து பீரோவைத் திறந்தாள். பீரோவில் இரண்டு அடுக்குகள் நிறைய சேலைகள். எல்லாமே வெளிநாட்டுச்

சேலைகள். "மொத்தம் நூறு இருக்குது. அத்தினையுமே ரூபிகுயின், நம்ம நாட்டு சேலை ஒண்ணு கூட இல்லை" என்றாள் சொஹ்ரா பெருமையாக. மேலாக இருந்த ஒன்றிரண்டு சேலைகளை மட்டும் கைகளில் எடுத்துப் பார்த்தார்கள் நபிஸாவும் மும்தாஜும்.

"இதெல்லாம் எங்கேக்கா எடுத்தீங்க?" என்று கேட்ட மும்தாஜிடம், "ஒனக்கு மாப்பிள்ளை சிங்கப்பூர் சீமான் கொண்டு வருவாரு. அவுக எங்கெ எடுப்பாக? பர்மா பஜார்லதான்" என்ற நபிஸா, தான் சொன்னது சரிதானே என்ற ரீதியில் றைமாவின் முகத்தைப் பார்த்தாள்.

அவளும் ஆமாம் என்கிற மாதிரி தலையாட்டினாள். "வெலை தான் அதிகம். அப்புறம் என்ன பண்றது, நம்ம நாட்டுச் சேலையைச் சீர்ல வச்சாதான் சனம் இளக்காரமாப் பேசுதே?"

"நீ இம்பூட்டுத்தே செய்யி, ஒஞ்சம்பந்தி மனசு குளுரப்போவுதா? குளுரவே குளுராது" என்று ஒரு பாட்டைப் போல நீட்டி முழக்கிப் பாடி நடித்துக் கைகளை ஆட்டி சேஷ்டை செய்தாள் நூரம்மா.

அவள் ஆடிக்காட்டியது எல்லோருக்குமே சிரிப்பை வரவழைத்தது. அவளைப்போலப் பிறரைக் கிண்டல் செய்ய, அங்கசேஷ்டைகள் செய்ய யாராலும் முடியாது. எப்போதுமே அவளைச் சுற்றி நான்கு பெண்கள் இருந்து ரசித்துக் கொண்டிருப்பார்கள். அதனால் பிரச்னைகள் வருமென்பதால் பாத்திமா அவளைக் கண்டித்துக் கொண்டேயிருப்பாள். ஊர் வம்பை இழுத்துக் கொண்டு வருகிறாளே என்று கவலையும் படுவாள்.

எல்லோரும் சிரித்ததும் குஷியாக, "உன் நாத்தனார் இருக்காளே . . .? அவமாதிரி ஈனப்பொம்பளைய நான் பாத்த எடத்திலயும் பாக்கல, கேட்ட இடத்துலயும் கேக்கல" என்று ஒரு எம். ஜி. ஆர். பாடலை நினைவூட்டும் மெட்டில் ராகம் இழுத்தவள், "கையில காசு வாயில

தோசைம்பாங்களே, அப்பேர்ப்பட்டவ! என்னா நான் சொல்லுறது, கரிக்ட்டா?” என்று சவுராவையும் சைனுவையும் பார்த்துக் கேட்டாள். “ஆமாம் அப்புறம்” என்று ஆமோதித்தார்கள் இருவரும்.

சபியாவைப் பற்றி யாருக்குமே நல்ல அபிப்ராயம் இல்லை என்பது றைமாவுக்கு ஏற்கனவே தெரியும் என்றாலும் இப்பொழுது ஏனோ வருத்தமாகவே இருந்தது. தன் மகளை அவள் எப்படி நடத்துவாளோ என்று பயமாகவும் இருந்தது. இவ்வளவு செல வழித்து, கஷ்டப்பட்டு நடத்தும் கல்யாணத்தில் சந்தோஷம் ரொம்பவும் நிதானமாக இருப்பதுபோல் தோன்றிற்று. தன் முகத்தில் தெரியும் துளிக்கவலைகூட தன் மகளைச் சஞ்சலமடையச் செய்து விடும் என்பதால், அவள் சாதாரணமாக இருப்பதுபோல முகத்தை வைத்துக்கொண்டாள். அதற்காக அவள் மிகவும் சிரமப்படவும் வேண்டியிருந்தது.

மறுபடி அனைவரும் வெளியில் வந்து ஹாலில் உட்கார்ந்தார்கள். வஹிதா மறுபடியும் ஹாலுக்கு வந்து அவர்களோடு சேர்ந்து அமர்ந்தாள். சவுரா மட்டும் தரையில் உட்காராமல் சோபாவில் உட்கார்ந்து கொண்டாள். “என்னால இனி கீழ ஒக்காந்துட்டு எழுந்திரிக்க முடியாதும்மா” என்று சொல்லிக் கொண்டாள். அவள் உட்காரும் பொழுது சோபாவில் கேட்ட கிறீச் ஒலிக்கு மும்தாஜும் நபிஸாவும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கேலியாகப் புன்முறுவல் செய்து கொண்டார்கள். பாத்திமா எழுந்து, “நான் வர்றேன், ராத்திரிக்குச் சோறாக்கணும்” என்றபடி வீட்டுக்குக் கிளம்பிப்போனாள். அவள் எப்போது போவாள் என்று காத்திருந்ததுபோல நபிஸா ஆரம்பித்தாள். “ஏன் நூரம்மா, உங்க கல்யாணம் நடந்தது, பர்ஸ்ட் நைட்ல நடந்தது பத்திக் கொஞ்சம் சொல்லுங்களேன் கேப்போம்.”

அவள் கேட்டதுதான் தாமதம் நூரம்மாவுக்குக் குரலில் உற்சாகம்

கரை புரண்டோடிற்று. “வாடி எம்மவராசி, எங்கதைதானே சொல்லணும்? சொல்லுறேன் கேட்டுக்க” என்றவள் சுவாரஸ்யமாகக் கால் நீட்டிக் கொண்டாள். “ஏலே சவுரா, அந்த வெத்திலைத் தட்டைக் கொஞ்சம் நவுத்து இப்பிடி” என்று தட்டை வாங்கி வெற்றிலையைக் காம்பு கிள்ளிப் பாக்கோடு வாயில் திணித்துக் கொண்டாள். சுண்ணாம்பை ஒரு துளி விரலில் கிள்ளி எடுத்து வாய்க்குள் வைத்த மறுநொடியே வாய் நல்ல ரத்தச்சிவப்பாக மாறியது.

“இதப்பாருங்கடி எம்பொண்டுகளா” குடுக்கையைப் போலிருந்த பொக்கை வாயைத் திறந்து நாக்கை நீட்டிக் காட்டினாள். “இப்பவே இம்புட்டுச் செவப்பு செவக்குதே வயசுல எப்பிடிச் செவந்திருக்கும். எம்மச்சான் அதைப் பாத்துட்டு அம்புட்டுப் பூரிப்பாகளே, என் ஆசை மச்சான். என்னயை விட்டுட்டுப் போயிட்டீகளே” நீளவாக்கில் ஒரு இழுஇழுத்து அழுதவள், தானிருப்பது கல்யாணவீடு என்பது திடீரென நினைவுக்குவர அழுவதை நிறுத்திவிட்டுச் சிரித்துக் கொண்டாள்.

“ஏங்கடி பொண்டுகளா, வயசுல நான் எப்பிடி அழகாயிருப்பேன்னு ஒங்களுக்குத் தெரியுமா? அம்புட்டு அழகா இருப்பேன். பதினாலாம் பக்கத்து நெலவுன்னு சொல்லுவாகளே, அதுமாதிரி பிரகாசமா இல்ல இருப்பேன். இப்ப இருக்கறதப் பாத்து நான் பொய் சொல்றதா நினைக்காதீங்க. என் வயசுப் பொண்டுக இந்தா இருக்காளுக அவளுகளுக்குத் தெரியும் என் வனப்பும் சிவப்பும்.” தன் குச்சிக்கையை நீட்டி சவுராவையும் சைனுவையும் சுட்டிக் காட்டினாள். அவர்களும் சிரிப்பை அடக்க முடியாமல் அடக்கிய படி, “ஆமா, அப்புறம்?” என்று எடுப்பெடுத்து விட்டார்கள்.

“எம் புருஷன் யாருங்கற? வெறும் பயல்னு நெனைச்சிராதீங்க. சிங்கப்பூர் சீமான் அவரு. சிங்கப்பூருல யாவாரம் பண்ணிக்கிட்டு ஓகோன்னு இருக்கையில பாழாப்போன சண்டை நடந்துச்சுல்ல?

ஒலகச் சண்டை! அதுல உசுருக்குப் பயந்து எல்லாத்தையும் விட்டுட்டுத் துண்டை ஒதறித் தோள்ல போட்டுக்கிட்டு வந்தவருதான், பெறகு போகவேயில்லை. அப்புறம் பொழைக்கறதுக்கு வழி தெரியாம அலையா அலஞ்சு தவியா தவிச்சு, எங்க அத்தாகிட்ட வந்து சேந்தாக" என்றவள் வாயில் சேர்ந்துவிட்ட எச்சிலைத் துப்ப இடம் தேடிச் சுற்றிலும் பார்த்தாள். "ஐயையோ! இங்கெ துப்பிராதீக." பதறித்துடித்த சொஹ்ரா ஓடிப்போய் கல் திண்ணைக்குக் கீழிருந்த பணிக்கத்தை எடுத்து வந்து அவளருகில் வைத்து, "இந்தா, இதுல துப்புங்க" என்று சொல்லி விட்டு உட்கார்ந்து கொண்டாள். உதடுகளைக் குவித்து எச்சிலைக்கூட்டி புளிச்சௌனத் துப்பிவிட்டு, "எதோடவிட்டேன்?" என்று விட்ட இடம் தேடினாள் நூரம்மா.

சொஹ்ராவின் முகம் அருவெறுப்புக்கொண்டிருந்தது. நூரம்மா எச்சில் பண்ணிய பணிக்கத்தை எப்படிக் கழுவுவது என்று இப் போதே கவலைப்பட ஆரம்பித்து விட்டாள் என்பதை அவளது முகம் துல்லியமாகக் காட்டியது. பணிக்கம் வீட்டில் எப்போதுமே யாருக்கும் தேவைப்படாது. என்றைக்காவது மீன் ஆக்கினாலோ பிரியாணி ஆக்கினாலோ, கரீம் வெற்றிலை போடுவான். அன்றைக்கு மட்டும் உபயோகித்து விட்டுக் கழுவி வைத்து விடுவார்கள். நூரம்மா எச்சிலைத் துப்பியதைப் பார்த்தால்கூட அவன் அதைத் தூக்கி எறிந்துவிடச் சொல்வான். பாத்திமாவைத்தான் கழுவச் சொல்ல வேண்டும் என்று நினைத்துத் தன்னைத்தானே சமாதானம் செய்து கொண்டாள் சொஹ்ரா.

"அதுதான் உங்க வாப்பாகிட்ட வந்தாகன்னு சொன்னீங்க இல்ல" என்று விட்ட இடத்தைப் பொறுப்பாக பிடித்துக்கொடுத்தாள். "ஆமாமா" என்று தலையாட்டிக் கொண்ட நூரம்மா, "அப்புறம்" என்று ஆரம்பிக்கும்போது பள்ளிவாசலிலிருந்து மோதினார், "அல்லாஹு

அக்பர் . . .” என்று பாங்கு சொல்லும் சத்தம்கேட்க, “உஷ்! பாங்கு சொல்றாங்க. யாரும் பேசாதிங்க, அமைதியா இருங்க” என்று எல்லோரையும் பார்த்துச் சொல்லிய சொஹ்ரா தனது தோள்களில் கிடந்த சேலை முந்தானையை அவசரமாக எடுத்துத் தலையில் போட்டுக்கொண்டாள். அவளைத் தொடர்ந்து அனை வருமே தத்தமது முக்காட்டை இழுத்துவிட்டுக்கொண்டார்கள். வெற்றிலையை மென்றுகொண்டிருந்த நூரம்மாவின் வாய் சொஹ்ராவிற்குப் பயந்து தனது அசைவை நிறுத்தியதைக் கவனித்த நபிஸாவுக்குச் சிரிப்பு வர, கஷ்டப்பட்டு அடக்கினாள்.

பாங்கு சொல்லி முடிக்கும்வரை காத்திருந்து முடிந்தபிறகு அவரவரும் தமது இரு கைகளையும் ஏந்தி வாய்க்குள்ளாகவே பாங்கு துஆவை ஓதிமுடிக்கும்வரை அமைதியாக இருந்த நூரம்மா, தான் கதையை மறுபடி ஆரம்பிக்கும் முன்பாக இவர்கள் தொழுகவெனக் கலைந்து சென்றுவிடுவார்களோ என்கிற கவலையில் அவசரமாக, “அப்புறம் என்னாச்சுன்னா, அத்தா கசாப்புக் கடை வைச்சிருந்தாகளா? இவுக வந்து சேர்ந்தாக எடுபிடி வேலைக்கி. ஒருநாள் என்னாச்சு, வீட்டுல கத்திய வச்சிட்டுப் போயிருப்பாக போல. கிடா அறுக்கக் கத்தியத் தேடுனா கெடைக்கல. எப்பிடிக் கெடைக்கும். அது வீட்டுலயில்ல இருக்குது. ‘ஓடுறா இவனெ, வீட்டுல போயி வாங்கிட்டு வா, சீக்கிர’முன்னு இவுகள வெரட்ட அவுகளும் ஒரே ஓட்டமா ஓடி வீட்டுக்கு வந்துதான மூச்சுவிட்டாக.” நபிஸா வேண்டுமென்றே இடைமறித்தாள். “ஆமா, அவரு பேரு சொல்லலை நீங்க, சொல்லுங்க.” “அத நான் எப்பிடிடி என் வாயால சொல்ல முடியும்?” என்றவள் ஒரு நிமிஷம் யோசித்துவிட்டு, “ரெண்டு அம்பதும் ரஸூலுல்லாவோட இன்னொருபேரும் சேர்ந்தது” என்றாள். நபிஸா புரியாதவள் மாதிரி, “அப்புடின்னா?” என்றாள்.

“அதுதாண்டியம்மா ரெண்டு அம்பது எம்புட்டு? அதுதான் அவுக பேரு” என்றாள். “ஓ! நூறா? நூர்முகமது . . . சரிசரி!” என்று நக்கலாக நபிஸா தலையாட்டிக் கொண்டாள்.

“அப்புடிப் புடிச்சிக்கோ! என்னாது? ஆ . . .! ஓடி வந்தாகளா, அக்கா அக்கான்னு வெளிய நின்னு கூப்பிட்டாக. அப்ப நான் வயசுக்கு வந்து வீட்டுக்குள்ள இருந்தேனா. நான் கதவுப் பின்னெ நின்னு ‘என்னா வேணும்’ னு குரல் கொடுத்தேன். ‘கத்தி கேக்கிறாக அத்தா. சீக்கிரம் வேணும். ஆடறுக்க அஸரத்துங்க வந்து காத்து நிக்கிறாக’ ன்னு சொல்லிக் கேட்டாக. நான் ஓடிப்போயி கூரையில சொருகியிருந்த கத்திய எடுத்து வந்து எப்புடி குடுக்கறதுன்னு கதவுப்பின்னால நின்னேனா? அவுக அவசரப்படுத்துறாக, ‘கத்தி எங்கே, கத்தி எங்கே’ ன்னு.

“சரி, நாமளே குடுப்போமுன்னு கதவ லேசா நீக்கிக்கிட்டு ரெண்டு விரல்ல மட்டும் கத்தியை புடிச்சு வெளில நீட்டினேன். அவுகளும் வாங்கிட்டுப் போயிட்டாக. அன்னைக்கி இந்த ரெண்டு வெரல பாத்ததுமே மனசுல நிய்யத்துவச்சாகளாம், இந்த வெரலுக்குச் சொந்தக்காரிதான் எம்பொண்டாட்டின்னு! இந்த விரலே இம்புட்டு அழகா சுருவமா இருந்தா அவமொகம் எம்புட்டு அழகா சுருவமா பதினாலாம் பக்கத்து நெலவாட்டம் இருக்குமுன்னு” என்று சொல்லி நிறுத்தினாள். அவள் முகம் பழைய கால நினைவுகளாலும் பெருமிதத்தாலும் நிறைந்திருந்தது.

“சரி, அதை விடுங்க. உங்க பஸ்ட் நைட்டப் பத்திச் சொல்லுங்க” என்றாள் மும்தாஜ். அவளுக்கு ஆர்வம் தாங்க முடியாமலிருந்தது. மஃரிபு நேரம் கடந்துகொண்டிருந்தது. முற்றத்தில் இருள் விழத்துவங்கியிருந்தது. தொழுக வேண்டும். இந்தப் பொம்பளை இப்படி நீட்டி முழக்கிக் கொண்டிருக்கிறாளே என்று நினைத்தாலும்

பாதியில் எழுந்து போகவும் மனதில்லாமல் இருந்தது. ஒரு கண்ணால் முற்றத்து இருளையும், மறு கண்ணால் நூரம்மாவையும் மாறி மாறிப் பார்த்தபடி பதற்றத்தோடு அமர்ந்துகொண்டிருந்தாள் மும்தாஜ்.

“உனக்கென்னாடி அம்புட்டு அவசரம்?” என்று அவளைச் செல்லமாக அதட்டினாள் நூரம்மா. அவளுக்குத் தன் இளமைக்கால ஞாபகங்களை அனுபவித்துச் சொல்லக் கிடைத்திருக்கும் வாய்ப்பை விட்டுவிட மனதில்லை. அதோடு எவள் இந்தக் காலத்தில் கிழவிகளிடம் கதை கேக்கப் போகிறார்கள். என்னமோ நம்மிடம் கேட்கிறார்கள், அந்தச் சந்தர்ப்பத்தை ஏன் விட வேண்டும் என்றிருந்தது.

“என்னடி கேட்ட, பஸ்ட் நிட்டா, கிஸ்ட்டு நட்டா? என்ன கருமாந்திரமோ, அதை விடு! அதைக் காட்டிலும் இன்டுரஸ்ட்டா ஒரு சங்கதி இருக்கு அதச் சொல்றேன் கேளு” என்றவள், வெற்றிலையைச் சுண்ணாம்பு தடவி மடித்து வாயில் போட்டு அதக்கிக் கொண்டாள். தொழுகை நேரம் வீணாகக் கடந்து கொண்டிருக்கிற வருத்தம் பெரிய அவஸ்தையாக அனைவரின் மனதிலும் ஓடிக் கொண்டிருந்தாலும்கூட சுவாரஸ்யமான கதை ஒன்றைக் கேட்கும் ஆர்வத்தில் எல்லோரும் அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவளால் இத்தனை சுவாரஸ்யமாகவும் நகைச்சுவையோடும் பேச முடியும் என்பதே வஹிதாவுக்கு ஆச்சரியமாக இருந்தது.

“ஆங், என்னா சொன்னேன்? ஒண்ணுஞ் சொல்லலையா? அப்பிடித்தான் ஒரு தரம் எனக்கு ஒரு கால் மட்டும் பெசகி நடக்கமுடியாமக் கெடந்தேனா, ஏஞ் சவுரா ஒனக்குக் கூட ஞாபகம் இருக்குமில்ல?” என்று அதற்குச் சாட்சியாக சவுரை துணைக்கு அழைத்து அவளது ஆமோதிப்பைத் தலையாட்டலின் மூலம் பெற்றுக் கொண்ட திருப்தியில், “அப்ப என்னாச்சு தெரியுமா? நான் படுத்த

படுக்கையா நடக்க முடியாமக் கெடந்தேன். படுக்கையில எந்தங்கச்சிதான் என்னைய கூட இருந்து கவனிச்சுக்கிட்டா. அவ பகல்ல இருந்து என்னைய சாப்புட வச்சு, ஒண்ணுக்கு ரெண்டுக்குப்போக வச்சு, தலை சீவிவிட்டு, ஆக்கிப் பொங்கி வச்சு, என் புருஷனக் கவனிச்சு, எல்லாம் முடிச்சு வச்சுட்டு, ராத்திரி நேரத்துலதான் தன் புருஷன் புள்ளைய கவனிக்க அவ வீட்டுக்குப் போவா. அம்புட்டுப்பாடு எம் புள்ளைக்கி" என்று சொல்லிவிட்டு, ஒரு நிமிடம் தன் தங்கையின் தியாகத்தை நினைத்து கண்ணைக் கசக்கி விட்டுக் கொண்டாள். மறுகணமே உற்சாகமாக மாறிற்று அவள் முகம். "எம்புருஷன் அவகிட்ட கேப்பாரு, ஏன் கொலுசனு என்னயை ராத்திரியில கொஞ்சம் கவனிச்சுக்கிட்டா என்னா கொறைஞ்சா போவ, மண்ணுத்திங்கிற ஒடம்ப மனுஷன் திங்கக் கூடாதான்னு? அவரு கேக்கிறாருன்னு அவ கோவிச்சுக்கிற மாட்டா. போங்க மச்சான்னுட்டு போயிருவா. ஓசியில புருஷன் கெடைச்சா ஒனக்குச் செத்த எனக்குச் செத்தன்டு போறவளுக மத்தியில என் தங்கச்சி ஒரு பத்தர மாத்துத் தங்கம். அக்காவுக்குத் துரோகம் பண்ண அவளுக்கு என்னான்னு மனசுவரும், சொல்லுங்க?" என்று சொல்லி நிறுத்திவிட்டு, தன் பேச்சின் சுவாரஸ்யம் அவர்களின் முகங்களில் தெரிகிறதா எனப் பார்த்துத் திருப்திப்பட்டுக் கொண்டாள். செய்திக்கு ஏற்றாற்போல அவளது குரல் கும்மாளமிடுகிறது. நழுவிச் செல்கிறது. நெகிழ்ந்து, கரைந்து உருகுகிறது, உணர்ச்சியின் உச்சங்கொண்டு அவள் பேசுகையில் வாயிலிருந்து தெறித்துக்கொண்டிருந்த எச்சில் தன் மீது படாமல் தவிர்க்கும் பொருட்டு சற்று தள்ளியே உட்கார்ந்து கொண்டிருந்தாள் வஹிதா.

முற்றத்தில் விழுந்து மூடியிருந்த அகன்ற இருள் மஃரிபு தொழுவதற்கான நேரம் முடிந்துவிட்டது என்பதை உணர்த்த இனி

இஷாவோடு களா கட்டித்தான் தொழுக வேண்டும் என்ற எண்ணத்தோடும் நபிஸாவும், மும்தாஜும் இடைமறித்து ஒரு வார்த்தை கேட்கக்கூடாதென்கிற உறுதியோடு மௌனமாக நூரம்மா சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

"அப்புறம் என்னாச்சுன்னா, ஏம் புருஷனையும் சும்மா சொல்லக்கூடாது, தங்கம். சும்மாதான் அவகிட்ட சீண்டுவாரே தவிர, வேற பொம்பளைய ஏறெடுத்துப் பாக்க மாட்டாரு. அவரு ராத்திரியில கஷ்டப்படுறத காண எம் மனசு சகிக்கிமா? ஒரு நாளா, ரெண்டு நாளா மூணுமாசத்துக்குக் கால்ல கட்டுப் போடச் சொல்லி வைத்தியன் சொல்லியிருக்கானே? அம்புட்டு நாளூ எந்த ஆம்பள பொறுப்பான். அவருக்கு எம்மேல ஒரு உசுரு. எங்கம்மாதான் எங்கள கைப்பிள்ளையா இருக்கையில விட்டுட்டுப் போய்ச் சேந்திட்டாளே! பிசாசு கொண்டு போயி தண்ணியில அமுக்கிருச்சே. எனக்கு அவரவிட்டா யாரு இருந்தா?" மறுபடி ஒருகணம் உணர்ச்சிவசப்பட்டு நிறுத்தினாள் நூரம்மா.

"பிசாசா எப்பிடி?" என்று ஆர்வமாகக் கேட்டாள் வஹிதா.

"அந்தக் கதைய ஏங்கேக்குற? எங்கம்மாவும் பக்கத்து வீட்டுப் பொண்டுகளும் மொத நா ராத்திரி அதிகாலையில கொளத்துக்குப் போயி குளிக்கணும்னு பேசி வச்சுக்கிட்டுத் தூங்கப் போயிருக்காக, அத ஒரு பிசாசு ஒளிஞ்சிருந்தே கேட்டுக்கிட்டு இருந்து, காலங் காத்தால, இல்லெ, இல்லெ நடுச்சாமம், வந்து கதவு தட்டி பேரச் சொல்லிக் கூப்பிட்டிருக்கு. கொரலு பக்கத்து வீட்டுப்பொம்பள மாதிரியிருக்கவும் எங்கம்மாவும் சரி, விடிஞ்சிருச்சாக்குமுன்னு அழுக்குத் துணியத் தூக்கித் தலையில வச்சுக்கிட்டு அதுகூடவே போயிருக்கு. போயி கொளத்துல எறங்குனதுமே அது உள்ள அமுக்கிக் கொல்லப்பாத்திருக்கு, அதுக்குள்ள மத்த பொண்டுக ஆளக்

காணோமுன்னு வீட்டுல தேடிட்டு கொளத்துக்கு வந்தா, மயங்கிப் போயி எங்கம்மா மட்டும் கரையில கெடக்கா. ஒருத் தரையும் காணோம். உசுருபோற கட்டத்துல எங்கம்மா, 'பொண்ணுமக தொட்டியில, கட்டி நகை பொட்டியில கிடக்குது, பாத்துக்கங்க' அப்புடின்னு சொல்லிட்டு வபாத்தாயிருக்கு. எங்க ரெண்டு பேரையும் பச்சைப்புள்ளையில விட்டுப்போக என்னான்டு மனசு வந்திருக்கும்? அந்த ரூஹு எப்பிடித் துடிச்சிப் போயிருக்கும்?" என்று விட்டு "உம்" என ஆயாசமாகப் பெருமூச்சு விட்டாள் நூரம்மா.

சுற்றிலும் மழை பெய்து ஓய்ந்ததைப் போன்ற அமைதி அனைவரின் முகங்களிலும் தேங்கியிருக்க, சவுரா மட்டும் ஒரு வகையான ஏளனத்தைத் தன் முகத்தில் காட்டி வேறொரு புறம் திரும்பிக் கொண்டாள். 'ஓங்குடும்ப நெலை என்னான்னு எனக்குல்லடி தெரியும் மொசாரு முண்டைக்கு பவிசைப்பாரு' என்று சொல்லாமல் சொல்வது போலிருந்தது அவள் முகபாவம்.

நூரம்மா எதையாவது பொருட்படுத்தினால்தானே? தன் கதையை இன்னும் சுவாரஸ்யமான ஒன்றாக மாற்றி எல்லோரது கவனத்தையும் பெற வேண்டும் என்கிற ஆர்வம் மட்டுமே அவளிடத்தில் மிகுந்திருந்தது. "அப்புறம், எதோட விட்டேன்? வயசான கோளாறு மறந்து போயிருது ஆங்!" என்று முதலில் சொல்லிக்கொண்டிருந்த விஷயத்துக்கே வந்து சேர்ந்தாள். "அவரும் பாவம் எம்புட்டுதான் ஆசைய கட்டுப்படுத்துவாரு. ஒருநா என்ன பண்ணாரு, ஒருகட்டு பூ வாங்கிட்டு வந்து ஆசையோட என்கிட்ட குடுத்து வச்சுக்கிறச் சொல்லி அவரே தலையில வச்சுவிட்டாரு. என்னையப் பூப்போல தூக்கிப் படுக்கைக்கிக் கொண்டுபோயி அப்புறம் என்னத்தச் சொல்ல, என் ராசா, அம்புட்டு ஆறுதலா கால் வலிக்காம, கொள்ளாம என்னோட சேந்தாரு தெரியுமா?" எனச் சொல்லி நிறுத்தினாள். எப்போதோ

நிகழ்ந்த விஷயத்தை நினைத்தோ அல்லது இவர்கள் எல்லோரிடமும் அதனைப் பகிர்ந்து கொண்டதனாலோ அவள் முகம் வெட்கத்தில் கனிந்திருந்தது. அந்த நாட்களின் ஞாபகம் பரவசத்தில் மூழ்கிப்போய் ஒருகணம் நிறுத்திவிட்டு, "அப்புறம், மறுநாள் காலையில எந்தங்கச்சி வீட்டுக்கு வாறா, என்னையப் பாக்குறா, அதிகாலையில தலைகுளிச்சு விரிச்சுக் கெடக்குற பம்பையப் பாக்குறா, என் மொகத்துல தெரியிற சந்தோஷத்தைப் பாக்கிறா. கொஞ்ச நேரம் தயங்கிட்டு, என்னாக்கா எப்பிடி இதுங்கறா. நான் அவகிட்ட ஒண்ணுஞ்சொல்லல. ஒரே ஒரு பாட்டு மட்டும் படிச்சுக் காட்டுனேன் அம்புட்டுத்தேன். அவ அதுக்குமேல ஒண்ணும் பேசல. அது என்னா பாட்டுங்கற?" என்று மும்தாஜைப் பார்த்துக் கேட்டு விட்டு வெற்றிலையினால் சிவந்திருந்த ஈறுகள் தெரிய வினோதமாக இளித்தாள்.

"அது என்னாதுன்னு எனக்கென்னாத்தத் தெரியும் நீங்க சொல்லாம" ஆர்வம் கொப்பளிக்கிறது மும்தாஜின் முகத்தில்.

"பாகப்பிரிவினையில சரோசா தேவி படிப்பாளே சிவாசியப் பாத்து, 'கால்களில்லாமல் வெண்மதி வானில் தவழ்ந்து வரவில்லையா இரு கைகளில்லாமல் நிலவை அணைத்து காதல் தரவில்லையா.' இந்தப் பாட்டத்தான் படிச்சேன். அவ புரிஞ்சுக்கிட்டுச் சிரிச்சா பாரு, விழுந்து விழுந்து சிரிச்சா! அவ மச்சான் வந்ததும் இந்தப் பாட்டைப் படிச்சு ரொம்பத்தான் கலாட்டா பண்ணிக்கிட்டு கெடந்தா. ரொம்ப நாளைக்கி இப்பிடிக் கலாட்டா நடந்துக்கிட்டு இருந்துச்சு, ஏங்கேக்குற போ" என்று விட்டு எல்லோருடைய சிரிப்பிலும் தானும் உற்சாகமாகக் கலந்து கொண்டாள்.

அவளோடு சேர்ந்து கொண்டு அனைவரும் சிரிக்க சில்லறைக் காசுகளால் நிரப்பப்பட்ட உண்டியலைக் குலுக்குவது போல, சிரிப்பொலிகளால் நிரம்பிய வீடு குலுங்கிற்று. வர்ணம் பூசிய

சுவர்களில் வண்ணத்துப்பூச்சியென மோதித் தெறித்த சிரிப்பொலியுனூடே வீடு தன் கல்யாணக் களையை அடைந்து கொண்டிருந்தது.

மும்தாஜை இந்தக் கிழவியினால் இத்தனை உற்சாகமாகவும், நகைச்சுவையோடும் பேசமுடியும் என்கிற விஷயம் வியப்புண்டாக்கிற்று. பேச்சு முடிந்து விட்ட திருப்தியோடும் உற்சாகத்தோடும் அங்கிருந்து போக மனதில்லாமலேயே எழுந்தார்கள் நபிஸாவும் மும்தாஜும், "நாங்க வாறம்" என்றபடி. "இருந்து சாப்பிட்டுப் போகலாமில்ல" என்றாள் றைமா. "அதுசரி! நாங்க அஸருக்கு வந்தது, அங்கெ வீடு என்னாச்சோ, பிள்ளைக எங்கெ போச்சோ, நான் வர்றேம்மா" என்றபடி கிளம்பிப் போனாள் நபிஸா. மும்தாஜும் அவளுடன் சேர்ந்து வெளியே போனாள். இருவருமாகத் தெருவில் இறங்கி நடக்கும்போது மும்தாஜ் ஆதங்கத்துடன் கேட்டாள்: "சீரு, ரொம்ப இல்ல?"

"ஆமா, ஒரு பொண்ணுதான இருக்குது, காசு பணத்துக்குக் கொறைவா, என்ன?" என்ற நபிஸா, "இவ்வளவையும் காட்டுனவுக செய்து வைச்சிருக்கிற நகைய காட்டுனாகளா? காட்ட மாட்டாக திருஷ்டி பட்டுரும்னு! யாருகிட்ட நகை இல்லாம இருக்கு?" என்று எரிச்சலாகச் சொன்னாள். நகைகளைப் பார்க்க முடியாத ஆதங்கம் அவளது முகத்தில் தெரிந்தது.

"அதைக் காட்ட மாட்டாகங்கறது நமக்குத் தெரியுமில்ல? ஊர் வழக்கம் பாத்திரம் பண்டம் எடுத்துவைச்சு காட்டுறது. அதக் காட்டுனாங்க. நகைய கல்யாணத்துக்கு மொத நாளு முருதாக்கப் பாத்திஹாவுக்குப் பொண்ணு கழுத்துல போட்டுருப்பாக இல்ல? அப்ப பாத்துக்கிற வேண்டியதுதான்" என்ற மும்தாஜ்,

"இம்புட்டுச் செஞ்சு என்னவாம்? மாப்பிள்ளை சரியில்லை, மாமியா

கொடுமைக்காரி! கிளிய வளத்துப் பூனை கையில குடுத்த மாதிரி” என்று சொல்லிச் சிரித்தாள். அவளது குரலில் பொறாமையும், திருப்தியும் இணைந்திருந்தது. நபிஸாவும் அதை ஆமோதித்துத் தலையாட்டிச் சிரித்தாள்.

# 29

எல்லோரும் போன பிறகு சொஹ்ரா, றைமாவிடம் கேட்டாள் “காலையில மவுத்தான வீட்டுல நபிஸா ஏதோ கிண்டல் பண்ணுனான்னு மூஞ்சிய முகத்தைக் காட்டி கோவிச்சுக்கிட்டாளே மும்தாஜ். இப்ப இப்பிடி ஒத்துமையா பேசிச் சிரிக்கிறாளுக?” அவளுக்கு ஆச்சர்யமாக இருந்தது.

“ஆமா, பக்கத்து வீட்டுக்காரி ரெண்டுபேரும். இவள விட்டா அவளுக்கு நாதியில்ல. அவள விட்டா இவளுக்கு நாதியில்ல. இவ ரெண்டு பேரும் பகைச்சுக்கிட்டா புறனி பேச பித்துனா பேச ஆளுயாரு? கழுதைக்குக் கழுதை ஆசீர்வாதம். வேலையப்பாரு” என்றுவிட்டுத் தன் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினாள் றைமா. “ஆமாமா, இங்கெ இந்நேரம் நம்மகிட்ட நல்ல விதமாப் பேசிட்டுப்போறவளுக வெளிய போயி என்னா பேசப் போறாளுகளோ” என்று நீட்டி முழக்கிச் சொன்ன சொஹ்ரா, “எல்லாம் உடம்போட ஒட்டுன வியாதி” என்று சலித்துக் கொண்டாள்.

அன்று இரவு டவுனிலிருந்து வர லேட்டாகும் என்று சொல்லியிருந்தான் காதர். வஹிதாவும் ராபியாவும் தூங்கும் அறைக் கதவைச் சாத்திவிட்டுத் தன் அறைக்குப் படுக்கப்போன றைமாவுக்குத் தூங்கப் பிடிக்கவில்லை. விளக்கை அணைத்துவிட்டுப் படுக்கையில் சரிந்தாள். அறைக்குள் விடிவிளக்கின் ஒளியில் கலைந்துக்கிடந்த இருள், ஆழ்மனதில் படிந்து இருக்கின்ற கொஞ்ச நஞ்ச தெளிவுகளையும் கலைத்தெறிந்தபடியிருந்தது. பகலின் பரபரப்புகளோ வெளிச்சத்தின் துணையோ அற்ற இந்த இரவு தன்னிடமிருப்பதாகத் தான் நம்பிக்கைகொண்டிருக்கிற தைரியத்தை இல்லை இல்லையென

நிருபணம்செய்து அச்சமூட்டியது. இத்தனை காலத்தில் தான் என்றுமே எதன்பொருட்டும் அறிந்திராத அச்சம் மிகப்பெரிய தவறொன்றினைச் செய்கிறோமோ என்கிற அச்சம் மனதை அலைக் கழித்தது. இந்த இரவுக்குத் தன்னை இத்தனை தூரம் பலவீனம் கொள்ளச் செய்ய முடியுமென்கிற விசித்திரம் புரியாமல் படுக்கையிலிருந்து எழுந்து அமர்ந்தவள் தனக்குள்ளாக இறுகிக்கிடந்த இருள் கலைந்துவிடக்கூடாதென்பதுபோல மெதுவாக அடியெடுத்து வைத்து நடந்து, அறையைவிட்டு வெளியேறி, ஹாலுக்கு வந்து டிவியைப் போட்டுவிட்டு எதிரில் கிடந்த சோபாவில் உட்கார்ந்து கொண்டாள். இன்னும் ஒரு சில நாட்களில் வஹிதாவைப் பிரியப் போகிறோம் என்ற நினைவு நெஞ்சை அழுத்திற்று. சில நாட்களுக்கு முன் வந்திருந்த அவளது தந்தை மிகவும் வருந்திப்பேசிவிட்டுப் போயிருந்தார்.

"அது பச்சை மண்ணு, நல்லது கெட்டது தெரியாது. நாமதான் நல்ல வாழ்க்கைய ஏற்படுத்திக்குடுக்கணும். நம்மள்ள பொண்ணுக விருப்பத்த வச்சு கல்யாணத்தை நிச்சயம் பண்ணுறதில்ல. அதனால, எல்லா வகையிலும் நமக்குத் திருப்தியான பையன முடிவு செய்தோம்னா ஒண்ணும் பிரச்னையில்ல." நமக்கு என்கிற வார்த்தை அழுத்தம் திருத்தமாக ஒலிக்கிறது, மருமகனின் பிடிவாதத்தில் அவருக்கு நிறைய வருத்தமிருந்தாலும்!

"நல்லது சுக்கூர். நாம நினைக்கிறத விட அவன் நினைக்கிறது தான் நடக்கும். அதை மாத்த முடியுமா?" என்று மகளை ஆறுதல் படுத்தவும் முயன்றார். றைமாவுக்கு ஒன்றும் சொல்ல முடியவில்லை. பெண்ணின் விருப்பத்தைப் பற்றி யாருக்குக் கவலையிருக்க முடியும்? அவளுக்குத்தான் எது புரியப்போகிறது? அதற்கேற்ற வயதுதான் ஆகிவிட்டதா? எல்லாம் தெரிந்த தனது அபிப்ராயத்திற்கே மதிப்பில்லாமல் இருக்கும்போது அவள் சொன்னாலும் எடுபடப்

போகிறதா? கல்யாணத்தில் கையில் கருகமணியோடு ஹாஜியம்மா ரெடியாக இருக்கையில் அஸரத்துகள் சாட்சிகளோடு வந்து பெண்ணிடம் கேட்கும் "ஸாயிது"க்கு ஏதாவது அர்த்தம்தான் இருக்க முடியுமா? ஊரைக் கூட்டி, பத்திரிகை அடித்து எல்லாமும் முடித்துக் கடைசி நேரம் கேட்கும்பொழுது எந்தப் பெண்ணாவது தனது அபிப்ராயத்தைத் துணிந்துதான் சொல்ல முடியுமா?

அவளுக்கு ரொம்பவே ஆயாசமாக இருந்தது. டிவியில் ஓடிக் கொண்டிருந்த சிங்கள நாடகம் முடிந்து 'ஆய்புவன்' என்று சொல்லிய அறிவிப்பாளரின் குரல் அவளைச் சுயநினைவுக்குக் கொண்டு வந்தது. தலையைச் சொறிந்துவிட்டபடி ராபியா தன் அருகில் வந்து நின்று கொண்டிருப்பதை அப்பொழுதுதான் கவனித்தாள் றைமா. "இன்னும் நீ தூங்கலை?" வியப்புடன் கேட்டபடி எழுந்து டிவியை அணைத்தவளிடம், "நான் உங்ககூட படுத்துக்கறேன் எனக்குப் பயமா இருக்கு!" என்றாள். ஆச்சரியத்தில் புருவத்தை உயர்த்தினாள் றைமா ஏன் என்பது மாதிரி. "நூரம்மா சொல்லுச்சுல்ல, பேய் பத்தி அது பயமா இருக்கு பெரியம்மா. அம்மாகிட்ட சொன்னா, நீ எதுக்காகப் பெரியவங்க பேசுனதைக் கேட்டேன்னு திட்டுவாங்க" என்று சொல்லிவிட்டு, "உங்களோட படுக்கட்டுமா?" என்றாள், அவளது அனுமதியைப் பெறும் வகையில் பரிதாபமாக முகத்தை வைத்துக்கொண்டு. பயத்தால் பேயறைந்தது போலிருந்தது அவள் முகம்! "கிறுக்கி" என்று செல்லமாகச் சொல்லியபடி அவளை அணைத்துக் கொண்ட றைமா, தன் அறைக்குள் கூட்டிக்கொண்டு போய் படுக்க வைத்தாள். நீங்களும் படுங்க என்று சொல்லி அவளை இறுக்கமாக அணைத்துக் கொண்டாள் ராபியா. பெரியம்மாவின் தலையிலிருந்த மரிக்கொழுந்தின் வாசனையும் வியர்வை வாடையும் அவளுக்கு இதமாக இருந்தது.

“ஏன் பெரியம்மா, நூரம்மா சொன்னது நிசமா? ஜின்னு இருக்குதா? அது வானத்துக்கும் பூமிக்கும் இருக்குமாமுல்ல.”

“பயமாருக்குன்னு சொல்றே இல்ல, பின்னே எதுக்கு அதப்பத்தி பேசுற? வேணாம் தூங்கு! ஆயத்துல் குர்ஷி சொல்லிட்டுத் தூங்கு, கனவு வராது.”

“இல்லெ பெரியம்மா, சொல்லுங்க இனிமேல பயப்பட மாட்டேன்.”

“ஆமா, ஜின்னு இருக்குது. அது நல்லது. யாரையுமே எதுவும் செய்யாது. ஆனா அது ராத்திரியில நடமாடுறப்போ யாரும் குறுக்கே போகக்கூடாது, அடிச்சுக் கொன்னுரும்னு சொல்வாங்க. ரொம்பப் பேர் அதப் பாத்திருக்கறதா சொல்லியிருக்காங்க. வானத்துக்கும் பூமிக்கும் இருக்கும்னும் சொல்வாங்க. போதுமா? இனி தூங்கு” என்று கடகடவெனச் சொல்லிவிட்டுக் கண்களை மூடிக்கொண்டாள் பெரியம்மா.

சற்று நேரம் ஒன்றும் பேசாமலிருந்து அறைக்குள் திரண்டிருந்த இருளைத் தன் பெரிய விழிகளை மூடிப் புறக்கணிக்க முயன்று தோற்றவள் மறுபடி மெதுவாக, “பெரியம்மா” என்றாள்.

“உம்! என்ன?”

“அதுவந்து நான் ஒண்ணு கேட்பேன், அம்மாவுக்குத் தெரியக் கூடாது” என்றாள். அப்படி என்ன கேட்கப் போகிறாள் என்று யோசனையாக இருந்தது றைமாவுக்கு.

“சரி கேளு, அம்மாவுக்குச் சொல்லலை.”

“அது வந்து! ஒரு பொம்பளைக்கி எத்தினி புருஷன் இருப்பாங்க?” என்றாள். இது என்ன, என்னென்னவோ கேட்கிறாளே, என்று யோசித்தபடியிருந்த றைமாவிடம். “அது வந்து எங்க ஸ்கூல்ல என்னோட படிக்கிற ரமேஷ் அம்மாவுக்கு ரெண்டு புருஷனாம், உமா

சொன்னா. நானும் பாத்தேன்; அதுக்காகக் கேட்டேன். அப்பிடிக் கட்டுனா அந்தப் பொம்பள கெட்டவதானே?" என்றாள்.

அவள் யாரைப்பற்றிக் கேட்கிறாள் என்று றைமா புரிந்து கொண்டாள். இவளுக்கு ஏன் இந்தக் கேள்வி என நினைத்தபடி, "ஆமாம் தப்புதான். ஒரு பொண்ணுக்கு ஒரு புருஷன்தான் இருக்கணும். ரெண்டு புருஷன் கட்டுனா அவ கெட்டவதான்" என்றாள்.

"அதனாலதான் பிர்தவ்ஸ் சித்திக்கும் ஷெரிபாக்காவுக்கும் இன்னொரு மாப்பிள்ளை கட்டலையா" என்றாள் ராபியா ஆர்வமாக! அவளுடைய இந்தச் சந்தேகத்தை எப்படித் தீர்த்து வைப்பது என்கிற யோசனையுடன், "ஏன் கட்டலாமே? மொதல் மாப்பிள்ளை இருக்கையிலதான் அடுத்த மாப்பிள்ளையக் கட்டக் கூடாது. சித்திக்கும் ஷெரிபாவுக்குந்தான் மொத மாப்பிள்ளை இல்லையே? மறுபடி அவங்களுக்குக் கல்யாணம் நடக்கும்" என்றாள் றைமா. அவளுக்குத் தர்மசங்கடமாக இருந்தது. என்ன இது இந்தக்குட்டி வயதுக்கு மீறிய கேள்வியெல்லாம் கேட்கிறாளே என்று கவலையாகவும் இருந்தது.

"சாயங்காலம் சொன்னீங்க இல்ல, அப்துல்லா என்கிறவரப் பத்தி. அவருக்கு நாலு பொண்டாட்டி இருக்காங்கன்னு. அது மட்டும்?" என்றாள். அவள் ரொம்பவே குழப்பத்தில் இருப்பது புரிந்து றைமா பதில் சொல்ல முடியாமல் தவித்தாள். "சொல்லுங்க பெரியம்மா. அவரு மட்டும் பொண்டாட்டி இருக்கறப்போ நிறையக் கல்யாணம் பண்ணுறாருல்ல. அதுமட்டும் தப்பு இல்லையா?" தோளைத் தொட்டு உலுக்கிவிட்டு றைமாவின் கையை இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். பெரியம்மாவின் உள்ளங்கை பஞ்சு போல மெத்துமெத்தென்றிருப்பது அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது.

ஏதோ யோசனையிலிருந்து விடுபட்ட தோரணையோடு, "என்ன

கேட்ட, ஆம்பளைங்க கல்யாணம் பண்றதப்பத்தியா?" என்று கேள்வியை எழுப்பிவிட்டு, "ஆம்பளைங்க ஷரியத்படி நாலு பண்ணலாம் தப்பு இல்லெ. பொம்பளைங்க பண்றதுதான் தப்பு. செய்யக் கூடாது" என்று பதில் சொல்லிவிட்டு, "சரி, நீ தூங்கப் போறியா இல்லையா?" என்று மெதுவாக அதட்டி அடக்கினாள்.

ஒரு நிமிடம் பயந்து போய் விட்டாள் ராபியா. பெரியம்மா கோபப்படுகிறாளோ? அவளது கோபத்தைத் தணிக்கும் விதமாக அவளது முதுகோடு இன்னும் கொஞ்சம் தன்னை ஒட்டிக்கொண்டவள் சற்று நேர மௌனத்திற்குப் பின் மெதுவாகக் கிசுகிசுப்பான குரலில் கூப்பிட்டாள்: "பெரியம்மா."

"என்ன" என்றாள் றைமா.

"அது வந்து நாளையிலிருந்து நான் தாவணி போட்டுக்கப் போறேன். புதுத் தாவணி இருக்கா, மொதமொத போடறதுக்கு?"

"ஏன் திடீர்னு இந்த ஆசை. உங்கம்மா போடச் சொல்றப்போ எல்லாம் மாட்டேன்னு அடம்பிடிப்ப?" என்று சொல்லிப் பூவாகச் சிரித்தாள் பெரியம்மா.

"அது! வந்து" கீறல்விழுந்த ரிக்கார்டாக இழுத்தவள், "அதுவந்து நாளைக்கு மதினா தாவணி போடுறாளாம். அவளோட சேர்ந்து நானும் போடப்போறேன்" என்றாள்

"ஓஹோ! அப்பிடியா சேதி? அதுதானே பாத்தேன். எலி என்னடா அம்மணமா ஓடுதுன்னு. சரி போட்டுக்க! அக்காவோட புதுசு, பழசு எல்லாம் இனிமே உனக்குதான். அவளுக்குதான் கல்யாணம் பண்ணிறப்போறோம் இல்ல. இனி அவ சேலைதான் கட்டுவா."

"அவளுக்குச் சேலை கட்டத் தெரியாதே, எப்பிடிக் கட்டுவா?" ஆச்சரியப்பட்ட ராபியாவிடம், "அதெல்லாம் பொம்பளைப்

பிள்ளைன்னா பழகிக்கத்தான் வேணும். கட்டிக்குவா” என்று சொல்லி, “நீ பாரு, ஒரே மாப்பிள்ளை பாத்து ஒனக்கும் மதினாவுக்கும் கல்யாணம் பண்ணி வைக்கிறேனா இல்லையான்னு” கேலி செய்து சிரித்தாள் றைமா.

“போங்க பெரியம்மா” என்று வெட்கத்தில் முகத்தை மூடிக் கொண்டாள் ராபியா. அவளுக்குக் கல்யாணம் என்ற வார்த்தையைக் கேட்டாலே வெட்கமாக இருக்கும். இதில் இரண்டுபேருக்கும் ஒரே மாப்பிள்ளை என்று வேறு சொன்னால் . . .? ஏனோ அவளுக்குத் திடீரென அஹமதுவின் ஞாபகம் வந்தது. இந்தக் கல்யாணக் குஷியில் ஒரு சில நாட்களாக அவனைச் சரியாகப் பார்க்கவே இல்லை என்ற நினைவும் வந்தது. நாளையேனும் அவனைப் பார்க்க வேண்டுமென நினைத்தபடி தூங்கிப்போனாள். கனவில், அஹமது அவளையும் மதினாவையும் திருமணம் செய்து கொண் டான். ஆனால் அவளுக்கு அவன் தன்னை மட்டுமல்லாது மதினாவையும் திருமணம் செய்து கொண்டது பிடிக்கவேயில்லை.

காலையில் சீக்கிரமே எழுந்து குளித்துவிட்டு சொஹ்ராவும் றைமாவும் ஊருக்குக் கிளம்பினார்கள். கல்யாணத்திற்கு ஆமினாவை அழைக்கவென! பக்கத்து ஊர்தான். காரில் போய்வர ஒரு மணி நேரம்தான் ஆகும். அதோடு சபியாவின் கணவர் சையது இலங்கையிலிருந்து வந்திருந்தார். அவரையும் பார்க்க வேண்டிய முறைக்குப் பார்க்க வேண்டும். ராபியா பெரியம்மாவிடம் தாவணி போட்டு விடச் சொல்லி பக்கத்தில் போய் நின்று கொண்டிருந்தாள். வஹிதாவின் கொஞ்சம் புதிய தாவணி ஒன்றையும் கையில் வைத்திருந்தாள். அவளுக்கு பிர்தவ்ஸ் சித்தியைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை முகத்தில் தேங்கியிருந்தது. அதனை சொஹ்ரா கவனித்தாலும் கவனிக்காததைப் போல வேலைகளில் ஈடுபட்டாள்.

றைமா தாவணியை வாங்கி ஏதோ ஓதியபடி அவளுக்குப் போட்டுவிட்டாள். "உம்! நீயும் பிஸ்மில்லா சொல்லு" என்று அவளையும் சொல்ல வைத்துவிட்டு, "பெரிய பொம்பள மாதிரித் தெரியுற" என்று சொல்லிக் கன்னத்தில் தொட்டுத் திருஷ்டி கழித்தவள், "நாங்க இப்ப போயிட்டு ஒடனே திரும்பிடுவோம். நீதான் வஹிதாவோட கல்யாணத்தன்னிக்குப் பொண்ணுக்குத் தோழியா போகப் போற இல்ல. நாலு நாள் இருந்துட்டு வா" என்று சொல்லி அவளைச் சமாதானம் செய்தாள். ராபியாவுக்கு ஆச்சரியமாக இருந்தது, தான் என்ன நினைக்கிறோம் என்பது எப்படித்தான் பெரியம்மாவுக்குப் புரிகிறதோ என்று. அம்மாவுக்குப் புரிந்தாலும் புரியாதமாதிரி நடிக்கிறாள் என்பதும் ராபியாவுக்கு புரியத்தான் செய்தது.

சொஹ்ரா, மகள் திடீரென தாவணியோடிருப்பதைப் பார்த்து, "அம்மா, எப்புடிம்மா ஒனக்குத் தாவணிபோட மனசு வந்துச்சு?" வியப்போடு கேட்டவள், "இப்பத்தான் பொண்ணு மாதிரி லட்சணமா இருக்கு" என்று மகளிடம் சொல்லிவிட்டு, "வாங்கக்கா, சுலைமான் ஊருலருந்து வந்தாச்சாமில்ல. ஒரு எட்டு பார்த்துட்டு வந்துருவோம்" என்றாள். "ஆமாமா, நல்லவேளை ஞாபகப் படுத்துன. கொஞ்சம் லேட்டாப்போனோம் சைனு தொலைச்சிருவா" என்று போலியாய் பயந்தமாதிரி போக்குக்காட்டினாள் றைமா. இருவருமாக சைனு வீட்டிற்குக் கிளம்பினார்கள். அங்கே மதினாவைப் பார்த்ததும்தான் சொஹ்ராவுக்கு ராபியா திடீரென தாவணி போட்டதன் காரணம் புரிந்து சிரிப்பு வந்தது. சுலைமான் திடீரெனத் தாடியும் தொப்பியுமாக சூஃபியாகக் காட்சியளித்தான். நலம் விசாரித்தபின், "என்னத்தா, என்ன ஆச்சு திடீர்ன்னு இஸ்லாத்துக்கு மாறிட்ட?" என்று கிண்டல் செய்தாள் றைமா. அவன் பதிலுக்குச் சிரித்தபடி, "ஒரு முஸ்லிமா

பிறந்திட்டு தாடி வைக்காம இருக்கறது எவ்வளவு பெரிய குற்றம் தெரியுமா? அங்கேயெல்லாம் நம்ம ஜனங்க எவ்வளவு பூணிப்பா இருக்காங்க தெரியுமா? நாமல்லாம் அவங்களோட ஒப்பிட்டா . . .!" என்று சொல்லி நிறுத்திவிட்டு ஒன்றுமில்லை என்கிற மாதிரி வருத்தமாகத் தலையசைத்தான். "நல்லது. அதுதான் நீ வந்துட்ட இல்ல, ஊரைத் திருத்து" என்றாள் சைனு மகனிடம் நக்கலாக! அம்மாவின் கிண்டலைப் புரிந்துகொள்ளாதவனாக, "ஆமா, வஹிதாவுக்கு நிக்கா வைச்சிருக்கீங்களாமே கேள்விப்பட்டேன். ரொம்ப ரொம்ப சந்தோஷம். எனக்குக் கல்யாணத்துல கலந்துக்கிறதுக்குக் குடுத்து வச்சிருக்கு" என்றான் றைமாவைப் பார்த்து.

"ஆமாப்பா, உனக்குக்கூட பத்திரிகை தபால் மூலம் அனுப்ப நினைச்சோம். அப்புறம்தான் நீ இங்கே வரப்போறயில்ல, நேர்ல பாத்துச் சொல்லுவோம் அப்பிடின்னுதான்! அவசியம் கல்யாணத்துக்கு வந்துரு. வஹிதா அத்தாவும் ஒன்னப் பாத்துச் சொல்லுவாக" என்ற றைமாவிடம், "ஒன் புருஷன் பஜரு தொழுத கையோட வந்து சுலைமானப் பாத்துட்டுப் போயாச்சு தெரியுமா? கல்யாணத்துக்கு வரசொல்லி அழைச்சிட்டும் போயாச்சு. கரீம்தான் இன்னும் காணலை" என்றாள் சைனு இடைமறித்து.

இவர்கள் எல்லோரும் ஹாலில்தான் அமர்ந்திருந்தார்கள். என்றாலும், மும்தாஜை ஏனோ கண்ணிலேயே காண முடியவில்லை. அவளைப் பார்த்தால் ஏதாவது கிண்டல் செய்துவிட்டுப் போகலாம், எங்கே போயிருப்பாள் என்ற யோசனையோடு கண்களைச் சுற்று முற்றும் சுழற்றிக் கொண்டிருந்தாள் றைமா. முற்றத்தைத் தாண்டியிருந்த அடுப்படியிலிருந்து குக்கரின் விஸில் சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து கறி வாசனை வந்து நாசியில் ஊடுருவிற்று. சுலைமானுக்காக ஏதோ ஸ்பெஷலாகச் சமைக்கிறாள் போல என்று

மனதிற்குள் நினைத்துக்கொண்டபடி, “ஏன் சைனக்கா பரிதாவையும் மும்தாஜையும் காணலை” என்றாள்.

“பரிதா கொல்லைப்பக்கத்துல நின்று இந்த ரெண்டு தெங் கணத்துகளுக்கும் குளிப்பாட்டிக்கிட்டு இருக்கா. மும்தாசு எங்கெ போவுது? அங்கெ புருஷன்காரனுக்குச் சாப்பாடு ரெடி பண்ணுது.” மகன் அருகில் இருந்தாலும் கூட துளி சங்கடமில்லாமல் மரு மகளைப் பற்றி ரொம்பவே அலட்சியமாகப் பதில் சொல்கிற சைனுவைப் பார்த்து அப்புடியாவென்கிற மாதிரி தலையாட்டி வைத்தாள் றைமா. ஏன் கேட்டோமென்கிற வருத்தம் அவளது முகத்தில் தெரிந்ததை சொஹ்ரா கவனித்தாள்.

“கொஞ்சம் காப்பி குடிக்கிறது” என்ற சைனு அங்கிருந்தபடியே சத்தமாக, “ஏலெ மும்தாசு, கொஞ்சம் இங்கெ வந்து தலைகாட்டுலே” என்று குரல்கொடுத்தாள். பேசிவைத்தாற்போல இருவரும், “அய்யய்யோ! காப்பியெல்லாம் வேணாம்க்கா, நல்லா வந்திங்க, நாங்க கௌம்புறோம்” என்று சொல்லிவிட்டு அவசரமாகப் பாயிலிருந்து எழுந்துகொண்டார்கள். “ஆமாமா, மேயப் போற மாடு கொம்புல புல்லுக்கட்டையா சுத்திக்கிட்டுப்போகும், சம்பந்தி வீட்டுல நல்ல விருந்தாவுல்ல இருக்கும், நான் ஒரு வெளங்காதவ” நக்கலாகச் சொல்லி சைனு சிரிக்க, “அட, ஏங்கக்கா நீங்க வேற, அப்புடித்தாம் எஞ்சம்பந்தி,” சலிப்புடன் சொன்னாள் றைமா. அதே சமயத்தில் ஆண்களும் பெண்களுமாக ஐந்தாறுபேர் வெளி வாசலை ஒட்டிய நடையில் வந்து கொண்டிருப்பதைக் கண்ட றைமா, “சரி, நாங்க வர்றோம். சுலைமானைப் பாக்க ஆளுக வந்துக்கிட்டு இருக்கு, வர்றவுகளக் கவனிங்க” என்றபடியே ஹாலிலிருந்து முற்றத்தில் இறங்கிக் குறுக்காக நடந்து எதிரிலிருந்த அடுப்படிக்குள் போய் எட்டிப்பார்த்து, “என்னம்மா, புதுப்பொண்ணு ஸ்பெஷல் சமையலா?” என

மும்தாஜிடம் கிண்டலாகக் கேட்டாள். குனிந்தமர்ந்து தேங்காய் துருவிக் கொண்டிருந்த மும்தாஜ் திடுக்கிட்டுத் திரும்பி, "றைமாக்கா வாங்க, எப்பொ வந்தீங்க" என்று ஆவலாகக் கேட்டாள்.

"நான் வந்தாச்சு அப்பவே! உனக்குதான் பெருமையில காது கேக்கலை" என்று விளையாட்டாகச் சொன்ன றைமா மும்தாஜின் முகத்தில் வழியும் சந்தோஷத்தையும் அவளது குரலில் தெரியும் உற்சாகத்தையும் ஒரு நிமிடம் உற்றுக் கவனித்துவிட்டு, "சரிம்மா, நா வரேன். அப்புறம் பேசலாம்" என்றவாறு மறுபடியும் ஹாலை நோக்கி வந்தாள். ஹாலில் நபிஸாவும் கரீமும் கூட இன்னும் ஒன்றிரண்டுபேர் இருந்தார்கள். ஆண்கள் எல்லோரும் சோபாவில் அமர்ந்திருக்க நபிஸா ஒரு ஓரமாக சைனுவை ஒட்டி தரையில் விரித்திருந்த பாயில் அமர்ந்திருந்தாள். சொஹ்ரா தெருவில் போய் நின்று கொண்டிருந்ததைக் கவனித்தாள் றைமா.

"சரிக்கா, நான் வரேன். நாங்க மாப்பிள்ளை ஊருக்கு கிளம்பிக்கிட்டிருக்கோம். அப்புறமா பாக்கலாம்" என்றாள். "சிக்கந்தரப் பார்ப்பீங்க இல்லெ?" ஆவலாகக் கேட்ட சுலைமான், "நான் அவனுக்கு ஸலாம் சொன்னதாச் சொல்லிருங்க மறக்காம" என்றான்.

"சரித்தா" என்று தலையசைத்த றைமா, நபிஸாவைப் பார்த்து மெலிதான புன்முறுவல் ஒன்றைச் செய்துவிட்டு, "அடுத்த வீட்டுக்காரம்மா இப்பதான் வர்றிங்களாக்கும், ஒங்க பிரண்டோட மாப்பிள்ளையைப் பாக்க" என்று கிண்டல் செய்தபடி அங்கிருந்து வெளியே சென்றாள்.

வீட்டில் வஹிதாவுக்குத் துணையாக பாத்திமாவை வந்து இருக்கச் சொல்லிவிட்டு ஊருக்குக் கிளம்பினார்கள் இருவரும். முத்து காரை ஓட்டிக்கொண்டுவர, ரொம்பவும் அமைதியாக இருந்த சொஹ்ராவிடம் ஏதும் பேச்சுக்கொடுக்க மனமில்லாமல் றைமா

கண்களை மூடி சாய்ந்து கொண்டிருந்தாள். தன் தங்கையையும் தாயையும் பார்க்கப் போவதற்கான மனத்தயாரிப்பில் இருப்பது போலிருந்தது அவளது அமைதி. எதையாவது பேசிக் கொண்டிருந்தாலாவது பயணம் செய்வது போரடிக்காமல் இருக்கும். அதற்கும் வழியில்லாதபடி அவள் மோசமான மனநிலையில் இருப்பது றைமாவுக்குச் சங்கடமாக இருந்தது.

மெயின் ரோட்டிலிருந்து விலகி கார் குறுகலான கிராமத்துப் பாதைகளின் வழியே மெதுவாகச் சென்றுகொண்டிருந்தது. சின்னச் சின்னக் கிராமங்களும் தென்னந்தோப்புகளும் வயற்காடுகளும் தாண்டிச் செல்கையில் மனதிற்கு இதமாக இருந்தது றைமாவுக்கு. சிலுசிலுக்கிற காற்றின் குளுமையை முகத்தில் ஏந்தி ரசித்தவளாக வெளியில் பார்த்தபடியிருந்தாள். ஒன்றிரண்டு கிராமத்துப் பிள்ளைகள் எதிராக வந்தபடி “ஹை! காரு” என்று கோரஸாகக் கத்தி டாட்டாக் காட்டிக் கடந்து சென்றார்கள். அவர்களில் பெரும்பாலானவர்கள் சட்டையே அணிந்து கொண்டிருக்காதது இவளுக்கு மிகுந்த மனவருத்தத்தைத் தருவதாகயிருந்தது. இந்த நிலையிலும் கூட அவர்களது கள்ளம் கபடமற்ற சிரிப்பு ஆச்சரியத்தை உண்டாக்க, நம்மால் ஏன் இதுமாதிரி சிரிக்க முடிவதில்லை என்கிற கேள்வி உருவாகி மனதை என்னவோ செய்தது.

தூரத்திலிருக்கும் மலைகளைக் கவனித்தபடியே வந்த றைமாவுக்கு, காலை பத்து மணிக்கே வெயில் மலைகளின் மீது விழுந்து பிரகாசிப்பதைக் காணமுடிந்தது. சொஹ்ரா இன்னும்கூட அமைதியாக வெளியே பார்த்தபடியிருந்தாள். ‘அவளுக்கு இந்தக் கிராமங்களை ஒட்டி எத்தனை நினைவுகளோ’ எனப்பெருமூச்சொன்றினை விடுவித்தவள், “ஊர்வரப்போவுது கொஞ்சம் ஒன்னோட யோசனைகளையெல்லாம் மூட்டைகட்டி

வச்சுட்டு, கலகலன்னு இரு. ஒன்னைப் பார்த்து உங்கம்மாவும் தங்கச்சியும் மேலும் மேலும் கவலைப்படப் போறாக” என்றாள். சொஹ்ரா அதை ஆமோதிக்கும் விதமாகத் தலையை வேகமாக ஆட்டிக்கொண்டாள்.

கார் சத்தம் கேட்டு பிர்தவ்ஸ் ஓடி வந்து வாசல் கதவு பக்கத்தில் நின்றபடி தெருவை எட்டிப்பார்த்தாள். சொஹ்ராவும் றைமாவும் காரிலிருந்து இறங்குவதைப் பார்த்து முகம் மலர்ந்தவள், வேறு யாரும் காரிலிருந்து இறங்குகிறார்களா எனக் கண்களால் தேடி ஏமாந்து மறுபடியும் இவர்களின் முகங்களில் தன் பார்வையைப் பதித்தாள்.

வீட்டிற்குள் நுழைகிற இருவரையும் அப்படியே ஒருசேர இருகைகளாலும் அணைத்துக் கொண்டு, “நெனைச்சுக்கிட்டே இருந்தேன் வருவீங்கன்னு” என்று சந்தோஷத்துடன் சொல்லிச் சிரித்தாள். பிறகு அவர்களிடமிருந்து விலகி ஓடிப்போய் நாலே எட்டில் ஹாலை அடைந்து மூலையில் சுருட்டிவைத்திருந்த கோரைப்பாயை எடுத்து உதறித் தரையில் விரித்தாள். தன்னைத் தொடர்ந்து உள்ளே வந்தவர்களை இருவரையும் “உக்காருங்கக்கா” என்று உபசரித்தாள்.

பாயின் மீது அமர்ந்த றைமா, அவளையே கூர்ந்து கவனித்தாள். இத்தனை கவலையிலும் கூட அவள் முகம் மிகுந்த அழகுடன் பிரகாசித்துக் கொண்டிருந்தது. இவளுக்குக் கண்கூசுவதுபோல பிரமை உண்டாயிற்று. வலுக்கட்டாயமாக அவள் முகத்திலிருந்து தன் கண்களை விலக்கி சுற்று முற்றும் பார்த்தபடியே, “நல்லாயிருக்கியா? அம்மா எங்கே?” என்று ஆதரவோடு கேட்டாள்.

“நல்லாயிருக்கேன்க்கா, அம்மா மண்ணெண்ணெய் வாங்கறதுக்காகப் பக்கத்துல இருக்கிற பெட்டிக்கடைவரைக்கும் போயிருக்காங்க, இப்ப வந்துருவாங்க” என்றவள், “ஏன், நீங்க ராபியாவைக் கூட்டிவரலை? வஹிதா நல்லாயிருக்காளா?

மச்சான்லாம் நல்லாருக்காங்களா?” தொடர்ச்சியாகக் கேட்டு நிறுத்தினாள்.

அவளது கேள்விக்கு சொஹ்ரா பதில் சொன்னாள். “எல்லாம் நல்லாருக்காங்க, ராபியா, வஹிதா கல்யாணத்தன்னிக்கு அவ கூடவருவா.”

“ஆமா, நீ எப்புடியிருக்க,” தன் தங்கையிடம் கேட்ட சொஹ்ரா அவளது முகத்தை உற்றுப்பார்த்தாள். அவளது முகத்தில் இதுகாலம் வரை இல்லாத ஒரு மாற்றத்தை அவளால் உணரமுடிந்தது. சிறிது நாட்களுக்கு முன்பாக வந்திருந்தபொழுது இருந்த வெறுமையின் சுவடே முகத்தில் இன்று இல்லாமல் இருந்தது. அதற்குள்ளாகவா மனதைத் தேற்றிக் கொண்டாள்? பதில் தெரியாத கேள்வி ஒன்று எழுந்தது இவளுக்குள். எத்தனைமுறை தற்கொலை செய்துகொள்ள முயன்றாள். எத்தனை நாட்கள் சாப்பிடாமல் அறையைப் பூட்டிக்கொண்டு முடங்கிக்கிடந்திருக்கிறாள். இன்று முகத்தில் இருக்கும் தெளிவு எப்படி உண்டாகியிருக்கும்? என்ன சந்தோஷத்தில் இத்தனை மலர்ச்சி வந்திருக்குமா? சந்தோஷத்திற்கான எல்லா வழிகளுமே அடைபட்டு எத்தனையோ நாட்களாகிவிட்டதே? இவளுக்குக் குழப்பமாகவும் பயமாகவும் இருந்தது.

திடீரென ஞாபகம் வந்தவளாக றைமா, சொஹ்ராவைத் தொடையில் தட்டி உலுக்கி, “எந்திரி, மொத நாம இங்கே வந்து நுழைஞ்சது தெரிஞ்சாலே போச்சு. நம்ம சம்பந்தி ஆடித்தீத்துருவா. அதனால அங்கெ போய் தலையைக் காட்டிட்டுப் பிறகு வருவோம்” என்றபடி எழுந்தாள். “ஆமாமா, அக்கா சொல்றது சரிதான். முதல்ல இதுக்குள்ள நுழைஞ்சது தெரிஞ்சுச்சு, போச்சு . . .!” என்று சொல்லிக் களுக்கென்று சிரித்தாள் பிர்தவ்ஸ். அவள் அப்படி உற்சாகமாகச் சிரித்தது சொஹ்ராவுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை என்பதை

றைமா கவனித்தாள்.

சபியாவின் வீட்டில் சையது சேரில் சாய்ந்து உட்கார்ந்திருந்தார். அவருக்கு மனைவியை நினைத்துப் பெருமையாக இருந்தது. கெட்டிக்காரி. பொறுமையாக இருந்து தன் தம்பியின் மகளைக் கட்டிக்கொள்ளப்போகிறாள். இது பெரிய விஷயம். மகனுக்கு வயதாகிறது என்று அவசரப்பட்டு வேறு எங்கும் பெண்ணெடுக்க அவள் பிடிவாதமாக மறுத்து சாதித்துவிட்டதில் மிகவும் திருப்தி அவருக்கு. தலையிலிருந்த தொப்பியை எடுத்து அருகிலிருந்த சோபாவில் வைத்துவிட்டுத் தலையைத் தடவி விட்டுக் கொண்டார். அந்த நேரத்தில் றைமாவும் சொஹ்றாவும் உள்ளே வந்து, “அஸ்ஸலாமு அலைக்கும் அண்ணே, நல்லாருக்கீங்களா” எனக் கேட்டபடி அருகில் சென்று நின்றார்கள். “அலைக்கும்ஸலாம், வாங்கம்மா, வாங்க இப்பத்தான் வர்றீங்களா. வீட்டுல எல்லாரும் சுகமா?” என்று கேட்டவாறு நீட்டியிருந்த கால்களை மடக்கிக் கொண்டார். “இந்தா பாரு சபியா, சீக்கிரம் வா” என்று கழுத்தைத் திருப்பி உள்ளறையைப் பார்த்துக் குரல் கொடுத்தார். அவர் குரலில் உற்சாகம் கரைபுரண்டோடியது.

“யாரு” என்றபடி அசைந்து அசைந்து வந்த சபியா, “வாங்கம்மா” என்று இவர்களைப் பார்த்துச் சொல்லித் தலையசைத்து விட்டு, கணவரின் பக்கம் திரும்பி, “என்னடா இது, ராவுத்தர் குரல்ல உற்சாகம் பிச்சுக்கிட்டு வருதேன்னு பாத்தேன். மச்சினன்மாரு பொண்டாட்டிகளப் பாத்துட்டுத்தானா?” என்றவள், “என்னமோ தெரியலம்மா உங்க மேல இவருக்கு அம்புட்டு பிரியம்” என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டாள். அதைக் கேட்டுத் தன்னைத் தானே மெச்சிக்கொண்ட சையது முகம் பரவசத்தில் ஆழ்ந்தது. சபியா பாயை விரித்து அவர்களை அமரச் சொல்லிவிட்டு

உள்ளே போனாள். அப்புறம், "எம்மருமக எப்பிடி இருக்கா? அவளப் பாக்கணுமின்னு இன்னிக்குக் கிளம்பலாம்னு இருந்தேன்" என்று ஆர்வமாக விசாரித்தார் சையது.

"நீங்க எப்பிடி இருக்கீங்க? மொத அதைச் சொல்லுங்க. இன்னும் எத்தனை காலத்துக்கு அங்கேயே தனியா இருந்து கஷ்டப்படுவீங்க. இங்கெ வந்து தாய் பிள்ளைகளோட நிம்மதியா இருந்திர வேண்டியதுதானே" என்றாள் றைமா. அவளுக்குக் கடைசிக் காலத்தில் என்று சொல்ல வாய்வரை வந்த வார்த்தையைச் சட்டென சுதாரித்து நிறுத்திக் கொண்டதில் பெருத்த நிம்மதி உண்டாயிற்று. சொல்லியிருந்தோமென்றால் நினைக்கையிலேயே வயிற்றைக் கலக்கியது. தப்பித்து விட்டோம் என்ற உணர்வு மேலிட்டது.

உள்ளேயிருந்து கையில் பிஸ்கெட் தட்டுடன் வந்த சபியா, "அப்பிடிச் சொல்லு, இந்த மனுஷன்கிட்ட. நான் இவரக் கட்டிக்கிட்டு என்னா சுகத்த அடைஞ்சேன். வாழவேயில்லையே? ரெண்டு வருஷத்துக்கொருதரம் வந்துட்டு கண்ணு மறந்தாப்போல ஓடிருவாரு" என்று சொல்லி முந்தானையில் மூக்கைச் சிந்தினாள். அவளுக்கு எந்தக் காலத்திலும் இந்தக் குறை உண்டு. யாரிடம் பேசினாலும் ஒரு பாட்டம் அழுது தீர்ப்பாள், வாழவேயில்லை என்று! றைமா நினைத்துக்கொள்வாள் அவள் வாழவேயில்லை என்று அழுவதற்குத் தோதாக ஒரே ஒரு பிள்ளையை மட்டும் அல்லா கொடுத்தானே!

"அம்மா, அம்மா அழூதுராதே" என்று மனைவியைக் கிண்டல் செய்த சையது, "என்னம்மா, நீ வந்த உடனே சபியாவை அழுக வைச்சுட்டியே?" என்று விளையாட்டாகக் கோபித்துக் கொண்டார். "பாவம்! என் பொண்டாட்டி பாரு மொகமே செவந்து போச்சு." சொஹ்ராவுக்கு அவர்களது கொஞ்சல் எரிச்சலை உண்டாக்கிற்று. என்னமோ சின்னஞ்சிறுசுகள் மாதிரித்தான் என நினைத்துக்

கொண்டாள்.

சையது கிண்டலை நிறுத்திவிட்டு இவர்கள் பக்கம் முகத்தைத் திருப்பினார். “என்னம்மா கேட்ட, நான் வந்து இருக்கறதப் பத்தித்தான? இந்த ஸபரோட நிறுத்திக்கலாம்னுதான் நானும் இருக்குறேன். ஏன்னா சிலோன்ல இப்ப முன்ன மாதிரி இல்ல. நிலைமை மோசமா இருக்கு. தமிழ் ஆளுங்கன்னாலே விரோதமா பாக்குறானுக. ரெண்டு மூணு இடத்துல கலவரம் வேற நடந்துச்சு. முஸ்லிம்கள மட்டும் அவங்க ரொம்ப பகையா நினைக்கிறதில்ல. இப்பவும் கடைய ஒரு சினேகிதன் பொறுப்புல விட்டுட்டு வந்திருக்கேன். இன்ஷா அல்லாஹ், பார்ப்போம், மறுபடி போய் ஒரே மாசத்துல எல்லாத்தையும் முடிச்சிட்டு வந்திர வேண்டியதுதான்” என்று சற்று கவலையுடன் சொல்லி நிறுத்தினார். சிறிது நேரம் யாரும் எதுவும் பேசாமல் இருந்தார்கள்.

சொஹ்ராதான் அமைதியைக் கலைத்தாள். “பந்தலெல்லாம் போட்டாச்சு போல இருக்கு” என்று சொல்லவும், “ஆமா, எல்லா வேலையும் முடிஞ்சிடுச்சு, கருகமணி கூட கோர்த்தாச்சு” என்று சொல்லியவாறு எழுந்து, மறுபடியும் உள்ளே போய் ஒரு சிறிய நகைப்பெட்டியை எடுத்து வந்த சபியா, “இந்தாங்கம்மா பாருங்க, இதுதான் பரிச நகை. பத்துப் பவுன். மஹருக்காக இவுக கொண்டு வந்தது” றைமாவிடம் கொடுத்துவிட்டு, “அல்லாஹு” என்று அவர்களருகில் உட்கார்ந்து கொண்டாள். “இருக்கட்டும்! பாக்கலாம்” என்றபடி அதனைக் கைகளில் வாங்கிய றைமா, சபியாவின் முகத்தில் ஏதேனும் ஆதங்க உணர்வு இருக்கிறதா என அவள் முகத்தை உற்று நோக்கினாள். நிச்சயமாக அவளுக்கு வயிற்றெரிச்சலாகத் தானிருக்கும் என்பது இவளுக்குத் தெரியும். சையதுவின் விருப்பமென்பதால் தட்ட முடியாமல் ஒத்துக் கொண்டிருப்பாள். அதோடு அவர் ஒரு ஓட்டை

வாய் வேறு. நாளைக்கே காதரிடம் வந்து வஹிதாவுக்கு நகை கொண்டு வந்திருப்பதாகச் சொல்லிவிடுவார். பிறகு தம்பி கோபித்துக்கொள்வான் என்ற பயம் அவளுக்குமிருக்கும்.

வெளிநாட்டுச் செயின். பளிச் பளிச்சென மின்னியது. இரு வரும் அதனைக் கையால் எடுத்துப் பார்த்துவிட்டு றைமா, "சரி, நகைய பாத்தாச்சு எடுத்துவையிங்க! நாங்க பக்கத்து வீடுகள்ள இருக்கற தாய் பிள்ளைகளுக்குச் சொல்லிட்டு வந்திர்றோம்" என்று சொல்லி விட்டுத் துப்பட்டியைச் சுற்றி முடிந்தபடி எழுந்தார்கள். "ஒருவாய் காப்பி குடிச்சிட்டுப் போங்கம்மா" என்றாள் சபியா. "அதெல்லாம் வேணாம்! நாங்க இப்பப்போற வீடுகள்ல குடுப்பாங்க. வேணாம்னாகூட விடமாட்டாங்க. அதனால போயிட்டு வர்றோம்" என்றாள் றைமா அழுத்தமாக! "அப்ப சரி, சீக்கிரமா வந்து சேருங்க. மத்தியானச் சாப்பாடுக்கு இங்கெ வந்துருங்க. சோறாக்கி வைக்கிறேன்" என்றாள் சபியா. அவள் குரலில் அவசியம் வந்துவிட வேண்டும் என்கிற கண்டிப்பு இருந்தது. "சரி" என்றவாறு பாயிலிருந்து எழுந்து கல்வாசலை நோக்கிச் சென்றார்கள் வெள்ளையடித்திருந்த ஹாலின் சுவர்களின் மீது பார்வையை ஓட்டி உதடுகளில் இகழ்ச்சியான புன்முறுவலோடு. சொஹ்ரா, "எங்கெ மரு மகனைக் காணாம்?" என்றாள். "அவன் பிரெண்ட்ஸ்களுக்குச் சொல்லப் போய்ட்டான். இப்ப வந்துருவான்" என்றார் சையது. "அப்ப போயிட்டு வர்றோங்கண்ணே" என்று சொல்லிவிட்டு இரு வரும் வீட்டை விட்டு வெளியில் வந்தார்கள்.

"ஒத்தப்புள்ளக்கிக் கல்யாணம் பண்ணுறாளே, வீடு வாசலுக்கு பெயிண்ட் அடிக்க மாட்டா? இப்புடியா ஈனப்பொம்பளையா இருப்பா?" ஆத்திரத்தோடு கறுவுகிற சொஹ்ராவின் குரலை, "ப்சு! சும்மாயிரு தெரிஞ்ச சங்கதிதான், பின்னெ என்னத்துக்குப் பொலம்ப, என்னமோ புதுசாக் கண்டது மாதிரி" வருத்தத்துடன்

உள்ளடக்குகிறாள் றைமா.

ஆமினாவின் கைகளில் பத்திரிகையைக் கொடுத்த றைமா, “உங்களுக்குத்தான் இந்த ஊர்ல மொத பத்திரிகை குடுக்கறேன். அவசியம் வந்துருங்கம்மா” என்றாள் மிகுந்த பிரியத்துடன். பிர்தவ்ஸ் அறைவாசல் நிலைப்படியில் குத்துக்காலிட்டு அமர்ந்திருந்தாள். அவள் முகத்தில் ஒருவிதமான இணக்கமின்மை இருப்பதைப்போலிருக்க சிக்கந்தரைப் பற்றி அவளுக்கு நல்ல அபிப்ராயம் இல்லை என்பதனால் வந்த வெறுப்போ அது என யோசித்தாள் றைமா.

கல்யாணப் பத்திரிகையைக் கையில் வாங்கிய ஆமினா றைமாவின் கைகளைக் பிடித்துக்கொண்டு, “அவசியம் வரணும்னுதான் எனக்கும் ஆசை. எப்பிடி வர்றதுன்னுதான தெரியல?” என்று சொல்லிவிட்டு நிறுத்தினாள். அவளது இடுங்கிய பிரௌன் நிறக் கண்கள் ஒரு கணம் பிர்தவ்ஸின் மீது நிலைத்து விட்டு றைமாவின் பக்கம் திரும்பிற்று. அவள் சொல்ல நினைப்பதைப் புரிந்துகொண்டு விட்ட றைமா அவளைப் பேசவிடாமல் செய்வதற்காக அவளது வறண்டு சுருங்கிய கைகளைத் தன் கைகளினால் பிடித்து அழுத்தினாள். “அதெல்லாம் ஒண்ணும் பிரச்னையில்லை. நீங்க எதையும் மனசுல நினைக்காம அவசியம் வரத்தான் வேணும். ஊர் ஒலகத்துல எங்கேயும் நடக்காதது ஒண்ணும் உங்க வீட்டுல நடந்துடலையே? அதுக்காக, நல்லாத்தான் வந்தீங்க போங்க இப்பிடியே எம்புட்டு நாள் வீட்டுக்குள்ள கிடப்பீங்க நல்லது கெட்டதுல கலந்துக்கிறாம. கேக்கிறவளுக கேட்டுட்டுப் போறாளுக. அல்லா இருக்கான் அதுக்காகக் கவலைப்பட்டு உடம்ப கெடுத்துக்கணுமாக்கும்?” ஆறுதல் சொல்லும் விதத்தில் மென்மையான குரலில் பேசினாள் றைமா.

பிர்தவ்ஸ் தலையை இன்னும் அதிகமாகக் கீழ்நோக்கிக் குனிந்து கொண்டாள். தனது வெளுத்துப்போன பிளவுஸையும் பழைய

புடவையையும் ஒரு நிமிடம் உற்றுப் பார்த்துக் கொண்டாள். கூச்சமாக இருந்தது அவளுக்கு. றைமாவின் பார்வை தன் மீது விழும் போதெல்லாம் கண்களைத் தாழ்த்தி கை விரல்களைப் பார்த்துக் கொண்டாள். புடவை நுனியை விரலில் சுற்றியபடி குனிந்தே இருந்தாள். சொஹ்ராவுக்கும்கூட அவளது உடையின் நிலையைப் பார்த்து அவமானமாக இருந்ததென்பது அவள் முகத்தில் தெரிந்தது. றைமாவோடு எவ்வளவுதான் அன்யோன்யமாக இருந்தாலும் அவள் தன் குடும்பத்தை ஏழ்மையானதாக நினைத்து விடுவாளோ என்கிற தவிப்பு சொஹ்ராவுக்கு. றைமா கேட்டதற்குப் பதில் சொல்ல வாயெடுத்த ஆமினாவை இடை மறித்தாள் சொஹ்ரா. அவளால் பிர்தவ்ஸின் கோலத்தைச் சகித்துக் கொள்ள முடியவில்லை என்பதோடு, றைமாவின் முன்னாலேயே தன் குடும்பம் அத்தனை மோசமான நிலையில் இல்லை என்பதையும் நிரூபித்தாக வேண்டியிருந்தது.

"ஏம்மா, இவள இப்பிடி மொஸாபிர் கோலத்துல வச்சிருக்க? என்னமோ ஏழை வீட்டுப் பொண்ணு மாதிரியும் ஒண்ணும் இல்லாத மாதிரியும்?" கோபத்துடன் வெடுக்கெனக் கேட்டாள். அவளது முகத்தையும் அதிலிருந்த அசௌகர்யத்தையும் கவனித்த றைமாவுக்கு அவளது கோபத்தின் அர்த்தம் புரிய, மௌனமாகவே அமர்ந்திருந்தாள். தன் முன்பாக ஆமினாவை சொஹ்ரா கடிந்து கொண்டதும் அவள் தன்னிடத்திலேயே தன் குடும்ப கவுரவத்தை நிரூபிக்க முயல்வதும் அசட்டுத்தனமானதாக இருந்தது அவளுக்கு. சங்கடமாகவும் கூட இருந்தது.

ஆமினா, சொஹ்ராவின் கேள்வியினால் சுருங்கிய தன் முகத்தை இன்னும்கூட சுருக்கிக்கொண்டு பிர்தவ்ஸைப் பார்த்துத் திரும்பி, "நீ போ அடுப்படிக்கு, வேலை கிடக்குல்ல?" வெடுக்கெனச் சொல்லி

அவளை வலுக்கட்டாயமாக அங்கிருந்து அகற்றினாள். பிர்தவ்ஸ் ஒன்றுமே சொல்லாமல் எழுந்து போனாள். அவளுக்கு தன் தாய் தன்னை அவமதிப்பது புதிதில்லை என்றாலும் றைமாவின் முன் இப்படி நடந்து கொண்டது மிகுதியான வெறுப்பை உண்டுபண்ணிற்று.

அவள் போனபிறகு ஆமினா றைமாவின் கைகளைப் பற்றிக் கொண்டாள் இறுக்கமாக! தன் பக்கமிருக்கும் நியாயத்தை அவள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்கிற கட்டாயத்தை உண்டாக்குவதுபோல. "ஏம்மா றைமா நீயே சொல்லு. அவளப் பாத்தியா, எம்புட்டு அழகா இருக்கான்னு? பதினாலாம் பக்கத்து நெல வாட்டம். இம்புட்டுக் கவலையிலயும் அவ முகத்துல இருக்குற ஒளி மறைஞ்சிருக்கா? இவள வச்சுக்கிட்டு பாதுகாக்க நான் படுற பாடு இவளுக்குத் தெரியுமா? என்னையப் பேசுறாளே, எதுக்காக நான் அவ கோலத்தக் கெடுத்து வைச்சிருக்கேன், அவ நல்ல விதமா உடுத்தக்கொள்ள இருந்தா பளிச்சினு இருக்கும்! இப்பவே எத்தினி பயலுக வீட்டச்சுத்தி வாரானுக தெரியுமா? ஆம்பள இல்லாம நான் ஒத்தையா இருந்து இவளப் பாதுகாக்க என்னா பாடுபடுறேன்னு இவளுக்குத் தெரியுதா?" என ஆவேசமாகச் சொல்லிவிட்டு, "இந்தா எந்திரிச்சு அந்த பீரோவத் தொறந்துபாரு. அவளுக்குன்னு வாங்குன சேலைதான் அத்தினியும். பீரோவே ரொம்பிக்கிடக்குது" என்று கண்கலங்கினாள்.

"என் பொண்ணு இந்தக் கதியில இருக்கறப்ப நான் மட்டும் எப்பிடி நல்லவிதமா உடுத்திக்கிட்டு நாலு எடம் போக முடியும்? நாங்க என்னா பாவம் செஞ்சோமோ? அல்லா இந்த நெலைமையில எங்க ரெண்டு பேரையும் வச்சிருக்கான் அது அவனுக்கு உவப்பா இருந்தாச் சரி" என்று சொல்லிவிட்டுத் தன்சேலை முந்தானையில் கண்களை ஒற்றியெடுத்தாள். அவளது சிவந்த முகம் இன்னும்கூட சிவந்திருந்தது.

றைமாவால் ஒன்றும் பேச முடியவில்லை. சொஹ்ரா ஒன்றும் பேசாமல் தலையைக் குனிந்தபடி பாய்க்குச்சியை உருவி எடுத்து ஒடித்துக்கொண்டிருந்தாள். ஒருவிதமான இயலாமையும் இறுக்கமும் அங்கே சூழ்ந்திருந்தன.

றைமா அந்த அமைதியினை எதிர்கொள்ளத் திராணியற்று சோர்ந்து போனாள். அந்த மௌனத்தை நீந்திக் கடக்கப் பெரிதும் பிரயத்தனப்பட்டாள். மீளவே முடியாத ஒரு சூழலில் இந்தக் குடும்பம் சிக்கித் தடுமாறுவதான எண்ணமும் இதிலிருந்து விடுபடவே முடியாமல் அவர்கள் இருவரும் புதைந்து போய் விடுவார்களோ என்ற கவலையும் திடுமென எழுந்து தனது இதயத்தை அழுத்தி மூச்சைத் தடுமாற வைப்பதுபோலிருக்க அவளுக்கு இந்த இடத்திலிருந்து தான்மட்டும் தப்பித்துப் போய்விட்டால் போதும் என்ற நினைவு மேலோங்கிற்று.

அதோடு சொஹ்ராவிடமிருந்து இத்தனை காலமுமில்லாததொரு மாறுதலையும் அவளால் கவனிக்க முடிந்தது. தங்களிருவருக்கிடையே இதுவரை இருந்து வந்த அன்யோன்யம் முறிந்து பெரிய இடைவெளி உண்டாகிவிட்டது போலவும் இருந்தது. தனக்கு முன்பாக அவள் தன் குடும்ப கௌரவத்தைப் பற்றி நினைத்தது, தான் வேற்று ஆள் என்கிற விஷயம் அவள் மனதில் இருப்பதை உறுதி செய்தது போலிருந்தது. இந்த எண்ணம் திடீரென வரக்கூடிய ஒன்றாக இவளால் கற்பனை செய்ய முடியவில்லை. இது எவ்வளவு காலமாக அவளுக்குள் இருந்து கொண்டிருக்கிறதோ என்று நினைக்கையில் மிகவும் ஆயாசமாக இருந்தது. அவர்கள் அங்கிருந்து திரும்பும் வழியில் ஒருவரோடு ஒருவர் பேசிக்கொள்ளவே முயற் சிக்கவில்லை.

# 30

*வஹிதாவின் கல்யாணத்திற்கு இன்னும் இரண்டு நாட்களிருக்கையில் பாத்திமா திடீரெனக் காணாமல் போய்விட்டாள். முதல் நாள் பின்னிரவிலேயே ஆளைக்காணோம். வழக்கம்போல பாதி இரவில் ஜின்னின் ஓட்டத்தைக் காதுகொடுத்துக் கேட்கவென நூரம்மா விழித்தபொழுது மகள் படுத்திருந்த இடம் காலியாகக் கிடப்பதையும் இலியாஸ் மட்டும் அங்கே படுத்திருப்பதையும் கவனித்தாள். இந்தப் பாவிமக கொல்லைக்குப் போய் விட்டாளோ என்று பயமாக இருந்தது அவளுக்கு. ஜின்னு தனக்கெதிரில் எதிர்ப்படுபவர்களை அடித்துக் கொன்று போடுமென்பதை இந்த மூதேவியிடம் எத்தனை முறை சொல்வது? கொல்லைக்குப் போய் தேடிப்பார்த்தாள் அங்கு இல்லை என்றதும் மனம் பதைபதைத்தது. என்ன ஆயிற்றோ, ஏது ஆயிற்றோ என்று அரற்றியபடி சிம்னி விளக்கின் திரியைத் தூண்டிவிட்டுத் தேட ஆரம்பித்தவள், ஒரு வேளை குடிதண்ணி எடுக்க ஆசாரிகுளத்திற்குப் போயிருப்பாளோவென ஒரு நிமிடம் யோசித்தாள். தண்ணிக்கின்னாலும் இந்நேரத்திலயா? இருக்காது என்று தனக்குள் சொல்லித் தலையாட்டிக் கொண்டாள்.*

*ஒன்றும் புரியாமல் தலையில் கைவைத்தபடி, நிலைப்பிடியில் சாய்ந்து உட்கார்ந்தவளுக்குத் தலை சுற்றியது. மனதில் என்னென்னவோ நினைவுகள் தோன்றிப் பயம் கொள்ளச் செய்தன. பதற்றத்தில் எதுவுமே ஓடவில்லை. விடியும்வரை பார்த்திருந்துவிட்டு பிறகு றைமாவிடம் போகலாம் என்று நினைத்துக் கொண்டாள். அவளுக்குத் திடீரெனத் தன்மீது மிகப்பெரிய அனுதாபம் உண்டாயிற்று. தான் பிறந்ததிலிருந்து இன்றுவரை அனுபவித்த*

துயரங்கள் ஒன்றின்பின் ஒன்றாக நினைவில் தோன்றி மறைந்தன. துயரப்படவென்றே சில ஜென்மங்களை அந்த இறைவன் படைக்கிறானா என்று கேட்டுக்கொண்டாள். அவளுக்குள் பீறிட்ட துக்கம் உடைந்து ஒப்பாரியாக வெளிப்பட்டது. பாத்திமா இனி வரப்போவதில்லை என்பதை விடிந்துவிட்ட பொழுது உறுதி செய்துவிட, அவள், "நாசமாப் போறவனே, ஏன் றப்பே!" என்று அல்லாவைக் கடுமையான வார்த்தைகளால் திட்டி, அப்படித் திட்டுவதற்குத் தனக்கு உரிமை இருப்பதாகவும் அதில் நியாயம் உள்ளது போலவும் ஓலமிடத் தொடங்கினாள். அவளது வீட்டின் முன் தெருப்பெண்கள் வேடிக்கை பார்க்கவும் ஆறுதல் சொல்லவும் கூட ஆரம்பித்திருந்தார்கள். ஒன்றும் புரியாமல் விழித்துக் கொண்டிருந்த இலியாஸை றைமா வந்து தன் வீட்டிற்குக் கூட்டிப்போய் சொஹ்றாவிடம் விட்டுவிட்டு மறுபடியும் வந்து நூரம்மாவினருகில் அமர்ந்து அவளைச் சமாதானப்படுத்தத் தொடங்கினாள்.

"எதுக்காக இப்பிடிக் கத்தி ஊரைக்கூட்டுறே? அவ என்ன சின்னப் பிள்ளையா? இங்கெதான் எங்கனயாவது போயிருப்பா" என்று பொய்யாக ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்தாள். ஷெரிபாவும் சவுராவும் கூட நூரம்மாவின் வீட்டில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்து விட்டு வீடு திரும்பினார்கள். ஷெரிபாவின் மனதில் மட்டும் பாத்திமா முருகனோடு ஓடிப்போய் விட்டது தீர்மானமாகத் தெரிந்தது. அவள் இவ்விஷயத்தை முந்திக்கொண்டு யாரிடமும் தெரிவிக்க விரும்பவில்லை. இன்னும் சிறிது நேரத்தில் தானாகவே இவ்விஷயம் ஊரெல்லாம் தெரியத்தான் போகிறது. அப்பொழுது எல்லோரும் தெரிந்து கொள்ளட்டும் என்று மனதை அடக்கிக் கொண்டாள். கணநேரப் பரபரப்புக்காகத் தான் இவ் விஷயத்தை முந்திக்கொண்டு சொன்னோமென்றால் ஊரில் ஷெரிபாவைப்

பழிக்கத் தொடங்கி விடுவார்கள். ‘இவளுக்கு எல்லாமே தெரியும், சொல்லாமல் மறைத்து வைத்து நம் சமூகத்தைக் கேவலத்துக்கு ஆளாக்கி விட்டாள்’ என்று! இதை நினைக்கையில் அவளுக்கு மனதில் தோன்றிய இகழ்ச்சி உதட்டோரத்தைக் கோணவைத்து மறைந்தது.

‘பொல்லாத சமூகம்’ என்று தனக்குள்ளாகக் கிசுகிசுப்பாக முனகிக் கொண்டாள். பாத்திமாவின் கணவன் ஓடிப்போய்விட்டான். பக்கத்தில்தான் எங்கோ ஒரு நகரத்தில் இன்னொருத்தியைத் திருமணம் செய்து கொண்டு குடித்தனம் செய்வதாக நிறையப்பேர் சொல்லியிருக்கிறார்கள். அவனைத் தட்டிக் கேட்க யாருக்கும் தெரியவில்லை. இவளது நிலையை, வறுமையைக் கண்டுகொள்ளவும் துப்பு இல்லை. இன்று அவள் தனக்குப் பிரியமானவனோடு ஓடிப் போய் விட்டாள். இது மட்டும் இந்த ஊருக்கே கேவலமாகப் போய்விடப்போகிறது என்று நினைத்தவள், ஏனோ பெருமையுற்றவள் போலச் சிரித்துக் கொண்டாள்.

சவுரா திண்ணையில் கால்நீட்டி உட்கார்ந்திருந்தாள். ஹேர் பின்னால் காது குடைந்தபடி பாதியாக மூடியிருந்த கண்களை முழுவதுமாகத் திறக்காமலேயே யோசித்துக் கொண்டிருந்தாள். அவள் மனம் பரபரப்புடன் இருந்தது. பாத்திமா என்னவானாள் என்பது குறித்து ஷெரிபாவுக்கு விபரம் தெரியக்கூடும். அவளும் இவளும் பொழுதுக்கும் ஒரு தலையணையில் தலைவைத்துப் படுத்துக் கிடப்பார்கள். ஒத்தவயதுக்காரிகள் வேறு! மகளிடம் கேட்டால் வாய் திறக்க மாட்டாள் என்று நினைத்துக் கொண்டாள்.

அவளுக்கும் அரசல் புரசலாக முருகன் விஷயம் தெரிந்துதானிருந்தது. “அந்தப் பயலைத்தான் இழுத்துக்கிட்டு ஓடிப் போயிருப்பா தேவுடியா முண்டை” என்று தனக்குள்ளாகச் சொல்லிக் கொண்டாள். விஷயம் இன்னும்கூட ருசுவாகத் தெரியட்டும் என்று

வாய் பொத்தியிருந்தாள். இருந்தாலும், யாரிடமாவது இது பற்றி பேசினால் தேவலை என்றிருந்தது அவளுக்கு. திடீரென பாத்திமாவின்மீது கோபம் வலுப்பட்டது. “ஓடினதுதான் ஓடுனாளே, ஒரு துலுக்கப்பய கிடைக்கல, மொட்டச்சிக்கு?” என்று தன்னையறியாமலேயே வாய்விட்டுச் சொன்னவள், திடுக்கிட்டுக் கண்திறந்து சுற்று முற்றும் பார்த்துக் கொண்டாள். பக்கத்தில் யாருமில்லாதது நிம்மதியைத் தந்தது. அப்பாடா என்று இழுத்து மூச்சுவிட்டுக் கொண்டவளுக்கு இன்னொரு கவலையும் மனதில் தோன்றிற்று. ‘பாத்திமா ஆனம் காய்ச்சணும், அதைச் சாப்புடணும். அம்புட்டு ருசியா இருக்கும். நல்லாருக்குதுன்னு சொல்லிட்டாப் போதும். காய்ச்சி எறக்கினதும் கத கதன்னு ஒரு பீங்கான் நெறைய ஊத்திட்டு வந்துல்ல குடுப்பா? பெருமைக்காரி’ என்று நினைத்து ஆயாசப்பட்டாள். அவளுக்கு மற்றெதையும்விட, இது பெரிய இழப்பாக இருந்தது.

படுக்கையிலிருந்து படுக்கையறை சன்னல் வழியே கல் வாசல் திண்ணையிலிருந்த அம்மாவைப் பார்த்தபடியிருந்த ஷெரீபாவுக்கு அம்மாவின் மனதில் என்னவெல்லாம் ஓடிக்கொண்டிருக்கும் என்று ஒருவாறு யூகிக்க முடிந்தது. ‘பாவம்! இனிமேல் யாரிடம் நயந்து பேசி ஆனம் வாங்கப்போகிறாள்’ என்று நினைத்துக்கொண்டாள். சவுரா மாதிரி பணக்காரி ஏழையான தன்னிடம் கேட்டு வாங்கிச் சாப்பிடுவது பாத்திமாவுக்குத் தாங்க முடியாத பெருமையை உண்டாக்கும். பூரித்துப் போய்விடுவாள். சவுரா இப்படித்தான் ஆரம்பிப்பாள், “ஏன் பாத்துமா, முந்தியெல்லாம் கருவாட்டு மண்டை போட்டு ஆனம் வப்பியே? இப்பெல்லாம் வக்கிறதில்லையோ?” ஷெரிபாவுக்கு எரிச்சலாக இருக்கும் அம்மாவின் அல்ப புத்தியை நினைத்து. “ஏன், காய்ச்சுவேனே இப்பப்ப மண்டைதான் கெடைக்க மாட்டேங்குது” சலித்துக்

கொள்வாள் பாத்திமா. “இந்த ஊர் உலகத்துல நானும் எத்தினியோ வீட்டுல கருவாட்டு ஆனம் வச்சுப் பாத்திருக்கேன். ஒங் கை மணம், பக்குவம் எங்கேயும் பாத்ததில்லடிம்மா” என்பாள் சவுரா. பாத்திமாவுக்குத் தலையில் ஐஸ்கட்டி வைத்தாற் போலாகிவிடும். மறுநாளே கடனை உடனை வாங்கிச் சமைத்து ஒரு சட்டி கருவாட்டு ஆனம் கொண்டு வந்து தருவாள். ஷெரிபாவுக்கு அவள் அம்மாவிடம் இது குறித்துச் சண்டை போடவே நேரம் சரியாக இருக்கும். “இவ வேற, பொட்டுன்னு கெடக்காமப் பொழுதுக்குமுல்ல மொட மொடக்குறா.” அலுத்துக் கொள்வாள் சவுரா.

பாவம், அம்மா ரொம்பவும்தான் கவலைப்படுவாள். இது பெரிய இழப்புதான் அவளைப் பொறுத்தவரை என்று முனகியபடி புரண்டு படுத்தாள் ஷெரிபா.

காலையிலேயே மூடிய அறைக்குள் விழுந்துகிடக்கிற அடர்த்தியான வெக்கை சோர்வூட்டியது. எத்தனைமுறை எழுந்து கொள்ள நினைத்தாலும் சோர்ந்து, சோர்ந்து கீழே விழுகிறது மனம். பழந் துணியாய் படுக்கையின் மீது குவிந்து கிடக்கிறது உடல். எல்லாவற்றையும் இழந்து நீண்ட காலமாகிவிட்டது என்றாலும் இன்று மட்டும் ஏனோ புதிதாக எதையோ இழந்துவிட்டதாய் துக்கம் கொண்டு அலைகிறது மனம். தனது இழப்புகளையெல்லாம் நினைவூட்டுவது எதுவென அறியமுடியாத குழப்பம் அலைக்கழிக்க, கன்னங்களின்மீது வழியும் நீரைத் துடைக்க விரும்பாதவளாக அசைவற்றுக் கிடந்தாள். சூடான கண்ணீர் கன்னங்களின் மீது ஈரத்தையும் குளிர்ச்சியையும் உணரச் செய்தது.

பாத்திமா எத்தனையோ நாட்கள் இவளிடம் தைரியமாகப் பேசியிருக்கிறாள். எதையுமே ஒளித்து மறைத்ததில்லை. ஷெரிபாவுக்கு வியப்பாக இருக்கும். அதே சமயத்தில் வெட்கமாகவும் இருக்கும்.

எப்படி இவளால் இவ்வளவு வெளிப்படையாகப் பேச முடிகிறது என்று நினைத்துக் கொள்வாள். அவளது பேச்சுக்கள் சில சமயம் வெறுப்பை மூட்டினாலும், அது இயற்கைக்கு முரணானதில்லை என்ற எண்ணமும் எழுந்து இவளைச் சமாதானப்படுத்தும்.

ஒருநாள் பாத்திமா மிக நேரடியாகவே இவளிடம் கேட்டாள், “உனக்குக் கஷ்டமா இல்லை?” அவளது கேள்வியில் சற்று தடுமாறிய பின் ஷெரிபா சொன்னாள், “இல்லை, அதொண்ணும் பெரிய விஷயமில்லை. எனக்குக் கஷ்டமாக இருந்ததே இல்லை” என்று! அவளுக்குத் தன்குரலிலிருந்த நடுக்கத்தை முழுதாக மறைத்துக்கொள்ள முடியவில்லை ஆதலால் தலையைக் குனிந்து கொண்டாள். பாத்திமா கேட்டாள், “எங்கே, நீ நேரடியா என் மொகத்தப் பாத்துச் சொல்லு பாப்போம்.” இவளது தோளைத் தொட்டு அசைத்தாள். ஷெரிபாவினால் தன் தோல்வியை ஏற்றுக்கொள்வதிலுள்ள சங்கடங்களை எதிர்கொள்வதற்குத் திராணியில்லை என்றாலும் சொன்னாள், “ஆமாம், கஷ்டம்தான்! ராத்திரி நேரத்துல என்னால தூங்க முடியறதில்ல. அதுக்கென்ன?”

“அப்பிடி ஒத்துக்கோ சொல்றேன்” என்ற பாத்திமாவின் கண்களில் வெற்றி பெற்றதற்கான உற்சாகம் மிளிர்ந்தது. அவளது குட்டையான உடலை ஒரு அடி உயர்த்தி மறுபடி தரையில் காலூன் றினாள். அவர்களுக்கருகில் இருந்த மல்லிகைப் பந்தலிலிருந்து வந்து கொண்டிருந்த பூவாசம், அந்நேரத்தைய அவர்களது மன நிலைக்கு ஏற்றதாகவே இருந்தது.

எங்கிருந்தோ வந்த வண்டுகள் பூவில் அமர்ந்து தேனைக் குடித்துக் கொண்டிருந்ததைச் சுவாரஸ்யமாகக் கவனித்துக் கொண்டிருந்தாள் பாத்திமா. ஷெரிபாவுக்கு அவள் மீது பெரிய ஆச்சரியம் உண்டாயிற்று. தன்னைவிட வசதியில் ரொம்பவும் கீழே இருக்கும் இவளால் எப்படி

இவ்வளவு தயக்கமின்றிப் பேச முடிகிறது என்று நினைத்துக் கொண்டாள்.

"ஆம்பளைங்களச் சொல்லு, எங்கெவேணா போயி மேய்ஞ்சிட்டு வந்துர்றானுக. பொம்பளைக மட்டும் என்னவாம்!" அதிருப்தியுடன் அங்கலாய்த்துக் கொண்டவளைப் பார்க்க ஷெரிபாவுக்குப் பயமாக இருந்தது. எப்படி இப்படியெல்லாம் இவளுக்குப் பேச முடிகிறது?

ஷெரிபா கவலையுடன் பாத்திமாவைப் பார்த்தாள். "என்னமோம்மா நீ இப்படியெல்லாம் பேசுறது சரியில்ல. நமக்கு இது மட்டுமே வாழ்க்கையாக்கும், இதக்கூட கட்டுப்படுத்திக்கலைன்னா எப்புடி? நமக்குக் குழந்தைகள் இருக்கு, அதுகள வளர்த்தெடுக்கறதுல பெரிய சந்தோஷம் இருக்குது. அதை விட்டுட்டு . . ." தயக்கத்துடன் இழுத்தவள், "நான் இப்பொ ஒண்ணு கேட்கறேன் மறைக்காமச் சொல்றியா?" என்றாள். பாத்திமா இவளை உற்றுப் பார்த்தாள். "நீ என்ன கேக்கப் போற தெரியுமா? முருகனைப் பத்தி, சரிதானே?" என்று சொல்லிக் கண்ணடித்துச் சிரித்தாள். அச்சிரிப்பில் ஒருவிதமான எக்களிப்பு மிகுந்திருந்தது.

"அப்போ அது உண்மைங்கறே?" "ஆமான்னு வச்சுக்கோயேன்." அலட்சியம் மிகுந்திருந்தது குரலில். ஷெரிபாவிற்கு உடல் பதறிற்று. "அடிப்பாவி, என்னடி சொல்ற? நமக்குன்னு, நம்ம ஊருக்குன்னு ஒரு கௌரவம் இருக்கு. உனக்கு ஒரு குழந்தை இருக்கு. அதையெல்லாம் பத்தி நீ யோசிக்கவே இல்லையா?" என்றாள். பாத்திமா ஷெரிபாவை ஒரு நிமிடம் உற்று நோக்கினாள். "இருக்கட்டும்! எதுவேணா இருக்கட்டுமே, அதையெல்லாம் நான் என்னத்துக்குக் காப்பாத்திக் குடுக்கணும்? இந்த வெளக்குமாத்து ஊரு பெரிய மனுஷனுக, இதுவரைக்கும் எனக்கு எதுவும் செய்திருக்கானுகளா? எதுவும் இல்லெ. அப்புறம் எதுக்காக வீணாவுல இதையெல்லாம் நெனைக்க? எனக்குப்

புடிச்சுருக்குன்னா செய்வேன். அதோட நான் ஒண்ணும் உன்னை மாதிரி பணக்காரி இல்லைம்மா. குடும்ப கௌரவத்துக்காக எல்லாத்தையும் இழந்து மூலையில இருக்கறதுக்கு."

ஷெரிபாவினால் அதன்பிறகு ஒன்றும் பேச முடியவில்லை.

"துலுக்க முண்ட, எம் புள்ளைய மயக்கி இழுத்துக்கிட்டு ஓடிப்போயிட்டாளே! நாசமாப்போக, ஒரு குழியில போக." நட்ட நடுப்பகலில் தெருவில் நின்று அடங்காத ஆவேசத்துடன் முருகனின் தாய் மண்ணை வாரித் தூற்றிக்கொண்டிருந்ததைக் கலக்கத்துடன் ஜன்னல் வழியாக பார்த்துக் கொண்டிருந்தாள் ஷெரிபா. வீட்டுக்குள்ளிருந்தே நூரம்மா தன் தளர்ந்த குரலில் பதிலுக்குக் கத்திக் கொண்டிருந்தாள். "வீணாப்போன முண்டை, ஒரு பள்ளப்பய சுண்ணிதானா இவளுக்குக் கெடைச்சிச்சு, துலுக்கப்பயது கெடைக்கலையா?" தெருப்பெண்கள் தம் முகங்களில் வழியும் ஆர்வத்துடன் கூடி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஷெரிபாவுக்கு ஒன்று மட்டும் புரியவில்லை. இவள் ஏன் இலியாஸை இப்படி அனாதையாக விட்டுவிட்டுப் போனாள்? ஒரு தாயினால் எப்படி இப்படிச் செய்ய முடியும்? தான் தன் குழந்தைக்காக மறுமணம் செய்து கொள்ளாமல் இருப்பதையும் பாத்திமா இப்படிப் பிள்ளையை விட்டுவிட்டு ஓடிப்போனதையும் ஒப்பிட்டுப் பார்த்து ஜீரணிக்கவே முடியவில்லை அவளுக்கு. மிதமிஞ்சிய வெறுப்புணர்வு அவள் பேரில் உண்டான அதே தருணத்தில் தனது இயலாமை உண்டாக்கிய மனச்சோர்வும் பாத்திமாவின் சுதந்திரத்தின்பேரில் லேசானதொரு பொறாமையும் மனதின் ஓரத்தில் முளைவிட்டுச் சரசரவெனத் தனக்குள்ளே வேரோடுதையும் அவளால் புரிந்து கொள்ள முடிந்தது.

அன்றைய பொழுதின் ஏனைய நிகழ்வுகளை மிகுந்த மனத் துயரத்தினூடே எதிர்கொள்ளத் தயாராயிற்று அவளது மனம்.

# 31

அஸர் தொழுகைக்குப்பின் ஜமாஅத் கூட்டம் பதற்றத்துடன் பள்ளிவாசலில் கூடி இதுபற்றிப் பேசத்தொடங்கியது. ஊர் நாட்டாண்மை, முத்தவல்லி, பேஷ் இமாம் என்று முக்கியமானவர்கள் அனைவரும் தலை குனிந்து அமர்ந்திருந் தார்கள். அவர்களது முகங்கள் அவமானத்தினால் இறுகிப் போயி ருந்தன. பள்ளிவாசல் முழுவதும் நிரம்பியிருந்த கூட்டத்தினரின் முகங்களினூடே அலையலையாய் கடந்துகொண்டிருந்தது ஆத்திரம். இளைஞர்கள் கடும் ஆவேசத்துடன் இருப்புக் கொள்ளாமல் உட்கார்ந்திருந்தார்கள். தங்கள் சமூகத்தைத் தீராத கேவலத்துக்கு ஆளாக்கி விட்ட பாத்திமாவோ, முருகனோ கையில் கிடைத்தால் ஒரு நொடியில் பிய்த்து எறிந்து விடுவார்கள் போல! ஒருவிதமான உணர்வுபூர்வமான எழுச்சி அவர்களை ஒன்றிணைத்திருந்தது. தம் மதத்தின் கவுரத்தைக் காப்பாற்ற வேண்டிய எண்ணம் அவர்களிடத்தில் வலுப்பட்டிருந்தது.

பள்ளிவாசல் மதரஸாவின் தூணருகில் ஒடுங்கிக் கூனிப்போய் நின்றிருந்தாள் நூரம்மா. தனது உடலின் மீது சுற்றியிருந்த வெள்ளைத் துப்பட்டியை மீறி ஆயிரம் கண்கள் துளைத்தெடுப்பதைப் போல உணர்ந்தாள். அவளது வதங்கிக்கறுத்த முகத்தில் ஒளியற்ற கண்களிலிருந்து வழிந்த கண்ணீர் இன்னும் மிச்சமிருந்தது. வாதா மரத்திலிருந்து குளிர்ந்த காற்று வீசிற்று. அவுஸ் தண்ணீரின் பாசான் கூட்டத்திற்குள்ளே வழுக்கித் துள்ளிக் குதித்து விளையாடிக் கொண்டிருந்தன மீன்கள்.

கூட்டத்திலிருந்த சுலைமான்தான் முதலில் பேச்சை ஆரம்பித்தான். “ஏன் யாரும் பேசமாட்டேங்கிறீங்க? இன்னக்கி நாம பட்டிருக்கிற

அவமானத்த எப்பிடிச் சரிபண்ணப்போறோம்? இந்த ஒரு தேவுடியா முண்டயினால நாம யாரும் இனிமேல தலைநிமிந்து நடக்கமுடியாமப் போச்சே? இதுக்கு என்ன செய்யப் போறோம்?" என்று முடிந்தவரைக்கும் சத்தம்போட்டு ஆவேசமாகக் கத்தினான். நாட்டாண்மை கைநீட்டி அவனைச் சமாதானப்படுத்தினார். "பள்ளிவாசல்ல இவ்வளவு சத்தம் போட்டு எதுக்காகப் பேசணும்? ஸபூர் செய்யிங்க" என்று சொல்லி விட்டு, முத்தவல்லியின் முகத்தைப் பார்த்தார். "அதெப்பிடி மாமு கத்தாம இருக்க முடியும்? நம்ப மானம் போச்சு. இதைக்காட்டிலும் வேற என்ன வேணும் சொல்லுங்க? என் ரத்தமே கொதிக்கிதே! இந்நேரம் சவுதியில இதுமாதிரி நடந்திருந்துச்சுன்னா அவள நடுத்தெருவுல நிறுத்திக் கல்லால அடிச்சுக் கொன்னு போட்டுருப்பானுக, தெரியுமில்ல?" அவனுக்கு மூச்சு வாங்கியது.

பக்கத்திலிருந்தவர்கள் அவனைச் சமாதானப்படுத்தி இழுத்து உட்கார வைத்தார்கள். முத்தவல்லி கை நீட்டி, "கொஞ்சம் சும்மா இருங்கப்பா! அதைப்பத்திப் பேசத்தானே நாமல்லாம் உட்காந்திருக்கோம்" என்றவர், "என்னங்க, நடந்தது நடந்து போச்சு. ஓடுன கழுதை எங்கெ போச்சோ யாருக்குத்தெரியும்? மேற்கொண்டு ஆக வேண்டியதப் பேசுவோம்" என்றார். அவரது பேச்சை ஆமோதிக்கும் பாணியில் தலையசைத்த நாட்டாண்மை, தொண்டையை லேசாகச் செருமி விட்டுப் பேசத் தொடங்கினார். "ஊர்ல நடக்கக் கூடாதது நடந்து போச்சு, உண்மைதான்! இதுநாள் வரைக்கும் நாம கட்டிக் காப்பாத்துன கௌரவம் மரியாதை எல்லாம் போச்சு. அவ ஒரு காபிர் பயகூட ஓடிப்போயிருக்கா. இனிமே நாம அவள இந்த ஊருக்குள்ள அனுமதிக்கக் கூடாது. அதை மட்டும்தான் இப்போதைக்குச் செய்ய முடியும். அதே சமயத்துல நூரம்மாவையும்

ஊரைவிட்டு விலக்கி வைக்கறதுதான் சரின்னு ஜமாஅத் நினைக்கிது. இனிமே தலைக்கட்டு வரி அவங்க கிட்ட வாங்க வேண்டாம். அவங்க வீட்டு நல்லது கெட்டதுக்கு அஸரத் யாரும் பாத்திஹா ஓதப் போகக்கூடாது. பள்ளிவாசல் காரியங்கள்லயோ, கந்திரி, நோன்புக்கஞ்சி இப்பிடி எதுலயும் அவங்க பங்கெடுத்துக்கிறக் கூடாது. என்ன நான் சொல்றது?" என்று கூட்டத்தையும் நூரம்மாவையும் பார்த்துச் சொல்லியபடி பேச்சை முடித்தார். அவரது பேச்சு முன்கூட்டியே என்ன பேசுவது என்பதை அவர்கள் முடிவு செய்துவிட்டுத்தான் இந்தக் கூட்டத்திற்கு வந்திருக்கிறார்கள் என்பதை அங்கிருப்பவர்களுக்குத் திட்டவட்டமாகவே புரியவைத்தது. பள்ளிவாசலில் இருந்து கொண்டு பேச்சைக் கண்டபடி வளரவிடுவதன் அசிங்கத்தைக் கணக்கிலெடுத்தவராகத்தான் சட்டென ஒருமுடிவுக்கு கொண்டு வந்திருக்கிறார் என்பதையும் கூட்டத்தினரால் யூகிக்க முடிந்ததென்பதை அவர்களது அமைதி காட்டியது. நாட்டாண்மையின் பேச்சைக்கேட்டு நூரம்மாவுக்கு உயிர் போவதைப் போலிருந்தது. ஏற்கனவே அவமானத்தாலும் ஆத்திரத்தாலும் ஒடிந்து போயிருக்கையில் இந்தத் தண்டனை வேறா என்பது போல அதிர்ந்துபோய் நின்றுகொண்டிருந்தாள்.

கூட்டத்திலிருந்து லேசான சலசலப்பைத் தவிர எதுவும் கேட்கவில்லை. யாராவது தனக்காகப் பேசமாட்டார்களா என்று சுற்று முற்றும் பார்த்தவள், ஏமாற்றத்தில் துவண்ட முகத்தோடு, "அய்யா, என் பொண்ணு செஞ்சது தப்புதான். அதுக்காக என்னைய பழி வாங்கிறாதீங்க. நா ஒரு . . . பாவமும் . . . அறியாதவ . . . இந்த வயசான காலத்துல. . . நா . . . என்னா பண்ணுவேன் . . . எங்க போவேன் . . . அல்லாவே" வார்த்தைகள் துண்டு துண்டாக வந்துவிழ வயோதிகத்தினால் தளர்வுற்ற குரலைக் கிழித்தெறிகிறது அவளது

விசும்பல்.

சுலைமான் மறுபடி துள்ளி எழுந்து கத்தினான். “பொட்டச்சிய அடக்கி வளக்கத் தெரியலையில்ல. அதுக்காகத்தான் இந்தத் தண்டனை.” அவனுக்கு ஆதரவான குரல்கள் கூட்டத்தில் அலையலையாக எழுந்து அடங்கின. நூரம்மா மறுபடி குழந்தையைப்போல விடாப்பிடியாக, “அவசெய்த தப்புக்கு என்னையப் பழி வாங்கா தீங்கய்யா” என்று சொல்லி அழுது ஓலமிட்டுக் கொண்டிருந்தாள். “ஏலெ நூரம்மா, ஒனக்கு நம்ப கவுரவும் என்னாண்ணு தெரியும். அதை நாம காப்பாத்தலைன்னா யாரு காப்பாத்துவாக? நீயே சொல்லு? இன்னக்கி உன்னைய சும்மா விட்டோமுன்னா, நாளைக்கி யாருக்கும் பயமில்லாமப் போயிரும் இல்ல? இப்பிடி முடிவு செஞ்சாதான் நாளக்கி யாரும் துணிஞ்சு இப்பிடி ஒரு முடிவ எடுக்க மாட்டாக, என்ன?” என்று சொல்லியபடி நீண்டு கிடந்த தன் தாடியை வலது கை விரல்களினால் கோதித் தடவி விட்டுக் கொண்டார் நாட்டாண்மை. அவருக்கு நூரம்மாவிடம் புரிந்துகொள்ளும் விதத்தில் தான் எடுத்துச் சொல்லி விட்டதாக ஒரு திருப்தி உண்டாயிற்று.

நூரம்மாவுக்கு இனி இவர்களிடம் கெஞ்சுவதில் பயனில்லை என்பது புரிந்தது. மனதுக்குள் சொல்லத்தெரியாத விடுதலை உணர்வு பொங்கிற்று. தான் ஊரைவிட்டு விலக்கி வைக்கப்பட்டுவிட்டோம் என்பது உறுதியாகி விட்டது. இந்த முடிவை எதிர்த்துத் தன்னால் ஒன்றும் செய்யவும் முடியாது என்றாலும் எதாவது செய்தாக வேண்டுமென்கிற வெறி அதிகரித்தது. கட்டுக்கடங்காத சுதந்திரம் உடலெங்கிலும் பரவி அவளது கட்டுப்பாட்டை மீறி வெடித்தது. “ஐயா பெரிய மனுஷனுகளே, நீங்க என்னைய ஊர்ல சேத்துக்க மாட்டிங்க இல்லெ? சரி இருக்கட்டும்! எம்மவ காபிரோட ஓடிப்போனது

தப்புங்கிறிங்களே? இந்த ஊர்ல யாராவது ஒரு ஆம்பளையாவது ஒரு குடியானவச்சி கிட்ட படுக்காம இருக்கானுகளா? சொல்லுங்க பாப்போம், எங்கே ஒருத்த எந்திரிச்சு நிக்கட்டும் நான் ஒத்துக்கிர்றேன் எம்மக செஞ்சது தப்புன்னு" என்று ஆக்ரோஷமாகக் கைநீட்டிப் பேசினாள். அவளது விரல் அங்கிருந்த ஒவ்வொருத்தரையும், ஒருத்தரையும் விடாமல், சுட்டிக்காட்டிக் கீழிறங்கியது. அவளது பேச்சினால் அனைவரும் திக்பிரமை பிடித்தாற்போலிருக்கையில், அவள் மேலும் கத்த ஆரம்பித்தாள். "நான் இல்லாதவன்னா என்னையப் போட்டுப் பாக்கிறீங்க. என் வயிற எரிய விடுற ஓங்கள அல்லா கேட்டுக் குடுப்பான். இந்தப் பாவம் ஓங்கள சும்மா விடாது. ஏ, ரஹ்மானே! றப்பே என் வயிறு எரியுதே" என்று சொல்லிக் குனிந்து இரு கை நிறைய மண்ணை அள்ளி வாரி வானை நோக்கித் தூற்றினாள். இவளது செய்கையில் கொதித்துப்போன இளைஞர்கள் சிலரும் சுலைமானும், "அந்தக் கெழட்டு முண்டைய அடிச்சுக் கொல்லுங்கடா" என்று சொல்லிக் கூட்டத்திற்கு நடுவிலிருந்து பந்தைப்போலத் தாவிக் குதித்து ஓடி வந்தார்கள். நாட்டாண்மையும் முத்தவல்லியும் ஒரு நிமிடம் செய்வதறியாமல் குழம்பிப் போய் நிற்க, காதர் ஒரே தாவலில் ஓடிவந்து நூரம்மாவை மறைத்துக் கொண்டு குறுக்காக நின்றுகொண்டான்.

"ஏய், போங்கப்பா எல்லாரும்" என்று நெட்டித் தள்ளினான். "இது என்ன இடம் ஞாபகமிருக்குல்ல? பள்ளிவாசல். இதுக்குள்ள இருந்துக்கிட்டு அடிதடி வேலையில எறங்குறிங்களே வெக்கமாயில்லெ?" என்று சொல்லிக் கத்தியவன், "இந்தப் பொம்பள பேசுனது தப்புதான். அதுவுமில்லாம இந்தப் பொம்பளக்கி சித்த சுவாதீனமில்லாம இருக்குதுன்னு எனக்குத் தெரியும். பேசாம இதோட இந்த விஷயத்த விட்டுட்டு அடுத்து ஆக வேண்டியத நாம பார்க்கலாம்"

என்று சொன்னான். அவன் இந்தப் பிரச்னையை உடனடியாக முடிவுக்குக் கொண்டு வரவேண்டும் என்கிற பதற்றத்தில் இருந்தான்.

சுலைமான் காதரை எதிர்த்துக் கத்தினான். "அதுக்காக, அவ ஜமாஅத்த எதுத்துப் பேசுறத விடமுடியுமா? என்ன நீங்க பெரிய மனுஷனா இருந்துக்கிட்டு இப்படியெல்லாம் பேசுறீங்க? ஒரு பொட்டச்சிய பேசவிட்டுக் கேட்க நாம ஆம்பளைங்களா இல்லெ பொட்டைப் பயலுகளா?" அவனுக்கு, தான் தன் மதத்தின் மீதும் சமூகத்தின் மீதும் வைத்திருக்கும் பற்றுதலை வெளிக்காட்ட கிடைத்த இந்த நல்ல சந்தர்ப்பத்தை விட மனதில்லை. அவனது மூர்க்கத்தனம் காதரை எரிச்சலடைய வைக்க நாட்டாண்மையைப் பார்த்துச் சொன்னான். "இங்கெ பாருங்க, நீங்க சொல்லி இந்தப் பசங்கள அடக்குங்க! இல்லென்னா அசிங்கமாப் போயிரும் பள்ளி வாசலுக்குள்ள, அடிதடி கலாட்டான்னு. மேக்கொண்டு ஊரு நாறிப்போயிரும்." நாட்டாண்மைக்கும் அது சரியெனப்பட்டது. "ஏம்பா எல்லோரும் கொஞ்சம் அமைதியா இருக்கீங்களா" என்று இரு கைகளை நீட்டி கூட்டத்தை அமைதிப்படுத்தினார். கூட்டத்தின் சலசலப்புகளுக்கு மத்தியில் சுலைமான் மட்டும் மறுபடி கத்தினான். "எப்பிடியோ, எல்லோருமா சேர்ந்து ஊரைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கிட்டிங்க இல்லெ? எப்பிடியோ போங்க! நான் மட்டும் எதுக்கு உயிரை விட்டு கத்திக்கிட்டு நிக்கறேன்" என்று சொல்லிவிட்டு ஒரு ஓரமாகப் போய் உட்கார்ந்து கொண்டான். தூணோரத்தில் நடுங்கிப்போய் நின்று கொண்டிருந்த நூரம்மாவைப் பார்த்து காதர் சொன்னான். "நீங்க வீட்டுக்குப் போங்க." பதிலே சொல்லாமல் தப்பித்தோம் என்கிற நினைப்பில் தட்டுத்தடுமாறிய படி அவ்விடத்தை விட்டு அகன்றோடுகிறவளின் நைந்த உருவம் காதரை ரொம்பவும் அசௌகர்யம் கொள்ளவைத்தது.

இருட்டுவதற்கான ஆயத்தங்களைத் துவக்கிவிட்டது வானம். அமைதியாக வீற்றிருக்கிறது வாதாமரம், இந்த நேரத்தில் இலைகளை அசைப்பது தவறென்று அறிந்துகொண்டதுபோல. பள்ளிவாசலின் அகன்று பரந்த கதவுகளேயில்லாத கூடத்தின் சுவர்களின் மீது கட்டுப்பாடில்லாதபடி மோதித் தெறிக்கிறது காற்றும் வவ்வால் கூட்டங்களும். அவுஸ் தண்ணீரின் மெலிதான சலசலப்பு மாபெரும் ஒலியாக மாறிக் கூட்டத்தினூடே அலைபாய்ந்தபடியிருக்கிறது. மோதினார் பாவா இங்கே நடப்பது எதுவும் தனக்குச் சம்பந்தமில்லாத ஒன்று என்பதுபோல ஒலுச்செய்துவிட்டுத் தயாராக நகரா மேடையருகாக நின்றபடி கடிகாரத்தில் பாங்குசொல்லும் நேரத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருந்தார்.

அவளைக் காதர் தன் இஷ்டத்திற்குப்போகச் சொன்னதில் நாட்டாண்மைக்கு வருத்தமும் கோபமும் உண்டாயிற்று. பேச்சு நடந்து கொண்டிருக்கும்போது அவன் அவளை எப்படி அனுப்பலாம் என்ற யோசனையுடன் முத்தவல்லியின் முகத்தைப் பார்த்தார். அவர் முகத்திலும் இந்த எண்ணத்தின் சுவடு தெரிந்தது. இருந்தாலும் காதரைப் போன்ற ஊரின் முக்கியமான ஆளை எதிர்த்துக் கொண்டிருந்தால், நிறைய பிரச்னைகள் வரும் என்பதனால் இருவருமே பதில் பேசாமல் இருந்தார்கள். அதோடு காதரின் தந்தை கட்டித் தந்ததுதான் இந்தப் பள்ளிவாசல். அவனுக்கு இதையொட்டி ஊரில் பெரிய கவுரவமும் மதிப்பும் இருக்கிறது.

காதர் மறுபடி எல்லோரையும் பார்த்துக் கறாரான குரலில், “சரி, நடந்ததை விட்டுருவோம். இனி நடக்கறதப் பார்ப்போம், பேசுவோம். இனியும் ஊர்ல இதுமாதிரி பிரச்னை வராம இருக்கணும். அதைத்தான் நாம கட்டுப்படுத்தணும் என்ன?” என்றபடி தன் இடத்தில் போய் உட்கார்ந்து கவனிக்க ஆரம்பித்தான். சுலைமான்

கூட்டத்தினுள்ளிருந்தபடி, “கிழிக்கப்போறாக” என முணுமுணுப்பது தெளிவாக எல்லோருக்குமே காதில் கேட்டது. அவனது முகம் ஆத்திரத்தினாலும் அவமானத்தினாலும் ரத்தம் போலச் சிவந்து கிடந்தது. அவனது முணுமுணுப்பைப் பொருட்படுத்தாதவனாக காதர் அமர்ந்திருந்தான்.

நாட்டாண்மை மூசா பெருமூச்சு விட்டபடி கரகரப்பான தன் குரலைச் செருமியபடி, “சரி, எல்லாரும் ஸபூர் செய்ங்க” என்றவர், “இனியும் நம்ப ஊர்ல இது மாதிரி அசிங்கம் நடக்காம இருக்கறதுக் குண்டான யோசனைகளச் சொல்லுங்க! அப்பிடியே செய்வோம்” என்றார்.

“இதுக்கெல்லாம் என்ன யோசன இருக்குது, சொல்லறதுக்கு? பொம்பளைகள இன்னுங்கொஞ்சம் கட்டுப்பாடா வக்கிறது ஆம்பளைக பொறுப்பு. வெளிய தெருவுலயோ ஊர்களுக்கோ பொண்டுகளத் தனியா போகவிடாதிங்க, முக்யமா சினிமாவுக்கு! ராத்திரிக்கோ, பகலைக்கோ நம்ப வீட்டுப்பொண்ணுக அறுதியா போகவே கூடாதுன்னு சொல்லிக் கட்டுப்பாடு விதிங்க” என்று தன் கருத்தைச் சொன்னார் பேஷ் இமாம். அவர் எப்போதாவதுதான் எதையாவது சொல்வார். அது நல்லதாகத்தானிருக்கும். அங்கிருந்தவர்களில் பெரும்பாலானவர்களுக்கு அவர் சொல்வதே சரியெனத் தோன்றிற்று. அதை அவர்களது முகக்குறிகளின் வழியே உறுதி செய்து கொண்ட நாட்டாண்மை, “பேஷ் இமாம் சொல்றது ரொம்ப சரி, இனிமே நம்ப வீட்டுப் பொண்ணுக யாரும் அனாவசியமா வெளிய போகக்கூடாது. குறிப்பா, சினிமாவுக்கே போகக் கூடாது. இத யாரும் மீறுனாங்கன்னா, தண்டனை என்னாங்கறது உங்களுக்கே நல்லாத் தெரியும்” என்று சொல்லி நிறுத்தினார். கூட்டத்திலிருந்து எதிர்ப்புக்குரல் எதுவும் வராததில்

திருப்தியடைந்தவராக, "சரி, கூட்டம் முடிஞ்சிருச்சு" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து எழுந்தார். வளவளவென்று நேரத்தை இழுக்காமல் கூட்டத்தைச் சுருக்காக முடித்துவிட்ட திருப்தியோடு.

பள்ளிவாசலை விட்டு அவசரமாக வெளியே வந்த காதரின் பின்னாலேயே வந்த சுலைமான், "ஏன் மாமு இப்பிடிப் பண்ணிட்டிங்க, அந்தப் பொம்பளை இம்புட்டுப் பேசியும் சும்மா விட்டுட்டிங்களே?" தாளவியலாத ஆதங்கத்துடன் வருத்தப்பட்டான். "பாருங்க, இனிமே ஊருல ஒரு ஐய்யப்பயலுக நம்பள மதிக்க மாட்டானுக. கேவலமா பாப்பானுக" என்று சொல்லி உணர்ச்சி வசப்பட்டான். அவனது சிவந்த முகமும் கூர்மையான துடிக்கும் மூக்கும் காதருக்கு மிகுந்த வருத்தத்தை உண்டாக்கிற்று. "என்ன செய்றது சுலைமான். ஊர் உலகத்துல அப்பப்ப இப்பிடி ஒரு அவகேடு நடக்கத்தான் செய்யும். அதுக்காக நாமளும் நம்ப கட்டுப்பாட்ட மீறி நடந்துக்கறது முறையில்ல" என்று அவன் தோளைத்தொட்டு ஆறுதலாக அழுத்தி, "ஸபூர் செய்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து அகன்றான். அவனது முகம் சொல்ல வொண்ணாத துயரத்திலும் குழப்பத்திலும் ஆழ்ந்திருந்தது.

சுலைமான் எதற்காக இத்தனை ஆத்திரப்படுகிறான் என்கிற கேள்வியினூடே அதிலுள்ள நியாயத்தையும் ஒப்புக்கொள்ளத் தானே வேண்டியிருக்கிறது என்று யோசித்தான். எவ்வளவுதான் சமாதானப்படுத்திக் கொள்ள முயன்றாலும் பாத்திமா செய்தது எத்தனை கேவலமான காரியம். எதற்காக அவள் இப்படிச் செய்தாள் என்கிற கேள்வி திரும்பத்திரும்ப மனதிற்குள்ளாக எழத்தான் செய்தது. றைமாதான் அதிகமாகவே புலம்பிக்கொண்டிருக்கிறாள். அவளுக்குக் கவலையெல்லாம் இலியாஸையும் நூரம்மாவையும் தவிக்கவிட்டுவிட்டுப் போனது குறித்துத்தான்.

காதருக்குத் திடீரென தன் மனைவியின் மீதும் அவளது சுபாவம் குறித்தும் பெரும் மரியாதை உண்டாயிற்று. பாத்திமாவின் குடும்பம் பற்றிய அவளது பொறுப்பும், அக்கறையும் வேறு யாருக்கு வரும்? அவளது மென்மையான மனதை வஹிதாவின் திருமணத்தை ஒட்டி தான் ரொம்பவும் நோகடித்துவிட்டதாகக் கவலைகொண்டான். அவளது அபிப்ராயத்தைத் துளியளவுகூட கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் அலட்சியப்படுத்திவிட்டோம் என்கிற குற்றவுணர்வு சில நாட்களாகத் தன்னைத் துன்புறுத்துவதைப் பொருட்படுத்தாமலிருக்க ரொம்பவும் பிரயாசை கொள்ளவேண்டியிருப்பதை யோசித்தான். தனக்கு ஏதோ ஒரு வருத்தம் அவளையொட்டி இருந்தாலும் கூட இப்படி அலட்சியப்படுத்துவது எவ்வகையில் நியாயமாக இருக்க முடியும்? அவன் மனம் தாங்கவியலாத வருத்தத்தில் மூழ்கியிருக்க, நேராக வீட்டை நோக்கிச் சென்றுகொண்டிருந்தவனுக்கு முதல்நாள் இரவு நடந்தது நினைவுக்கு வந்தது. காலை நொண்டிய படி படுக்கையறைக்குள் வந்த றைமாவை, “என்ன செய்யுது?” அக்கறையாகக் கேட்டவனிடம் பாத்திமா, “இல்லெயில்லையா, தன்னால வேலை பாத்துக் கால் வலிக்கிது” என்றபடி சாவகாசமாக வந்து படுக்கையில் அமர்ந்தவள், படுக்கையை ஒட்டியிருந்த ஷெல்பைத் திறந்து கால்வலி மருந்து பாட்டிலை எடுத்து கால்முட்டி வரை புடவையைத் தூக்கிவிட்டுவிட்டுத் தடவ ஆரம்பித்தாள். காதர் மௌனமாக அவளையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு பாட்டிலைத் தன் கையில் எடுத்து, “நீ படு. நான் தடவி விடுறேன்” என்றான் பரிவுடன்.

“அதெல்லாம் வேணாங்க! நான் தடவி முடிச்சுட்டேன். உங்க கையை வேற அழுக்காக்க வேணாம்.” உறுதியாக மறுத்தவளது முகம் ஒரு சலனமுமின்றி அமைதியாக இருந்தது ஏனோ இவனை

வருத்தமுறச் செய்தது. அறையில் பரவியிருந்த விடிவிளக்கின் ஒளியிலும் கூட தெளிவாகத் தெரிந்த அம்முகத்திலிருந்து அவள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாள் என்பதை அறிந்து கொள்ள முடியாத குழப்பத்தில் படுக்கையின் ஓரமாகச் சரிந்து படுத்தவன் அவளது இறுக்கம் எதனை ஒட்டியதாக இருக்கக் கூடும் என்பதைக் கணிக்க முயன்றான். தன்னிடத்தில் ஒரு வார்த்தை கூட கடுமையாகப் பேசாமலேயே எப்படி இத்தனை பெரிய வருத்தத்தைத் தனக்குள் உண்டாக்கிவிட அவளால் முடிகிறது என்கிற எண்ணம் தோன்றிற்று. மருந்தின் நெடி அறை முழுக்கப் பரவி மணம் வீசிற்று. வலது கால் முட்டியிலிருந்து குதிகால்வரை அழுத்தமாக மருந்தைத் தேய்த்து நீவி விட்டவள் மெதுவாக எழுந்து ஷெல்பைத் திறந்து மருந்து பாட்டிலை வைத்து மூடினாள். பிறகு கெந்திக் கெந்தி நடந்து அறைக்கதவைத் திறந்து வெளியே சென்றவள் மறுபடி வரும்பொழுது தண்ணீர் சொம்போடு உள்ளே நுழைந்தாள். தனது உள்ளங்கையில் அந்தச் சொம்பை ஏந்தியபடி அவனருகாக வந்து நின்று, “இந்தச் சொம்பை எடுத்து டேபிள்ல வைங்க” என்றாள்.

காரணம் புரியாமல் எட்டி அவளது கையிலிருந்த சொம்பை வாங்கியவன் டேபிளின் மீது அதனை வைத்து அருகிலிருந்த சிறிய தட்டினால் அதை மூடிவிட்டு மறுபடியும் படுக்கையில் படுத்துக் கொண்டான்.

“கை கழுவிட்டேன். இருந்தாலும் மருந்துவாடை அடிக்கும். சொம்போட வாய்ப் பகுதியில விரல்படக்கூடாதுன்னுதான் உங்களை எடுத்து வைக்கச் சொன்னேன்.” தன்பாட்டுக்கு விளக்கம் சொல்லிவிட்டு அவனருகாகப் படுத்துக் கொண்டாள். அவள் தூங்குவதற்காகக் காத்திருந்தவன் தூங்கிவிட்டதை உறுதி செய்து கொண்டு மெதுவாகப் படுக்கையிலிருந்து எழுந்து அவளது கால்

அருகாகச் சென்று, மிருதுவாக வலதுகாலை எடுத்துத் தன் மடியின் மீதாக வைத்து இதமாகப் பிடித்துவிட ஆரம்பித்தான். ஏதோ மிகப் பெரிய தவறொன்றினைச் செய்துவிட்ட குறுகுறுப்பு அவனைப் பாடாய் படுத்திற்று.

அவசரப்படாமல் மெதுவாக அவளுக்குத் தன் பொறுப்பினை உணரச்செய்திருந்தால் இப்படி ஆகியிருக்காதோ? குழப்பத்தில் மூழ்கியவனாகக் காலை பிடித்துவிட்டுக் கொண்டிருந்தவனது கைகளை யாருடைய கைகளோ அழுத்தமாகப் பற்றி தன் நினைவுக்குக் கொண்டுவர அவன் பார்த்தான். றைமாதான் எழுந்து அமர்ந்து அவனது கைகளைப் பற்றியிருந்தாள். “வேணாங்க, இப்ப வலிக்கலை” என்றவளிடம், “படுத்துத் தூங்கு” என்று பரிவோடு சொன்னவனது தோள்களின் மீது சட்டெனெ விழுந்து அவனை அணைத்துக்கொண்டு தேம்பித் தேம்பி அவள் அழத் துவங்க, அவ்வழுகையில் தேங்கியிருந்த இயலாமையைத் தாளவியலாமல் மௌனமாக அவளை ஆறுதல் படுத்த ஆரம்பித்தான் அவன்.

“என்ன காதரு, எங்கெ இந்தப் பக்கம்?” யாருடைய குரலோ அவனை இவ்வுலகத்திற்கு கொண்டுவர யாரு என்று நிமிர்ந்து பார்த்தான். தன் கடையையும் தாண்டி ஊர்முடிவில் இருந்த யூனூஸின் பெட்டிக்கடை வரை வந்து விட்டதையும், அவன் எதையோ பொட்டலம் மடித்தபடி இவனிடம் பேசுவதையும் கண்டு, “ஒண்ணுமில்லேண்ணே, சும்மா இப்புடி காலார நடக்கலாம்னுட்டு” என்றபடி திரும்பி தன் கடையை நோக்கி நடக்க ஆரம்பிக்கையில், மஃரிபு தொழுவதற்கான நேரம் வந்துவிட்டது ஞாபகம் வரப் பள்ளியை நோக்கிப் பக்கவாட்டு பாதையில் திரும்பிச் செல்லத் துவங்கினான். வானில் அந்தி வெயில் மறைந்து இருட்டியிருந்தது.

# 32

நேற்றிலிருந்தே ஆமினாவைப் பயம் பிடித்தாட்டிக் கொண்டிருந்தது என்பதை பிர்தவ்ஸ் அவளது முகத்தை வைத்தே அனுமானித்தாள். சொஹ்ராவின் வீட்டு வேலைக்காரி பாத்திமா ஒருவனோடு ஓடிப்போனதும் அங்கு பள்ளிவாசலில் நடந்த விஷயங்களும் ஆமினாவை வந்து எட்டியிருந்தன. பிர்தவ்ஸும் கூட நல்ல குழப்பத்தில் இருந்து கொண்டிருந்தாள். அங்கு நிகழ்ந்த சம்பவங்களுக்கு அம்மாவின் செயல்பாடு என்னவாகயிருக்கும் என்பது இவளுக்கு ஓரளவு கணிக்கக் கூடியதாக இருந்தது. இனி மறந்தும்கூட அவள் தன்னைத் தனித்திருக்க விடப்போவதில்லை என்பது உறுதிபட, அவளுள் வருத்தமும் வேதனையும் மண்டியது. சிவாவுடனான உறவு அம்மாவின் திடீர் கண்காணிப்பினால் தடைபடலாம் என்கிற எண்ணம்தான் அவளை அலைக்கழித்தது.

சிவாவின் நினைவு வந்த உடனேயே அவளுக்குள் மகிழ்ச்சி அரும்பிற்று. தனக்கு இனி எக்காலத்திலும் மகிழ்ச்சியென்பதே இல்லை, நடைப்பிணமாக மட்டும்தான் எஞ்சிய காலத்தை வாழ வேண்டும் என்றிருந்த நிலையில், அவனை இங்கு அனுப்பி வைத்தது யார்? அந்த அல்லாவைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்? அவனுடைய நாட்டமின்றி எதாவது இந்த துனியாவில் நடக்குமா? தவறு என்றால் அவனை அல்லாவே இங்கு அனுப்பி வைத்திருப்பானா, என்றெல்லாம் நினைத்துத் தன்னை ஆறுதல்படுத்திக் கொண்டாள். அவளுக்கும்கூட இன்னதுதானென விளங்கிக் கொள்ள இயலாத ஒரு விதமான பயத்தின் சுவடுகள் உள்ளே பதியத் தொடங்கியிருந்தன. அவளுக்கும் சிவாவுக்கும் இடையேயான உறவினை ஒரு நீர்க்குமிழியின் நிச்சயமற்ற

தன்மையுடன் நினைத்துச் சோர்வுற்றாள். எந்நேரமும் உடைந்துவிடக் கூடுமென்கிற பயத்தின் சாயல் ஏற்கனவே அவளிடம் இருந்தாலும்கூட, நேற்றிலிருந்து அது அதிகமாகி விட்டிருந்ததை அவளால் தாங்கிக் கொள்ளவே இயலவில்லை. ஒருவேளை அவனிடமிருந்து பிரிய நேரிட்டால் . . . அவளால் ஒரு முடிவுக்கும் வரமுடியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயமாகத் தெரியும் அவளுக்கு. தற்கொலை செய்து கொள்ள மட்டும் அவளால் முடியாது. அவளுக்கு இந்த உலகில் வாழ வேண்டும். அதிலுள்ள சந்தோஷங்கள் அனைத்தையும் அடைந்து தீர வேண்டும். யாருக்காகவும் எதன் பொருட்டும் இந்த உலகிலிருந்து அவள் போய் விடமாட்டாள். அதே சமயம் சிவாவும் வேண்டும். அவனில்லாமல் அவளுக்கு வாழ்க்கையை நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. அவனுக்கும் அப்படித்தான். அதைப் பல முறை அவனே சொல்லியிருக்கிறான். ஆனால் எப்படி என்பதுதான் இருவருக்குமே புரிவதில்லை.

ஒருமுறை அவள் அவனது தோளில் சாய்ந்து இருந்தபோது கேட்டாள், "சிவா, நீங்க என்னை விட்டுட்டுப் போயிட மாட்டிங்க இல்லெ?" என்று. அவன் தன் உள்ளங்கையில் அவளது முகத்தைத் தாங்கியபடி கேட்டான், "ஏன் பயமாயிருக்கா?" அவனது கண்களிலும் அது குறித்த கேள்வியும் பயமும் ஒளிந்து அலைவதை அவளுக்குப் பார்க்க முடிந்தது. "ஆமாம்" என்றபொழுது அவளது கண்களிலிருந்து நீர்வழிந்தோடி அவனது உள்ளங்கையில் விழுந்து சிதறியது. அவன் அவளது முகத்தைத் தன் மார்போடு இறுக்கிக் கொண்டபடி சொன்னான், "நீ பயப்பட எதுவுமில்லை." அந்நேரத்தில் அவனுக்குத் தன்னையும் அவளையும் ஏமாற்றிக்கொள்ளும் ஒரு வார்த்தையாக மட்டுமே அது இருந்தது. அவள் கேட்டாள்: "எப்படி?" அவனுக்கும்கூட பதில் சொல்லத் தெரியவில்லை.

இன்னொரு நாள் சொன்னான், “நானொரு முஸ்லிமா பிறந்திருக்கக் கூடாதா?” ஏன் என்று கேட்டவளிடம், “உன்னை என் இரண்டாவது மனைவியாக மணம் செய்யத் தடை இருந்திருக்காது இல்லையா” என்றான். அவள் அவநம்பிக்கையோடு சிரித்துக் கொண்டாள். சொல்ல என்ன இருக்கிறது என்பது மாதிரி.

இந்த உலகம் ஏன் இப்படி இருக்கிறது? இரண்டுபேர் ஒருத்தரை ஒருத்தர் விரும்பினால் யாருக்கென்ன? சிவா முஸ்லிமாக இருந்தால் இரண்டாவது திருமணம் செய்து கொள்ளலாமாம், இந்துவாக இருப்பதால் முடியாதாம். அவளுடைய குழப்பமுற்ற மனதிற்கு எதையுமே கிரகித்துக் கொள்ள முடியவில்லை. சிவாவுக்கு ஜெயாவையும் பிடிக்கும், என்னையும் பிடிக்கும். ஏன் ஒரு மனிதன் ஒரே சமயத்தில் இரண்டு பேரை விரும்ப முடியாது? அவனிடமிருக்கும் ஏராளமான பிரியத்தை இரண்டு பேரிடமும் அவனால் காட்ட முடியும் எனில் யாருக்கு என்ன கஷ்டம்? இவளுக்கு அதில் ஒரு கஷ்டமுமிருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் ஜெயா அதை ஏற்றுக் கொள்ளப் போவதில்லை என்பது இவளுக்குத் தெரியும். தான் மட்டும் இவ்விஷயத்தை ஏற்றுக்கொள்வதென்பது தனது பெருந்தன்மையினால் இல்லையே? அவன் இரு பெண்களிடம் அன்பு செலுத்துவதைத் தன்னால் ஏற்றுக் கொள்ளமுடியும் என்றும் தோன்றுகிறது. இதற்கெல்லாம் என்ன முடிவு இருக்கப் போகிறது. அவளுக்கு மண்டைக்குள் ஒரு விதமான குடைச்சல் மிகுந்து மனதை அலைக்கழித்தது. காலம் மேற்கொண்டு நகராமல் அப்படியே இதே இடத்தில் நின்று விடக் கூடாதா என்கிற ஏக்கம் படர்ந்து அவளை மூடிற்று. குறைவில்லாத நினைவுகளும் கற்பனைகளும் மிகுந்த அந்த நாளின் மீது அவளுக்குக் கோபமும் வெறுப்பும் உண்டாயிற்று. அவளது மனதெங்கும் பதிந்திருக்கும் அவனைப் பற்றிய நினைவுகளை எந்த ஒரு

பயமும் குழப்பமும் அழிக்கப் போவதில்லை என்பதில் அவள் உறுதியாக இருந்தாள்.

# 33

*திருமணத்திற்கு முதல் நாளைய முருதாக்கள் பாத்திஹாவுக்கென மதியச் சாப்பாடு வேலைகள் நடந்து கொண்டிருந்தன. பாத்திமா இருந்து பொறுப்பாகப் பார்த்து முடிக்க வேண்டிய வேலைகள் றைமாவின் தலையிலும் சொஹ்ராவின் தலையிலும் விழுந்திருக்க சொஹ்ரா வேலை பார்த்தபடியே முனகினாள். "பள்ள முண்ட கல்யாணத்தை முடிச்சுக்கிட்டுப் போனாளா?" றைமா அவளருகில் வந்து நின்று உதட்டைக் கடித்தாள். "உஸ்! கூலியாளுக வீட்டுக்குள்ள இத்தினி பேர் நடமாடுறப்போ ஜாதியச் சொல்லி இழிவாப் பேசாத" என்று சொல்லிவிட்டுப் போனாள். சொஹ்ராவும் திடீரென நினைவு வந்து சுதாரித்துக் கொண்டு சுற்று முற்றும் பார்த்துக் கொண்டாள்.*

*காலை பதினொரு மணியிலிருந்தே ஊர்ப் பெண்கள் ஒவ்வொருவராக வந்து விட்டுப் போக ஆரம்பித்தார்கள். வருபவர்களுக்கெல்லாம் சர்பத், வெற்றிலை பாக்கு கொடுத்துக் கவனிக்கும் பெரிய பொறுப்பு ராபியாவுக்கும் மதினாவுக்கும் கொடுக்கப்பட்டிருந்தது. வஹிதா மிக அழகாக அலங்கரித்து நாற்காலியில் உட்கார வைக்கப்பட்டிருந்தாள். உடல் முழுவதும் பூட்டியிருந்த நகையும் பட்டுப்புடவையும் அவளை ஒரு இளவரசி மாதிரி காட்டிற்று. அவள் ராஜாராணிக் கதைகளிலும் விக்கிரமாதித்தன் கதைகளிலும் வரக்கூடிய இளவரசியைப் போலிருப்பதாக நினைத்து மகிழ்ந்து கொண்டாள் ராபியா. அவளது அழகைப் பார்த்துப் பார்த்து ராபியாவுக்குப் பெருமை தாங்கவே முடியவில்லை. அவள் நேற்றே பெட்டியில் துணிமணி எடுத்து வைத்துவிட்டாள், நாளை வஹிதாவுடன் தோழியாக ஊருக்குப்*

போவதற்கு. அங்கு பிர்தவ்ஸ் சித்தியை வேறு பார்க்கப் போகிறாள். இதை நினைத்ததுமே அவளால் சந்தோஷத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. மதினாவுக்கும் அவளோடு வர ஆசைதான். ஆனால் அவளைச் சுலைமான் அனுப்ப மாட்டான் என்பதனால் அவள் பேசாமலிருக்க வேண்டியிருந்தது. ராபியா சொன்னாள், "இந்த நேரத்துலதானா உங்கண்ணன் ஊருக்கு வரணும்?" என்று. சுலைமானை நினைத்தாலே அவளுக்கு எரிச்சலாக இருந்தது. அவன் வந்த பிறகு மதினாவை வீட்டிலிருந்து வெளியே அனுப்புவதேயில்லை. அவள் ராபியாவின் வீட்டிற்கு வந்தால் கூட, "எருமைமாடு மாதிரி வளர்ந்திட்ட இல்ல, பெறகு ஏன் ஊர் சுத்துற?" என்று சொல்லித் திட்டுவான்.

அடுப்படியிலிருந்து நெய்ச்சோற்றின் வாசனை எழுந்தது. ராபியாவுக்குச் சாப்பிட வேண்டும் போலிருந்தது. அதொன்றும் பெரிய விஷயமில்லையே, அப்புறம் பாத்துக்கலாம் என்று அந் நினைப்பை ஒதுக்கிவிட்டுப் பந்தலில் போய் உட்கார்ந்து கொண்டாள். ஊர்ப் பெண்கள் ஒவ்வொருவரும் நிறைய நகை போட்டு, பட்டுப் புடவை கட்டி துப்பட்டி போட்டுக் கூட்டம் கூட்டமாக வந்து கொண்டிருந்தார்கள். வீடெங்கும் பேச்சு சப்தம் சிரிப்பொலி நிறைந்து ராபியாவின் மனதில் களிப்பூட்டிற்று.

தாவணியைச் சரியாக இழுத்து விட்டுக் கொண்டாள். அது ஏனோ நெஞ்சிலிருந்து நழுவி விழுந்து கொண்டேயிருந்தது. அம்மா பார்த்தால் திட்டுவாள். அம்மாவின் நினைவு வந்தால்மட்டும் அவள் கை தானாகவே மாராப்பை இழுத்துவிடப் போகிறது. மதினாவுக்கு அவள் அண்ணன் என்றால் எனக்கு அம்மா என நினைத்துக் கொண்டவளுக்கு அஹமதுவின் நினைவு திடீரென வந்தது. அவனைக் காணவில்லையே? எங்கே போயிருப்பான் என்று நினைத்துக்

கொண்டாள். யாரோ தன் அருகில் வந்தமர்ந்ததும் அவள் தன் நினைவுகளிலிருந்து மீண்டாள். மதினாதான். "என்ன, உனக்கு உங்க ஊர் ஞாபகம் இன்னைக்கே வந்திருச்சா?" என்று சொல்லிச் சிரித்தவள், ராபியாவின் தோளில் கைபோட்டு அவள் மீது ஆதரவாகச் சாய்ந்து கொண்டாள். ராபியாவுக்கு அவள் தன்னோடு நெருக்கமாக உட்கார்ந்திருந்தது கூச்சத்தை உண்டு பண்ணினாலும் பிடித்திருந்தது. அவளுக்கு மதினா மீதிருந்த அன்பு இன்று ரொம்பவும் அதிகமாகி விட்டது போலிருந்தது.

"ராபியா, ராபியா" என்று சொஹ்ரா கூப்பிட்டுக் கத்துவது கேட்டதும் திடுக்கிட்டுத் தன் நிலைக்கு வந்தவள், "இதோ வர்றேம்மா" என்றபடி எழுந்து ஓடினாள். மதினாவும் கூட அவள் பின்னே எழுந்து போனாள். அவர்கள் இருவரையும் பார்த்ததும் சொஹ்ரா சிடுசிடுத்தாள். "கல்யாண வீட்டுல ஆளுக்கொரு வேலையப் பாப்பிங்களா, இல்லெ உக்காந்து கதை பேசுவிங்களா? நாங்க பாத்திமாவும் இல்லாம கெடந்து சீரழியுறமே, பொம்பளப் பிள்ளைக்கிப் பொறுப்பு வேணாம்?" என்றவள், "சரிசரி ஓடிப்போய் அடுப்படியிலிருந்து சர்பத் கொண்டு வந்து வர்றவுகளுக்கெல்லாம் குடுங்க" என்று இருவரையும் வேலை ஏவிவிட்டு அங்கிருந்து நகர்ந்தாள். சேரில் அமர்ந்திருந்த வஹிதா இவர்களைப் பார்த்துச் சிரித்தாள். இவர்களும் பதிலுக்குச் சிரித்து விட்டு அடுப்படிக்குள் ஓடினார்கள். சொஹ்ரா, றைமாவின் உதவிக்கென நபிஸாவும் மும்தாஜும் காலையிலேயே முழு அலங்காரத்தோடு வந்துவிட்டார்கள். மதியம் அஸரத்துகள் மற்றும் முக்கியமான ஆண்கள் எல்லோரும் வந்து பாத்திஹா ஓதிவிட்டுச் சாப்பிட்டார்கள். பிறகு றைமா தன் தாயார் தாஹிரா பீவியை நினைத்துச் சாப்பிட அழைத்திருந்த பத்து வாவரசிப்பெண்களும் சாப்பிட அமர்ந்தார்கள்.

அவர்களை றைமா தானே முன் நின்று கவனித்துச் சாப்பிட வைத்து, வாவரசிப்பூவும் வெற்றிலையும் தந்தாள். சாப்பாட்டு வேலையெல்லாம் முடிந்த பொழுது நேரம் மூன்றைத் தொட்டிருந்தது. வைகாசி வெயில் தன் உக்கிரத்தைக் கொஞ்சம்கூட குறைக்காததைப் பொருட்படுத்தாது ஊர்ப் பெண்கள் கூட்டத்தினால் வீடு நிறைந்திருந்தது. அன்றைக்கு எல்லோருக்கும் முக்கியமான பேச்சாக பாத்திமாவின் பேச்சுத்தான் இருந்தது. மாரியாயி, இன்னும் இரண்டு கூலியாட்களோடு சேர்ந்து, குவிந்து கிடந்த பாத்திரங்களையும் அண்டாவையும் முற்றத்தில் போட்டுக் கழுவிக் கொண்டிருந்தாள். அவளைப் பார்க்கும் ஒவ்வொரு பெண்ணின் முகமும் ஒருநொடியாவது ஒருவிதமான கிண்டலான சிரிப்பை வெளிப்படுத்தி மாறும். அதனை மாரியாயியும் சரி, சொஹ்ராவும் சரி, கவனிக்காமலில்லை என்றாலும், அதைப் பொருட்படுத்தும் நிலையில் இல்லை. அதோடு வந்திருக்கும் ஒவ்வொருவரும் உறவுக்காரப் பெண்கள், விருந்தினர்கள் வேறு! அதுவுமின்றி அவர்கள் ஒன்றும் இல்லாத விஷயத்தைக் குத்திக் காட்டவில்லையே?

மும்தாஜ்தான் ஆரம்பித்தாள், “ ஏக்கா, பாத்திமா இல்லாதது ஒங்களுக்குக் கையொடிஞ்ச மாதிரியில்ல இருக்கும்? எப்புடித்தான் கல்யாணப் பொழப்பு முச்சூடும் பாக்கப் போறீகளோ?”

“ஆமா, என்ன பண்ணச் சொல்றே? மனசுக்குக் கஷ்டமாத் தானே இருக்குது. இந்தப் பாவிப்பொம்பள இப்பிடியா பண்ணுவா? கர்மம், பெத்த பிள்ளைய விட்டுட்டு ஓட எப்பிடித்தான் மனசு வருதோ” என்று அங்கலாய்த்தாள் சொஹ்ரா. அவளுக்கு ஆறவேயில்லை. சவுரா சொன்னாள். “அப்பிடி என்னா ஆம்பள மோகம்ன்னுதான் கேட்கிறேன், வெறிபிடிச்சவ! அம்மாடி அம்மாடி, ஒங்க வீட்டுலயும் ரெண்டு ஆம்பளைக இருக்கையில அவுகள எப்பிடி விட்டுவச்சாளோ

போ” என்று சொல்லிக் கன்னத்தில் கைவைத்தாள்.

அவள் சொல்லி முடித்த உடனேயே, “ச்சேச்சே! அப்பிடிச் சொல்லாதீங்க சவுரக்கா. அவள எங்க வீட்டுல ஒரு பொறப்பு மாதிரிதான் எங்க வீட்டு ஆம்பளைக நினைச்சு நடந்துக்குவாங்க” என்று தடுத்துச் சொன்னாள் றைமா. அவளுக்குச் சங்கடமாக இருந்தது. ஏன்தான் இந்தப் பொம்பளைக்கு இப்பிடியெல்லாம் புத்தி போகிறதோ, என்று நினைத்து மனதிற்குள்ளேயே திட்டிக் கொண்டாள்.

“நீ சும்மா இருலே, வக்காலத்து வாங்க வந்துட்ட என்னா? ஒரு பொட்டச்சி, இஸ்லாத்துல பொறந்துட்டு இப்பிடி ஒரு காரியம் பண்ணுறான்னா அதுக்கு எம்புட்டுத் தைரியம் இருக்கணும்? நெனைக்கையிலயே ஒடம்பு நடுங்குதே, அவ செஞ்ச காரியத்த. அப்பிடியா ஆம்பள சொகம் கேக்கும்? கர்மம்! த்தூத்தேறி” என்று வெறும் வாயை முற்றத்தைப் பார்த்துப் பொய்யாகத் துப்பியவள், “கொரங்கு செத்துப்போனா பொழப்புமா கெட்டுப் போகும். வேலையப் பாருங்கடீம்மா” என்று சொன்னாள்.

அவள் சொல்லியதை ஆமோதித்து கூட்டத்திலிருந்த மொத்தப் பெண்களும் ஆளுக்கொன்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். இதுவரை மௌனமாக இருந்த சைனு, “அடி, அதோடயா போச்சு? அந்த நாதாறி முண்டைய பெத்ததுமில்லாம அவ ஆயி நூரம்மா சபையில நம்ப ஊர் ஆம்பளைக மானத்தையெல்லாமுல்ல வாங்கியிருக்கா. என் மகன் சுலைமான் உக்கிப் போயிட்டானே, புள்ள! ரெண்டு நாளா அவன் தூங்கலை, சாப்பிடலை, ஊர் இப்பிடி கெட்டுப் போச்சேன்னு.” அவள் முகம் ஆத்திரத்தாலும் அவமானத்தாலும் சிவந்து கன்றிக் கிடந்தது.

“ஆமாங்கறேன்! கடைவீதியில இனி நம்ப ஆம்பளைகள எவன்

மதிப்பான்? குடியானப் பயலுகளுக்கில்ல கொண்டாட்டமாப் போச்சு. நாமளாவது பொம்பளைக வீட்டுக்குள்ள கிடக்கிறோம். வெளிய போற ஆம்பளைக எப்பிடி வேட்டி கட்டிக்கிட்டுப் போறது, ஊருக்கே இப்பிடி ஒரு கேவலத்தையுமா உண்டாக்கிட்டுப் போவா?" என்ற சவுரா, "ஏன் நபிஸா, ஒம்புருஷன் கடையிலதான அவன் இருந்தான். ஒனக்குக் கூடவா மட்டுப்படலை, அவுங்க ரெண்டு பேரும் பழகுறது?" என்றாள். அவளுக்கு ஒரு சந்தேகம். ஒரு வேளை நபிஸாவுக்கு ஏற்கனவே தெரிந்திருக்குமோ?

அவள் கேட்டதுதான் தாமதம் நபிஸா பதறிப்போனவளாக, "இது என்னது வம்பா இருக்கு? பாத்திமா கூடத்தான் இங்கெ வேலை பாத்தா. அதுக்காக இவுகளுக்குத் தெரியும்னா சொல்றது? நல்லாத்தான சொன்னீங்க" என்று சலித்துக்கொண்டாள். அவளுக்கு ஆத்திரம் கட்டுக்கடங்காமல் போயிற்று. பல்லைக் கடித்துக் கொண்டாள். விட்டா இந்தப் பொம்பளை நான்தான் அவுங்கள ஓடச்சொன்னேன்னுகூடச் சொல்லுவாள் என மனதினுள்ளாகச் சொல்லிக் கொண்டாள்.

"ஆமா, ஓம் புருஷன் தானாமே அந்தச் சிறுக்கிய ஒண்ணுஞ் செய்ய வேணாமுன்னு சொல்லி விட்டது. யாருக்கு இரக்கப்படுறதுன்னு விவஸ்தை வேணாம்? இம்புட்டுப் பேச்சுப் பேசுனவள சும்மா விடலாமா? அடிச்சுக் கொல்லுறதில்ல?" என்றாள் சவுரா.

றைமா பதிலேதும் சொல்லவில்லை. அவளுக்கு எதுவும் சொல்லப் பிடிக்கவில்லை. நேற்றுவரை நூரம்மாவோடும் பாத்திமாவோடும் ஒற்றுமையாக இருந்தவர்கள் இன்று பெரும் பகையாளியாக மாறியிருக்கிறார்கள் என்பது நினைத்துப் பார்க்க முடியாதபடி வியப்பாக இருந்தது. ஏன் இப்படி ஆயிற்று? அவள் யாரோ ஒருவனோடு ஓடிப்போய் விட்டதற்காக ஊர் முழுக்க இத்தனை

கொடிய வெறுப்பு எப்படி உருவாயிற்று அவள்பேரில்? ஒரு கிழவியின் மீது இத்தனை ஆத்திரமும் விரோதமும் எங்கிருந்து வந்தது? தனிப்பட்ட முறையில் யாரையுமே பாதிக்காத போதும் ஒவ்வொருவரிடமிருந்தும் வெளிப்படும் கோபம் எதிலிருந்து ஆரம்பிக்கிறது? இதையெல்லாம் நினைத்து அவளுக்கு வியப்புதான் மிஞ்சிற்று.

“தேடுனதுதான் தேடுனாளே, ஒரு துலுக்கப்பய கிடைக்கல? அந்தச் சிறுக்கிக்கி, ஒரு குடியானப் பயதானா கெடைச்சான்” என்று தன் ஆதங்கத்தையும் வெளிப்படுத்தினாள் சைனு.

நபிஸா ஒன்றுமே பேசவில்லை. இது மாதிரி பிரச்னைகளைப் பேசும் பொழுது நிலை தடுமாறிப் போய் விடுவாள். இப்படி ஒரு தர்ம சங்கடமான நிலை உண்டாகி விட்டதை நினைத்து அவளுக்கு வருத்தமாக இருந்தது. இவர்கள் பேசுவது ஒவ்வொன்றும் தனக்கும் சேர்த்துத்தானோ என்கிற மாதிரி ஒரு உறுத்தல் அவளைப் பின்னிப் பிணைந்திருந்ததனால் உட்காரவும் முடியாமல், பேசவும் முடியாமல் தடுமாறிக் கொண்டிருந்தாள். அவள் முகத்தில் தென்பட்ட கலவரத்தின் சுவடில், இப்பேச்சு நீடித்தால் யாராவது தன்னையும் ஜாடையாகப் பேசும் நிலை உண்டாகும் என்பது அப்பட்டமாகத் தெரிந்ததை மும்தாஜ் கவனித்து ஆர்வமுடன் ரசிக்கத் தொடங்கினாள். அவளுக்கு இப்பேச்சு இதோடு முடிவுறாமல் இன்னும் கூடத் தொடர வேண்டுமென்கிற எண்ணம் மிகுந்திருந்தது. அவள் மனதில் உள்ள விருப்பத்தையும்கூட நபிஸாவால் நன்றாகவே கணிக்க முடிந்தது.

நபிஸா வலுக்கட்டாயமாகப் பேச்சை மாற்ற எண்ணி வாய் திறந்த பொழுது றைமா சொன்னாள். “பொண்ணுக்கு மருதாணி வச்சு விடணும், போடுறவுக யாரு?” அவளுக்கும் கூட பேச்சினைத் திசைதிருப்ப வேண்டியிருந்தது. நபிஸா பெருமூச்சுவிட்டுக்

கொண்டாள், ‘அல்லாஹு’ என்று மனதிற்குள் சொல்லியபடி.

“மருதாணி அரைச்சாச்சா என்ன?” என்றாள் சைனு. “இல்லை இனித்தான் அரைக்கணும். ராத்திரி நேரத்துலதான போடணும். இப்பவே அரைச்சு என்னத்த செய்றது?” என்றாள் சொஹ்ரா. “அதுதானே பாத்தேன், நைட்டுக்குத்தான போடணும், இப்ப என்னான்னு. நானே கூட போட்டு விடுறேன் பொண்ணுக்கு” என்றாள் மும்தாஜ்.

“வேணாண்டியம்மா, ஒம்புருஷன் வெளிநாட்டுலருந்து வந்திருக்காரு. ராத்திரியில நீ இங்கெ வந்து ஒக்காந்துக்கிட்டா, அவருக்கு யாரு பதில் சொல்றது?” என்று கிண்டலாகச் சிரித்தாள் சொஹ்ரா. “ஆமா, தெனமும் கொஞ்சிக்கிட்டு இருக்கற மாதிரித்தான் பேசுவிங்க. யாருக்கு வலுவிருக்கு, தெனமும் படுக்க” என்று சொல்லிச் சலித்துக் கொண்டாள் மும்தாஜ். “என்னடி இது, ஆச்சர்யமாயிருக்கு! எப்ப வருவாரு, எப்பொ வருவாருன்னு காத்துக் கிடந்ததுமில்லாம இப்பிடிப் பேசுறா. அதுக்குள்ளயா சலிச்சுப் போயிருச்சு?” கிண்டல் செய்து சிரித்தாள் சொஹ்ரா.

“ஒரு ராத்திரிக்கி எத்தினி தடவன்னு யாருக்குத் தெரியும். விடிய விடிய நடந்துருக்குமில்ல? அப்புறம் சலிக்காம” என்றுவிட்டு நமுட்டுச் சிரிப்பை உதிர்த்தாள் நபிஸா. அவள் வேண்டுமென்றே தான் இப்படிச் சொன்னாள். இப்படிச்சொல்வதன் மூலம் மும்தாஜ் சுலைமானுக்காக எப்படியெல்லாம் ஏங்கிக் கிடந்தாள் என்பதை எல்லோருக்கும் உணர்த்திவிட முடியும் என்கிற அற்ப சந்தோஷம் அவளிடத்தில் மிகுந்திருந்தது. வெறும் கிண்டல் மட்டுமில்லை என்கிற மாதிரி அவ்வார்த்தைகளைச் சொல்லி நிறுத்தினாள் அவள்.

மும்தாஜ் அலட்டிக் கொள்வது மாதிரியே தெரியவில்லை. “ஆமா, என்னத்தச் சொல்றது, அவரு வந்த நேரத்துலதானா இந்த பாத்திமா

சங்கதி நடக்கணும்? ராத்திரியெல்லாம் புலம்பியில்ல சாகிறாரு மனுஷன், என்னமோ குடிமுழுகிப் போனது மாதிரி! அவ போனதுக்கு இந்தாளுல்ல ஊர் கெட்டுப் போச்சுன்னு ஒட்டுமொத்தத்துல பொம்பளைகளத் திட்டித் தீக்குறாரு” என்று அங்கலாய்த்துக் கொண்டாள். அவள் சொல்வதும் உண்மைதான். தினமும்கூட சுலைமான் ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தான். ஊரைத் திருத்தணும், நாசமாப் போயிட்டாளுக, தட்டுக்கெட்டுப் போயிட்டாளுக என்றெல்லாம் புலம்பிக் கொண்டிருந்தான். அவனால் ஜீரணித்துக் கொள்ளவே இயலவில்லை. இந்த இழிவை எவ்வகையில் அழிக்கமுடியும் என்கிற ஆவேசமும் யோசனையும் தொடர்ந்து அவனைத் துன்புறுத்திக் கொண்டிருந்தன. என்ன செய்யலாம் என்கிற குடைச்சல் மண்டைக்குள் சுற்றிச்சுழலும். மும்தாஜ் மனதில் நினைத்துக் கொள்வாள், இவனுக்கு மட்டும் நபிஸாவின் விஷயம் தெரிந்ததோ, தொலைத்து விடுவான் என்று!

சில சமயங்களில் தெரிந்தால்தான் என்ன என்று நினைத்துக் குரூரமான சந்தோஷம் கொள்வாள். மறுநிமிடம் இவள் அவ்விஷயத்தைப் பெரிதுபடுத்தும் பட்சத்தில் இரு குடும்பங்களுக்கிடையே உருவாகக்கூடிய பகையினை நினைத்துச் சும்மாயிருந்து விடுவாள். ‘சனியன், யார் எப்படிப் போனால்தான் என்ன? அல்லா பாத்துக்கிட்டுத்தான இருக்கான். நமக்கேன் வம்பு’ என்று.

சொஹ்ரா, ராபியாவை அங்கிருந்து கிளப்பிவிட்டாள், “எந்திரி எந்திரி, பொம்பளைக வாயப் பாக்கறத விட்டுட்டு ஓடு. ஒன் வேலையப்பாரு” என்று! ராபியா அங்கிருந்து போக மனசில்லாமல் சலிப்போடு எழுந்து வஹிதாவைப் பார்த்தபடியே நகர்ந்து போனாள். வஹிதா தங்கையைப் பார்த்து இதமாகச் சிரித்தாள்.

மதினா வீட்டுக்குப் போய் விட்டு வருவதாகச் சொல்லிப் போயிருந்தாள். ராபியா மறுபடியும் வாசலில் வந்து நின்று பந் தலைப் பார்த்துக் கொண்டிருந்தாள். நாலைந்து பேர் ஸ்டூலில் நின்று கொண்டு தட்டியில் ஜரிகைக் காகிதங்களை ஒட்டிக் கொண்டிருந்தார்கள். காகிதங்களின் நிறமும் சலசலப்பும் அழகும் அவளுக்கு ரொம்பவே பிடித்தன. விதவிதமான பூ அலங்காரங்களுடன் கண்ணைக் கவரும் விதத்தில் இருந்தது பந்தல். காலையில் தூங்குமூஞ்சிபோலச் சோம்பிக் கிடந்த பந்தலுக்குத் திடீரென இத்தனைக் கவர்ச்சியும் அழகும் கூடியிருப்பது தங்களால் தான் எனப் பெரும் கர்வத்துடன் அவ்வண்ணக் காகிதங்கள் பீற்றிக் கொள்வது போலிருந்தது அவளுக்கு.

மாரியாயி வீட்டுக்குள்ளிருந்து ஒரு ஓலைப் பொட்டியை எடுத்துக்கொண்டு வெளியில் வந்தாள். அதில் நிறைய குப்பை குவிந்திருந்தது. தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கொட்டுவதற்காக ஆத்துக்குப் போனவள், ராபியா பந்தலோரம் நின்று கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டு ஏதோ ஞாபகம் வந்தது போல, "ராபியா, இங்கெ வா" என்று வாஞ்சையுடன் கூப்பிட்டாள். ராபியா தன் நினைவுக்கு வந்து, "என்ன மாரியாயி" என்று அவளருகில் வந்து நின்று கொண்டாள். "இந்தக் கூடைக்குள்ள ஒரு பொம்மை கிடக்குது. அத வேணாமுன்னு கொண்டுபோய் எறியச் சொல்லி அம்மா சொல்லுச்சு. ஒன்னோடதா பாரு" என்று சொல்லித் தன் தலைமீதிருந்த கூடைக்குள் கையைவிட்டுத் துழாவினாள். கூடையிலிருந்து காகிதங்கள் கீழே தெறித்து விழுந்தன. ராபியா பதற்றத்துடன் அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தாள். மாரியாயியின் உடலிலிருந்து வியர்வை வாடை எழுந்து மூக்கைக் துளைத்தது. அவளுக்குப் பிடிக்கவில்லை என்றாலும் முகத்தைச் சுளிக்காமல் பொம்மைக்காகக் காத்துக் கொண்டிருந்தாள், எதுவாக இருக்கும்

என்கிற ஆர்வத்துடன். “அத்தா எப்படித்தான் மாரியாயி வீட்டிலேயே இருக்கிறாரோ, இவ்வளவு நாற்றத்தில்” என்றும் நினைத்துக் கொண்டாள்.

‘இந்தா கிடைச்சிடுச்சு’ என்றபடி மரப்பாச்சிப் பொம்மையை எடுத்து ராபியாவின் கைகளில் கொடுத்தாள் மாரியாயி. “இதையா அம்மா தூக்கியெறியச் சொன்னாள்!” ஒருநொடி உயிர் போய்விட்டுத் திரும்பி வந்தது ராபியாவுக்கு. அவளுக்கு அஹமது கொடுத்ததல்லவா அது? அவள் அதனை அப்படியே தன் கைகளுக்குள் வைத்து ஒரு நிமிடம் உற்றுப்பார்த்தாள். கம்பீரமான ஒரு ஆணைப் போல நிமிர்ந்து நின்றது அப்பொம்மை. அதன் உயர்ந்த வலுவான கைகளும் நீண்ட கால்களும் நிர்வாணத்தின் அருவெறுப்பை உண்டாக்கக் கூடாதென்கிற எண்ணத்தில் வெறுமனே மேடிட்டிருந்த ஆணுறுப்பற்ற இடைவெளியும்! ஏனோ அவளுக்கு அப் பொம்மையின் பேரில் உள்ள பிரியமும் ஈடுபாடும் எளிதில் விளங்கிக் கொள்ளவியலாததாக இருந்தது. அப்பொம்மையின் மீது சொல்லவொண்ணாத ஆசையோடு தன்னோடு சேர்த்தணைத் தபடி எத்தனையோ நாள் தூங்கியிருக்கிறாள்.

“கர்மம்! பொம்மையப் பாரு. மொட்டக்குண்டி! ஏண்டி சனியனே, ஒனக்கு விளையாட ஒரு பொம்பளப் பொம்மை கிடைக்கல?” என்று முகம் சுளிப்பாள் அம்மா. இவளைப் பொறுத்தவரை அது பொம்மை மட்டுமல்ல, இவள் சொல்வதை யார் காதில் வாங்குவார்கள். இவளுக்கு ஒவ்வொரு நாளும் அப்பொம்மையுடனான உறவும் நெருக்கமும் கூடிக்கொண்டுதான் இருந்தது. இப்போதெல்லாம் யாருக்கும் தெரியாமல், முக்கியமாக அம்மாவுக்குத் தெரியாமல் அதனைத் தன்னோடு வைத்துக் கொள்வாள். சில இரவுகளில் தன் போர்வைக்குள் அல்லது தலையணைக்குள்ளாக என்று. அதன்

ஸ்பரிசத்தில் மயங்கிப்போய் தூங்கத் துவங்குவாள். அவளுக்குச் சில சமயங்களில் சந்தேகம் வரும், இந்தப் பொம்மையை அஹமதுவாக நினைத்துக் கொள்கிறோமோ என்று! அவளது நெஞ்சோடு தலைசாய்த்து அஹமதுவைப் போன்றே உரிமையோடு இரவுகளில் அவளை அணைத்துக்கொள்ளும். இவள் உடலிலிருந்து பரவும் இளம் வெப்பம் அதனுள் பாய்ந்து, அது உயிர்பெற்று இரவு முழுக்க அவளை ஆக்ரமித்திருக்கும்.

# 34

*சமையலறை அம்மியில் அரைபடும் மருதாணியின் மணம் ராபியாவை அங்கு இழுத்துச் சென்றது. மாரியாயிதான் அரைத்துக் கொண்டிருந்தாள். ஓடிப்போய் அவளருகாக நின்று கொண்டவள் கொஞ்ச நேரம் அரைபடும் மருதாணியையும், அம்மியை இழுத்து இழுத்து அரைக்கும் மாரியாயியையும் கவனமாகப் பார்த்தவாறு நின்றாள். மாரியாயியின் வலது கைப்பக்கத்தில், ஒரு பெரிய சில்வர் சகுனில் உருட்டி வைக்கப்பட்ட மருதாணி உருண்டை இருந்தது. இடது கைப்பக்கத்தில் முறத்தில் பாதியளவுக்கு மருதாணி இலை இருந்தது. பாத்திரத்திலிருந்த தண்ணீரை வலது கையினால் தொட்டு அம்மியில் உதறிவிட்டுத் தொடர்ந்து அரைத்தபடியிருந்தவளைப் பார்த்துக் கேட்டாள்.*

*"இம்புட்டையுமா அரைக்கணும், கைவலிக்காது?" அவளது கேள்வியில் இருந்த பரிவு மாரியாயிக்குக் கூடுதலான தெம்பைக் கொடுத்தது.*

*"உம்! அம்புட்டும்தான், எல்லாருக்கும் வேணுமே?" என்றாள். ராபியா தொடர்ந்து, "ஏது இந்த மருதாணி, நீ கொண்டுவந்தியாமே, நல்லா செவக்குமா?" ஆர்வமாகக் கேட்டாள்.*

*"ஆமா, நம்ப தோட்டத்துல மரம் வச்சுருக்கேன் தெரியாதா?" அரைப்பதை நிறுத்திவிட்டுப் பெருமையாகச் சொன்னாள் மாரியாயி.*

*ராபியாவுக்கு சந்தோஷத்தில் மூச்சே நின்றுவிடும் போலிருந்தது. "நீ ஏன் இத்தனை நாளா சொல்லவேயில்லை?" ஆதங்கம் கொப் பளிக்கும் குரலில் கேட்டவள், "இனிமேல அடிக்கடி கொண்டு வந்து குடுக்கிறியா?" என்றாள்.*

"உம், அதுக்கென்ன, நான் மாட்டேன்னா சொல்றேன் எந்தங்கத்துக்கு?" தனது இரு கைகளையும் உயர்த்தி ராபியாவின் முகத்தின் பக்கவாட்டில் தொட்டுத் தன் பொட்டில் வைத்துச் சொடக்கு விட்டாள் மாரியாயி.

"அய்! எவ்ளோ சிவப்பா இருக்குபாரு? உன்னோட கை" அவளது கன்னங்கரேலென்றிருந்த கைகளில் மருதாணியின் சிவப்பைப் பார்த்து வியந்து அவளது வலது கையைத் தன் கைகளில் பற்றிக் கொண்ட ராபியா, தனது இரண்டு உள்ளங்கைகளையும் விரித்துப் பார்த்துவிட்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்தாள். அவளது கையிலிருந்து தன் கையை விடுவித்துக் கொண்ட மாரியாயி, "என்னாச்சு, என்னமோ பெரிய யோசனையா இருக்க மாதிரி இருக்கு" என்றாள்.

"ஒண்ணுமில்ல, நோன்புக்கு போட்ட மருதாணி இன்னமும் கையிலிருந்து அழியவேயில்லை, அதான். இப்ப எப்புடிப் போடுறதுன்னு யோசிச்சுக்கிட்டு இருக்கேன்." வருத்தத்துடன் ஒலித்தது ராபியாவின் குரல்.

"அதுக்கென்ன, நீ அதே பூ மேலயே இப்பவும் பூ வரையச் சொல்லு, சரியாப்போச்சு." அலட்சியமாகப் பதில் சொல்லிவிட்டுத் தன் வேலையைத் தொடர்ந்தாள் மாரியாயி. அவள் சொன்னதுதான் சரியெனப்பட்டது ராபியாவுக்கு. யாரைப்பிடித்து மருதாணி போட என்கிற கவலையுடன் அங்கேயே நின்று கொண்டிருந்தாள்.

"மருதாணி அரைக்கிற இடத்துல ஒனக்கென்னா வேலை? சுத்திச்சுத்தி வந்துக்கிட்டு அரைக்கிறவுகளையும் வேலையக் கெடுத்துக்கிட்டு, மருதாணி ஓடியா போகப்போவுது." அப்பொழுது தான் அங்கே வந்த சொஹ்ரா வெடுக்கெனக் கடிந்து ராபியாவை அங்கிருந்து விரட்டினாள்.

அம்மாவுக்குப் பயந்து அங்கிருந்து நழுவியவள் கல் வாசல்

முற்றத்தில் போட்டிருந்த பந்தலுக்குக் கீழே நாளைய சமையலுக்கென நடந்து கொண்டிருந்த வேலைகளை நின்று கவனித்தாள். ஓலைப்பாய் விரித்து பிரியாணிக்காக வெங்காயம், பச்சைமிளகாய், காய்கறிகள் எல்லாமும் தனித்தனியாகக் கொட்டிப் பரப்பியிருந்தன. கூலிக்கு அமர்த்தப்பட்ட பெண்கள் இரண்டுபேர் அவைகளை அரிந்து உரித்துக் கொண்டிருந்தார்கள். இவள் ஓடியபடியே ஒவ்வொன்றாக எட்டி எட்டித் தாவிக்குதித்ததைப் பார்த்துவிட்டுக் கூலிக்காரப்பெண், “அம்மாடி, மாணே மகளே! கீழ விழுந்துடாதீங்க. பாத்துப்போங்க” என்று சொன்னாள்.

ராபியா அதைக் காதிலேயே வாங்கவில்லை. உடுத்தியிருந்த புதுப் பாவாடை, தாவணி பெருமிதத்தை உண்டு பண்ணுவதாகயிருந்தது. காலில் புதுக்கொலுசு, காதில் புது ஜிமிக்கி வேறு அவளை நிலைகொள்ள விடாமல் செய்து கொண்டிருந்தது.

ஹாலில் வஹிதாவுக்கு நலுங்கு வைப்பதற்கான ஏற்பாடு நடந்து கொண்டிருந்தது. தாம்பாளங்களில் மஞ்சள் தடவிய அரிசி, வெத்திலை பாக்கு, பொடி செய்த வெந்தயம், எண்ணெய், தேங்காய், வாழைப்பழம், சீனி எல்லாமும் தயாராக இருந்தன. மூலையில் லாந்தர் ஒன்றை ஏற்றிவைத்திருந்தார்கள். வீடு முழுக்க கசகசவென்று பெண்கள் கூட்டம் கூட்டமாகப் பாயில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள்.

“நலுங்கு வச்ச கையோட மருதாணி போட்டுவிட்டு வேலைய முடிச்சுரணும்.” சொஹ்ரா தன்பாட்டுக்குச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

“முன்னாலேயெல்லாம் அதிகாலை நேரத்துலதான் நலுங்கு வைக்கிறது வழக்கம். இப்ப மொத நாளு சாயங்காலமே இந்த வேலைய முடிச்சுர்ராக, காலம் மாறிப்போச்சு.” அசுவாரஸ்யமாக முணுமுணுத்தாள் சைனு. அதனை ஆமோதித்த சவுரா, “ஆமா,

அண்ணன் பொண்டாட்டி, மாப்பிள்ளை வீடு உள்ளூரா இருந்தா பொண்ணு வீட்டுலருந்து, இதையெல்லாம் தயார் பண்ணி எடுத்துக்கிட்டு மொத மாப்பிள்ளை வீட்டுக்குப்போய் நலுங்கு வப்போம், பெறகு அவுக எல்லாருமா பொண்ணு வீட்டுக்கு நலுங்கு சுத்த வருவாக, எல்லாமே பஸர் நேரத்துலதான் நடக்கும். இப்ப மாப்பிள்ளையும் வெளியூராப் போச்சு, நாமளே பொண்ணுக்கு நலுங்கு வைக்க வேண்டியதுதான்." ஆதங்கத்துடன் ஒலித்த சவுராவின் குரலைக் கேட்டுவிட்டு, "இதுக்கு ஏன் இப்புடி ஆதங்கப் படணும்?" என்று முணுமுணுத்தாள் மும்தாஜ் நபிஸாவிடம்.

நபிஸாவும், "அந்தக் கிழடுக கெடக்குதுக, யாரு பஸர் நேரம் எந்திரிச்சு இதெயெல்லாம் செஞ்சுக்கிட்டு இருக்கிறது, பொழப்பு இல்லெ, வேலையெ முடிக்காம" என்று சலித்துக் கொண்டாள்.

பெண்கள் கைகளில் பணத்தோடு நலுங்கு சுற்றத் தயாராகக் காத்துக் கொண்டிருக்க, நபிஸா "ராபியா" என்று கூப்பிட்டாள். தூரத்தில் நின்று மதினாவோடு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ராபியா என்னவென்று கேட்டபடி அவளருகாக வந்து நின்றாள்.

"இங்கெ வா, வந்து அக்காவுக்குப் பின்னாடி நில்லு" என்று சொல்லி முக்காலியின் மீது மேற்குநோக்கி உட்கார வைக்கப்பட்டிருந்த வஹிதாவின் பின்புறமாக அவளை நிறுத்தி, "தாவணி முந்தானையை ஏந்திப்புடி நலுங்கு சுத்திக் காசு போடுறதப் புடிக்க" என்றாள்.

"அது என்னாது? அக்காவுக்குப் பின்னாடி தங்கச்சிய நிறுத்தறது" கேலி செய்த சைனு, "மாப்பிள்ளைக்கிச் சுத்துறப்போதான் கொழுந்தியா நிக்கணும். மதினா நீ வா, வந்து வஹிதா பின்னால நில்லு," மகளை அதட்டிக் கூப்பிட்டாள். அம்மாவின் பேச்சைத் தட்ட முடியாத மதினா தயங்கித் தயங்கிப் போய் வஹிதாவின் பின்புறமாக நின்றாள்.

இதைப் பார்த்து மும்தாஜும் நபிஸாவும் ஒருத்தர் முகத்தை ஒருத்தர் பார்த்து அர்த்தத்துடன் சிரித்துக் கொண்டார்கள்.

சொஹ்ரா, றைமாவின் காதில், “எது எப்புடிப்போனாலும் சைனு காரியத்துல கெட்டி” என்று கிசுகிசுத்தாள்.

தலை முக்காடிட்டிருந்த வஹிதாவின் தலையின் முன் புறத்தில் ஒவவொருத்தராக மூன்றுமுறை எண்ணெய் தொட்டுவைத்து அரிசி, வெந்தயப்பொடியைக் கொஞ்சம் அள்ளித் தலையைச் சுற்றிப் போட்டுப் பணமும் போட்டார்கள். பின்புறமாக நின்று தாவணியில் அதனை ஏந்திக் கொண்டிருந்த மதினா, ஒரு விதமான கூச்சத்துடன் நெளிந்து கொண்டிருந்தாள். ராபியா அவளை சகஜமாக்கும் நோக்கத்துடன், ‘சும்மாயிரு, வெக்கப்படாதே’ என்பது போன்ற சமிக்ஞைகளைத் தன் கண்களால் காட்டியபடி இருந்தாள். பெரும்பாலான பெண்கள் வஹிதாவின் கையிலேயே வெற்றிலையில் பணத்தை வைத்துக் கொடுத்துவிட்டு நலுங்கு சுற்றினார்கள். ஒரு சில பெண்களும் நபிஸாவும் மும்தாஜும் சந்தனத்தையும் எண்ணெயையும் வஹிதாவின் முகத்தில் கிண்டலாக அள்ளி அப்பிவிட்டு அவள் முகம் சிவப்பதைப் பார்த்து விழுந்து விழுந்து சிரித்தனர்.

“ஏங்கம்மா, யாராச்சும் நலுங்குப்பாட்டுப் பாடுறது?” றைமா அங்கிருந்தவர்களிடம் ஆர்வமாகக் கேட்க, “அய்யய்யோ நான் மாட்டேன்ப்பா, வெக்கமா இருக்கு” என்று நபிஸாவும் மும்தாஜும் மறுத்துவிட்டு ஒதுங்கிக் கொள்ள, சவுரா, “பொல்லாத வெக்கம்! பச்சை பச்சையா பேச மட்டும் வெக்கம் வராது, தூத்தேறி மொட்டப் புண்டைக” என்று கிண்டலாகச் சொல்லிவிட்டு, “நலுங்கிட வாருமம்மா” என உச்சஸ்தாயியில் பாட ஆரம்பிக்க, கூடியிருந்த பெண்களில் ஒரு சிலரும் அவளோடு சேர்ந்து பாட ஆரம்பித்தனர்.

நலுங்கு சுற்றி முடித்தபிறகு வஹிதாவின் முன்புறமாக ஏழு

பெண்களும் பின்புறமாக ஏழு பெண்களும் நின்றுகொள்ள கீழேயிருந்த தாம்பாளங்களை ஆளுக்கொன்றாக எடுத்துக் கொண்டவர்கள் அதனை வஹிதாவின் தலைக்கு மேலாகப் பின்புறம் நின்று கொண்டிருந்தவர்களின் கையில் கொடுக்க, அவர்கள் அதனை வாங்கி வஹிதாவின் பின்புறமாகத் தரையின் மீது வைத்து விட்டு மறுபடியும் அதனை எடுத்து வஹிதாவின் முன்புறமாக நீட்ட மூன்று முறை இதுபோன்று செய்ததைப் பார்த்துக் கொண்டிருந்த ராபியாவுக்கு, அவர்கள் எரிந்து கொண்டிருந்த லாந்தரை எங்கே அக்காவின் தலைமீது மோதி விடுவார்களோ என்கிற பயம் பிடித்தாட்ட, தனக்குள்ளாகவே சத்தமே வராதபடிக்கு, ‘பாத்து, பாத்து, மெள்ள’ என்று தவிப்போடு முனகிக் கொண்டிருந்தாள். இத்தனை நேரமாக முகத்தில் ஒட்டியிருந்த கூச்சத்துடன் நெளிந்தபடியே தாவணியைப் பிடித்து நலுங்கு அரிசியை வாங்கிக் கொண்டிருந்த மதினாவின் முகத்தைப் பார்த்து சினேகத்துடன் சிரித்தாள். அச்சிரிப்பில் அவளைச் சிரிக்க வைக்க முயலும் தந்திரம் இருந்தது என்பதைக் கவனித்த மதினா வெட்கத்துடன் பதிலுக்கு முறுவலித்தாள்.

சவுரா இன்னும் கூட பாடலை விடாமல் பாடிக் கொண்டிருந்தாள். அவளுக்கு முழுப் பாடலும் தெரிந்திருக்கவில்லை என்பதால் மறுபடி மறுபடி அந்த நாலுவரியையே ராகம்போட்டுப் பாடிக்கொண்டிருந்ததைப் பார்த்த ராபியாவுக்கு, சினிமா தியேட்டரில் படம் துவங்குமுன்பாகப் போடும் பழைய சினிமாப் பாட்டுக்கள் சில சமயங்களில் இப்படித்தான் ஒரே வரி திரும்ப திரும்பப் பாடும் என்பது நினைவுக்கு வந்தது. அஹமது சொல்வான், “கீறல் விழுந்த ரிக்கார்டப் போடுறானுக, வீணாப் போனவனுக” என்று.

ராபியாவுக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது. சவுராவின் முன்பக்கப் பல் ஒன்று விழுந்துபோய் பாடலின் ஓரிரு சொற்கள்

குழறலாக வேறு ஒலித்துக் கொண்டிருந்தது கேட்கவும் பார்க்கவும் ரொம்பவே வேடிக்கையாக இருந்தது. கூட்டத்திலிருந்த பெண்களும் கிண்டலும் சிரிப்புமாகப் பாடலைக் கேட்டு ரசித்துக் கொண்டிருக்க வீடே கலகலப்பில் மூழ்கிப்போயிருந்தது.

நபிஸா முக்காலியில் அமர்ந்திருந்த வஹிதாவைத் தொட்டு எழுப்பிக் கொண்டு போய் ஹாலின் நடுவே விரிக்கப்பட்டிருந்த பாய்களில் ஒன்றின் மீது அவளை உட்காரவைத்தாள். வஹிதாவின் உச்சந்தலை எண்ணெயினால் சொதசொதவென நனைந்து கிடந்ததைப் பார்த்து, "ச்சே! பெயருக்கு விரல் நுனியில எண்ணெயைத் தொட்டு வைக்காம தலையே ரொம்பிக்கிடக்குது" என்று சலித்துக் கொண்ட சொஹ்ரா, எங்கிருந்தோ பழைய துணி ஒன்றை எடுத்துவந்து வஹிதாவின் முகத்தில் வழிந்து கொண்டிருந்த எண்ணெயையும் உச்சந்தலையிலிருந்த எண்ணெயையும் அழுத்தித் துடைத்தெடுக்க முயன்றாள்.

"விடுங்களேன்! புதுப்பொண்ணுகிட்ட தானே விளையாட முடியும்? கேலியும் கிண்டலும் ஒரு நாளைக்கித்தானே? ரொம்பவும் தான் நீங்க" – கிண்டலாகச் சொல்லிய நபிஸாவின் குரலில் எரிச்சலும் வெளிப்பட்டது.

"சரி, சரி! இருட்ட ஆரம்பிச்சிருச்சு. மருதாணியைப் பொண்ணுக்குத் தொட்டு வைங்க எல்லாரும்," றைமா அங்கிருந்தவர்களிடம் அவசரப்படுத்தினாள். பாயில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்த மற்ற தெருவிலிருந்து வந்திருந்த தூரத்து உறவுக்காரப் பெண்கள், "அப்ப நாங்களும் கிளம்புறோம்" என்று றைமாவைப் பார்த்தபடி கிளம்ப ஆயத்தமாக, "இருங்கம்மா, நீங்களும் பொண்ணுக்கு ஒரு துளி மருதாணி வைச்சுவிட்டுட்டுப் போகலாம் இல்லெ?" என்று சொன்னாள். இருட்ட ஆரம்பித்து விட்டதனால் அவர்கள் இனியும்

தாமதிக்கப் போவதில்லை என்பது தெரிந்தாலும், ஒப்புக்காகவேனும் சொல்ல வேண்டியிருந்தது.

“இல்லெல்லெ! இருட்டிப்போச்சு. நாலு தெரு தள்ளிப் போகணும் இல்லெ? நாளைக்கிக் காலையில தாலிகட்ட வர்றோம்.” என்றவர்கள் கைகளில் எடுத்துக் கொண்ட வெற்றிலை பாக்குடன் கிளம்பிச் சென்றார்கள். றைமாவும் சொஹ்ராவும் ‘பிஸ்மில்லா’ சொல்லி முதல் மருதாணியை வஹிதாவின் கைகளில் தொட்டு வைத்த கையோடு நபிஸாவும் மும்தாஜும் ஆளுக்கொரு கையாக எடுத்துத் தம் மடியின் மீது வைத்துக் கொண்டு மருதாணியைப்போட்டு விட ஆரம்பிக்க, அவர்களருகாக அமர்ந்து ஆர்வமாக வேடிக்கை பார்க்க ராபியா சுவரோரமாக நின்று கொண்டிருந்த மதினாவை, ‘நீயும் வா, பக்கத்தில்’ என்பது போல தலையசைத்து அழைத்தாள்.

மதினா தன் தாவணியில் அரிசியோடு சேர்ந்து கிடந்த பணத்தைப் பொறுக்கி எடுத்துக் கொண்டுபோய் றைமாவிடம் நீட்டி. “இதை வாங்கிக்கோங்க” என்றாள். றைமா அவளை ஏற இறங்கப் பார்த்துச் சிரித்தாள். “தாவணி போட்டுட்டா ரொம்ப பெரிய மனுஷியாயிட்டிங்க இல்ல?” என்று சொல்லி அவள் தலையில் செல்லமாகக் குட்டி, “போ, வச்சுக்க” என்றுவிட்டு அடுப்படிக்குள் போனாள். ராபியாவுக்கு நிம்மதியாக இருந்தது. நல்லவேளை, பெரியம்மா வாங்கியிருந்தால் எவ்வளவு அவமானமாக இருந்திருக்கும். அவளுக்குப் பெரியம்மாவைத் தெரியும். வாங்கமாட்டாள் என்று. இருந்தாலும் கவலையோடுதான் இருந்தாள்.

“சரி, ராபியா நான் போகட்டுமா?” என்றாள் மதினா விடைபெறும் எண்ணத்தில். அவளுக்கு அங்கிருக்கவே வெட்கமாக இருந்தது. வீட்டில் போய் அம்மாவை என்ன செய்கிறேன் பார் என்று மனதில் கறுவியபடியே இருந்தாள். ராபியா அவளருகில் வந்து அவள்

தோளைத்தொட்டு ஆதரவாக அணைத்தாள், “இப்ப என்னா அவசரம்” என்றபடி. அவளது தொடுதலில் ஒருவிதமான ஆறுதல் படுத்தும் தன்மையிருந்தது. ஏன் இதுக்கெல்லாம் கூச்சப்படுகிறாய் என்கிற மாதிரி!

“இரு, மருதாணி தர்றேன், போய் வச்சிக்க” என்று சொல்லிவிட்டு ஓடிப்போய் ஒரு வெற்றிலையில் மருதாணியை அள்ளிக் கொண்டு வந்து மதினாவிடம் தந்தாள். “சரி, நான் காலையில வர்றேன். அண்ணன் வந்துரும்” என்றபடி வீட்டிற்குப் போனாள் மதினா.

நபிஸா, ராபியாவைக் கூப்பிடும் சத்தம் கேட்டது. “இந்தா வந்துட்டேன்” என்று சொல்லியபடி அவளிடம் வந்த ராபியாவிடம், “எங்க வீட்டுல அடுப்படி அலமாரியில அஞ்சறைப்பொட்டி கிட்டக்க மேல்தட்டுல ஒரு டப்பா இருக்கு. அதுல, கையில வைக்கிற மருதாணி அச்சு இருக்கும். போயி எடுத்துக்கிட்டு வா” என்று சொன்னாள் நபிஸா.

“சரி” என்றபடி அங்கிருந்து ஓடினாள் ராபியா. பந்தலில் இருட்டை விரட்ட டியூப் லைட் போட்டிருந்தார்கள் பளிச்சென்றிருந்தது. கூலியாட்கள் வரிசையாக சேர் போட்டுக் கொண்டிருந்தார்கள். அஹமது வீட்டில்தானிருப்பான் என்கிற ஆவலோடு அங்கே சென்றாள் அவள்.

அஹமது ஹாலில் உட்கார்ந்து பட்டம் செய்து கொண்டிருந்தான். தரையில் பேப்பரும் விளக்குமாற்றுக் குச்சியும் இறைந்து கிடந்தன. இவளைப் பார்த்ததும், “என்ன ராபியா?” என்று கேட்டான். அவன் குரலில் எப்போதுமில்லாதபடிக்கு ஆர்வம் இருந்தது. இவளுக்கு வியப்பாக இருந்தது. “அது வந்து, உங்கம்மா ஒரு சாமான் எடுத்துட்டு வரச் சொன்னாங்க.” இதைச் சொல்வதற்குள் அவளுக்குக் குரல் நடுங்கிற்று. உடம்பெங்கும் வியர்த்து வழிந்தது. அவன் எழுந்து வந்து

அவளருகில் மிக நெருக்கமாக நின்று கொண்டபடி, “நீ ஏன் இப்படிப் பயப்படற?” என்றவன், அவள் கையைப்பிடித்து அழுத்தி மூடியிருந்த உள்ளங்கையைத் திறந்தபடி, “நீயெல்லாம் மருதாணி போடலையா” என்று கேட்டான். கூச்சமும் பரவசமும் கூடிப்பெருகிய உணர்வுகள் அவளுள் பெருக தத்தளித்தாள். கையை அவனிடமிருந்து பிடுங்கிக் கொள்ளவேண்டும் போலவும் வேண்டாம் போலவும் ஒரே நேரத்தில் தோன்றி என்ன செய்யலாம் எனத்தெரியாமல் சிலையாக நின்று கொண்டிருந்தாள். “ஏய் ராபியா” அவள் கையைச் சொடுக்கி இழுத்துச் சுயநினைவுக்குக் கொண்டு வந்தான் அவன். ஒண்ணுமில்லை என்று தலையாட்டியபடி கைகளை அவனிடமிருந்து பிடுங்கிக் கொண்டாள் அவள்.

“ஏன், தொட்டா கொறைஞ்சி போயிருவியோ?” இடக்காகச் சொல்லிவிட்டுத் தன் இடத்தில் போய் அமர்ந்து கொண்டான். அவளுக்கு வெட்கத்தினால் முகம் சிவந்திருந்தது. எதற்காக முட்டாள்தனமாகக் கையைப் பிடுங்கிக் கொண்டேன். முட்டாள் என்று தன்னைத்தானே மனதிற்குள் திட்டிக் கொண்டாள். பிடித்துத் தானே இருந்தது? எதற்காகப் பிடுங்கிக் கொண்டேன்?

இன்று காலையில் இந்தப் புதுப்பாவாடை தாவணி உடுத்தியதிலிருந்து அஹமதுவிடம் காட்ட முடியவில்லை என்கிற ஏக்கத்திலும் ஏமாற்றத்திலும் இருந்து கொண்டிருந்தவளுக்கு அவன் அருகில் இருக்கும் சமயத்தில் ஏன் இத்தனை மோசமாக நடந்து கொள்கிறோம் என்று எரிச்சலாக இருந்தது. குனிந்து தான் உடுத்தியிருந்த வாடாமல்லிக்கலர் சாட்டின் பாவாடையையும் கறுப்பு நிற புதுத் தாவணியையும் பார்த்தவளுக்கு அவ்வுடை தனக்கு மிகவும் அழகாக இருப்பதாக வீட்டில் அம்மாவும் வஹிதாக்காவும் பேசிக் கொண்டிருந்தார்கள் என்பது நினைவுக்கு வந்தது. நாளைக்கு உடுத்த

பாட்டுப்பாவாடை இருப்பதையும் இந்நேரத்தில் நினைவுக்குக் கொண்டு வந்து ஆனந்தம் கொண்டாள்.

சற்று நேர அமைதிக்குப் பிறகு இவன் ஏன் இப்படித் தன் ட்ரெஸ்ஸைப் பார்த்தது மாதிரி கூட காட்டிக் கொள்ளமாட்டேன் என்கிறான் என்ற கவலையுண்டாக, அவன் தன்னைக் கவனிக்கிறான் என்பதை நிச்சயப்படுத்திக் கொண்ட பிறகுதான் இங்கிருந்து செல்ல வேண்டும் என்கிற ஆவல் கொண்டவளாகத் தொப்பெனத் தரையில் அவனருகாக அமர்ந்து கொண்டாள். அவன் தன்னைக் கவனிக்கட்டும் என்கிற மாதிரி பாவாடையை ஒருமுறை முழங்காலிலிருந்து பாதம் வரை விரல்களால் நீவி விட்டுக்கொண்டாள். பிறகு இரட்டைப் பின்னலில் ஒன்றை எடுத்து முன்புறமாகப் போட்டு அதனைப் பின்னலிட்டாள். கைகளில் அணிந்திருந்த புத்தம் புதிய கண்ணாடி வளையல்களைத் தொட்டு விளையாடி அதிலிருந்து சத்தம் வரச்செய்தாள். அவன் எதையுமே பொருட்படுத்தாதவனாகப் பட்டத்தின் வாலை நறுக்குவதும் சரிசெய்வதுமாக இருப்பது மன வருத்தத்தை உண்டு பண்ண, தான் அவனிடமிருந்து கையைப் பறித்துக் கொண்டது பெரிய தவறோ என யோசித்துப் பதில் தெரியாமல் தடுமாறியவள், அவனைச் சமாதானம் செய்யும் பொருட்டு அவனருகாக நெருங்கி வந்து, “உன்னை ஏன் காணவே இல்லை?” என்று கேட்டாள். அவள் குரல் மிகுந்த ஏக்கத்துடன் இருந்ததை அஹமது கவனித்தான். “நானா? இங்கெதான இருக்கேன்” என்று சொல்லிவிட்டு, அவளையே உற்றுப்பார்த்தான். பிறகு சொன்னான், “நான் நாளைக்கு எங்க மாமா வீட்டுக்கு டவுனுக்கு போறேன். உங்கவீட்டுக் கல்யாணத்துக்கு அவர் வர்றார். லீவு முடிஞ்சுதான் வருவேன்” என்று சொல்லிவிட்டு, மறுபடியும் அவள் முகத்தையே உற்றுப் பார்த்தான். அவன் முகத்திலும் கூட சோர்வு மிகுந்திருந்தது.

தான் சொன்னதைக் கேட்டு அவள் முகம் ஏமாற்றத்தில் கறுப்பதையும் எப்போதும் உற்சாகம் மிளிரும் கண்கள் சுருங்கிப் போனதையும் பார்த்தான். அவளது நெற்றியோரத்தில் சுருண்டிருந்த ஒற்றை முடி காற்றில் மெலிதாக ஆடிக் கொண்டிருந்ததைக் காண அவனுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது. அவள் தனது அம்மாவின் முகச்சாயலோடிருப்பதுபோல எண்ணம் உண்டாகி அவள் பேரில் பிரியம் உண்டாயிற்று. இவளுக்கு ஏன் தன்னை இத்தனை பிடிக்கிறது என்று புரிந்தும் புரியாமலும் நான் போவது இவளுக்கு மட்டுமின்றி, தனக்கும் கூட கஷ்டமாகத் தானிருக்கப்போகிறது என்றும் நினைத்துக் கொண்டான்.

அவள் ஏக்கத்துடன் கேட்டாள்: “நீ போகாமல் இருக்கக் கூடாதா?” அதற்கு மேல் பேச அவளுக்கு வார்த்தை வரவேயில்லை. அவன் சொன்னான், “எங்கம்மாதான் . . .” அவனுக்குத் திடுமென துக்கத்தில் தொண்டை வலித்தது. வார்த்தைகள் துண்டு துண்டாக வெளிவந்தன. அவனுக்கும் இங்கிருந்து போக விருப்பமில்லைதான். அம்மா கேட்டால்தானே? அங்கே விளையாட யார் இருக்கப் போகிறார்கள்? தெருவுக்குப் போகாமல் வீட்டிற்குள்ளேயே அடைந்து கிடந்து பொழுதை ஓட்ட வேண்டும். அதனால்தான் பட்டம் செய்து கொண்டு போகலாம் என்று செய்து கொண்டிருந்தான். இங்கேயென்றால் மலைக்குப் போகலாம். பொன்வண்டு பாப்பாத்தி பிடிக்கலாம். தட்டானை வாலில் நூல் கட்டி விளையாடலாம். தட்டானைக் கொன்று புதைத்து 15 நாள் கழித்துக் காசு இருக்கிறதா என்று தோண்டிப் பார்க்கலாம். இலியாஸ் செய்திருக்கிறானாம். சைக்கிள் ஓட்டலாம். ராபியாவுக்கு சைக்கிள் கற்றுக் கொடுக்கலாம். மதினாவுடன் சண்டை போடலாம். அவனது பிஞ்சு மனதிற்குள் அடைபட முடியாத கற்பனைகள் நிறைந்து திமிறி வழிந்து

கொண்டிருந்தன.

“லீவு முடிஞ்சுதான் வருவே இல்ல?” ராபியா மறுபடியும் அவனிடம் கேட்டாள். அக்கேள்வியின் தொனியில் அவன் அங்கிருக்கப் பிடிக்காமல் உடனேயே வந்துவிட வேண்டுமென்கிற அவளது விருப்பம் கட்டளையாக மாறி ஒலித்ததை அவன் எளிதாகப் புரிந்து கொண்டான். “அப்படித்தான் சொல்றாங்க, பார்க்கலாம்.” பெரிய மனிதனின் தோரணையோடும் ஒருவிதமான அலட்சியத்துடனும் அவனது பதில் இருந்தது. அது அவளைச் சீண்டிவிடும் நோக்கத்தில் வெளிப்பட்ட பதிலென்பதை அவளால் சிரமமின்றிப் புரிந்துகொள்ள முடிந்தது.

அதனால் அப்பதிலைப் பொருட்படுத்தாதிருக்க அவள் முயன்றாள். “என்ன ஒண்ணும் சொல்ல மாட்டேங்கிறியே?” உதட்டோரத்தில் மிளிர்ந்த குறும்பு சிரிப்புடன் கேட்டான். “எப்போ வரட்டும். உடனேயா, லீவு முடிஞ்சா?” அவளிடத்தில் உத்தரவு கேட்கும் விதத்தில் மறுபடியும் கேட்டான். அக்கேள்வியில் அவளை மகிழ்ச்சியடையச் செய்ய வேண்டுமென்கிற ஆர்வம் மிகுந்திருந்ததை அறிந்து திருப்தியடைந்தவள், வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டாள். மனதிற்குள், ‘அம்மாடி பொல்லாதவன்’ எனச் சொல்லிப் பார்த்தபடி! அவளது உதடும் அச்சமயத்தில் லேசாக அசைந்திருக்க வேண்டும். அதைக் கவனித்தவன், “என்னவோ உள்ளுக்குள்ளயே முணுமுணுக்கிறியா என்ன?” செல்லமாக அதட்டினான். “ஒண்ணுமில்ல” என்று சொல்லிவிட்டு அவனது கையைப் பிடித்து லேசாகக் கிள்ளிவிட்டு ஒரே ஓட்டமாக அடுப்படிக்குள் ஓடினாள். தான் எடுக்க வந்த மருதாணி அச்சை எடுத்துக் கொண்டுவர.

அவள் மருதாணி அச்சோடு வீட்டுக்குள் நுழைந்த பொழுது

எதிர்ப்பட்டு அவளிடமிருந்து அதனைப் பறித்த சொஹ்ரா, “ரெண்டு வீடுதள்ளி இருக்கிற வீட்டுக்குப் போயிட்டு வர இம்புட்டு நேரமா” என்று சொல்லியபடியே அவசரமாக உள்ளே போனாள். ஊரிலிருந்து வஹிதாவின் நன்னா வந்திருந்ததை அப்பொழுதுதான் கவனித்த ராபியா. “வாங்க நன்னா” என்றபடி ஓடிப்போய் அவரருகில் உட்கார்ந்து கொண்டாள். “இப்பத்தான் வர்றீங்களா?” என்று ஆவலாகக் கேட்டாள். அவளுக்கு அவரை ரொம்பவும் பிடிக்கும். அவர் பிரியத்துடன் அவளது கையை எடுத்து தன் கைகளுக்குள் வைத்துக் கொண்டு, “என்னடி இது? இப்புடி பெரிய பொம்பளையாயிட்ட. தாவணியெல்லாம் போட்டு.” செல்லமாகக் கேட்டு அவளைக் கூச்சத்தில் நெளிய வைத்தார். “போங்க நன்னா.” வெட்கத்துடன் சொல்லித் தலையைக் குனிந்து கொண்டாள் ராபியா. “ஏம்மா, இவளுக்கும் இப்பவே ஒரு மாப்பிள்ளைய பாத்து நிக்காவ ஒருவழியா முடிச்சிருக்கலாமே? ஒரு செலவா போயிருக்கும் இல்ல” என்று கிண்டலாகச் சொல்லி சொஹ்ராவைப் பார்த்து தன் வெற்றிலைக்கறை படிந்த பற்கள் தெரியச் சிரித்தார்.

“புதுசா எங்கென மாப்பிள்ளை பாக்க மாமு? என் மகன்தான் இருக்கான் இல்ல. தூக்கி வச்சு தாலியக் கட்ட வேண்டியதுதான். அவளையே கேளுங்க, என் மகன் மேல அம்புட்டுப் பிரியம்.” சந்தர்ப்பத்தை விடாமல் சொல்லிவிட்டுப் பெருமையாகச் சிரித்தாள் நபிஸா. “அப்பிடியா சங்கதி? அப்ப சட்டுப் புட்டுன்னு முடிச்சிர வேண்டியதுதான்” என்று விளையாட்டாகச் சொல்லி சிரித்தார் அவரும்.

அவர்கள் கிண்டலாகப் பேசுவது தெரிந்தாலும்கூட ராபியாவுக்கு அப்பேச்சு பிடித்திருந்ததால் மனதிற்குள்ளாகவே ரசித்தாள். அதனைக் கற்பனை செய்து பார்த்துத் திருப்திப்பட்டுக் கொண்டாள். அவன்

பேரைக் கேட்டாலே உடலெங்கும் பரவசத்தில் சிலிர்த்துப் போவது எப்படி என்று புரியவில்லை அவளுக்கு. என்றாலும் இன்று அஹமது தன் புது ட்ரெஸ்ஸைப் பார்த்ததாகவே தெரியவில்லை என்கிற விஷயம் கவலையை உண்டு பண்ணுவதாகவே இருந்தது.

சொஹ்ரா, "மொத உங்க பேத்தி வயசுக்கு வரட்டும். அப்புறம் மாப்பிள்ளைய பாப்பீங்க" என்று சொல்லிச் சிரித்து இந்தப் பேச்சைச் சட்டென முடிவுக்குக் கொண்டு வந்தாள். வஹிதாவின் நன்னா இருபது பவுனுக்கு அவளுக்குக் காசு மாலை செய்து கொண்டு வந்திருந்தார். அதனை நகைப்பெட்டியிலிருந்து எடுத்து றைமாவிடம் கொடுத்து, "இதை எல்லாருக்கும் காட்டும்மா" என்று பெருமையாகக் கொடுத்தார். சொஹ்ராவுக்குத் திடீரென தன் குடும்பத்தின் நினைவு வந்தது. தன் தந்தை உயிருடன் இருந்தால், தன் பெண்ணுக்கும் இப்படித்தானே செய்வார்? இன்று எனக்கும் என் பிள்ளைக்கும் அந்தக் குடுப்பினை இல்லாமல் போய்விட்டதே என்கிற எண்ணம் ஒரு நிமிடம் மனதில் தோன்றிப் பாரமாகி அழுத்திற்று.

றைமாவுக்கு சொஹ்ராவின் முகம் மாறியதைக் கவனிக்க முடிந்தது. சங்கடமாக இருந்தது. முன்னைப் போலில்லாமல் அவளிடம் தென்படும் மாற்றங்கள் மனதிற்குக் கவலையுண்டாக்கிற்று. வஹிதாவின் திருமண ஏற்பாடுகள் ஆரம்பித்த பிறகிலிருந்துதான் அவளிடம் மாற்றம் உண்டாகியிருந்தது. அவளுக்குத் திடீரென வீட்டைச்சுற்றி உள்ள மற்ற பெண்கள் மீது பெருத்த சினம் உண்டாயிற்று. குறிப்பிட்டு ஒருத்தர் என்றில்லாதபடிக்கு சைத்தான்கள் என்று கறுவிக்கொண்டு தனது ஆத்திரத்தைத் தணிக்க முயன்றாள். துப்புக்கெட்ட ஜென்மங்கள் ஏதேனும் புரணி பேசித் தன் குடும்பத்தில் வேற்றுமை உண்டாக்கியிருப்பது தெளிவாகத் தெரிந்தாலும் யாரை என்ன செய்ய. இதோ சிரிப்பும் கலகலப்புமாக கண்முன்

பெருமையாகப் பேசிக் கொண்டிருக்கும் நபிஸா, மும்தாஜ் இவர்களுக்கு சொஹ்ராவைத் திசை திருப்பியதில் எவ்வளவு பங்கென்று யாருக்குத் தெரியும்? அவள் மனம் சோர்வில் நிறைந்து வெறுமைக்குள் விழுந்தது.

தன் கைகளில் இருந்த காசு மாலையை சொஹ்ராவிடம் கொடுத்து, "இதை எல்லோருக்கும் நீயே காட்டு" என்று சொல்லி விட்டுத் தன் தந்தைக்கருகில் வந்து அமர்ந்தாள். காலையிலிருந்து நடந்து கொண்டிருந்ததில் கால் வலித்தது அவளுக்கு. "வெயில் இந்தக் கொளுத்து கொளுத்துதே" என்று சொல்லிவிட்டு ஆயாசமாக சோபாவில் தலை சாய்த்துக் கொண்டார் ஹனிபா. றைமா அவரை வாஞ்சையுடன் பார்த்தாள். காலம் ரொம்பவே அவரைத் தளர்வுறச் செய்திருந்தது. சுருங்கிக் கறுத்த தேகமும் வழுக்கை விழுந்த தலையும் அவரது கம்பீரத்தை ரொம்பவே குறைத்துக் காட்டின. கூடவே குறைவற்ற நோய்கள் வேறு. அவள் பரிவோடு தன் தந்தையின் கையினை எடுத்துத் தன் உள்ளங்கைக்குள் வைத்து மூடிக்கொண்டாள். அவரது நடுங்கும் விரல்களின் கதகதப்பு எவ்வளவோ விஷயங்களை அவளுக்குள்ளாகச் செலுத்துவது போலிருந்தது. வயோதிகம் உண்டாக்கும் தனிமை தன் தந்தையை எப்படியெல்லாம் சித்ரவதைக்குள்ளாக்குகிறதோ என்கிற கவலை துயரமாக உருவெடுத்து அவளை நிம்மதியிழக்கச் செய்தது.

"மாலை ரொம்ப நல்லாருக்கு, எங்கே வாங்கினீங்க?" என்றாள் நபிஸா. அவள் முகத்தில் ஒப்புக்காகச் சொல்வது போன்ற அறிகுறி ஏதுமின்றி உண்மையிலேயே அந்த நகை பிரமாதம் என்கிற பாவம் மிகுந்திருந்தது. மும்தாஜ்கூட அதன் அழகைப்பற்றி ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாள். திடீரென றைமாவுக்கு மனதிற்குள் பயம் புகுந்து கொண்டது: இவர்கள் சொல்வதிலிருந்து இந்த நகையின் மீதும் இதைக்

கொண்டுவந்த தன் தந்தையின் மீதும் பெரும் கண் திருஷ்டி விழுந்துவிட்டிருக்குமோ என்று! அவள் மனதிற்குள், அல்லாவே கண் திருஷ்டியிலிருந்து எங்களைக் காப்பாத்து என்று கேட்டுக் கொண்டாள். தன் தந்தை நூறு வயதுக்கு ஒரு குறையும் இல்லாமல் இருக்க வேண்டும் என்றும்கூட! இவர்கள் போனபிறகு காலடி மண் எடுத்து அத்தாவுக்கும் வஹிதாவுக்குமாகச் சுத்திப்போட வேண்டும் என்றும் நினைத்துக் கொண்டாள். அதன் பிறகுதான் அவளால் மேற்கொண்டு நிம்மதியாக இருக்க முடிந்தது.

“நீங்க அசதியா இருக்கீங்க. கொஞ்ச நேரம் படுத்துக்கலாம் இல்ல.” சொஹ்ரா வந்து அவரைப் பிடிவாதமாக எழுப்பி அறைக்குள் கூட்டிப்போனாள். அவர் எப்பொழுது அங்கிருந்து போவார் என்கிறமாதிரி வாய் பேசாமல் அமைதியாக இருந்து கொண்டிருந்த நபிஸாவும் மும்தாஜும் மறுபடியும் பேச்சை ஆரம்பித்து சகஜமாக இருக்கத் தொடங்கினார்கள்.

“நல்லவேளை, சொஹ்ராக்கா மாமுவைக் கூட்டிட்டுப் போனாங்க. இல்லென்னா அவுங்க முன்னால தலை முக்காட்டை இழுத்து விட்டுக்கிட்டு எவ்வளவு நேரம் வாய் பேசாம ஒக்காந்திருக்கறது” என்றபடி தலைமுக்காட்டை எடுத்துவிட்டுப் புடவைத் தலைப்பை இழுத்து இடுப்பில் சொருகிக்கொண்டார்கள் இருவரும். சொஹ்ரா அறையிலிருந்து வெளியே வந்தவள், “எனக்கு இல்லெ தெரியும் நீங்க நெளிஞ்சதுக்கு அர்த்தம். இப்ப ஆடுங்க பாடுங்க” அழுத்தமாகச் சொல்லி கிண்டல் செய்தாள். றைமா சோபாவிலிருந்தபடியே எட்டி நபிஸாவின் தலையிலும் மும்தாஜின் தலையிலும் செல்லமாகக் குட்டினாள். “கொஞ்ச நேரம் பொண்ணா லட்சணமா அடக்கமா உட்கார்ந்துதான் இருக்கறது, கொறைஞ்சா போவீங்க.”

“மும்தாஜ், ஏன் றைமாக்கா இந்தக் காசு மாலையெல்லாம் என்ன

பெரிசா, நம்ப மாரியாயி தன் மகளுக்குக் கொண்டு வந்த ஒரு பவுன் மோதிரத்துக்கு ஈடாகுமா என்ன.” அடுப்படியிலிருக்கும் சொஹ்ராவின் காதில் விழட்டுமெனச் சத்தமாகவே சொன்னாள்.

“அதச் சொல்லு” என்று எடுப்பெடுத்துக் கொடுத்தாள் நபிஸா, சொஹ்ரா அடுப்படியிலிருந்து எட்டிப்பார்த்தபடி, “ஆரம்பிச்சிட்டீங்களா ஒங்க வேலைய?” என்று விளையாட்டாக அதட்டினாள். “உள்ளதச் சொல்றோம், ஒங்களுக்கு நோவுதா? என்னா இருந்தாலும் மாரியாயி பாசத்துக்கு ஈடு வரவேவராது, அவ்வளவுதான்” என்று மறுபடி சொல்லிச் சிரித்தார்கள் இருவரும். இவர்களிடம் பேசி மீள யாருக்கு முடியும் என்பது போல றைமா தன் தந்தை படுத்திருக்கும் அறைக்குள் போனாள்.

நபிஸா, வஹிதாவுக்கு விரலில் மருதாணியை வைத்து விட்டபடி, “இன்னக்கி மட்டும்தான் நீ தனியா படுக்கப்போற, கடைசி ராத்திரி, என்ன?” என்று விஷமமாகக் கண் சிமிட்டிச் சிரித்து, “நாளைக்கி மொத ராத்திரி வேற! ஹும், எதுவும் சொல்லித் தரணுமா நாங்க?” என்றாள். வஹிதாவுக்கு முகம் வெட்கத்தினால் ரத்தம் போல் சிவந்தது. தலையை இன்னும் அதிகமாகக் குனிந்து கொண்டாள். “என்னாது வஹிதாவுக்கு நாம பாடம் சொல்லித் தரணுமா? அவ மாப்பிள்ளைக்கி ஒண்ணுமே தெரியாத மாதிரி! அவரு இத்தினி வருஷம் கல்யாணம் பண்ணாமப் பாடம் படிச்சுக் கிட்டுத்தான இருந்தாரு, அவருக்குத் தெரியாததையா நீ சொல்லித் தரப்போற?” என்று கிண்டல் செய்தாள் மும்தாஜ்.

வஹிதாவுக்குப் புரிந்தும் புரியாமலும் இருந்தது அவர்களது பேச்சு. கூச்சத்தில் நெளிய ஆரம்பித்தாள். எழுந்து ஓடலாம் என்றால் கையில் மருதாணி போட்டு விட்டுக் கொண்டிருந்தார்கள். எப்படி ஓட? அவளுக்கு ஒரே சமயத்தில் வியப்பாகவும் வெறுப்பாகவும் இருந்தது. இவர்கள் ஏன் இப்படிப் பேசுகிறார்கள்?

# 35

*இரவுச் சாப்பாட்டு வேலைகள் முடிந்தபிறகு காதர் தெருப் பந்தலில் கிடந்த சேரில் வந்து அமர்ந்திருந்தான். மெலிதான காற்று பந்தலில் கட்டியிருந்த வாழை மரத்தின் இலைகளைத் தொட்டுப்போயிற்று. நாளை இந்நேரம் திருமணப் பரபரப்பு எல்லாம் முடிந்திருக்கும். வஹிதா இங்கிருந்து கணவன் வீட்டுக்குப் போய் இருப்பாள். நினைக்கையிலேயே அவனுக்குக் கஷ்டமாக இருந்தது. வெளியிலிருந்து பார்க்கையில் திறந்து கிடந்த கதவின் வழியே வீட்டின் பரந்து விரிந்த தாழ்வாரமும் அதில் வரிசையாக நின்ற இரும்புத் தூண்களும் பக்கவாட்டு அறைகளும் தெரிந்தன. பெரிய வாசலில் காய்கறிகள் குவிக்கப்பட்டு வேலை நடந்து கொண்டிருந்தது. மாரியாயிதான் பொறுப்பாக நின்று செய்து கொண்டிருந்தாள். இவனுக்குப் பரிதாபமாக வந்தது. பயித்தியக்காரி. எல்லாவற்றையுமே தன் தலையில் போட்டுக் கொள்வாள். அதன் மூலம் தனக்கு இங்கே எல்லா உரிமைகளும் இருப்பதாகத் தானும் நம்பிக்கொண்டு, பிறருக்கும் காட்டுவது மாதிரி!*

*நாளையிலிருந்து வஹிதா போனபிறகு இந்தப் பெரிய வீடு யாருமேயில்லாத மாதிரி வெறிச்சிட்டுப் போய்விடும் என்று தோன்றிற்று. அவள் பெரும்பாலான நாட்கள் இங்கிருந்ததில்லை என்றாலும், இந்தமுறை இங்கிருந்து போவது தாங்கிக் கொள்ள முடியாததாக இருக்கும். என்ன செய்வது? திடீரென சிக்கந்தர் தன் மகளுக்கு ஏற்றவன்தானா என்கிற கேள்வி எழுந்தது அவனுக்கு. இந்தச் சந்தேகம் புதிதாகத் தோன்றியதில்லை. எத்தனை நாள் அவன் தன்னைத்தானே இது குறித்துக் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறான்,*

வெளிக்காட்டாமல். வெளிக்காட்டினால் றைமாவுக்குப் பிடித்துக் கொள்ளத் தோதாக இருக்கும். அதற்கு இடம் கொடுக்கக் கூடாது என்கிறதில் மட்டும் உறுதியாக இருந்தான்.

உறவுக்காரர்களில் எத்தனையோ வீடுகளில் தன் பெண் பிள்ளைகளை மடியில் போட்டுக்கொண்டு அன்பை வெளிப்படுத்திய தந்தைகளைப் பார்த்து வியப்புற்றிருக்கிறான். இவனுக்கு மட்டும் கூச்சமாக இருக்கும். அவளிடத்தில் தன் மனதிலுள்ள அன்பையெல்லாம் முழுமையாகக் காட்டிக்கொள்ள விரும்பினாலும் எட்டி நின்றே பேசுவான். அவனது தந்தை, சபியா அக்காவிடம் உயிரையேதான் வைத்திருப்பார். இருந்தாலும் அவளிடமிருந்து விலகியே இருப்பார். பெண் பிள்ளைகளிடம் அன்பைக் காட்டுவதில் ஒருவிதமான கட்டுப்பாடு இருக்கவேண்டுமென நினைத்தாரோ அல்லது வயதுக்கு வந்த பிறகு அவர்களைத் தொட்டுப் பேசுவது தவறு என நினைத்தாரோ தெரியவில்லை. இவனும் அதே மாதிரித்தான். அவரின் தொடர்ச்சியாகத்தான் அவன் அனேக காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறான். சில சமயங்களில் அவனுக்கு வஹிதாவைப் பார்க்கும் போது தன் தாயாரின் ஞாபகம் வரும். அவளது அமைதியையும் அழகையும் பார்த்து அப்படியே அம்மாவைக் கொண்டு வந்திருக்கிறாள் எனப் பெருமையில் பூரித்துப்போய் விடுவான். ஆனால் எந்த நேரத்திலும் தன் பிரியத்தை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவே மாட்டான். றைமா கேட்பாள், “இவ்வளவு பிரியத்தையும் உள்ளேயே வச்சு என்ன செய்யப் போறிங்க?” என்று.

அவன் தன் தாயின் நினைவு வந்ததும் பெரிதும் மனச்சஞ்சலம் கொண்டான். எத்தனை வசதி இருந்து என்ன, அவளைப் பெரும்பாலான நேரங்களில் அடுப்படிக்குள்ளேயேதான்

வேகவைப்பார் அத்தா. திடீரென கடையிலிருந்து வருவார். “பள்ளிவாசலுக்கு தப்லீக்ல அம்பது பேர் வந்திருக்காக ஜமிலா, ஒடனே இடியாப்பமும் இட்லியும் அத்தனைபேருக்கும் செய்து கொடு ராத்திரி நாஸ்தாவுக்கு” என்று சொல்லி விட்டுப் போய்விடுவார். அவளிடமிருந்து பதிலைக்கூட கேட்க நேரமிருக்காது அவருக்கு! சிறிது நேரத்தில் பண்ணையாள், பத்து இருபது கோழிகளோடு வந்து நிற்பான். அந்தக் காலத்தில் ஊரில் தினமும் கிடா அறுத்து வியாபாரம் செய்ய மாட்டார்கள். சனிக்கிழமைகளில் மட்டும்தான் அறுப்பார்கள். அன்று ஊர் முழுக்க ஒரே கறிக்குழம்பு வாசனையாக இருக்கும். ஒவ்வொரு தெருவிலும் கறிக்குழம்பின் மணம் கண்ணுக்குத் தெரியாத தன் உருவத்தைச் சுமந்து அலைந்து திரியும். அந்த மணம் உண்டாக்கும் மகிழ்ச்சியில் ரொம்பவுமே குதூகலம் கொள்வார்கள் பிள்ளைகள். அன்றிலிருந்து இன்றுவரை எங்காவது கறிக் குழம்பு வாசனை வந்தால் அந்த நாளைச் சனிக்கிழமையெனத் தன் மனம் இன்னும்கூட அடையாளம் காண்பது வியப்பாக இருந்து கொண்டிருக்கிறது அவனுக்கு.

அம்மா ஒன்றுமே சொல்ல மாட்டாள். முகம் சுளித்துகூட அவளைப் பார்த்தது கிடையாது. இவ்வளவு வேலைகளைத் தயங்காமல் அவர் இவளிடம் சொல்வதற்கும் இவளது அமைதிதான் காரணம். இப்படியே வாரம் ஒரு நாளாவது பள்ளிவாசலுக்கு வரும் தப்லீக் ஆட்களுக்கு விருந்து நடந்து கொண்டேயிருக்கும். காதர் கேட்பான், “ஏம்மா இப்பிடிக் கஷ்டப்படுற? மாட்டேன்னு சொல்லாம.” அவள் தன் அமைதியான முகத்தில் ஒரு வசீகரமான புன்னகை பூத்தபடி சொல்வாள், “அவர் என்னையக் கொடுமைப் படுத்துறாரா என்ன? பள்ளிவாசலுக்கு வர்றவுக பசிய ஆத்தறதுக்குத் தான இப்படிச் செய்றார். அதுல எவ்வளவு நன்மை இருக்குன்னு ஒனக்குத் தெரியாதா

காதர்?" தனக்குச் சிரமமாக இல்லாத ஒன்றுக்காக அவன் ரொம்பவே கவலைப்பட்டுக் கொண்டிருப்பதையே ஏளனம் செய்வது மாதிரி இருக்கும் அவளது பேச்சு.

அம்மா தன் கடைசிக் காலத்தில் காதரிடம் சொன்னாள். "நீ உன் பொண்ணை சபியா அக்கா மகனுக்குத்தான் கொடுக்கணும்." சொந்தம் விட்டுப் போய்விடும் என்கிற பயம் அவளை இப்படிச் சொல்ல வைத்தது. "சபியா பொறந்த இந்த வீட்டை விட்டுப் போனதோட, இந்த வீட்டோட அவளுக்கிருந்த பந்தம் முடிஞ்சிரக்கூடாது. அவளுக்கு இந்த ஊரோட ஒரு உறவு, இந்த வீட்டோட ஒரு பந்தம் என்னைக்குமே இருக்கணும். அதுக்காகத்தான் சொல்றேன். நீ சம்மதிக்கலைன்னா, அவளுக்கு இங்கேயிருக்கற ஒறவு எல்லாமே முறிஞ்சு போயிரும்" என்றவள், வாக்குறுதி வாங்குவதைப் போன்று அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். இவனுக்கு அந்தச் சமயத்தில் தன் தாயைத் தவிர வேறு எதுவுமே இவ்வுலகத்தில் முக்கியமில்லை என்கிற உறுதி உண்டாகி, "இன்ஷா அல்லாஹ்" என்று சொல்லி விட்டான். தனக்கும் தன் தாய்க்கும் இடையே இருந்த ஆழ்ந்த பிணைப்பு, தன் பெண்ணின் வாழ்க் கையைச் சரியாகத் தீர்மானிக்கவியலாதபடி செய்து விட்டதோ என்கிற கவலை அவனை உள்ளுக்குள் ஒவ்வொரு நாளும் இம்சித்துக் கொண்டிருந்தது. சிக்கந்தரைப் பற்றிய நல்ல அபிப்ராயம் இல்லாதபொழுதும் வயதுப் பொருத்தம் பார்க்காமல் இந்த முடிவெடுத்ததற்கு அம்மாவிடம் தான் கொடுத்த வாக்குறுதி மட்டும்தான் காரணம் என்று நிச்சயமாக அவனால் சொல்ல முடியவில்லை. அவனுக்கு றைமாவிடம் தீர்க்க வேண்டிய ஒரு கணக்கு இருந்தது. அதற்கு இதை விட்டால் வேறு ஒரு சந்தர்ப்பம் இல்லை என்பதனால்தான் இப்படி ஒரு முடிவையெடுத்தான். தன் மனைவியின் மீது அடைய வேண்டிய ஒரு

வெற்றிக்காகத் தன் மகள் வாழ்க்கையைப் பணயம் வைத்தது எவ்வகையில் சரி என்கிற கேள்வி எழுந்து அவனைத் திக்குமுக்காடச் செய்தது. அப்படியெனில் அவன் வஹிதாவின் பேரில் கொண்டிருந்த ஆழமான பிரியம், அதற்கு என்ன அர்த்தம்? அது ஒரு பொய்யா என்ன? அவனால் ஒரு முடிவுக்கும் வர இயலவில்லை. குழப்பம் சூழ தலையை வலிப்பது போன்ற பாவனையோடு தலையை நாற்காலியில் சாய்த்துக் கொண்டான். மூடிய கண்களிலிருந்து ஏனோ கண்ணீர் வழிந்து கசிந்து கொண்டிருந்தது.

"என்ன? தூக்கமா மாமு" என்றபடி சுலைமான் அருகில் வரும் சத்தம் காதில் விழ, திடுக்கிட்டுக் கண்திறந்து சுதாரித்தான் காதர். "அதெல்லாமில்லை, உட்காரு" என்றபடி அருகிலிருந்த நாற்காலியைக் காட்டினான். "என்ன, சமையல் வேலை இன்னுமா ஆரம்பிக்கலை? உங்க கூடமாட ஒத்தாசையா உட்கார்ந்திருக்கலாம்னுதான் வந்தேன்" என்றவன், "எவ்வளவு நாளாச்சு, நம்ப ஊர்ல ஒரு நிக்காவுல கலந்துக்கிட்டு" என்று திருப்தியோடு சொல்லிவிட்டு, "எங்கெ போனா என்ன மாமு, நம்ப ஊர்ல நம்ப மண்ணுல நம்ப உறவுகளோட இருக்கறப்போ கிடைக்கிற சந்தோஷத்துல துளியாவது வெளிய எங்கேயும் கெடைக்கமாட்டேங்குது. சிங்கப்பூராவது, மலேசியாவாவது" என்றான். அவன் இதைச் சொல்லும்பொழுது முகத்தில் வழிந்த சந்தோஷம் காதரைப் பிரமிப்புக்குள்ளாக்கிற்று. எங்கோ தொலை தூரத்திலிருந்தாலும்கூட தன் பிறந்த மண்ணின் பேரில் அவனுக்குள்ள ஈடுபாட்டை முழுமையாக காதரால் புரிந்து கொள்ள முடிந்தாலும், சரியான கிணற்றுத் தவளை என்று மனதோரம் தோன்றாமல் இல்லை.

அவன் சொல்வதை ஆமோதிக்கும் பொருட்டுத் தலையை ஆட்டிய காதர், "இன்னும் வேலை துவங்கலை. பின்னாடி இருக்கற கொட்டத்துல கிடா அறுக்கிறாக. கறியை லத்தீப் பாய் களைஞ்சு

குடுத்தாருன்னா பண்டாரி வேலையத் தொடங்கிருவாரு” என்றான். “மொத்தம் எத்தினி படி அரிசி, எத்தினி கிலோ கறி போடப் போறீங்க?” என்று கேட்டான் சுலைமான். இந்த நேரத்தில் காதரின் மாமனாரும் கரீமும் பந்தலை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். தன் மாமனாரைப் பார்த்ததும் ஒரு நிமிடம் எழுந்து நின்று மரியாதை செய்து விட்டு அவர் அமர்ந்ததும் ஒதுங்கிக்கிடந்த சேரில் அமர்ந்தான் காதர். தானும் கூட சற்று நேரம் எழுந்து நின்று விட்டு மறுபடி உட்கார்ந்த சுலைமான் அவருக்கு, “அஸ்ஸலாமு அலைக்கும்” என்று ஸலாம் சொன்னான். அவரும் பதில் ஸலாம் சொல்லிவிட்டு, “எப்பொத்தா வந்தீங்க” என்றார். “இப்பதான் ஒருவாரமாச்சு.” பவ்யமாகச் சொன்னான் சுலைமான். நீண்ட நாட்களாகிறது அவரைப் பார்த்து. ரொம்பவும் தளர்ந்து போயிருப்பதாகப்பட்டது. “உடம்புக்கெல்லாம் எப்பிடி இருக்கு?” என்றான். “ஏதோ இருக்கு, இஸ்ராயில் வந்து கூப்பிடுறப்போ போக வேண்டியதுதான்” என்று சொல்லிவிட்டு இயலாமையுடன் சிரித்தார். சுலைமானுக்குக் கஷ்டமாக இருந்தது. ஒரு நிமிடம் மௌனமாகவே கழிந்தது யாரும் எதுவும் பேசாமல். அந்த அமைதியைக் கலைக்க வேண்டிய அவசியத்தைச் சுலைமான் உணர்ந்தான். அதனால் மறுபடியும் காதரைப் பார்த்துப் பேச்சை விட்ட இடத்திலிருந்து ஆரம்பித்தான். “என்ன மாமு எத்தினி படி ஆக்கப் போறீங்க?” கரீம் மட்டும் உட்காராமல் தட்டி அடைப்பை ஒட்டிச் சாய்ந்து கை கட்டி நின்று கொண்டிருந்தான், “படிக்கு எட்டுப்பேர் கணக்கு. நாங்க ஒரு ஆறு பேரா கணக்கு வச்சுக்கிட்டோம். மாப்பிள்ளை ஊர்லருந்து எப்பிடியும் நூறு பேருக்குக் குறையாது. அவுக பங்குக்கு 20 படியும் நம்ப ஊர்ல நம்ப உறவுக்காரவுக வீடுன்னு அம்பது வீட்டுக்காவது சாப்பாடு குடுத்தனுப்பணும். ஒரு வீட்டுக்கு ஒரு படின்னு வச்சுக்கிட்டாலும் அதுல 50 படி அரிசி, அப்புறம் வெளியில, வியாபாரிக,

தோட்டக்காரனுக, பண்ணையாளுக, கூலிகொத்துன்னு நம்ப வீட்டுச் சாப்பாட எதிர் பார்த்து நெறையப் பேர் இருக்கறதனால மொத்தத்துல நூறு படி அரிசின்னு முடிவு செஞ்சிருக்கு" என்றான் காதர்.

"நூறு படியா?" ஒரு நிமிடம் மலைத்தான் சுலைமான். "அப்ப கறி?" "கறியா? அது படிக்கு ஒரு கிலோன்னா சரியா வராதுங்கறதுனால, படிக்கு ஒன்றரைக் கிலோ போடலாம்ன்னு. அப்பதான சாப்பாடு நல்லாயிருக்கும்" என்ற காதர், "நல்ல செலவு" என்று பெருமையாகச் சொல்லிப் பேச்சை நிறுத்தினான். சுலைமானை இடைமறித்தார் ஹனிபா. "ஒரு பிள்ளை. அதுக்குச் செய்யாம யாருக்குச் செய்ய? ஜனங்க சாப்புட்டுட்டு வாழ்த்தட்டுமே" என்றார். "ஆமாமா!" என ஆமோதித்துத் தலையாட்டினான் சுலைமான்.

ஹனிபா மருமகனின் முகத்தைப் பார்த்துப் பேசக் கூச்சப்படுவார். ஆகையினால் கரீமிடம் கேட்டார். "மாப்பிள்ளை வீட்டுக்கு வச்சுக்குடுத்த பணத்துக்குப் பள்ளிவாசலுக்கு எவ்வளவு பணம் கமிஷன் குடுப்பீங்க இந்த ஊர்ல?"

"ஆயிரத்துக்கு அம்பது குடுக்கறது இங்கே வழக்கம், உங்க ஊர்ல?" என்றான் கரீம்.

"உம், அங்கேயும் அப்பிடித்தான். சும்மா தெரிஞ்சிக்கத்தான் கேட்டேன்" என்றவர், "மஹர் தொகை உண்டுதானே?" என்றார்.

"அதுவும் உண்டு. ஆயிரத்தி ஒண்ணோ என்னவோ! காலையில தாலிகட்டறப்போ புத்தகத்துல எழுதிக் கையெழுத்து வாங்குவாங்க." கிண்டலாக சொன்ன கரீம், கை நீட்டி பந்தல் போட்டிருந்த தட்டியினை ஒடித்துக் குச்சியினால் பல்லைக் குத்தத் தொடங்கினான்.

சுலைமான் சொன்னான், "சவுதி மாதிரி நாட்டுல எல்லாம் மஹர் மட்டும்தான் வழக்கம். இங்கெ பொண்ணு வீட்டுலருந்து கைக்கூலி வாங்கறானுக. ஹராம்தான?" என்று அலுத்துக்கொண்டான். "இப்ப

எதுதான் சட்டப்படி நடக்குது? ஒண்ணுமில்ல. எல்லாமே அனாச்சாரம்தான். தம்மள ஆளுகளோட சேர்ந்து தம்மள ஆளாத்தான் மாறிட்டோம்.” அவனுக்கு மனதில் வருத்தம் நிரம்பி வழிந்தது. தன் சமூகத்தின் சீரழிவுகளைத் தடுக்கவோ மாற்றவோ முடியாத இயலாமையினால் ஆன வருத்தம் அது.

“என்ன செய்யச் சொல்லுற சுலைமான்? காலப்போக்குல எல்லாமே மாறிக்கிட்டுத்தான் வருது. எதைத் தடுக்க முடியுது சொல்லு” என்றான் காதர், அவனைச் சமாதானப்படுத்தும் விதத்தில். சமயங்களில் அவனிடத்தில் எரிச்சல் உண்டாயிற்று என்றாலும், காட்டிக் கொள்ளாமல்தான் சொன்னான். என்னவோ இவன்தான் ஊரையே காப்பாற்ற வந்தது மாதிரி!

“ஊர்ல இத்தினி பெரிய மனுஷ இருந்து என்னா பண்ணுனிங்க? இந்தா நேத்து ஒருத்தி காபிர் பயகூட போயிட்டா. என்னத்தச் செஞ்சீங்க? இனி இதையே முன்மாதிரியா வச்சு இன்னொருத்தி ஓடமாட்டாங்கிறதுக்கு உத்தரவாதம் யாராவது தர முடியுமா? முடியாது. சரி, இனிமேலும் இந்தக் கண்றாவி நடக்காம இருக்கறதுக்கு ஏதாச்சும் கட்டுப்பாடு பேசி முடிவு செய்தீங்களா? இல்லையே! இப்பிடியே கண்டுக்காம இருந்தா என்ன ஆகிறது? நீங்க சொல்லுங்க” என்று அவன் ஆவேசமாகப் பேசி, ஹனிபாவையும் துணைக்கழைத்தான். காதருக்கு எரிச்சல் மண்டிற்று. இவனை யார் இங்கே வரச் சொன்னது என்கிற மாதிரி தலையைத் திருப்பி கரீமை உற்றுப் பார்த்துவிட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

ஹனிபாவுக்கும் மனசு ஆறவில்லை. “என்னதான் இருக்கட்டும், இப்பிடி ஒரு அசிங்கம் நடந்துருக்கவே கூடாதுதான். எங்க ஊர் பள்ளிவாசல்லயும், எனக்குத் தெரிஞ்ச வியாபாரிக வரை இந்த விஷயத்தைப்பத்தி என்னைய கேக்காத சனம் பாவம் செஞ்ச சனம்.

எந்த ஒரு இஸ்லாமான மனுஷனாலும் ஜீரணிச்சுக்கவே முடியாத சங்கதி” என்றார். அவரது தளர்வுற்ற உடல்கூட ஆவேசத்தில் நடுங்குவதைக் காதரால் கவனிக்க முடிந்தது.

காதர் தன் மாமனாரின் கோபத்தைக் கட்டுப்படுத்தும் பொருட்டு, எதிர்பேச்சு எதுவும் பேசாமல் தலை குனிந்து உட்கார்ந்திருந்தான். தான் எது சொன்னாலும் நடந்த விஷயத்தைத் தான் ஆதரித்துப் பேசுவதாக ஒரு எண்ணம் அவருக்கும் வரக்கூடும் என்பதனால் பேசாமல் இருந்தான்.

இந்தச் சமயத்தில் லத்தீப் பாய் வந்து, “கறி நிறுத்துப்போடுறதைப் பார்க்க யார் வர்றது?” என்று கூப்பிட, அவனோடு போகக் கிளம்பிய கரீமைத் தன் கண்களாலேயே தடுத்து நிறுத்தி விட்டு காதர் எழுந்து அவனோடு போனான். அண்ணனுக்கு இங்கிருந்து போய்விட வேண்டுமென்கிற எண்ணத்தைச் சுலைமான் உண்டாக்கி விட்டிருப்பதைக் கரீம் புரிந்துகொண்டு அவனுக்கு வழிவிட்டு ஒதுங்கி நின்றான்.

சுலைமானுக்குக் காதர் அங்கிருந்து நழுவிப் போவது புரிந்து வருத்தமாக இருந்தது. என்ன பெரிய மனுஷன்கள் என்று மனதில் சலித்துக் கொண்டான். “சரி, நான் போய் படுக்குறேன்” என்று சொல்லி அங்கிருந்து கிளம்பினார் ஹனிபா. சுலைமானைப் பார்த்து ஸலாம் சொல்லிவிட்டு, “வர்றேன்” என்றபடி வீட்டுக்குள் போனார். “சரி, வாங்க” என்று அவருக்கு விடை கொடுத்தான் சுலைமான். பந்தலில் கரீமும் சுலைமானும்தான் இருந்தார்கள். கொட்டடத்திலிருந்து பிரியாணி தாளிக்கும் மணம் வந்தது. வேலை ஆரம்பமாகிவிட்டது. “இப்பொ மணி 12 இருக்குமா?” என்றான் சுலைமான். “இருக்கும், இருக்கும். அதுக்கும் மேலேயும் இருக்கும்” என்றான் கரீம். “நீங்க எதுவுமே பேசமாட்டேங்கிறீங்க?” என்றான் சுலைமான். அவனுக்கு

*கரீமின் அபிப்ராயத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றிருந்தது.*

*கரீம் சொன்னான், "எங்கண்ணன் இருக்காரே எப்பவுமே வெவரங்கெட்டுப்போயித்தான் பேசுவாரு! இரக்கப்பட வேண்டியது தான். சரி, அந்த நாதியத்தவளுக்கு எதுக்காக இரக்கப்பட? என்னமோ போ. சரி, நம்ப அண்ணன் ஒண்ணு சொல்றப்போ, நாம குறுக்கப் பேசுறது சரியில்லன்னுதான் நான் எதுவும் சொல்றதில்ல. என்ன நான் சொல்றது? அது மரியாதயில்ல தான?" என்று முடித்தான் கரீம். சுலைமானுக்குத் திடீரென மனதில் நிம்மதி உண்டாயிற்று. தனக்கு ஏற்றவாறு பேச ஒரு ஆள் கிடைத்த திருப்தியினால் உண்டான நிம்மதி அது. அவன் நம்பிக்கையூட்டப்பட்டதாக உணர்ந்தான். தான் மட்டும் தனித்தில்லை என்கிற மாதிரி! அவன் கண்களுக்கு கரீம் ஒரு ஜிகாத் போராளியாகத் தெரிந்தான். தான் ஊருக்குப் போய்விட்டாலும்கூட இதுபோல ஒன்றிரண்டு பேராவது இங்கிருந்து இந்த ஊரின் கவுரத்தை உயிரைக் கொடுத்தாவது போராடிக் காப்பாற்றி மீட்பார்கள். குறிப்பாகப் பெண்களைக் கட்டுக்குள் வைப்பார்கள், கேவலம் உண்டாக்கிவிடாதபடிக்கு என்கிற நம்பிக்கையும் நிம்மதியும் உண்டாயிற்று.*

*பேச்சு மறுநாளைப் பற்றியதாக மாறிற்று. மாப்பிள்ளை வீட்டார் எத்தனை பஸ்சில் வருவார்கள் என்று கேட்டுக் கொண் டிருந்தவன், "எனக்கு உங்க வீட்டுல இருக்கற அம்பாஸிடர் கார் மாதிரி ஒண்ணு வேணும் மாமு. எங்கெ வாங்கலாம்? எம்புட்டுக்கு வாங்கலாம்?" என்று கேட்டான் சுலைமான்.*

*"உனக்கு எதுக்காக கார்? நீ வெளிநாடு போயிருவ இல்ல, பெறகு எதுக்கு?."*

*"அதுக்கில்லை, நான் இங்கே இருக்கறவரைக்கும் கார் தேவைப்படும். என்னால பஸ்சுல எங்கேயும் போக வர இருக்க முடியாது. அப்பிடியே*

பழகிப்போச்சு. அதோட பள்ளிவாச காரியங்களுக்கு, முக்கியமா தப்லீக் வேலைகளுக்குப் போறதுக்காக கார் தேவைப்படுது. நானும் தப்லீக் ஆளுக சிலபேரும் பக்கத்து ஊர்களுக்குப் போகவர தோதா இருக்கும். அப்புறம் நான் ஊருக்குப் போன பெறகும்கூட கார் வீட்டுல நிக்கட்டும். பள்ளிவாசத் தேவைகளுக்குப் போகவரத் தோதா இருக்கும் இல்லெ?" என்றான்.

கரீமுக்குச் சிரிப்பு வந்தது. என்றாலும் அடக்கிக்கொண்டு, "கார் ஒன் தேவைக்கா, இல்லெ பள்ளிவாசத் தேவைக்கா?" என்றான்.

"இதுல சிரிக்க என்ன இருக்கு? பள்ளிவாசத் தேவைக்காகத் தான்னு வச்சுக்கங்களேன். வேறென்ன, ஏதோ நம்பளால ஆனவரை நன்மையக் கொள்ளையடிக்க வேண்டியதுதானே?" என்றான். கரீம் கைகொட்டிச் சிரித்தான். "எனக்கு என்னா ஞாபகம் வருது தெரியுமா, கோயிலுக்கெல்லாம் காளைமாடு வாங்கி நேர்ந்துக்கிட்டு விடுவாங்க இல்லெ?" என்று கிண்டல் செய்து சிரித்தான்.

அவனது கிண்டல் முழுவதுமாகப் புரியாமல் சுலைமான் சொன்னான், "அப்பிடித்தான் இருக்கட்டுமே? பள்ளிவாசலுக்கு வாகன வசதியை உண்டு பண்ணித் தர்றதுல என்ன கிண்டல்" என்று அவனும் பெருமையாகச் சிரித்துக் கொண்டான். புதுமாதிரியாக ஒரு திட்டத்தை அமல் படுத்துகிற திருப்தி அவனைப் பெருமிதம் கொள்ளச் செய்தது.

சரியான கிறுக்கனா இல்லெ இருக்கிறான் என்று நினைத்தான் கரீம். இருந்தாலும் இந்த வயசுல இவ்வளவு இல்மோடு இருக்கறது ஆச்சரியம்தான் எனவும் நினைத்துக் கொண்டான்.

மாரியாயி கொட்டடத்திலிருந்து தலையில் ஒரு கூடையோடு வெளியில் வந்தாள். காலையில் வந்தவள் இன்னும் வேலை முடிந்து வீடு திரும்பவில்லை. நடை தளர்வுற்றிருந்தது. முகத்தில் சோர்வு வழிந்து

கொண்டிருந்தது. "கூடையில என்னாது மம்மாணி?" கிண்டலாகக் கேட்டான் சுலைமான். ஒரு எதிர்வினையும் காட்டாத படிக்கு கரீம் உட்கார்ந்திருக்க, மாரியாயிக்கு வெட்கத்தில் பூரித்தது முகம். அவளிடமிருந்த களைப்பு போன இடமே தெரியவில்லை. கரீமின் முன்பாகவே தன்னை முறை வைத்து சுலைமான் கூப்பிட்டதில் திக்கு முக்காடித்தான் போனாள். "ஒண்ணுமில்ல, பெரியவரு தலை கால் குடல் எல்லாம் குடுத்து உங்க வீட்டுல குடுக்கச் சொன்னாரு. அதுதான் கொண்டு போறேன்" என்று பதவிசாகப் பதில் சொல்லிவிட்டு நாணிக் கோணி அங்கிருந்து சுலைமான் வீட்டை நோக்கிப் போனாள். அவளோடு கூடவே மிதந்து வந்த ரத்தத்தின் கவிச்சியும் அவளுடன் சேர்ந்து நகர்ந்து சென்றது. "வெக்கத்தப் பாருங்களேன்" என்று சொல்லிச் சிரித்த சுலைமானின் சிரிப்போடு கரீமின் சிரிப்பும் அந்நேரத்தில் சேர்ந்து ஒலித்தது.

"அப்ப நான் கிளம்புறேன் மாமு, தூக்கம் வருது." ஆவென வாய்பிளந்து கொட்டாவி விட்டபடி, 'அவூதுபில்லாஹி மினஷ் ஷைத்தான்னிர்ரஹீம்' என்று முணுமுணுத்த சுலைமானை, "சரி, நீ கிளம்பு" என்று அனுப்பி வைத்த கரீம், நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து அமர்ந்து கொண்டான். வலது கால் முட்டு வலித்தது. இன்னொரு நாற்காலியை எட்டி இழுத்துத் தனக்கு எதிராகப் போட்டுக் கால்களை அதன்மீதாக நீட்டிக்கொண்டான். இந்த ஒருவாரமாகவே கால் வலி இருந்துகொண்டிருந்தது. அதோடு இன்று காலை மதுரைக்கு சீரில் வைப்பதற்கான லட்டு வாங்கிவரச்சென்று கொஞ்சம் அலைந்ததில் வலி அதிகமாக இருந்தது. மருந்து ஏதாவது தேய்த்தால் நன்றாக இருக்கும் என நினைத்தவனுக்கு இந்தப் பாதி ராத்திரியில் எங்கே யாரிடம் போய் மருந்து கேட்பது, எல்லோரும் தூங்கிக் கொண்டிருக்கையில் என்று தோன்றியது.

றைமாவும் சொஹ்ராவும் திருமணத்திற்கு அழைப்பதற்காக சபியாக்கா வீட்டிற்குப் போயிருந்த அன்று கடுமையான வலியோடு அறைக்குள் படுத்திருந்தான். சாத்தியிருந்த கதவை யாரோ மெதுவாகத் திறக்கும் சப்தம் கேட்டுத் தலையைத் திருப்பி யாரெனப் பார்க்க அங்கு ராபியா நின்றுகொண்டிருந்தாள். அவனுக்கு வியப்பாக இருந்தது. இத்தனை காலமும் அவளாகத் தன்னை நெருங்கி வந்ததில்லை. அதற்கான இடத்தை இவன் கொடுத்ததில்லை என்பது ஏனோ மனதைத் துன்புறுத்த, குரலில் அதிகபட்ச பிரியத்தைக் காட்டி "என்னம்மா" என்றான்.

"அதுவந்து உங்களுக்குக் கால்வலியாம், அக்கா சொன்னா. இந்த மருந்தை ஒங்க கால்ல தடவச்சொன்னா அதுதான்." தயக்கத்தோடு சொன்னவள், "தடவட்டுமா?" ஆர்வமாகக் கேட்டபடி அவனருகாக வந்து நின்றாள்.

கரீமிற்கு மகளைப் பார்த்துச் சிரிப்புவந்தது. "பெரிய மனுஷியாட்டம் மருத்துவம் பாக்கப்போறிங்களாக்கும்," கிண்டல் செய்தவனுக்கு மனம் பெருமையினால் பூரித்தது. இத்தனை காலமில்லாமல், "ரொம்பக் கெட்டிக்காரி" என்று மகளை நினைத்துப் பெருமிதம் கொண்டான்.

அவனது அனுமதிக்காகக் காத்திராமல் அவனது கைலியை முட்டிவரை உயர்த்திய ராபியா கையிலிருந்த யூகாலிப்டஸ் மருந்தை முட்டியின் மீதாக உதறிவிட்டு, "இங்கே தானே?" என்றபடி வேகமாகத் தேய்க்கத் துவங்கினாள். கதவைத் திறந்தபொழுது இருந்த தயக்கம் மறைந்து உற்சாகமாகச் செயல்பட ஆரம்பித்தவளைப் பார்த்துத் தனக்குள்ளாகச் சிரித்துக்கொண்டான்.

கொஞ்ச நேரம் முன்பாக, பார்க்கப் பரிதாபமாக வாலைச் சுருட்டி அவள் நின்றுகொண்டிருந்த காட்சி திரும்பவும் மனதில் வந்து மறைந்தது. தான் எப்பொழுதாவது அவளிடம் நெருக்கமாக

இருந்திருக்கிறோமா என ஞாபகப்படுத்திப் பார்த்தவனுக்கு மனதில் சங்கடம் நிரம்பிற்று. பெண்குழந்தை என்றாலே தனக்கு இத்தனை விருப்பமின்மை எதனால் உண்டாயிற்று என யோசித்தவனுக்கு அதை வெறுப்பு என்று ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவள் சிறுவயதிலிருந்து தன்னிடம் கேட்ட ஒவ்வொரு பொருளையும் வாங்கித் தந்து அவளைச் சந்தோஷப்படுத்தியதை நினைவில் கொண்டுவந்தது. அவளது பேரில் தான் கொண்டிருந்த ஆர்வமின்மைக்குக் காரணம் ஆண் குழந்தை வேண்டும் என்கிற அதீத ஆசைதானே தவிர வேறு ஒன்றுமில்லை. அதோடு தான் எந்தக் காலத்தில் அதிக நேரம் வீட்டிலிருந்திருக்கிறோம் என்பதும் நினைவுக்கு வந்தது. சாப்பிடும் நேரம், உறங்கும் நேரம் தவிர மற்றபடி எப்பொழுது மனைவியோடும் பிள்ளையோடும் இருந்து பேசிக் கொண்டிருந்திருக்கிறோம். தன்னுடைய இயல்பினால்தான் ராபியாவோடு விலகியிருந்திருக்கிறோமே தவிர, வெறுப்பினால் அல்ல என்றும் நிச்சயப்படுத்திக் கொண்டு, “போதும்மா, அத்தாவுக்கு வலி விட்டுப் போச்சு” என்று சொல்லியவன் அவளது கையைப் பற்றி தேய்ப்பதை நிறுத்திவிட்டுத் தனக்கு அருகாக அவளை இழுத்தான்.

சரியாகத் தேய்த்தோமா என்கிற கவலை படிந்த முகத்தோடு அவனருகாக வந்தவளைப் பார்த்தவனுக்கு அவள் திடுமென வளர்ந்து பெரிய பெண்ணாக மாறிவிட்டதுபோலிருந்து ஆச்சரியத்தை உண்டு பண்ணிற்று. தாவணி போட்ட பிறகு அவன் இன்றுதான் மகளை மிக நெருக்கத்தில் பார்க்கிறான். திடீரெனத் தன் மனம் ஏனோ அவள் மீதான பிரியத்தினால் நிரம்பித் ததும்புவதுபோல உணர்ந்தான். சற்று நேர அமைதிக்குப்பிறகு போகட்டுமா என்கிற கேள்வியோடு நின்றுகொண்டிருந்தவளிடம், “அத்தா நாளக்கி மதுரைக்குப் போவேன், உனக்கு என்ன வாங்கிட்டு வரட்டும்?” என்று கேட்டான்.

கொஞ்சநேரம் மருந்து தேய்த்துவிட்டதற்காகத் தனக்கு இவ்வளவு பெரிய மரியாதையா என்ன என்கிறமாதிரி அசந்துபோய் நின்றவள் சிறிது நேரம் யோசனைக்குப் பிறகாக, “அக்கா கல்யாணத்துக்குப் போட தங்கத்துல காது வளையம் வேணும். வாங்கிக் குடுக்கிறீங்களா?” தான் மிகப்பெரிய சாமானாகச் சொல்லிவிட்டோமோ என்கிற கவலையும், கிடைக்குமாவென்கிற நிச்சயமின்மையும் அவள் குரலில் இணைந்தேயிருந்தது. அவளது பெரிய விழிகள் ஆச்சரியத்தில் இன்னும் கூட விரிந்திருந்தன, “வளையம் மட்டும் தானா? வேற?” மகளை உற்சாகப்படுத்தும் விதமாகவும் அவளது கவலையைப் போக்கும் விதமாகவும் கேட்டவனிடம், “போதுத்தா” என்று அவசரமாகச் சொன்னாள். “கரண்ட் இல்லையில்ல, நான் உங்களுக்கு விசிறியில வீசிவிடட்டுமா?” என்று ரொம்பவும் அக்கறையோடு கேட்டாள். அந்த அக்கறையில் தன்னை இன்னும் பெரிய மனுஷியெனக் காட்டிக் கொள்ளும் தந்திரம் இருந்ததைக் கரீமினால் கண்டு கொள்ள முடிந்தது.

அடுத்தநாள் காலை வீட்டிற்கு வந்த சுலைமானிடம் ராபியாவின் முன்பாகச் சொன்னான். “நேத்து தொழுகுறப்போ கால் வலின்னு சொன்னேன் இல்ல, என்மக மருந்து தேய்ச்சுவிட்டா. பஞ்சா பறந்துருச்சு தெரியுமா?”

தலைகால் புரியாத சந்தோஷமும் வெட்கமும் ஒன்றுசேர ராபியா ஒரே ஓட்டமாக ஓடி மறைந்தது ஞாபகம் வந்து சிரித்துக் கொண்டவன் சட்டை உள் பாக்கெட்டில் கையைவிட்டுக் காலையில் மதுரையில் வாங்கிய வளையம் பத்திரமாக இருக்கிறதாவெனப் பார்த்துக் கொண்டான். இவன் வருமுன்னே ராபியா உறங்கிவிட்டாள். காலையில் கொடுக்கலாம் என நினைத்துக் கொண்டான். மதுரை மார்க்கெட்டில் காய்கறி வாங்க நின்றபொழுது யாரோ தன்னைப் பார்த்து அண்ணே எனக் கூப்பிட்டது காதில் விழுந்ததும்

திரும்பியபோது அங்கே பாத்திமா நின்று கொண்டிருந்ததைப் பார்த்து தான் அதிர்ந்ததும் நினைவுக்கு வந்தது.

தெருவென்றும் பார்க்காமல் அவனது காலில் விழுந்து அழுதவளை எழச்செய்து தர்மசங்கடத்துடன், “என்ன?” என்றான். எதுவும் பேசாமல் அழுதுகொண்டிருந்தவளிடம் கோபத்தைக் காட்டாமல், “இப்ப என்ன செய்யச்சொல்ற? நடுத்தெருவுல அசிங்கம்புடிச்ச மாதிரி அழுதுக்கிட்டு . . .! இப்ப புள்ளைய நெனச்சு அழுதாப் போதுமா? இனி ஒண்ணும் பண்ண முடியாது. கிளம்பிப் போயிரு.” கடுப்பாகச் சொன்னவன் அங்கிருந்து உடனே போய்விட எத்தனித்தான். அவளைப் பார்க்கவே சகிக்க முடியாமல் கண்றாவியாக வேறு இருந்தது. மார்க்கெட்டில் காய்கறி வாங்கிக்கொண்டிருந்தவர்களின் பார்வை முழுக்கத் தன்மீதும் பாத்திமாவின்மீதும் விழுந்திருந்ததைக் காணச் சங்கடமாக உணர்ந்தான்.

“அண்ணே, என்மகன எப்புடியாவது என்கிட்ட கூட்டிவந்து ஒப்படைச்சிங்கன்னா ஒங்களுக்கும் நன்மையாப் போகும், எங்கம்மா வரமாட்டா. அவனமட்டும் கொண்டு வந்து என்கிட்ட விட்டுருங் கண்ணே.” சேலைத்தலைப்பினால் வாயைப் பொத்திக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதவளைப் பார்க்கும்பொழுது பாவமாக இருந்தது. பார்க்கவே சகிக்கமுடியாதபடிக்கு இளைத்துக் கறுத்துப் போயிருந்தாள். அவளைப் பார்க்க இவனுக்கு எரிச்சலாக இருந்தாலும், அதனைக் காட்டிக்கொள்ளாதபடிக்கு, “எங்கே அவன்?” என்றான்.

“அவரு இங்கெதான் மார்க்கெட்ல காய்வியாபாரம் பாக்குறாரு. நானும் கூட இருப்பேன்,” சொல்வதற்கே நாவு வராமல் குழறிற்று அவளுக்கு.

அவளது அழுகைக் குரலைக்கேட்டு ஒன்றிரண்டுபேர் தங்கள் வேலைகளைவிட்டுவிட்டு இவர்களுக்கு மிக அருகாக வந்து நின்று

கொண்டு ஆர்வம் கொப்பளிக்கும் கண்களினால் இவர்களையே உற்றுப்பார்க்க ஆரம்பித்திருந்தார்கள். நடுப்பகல் வெயில் தேங்கிய தெருக்களின் வெப்பத்தைத் துளியும் பொருட்படுத்தவியலாதபடி பாத்திமாவின் அழுகுரல் அவர்களை வசியப்படுத்தியிருக்க, 'ச்சே . . .! என்ன இது சனியன், அசிங்கம் பிடித்ததுபோல' என்று நினைத்தவன் அவ்விடத்திலிருந்து ஓடிவிடவேண்டுமென்கிற பதற்றத்துடன் அவசரமாக, "சரி! நான் கௌம்புறேன் நேரமாகிருச்சு, பிள்ளைய கூட்டிவர்றது ஊருக்குள்ள யாரும் அறியாதபடி செய்யணும். எனக்குப் பிரச்னையாப் போயிரும். கொஞ்சநாள் பொறு. கடைப் பயலுக எவன்கிட்டயாவது இலியாஸை அனுப்பி வைக்கிறேன்." அவளது நிலை பரிதாபத்தை உண்டு பண்ணுவதாக இருக்க சமாதானப்படுத்தும் விதமாகப் பொறுமையாகச் சொன்னவன், "ஒங்க கடை எதுன்னு அடையாளம் காட்டு தெரிஞ்சுக்கிர்றேன்" என்றான். அவனைப் பார்த்து அருகில் வரவே பயந்து வந்து கேட்டவளுக்கு, அவன் தனது கோபத்தையே வெளிக்காட்டாமல் இலியாஸைக் கூட்டிவந்து விட ஒப்புக்கொண்டதில் உண்டான ஆச்சரியத்தில் ஒரு நிமிடம் திகைத்து நின்றாள். பிறகு சட்டென சுதாரித்துக் கொண்டவளாக, "அதோ, பாருங்க அந்தக் கடைதான். அண்ணே எப்புடியாவது இந்த உதவியச் செய்ங்கண்ணே. நான் செஞ்ச பாவத்துக்கு என்னையத் தண்டிச்சிறாதீங்கண்ணே," என்று மறுபடி கேவிக்கேவி அழுதவளைப் பார்க்கப் பாவமாக இருந்தது கரீமிற்கு. 'கிறுக்கு மொட்டை' என மனதினுள்ளே கறுவிக்கொண்டவன், சட்டைப்பையில் கைவிட்டு இருநூறு ரூபாயை எடுத்து "இந்தா" என்று அவளிடம் நீட்டிவிட்டுத் திரும்பிப்பார்க்காமல் வேக வேகமாக நடந்தான்.

கடகடவென அண்டா உருளும் ஓசை அவனைத் தன் நினைவுக்குக் கொண்டு வர சத்தம் வரும் திசை நோக்கிப் பார்வையைத்

திருப்பினான். பிரியாணிக்குத் தாளிசா வைப்பதற்காக பண்டாரி அண்டாவை உருட்டிக் கொண்டிருந்தான். அவனுக்கு அலுப்பாக இருந்தது. தூங்கப் போகலாமா என யோசித்தவன் அண்ணன் மட்டும் நின்று மேற்பார்வையிடுவது சிரமம் என நினைத்து, காலை நாற்காலியிலிருந்து எடுத்து கீழே வைத்து எழுந்து நின்று கைகளை நீட்டி நெட்டி முறித்தான். நீட்டிய கையில் பந்தலில் ஒட்டியிருந்த ஜரிகைக் காகிதம் தட்டுப்பட அண்ணாந்து மேலே பார்த்துவிட்டுக் கைகளைக் கீழே போட்டான் பந்தலில் ஒட்டிய வண்ணவண்ண ஜரிகைக் காகிதங்கள் காற்றில் ஒன்று சேர்ந்தாற் போல ஆடுவதில் வரும் சலசலவென்கிற ஓசை கேட்பதற்கு இனிமையாக இருக்க சற்று நேரம் அதனைக் கேட்டவாறு நின்று கொண்டிருந்தவனுக்குப் பந்தலை இன்னும் அதிகமாகவே சீரியல் விளக்குகளால் ஜோடித்திருக்கலாம் எனத்தோன்றியது.

சமைக்கும் இடத்தை நோக்கி அடி எடுத்து வைத்தவனுக்கு பாத்திமாவின் கழுத்தில் தாலி ஏதும் இருந்ததா என்கிற சந்தேகம் திடீரென வந்தது. அடடா கவனிக்காமல் போனோமே என நினைத்து ஆதங்கம் கொண்டான். சுலைமானுக்குத் தான் பாத்திமாவிற்குப் பணம் கொடுத்தது தெரிந்தால் எப்படியிருக்கும் என்கிற நினைப்பு எழ, தனக்குள்ளாகவே சிரிப்புண்டாயிற்று. சிரித்தபடியே கைலியைத் தூக்கி மடித்துக் கட்டியபடி சமைக்கும் இடத்திற்குச் சென்று கவனிக்க ஆரம்பித்தவன், அண்டாவில் எதையோ கிண்டிக் கொண்டிருந்த பண்டாரி சாகுல்பாயிடம், “முகமதலி ராவுத்தர் வீட்டுச் சோறு எப்புடி பேர் விளங்கும்னு ஒங்களுக்குத் தெரியும், நாளைக்கும் அதே மாதிரி சாப்பாடு அமையணும் சாகுல்பாய்” என்று உற்சாகப்படுத்த ஆரம்பித்தான்.

# 36

விரல்களில் மருதாணியின் உறுத்தல் வஹிதாவுக்கு அசௌகர்யத்தை உண்டாக்கித் தூங்க விடாமல் செய்தது. கொசு உடம்பெங்கும் கடித்துக்கொண்டேயிருப்பது போல அங்கங்கே அரித்துக்கொண்டிருந்தது. மருதாணி அழிந்தாலும் சரி என்று அதிகமாக அரிக்கிற இடங்களில் சொறிந்து விட்டுக் கொண்டாள். விடிவிளக்கின் ஒளி அறையெங்கும் நிரம்பியிருந்தது. படுக்கையிலிருந்தபடியே ஜன்னல் வழியே தெருவைப் பார்த்தாள். இருண்டு கிடந்த தெருவில் தனித்து நின்ற ஓராசு வீட்டு வேப்பமரத்தின் கிளைகளுக்குள் திரண்டு கிடந்தது இருள்.

ஒரு இலையைக்கூட காணமுடியாதபடிக்கு இருளுக்குள் ஒளிந்து கிடந்தன கிளைகள். கிளைகளுக்கிடையே இருண்ட கூடுகளுக்குள் சன்னமான குரலெழுப்பியபடி இருக்கிற பறவைகளோடு தானும் போய் ஒளிந்துகொள்ள முடியாதா என்கிற ஏக்கம் வஹிதாவிடம் படர்ந்தெழுந்தது. நாளை வேறொரு வீட்டில் யாரோ ஒருவனோடு படுத்திருக்கப்போகிறோம் என்கிற நினைவு தரக்கூடிய உணர்வில் மிஞ்சியிருப்பது சந்தோஷமா, பயமா? புரியாத உணர்வாய் அவ்வுணர்வு அவளை ஆட்கொள்ள அருகில் படுத்திருந்த ராபியாவை ஒரு கணம் உற்றுப்பார்த்தாள். ஆழமான அமைதியில் சலனமற்று உறங்கிக்கொண்டிருந்தாள் ராபியா. வஹிதாவுக்குத் திடீரெனத் துக்கம் பெருகிற்று. தன்னால் இனி இப்படிப் கவலையில்லாமல் தூங்க முடியுமா என்கிற சந்தேகம் உண்டாயிற்று. நிச்சயமாக முடியாது என்றுதான் தோன்றிற்று. அவள் இங்கிருந்து போய்விடப்போகிறாள். தான் பிறந்த வீட்டை விட்டு அம்மா, அக்கா, தங்கை என்று

அனைவரையும் பிரிந்து செல்லப் போவதை அவளால் தாங்கிக் கொள்ளமுடியவில்லை. மருதாணி வைத்துவிட்ட பிறகு அம்மாதான் அவளுக்குச் சாப்பாடு ஊட்டி விட்டாள். அந்த அம்மாவின் பிரியத்தை விட்டுவிட்டுப் போய்விட வேண்டும் என்பதை நினைக்கையிலேயே தாங்க முடியவில்லை அவளுக்கு.

அவளுக்கு இந்த வீட்டை விட்டுப்போய் விடப்போகிறோம் என்பதே பெரிய இழப்பாக இருந்தது. அவள் சிறுவயதிலிருந்தே ஓடிவிளையாடிய நீண்ட தாழ்வாரத்தை, பெரிய பெரிய கல்பதித்த முற்றத்தை, கை வலிக்க, தலைசுற்றி மயக்கம் வரும்வரைக்கும் சுற்றி விளையாடிய தாழ்வாரத்து இரும்புத்தூண்களை எல்லாம் விட்டுவிட்டுப் போவதென்பதைக் கற்பனை செய்துகூடப் பார்க்க விரும்பவில்லை. படிப்பதற்காக நன்னா வீட்டிற்குப் போகும் போதெல்லாம் இப்படித் தோன்றியதேயில்லை. இப்போது மட்டும் இப்படித் தோன்றுவது வினோதமாக இருந்தது. முன்பெல்லாம் பெரும்பாலும் இரவு நேரங்களில் அடிக்கடி கரண்ட் போய்விடும். அவள் இங்கிருக்கும் அந்த இரவு நேரங்களில் அம்மா, சித்தி, அப்புறம் நபிஸா, ஷெரிபா, மும்தாஜ் எல்லோருமாகத் தெரு வீட்டுத் திண்ணையில் காற்று வாங்கியபடி தம் வீட்டு ஆண்கள் கடை சாத்திவிட்டுச் சாப்பிட வருவதை எதிர்பார்த்து உட்கார்ந்து அரட்டையடித்துக் கொண்டிருப்பார்கள். இவள் மட்டும் வாசலில் கயிற்றுக் கட்டிலைப் போட்டுப் படுத்துக்கொண்டு வானத்தைப் பார்த்துக் கொண்டிருப்பாள். அருகில் சித்தியின் சிறிய பேட்டரி டிரான்சிஸ்டரில் இலங்கை வானொலியில் ஒலிக்கும் பாடலை ரசித்தபடி! சில சமயம் வெளித்திண்ணையிலிருந்தபடி எட்டிப் பார்க்கும் மும்தாஜ், “உங்க மக, ஆள் பேரோட சேரவே மாட்டாள் றைமாக்கா, தனிமையில இனிமை காணுறதுல அவள மாதிரி

முடியாது” என்று கிண்டலாகச் சொல்லிச் சிரிப்பாள்.

வஹிதா அதைக் காதில் வாங்கிக்கொள்ள மாட்டாள். அவளுக்கு எப்பொழுதுமே வானத்தின் மீது மிகுந்த ஆர்வம் உண்டு. இந்த வானத்திற்கு அப்பால் என்ன இருக்கும், இந்த வானம் எங்கு போய் முடியும்? அவளுக்கு விளங்கிக் கொள்ளவே முடிந்ததில்லை. வானத்தைப் பற்றிய கதைகள் நிறையவே தெரியும் அவளுக்கு! இருட்ட ஆரம்பிக்கும் நேரத்தில் மொட்டைமாடியில் தனித்திருந்தால் அம்மா கோபிப்பாள், வானத்தில் பட்சி பறக்கும், கீழே இறங்கு என்று! ஏழு நரகம், ஏழு சொர்க்கம், ஏழு கடல், ஏழு மலை என்று எல்லாவற்றையுமே படைத்த அல்லாவை மட்டும் யார் படைத்திருப்பார்கள்? இதெல்லாவற்றையுமே படைக்க அல்லா வேண்டுமென்றால் அந்த அல்லாவை யாராவது படைத்துத் தானே இருக்க வேண்டும். அதுயார்? இப்படியெல்லாம் தனக்குள் கேட்டுக் குழப்பிக்கொள்வாள்.

ஒரு நாள் அம்மாவிடம் இதைக் கேட்டபொழுது, அவள் முகம் கோபத்தில் சிவந்து சுருங்கிற்று. “நீ இப்பிடிக் கேட்ட மறு நிமிஷமே காபிராகி விட்டாய்” என்றவள், “இனிமேலும் இதையெல்லாம் கேட்டுக்கிட்டுத் திரியாதே” என்றாள். அவளது குரலில் தெரிந்த கடுமையினை இன்று நினைக்கையிலும் கூட அவளுக்கு உடல் நடுங்கிற்று. யாரிடமும் அதிர்ந்து ஒரு வார்த்தை பேசாமலேயே அனைவரையும் தன் கட்டுக்குள் வைத்திருக்கும் அவளுக்கு இத்தனை மோசமாகக் கோபம் கொள்ளவும் முடியும் என்பதை அன்று அறிந்து கொள்ள முடிந்த பிறகு, இவள் மிகவும் பயந்துதான் போனாள். அதன் பிறகு அவள் தன் சந்தேகங்கள் தெளிவு பெற யாரையும் அணுகியதில்லை.

தூக்கத்தில் ராபியா எதுவோ சொல்வது காதில் விழுந்தது. எழுந்து

உட்கார்ந்து கொண்டு அவளை உற்று நோக்கினாள் எதுவும் பேசுகிறாளா என்று. வெளியிலிருந்து பிரியாணி வாசனை காற்றில் கலந்து அறைக்குள் வந்தது. வாசலில் ஆள் நடமாட்டம் இருந்து கொண்டிருந்தது.

அவளுக்குச் சிக்கந்தரின் ஞாபகம் வந்தது. அவன் தன்னிடம் எப்படி நடந்து கொள்வான். பிரியமாக இருப்பானா, இல்லை கரீம் சச்சாமாதிரி கோபக்காரனாக இருப்பானா என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டாள். எப்போதாவது அவள் பார்த்திருந்த சினிமாக்களில் உள்ளது போல முதல் இரவில் கணவன் மனைவியை அணைப்பதுபோல மிருதுவாகத் தொட்டு அணைப்பானா, இல்லை வேறுமாதிரியா? அவளுக்குச் சந்தேகமாக இருந்தது. மும்தாஜும் நபிஸாவும் ஏன் இப்படி அசிங்கமாகப் பேசிக்கொள்கிறார்கள், அவர்களும் பெண்கள்தானே? நன்றாகச் சாப்பிட்டு வீட்டுக்குள்ளேயே கிடந்தால் இப்படித்தான். வேறு சிந்தனை இருந்தால்தானே என்று மனதிற்குள் திட்டிக்கொண்டாள். அம்மாவும் சித்தியும் இங்கேதானே இருக்கிறார்கள், அவர்கள் இப்படி ஒரு நாளாவது, ஒரு வார்த்தையாவது பேசியிருப்பார்களா? மறுபடி மறுபடி அவர்களைத் தனக்குள் திட்டிக்கொண்டாள். தான் திடீரென பெரிய மனுஷித்தனத்துடன் அவர்களைத் திட்டித் தீர்ப்பது அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. திரும்பவும் சிக்கந்தர் ஞாபகம் வந்தது அவளுக்கு. அவன் சினிமாவில் மாதிரியில்லாமல் வேறு மாதிரி நடந்து கொண்டால் என்ன செய்வாள். இது எனக்குப் பிடிக்கவில்லை என்று சொல்வாளா? சொல்ல முடியும் என்று அவளுக்குத் தோன்றவில்லை. தன் அழகைப் பார்த்து அவன் என்ன சொல்வான். நிச்சயமாகச் சந்தோஷப்படுவான் என்றுதான் தோன்றிற்று.

திடுமென அவளிடத்தில் பயம் கலந்த சுய பச்சாதாபம்

உண்டாயிற்று. ஒருவேளை தான் நினைத்த மாதிரியில்லாமல் அவன் பொல்லாதவனாக இருந்தால்தான் என்ன செய்ய முடியும் என்கிற கவலை உருவாகி அவளை அழுத்திற்று. அவளுக்குக் குழப்பமாக இருந்தது. தலை வலித்தது. இரவு படுக்கப் போகுமுன் அம்மா சொல்லிவிட்டுப் போனாள், எதையும் நினைக்காம நல்லாத் தூங்கு, அப்போதான் காலையில முகம் நல்லா இருக்கும் என்று! அவள் எவ்வளவோ முயற்சித்தும் தூங்க முடியவேயில்லை.

கனவில் ஏதேதோ வந்து கொண்டிருந்தது. அவள் சிறுவயதில் விளையாடிய கக்காளித்தெருவில் திடீரென ஓடிக்கொண்டிருக்கிறாள். அவள் பின்னாலேயே அம்மா துரத்தி வருகிறாள். அந்தத் தெரு சாக்கடைகளால் நாறிக்கிடந்தது. அம்மா அவளை எத்தனையோ நாள் கண்டித்திருக்கிறாள் அங்கே போய் விளையாடாதே என்று! ஒவ்வொரு குடிசையின் முன்பாகவும் சாக்கடைக்குப் பாத்தி கட்டிவிட்டு இருப்பார்கள். அதைத் தாண்டித்தான் ஒவ்வொரு வீட்டிற்குள்ளும் நுழைய முடியும். கோழி சாக்கடையைக் கொத்திக் கிளறி தெருவே அசிங்கமாக இருக்கும். அந்தத் தெருப் பெண்கள் எல்லோருமே வாயில் வெற்றிலையை அதக்கிக்கொண்டு பவிசாகச் சிரித்தபடி ஒன்றுகூடி ஏதாவது ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருப்பார்கள். அந்தத் தெருவின் மீது அம்மாவுக்கு நல்ல அபிப்பிராயம் இருந்ததில்லை.

தெரு முடிவில்லாமல் வளர்ந்து கொண்டேபோயிற்று. இவள் ஓடிக்கொண்டேயிருந்தாள். திடீரென அம்மாவைக் காணவில்லை. அவள் எங்கே போயிருப்பாள் என்று தேடித்திரிந்தாள். இப்பொழுது ஒரு அடர்ந்த காட்டுக்குள்ளாக அவள் மட்டும் அம்மா அம்மாவெனக் கூப்பிட்டபடி தன்னந்தனியாக நின்று கொண்டிருந்தாள். பயத்தில் உயிர் போய் விடும் போலிருந்தது அவளுக்கு. யாரோ உலுக்கி எழுப்பினார்கள். “வஹிதா, எந்திரி.” திடுக்கிட்டு விழித்தாள், சித்திதான்

நின்று கொண்டிருந்தாள். “எந்திரி, விடியறதுக்குள்ள குளிச்சிட்டு வரலாம்” என்று அவளை எழுப்பிக் குளியலறைக்குக் கூட்டிப்போனாள்.

குளியலறையில் நுழைந்து பல் துலக்கியவளை, “சீக்கிரமா மருதாணியைக் கழுவு. குளிக்கணும்” என்று சொல்லிவிட்டு சொஹ்ரா சென்ற பிறகு சுடுதண்ணீர் வேம்பாவிற்கு அருகே குத்த வைத்து அமர்ந்து மருதாணியைப் பிய்த்து எடுத்த வஹிதாவுக்குத் தன் கையைப் பார்க்க ரொம்பவே ஆசையாக இருந்தது. எழுந்து நின்று உடையைக் களைந்து பாவாடையை மட்டும் நெஞ்சிற்குக் குறுக்காகக் கட்டிக் கொண்டு குளிக்கவென வேம்பாவிலிருந்த தண்ணீரை வாளிக்குள் திருகிவிட்டாள். கொதிக்கும் நீரிலிருந்து குப்பென எழுந்த ஆவி முகத்தில்பட தொட்டியிலிருந்த குளிர்ந்த நீரைக் குவளையினால் அள்ளி அள்ளி வாளித்தண்ணீரில் ஊற்றினாள் “வஹிதா, கதவைத் தொற” என்கிற சித்தியின் குரல் காதில் விழ, “நானே குளிச்சுக்கிர்றேன் சித்தி” என்று கெஞ்சலாகச் சொல்லியவளிடம், “அதெல்லாம் முடியாது. நான் குளிச்சுவிடுவேன். தொற கதவை” என்று சொஹ்ரா அதட்ட கூச்சத்தில் நெளிந்த படியே கதவைத் திறந்துவிட்டாள் வஹிதா.

“என்னத்துக்கு வெக்கம்? பொம்பளைக்கிப் பொம்பளை” என்று ஆதரவாகச் சொல்லியபடி அவளது தலையின் மீது சீயக்காயை வைத்துத் தேய்க்கத் துவங்கினாள் சொஹ்ரா.

முகூர்த்த நேரம் பத்து மணி என்பதால் எட்டுமணிக்கே நபிஸாவும் மும்தாஜும் வந்து சேர்ந்திருந்தார்கள். றைமா முதல் நாளே சொல்லியிருந்தாள், “நீங்க ரெண்டுபேரும்தான் பொண்ணை அலங்காரம் செய்துவிடணும், சீக்கிரமா வந்து சேருங்க” என்று.

அறைக்குள்ளிருந்த வஹிதாவை நெருங்கி அவளைப்

படுக்கையிலிருந்து எழச் செய்த நபிஸா, "என்னம்மா புதுப்பொண்ணு, சாப்டாச்சா?" என்று கேட்டபடியே தலையை வாரிவிட ஆரம்பித்தாள். "உம்" என ஒற்றை வார்த்தையில் பதில் சொன்னவளிடம், "ராத்திரியெல்லாம் தூக்கம் வந்துருக்காதே?" குறும்பாகக் கண் சிமிட்டிக் கேட்டாள் மும்தாஜ்.

கூச்சத்தில் நெளிந்த வஹிதாவை, "தலையை அசைக்காதே, சீவுறேன் இல்ல?" என்ற நபிஸா, "போயும் போயும் இந்தப் பொண்ணுகிட்டப்போய் ஒன்னோட நக்கல ஆரம்பிச்சியே" என்று மும்தாஜைப் பார்த்துச் சொல்லிச் சலித்துக்கொண்டாள்.

வஹிதா அமர்ந்திருந்த படுக்கை முழுக்க தலை அலங்காரத்திற்கு வேண்டிய சாமான்களோடு, வெளிநாட்டு லிப்ஸ்டிக், பவுடர், சென்ட், மேக்கப் பாக்ஸ், பூ, உடுத்தவேண்டிய பட்டுப் புடவை எல்லாமும் பரப்பி வைக்கப்பட்டிருந்தன. நபிஸா தலைக்கு வைக்க வேண்டிய நெத்திச்சுட்டி, குஞ்சம், ரிப்பன், ஹேர்பின் என ஒவ்வொன்றாகக் கேட்க, அதனை எடுத்து எடுத்துத் தந்து கொண்டிருந்த மும்தாஜ், வஹிதாவின் முன்புறமாக அமர்ந்து வெளிநாட்டு கிரீமைத் தன் உள்ளங்கையில் ஊற்றி இருகைகளிலும் தேய்த்து முகர்ந்து பார்த்துவிட்டு வஹிதாவின் முகத்தில் தடவி அழகுபடுத்தத் துவங்கினாள்.

"நல்ல வாசம் இல்லெ?" என்று நபிஸாவைப் பார்த்துச் சொன்னவள், மனதிற்குள், 'இதே மாதிரி லோஷனைச் சுலைமானிடம் சொல்லி எப்படியும் வாங்கி விட வேண்டும்' என நினைத்துக் கொண்டாள்.

வஹிதா அவர்கள் தன்னை அலங்கரிப்பதை மௌனமாகக் கவனித்துக் கொண்டிருந்தாள். நபிஸாவும் மும்தாஜும் தங்களை முழுதாக அலங்கரித்துக் கொண்டே வந்திருந்தார்கள். நபிஸா மெரூன் கலரில் பட்டுப்புடவை உடுத்தி, அதே கலரில் பிளவுஸ்

போட்டிருந்தாள். காதில் பெரிய ஜிமிக்கி, கழுத்தில் நிறைய கல்வைத்த நெக்லெஸ் போட்டு ரொம்பவே அழகாக இருந்தாள். அவளது சிவந்த நிறத்திற்கு மெரூன்கலர் மிகவும் அழகாக இருந்தது. மும்தாஜ் கிளிப்பச்சை நிறப் பட்டுப்புடவையும் புடவையின் பார்டர் நிறத்தில் சிவப்பு பிளவுஸும் அணிந்திருந்தாள். காதில் கல் இல்லாத பெரிய தொங்கட்டானும் காசு மாலையும் நெக்லஸும் அணிந்து இரு கைநிறைய தங்க வளையல்கள் போட்டிருந்தாள். அவள் நபிஸா அளவுக்கு அழகில்லை என்றாலும் அழகாகத்தான் இருந்தாள். கண் நிறைய மை தீட்டியிருந்த மும்தாஜைப் பார்த்து, “ஏக்கா இவ்வளவு மை போட்டுருக்கீங்க, கசிஞ்சிராது?” என்றாள் வஹிதா.

ஒரு நிமிடம் அலங்கரிப்பதை நிறுத்திவிட்டுப் படுக்கையிலிருந்த கண்ணாடியை எடுத்து முகம் பார்த்த மும்தாஜ், “ரொம்பவா இருக்கு?” என சந்தேகமாக இருவரையும் பார்த்துக் கேட்டவள், “அப்டி ஒண்ணுந் தெரியலை” என்றபடி மறுபடியும் தன் வேலையைத் தொடர்ந்தாள். அவளை ஒரு நாள் கூட கண்ணுக்கு மையிடாமல் பார்த்ததில்லை வஹிதா. “மைபோடலைன்னா செத்தே போயிருவேன் இல்லெ?” என்று அடிக்கடி சொல்லிக் கொள்ளவும் செய்வாள்.

“என்ன, அலங்காரம் முடிஞ்சுச்சா?” என்றபடி அறைக்குள் வந்த றைமா பதிலை எதிர்பார்க்காமலேயே உள்பீரோவைத் திறந்து அங்கிருந்த நகைப்பெட்டிகளை வெளியில் எடுத்தாள்.

“எல்லாம் முடிஞ்சுச்சு, சேலைகட்டுறதுதான் பாக்கி! சேலையை மாப்பிள்ளைவீடு இல்லெ கொண்டுவரணும்? அதுவரைக்கும் உடுத்த ஒரு நல்ல சேலையாக் குடுங்க” என்றாள் நபிஸா.

“மொத, இந்த நகையைப் போட்டுவிட்டிர்றேன், பெறகு சேலையைக் கட்டலாம். எனக்கு வேலை கெடக்கு.” நெற்றியில் முத்துமுத்தாக வியர்த்திருந்த வியர்வையைப் புடவை முந்தானையில் ஒற்றி எடுத்த

றைமா, நகைப்பெட்டிகளோடு வந்து படுக்கையின் நடுவே அமர்ந்தாள். நபிஸாவுக்கும் மும்தாஜுக்கும் நகைகளைப் பார்க்கப்போகிற ஆர்வம் முகத்தில் அப்பட்டமாகத் தெரிந்தது. வஹிதாவுக்குச் செய்த நகைகளில் பாதியைத்தான் றைமா அவர்களிடம் இதுவரை காட்டியிருந்தாள். மீதியை இப்பொழுதுதான் பார்க்கப் போகிறார்கள். றைமா டவுனில் போய் நிச்சயமாக நல்ல டிஸைனில் தொங்கட்டான்கள் செய்திருப்பாள். "தொங்கட்டான் நல்ல டிஸைன் எதுவும் இருந்தா, அதுமாதிரியே நாமளும் செய்யணும்" – நேற்றே இருவரும் பேசி வைத்திருந்தார்கள்.

பிஸ்மில்லா சொல்லி நகைப்பெட்டியைத் திறந்த றைமா, முதன் முதலாகச் சின்னஞ்சிறிய டப்பியிலிருந்த மூக்குத்தியைத் தனியே எடுத்து வஹிதாவின் கையில் கொடுத்துவிட்டு அவள் போட்டிருந்த பழைய மூக்குத்தியைக் கழற்றத் தொடங்கினாள்.

வஹிதாவின் கையில் பளிச்சிட்ட எட்டுக்கல் மூக்குத்தியைப் பார்த்த நபிஸா ஆவலாகக் கேட்டாள். "ஏக்கா, இது ஸ்ரீதேவி மூக்குத்தி இல்லெ, வைரமா?"

"ஆமா, வைரம்தான் மின்னுமாக்கும்?" என்று கிண்டல்செய்த றைமா, "இல்லெ தங்கம்தான். வைரம் நம்ப குடும்பத்துக்கு ஆகாதுன்னு வஹிதா அத்தா வாங்கவிடலை." ஆதங்கத்துடன் சொன்ன றைமா, மூக்குத்தியை மகளுக்குப் போட்டுவிட்ட கையோடு தானே ஒவ்வொரு நகையாக எடுத்து நபிஸா, மும்தாஜிடம் காட்டிக்காட்டிப் போட்டுவிட்டாள். வஹிதா மனதில் சந்தோஷம் உண்டாயிற்று. இந்நேரம் ராபியா தன் அருகில் இருந்தால் உற்சாகத்தில் துள்ளிக் குதித்துவிடுவாள் என நினைத்தவள், "ராபியா எங்கேம்மா?" என்றாள். "அவளா? தெரியலை, பந்தல்ல வேடிக்கை பாத்துக்கிட்டு நிக்கிறாளோ என்னவோ" என்றவள், "இந்நேரம் இந்த நகை,

அலங்காரத்தையெல்லாம் பாத்தான்னா ஒடனே எனக்கும் கல்யாணம் வைங்கன்னு சொல்லிடுவா," கேலியாகச் சொல்லிச் சிரித்தாள்.

நபிஸாவும், "பெறகு? லேசுப்பட்டவளா எம்மருமக, கெட்டிக் காரியில்லே" என்று பெருமையோடு அதனை ஆமோதித்தாள். றைமாவுக்கு இந்தச் சமயத்தில் ஏனோ கரீமின் நினைவு வந்தது. அவன் காதில் விழுந்திருந்தால் . . . என நினைத்துக்கொண்டாள்.

வஹிதாவுக்கு மொத்தம் ஆறுமாடல் தொங்கட்டான்கள் செய்திருந்தாள் றைமா. பச்சைக்கல் வைத்த தொங்கட்டான், பார்க்கக் கண்ணைப் பறிக்கும் அழகோடு இருந்தது. அதனை ஆர்வமாகக் கையில் எடுத்துப் பார்த்த மும்தாஜ், "இது எத்தினி பவுன்?" என்றாள்.

"ஒரு பவுன்தான், ஏன் நல்லாயிருக்கா?" சந்தோஷமாக இருந்திருக்க வேண்டும் றைமாவுக்கு. "ஆமா, நானும் கூட இதைப் போல ஒண்ணு செஞ்சாத் தேவலை." இழுத்தவாறு சொன்னாள் மும்தாஜ். ஆசாரியிடம் மாடலுக்குக் காட்ட றைமா இதனைத் தருவாளோ என்கிற கவலை அவளது இழுப்பில் தெரிந்தது.

"செஞ்சுபோடு, யாரு வேணாங்கறா?" பெருமையாகச் சொன்னாள் றைமா. தான் தேர்வு செய்துசெய்த டிஸைன் மற்றவர்களுக்குப் பிடித்திருப்பதை அவள் ரொம்பவே பெருமையாக உணர்ந்திருக்க வேண்டும். "இனிபாரு, ஊரே இந்தத் தொங்கட்டான்தான்! விதையை வெதைச்சாப்புல ஒருத்தி ஒண்ணு செஞ்சுரக்கூடாது. அடுத்தவளுக்கு வேர்த்திரும்" என்று சொல்லிச் சிரித்த நபிஸாவுக்குக் கவலையாகவும் இருந்திருக்கவேண்டும். வஹிதாவுக்குச் சிரிப்பு வந்தது. ஊரில் யாராவது ஒருத்தர் ஒரு நல்ல டிஸைன் புடவை எடுத்தாலும் சரி, நகை செய்தாலும் சரி, உடனேயே அதேமாதிரி வீட்டிற்கு ஒன்று வாங்கினால்தான் ஆயிற்று. சவுராக்கா சொல்வாள், "ஒருத்தி புள்ளை உண்டானாப் போச்சு, ஒருத்தி ஒரு சேலை எடுத்துட்டாப் போச்சு,

இம்புட்டு ஏன், ஒருத்தி கூடக்கொஞ்சம் மூத்திரம் பெய்ஞ்சாக்கூடப் போச்சு” என்று.

நகையெல்லாம் போட்டு முடித்த கையோடு மகளை எழுந்து நிற்கச் சொல்லி அழகுபார்த்த றைமா, “இப்ப சொல்றதுதான் கேட்டுக்க! எப்ப நகை போட்டுக்கிட்டாலும் பெட்ல நடுவில உக்காந்துதான் போட்டுக்கணும். நின்னுக்கிட்டு போட்டேன்னா கீழ விழுந்து கல்கொட்டிப் போயிரும் என்ன?” என்று அறிவுரை சொன்னாள். பின் மும்தாஜின் பக்கமாகத் திரும்பி, “ஏம்மா கொஞ்சம் சொஹ்ராவைக் கூப்பிடு, வந்து பாக்கட்டும்” என்றாள்.

நபிஸா சேலையை உடுத்திவிட ஆரம்பிக்கையில், றைமா பெருமையோடு தன் மகளின் அழகைப் பார்த்தபடி நின்றுவிட்டு தன் இருகைகளாலும் அவள் முகத்தில் வழித்துத் தன் நெற்றிப் பொட்டில் சொடுக்கு விட்டாள். அம்மாவின் கண்களில் நிரம்பியிருந்த பெருமிதம் கலந்த கண்ணீர் வஹிதாவின் கண்களையும் கலங்கச் செய்ய, யாருக்கும் தெரியக்கூடாது என்கிற நினைப்பில் தரையைப் பார்த்துக் குனிந்துகொண்டாள். நபிஸா சேலைகட்டி முடித்த கையோடு, “அம்மாடி, இப்பவாவது உள்ள இருக்கற தாவணிய உருவு” என்று சொல்விவிட்டு, “முகூர்த்த நேரம் பத்து தான். இருந்தாலும் இப்பவே பொண்ணைக் கூட்டிப் போய் ஹால்ல உட்கார வைச்சுருவோம், ஏன் றைமாக்கா?” அனுமதி கேட்ட நபிஸாவிடம், “கொஞ்சம் பொறு! அவுக அத்தாவை வரச்சொல்லி மகளைக் காட்டிருவோம்” என்று சொல்லிவிட்டு வெளியே சென்றாள் றைமா.

வஹிதாவுக்குத் தன்னை முழுவதுமாகக் கண்ணாடியில் பார்த்துக் கொள்ள வேண்டும் போல இருந்தது. இதுவரைக்குமில்லாத அளவுக்கு அலங்கரிக்கப்பட்டிருக்கும் நிலையில் தான் பார்ப்பதற்கு எப்படியிருக்கிறோம் என்பதை அறிந்துகொள்கிற ஆவல் மிகுந்தாலும்

நபிஸாவும் மும்தாஜும் கிண்டல் செய்வார்கள் என்ற நினைவில் பேசாமல் ஆசையைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

றைமா சென்ற சிறிது நேரத்தில் உள்ளே வந்த காதர், அறைக்குள்ளாக நபிஸாவும் மும்தாஜும் நிற்பதைக்கண்டு சங்கோஜத்துடன் வெளியேபோக முயல, "நீங்க இருங்க, நாங்க வெளிய போறோம்" என்றபடி இருவருமாக வெளியே சென்றார்கள்.

நின்று கொண்டிருந்த மகளை ஒரு நிமிடம் உற்றுப்பார்த்த காதருக்குச் சந்தோஷத்தில் மனம் நிரம்பிக் கனத்தது. புடவையில் இவள்தான் எவ்வளவு வளர்த்தியாகத் தெரிகிறாள் என்று வியந்தவன், அவள் அப்படியே தனது தாயின் ஜாடையில் இருப்பதாக கற்பனை செய்து கூடுதலாகப் பெருமிதம் அடைந்தான். என் மகள் என்கிற பெருமிதத்தோடு அவளது சாந்தமான குணம் குறித்த நினைவும் சேர்ந்து கொள்ள அவளருகில் வந்தவன் குனிந்து கொண்டிருந்த அவளது முகத்தைத் தனது இருகைகளால் தொட்டு நிமிர்த்தி, "அத்தாகிட்ட என்ன வெக்கம்?" என்று பரிவோடு கேட்டான். இத்தனை ஆண்டுகாலத்தில் முதன் முதலாகத் தன் மகளைத் தொட்டுப் பேசுகிறோம் என்கிற நினைவு திடுமென மனதில் எழ அந்நினைவை அவன் தனக்குள்ளாகவே அடக்கினான்.

பிறகு தன் கைகளை மிருதுவாக மகளின் தோள்களின்மீது வைத்து அழுத்தி தன் அன்பினை அவளிடத்தில் காட்ட முயன்றவன், "என்னம்மா, நகைபோதுமா இன்னும் வேணுமா?" என்றான். வஹிதாவுக்கு அத்தாவைப் பார்க்க பாவமாக இருந்தது. தன்மீதுள்ள பிரியத்தைக் காட்ட இயலாமல் தத்தளிக்கும் அவரை சகஜமாக்கும் விதத்தில் இதமாகச் சிரித்தவள், போதும் என்கிற மாதிரி தலையசைத்து வைத்தாள். "வஹிதாக்குட்டி, பொண்ணா மாறிட்டிங்க போல" என்றபடி உள்ளே வந்த கரீம், அண்ணனுக்குப் பின்புறமாக ஒதுங்கி

நின்று கொள்ள, காதர் சட்டென்று மகளின் தோள்களின் மீதிருந்து கைகளை எடுத்துக்கொண்டு வருகிறேன் என்பதுபோல தலையசைத்துவிட்டு வெளியில் சென்றான். கரீம் சச்சா உள்ளே வந்தது வஹிதாவுக்கு நிம்மதியை உண்டுபண்ணிற்று. என்ன பேசுவது எனத்தெரியாமல் தடுமாறிக்கொண்டிருந்த தன் தந்தையை விடுவிக்கவெனவே அவர் வந்ததாக நினைத்துக் கொண்டாள்.

“என்னா இது திடீர்னு இவ்வளவு மாறிட்ட?” கரீம் அவளருகாக வந்து முதுகில் ஆதரவாகக் கை வைத்துக் கேட்டான். “போங்க சச்சா” என்று சொல்லிய வஹிதாவின் முகம் வெட்கத்தால் சிவந்திருந்தது.

“சரி சரி, போயிர்றேன்” என்றவன், “எங்கே உன்னோட தங்கச்சியக் காணம்?” என்றபடி வெளியே சென்றான். அவனது குரலில் இருந்த சந்தோஷத்தைக் கவனித்த வஹிதாவுக்குச் சச்சாவுக்கு இவ்வளவு பிரியமாகக் கூடப் பேசமுடியுமா என வியப்பாக இருந்தது.

அந்த மிகப்பெரிய நீண்ட வராந்தாவில், வரிசையாக விரிக்கப்பட்டிருந்த பாய்களில் பெண்கள் அமர்ந்திருக்க, ஹாலின் நட்ட நடுவில் சுவர் ஓரமாகப் போடப்பட்டிருந்த சோபாவின் மீது அலங்கரிக்கப்பட்ட வஹிதா மேற்கு நோக்கி அமர வைக்கப்பட்டிருந்தாள். தலையை முடிந்தவரைக்கும் நன்றாகக் குனிந்து தலைக்கு முக்காடிட்டிருந்த சிவப்பு ஜரிகை துப்பட்டாத்துணி முகத்தை மறைக்க, அது நழுவிக் கீழே விழுந்துவிடாதபடிக்கு அதனைத் தனது இருகைகளாலும் இறுக்கமாகப் பற்றிக் கொண்டிருந்தாள். தனக்கெதிராக அமர்ந்து கொண்டிருக்கிற பெண்களை யார்யார் எனப் பார்க்க எழுந்த ஆவலைச் சிரமத்துடன் அடக்கிக் கொண்டாள். கழுத்து வலித்தது என்றாலும் நிமிர்ந்து உட்கார்ந்தால், ‘பெண்ணுக்குத் துளிக்கூட வெட்கமில்லை’ என்கிற அவப்பெயரை அடைய வேண்டியிருக்கும் என்பதனால் குனிந்தே அமர்ந்திருந்தாள்.

இன்றைக்குப் பெண் அமர்ந்திருக்கும் நிலையை என்றென்றுமே சொல்லிக் காட்டிப் பேசுவார்கள் என்பதை அம்மா நேற்றே சொல்லி எச்சரித்து அச்சுறுத்தியிருந்தாள்.

ராபியா ஐந்து நிமிடத்திற்கு ஒருமுறையாவது எங்கிருந்தோ ஓடிவந்து அக்காவின் மடியில் விழுந்து, ஒரு புரளு புரண்டுவிட்டு ஓடிக்கொண்டிருந்தாள். பட்டுப்பாவாடை தாவணியில் ஆளே வேறுமாதிரியிருந்தாள் அவள். றைமாவும் சொஹ்றாவும் வருபவர்களை வரவேற்று உபசரித்து உட்கார வைத்துக் கொண்டிருந்தார்கள். இருவருமே ஒரே கலரில் ஒரே மாதிரி டிஸைனில் பட்டுப்புடவை எடுத்திருந்தார்கள்.

யாரோ ஒரு பெண் உள்ளே வந்தபொழுது சொஹ்றா, றைமாவோடு ராபியாவும் முன்னுக்கு நின்று, “வாங்க, வாங்க”வெனப் பெரிய மனுஷத்தோரணையோடு வரவேற்றுவிட்டு அவள் ஹாலில் அமர்ந்ததும் ஓடிவந்து, வஹிதாவின் மடியில் சாய்ந்து கொண்டு காதோரமாகக் கிசுகிசுத்தாள், “அவங்க ரமேஷோட அம்மா” என்று. அப்பெண் வந்தபொழுது கூடியிருந்த பெண்கள் கூட்டத்தில் எழுந்த சலசலப்பைக் கவனித்த வஹிதா ஒன்றும் புரியாமல் இருக்க, அப்பெண் பெரும்பாலானவர்களால் கவனிக்கப்படுவதன் காரணத்தை றைமாவினால் சகித்துக்கொள்ள முடியவில்லை. அவளை உற்றுப்பார்க்கத் துளிக்கூட யாரும் வெட்கப்படாததும் அவளிடத்தில் சங்கடத்தை உண்டாக்கிற்று.

தனது அழைப்பை ஏற்று வந்திருப்பவர்கள் அவமதிக்கப்படுவதும் அதைத் தடுக்கும் சக்தி தன் கைகளில்லை என்பதும் புரிய, அவமானத்தினால் குறுகிப் போனாள். வஹிதாவைப் பிரியும் சோகத்திற்கு இணையான சோகம் உண்டாயிற்று. மாப்பிள்ளை வீட்டு ஆட்கள் வரும்பொழுது இக்கூட்டத்தின் கவனம் திசை திரும்பும்.

அதுவரை இவர்களின் பார்வை அவள்மீது விழுவதைத் தவிர்க்க இயலாது. அப்பெண் கவனிக்கப்படுவதைத் தொலைவிலிருந்தே சொஹ்ராவும் கவனித்தாள். அவளும்கூட இந்தப் பிரச்னையை எதிர்கொள்ளாமலில்லை. மாரியாயி புதுப்புடவையுடன் நடமாடும் போதும் பரமனின் மருமகள் வந்து உள்ளே நுழைந்தபோதும் அனேகமாகப் பெண்கள் ஒவ்வொருவரும் சுவாரஸ்யம் மிக்க பார்வைகளால் அவர்களையே துழாவிக் கொண்டிருந்தார்கள்.

திடுமென அந்த இடமெங்கும் பெரும் மர்மம் சூழ்ந்து பெருகிவிட்டது போலவும் அந்த மர்மத்தின் சூழ்ச்சியிலிருந்து வெளியேறும் வழி தேடி அவர்கள் அலைவது போலவும் இருந்தது சொஹ்ராவுக்கு. இப்படி ஒரு தர்மசங்கடமான நிலை இருக்குமெனத் தெரியாமல் சிக்கிக்கொண்ட அவர்களை நினைத்துக் கஷ்டமாக இருந்தது சொஹ்ராவுக்கும் றைமாவுக்கும்.

மாப்பிள்ளை வீட்டார் வந்துகொண்டிருப்பதை ராபியாவும் சில பிள்ளைகளும் ஓடிவந்து சொன்னதும் ஏற்பட்ட பரபரப்பில் அங்கிருந்த அனைவரது கவனமும் திசைதிரும்பியபோது உண்டான நிம்மதியோடு றைமாவும் சொஹ்ராவும் அவர்களை வரவேற்கத் தயாராக முகப்புக்கதவை நோக்கிச் சென்று நின்றுகொண்டனர். கைகளில் தாம்பாளங்களோடு வந்த கூட்டத்தை, “வாங்கம்மா எல்லாரும்” என்று அவர்கள் வரவேற்கும் சத்தம் காதில் விழ வஹிதா தலையை இன்னும் அதிகமாகக் குனிந்து கொண்டாள். பதற்றத்தில் வியர்த்துக் கொட்டியது. அவளுக்கு எதிரே இருந்த காலியிடத்தில் கொண்டு வந்த தாம்பாளங்கள் வரிசையாக அடுக்கி வைக்கப்பட, வந்தவர்களுக்கு இடம்விட்டு நகர்ந்து அமர்ந்தனர் உள்ளூர்ப் பெண்கள்.

“மாப்பிள்ளை வீட்டார்களுக்கு இடம் விட்டு உக்காருங்கம்மா.”

சபியாவின் குரல் உரிமையோடு ஒலிக்க வஹிதாவின் காலடியில் அமர்ந்திருந்த நபிஸாவும் மும்தாஜும் ஒருவர் முகத்தை ஒருவர் கிண்டலாகப் பார்த்துச் சிரித்துவிட்டு வஹிதாவின் முகத்தை உற்றுக் கவனித்தனர்.

"மொத்தம் ஐம்பத்தி ஒரு தட்டு சீரு எடுத்துட்டு வந்திருக்கேன் பாருங்கம்மா எல்லாரும்," பெருமையோடு எல்லோரையும் பார்த்துச் சொன்ன சபியா, "உஷ். . . அல்லாஹு" என்றபடி வஹிதாவின் தோளைப் பிடித்து எழுப்பி, "இந்தாம்மா பொண்ணுகளா, பொண்ணுக்குத் தாலிகட்டுற சேலை உடுத்திவிடுவோம் எந்திரிங்க" என்று நபிஸாவையும் மும்தாஜையும் பார்த்துச் சொல்ல, அவர்கள் இருவரும் எழுந்து வஹிதாவைத் தொட்டு அணைத்தபடி அருகிலிருந்த அறைக்குள் நுழைந்தனர். அவர்கள் கூடவே உள்ளே வந்த சபியா, "மாப்பிள்ளை நேரா கார்லயே பள்ளிவாசலுக்குப் போயாச்சு, சடுதியா உடுத்தி விடுங்கம்மா. பிறகு இந்த மாலையையும் சேராவையும் வந்து நீங்களே கட்டிவிடுங்க" என்று சொல்லிவிட்டுப் போனாள்.

நபிஸா தன் கையிலிருந்த சிவப்புநிறப் பட்டுப்புடவையை பிரித்து உதறி வஹிதாவுக்கு உடுத்திவிட ஆரம்பிக்க, மும்தாஜ் கேட்டாள், "என்ன இது அதிசயமா இருக்கு, ஐம்பத்தொரு தட்டு சீரெல்லாம் . . ."

"அதான் கத்தையா பணம் வச்சு வாங்கியிருக்குல்ல அப்புறம் என்னலெ?" என்றாள் நபிஸா கடுப்பாக!

மறுபடியும் ஹால் நடுவே உட்கார வைக்கப்பட்ட வஹிதாவிடம் சாயிது கேட்கவென ஆண்கள் இரண்டுபேர், அஸரத் ஒருவரோடும் நோட்டுப் புத்தகத்தோடும் வந்து நிற்க, பெண்கள் கூட்டத்திலிருந்து வந்து கொண்டிருந்த சத்தம் அடங்கிவிட்டது.

"சுல்தான்ராவுத்தர் பேரனும் சையது ராவுத்தர் மகனுமான சிக்கந்தருக்கு காதர் ராவுத்தரின் மகளும் முகமது அலி ராவுத்தரின்

பேத்தியுமான வஹிதாபேகத்தை, ஒண்ணாவது சாட்சி ஜனாப், ஆனா, மூனா, ஹனிபா ராவுத்தர் முன்னிலையிலும் இரண்டாவது சாட்சியான ஜனாப் சையன்னா, சுலைமான் ராவுத்தர் முன்னிலையிலும் ஆயிரத்தி ஒரு ரூபாய் மஹருக்கு நிக்காஹ் செய்துதர சம்மதமா?" அழுத்தமான குரலில் ஓங்கி ஒலித்தது அஸரத்தின் குரல்.

வஹிதாவின் எதிரில் மிக நெருக்கத்தில் அமர்ந்திருந்த சபியா வஹிதாவின் காதோரம் நெருங்கி, "என்ன?" என்று கேட்க, என்ன சொல்வது எப்படிச் சொல்வது என்று புரியாத குழப்பத்தில் இருந்தாள் வஹிதா. சபியாவே தலையை அண்ணாந்து அஸரத்தைப் பார்த்து, "அஸ்ஸலாமு அலைக்கும்" என்று சொல்லி அவர்கள் கொண்டுவந்த நோட்டுப்புத்தகத்தைக் கொடுத்து வஹிதாவிடம் கையெழுத்துப் போடவைத்து அனுப்பினாள். சற்றுநேரத்தில் கருகமணியை எடுத்த சபியா, "ஐந்து கலிமா சொல்லும்மா" என்று சொல்லச் சொல்லி, அவள் சொன்ன கையோடு கருகமணியை வஹிதாவின் கழுத்தில் கட்டிவிட்டாள். தனது ஒரே மகனின் வாழ்க்கை சிறக்க தன்னையன்றி வேறுயாரும் அந்த இறைவனிடம் துஆ கேட்க முடியாது என்று நம்புபவள் போல, அவளேஅந்தப் பொறுப்பை எடுத்துக் கொண்டாள்.

வஹிதாவுக்கு இந்த நேரத்தில் அம்மாவைப் பார்க்கவேண்டும் போல ஏக்கமாக இருந்தது. தலைநிமிர முடியாமல் கழுத்து நிறைய மாலையும் முகத்தில் பூக்களால் ஆன சேராவும் மூடியிருந்தன.

"இந்தச் சீரெல்லாம் உள்ளகொண்டுபோய் வைங்கம்மா" என்று யாரையோ பார்த்துச் சொன்ன சபியா, மிட்டாய் பாக்கெட்டை உடைத்துக் கைகளில் அள்ளி அள்ளிக் கூட்டத்தினரைப் பார்த்து வீசி வீசி எறிய ஆரம்பித்தாள்.

மாப்பிள்ளை வரும் நேரத்தில் திருஷ்டி சுற்றவென கரைத்திருந்த ஆரத்தியை வைத்துக் கொண்டு வாசலிலேயே மதினாவும் ராபியாவும்

காத்திருக்க, மும்தாஜ் அடுப்படியில் போய் ஒரு பாத்திரத்தில் பாலும் சீனியும் போட்டுக் கலக்கி வாழைப்பழம் போட்டுப் பிசைந்து அதில் ஒரு புது சில்வர் ஸ்பூன் போட்டு ஹாலுக்குக் கொண்டுவந்தாள். ராபியாவும் மதினாவும் ஆரத்தி எடுத்த கையோடு காசுகேட்டு சிக்கந்தரைப் படுத்தி எடுக்க அவன் சிரித்தபடியே நூறு ரூபாய் நோட்டொன்றை எடுத்து ராபியாவின் கையில் கொடுத்துவிட்டு வீட்டிற்குள் நுழைந்தான். அவனோடு அவனது நண்பர்கள் சிலரும் ஃபோட்டோகிராபரும் கூடவர ராபியாவும் மதினாவும் விழுந்தடித்துக் கொண்டு வஹிதாவின் பக்கத்தில் வந்து நின்றுகொண்டு போட்டோவுக்கென எட்டி எட்டித் தலைகாட்ட ஆரம்பித்தார்கள்.

நிக்காஹ் முடிந்த கையோடு சைவச் சாப்பாட்டிற்குக் கூட்டிப் போய் பரமனின் மருமகளையும் ரமேஷின் அம்மாவையும் சாப்பிட வைத்து தாம்பூலப்பை கொடுத்து அங்கிருந்து துரிதமாக அனுப்பி வைக்கும் பொறுப்பை சொஹ்ரா எடுத்துக்கொண்டாள். அண்டாவில் இருந்த பிரியாணியை வெட்டி எடுத்து வீடுகளுக்குக் கொடுத்தனுப்பும் வேலையில் கரீம் முழுமூச்சாக இருந்தான்.

மொட்டை மாடியில் போட்டிருந்த பந்தலில் அமர்ந்து சாப்பிடுபவர்களைக் காதர் கவனித்துக் கொண்டிருந்தான். அவரவரும் அவரவர் வேலைகளில் மூழ்கி இருந்தாலும் வஹிதா கிளம்பும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்ததை ஒவ்வொருவருமே மனதில் சோகத்தோடு இருத்தியபடியிருக்க ராபியா ஒருத்திக்கு மட்டும் சித்தியைப் பார்க்கப் போகிறோம் என்கிற உற்சாகம் கரைபுரண்டோடிக் கொண்டிருந்தது.

# 37

ராபியா காரிலிருந்து இறங்கிய உடனேயே பிர்தவ்ஸைப் பார்க்கவென ஓடினாள். அவள் ஓடுவதைத் தடுக்க விரும்பாத வஹிதா தனக்குள் சிரித்துக் கொண்டாள். ‘பாவம் எத்தனை நாள் ஆசை!’ சபியாவின் வீடு வஹிதாவுக்குப் புதிதல்ல, சிறுவயதில் அடிக்கடி வந்திருக்கிறாள் என்றாலும் இன்று ரொம்பவே புதிதாக இருந்தது அவளுக்கு. சிக்கந்தர் தன் நண்பர்களோடு இருந்து கொண்டிருந்தானே தவிர இவளிடத்தில் பெரிதாக ஆர்வம் காட்டாத மாதிரி இருந்தான். இவளுக்கு ஏமாற்றமாக இருந்தது. வரும் வழியெல்லாம் காரில் அழுது கொண்டிருந்த அவளை அழுகாதே என்று கூட ஒருவார்த்தை சொல்லவில்லை அவன். முதன்முதலாகத் தனக்கு மிக நெருக்கமாக இருந்த ஆணின் ஸ்பரிசம் ஓரளவு தெம்பையும் சுவாரஸ்யத்தையும் உண்டாக்கியபோது அவள் தானாகவே அழுவதை நிறுத்திக்கொண்டாள். அழுது கொண்டிருப்பதால் ஒரு பயனும் இருக்கப்போவதில்லை என்கிற தெளிவு திடீரென அவளிடம் உண்டானது. அதற்காக அவள் ஆண்டவனுக்கு நன்றி சொல்லிக்கொண்டாள்.

மாடியில் அவள் அமர வைக்கப்பட்டிருந்த அறையெங்கும் ரோஜாப்பூவின் மணம் நிரம்பியிருந்தது. அதன் வாசனை அவளுக்கு மிகவும் பிடித்தமான ஒன்று. அறையில் புதிதாகப் பூட்டப்பட்டிருந்த கட்டிலும் வைக்கோல் பிரியினால் சுற்றிக் காகிதத்தினால் மூடப்பட்டிருந்த பீரோவும் இருந்தன. இதுதான் இனி அவளது அறையாக இருக்கப்போகிறது என்று நினைத்துக்கொண்டாள். இனி அவளது சந்தோஷம், துக்கம், நல்லது, கெட்டது என்று எல்லாமே இந்த

அறையின் நான்கு சுவர்களுக்குள்தான் நடக்கும். அச்சுவர்கள் அறியாதபடி ஏதொன்றும் நடக்கப்போவதில்லை. தன் இறுதிக் காலம்வரை இதுதான். திடீரென அவளுக்குத் தன்மீதே வெறுப்பு உண்டாயிற்று. எல்லாருக்கும் உள்ளதுதானே எனக்குமட்டும் புதிதாக நடப்பதுபோல ஏன் கற்பனை செய்து அவஸ்தைபட்டுக் கொள்கிறேன் என! அவள் பிடிவாதமாகத் தன் நினைவிலிருந்து விடுபட்டு அறைக்கு வெளியில் கேட்டுக் கொண்டிருந்த சத்தங்களைக் கவனிக்கத் தொடங்கினாள்.

சபியாவின் குரல் தொடர்ந்து சளசளவென்று ஒலித்துக்கொண்டிருந்தது. வேலையாட்களிடம் வீட்டைச் சுத்தம் செய்யச் சொல்லி அதிகாரம் செய்துகொண்டிருந்தாள். அவள் பேசும்போது இடையில் யாருடைய குரலும் கேட்கவேயில்லை. வஹிதாவுக்கு மெலிதாகப் பயம் மனதினுள் வேர்விட்டுப் படர ஆரம்பித்தது. இனி தானும்கூட அவளுக்குப் பயந்து ஒடுங்கி நடமாட வேண்டுமோ என்கிற பயம். அதே சமயம் தன் மாமனார் சையதுவின் நினைவு வந்தது அவளுக்கு. அவருக்குத் தன்பேரில் இருக்கும் அளவற்ற அன்பு தைரியம் கொள்ளச்செய்தது. அவர் வெளிநாட்டிலிருந்து வரும் பொழுதெல்லாம் தன் மருமகளுக்காகவென ஏதாவது கொண்டு வராமல் இருந்ததில்லை. அதோடு அவளைப் பார்க்க வரும் பொழுதெல்லாம் மிகுந்த பிரியத்துடன் பேசிக்கொண்டிருப்பார். அம்மாவுடைய ஒரே சந்தோஷம் வஹிதாவுக்குக் கிடைத்த மாமனார் போல யாருக்கும் அமையாது என்பதுதான். அத்தாவுக்கும் அந்த சந்தோஷமிருந்தது. அவளுக்குத் தனியேயிருக்க போரடித்தது. தனக்குத் துணையாக அனுப்பப்பட்ட ராபியா இப்படி இவ்வளவு நேரம் தனியாக விட்டுப் போய்விட்டாளே என்று நினைத்துக் கொண்டிருந்தபோது பட்டுப்பாவாடை சரசரக்க ராபியா ஓடிவரும்

சத்தம் கேட்டது. உற்சாக மிகுதியில் ஒரே ஓட்டமாக ஓடிவந்து அவளருகில் மூச்சு வாங்க வந்து நின்றாள். அவள் பின்னாலேயே வந்த சபியா, "பொம்பளப் பிள்ளைக்கு என்னத்துக்கு இப்பிடி ஓட்டம் வேண்டிக் கெடக்கு, பதவிசா இருக்காம?" என்று ஓர் அதட்டு அதட்டிவிட்டுத் தன் பெருத்த உடம்பு அசைய அங்கிருந்து அகன்றாள்.

ராபியாவுக்கும் வஹிதாவுக்கும் முகம் செத்துப்போய் விட்டது. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்களே தவிர எதுவும் பேசிக்கொள்ளவில்லை. தொப்பென்று சத்தம் எழ அக்காவினருகில் அமர்ந்தாள் ராபியா. அவளுக்குச் சற்றுமுன் உண்டாகியிருந்த சந்தோஷம் நொடியில் தொலைந்து போயிருந்தது. இந்தப் பொம்பளையிடம் எப்படித்தான் அக்கா இருந்து தொலைக்கப் போகிறாளோ என்றிருந்தது அவளுக்கு.

"அல்லாஹு" என்றபடி சையது இவர்களிருந்த அறைக்குள்ளாக வந்து நுழைந்தார். "என்னம்மா என்ன செய்றீங்க" என்றவாறு கட்டிலில் வஹிதாவின் வெகு அருகில் அமர்ந்தார். "சும்மாதான் மாமு" என்று அக்காவுக்குமாகச் சேர்த்துப் பதில் சொன்னாள் ராபியா. "சும்மாவா! இந்தாத்தான் துணிபோட்டுருக்கீங்கல்ல?" என்று சொல்லி கெக்கெக்கே என்று சிரித்தார், ஏதோ ஜோக் சொன்னதுமாதிரி! ராபியா வெட்கத்தில் தலையைக் குனிந்து கொண்டாள். வஹிதா தன் தலை முக்காட்டை முன்புறம் இழுத்து விட்டுக் குனிந்து கொண்டாள். அவரது கட்டைக்குட்டையான உடம்பும் தொந்தியும் குஞ்சுத்தாடியும் பார்க்க ஜெய்சங்கர் படத்தில் வரும் ஜீ பூம்பா பூதம்போலிருப்பதாக ராபியா நினைத்துக் கொண்டாள்.

அவர் குனிந்திருந்த வஹிதாவின் கழுத்தைத் தொட்டு நிமிர்த்தினார். "எம்புட்டு நேரம் இப்பிடிக் குனிஞ்சு கிடப்பே, கழுத்து வலிக்கல, இங்க யாரு இருக்கா?" என்று பரிவோடு சொல்லி அவளை நிமிர வைத்தார்.

வஹிதாவுக்கு பாத்ரூம் போகவேண்டியிருந்தது. எப்படி, யாரிடம் சொல்லிப் போவது என்று புரியாமல் விழித்துக்கொண்டிருந்தாள். அவள் தன் வீட்டில் கூச்சப்பட்டு விடாமல் காக்க வேண்டியது தன் பொறுப்பு என்பது போல, “என்னவேணும் சொல்லு? இனிமேல இது ஒன்னோட வீடு, தைரியமா இருக்கணும். என்ன? இப்பிடியெல்லாம் முழிச்சுக்கிட்டு இருக்கக்கூடாது” என்று உற்சாகம் கொப்பளிக்கப் பேசி அவளைச் சகஜமாக இருக்க வைக்கப் பார்த்தார். “சரி சரி, நீங்க இருங்க, நான் போயி தொழுதுட்டு பெறகு வர்றேன். அப்புறம் சாப்பிடலாம்” என்று சொல்லிவிட்டு, “ஏண்டி பொம்பள, அக்காவ யாரும் தூக்கிட்டுப் போயிடாமப் பாத்துக்க என்ன?” கிண்டலாகச் சொல்லிய படி கட்டிலிலிருந்து இறங்கி அசைந்து அசைந்து நடந்து போனார். ராபியாவுக்கு அவர் நடந்துபோகும் போது சிரிப்பு வந்தது. “வாத்து மாதிரி நடக்கறார் இல்லெ?” என்று வஹிதாவின் காதில் ரகசியமாகச் சொல்லிச் சிரித்தாள். வஹிதா தன் உதடுகளின் மீதுவிரலை வைத்து, “உஸ்.! அப்பிடியெல்லாம் பெரியவங்களக் கிண்டல் செய்யக்கூடாது” என்று கண்டித்தாள். அவளுக்குப் பயமாக இருந்தது, யார் காதிலாவது விழுந்துவிடப் போகிறது என்று.

“சரி, நீ போய் சபியா குப்பியைக் கூட்டிட்டுவா. எனக்கு பாத்ரூம் போகணும்” என்று அவளைக் கீழே அனுப்பி வைத்தாள் வஹிதா. அவளுக்குப் பட்டுப்புடவை, பூ எல்லாமாகச் சேர்ந்து புழுங்கிற்று. நல்ல வெயில் என்பதனால் சாயங்காலத்திலும் கூட வெக்கையாக இருந்தது. ஃபேன் ஓடிக்கொண்டிருந்தாலும் வியர்த்துக் கொட்டி அசதி மேலிட்டது. கூடவே மாதவிலக்கின் அவஸ்தை வேறு. அவள் மெதுவாக எழுந்து தன்னோடு கொண்டுவந்திருந்த சூட்கேஸை எடுத்துக் கட்டிலின் மீது வைத்து அழுத்தித் திறந்தாள். சூட்கேஸின் மேலாக குர்ஆனை வைத்திருந்தாள் அம்மா. இந்த மாதவிலக்குச்

சமயத்தில் அதைத் தொட்டுவிடக்கூடாது என்கிற ஜாக்கிரதை உணர்வோடு நாப்கினைத் தேடினாள். அவளுக்கு உடுத்துவதற்கான உடைகளோடு அலங்காரம் செய்து கொள்வதற்கு வேண்டிய பொருட்களையும் உள்ளே வைத்திருந்தாள் அம்மா. துணிகளுக்கிடையே நாப்கின் கட்டு மறைவாகச் செருகப் பட்டிருந்தது. சொஹ்ராதான் சிரித்தபடியே, “இதையும் எடுத்துட்டுப் போறியாக்கும், சீதனமா” என்று சொல்லி உள்ளே வைத்தாள். அவள் அதிலிருந்து ஒன்றை உருவி எடுத்துத் தன் புடவைக்குள்ளாக மறைத்துக்கொண்டு சூட்கேஸை மூடி ஓரமாக வைத்தாள். ராபியா பார்த்தாளென்றால் இது என்ன எதற்கு என்று கேட்டுத் துளைத்தெடுத்து விடுவாள்.

இரவு வஹிதாவும் சிக்கந்தரும் சாப்பிட அமர்ந்திருந்தபோது வஹிதாவுக்கு அருகே அமர்ந்துகொண்ட சையது, கிண்ணத்திலிருந்த சட்னியைக் கரண்டியில் எடுத்து அக்கறையாக அவளது தட்டிலிருந்த தோசையின் மீது ஊற்றிவிட்டு, “ஏன் சபியா, நாம நாலு பேருதான சாப்புடணும். பெறகு என்னத்துக்கு இம்புட்டு சட்னி வச்சிருக்க, வீணாப்போயிருது” என்று கவலையுடன் கேட்டவர், ‘காசோட அருமை கொஞ்சமாச்சும் தெரியுதா’ என்று தனக்குள்ளாக முணுமுணுத்துக் கொண்டார். ஒரு நிமிடம் அவரை முறைத்துப் பார்த்த சபியா, “பொட்டுன்னு கிடக்க மாட்டிங்க” என்று வெடுக்கென அதட்டினாள்.

இரவுச் சாப்பாட்டுக்குப் பிறகு சபியாவைத் தொணதொணத்த படியிருந்தார் சையது. “என்ன, ஏதும் ஏற்பாடு பண்ணலை?” ஒரு கட்டத்தில் சபியாவுக்கு எரிச்சல் மேலிடக் கத்தினாள், “சும்மா கிடக்க மாட்டீங்க? அவளுக்கு வீட்டுக்குத் தூரமாயிருச்சு.” அதைக் கேட்ட பிறகுதான் சும்மாயிருந்தார் அவர். இருந்தாலும் வஹிதா இருந்த அறைக்குள் வந்து வருத்தம் தோய்ந்த முகத்தோடு, “ஏம்மா தூரமா

போச்சாமுல்ல?" என்றார் சர்வ சாதாரணமாக! வஹிதாவுக்குத் தூக்கி வாரிப்போட்டது. என்ன தலைவலிக்கிறதா என்கிற மாதிரி கேட்கிறாரே வெட்கமேயில்லாமல் என்று! அவமானத்தில் அவள் உடல் கூசிப்போனது. அவர் முகம் வருத்தப்படுவது போலிருந்தாலும் குரலில் நக்கல்தான் மிகுந்திருந்தது. சபியா அங்கேயும் வந்து அவரை அதட்டினாள். "கொஞ்சமாச்சும் கூச்சமில்லாம அது என்னா பேச்சு மருமககிட்ட? வெட்கங்கெட்ட மனுஷன் மெனக்கெட்டுக் கேக்க வந்துட்டாரு மாடியேறி" என்று சொல்லி அவரை அங்கிருந்து வெளியே போகச் சொல்லி விரட்டினாள். அவர் ஒரு விதமான அசட்டுச் சிரிப்போடு அங்கிருந்து போனதும், "ஏம்மா நீ துணி மாத்தறதுன்னா மாத்திக்கிட்டு தூங்கு. அசதியா இருக்கும். நான் போய் சிக்கந்தரை வரச்சொல்றேன்" என்றபடி வெளியே போனாள்.

ராபியாவுக்கும் தூக்கம் கண்ணைச் சுழற்றிக் கொண்டு வந்தது. "அக்கா, நான் எங்க படுக்கட்டும்?" கெஞ்சலாகச் சிணுங்கியபடி வஹிதாவிடம் கேட்டாள். அவளுக்கும் பதில் சொல்லத் தெரியவில்லை. தன்னோடு படுக்க வைக்க முடிந்தால் நன்றாக இருக்கும். ஆனால் அப்படிச் செய்ய விடமாட்டார்கள். அவளுக்குத் தனியாகப் படுக்கப் பயமாக இருக்கும் என்று யோசித்தவள், "நீ போய் பிர்தவ்ஸ் சித்தி கூடவே படுத்துக்க" என்றாள். அவள் சொல்வதே சரியெனப்பட ராபியாவுக்குச் சந்தோஷமாக இருந்தது. "சரி நான் குப்பிகிட்ட சொல்லிட்டுப் போறேன், காலையில வர்றேன்" என்று சொல்லி எழுந்தாள். சிக்கந்தர் அப்பொழுதுதான் அறைக்குள் வந்தான். ராபியாவைப் பார்த்து, "எங்கடி கௌம்பிட்டே?" என்று கேட்டவாறு அவள் கையைப் பிடித்து இழுத்துத் தன்னோடு சேர்த்து இறுக அணைத்துக் கொண்டான். அவளுக்கு வெட்கமாக இருந்தது. "விடுங்க மச்சான்" என்று சொல்லித் திமிறினாள். "அதெல்லாம் முடியாது"

என்று சொல்லி அவளை இன்னும் இறுக்கமாக அணைக்க முயன்றான். அவனது உடம்பிலிருந்து சிகரெட் வாசனை வந்தது. ராபியா இன்னும் பலமாகத் திமிறினாள். வஹிதாவுக்கு அவனது கிண்டல் கொஞ்சம்கூட ரசிக்கவில்லை. 'அவள்தான் வெட்கப்படுகிறாளே? பிறகேன் இப்படிச் செய்யணும்' என முனகிக்கொண்டாள்.

சபியா அவனது பின்புறமிருந்து சத்தம் போட்டாள். "விடு அவளை. ரொம்பவும்தான் கொழுந்தியா கிட்ட கொஞ்சிக்கிட்டு, அசதியா இருக்குதுன்னு வஹிதாவைப் படுக்கச்சொல்லிட்டேன். நீயும் சட்டுபுட்டுன்னு படு." அவனது கைகள் லேசாகத் தளர்ந்தது தான் தாமதம், ராபியா அவனது முரட்டுக் கைகளை விலக்கிவிட்டுச் சிட்டுக்குருவியென பறந்தோடினாள்.

அம்மா கொண்டு வந்து கொடுத்த பாலை வாங்கி மேசையின் மீது வைத்துவிட்டு, வஹிதாவினருகில் வந்தான் சிக்கந்தர். அவள் பட்டுப்புடவையெல்லாம் களைந்து சாதாரணப் புடவை ஒன்றில் கோழிக்குஞ்சைப் போல ஒடுங்கி உட்கார்ந்திருந்தாள். அவளுக்குப் புடவை கட்ட தெரியாது. சபியாதான் கட்டி விட்டாள். "எனக்கு ஒரு பொம்பளைப் புள்ளை இருந்திருந்தா ஒதவி ஒத்தாசையா இருந்திருக்கும். ஒனக்குச் சேலை துணி மாத்திவிடக்கூட நானேதான் செய்யணும் என்ன செய்றது?" சலித்துக்கொண்டேதான் கட்டி விட்டாள்.

அவளுக்குக் காலையிலிருந்தே மனது சரியில்லை. பொம்பளைப் பிள்ளை இருந்தால் நாத்தனார் பணம், நாத்தனார் பலகாரம் என்று எல்லாமே வஹிதா வீட்டிலிருந்து வாங்கியிருக்கலாம். அந்த ஆதங்கம் வேறு. காலையில் தாலி கட்டியதிலிருந்து ஊருக்குத் திரும்புகிறவரைக்கும் எந்தம்பிக்கும் தம்பி பொண்டாட்டிக்கும் யோகம். நாத்தனார் பவுனு, சீரெல்லாம் குடுக்கத் தேவையில்லெ என

மொடமொடத்துக் கொண்டிருந்தாள். நபிஸாகூட சொஹ்ராவிடம் கிசுகிசுத்தாள். "இவள யாரு பொட்டைபுள்ள பெக்க வேணாம்னது, வேணும்னா அனாதை விடுதியில் ஒரு பொம்பளப் பிள்ளைய தத்தெடுத்திருக்கலாமில்லெ? நாத்தனார் சீர் வாங்கி முடிய." அதைக் கேட்டு சொஹ்ராவும் றைமாவும்கூட சத்தம் வராமல் சிரித்துக் கொண்டார்கள்.

சிக்கந்தர், தான் உடுத்தியிருந்த பட்டு வேட்டியையும் பனியன் சட்டையையும் கழட்டிக் கொடியில் போட்டான். வெறும் ஜட்டியுடன் நிற்பது பற்றி அவனுக்குக் கூச்சமேயில்லை. அறைக்குள் வஹிதா இருப்பதைப் பொருட்படுத்தாதபடி சாவகாசமாக அலமாரியைத் திறந்து லுங்கியை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டான். வஹிதா வெட்கத்தில் முகத்தைத் தன் முழங்காலுக்குள் புதைத்துக் கொண்டாள். தானிருக்கிறோம் என்ற நினைப்பே அவனிடத்தில் இல்லாத மாதிரித் தெரிந்தது அவளுக்கு.

தன் அருகில் வந்து அவன் அமரும் நேரம் நெருங்கி விட்டதை உணர்ந்ததும் அவளுக்கு உடம்பெல்லாம் படபடக்கத் தொடங்கிற்று. தொலைவில் எங்கோ நாய் ஒன்று கொடூரமாக ஊளையிட்டது. அந்தச் சத்தம் அந்த இரவை மூர்க்கத்துடன் அரவணைத்திருந்ததைப் போலிருந்தது. பயமும் பரவசமும் கலந்த ஒருவிதமான மனநிலை அவளைத் திக்குமுக்காடச் செய்தது. தன் வாழ்நாளில் முதன் முறையாக ஒரு ஆணோடு தனித்திருக்கும் சூழல் மிகப் புதிதாகவும் கூச்சமாகவும் இருந்தது. வெளியிலிருப்பவர்கள் எல்லோரும் தங்களைப் பற்றி என்னவெல்லாம் நினைப்பார்கள் என நினைத்துக் கூசிற்று உடல்.

அவன் அவளருகில் வந்து உட்கார்ந்து அவள் முகத்தை முழங்கால்களுக்கிடையிலிருந்து விலக்கி ஒரு கணம் உற்றுப் பார்த்தான்.

“என்னடி, தூக்கம் வருதா?” என்றவன், “அம்மா சொன்னாங்க, இன்னக்கி என்கிட்ட இருந்து தப்பிச்சுக்கிட்ட, பெறகு கவனிச்சிக்கிறேன்” என்று உரிமையோடு சொல்லிவிட்டுச் சிரித்தான். “சரி, இந்தப் பாலைக் குடிச்சிட்டுத் தூங்கு.” ரொம்பவும் பழகிய ஒருவரோடு பேசுவதுபோல அவன் நடந்து கொண்டது அவளுடைய பயத்தை ஓரளவுக்குக் குறைப்பதாகயிருந்தது. அவன் நீட்டிய பாலை வாங்கிக் குடித்துவிட்டுப் படுக்கையின் ஒரு ஓரத்தில் போய் படுத்துக் கொண்டாள். அவனிடமிருந்து லேசான வியர்வை வாடையுடன், சிகரெட் வாடையும் வந்து கொண்டிருந்ததை உணர முடிந்தது. அன்று முழுவதிலும் நன்றாக அலைக்கழிக்கப் பட்டிருந்ததால் முற்றிலும் புது இடத்தில் தூங்குவது பெரிய சிரமமாகயில்லை அவளுக்கு. தனக்குக் கொஞ்சமும் புலப்படாத ஒரு உலகத்திற்குத் தான் வந்து சேர்ந்திருப்பது போன்ற ஒரு கவலை உண்டாகியிருப்பதை மட்டும் அவளால் நிச்சயமாக உணர முடிந்தது.

ராபியா, சித்தியிடமே தலைபின்னி, குளித்துவிட்டுக் காலையில் தாமதமாகவே வஹிதாவிடம் வந்தாள். அவளுக்கு இங்கு இருக்கவே பிடிக்கவில்லை. யாரோ ஒருவருடைய வீட்டில் இருப்பது போல இருந்தது. அக்கா பாவம் எப்படி இருக்கிறாளோ என்று சித்தியிடம் ரொம்பவே கவலைப்பட்டாள். பிர்தவ்ஸ் சொன்னாள்: “இனி இது அவ வீடு. பிடிக்கலைன்னு சொல்லிவிட்டுப் போக முடியாது. இனி சாகும் வரை இங்கதான் உங்கக்கா இருப்பாள்.” அழுத்தமாகச் சொன்னாள். ராபியா தயங்கித் தயங்கித்தான் வீட்டுக்குள் நடமாடினாள். வஹிதா குளித்துவிட்டுத் தன் அறையில் தலை துவட்டிக் கொண்டிருந்தாள். பட்டுப்புடவை கட்டியிருந்தாள். அவளது நீண்ட தலைமுடி இடுப்புக்குக் கீழே விழுந்து புரண்டு கொண்டிருந்ததைப் பார்க்க மிக அழகாக இருந்தது. “சாப்பிட்டியா?” என்றாள் ராபியா அவளிடம்.

“உம்” என்றாள் வஹிதா. அவள் நேற்றைவிட இன்று சந்தோஷமாக இருப்பது போலிருந்தது ராபியாவுக்கு. “நீ சாப்பிட்டாச்சா?” தங்கையிடம் அக்கறையாகக் கேட்டவள், “இங்கே வடை இருக்கு போய் சாப்பிடு போ” என்றாள். “அதெல்லாம் வேணாம். நான் சாப்பிட்டாச்சு” என்று சொல்லி விட்டுக் கட்டிலில் ஏறிப் படுத்துக் கொண்டவள், “அக்கா, மச்சான உனக்குப் புடிச்சிருக்கா?” என்றாள். வஹிதா பதில் சொல்லாமல், “உனக்கு? மொதல்ல அதைச் சொல்லு” என்றாள் ஆர்வமாக! ராபியாவுக்கு ஏனோ அவனைப் பிடிக்கவில்லை. ஆனால் அதை அக்காவிடம் எப்படிச் சொல்ல? அதனால் ஒப்புக்காக, “ம்! எனக்குப் புடிச்சிருக்கு” என்றாள். அவள் குரல் சுவாரஸ்யமில்லா மலிருந்ததை வஹிதா கவனித்தாள். வஹிதாவுக்கு அவன் தன்னை பொருட்படுத்தாதிருந்ததைவிட துன்புறுத்தாமலிருந்ததால் அவனிடத்தில் ஒரு மரியாதை உண்டாகியிருந்தது. அதே நேரம் ராபியாவின் களையற்ற முகம் அவளை வருத்திற்று.

சபியா அறைக்குள் வந்து எட்டிப் பார்த்து, “ஏண்டி, சின்ன மருமகளே, எங்கெ ஆளையே காணோம்? சாப்பிடக்கூட தோணாம, ஒன்னக் கவனிக்கலைன்னா ஒங்கப்பன் என்னையத் தொலைச்சுப் புடுவானில்லே?” என்று கிண்டலாகச் சொல்லிவிட்டு, “வா, வந்து ஒரு வாய் சாப்பிடு” என்று பரிவோடு சொன்னாள். அவளுக்கு இப்படிக்கூட பேசத்தெரியுமா என்று இவர்கள் இருவருக்குமே வியப்பாக இருந்தது. “எனக்கு வேணாம், சாப்பிட்டேன்.” அவசரமாக மறுத்தாள் ராபியா. அவளுக்கு இதைச் சொல்லவும் பயமாகத்தான் இருந்தது. “சரி சரி, இங்க வா. இந்த டீயக் கொண்டு போய் உங்க மச்சான் கிட்ட குடுத்துட்டு வா” என்று அவளைக் கூப்பிட்டு விட்டு, மாடியிலிருந்து இறங்கி அடுப்படிக்குள் போனாள். ‘உங்க’ என்கிற வார்த்தை ரொம்பவே அழுத்தம் திருத்தமாக இருந்தது. அவளுடைய

பரிவுக்குக் காரணம் புரிந்து வஹிதா தங்கையைப் பார்த்துச் சிரித்தாள். அச்சிரிப்பில் பெரிய மனுஷத் தன்மையிருந்ததை ராபியா கவனிக்கத்தான் செய்தாள். திடீரென வஹிதா வேறொரு ஆளாக மாறிவிட்டது போலிருந்தது. எதனால் என ரொம்பவே யோசித்தாலும் அவளால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. நேற்றைக்கு முகத்தில் தெரிந்த பயம் இன்று துளியும் இல்லாமல் மிகவும் தெளிவாக இருந்தாள் அவள். புடவை கட்டியிருந்தது இன்னும்கூட அவளது வளர்த்தியை அதிகமாகக் காட்டுவது போலிருந்தது. சிக்கந்தருக்கு டீ கொண்டு போய் கொடுக்க வேண்டும் என்கிற நினைவு வந்ததும் பயம் உண்டாயிற்று. அவளுக்கு அதில் கொஞ்சமும் விருப்பமில்லாமல் இருந்தாலும், தட்டவும் வழியில்லாமல் அரைமனதோடு எழுந்து அடுப்படிக்குள் நுழைந்தாள். அங்கு சபியாவும் இரண்டு வேலைக்காரப் பெண்களும் மும்முரமாகச் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். இவளைப் பார்த்ததும் சபியா, “இந்தாம்மா, இதைப்போய் அவனுக்குக் குடு” என்று அவள் கையில் தம்ளரைக் கொடுத்தாள். கொடுத்ததோடு நில்லாமல், “என்னமோ நீதான் பொண்ணு கணக்கா ஆடி அசைஞ்சு நிக்கிற? மசமசன்னு நிக்காமப் போயி டீ ஆறிப்போறதுக்குள்ள குடு. நல்லாத்தான் வந்த பொம்பள” என்று சிடுசிடுவென்று சொல்லிவிட்டு, தன்பாட்டுக்கு வேலையைப் பார்க்கத் தொடங்கினாள்.

ராபியாவுக்கு அவமானமாக இருந்தது. அங்கிருந்த வேலைக்காரப் பெண்கள் இருவரும் ஒருமுறை இவளைத் திரும்பிப் பார்த்துவிட்டு, லேசான கிண்டல் சிரிப்போடு தம் வேலையைத் தொடர்ந்தார்கள். ராபியா மனதிற்குள், ‘குண்டு முண்டை, சனியன்’ என்று திட்டியவாறே, மாடிப்படியை நோக்கி வேகமாக நகர்ந்தாள். அவளால் சபியாவின் பேச்சை ஜீரணிக்கவே முடியவில்லை. இந்தச் சனியன் ஒருநாள் வந்து இருக்கறதுக்கே இப்பிடிப் பேசுதே? வஹிதா பாவம் என்று

நினைத்துக்கொண்டாள். கஷ்டமாக இருந்தது. மாடிப்படியில் ஏறி நீளமான முன் ஹாலில் நடந்தாள். சிக்கந்தர் அனேகமாக பால்கனியில்தான் இருப்பான் என நினைத்து அங்கே போய் நின்று சுற்று முற்றும் திரும்பிப்பார்த்தாள். பால்கனி யின் ஒரு ஓரத்தில் நின்று சிகரெட் புகைத்தபடி தெருவை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தவனைக் கண்டதும் திகைத்துப்போய் நின்றாள் ராபியா. சிகரெட் பிடிக்கிற கெட்ட ஆளுக்கா அக்காவைக் கட்டிக்கொடுத்திருக்கிறார்கள் என்கிற கேள்வி மனதிற்குள் எழ வருத்தத்துடன் அப்படியே நின்றுகொண்டிருந்தாள். இவளது கொலுசுச் சத்தம் கேட்டுத் திரும்பியவன், “வா ராபியா, என்னமோ கொண்டு வந்திருக்க போலேயிருக்கு?” என்றவாறு அவளை நோக்கி வந்தான். அவன் தன்னருகில் வருவதற்குள்ளாக அங்கிருந்து ஓடிவிட வேண்டுமென்கிற நினைவில் அவள் டீயை அங்கிருந்த மேஜையின் மீது வைத்துவிட்டு, “இதோ இங்கிருக்கு, வர்றேன்” என்று சொல்லியவாறே ஓடிவிட எத்தனித்தாள். அதற்குள்ளாக அவன் எட்டி வந்து அவளைப் பிடித்துக் கொண்டு, “எங்கடி போற? என்னையப் பாத்து எதுக்காகப் பயப்படுற. எனக்கு என்ன கொம்பா முளைச்சிருக்கு?” என்று சொல்லிச் சிரித்தான். அது அவளது பயத்தை அதிகரிக்கவே செய்தது. அவன் பிடியிலிருந்து விடுபட எவ்வளவோ முயன்றும் முடியாமல் கூச்சத்திலும் அவ மானத்திலும் கூசிப்போய், “விடுங்க, நான் போறேன்” என மறுபடி மறுபடி சொல்லிக்கொண்டேயிருந்தாள்.

என்ன நினைத்தானோ, திடீரென அவன் அவளது இடுப்பை இறுக்கியிருந்த கையை லேசாகத் தளர்த்தி அவளது வலது கையை மட்டும் தன் உள்ளங்கைக்குள்ளாகப் பிடித்து இறுக்கிக்கொண்டு அவளோடு பேசத் தொடங்கினான். “ஏன் ராபியா, என்னைப் பாத்தா பயமாவா இருக்கு?” அவள் தலைகுனிந்தபடி, “இல்லையே” என்றாள்.

அதைச் சொல்வதற்குள் தொண்டை வறண்டுபோயிற்று அவளுக்கு. உடம்பு வியர்த்து வழியத்தொடங்கியிருந்தது. அவனிடமிருந்து வந்த சிகரெட் வாடையும் சென்ட் வாசனையும் கலந்து வந்த ஒருவகையான நாற்றம் குமட்டச்செய்தது. “அட, பயமில்லையா? சரி அப்ப ஏன் போறேன் போறேன்னு துடிக்கிற? நான் என்ன ஒன்னைக் கடிச்சு விழுங்கவா போறேன்” என்றான்.

“நான் போறேன். டீ ஆறிடும். குடிங்க” என்று மறுபடி சொல்லி அவனிடமிருந்து விடுபட முயன்றாள் அவள். எப்படியாவது இங்கிருந்து போய்விட்டால் தேவலை என்றிருந்தது அவளுக்கு. அவள் தனது முழு பலத்தையும் பிரயோகித்து தன் கையை அவனிடமிருந்து பிடுங்கிக் கொள்ள எத்தனித்ததில், அவளது கையிலிருந்த கண்ணாடி வளையல் உடைந்து கையில் காயம் உண்டாக, அவள் “அம்மா”வென லேசான குரலில் வீறிட்டு, கையிலிருந்து துளிர்த்த ரத்தத்தைத் தன் தாவணியில் துடைக்க முயன்றாள். “ஏண்டி இப்பிடிக் கையை உருவிக் காயமாக்கிக்கிறே?” என்று அக்கறையாக அதட்டிவிட்டு, தன்னிடமிருந்த கர்ச்சீப்பினால் ரத்தத்தைத் துடைத்து விட்டான். “விடுங்க, நான் போய் மருந்து வைக்கணும். கை எரியுது” என்றாள் குழந்தையைப்போல சிணுங்கி. இந்தச் சந்தர்ப்பத்தை விட்டால் அவனிடமிருந்து தப்பிக்க முடியாது என்பதனால், “ஆ . . . ! வலிக்குதே” என்று சும்மாவேனும் வலிப்பதாகக் காட்டி முகம் சுளித்தபடியிருந்தாள்.

அவனது கரடுமுரடான விரல்களை அவளுக்கு பிடிக்கவேயில்லை. மறுபடி அவள் வஹிதாவை நினைத்துக் கொண்டாள். நானாவது இங்கிருந்து இரண்டு நாளில் போய்விடுவேன். அவள் இனி எல்லா நாளும் இங்கேதான் இருக்கப்போகிறாள். சபியா குப்பி, மச்சான் இரண்டு பேரோடும்! இதை நினைக்கும் பொழுதே அவள் உடல் ஒரு

நிமிடம் நடுங்கிற்று. அவள் தனது நிலையை முற்றிலுமாக மறந்தாற்போல முனகுவதை நிறுத்திவிட்டு அசையாமல் நின்றிருந்தாள். அந்தச் சமயத்தில், “ராபியா. . ! ராபியா” வென சபியாவின் குரல் கீழேயிருந்து கேட்டதும் அவனது கைகள் தன்னையறியாமலேயே அவளிடமிருந்து விலக, இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் ஒரே ஓட்டமாக அங்கிருந்து தாவிக் குதித்துப் படிகளில் இறங்கி ஓடினாள் ராபியா.

மாடிப்படியில் தாவிக் குதித்து ஓடித் தோட்டத்து முருங்கை மரம் அருகில் போய் நின்று ஆழமாக மூச்சுவிட்டாள். வஹிதாக்கா பாவம் சிகரெட்டெல்லாம் பிடிக்கிற கெட்டவனோடுதான் இனி இருக்கவேண்டும் என்று மறுபடி நினைத்துக் கவலை கொண்டாள். இனி அவன் எதிரில் போகவே கூடாதென முடிவுசெய்து கொண்டு நிம்மதியடைந்தாள்.

# 38

நடு இரவில் அறைக்குள் நிறைந்திருந்த நிசப்தம் வஹிதாவைச் சூழ்ந்திருந்தது. மெலிதாக எரிந்த விடிவிளக்கின் ஒளியிலிருந்தே இந்த அமைதி கசிந்து கொண்டிருப்பது போலிருந்தது. தன் வலப்புறம் படுத்திருந்த சிக்கந்தரின் முகம் ஆழ்ந்த தூக்கத்தில் சாந்தமானதாகத் தோற்றமளித்தது. அவனது வெற்றுடம்பில் பாதி அவள் மீது சாய்ந்து அவளை அழுத்திக் கிடந்தது. எரிச்சலுடன் அவனைத் தொட்டு பலத்தைப் பிரயோகித்துத் தள்ளிவிட்டாள். உடலுறவு உண்டாக்கிய திருப்தி அவனை நிம்மதியாகத் தூங்கச் செய்திருக்க, அவளின் மனம் தாங்கமுடியாமல் குமுறிக்கொண்டிருந்தது. இடுப்புக்குக் கீழே கடுமையான வலி இன்னும் வேதனையுண்டாக்கிக் கொண்டிருந்தது. அவன் இத்தனை அலட்சியமாகவும் கடுமையாகவும் தன்னிடம் நடந்து கொள்வான் என அவள் எதிர்பார்க்கவேயில்லை. முதல் நாளிரவு அவன் பேரில் உண்டாகியிருந்த நம்பிக்கை, மூன்றாவது நாளிரவிலேயே புகை மாதிரி மறைந்து போய் விட்டிருந்தது. இவ்வுறவைப் பற்றி இந்நாள்வரையில் அவளுக்கிருந்த கனவுகள் நொடிப் பொழுதில் சிதைந்து அங்கே ஒரு பெரிய வெற்றிடம் உருவாகியிருப்பது போல உணர்ந்தாள். அவ்வுணர்வு உடல் வலியையும் மிஞ்சியதாகத் தாங்கி கொள்ளவியலாமல் இருந்தது. அவன் ஏன் இப்படி நடந்து கொண்டான் எனப் புரியாமல் ஏமாற்றமாகவும் இருந்தது. ஏதோ ஒரு பொருளாகவே தன்னை அவன் நடத்தியது போலவும் ஒரு வேலையைச் செய்து முடிப்பது போலவும் இருந்தது அவன் செயல். சினிமாக்களில் பார்த்த எந்தக் கதாநாயகனும் இப்படி நடந்து கொண்டதாக அவளுக்கு ஞாபகமே இல்லை. எல்லாமே

இவ்வளவுதானா, என்றிருந்தது. சோர்வில் கண்களை இறுக மூடிக்கொண்டாள். கண்ணை மூடியதும் உலகமே இருள் சூழ்ந்து போனது போல வெறுமை மிகுந்தது.

அவளுக்குக் கண் ஓரத்தில் நீர் வழிந்து கொண்டிருந்தது. புடவை நுனியில் அதனைத் துடைத்து விட்டுக் கொண்டாள். தன்னிடமிருந்த ஏதோ ஒன்றைப் பறிகொடுத்து விட்டது போன்ற தவிப்பு ஒரு வலையாகப் பின்னி அவளைச் சிறைப்படுத்தியிருந்தது. சோர்வும் துக்கமும் மிகுந்த அந்த இரவு எப்போது விடியும் என்கிற நினைவில் கடிகாரத்தை அண்ணாந்து பார்த்தாள். அறையில் படர்ந்திருந்த இருளில் சரியாகத் தெரியவில்லை. இன்னும் சற்று கூர்மையாக உற்று நோக்கினாள். நேரம் இரண்டைத் தொடவிருந்தது. அவளுக்கு சபியாவின் குணத்தையும் சிக்கந்தரின் முரட்டுத்தனத்தையும் மீறி மாமனாரின் பிரியம் திருப்தியையும் நம்பிக்கையையும் உண்டு பண்ணிற்று. இனி இந்த வீட்டில்தான் இருக்க வேண்டும் என்கிற விஷயம் தன்னை ஓரளவாவது துன்புறுத்தாமலிருக்க அவரது பிரியம் உதவும் என்கிற நம்பிக்கை தெம்பை உண்டு பண்ணியது. மறுபடியும் அவளுக்கு சிக்கந்தர் நடந்து கொண்டவிதம் ஜீரணிக்க முடியாததாகித் துக்கத்தில் தொண்டை அடைத்தது. அதை விழுங்கிக் கொள்ளவோ, வெளியே கொட்டி விடவோ அவளால் முடியவில்லை. முடியவில்லை என்பதைவிட அவளுக்கு அந்தத் துக்கம் முற்றிலும் புதிய அனுபவமாக இருந்ததனால் என்ன செய்வது என்றே தெரியவில்லை.

தன் வாழ்நாளில் இதுவரை தனக்கு நேர்ந்திராத ஒரு விஷயமாக அந்தத் துக்கம் இருந்தது. ரொம்பவும் புதிதாகவும் கடுமையானதாகவும் கூட. அதனை எப்படி இல்லாமல் செய்ய முடியும் என்பதில் பெரும் குழப்பம் அவளுக்கிருந்தது. வாய்விட்டுக் கதறினால் அதைக் குறைக்கலாம் என்கிற தெளிவு சிறிது உண்டானாலும் எப்படி இந்த

இடத்தில் அழமுடியும் என்கிற கேள்வி எழுந்து துன்புறுத்தியது. மிக மெதுவாகப் படுக்கையிலிருந்து எழுந்து தரையில் இறங்கினாள். காலை ஊன்ற முடியாமல் வலி விண்ணென்று தொடைகளுக்கு மத்தியில் எழுந்தது. பல்லைக் கடித்து வலியை விழுங்கினாள். அவிழ்ந்திருந்த சேலையை ஒருவாறு சுற்றிக்கொண்டு மெதுவாக அடியெடுத்து நடந்து கதவைத் திறந்து குளியலறையை நோக்கிச் சென்றாள். கதவின் தாழ்ப்பாள் விலகியதில் எழுந்த கனத்த சத்தம் அவனைத் தூக்கத்தை விட்டு அசையக் கூட செய்யவில்லை என்பதை ஏனோ வருத்தத்துடன் நினைவுறுத்திக் கொண்டாள்.

இவளது அறைக்கு வெளியே இருந்த நீளமான ஹாலின் மூலையில்தான் குளியலறை இருந்தது. அங்கு எரிந்து கொண்டிருந்த விடிவிளக்கின் வெளிச்சத்தினால் எளிதாகப் போய்விடலாம் என நினைத்தபடி வலியினால் துவள்கிற கால்களை மெது மெதுவாக எடுத்துவைத்து நடந்து செல்லும் பொழுதுதான் கவனித்தாள். ஹாலில் கிடந்த சேரில் யாரோ தன் அறையைப் பார்த்தவாறு அமர்ந்திருப்பதை. திடுக்கிட்டுப் பின்வாங்கி நன்றாக உற்றுப்பார்த்தாள். பயத்தில் உடல் நடுங்கியது. வழுவழுப்பான தன் தாடையைத் தடவியவாறு எழுந்து வந்து அவளருகில் வந்து நின்றுகொண்டு, “என்னம்மா, எங்கே போகணும்? பாத்ரூமுக்கா?” என்றது சையதுதான்.

அவளுக்குப் போன உயிர் திரும்பி வந்தாலும் வெட்கத்தால் உடல் கூசிக் குறுகிற்று. இவர் ஏன் இந்நேரத்தில் தன் அறைக்கெதிரே உட்கார்ந்து கொண்டிருக்கிறார். அதுவும் விவஸ்தையேயில்லாமல் எங்கே போகிறாய் என்று வேறு கேட்டுக் கொண்டு! அவமானமாக இருந்தது. “உம், போய்ட்டு வாம்மா” என்று சொல்லி அவளது முதுகைத்தொட்டு பாத்ரூமை நோக்கிக் கை காட்டினார். அவரது தொடல் வெகு அழுத்தமாக இருந்ததை அவளால் உணரமுடிந்தது.

அவள் தலையில் முக்காடிட்டுக் கொண்டு அங்கிருந்து அவசரமாக நகர முயலும்பொழுது கிசுகிசுப்பான குரலில் கேட்டார்: “என்ன, ரொம்ப கஷ்டமோ?”

அவளுக்குத் தூக்கிவாரிப்போட்டது. இவர் என்னசொல்ல வருகிறார் என்பது புரியாமல் அவரை நிமிர்ந்து பார்த்தாள். அந்த அரைகுறை வெளிச்சத்திலும் அவரது முகத்தில் தெரிந்த ஆர்வம், தன் உடலில் ஒரு புழுப் போல ஊர்ந்து கொண்டிருக்கும் அவரது பார்வை, எல்லாம் சேர்ந்து அவளுக்குக் குமட்டலை உண்டு பண்ணிற்று. அவள் ஒன்றுமே பேசாமல் ஒதுங்கி நடக்க முயல்கையில் மறுபடி, “என்னாச்சு?” என்றார். ஒரு கிழட்டு ஓநாயென அவரது முகம் அவளுக்குத் தோற்றமளித்தது. பயத்துடன் அவள் வேகமாக நடந்து குளியலறைக்குள் நுழைந்து கதவை மூடித் தாளிட்டாள்.

உடம்பெல்லாம் படபடத்து நடுங்கிற்று. குவளையைத் தொடமுடியாமல் விரல்கள் நடுங்க, நிற்கவே முடியாத அடிவயிற்று வேதனையும் சேர்ந்து கொள்ள, அப்படியே துவைக்கிற கல்லின் மீது உட்கார்ந்து கொண்டாள். தொடையிடுக்கில் ஏதோ பிசு பிசுத்தது. ரத்தமா, வேறெதுவுமா எனப் பார்க்க துணிவில்லை. பிளாஸ்டிக் வாளியைக் குழாய்க்குக் கீழே இழுத்து வைத்துக் குழாயை திருகி முழு வேகத்தில் தண்ணீர் விழும்படி செய்தாள். ஓவென சப்தத்தோடு விழுந்த தண்ணீரின் ஒலி அங்கிருந்த நிசப்தத்தை அடித்து விரட்ட, அவ்வொலி உண்டாக்கிய ஆதரவில் தன் துக்கத்தைக் கரைத்துவிடலாம் என்கிற நம்பிக்கை உண்டாகியிருக்க, இனி என்ன செய்யப் போகிறோம் என்கிற கேள்வியும் இதுதானா தன் வாழ்க்கை என்கிற பயம் தந்த கழிவிரக்கமும் ஒன்று சேர, அந்த இரவையே உடைத்தெறிந்துவிடும் வேகத்தில் பெரிதாகக் கதறிக் கதறி அழ ஆரம்பித்தாள். அழுகையினூடே தலையில் தண்ணீரை மொண்டு

ஊற்றி குளிக்கத் தொடங்கினாள், தன் உடலிலிருந்த நஜீஸைக் களையும் பொருட்டு! உறவு வைத்துக் கொண்ட பிறகு உடனே தலை குளித்துவிட வேண்டும் என்றும், பெட்ஷீட், தலையணை உறையை உடனே துவைத்துவிட வேண்டும் என்றும் சித்தி சொல்லியிருந்தது அந்நிலையிலும் நன்றாக அவளுக்கு நினைவில் இருந்தது.

# 39

*ஷெரிபா கலைந்து கிடந்த அறையைச் சுத்தம் செய்து கொண்டிருந்தாள். பீரோவிலிருந்த உள்பீரோ சாவியைக் காணவில்லை. அறையெங்கும் தேடியாகிவிட்டது. இறுதியாக பீரோவைத் திறந்து அங்கிருந்த துணிகளையெல்லாம் அள்ளிக் கட்டிலின் மீது போட்டாள். ஒவ்வொரு அடுக்காகத் தேடினாள். பீரோவையே காலி செய்தாகி விட்டது. சாவியைக் காணவில்லை. எரிச்சலாக இருந்தது அவளுக்கு! இனி என்ன செய்வது என்று தெரியவில்லை. பீரோ கலைந்ததுதான் மிச்சம், றைஹானாவைக் கூப்பிட்டு இருவருமாகச் சேர்ந்து புடவைகளை மடித்து மறுபடி பீரோவில் அடுக்க வேண்டும் என நினைத்துக் கொண்டபடி, பட்டுப்புடவைகளை மட்டும் தனியாகப் பிரித்துக் கட்டிலின் ஒரு ஓரத்தில் அடுக்கி வைத்தாள். எல்லாமே அவளுடையது. சடங்கிற்கு எடுத்தது, கல்யாணம், நிச்சயம், ஏழாம்நாள், நாப்பது வளைகாப்பில் மடிநிரப்ப, குழந்தை பிறந்த நாற்பதாம் நாள் என்று ஒவ்வொரு விசேஷத்துக்கும் எடுத்தவை. திருமணமானதும் தலை வருட ரம்ஜானுக்கு எடுத்த புடவையைக் கையில் எடுத்தாள். புத்தம் புதிதாக அத்தனை புடவைகளுக்கும் இடையில் அது மட்டும் தனித்துத் தெரிவது போலிருந்தது. ஸலாம் அந்தப் புடவையை அவளுக்காகத் தானே போய் வாங்கி வந்திருந்தான். இனி இந்தப் புடவைகளையெல்லாம் என்றைக்குமே அவள் உடுத்த முடியாது என்கிற விஷயம் அவளைத் துக்கத்தில் ஆழ்த்திற்று. அவளுக்கு எப்பொழுதுமே நல்லவிதமாக உடுத்தித் தன்னை அலங்கரித்துக் கொள்வதில் அலாதியான பிரியம் உண்டு. பாத்திமா கிண்டலாக,*

“ஏண்டி, செலையாட்டம் அழகாத்தான இருக்கிற, பொறகு எதுக்காகப் பொழுதுக்கும் அலங்கரிச்சுக்கிட்டு கண்ணாடி முன்னால நிக்கிற? நானும்தான் இருக்கேனே கன்னங்கரேல்னு, கொள்ளிக் கட்டையாட்டம்” என்று சொல்வாள்.

இனிமேல் முன்னப்போல விரும்பியபடி தன்னை அலங்கரித்துக் கொண்டாலோ, பட்டுப் புடவை உடுத்தினாலோ, ஊரில் அசிங்கமாகப் பேசுவார்கள். அவளுக்கு ஒரே ஒரு தரம் நல்ல புடவை கட்டி, தலைநிறைய பூவைத்து, நகையெல்லாம் அணிந்து தன்னைக் கண்ணாடியில் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று ஆசையாக இருந்தது. ஆனால் வீட்டில் அம்மாவும் றைஹானாவும் இருக்கிறார்கள். அம்மாவுக்குத் தெரிந்தால் உடனே மறுபடி கல்யாணப் பேச்சை எடுப்பாள். அதிலிருந்து விடுபட முடியாது. அதோடு இவளது நிலையை நினைத்து அழுது கொண்டிருப்பாள். அவளால் ஆற்றிக்கொள்ளவியலாத ஒரு துக்கத்தைத் தானே தூண்டி விடுவது போலாகிவிடும். அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. கணவன் இல்லாவிட்டால் நல்லவிதமாக உடுத்திக்கொள்ளக் கூடாதா என்ன? தன்னை அலங்கரித்துக் கொள்ளக்கூட வாவரசியாக இருக்க வேண்டுமாக்கும்? இந்த ஊர் சுத்த மோசம் என நினைத்துக் கொண்டாள். நல்லபடியாக உடுத்துவதற்காகக் கல்யாணம் செய்து கொள்ள முடியுமா என்ன? அவளுக்கு ஆதங்கமாகவும் வெறுப்பாகவும் இருந்தது.

பட்டுப் புடவைகளை எடுத்து அடுக்கிக் கொண்டிருக்கையில் அதனுள்ளிருந்து இரண்டு கடிதங்கள் கீழே சிதறி விழுந்தன. குனிந்து அவற்றை எடுத்துத் திருப்பிப் பார்த்தாள். ஸலாம் வெளிநாட்டிலிருந்த போது அவளுக்கு எழுதிய கடிதம் ஒன்று. இன்னொன்று, அவள் அவனுக்கு எழுதிய கடிதம். அவன் இங்கு வந்தபோது அவளது

கடிதத்தையும் எடுத்து வந்து அவளிடம் காட்டிக் கிண்டல் செய்து கொண்டிருந்தான். அறைவாசலில் நிழல் தட்டியது. தலை நிமிர்ந்து பார்த்தாள். சவுரா நின்று கொண்டிருந்தாள், வாய் நிறைய எதையோ மென்று தின்றபடி. அறையை ஒரு கணம் நோட்டம் விட்டுவிட்டு ஏதும் புரியாமல் மகளைப் பார்த்தாள். அவளது பார்வையில் ஏன் ஒனக்கு இந்த வேலை என்கிற கேள்வி இருந்தது. ஷெரிபா அவளையே பார்த்துக் கொண்டிருந்தாள். எந்த நேரமும் தீனிதானா, வேறு எந்த வேலையும் இல்லையா என்று எரிச்சல் உண்டாயிற்று. அவளது வாய்க்குள் அடங்கிய பொருள் கன்னத்துச் சதையை விரித்து உப்பச்செய்திருக்க, தாடை ஒரு இயந்திரம் போல அசைந்து கொண்டிருந்தது பார்க்கச் சிரிப்பை உண்டுபண்ணினாலும் என்ன இருந்தாலும் அவள் தன் தாய் என்கிற ஞாபகம் வந்து அந்நினைப்பை உதறினாள்.

எதுவும் புரியாமல் விழித்துக் கொண்டு நிற்கும் அவளிடம், “சாவி ஒண்ணைக் காணோம். அதைத் தேடிட்டு இருக்கேன்” என்றாள் சுருக்கமாக! கட்டிலில் குவிந்து கிடக்கும் பட்டுப் புடவைகளைப் பார்ப்பதற்குள் அம்மாவை அங்கிருந்து போகச் செய்து விட வேண்டும் என்கிற பதற்றம் அவளைத் தொற்றியிருந்தது. சவுராவுக்கு மகளது பதற்றம் புரியவில்லை. “ஆமா, நூரம்மாவுக்குச் சோறு தர்றேன்னு சொல்லியிருந்தியோ?” என்றாள் சற்று கோபமாக! “ஆமா, அதுக்கென்ன?” என்றாள் ஷெரிபா. அம்மாவுக்குத் தெரியாமல் கொடுக்க வேண்டும் என்றுதான் நினைத்திருந்தாள். இவளுக்கு எப்படித் தெரிந்தது என்கிற யோசனையோடு, “ஏன், கேட்டு யாரும் வந்தாங்களா என்ன?” என்றாள். “ஆமாமா, இலியாஸ் வந்து நிக்கிறான். எதுக்கு இந்த வம்பெல்லாம் வச்சுக்கிர்ற? கொத்தவிட்ட கோழி, நக்க விட்ட நாயின்னு ஆயிப்போயிரும். நல்லாத்தான வந்தே. இங்கெ என்ன

கொட்டியா கெடக்குது?” என்று முணுமுணுத்தபடி அங்கிருந்து அகன்றாள். “போட்டுக் கொடுத்தனுப்பிடுங்க, பாவம்!” என்று சொல்லிவிட்டு, அம்மாவின் அற்பத்தனத்தை நினைத்து எழுந்த எரிச்சலை மறக்கும் பொருட்டுத் தன் வேலையைக் கவனிக்கத் தொடங்கினாள். இந்தப் பட்டுப் புடவைகளைப் பார்த்திருந்தாளென்றால் இங்கேயே உட்கார்ந்து ஒப்பாரி வைத்திருப்பாள். நல்ல வேளையாகக் கவனிக்கவில்லை. அவள் கவனிக்காமலிருந்ததன் காரணம் நூரம்மா சோறு கேட்டு ஆளனுப்பியிருந்ததுதான். அந்த டென்ஷனில் இதை விட்டுவிட்டாள். நல்லதுதான் என மறுபடி தன்னை ஆசுவாசப்படுத்தி கொண்டு சிரித்துக் கொண்டாள். றைஹானா குழந்தையை வெளியில் கொண்டு போயிருந்தாள். அவள் வருவதற்கு முன் வேலையை முடிக்கத் திட்டமிட்டுக் கொண்டாள்.

தன் கையிலிருந்து கனத்த கடிதத்தைத் தனது மடியில் வைத்து மிருதுவாகப் பிரித்தாள். நீண்ட நாட்களாகப் பிரிக்காமல் ஒரே மடிப்போடு இருந்ததனால், எளிதாக பிரிக்க முடியாமல் மடங்கிற்று கடிதம். ஸலாமுடைய அழகான முத்து முத்தான கையெழுத்து கண்ணில் பட்டதுமே, மனதில் பொங்கிய துக்கம் கட்டுக்கடங்காமல் கண்களிலிருந்து நீர் கசிந்து வழிந்தது. புடவை முந்தானையை இழுத்துக் கண்ணீரைத் துடைத்துவிட்டுக் கொண்டாள். தன்னோடு தன் உணர்வுகளோடு தன் உடலோடு நெருக்கமாக இருந்த ஒரு உறவினுடைய கடிதம் அது. தனக்காகத் தன் பேரிலுள்ள மொத்த பிரியங்களையும் காட்ட முயன்ற சிறிய முயற்சி அதிலிருந்தது. அது மட்டும் இன்னும் அவளோடு இருக்க, அவன் எங்கோ போய்விட்டான். கண்ணுக்குத் தெரியாத ஒரு பொருளாக மாறிவிட்டிருக்கிறான். அவன் இருந்ததற்கான ஆதாரம் மட்டும் எஞ்சியிருக்க அவன் இங்கு இல்லவே

இல்லை. இனி இந்த இம்மையில் அவனை யாராலும் பார்க்கவே முடியாது. மறுமைக்காகக் காத்திருந்து அவனைப் பார்க்கலாம். அவளுக்குத் திடுமென உடல் குலுங்கிற்று. அவன் எங்கே போய்விட்டான்? அவனை இந்த உலகத்தில் இனி எங்கேயுமே பார்க்க முடியாதா? அது எப்படி? கண்முன் உயிரோடு உலவிக் கொண்டிருந்த ஒரு உருவம் திடீரென்று மறைந்து போய்விடுவது எவ்வகையில் நியாயம்? சாகிற வயசில்லையே? அவள் பார்க்க எத்தனை கிழடுகள் பாதி உயிரோடு சாவை எதிர் நோக்கிக் கிடக்க, இவன் உயிர் மட்டும் அல்லாவுக்கு எதற்காகத் தேவையாக இருந்திருக்கும்? அவனுக்குக் கண்ணில்லை என்பதுதானே உண்மை? இல்லை, அல்லாவே இல்லை என்று தானே சொல்லவேண்டும்? ஆனால் யாருமே இப்படிச் சொல்லவில்லையே? அவனுடைய நஸீபு முடிந்துபோய்விட்டது என்றோ, அவனுக்கு இந்த உலகத்தில் வகைந்திருந்த ரஸ்க்கும் தண்ணியும் அவ்வளவுதான் என்றோ சொல்லி இந்த மரணத்தைச் சரியான நேரத்தில் நடந்த ஒன்றாகச் சொல்ல முடிந்தது எப்படி? அவளுக்கு தலைவெடித்து விடும் போலிருந்தது. ஒரு நிமிடம் கண்களை மூடிச் சுவரில் சாய்ந்து கொண்டாள்.

மனதைத் திடப்படுத்திக் கொண்டு கடிதத்தை விரித்துப் படிக்கத் தொடங்கினாள். அது கடிதம் என்றில்லாமல் அவன் அவளோடு பேசுவதுபோல இருந்தது.

அன்புள்ள ஷெரிபாவுக்கு,

அஸ்ஸலாமு அலைக்கும். எப்படியிருக்கிறாய்? உன் கடிதம் கிடைத்தது. படித்து மிகுந்த மனவேதனை அடைந்தேன். நம் பிரிவு குறித்து நிறைய வருத்தங்களை எழுதி என்னையும் அத்துயரத்தில் பங்கு கொள்ளச் செய்திருந்தாய். நீ எழுதியிருந்தது உண்மைதான். இளமை நிலையானது இல்லைதான். இத்தனை ஆசைகளோடும்

கனவுகளோடும் வாழவேண்டிய வயதில் சூழ் நிலையின் சதியினால் நாம் ஆளுக்கொரு திசையில் இருந்து காலத்தைக் கழித்துக் கொண்டிருக்கிறோம். நன்றாக நினைத்தால் வேதனைதான் மிஞ்சுகிறது. பணமும் காசும்தான், மனிதனை எங்கெல்லாமோ சுற்றி அலையச்செய்கிறது. ஏதோ வயிற்றுப் பாட்டுக்கே ஒன்றுமில்லாத மாதிரி பணத்தைத்தேடி உன்னைவிட்டு வந்ததில் எனக்கும் சரியான வருத்தம் இருக்கவே செய்கிறது. இங்கே எனக்குத் தெரிய நூற்றுக்கணக்கான பேர் இதேபோன்று மனைவி பிள்ளைகளை விட்டுவிட்டு வருடக்கணக்காக வந்து கிடக்கிறார்கள். நானாவது இன்னும் ஒன்றிரண்டு ஸபரோடு முடித்துக் கொள்ளலாமென்கிற நிய்யத்தோடு இருக்கிறேன். ஆனால் அவர்கள் எல்லாம் எப்பொழுதுமே இங்கே இருந்தே ஆக வேண்டிய நிலையில் இருப்பவர்கள். அந்தக் கொடுமையை நினைத்தால், நம் நிலமை அத்தனை மோசமில்லை என்று தோன்றும். பணத்திற்காகவும், தன் தேவைகளுக்காகவும் ஓடிக்கொண்டிருக்கும் மனிதர்கள், தன் இளமைப்பருவத்தை இழந்து கொண்டிருப்பதை ஏனோ யோசிப்பதேயில்லை. அதை நினைத்துப் பார்க்கக்கூட இயலாதபடி பணம் அவர்களை முடக்கிப்போட்டு விடுகிறது போல. என் அறையில் இருக்கும் சில நண்பர்கள் தம் அவஸ்தைகளைத் தீர்க்க என்னென்ன பாடுபடுவார்கள் தெரியுமா? (நானும் தான்.) அந்த நேரம் ஒரு துன்பத்திலிருந்து விடுதலையாதல் போலத்தான் இருக்கும். இன்னும் சில மாதங்கள் பொறுத்துக்கொள். விரைவில் வருவேன். இக்கடிதத்துடன் உன் பிறந்த நாளுக்கான என் பரிசாக இரண்டு புடவைகள் அனுப்புகிறேன். மற்றவை இனி. ஊரில் என் வீட்டாருக்கும், உன் குடும்பத்தாருக்கும் என் ஸலாம் சொல்லி விடு.

மிகுந்த அன்புடன்

உனது

அப்துல் ஸலாம்.

அவளுக்குப் படித்து முடித்ததும் துக்கம் மேலிட்டது. தனக்கு ஆறுதலாகவும் தன் தனிமையை நினைத்து எவ்வளவோ வருத் தத்தையும் அவன் அக்கடிதத்தில் எழுதியிருந்தான். இன்று தன் முன்னே தனிமை மிக நீண்ட ஒற்றையடிப் பாதையாகக் கிடக்கிறது முடிவேயில்லாமல்! அவன் அவளை விட்டு ஒரேயடியாகப் போய்விடுவான் என என்றாவது நினைத்திருப்பானா? அவன் வெளிநாட்டுக்குப் போன உடனேயே அவள் கடிதங்களில் புலம்பத் தொடங்கி விட்டாள். அவனில்லாமல் இருக்கவே முடியாது என்று! அந்தக் கடிதங்களையும் அவன் மறுபடி கொண்டு வந்து அவளிடம் காட்டிக் கேலி செய்வான். அவள், தான் அவனுக்கு எழுதியிருந்தக் கடிதத்தையும் பிரித்தாள்.

அன்புல்ல மச்சனுக்கு,

அஸ்ஸலமு அலைக்கும். எப்படியிருக்கிறீர்கள், இன்றொடு நிங்கள் எண்ணை விட்டு போய் முப்பத்திரன்டு நாட்களாகிறது. ஒவ்வொரு நாலும் ஒவ்வொரு வருசமாவே எனக்கு இருக்கிறது. திணமும் துங்கும் நேரத்திள் முலித்திருந்து உங்கலை நினைத்துக் கொண்டிருப்பேன் ரொம்பவே கஸ்டமாக இருக்கும் அப்பொவெல்லாம் என் அம்மாவை நிணைத்துக்கொள்வேன் பாவமாக இருக்கும். எப்படிதான் முப்பது வருசம் இப்படி இருந்திருப்பார்கலோ தெரியவிள்ளை. பிள்லைகளை கவனிப்பதிளேயே காலம் ஓடியிருக்கும் நிணைக்க நேரமிள்லாமல் எனக்கும் பிள்லை பிரந்து விட்டாள் உங்கலை நினைத்து கொண்டிருக்க நேரமிறுக்காதோ என்னமோ. நேட்று இரவு பீரோவைத் திரந்தபோது நம் கல்யாண போட்டா கண்ணிள் பட்டது அதை பாத்ததும் உங்கல் நாபகம் வந்து விட்டது. நிக்கா முடிந்த நற்பது

நாளிளேயே நிங்கள் உருக்குபோய் விட்டது கண் மரந்தார்போல இருக்கிரது உங்கல் முகம். 24 மாதத்திள் ஒரு மாதத்தை பல்லைக் கடித்து ஒட்டியிருக்கிரேன். மீதி 23 மாதத்தை எப்படி ஓட்டப்போகிரேனோ தெரியவிள்லை நினைக்கையிலேயே மளைப்பாக இருக்கிரது. உங்கள் ஒடம்ப கவனியுங்கல். இங்கெ நல்ல சாப்படு சாப்பிடும் போது உங்கல் நாபகம் வந்து விடும். எங்க வீட்டிளும் உங்க வீட்டிளும் அணைவரும் நலம். உரில் விசேசம் எதுவும் இல்லை முடியும்போது போணில் பேசுங்கல். உங்க குரலை கேட்டலாவது ஆருதலாக இருக்கும்.

முத்தங்கலுடன்
ஷெரிபா.

கடிதத்தைப் படித்து முடிக்கும்போது கண்ணீர் நிறைந்து பார்வையை மறைத்தது. இந்தக் கடிதத்தை மறுமுறை வந்தபோது கொண்டு வந்து காட்டி, “ஏண்டி, நீ பள்ளிக்கூடத்துக்கு போனியா, போகலையா? மக்கு” என்று அவளை எவ்வளவு கிண்டல் செய்திருப்பான். இவ்வளவு பிரியம் வைத்திருந்தவனை விட்டு ரூஹு எப்படிப் பிரிந்திருக்கும். அந்தக் கடைசி நேரத்தில் அவன் என்னவெல்லாம் நினைத்திருப்பான்? கண்ணீரில மங்கிய பார்வை கட்டிலின் மீது கிடந்த புடவைகளுக்கிடையில் உரசிச் சென்று இவளது பிறந்த நாளுக்காக அவன் அனுப்பிய மஞ்சள் கலர் ஜார்ஜெட் பூனமும் சிகப்புநிற ரூபிக்குயின் சேலைகளின்மீது தேங்கியது. அவன் தன் மனைவிக்காக ஆசையாக வாங்கி அனுப்பிய சேலைகள். அந்த பார்சல் ஸலாத்தின் அம்மா, அத்தா கையில் கிடைத்ததும் வீட்டில் நடந்த பூகம்பம் நினைவுக்கு வந்து துக்கம் மேலும் அதிகரித்தது.

ஷெரிபாவின் மாமியார் வீட்டையே புரட்டி எடுத்துவிட்டாள். தனது புது மனைவி தன்னைப் பிரிந்த கவலையோடிருப்பாள், அக்கவலையை இந்தப் பரிசு ஓரளவுக்கு மாற்றக்கூடும் என்கிற

நம்பிக்கையினால் அவன் அனுப்பியதைச் சகித்துக் கொள்ள அவளால் முடியவில்லை. அவள்தான் அப்படி என்றால் பெரியத்தா அதற்கும் மேலே! வானத்திற்கும் பூமிக்குமாகக் குதித்துத் தீர்த்தார்.

"வீணாப்போனவனுக்கு இங்கே தாய் ஒருத்தி இருக்கறது ஞாபகமில்லாமயா போயிரும்? புதுசா பொண்டாட்டியக் கண்டவன் . . ." அசிங்கமா இருந்தது ஷெரிபாவுக்கு! தன் மாமியார் வேற்று ஆளாக இருந்திருந்தால்கூட இவளால் தாங்கிக் கொள்ள முடிந்திருக்கும். ஆனால் சொந்த பெரியம்மா, சவுராவின் உடன் பிறந்த சகோதரி. இந்த நெருக்கமான உறவில் கூட மாமியார், மருமகள் வித்தியாசம் இருக்கமுடியுமா என்கிற ஆதங்கத்துடன் நாள் முழுக்க அழுது தீர்த்தாள் ஷெரிபா. அன்று மாலை தற்செயலாக மகளைப் பார்க்க வீட்டிற்கு வந்த அம்மாவிடம் இவ்விஷயத்தைச் சொல்லலாமா, வேண்டாமா என யோசித்தபடி தடுமாறிக் கொண்டிருந்தவளுக்குத் தாயின் முகத்தைக் கண்டதும் துக்கத்தாலும் அவமானத்தாலும் மூழ்கிக் கிடந்த மனம் உடைந்து போயிற்று.

சவுராவுக்குச் சொல்லவா வேண்டும்? தன் சகோதரியின் முகத்திற்கெதிராகப் போய் நின்றவள், "உன் மகன் என்னமோ சீலை அனுப்புனாராமே? எம்மக பாக்காத சீலையவா அனுப்பப்போறாரு? ஒனக்குத் தெரியாது? எம்மக எத்தினி பொட்டி அவுக அத்தா கொண்டு வந்ததை ஒடைச்சிருக்கா அப்புடின்னு! அவகிட்ட இல்லாத வெளிநாட்டுச் சாமானா, சேலையா? சொந்த அக்கா வீட்டுல பொண்ணக் குடுத்திருக்கோம்னு நிம்மதியா இருந்ததுக்கு நீ இம்புட்டுக் கொடுமையா செய்ற? பிச்சைக்காரச் சிறுக்கி." ஒரே கத்தாகக் கத்தியவள் மகளது பக்கமாக திரும்பி, "இப்ப சொல்றேன், கேட்டுக்கோ! இனி அந்தச் சீலைய நீ உடுத்தினே? என்னோட ஹயாத்து முடிஞ்சு போயிரும்." இத்தனை பிரச்சினைகளுக்குக்

காரணமான அந்தப் புடவைகளிரண்டும் பிரிபடாமல் அப்படியே இருந்தன. ஷெரிபா அவற்றைப் பெரியம்மா வீட்டில் இருந்த ஒரு அலமாரியில் போட்டு வைத்திருந்தாள். யாராலும் சீண்டப்படாமல் அப்படியே கிடந்தன அந்தச் சேலைகள். ஸலாத்திற்கும் இவ்விஷயத்தைக் கடிதத்தில் எழுதிவிட்டு, நீங்கள் கூட ஒரு சேலையை உங்கள் அம்மாவுக்காகவும் சேர்த்தே அனுப்பியிருந்தால் இவ்வளவு பிரச்னைகள் இருந்திருக்காது என்றும் எழுதியிருந்தாள்.

அதற்கு, "அப்படி அனுப்புவதில் எனக்கொன்றும் பிரச்னையில்லை. நான் உன்னையே இங்கு நினைத்துக் கொண்டிருப்பதை உனக்குக் காட்டிவிடவேண்டும் என்கிற நினைப்பில்தான் அப்படிச் செய்தேன். அடுத்த சில நாட்களிலேயே அம்மாவுக்கெனத் தனியாக ஒரு பார்சலை அனுப்பவும் நினைத்திருந்தேன், அதற்குள் இப்படி நடந்துவிட்டது. இனி நீ அந்தப் புடவைகளைத் தொடவேண்டாம்" என்று ஸலாம் எழுதியிருந்தது நினைவுக்கு வர, ஷெரிபாவுக்குத் திடீரென தனக்குள் துக்கத்தின் அளவு கூடுதலாகி விட்டிருப்பதை உணர முடிந்தது.

கணவனது மரணத்திற்குப் பிறகு அவ் வீட்டிலிருந்து திரும்பி வந்த சீர்வரிசைகளோடு இந்தப் புடவைகளும் சேர்ந்து வந்திருக்கக் கூடும். அதை இன்றுதான் கவனிக்கிறாள் இவள். அவளுக்குள் பெருமூச்சொன்று உருவாகி சத்தமாக வெளிப்பட்டது. மிகவும் ஆயாசமாக இருந்தது. அவ்வளவுதான் இனி எதுவுமே இல்லை. அத்தனையும் நடந்து முடிந்துவிட்டது. நான் இனி எப்போதுமே இந்தப் புடவைகளை மட்டுமல்ல, வேறு எந்த நல்ல புடவையையும் உடுத்த முடியாது.

அவள் கட்டிலிலிருந்து கீழிறங்கி ஜன்னலுக்கு வந்து தெருவையே பார்த்துக் கொண்டிருந்தாள். வழக்கமான கிராமத்துத் தெருவின் ஓசைகளற்று, தெரு அமைதியாக இருந்தது. நல்ல வெயில். ஜன்னல்

வழியே அது வெப்பத்தை அனுப்பிக்கொண்டிருந்தது. வெயில் உண்டாக்கிய மனச்சோர்வு மிக மிக மோசமானதாக இருந்தது. மற்றெந்தப் பருவகாலங்களையும் விட வெயில் காலம்தான் தனிமையை அதிகப்படுத்தி மனதில் வெறுப்புண்டாக்கக் கூடியதாக இருக்கிறது என்பதை அவளால் யூகிக்க முடிந்தாலும், காரணம் புரியவில்லை. மழைக்காலம் தனிமைப்பட்ட உடலின் உணர்வுகளை அதிகரிக்கச்செய்து பெரும் ஏக்கத்தை மட்டுமே உண்டாக்கி ஹிம்சிக்கும். வெயில் காலம் அவளது தனிமையை நினைவுறுத்தி இன்னொரு விதமான இம்சையை உண்டுபண்ணுகிறது. அது தரும் வெறுமை ரொம்பவே துன்புறுத்தக்கூடியதாக இருக்கிறது.

தெருவின் அமைதிக்குக் காரணம் என்னவாகயிருக்கும் என யோசித்தாள் ஷெரிபா. இன்று வஹிதாவை மறுவீடு அழைக்கிறார்கள் என்பது நினைவுக்கு வந்தது. காலையில் பஸ் வைத்து வீட்டுக்கு இரண்டு பேரென ஊரில் உள்ள முக்கால் வாசிப்பேரை அழைத்துப் போயிருக்கிறார்கள். சவுரா மட்டும் போகவில்லை. சபியாவுக்கும் அவளுக்கும் அத்தனை நல்ல உறவில்லை. றைமாக்கா வந்து கூப்பிட்டுப் பார்த்துவிட்டுப் போய் விட்டாள். பாவம், அம்மா! அவளுக்குப் பிரியாணி என்றால் உயிர். வீண் பிடிவாதத்தால் போகாமல் இருந்து விட்டாள். அவளுக்குமே ஆதங்கமாகத் தான் இருக்கும். திருமணம் நடந்த அன்றிலிருந்தே வஹிதா வீட்டுப் பக்கமே ஷெரிபா போகவில்லை. நல்ல காரியம் நடக்கும்பொழுது எதற்காக நடுவில் போய் நிற்கவென! றைமாவும் சொஹராவும் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்து விட்டார்கள், நீ எங்கவீட்டுப் பிள்ளை மாதிரி என்று சொல்லி! அவர்கள் கூப்பிடுவார்கள்தான், அதற்காக அங்கே போய் நிற்பது அவளுக்குச் சரியாகப் படவில்லை.

பட்டும் நகையும் அணிந்து தன்னை அலங்கரித்துக்கொண்டு

திருமண விசேஷங்களில் கலந்து கொள்வது எப்பொழுதுமே இவளுக்கு விருப்பமான ஒன்று. அங்கே சுற்றித்திரிந்து கொண்டிருக்கும் பெண்களின் பேச்சு, அவர்களது அலங்காரம், ஓடிவிளையாடும் குழந்தைகள், காற்றில் கலந்து அலைமோதும் சந்தனவாசம், எல்லாவற்றிற்கும் மேலாக வீடெங்கிலும் திமிறித் தெறிக்கும் களிப்பு, இவற்றோடு தன்னையும் இணைத்துக் கொள்ள எழுகிற சின்னச்சின்ன ஆசைகளைக்கூட வலுக்கட்டாயமாகத்தான் உதறி எறிய வேண்டியிருக்கிறது.

தெருவில் யாரோ ஒரு சிறுமி தன்னந்தனியாகக் கிட்டி விளையாடிக் கொண்டிருந்தாள். கூட விளையாட யாருமில்லைபோல. ஷெரிபாவுக்கு, போய் அவளோடு விளையாடவேண்டும் போலிருக்கச் சிரித்துக்கொண்டாள். இதே வயதிலிருக்கும்போது தானும் பாத்திமாவும் இன்னும் சில பிள்ளைகளும் சேர்ந்து கிட்டி விளையாடியது, டூரிங் டாக்கீஸில் சினிமா பார்த்தது, சாத்தணிக் கண்மாய்க் கரையில் கூட்டாஞ்சோறாக்கித் தின்றுவிட்டு மரத்தில் தூரிகட்டி ஆடியது எல்லாமும் ஒன்றன்பின் ஒன்றாக நினைவுக்குவர, கண்களைச் சிறிது மூடி நிதானித்தவளின் மனம் சிறுமியாகவே இருந்திருக்கக் கூடாதாவென்கிற ஏக்கத்தில் துயருற்றது.

# 40

*மதினா தெருவிலேயே நின்று கொண்டிருந்தாள். ராபியா இன்று வந்து விடுவாள் என்கிற உற்சாகம் அவளை நிலை கொள்ள விடாமல் செய்திருந்தது. முழுதாக ஐந்து நாட்கள் அவள் ராபியாவைப் பார்க்காமல் இருந்திருக்கிறாள். பொழுதே போகாமல் ரொம்பவே திண்டாடிப் போய்விட்டாள். உமா வீடு மூன்று தெரு தள்ளி என்பதால் அங்கேயெல்லாம் அனாவசியமாகப் போக அண்ணன் விடமாட்டார். ஆகவே, அங்குகூடப் போகவில்லை. சினிமாவுக்குப் போகலாம் என்றால் அதற்கும் தடை வைத்துவிட்டார்கள். இனி எப்போதுமே ஊர்ப் பெண்கள் சினிமா தியேட்டர் பக்கம் போகக் கூடாதாம்! அவளுக்கு ஆத்திரமாக இருந்தது. அண்ணனின் கட்டுப்பாடெல்லாம் அவளுக்குத்தான் கஷ்டமாக இருந்தது. அவன் வந்ததிலிருந்தே இவளை அங்கே போகாதே, இங்கே போகாதே என்று சொல்லியபடியே இருக்கிறான். அம்மா கூட மகனைத் திட்டினாள், "ஏண்டா ரொம்பவும்தான் கட்டுப்படுத்துற? இந்த வயசுல போகாம பொறகு எப்ப போகப் போறா" என்று! அவள் தனக்காகப் பரிந்து பேசியது மதினாவுக்கே ஆச்சரியமாகத்தான் இருந்தது. அவள் சொல்வது சரிதான்! ஆளாகிவிட்டால் சாகுறவரை நாலு சுவருக்குள்ளதான கிடக்கணும், இது மாதிரி சுதந்திரமா போகவா முடியும் என நினைத்துத் தனக்குத்தானே பரிதாபப்பட்டுக் கொள்வாள். அம்மாவின் இந்தத் திடீர் கரிசனம்கூட அண்ணி, அண்ணனின் மீதான ஏதோ ஒரு கோபத் தினால்தானோ என்னவோ? மதினாவுக்கு ஓரளவு புரிந்தும் புரியாமலும் இருந்தது.*

*கார் வரும் சத்தம் தூரத்தில் கேட்டதும் பரபரப்படைந்தாள் மதினா.*

ஓடிப்போய் ராபியா வீட்டு வாசலில் நின்று கொள்ளத் துடித்த கால்களைப் பலமாக ஊன்றிக் கட்டுப்படுத்தினாள். வேண்டாம். அவளே தன்னைத் தேடி வருகிறாளா என்று பார்ப்போம் என்ற நினைப்பில் தன் வீட்டு வாசல் படியில் போய் நின்றுகொண்டாள். கார் சத்தம் கேட்டதும் தெருவில் இருந்த ஒவ்வொரு வீட்டிலிருந்தும் யாராவது ஒருவர் வாசல் படிக்கு வந்து நின்று ஆர்வமாக எட்டிப்பார்க்கத் தொடங்கினார்கள். பரிதாவும் ஜன்னல் ஓரத்தில் வந்து எதிர் வீட்டை எட்டிப்பார்க்கத் தோதாக நின்று கொண்டிருந்தாள். அவள் கண்கள் ஏதோ வருத்தத்துடனிருந்ததாகத் தெரிந்தது. கதவருகே நின்றுகொண்டிருந்த தங்கையிடம், “ஏண்டி, நீ இங்கே நிக்கிற! போகல?” வியப்போடு கேட்டாள். மதினா ஒன்றும் பேசவில்லை. சைனுவும் மும்தாஜும் பஸ்ஸில் மறுவீடு கூப்பிடப் போயிருந்தார்கள். பஸ் இன்னும் வரவில்லை. பின்னாடியே வரக்கூடும் என நினைத்துக் கொண்டாள். காரின் ஓசை பரிதாவிடம் பதற்றத்துடன் கூடிய எதிர்பார்ப்பினை உண்டு பண்ணியிருந்தது. காரிலிருந்து வஹிதாவும் மாப்பிள்ளையும் இறங்கினார்கள். அவர்களுக்கு சவுரா ஆரத்தி எடுத்து உள்ளே கூட்டிப் போனாள். மதினா கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். காருக்குள்ளிருந்து எதையோ எடுத்தபடி ராபியா தாமதமாகவே இறங்கினாள். இறங்கி வீட்டுக்குள் போகாமல் நேராக மதினாவின் வீட்டை நோக்கி ஓடிவந்தாள். அவள் உள்ளே நுழையும் முன்பாகத் தெருவில் இறங்கிவிட்ட மதினாவின் அருகில் வந்தவள் மகிழ்ச்சி பொங்க அவளை இறுக அணைத்துக் கொண்டாள். அவர்களை ஜன்னல் வழியாகப் பார்த்த பரிதாவுக்குச் சிரிப்பு வெடித்துக் கிளம்பிற்று. “ஏம்மா, எத்தினி வருஷமாச்சு? பாத்துக்கிட்டு” என்றாள். ராபியாவுக்கு வெட்கமாக இருந்தது. “போங்கக்கா . . . !” என்று செல்லமாகச் சிணுங்கிக் கொண்டவள், “இங்கே பாரு! உனக்கு என்ன கொண்டு

வந்திருக்கேன்?" என்று தன் கையிலிருந்த பிளாஸ்டிக் பொட்டலத்தைக் காட்டினாள். மதினா அது என்னவெனப் புரியாமல் அவள் முகத்தைக் கேள்விக் குறியோடு உற்றுப் பார்த்தாள்.

ராபியாவின் முகத்தில் திடீரென அழகு கூடியிருந்தது. புதுப் பாவாடை தாவணி வேறு அவளது அழகைக் கூட்டிக்காட்டிற்று. ஆதங்கத்துடன் அவளையே பார்த்தபடியிருந்த மதினாவை, "மொட்டைமாடிக்கு போகலாம் வா, அங்கே போய் இதைக் காட்டுறேன்" என்றபடி, மதினாவின் வீட்டுக்குள் தானாகவே நுழைந்து முற்றத்தைத் தாண்டி ஓடி மரத்தாலான மாடிப்படியில் கடகடவென்று ஏறினாள் ராபியா. மதினாவும் அவள் கூடவே ஓடி மேலே ஏறினாள். "அடியே, மெதுவா ஓடுங்கடி! கீழ பொத்துக்கிறப் போகுது." கீழேயிருந்தபடியே இரட்டை அர்த்தம் தொனிக்கக் கத்திய பரிதா, காரிலிருந்து இறங்கி ராபியாவின் வீட்டுச் சுவரோரம் சாய்ந்து நின்றுகொண்டிருந்த முத்துவின் பார்வையில் படும்விதமாகக் கதவுக்கருகில் நின்று அவனைப் பார்த்துச் சிரித்துவிட்டு வீட்டுக்குள் ஓடினாள்.

மாடியில் மாலை நேரத்து லேசான பொன்னிற வெயில் பளிச்சிட்டுக் கொண்டிருந்தது. ராபியா, தன் கையிலிருந்த பொட்டலத்தைப் பிரித்து உள்ளங்கையில் வைத்து விரித்தாள். அதை உற்றுப் பார்த்த மதினா ஒன்றும் புரியாமல் ராபியாவின் முகத்தைப் பார்த்தாள். "இது ஆலம் விழுது, இது சம்பங்கி விதை" என்று இன்னொரு கையால் அதிலிருந்ததைப் பிரித்துக் காட்டினாள். ஆலம் விழுது நெட்டு நெட்டாக வெள்ளையாக நூல் மாதிரி உதிர்ந்து கிடந்தது. சம்பங்கி விதை காப்பிக்கலரில் உருண்டை உருண்டையாக இருந்தது. இது எதுக்காக என்கிற மாதிரி ராபியாவைப் பார்த்தாள் மதினா. ராபியா முதுகில் கிடந்த இரட்டைச் சடையில் ஒன்றை முன்னுக்குக்

கொண்டுவந்து பெருமையாக நீவி விட்டுக் கொண்டாள். மதினாவுக்கு அவளது நீண்ட சடையின் மீது எப்பொழுதுமே ஆசையாக இருக்கும். தனது அகன்ற கண்களை விரித்து அதையே பார்த்தவளிடம், “பாத்தியா, என்னோட முடிய? இதுக்குக் காரணம் இதுதான்! இதை இளக்காச்சலா காயவச்சு தேங்காய் எண்ணெயில போட்டு ஊறவைச்சு தலையில தேய்ச்சமுன்னு வச்சுக்க! உனக்கும் இதே மாதிரி வளருமாம். எங்க சித்தி சொன்னாங்க! நான் அங்கெ போறப்போ எல்லாம் இந்த எண்ணெய்தான் தேய்ப்பேன். இங்கெ வர்றப்போ கொண்டும் வருவேன். எங்க நன்னி வீட்டுக்குப் பக்கத்துலதான் ஆலமரம் இருக்கு! நான் அந்த விழுதப் புடிச்சு பொழுதுக்கும் விளையாடிட்டே இருப்பேன். அப்பிடியே ஒனக்குக் கொஞ்சம் புடுங்கிக்கிட்டு வந்தேன். இந்தா இதைக் காயப்போடு.” மூச்சுவிடாமல் பேசியவள் அதைப் பெருமையாக அவள் கையில் தந்தாள். மதினாவுக்குச் சந்தோஷம் கரைபுரண்டோடிற்று. உடனேயே தனது கோரையான குட்டைமுடி நீண்டு வளர்ந்து விட்டது போன்ற கற்பனை பிறந்ததோடு, தனக்காகத் தன் மீதுள்ள பிரியத்தோடு எங்கிருந்தோ இதனைக் கொண்டு வந்த ராபியாவின் மீது அபரிமிதமான அன்பு உண்டாயிற்று.

நின்றுகொண்டிருக்க முடியாமல் அமர்ந்து பேச இடம் தேடிய இருவரும் தண்ணீர் டேங்கிற்குக் கீழிருந்த இடத்தில் குனிந்து போய் உட்கார்ந்து கொண்டார்கள். சுற்றிலும் மறைவாகவும் ஒரு புறம் மட்டும் திறந்த வெளியாக ஒரு அறை போலிருந்த அதன் கீழேதான் இருவரும் எப்போதும் இருந்து கதை பேசுவார்கள். வெயில் படாமலும் மழை பெய்தால் நனையாமலும் அதனுள் இருப்பது சின்னஞ்சிறிய அறைக்குள்ளிருப்பதுபோல மிகவும் பாதுகாப்பாக இருக்கும். சுற்றிலும் மழை பெய்யும்போது உள்ளே குத்தவைத்து அமர்ந்தவாறு தீனி

கொண்டு வந்து தின்று கொண்டிருப்பார்கள். மழைத்தண்ணீர் வந்து பாதங்களை நனைத்தபடியிருப்பது ரொம்பவே குதூகலமாக இருக்கும் இருவருக்கும்.

தரையில் சம்மணமிட்டு அமர்ந்த மதினாவுக்கு ராபியாவிடம் நிறைய விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்கிற ஆர்வம் இருந்தது. அவளது ஆர்வத்தைப் புரிந்துகொண்டவள்போல ராபியாவும் சொல்வதற்குத் தயாராகி விட்ட தோரணையோடு அவளை நெருங்கி அமர்ந்திருந்தாள். மதினாவுக்கு எங்கிருந்து பேச்சை ஆரம்பிப்பது என்று புரியவில்லை. சிறிது நேர அமைதிக்குப் பின்னர்தான் தான் பேசவேண்டும் என்பது உறுதியானது போலக் கேட்டாள். "ஒனக்கு ஒங்க மச்சானைப் புடிச்சிருக்கா?" ராபியாவுக்கு மட்டும் ஏற்பட்டிருக்கும் புது சொந்தம் இவளுக்கு ஏக்கத்தை உண்டுபண்ணினாலும் அதனை அறிந்து கொள்ளும் ஆவலுடன் தான் அப்படிக் கேட்டாள். அவள் அப்படிக் கேட்டதுமே ராபியாவுக்கு முகம் ஒரு மாதிரியாக மாறிற்று. அவளுக்குத்தான் அவனைச் சுத்தமாக பிடிக்கவில்லையே? அதை எப்படிப் பெருமையாகச் சொல்வதென யோசித்தாள்.

அவளது முகவாட்டம் மதினாவை ஆச்சரியப்பட வைத்தது. அவள் ஒன்றும் கேட்கத் தோன்றாமல் அமைதியாக அவளது முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். ராபியா சொன்னாள், "எனக்கு என்னமோ புடிக்கலைடி." மதினா "ஏன்?" என்றாள். "அதுவந்து . . .!" இழுத்தாள் ராபியா. அவளுக்குச் சொல்வதற்கு வெட்கமாக இருந்தது. எப்படிச் சொல்வதென்று தயக்கமாகவும் இருந்தது. என்றாலும், மதினாவிடமிருந்து எதையும் மறைக்க அவளுக்கு விருப்பமில்லை. என்பதனால், "அவர் சரியில்லை மதினா. சிகரெட்லாம் புடிக்கிறாரு, மோசமான ஆள்" என்றாள். மதினாவுக்கு அதன் அர்த்தம் புரியாது

என்பதனால் அவளே தொடர்ந்தாள். “என்னைக் கண்டா போதும். கையைப் புடிக்கிறாரு, கன்னத்தை கிள்ளிக்கிட்டே இருக்காரு. கர்மம்” என்று உடலைக் குலுக்கினாள்.

“ஏன், உங்கிட்ட அப்பிடி நடந்துக்கிட்டார்? அதுதான் உங்கக்கா இருக்கா இல்லெ, அவகிட்ட கொஞ்ச வேண்டியதுதானே” என்றாள் மதினா ஆர்வமாக! அவளது அதிகப்படியான ஆர்வம் ராபியாவைக் குழப்பமடையச் செய்தது. மதினா மறுபடி கேட்டாள், “அப்புறம், உனக்கு எதுவும் வாங்கிக் குடுத்தாரா?”

“ச்சீ . . .! அதெல்லாமில்லை. நான் அப்புறம் எல்லாம் அவரு பக்கத்துல போனாத்தானே? நான் போகவேயில்லையில்ல” என்று பெருமையாகச் சொல்லிச் சிரித்தாள் ராபியா. மதினாவுக்குச் சப்பென்று இருந்தது போல! அவள் முகத்தில் ஆர்வத்தின் சுவடு இல்லாமல் போயிருந்தது. ராபியாவுக்கு இதை விட்டுவிட்டு வேறு விஷயம் பேசினால் தேவலை என்றிருந்தது. என்ன பேசலாம் என்று யோசித்துக்கொண்டிருந்தாள்.

“அப்புறம், ஒங்கக்கா எப்பிடியிருக்கா? அவளுக்கு மச்சானப் புடிச்சிருக்கா?” என்றாள் மதினா. “சரியாத் தெரியலை, ஆனா அவ சிரிக்கறதே இல்லை. அவ உம்முன்னுதான் இருந்தா. சபியா குப்பி சொன்னா, எம்மருமவளுக்கு அம்மா வீட்டு ஏக்கம் இன்னும் தீரலைன்னு! எனக்கும் அவ எதுக்காக அப்பிடி இருக்கான்னு சரியாத் தெரியலை” என்று சொல்லித் தீவிர யோசனையோடு தலையைக் குனிந்து கொண்டாள். மதினாவுக்கு நிறையத் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது. ராபியாவின் சந்தேகத்தைத் தானாவது போக்க வேண்டிய அவசியமும் பொறுப்பும் தனக்கு இருப்பதாக எண்ணியவள் அவளிடம் இன்னும் தெரிந்து கொள்ளும் விஷயங்கள் ஏதும் இருக்குமா என்பது போல முகத்தை உற்றுக் கவனித்தாள்.

“ஆமா வஹிதா, பஸரு நேரம் எழுந்திரிச்சு என்ன செய்வா, குளிப்பாளா மாட்டாளா?” என்று கேட்டாள். அவள் இப்படி மொட்டையாகக் கேட்டது ராபியாவுக்குப் புரியவில்லை. “அப்பிடின்னா?” என்றாள் விளங்காமல். “அது வந்து, அவளும் உங்க மச்சானும் ராத்திரி சந்தோஷமா இருந்தாங்கன்னா, காலையில அஞ்சு மணிக்கே தலை குளிப்பாங்க! அது தெரியாதா ஒனக்கு? மக்கு” என்று உரிமையாகத் திட்டினாள் ராபியாவை.

சந்தோஷமின்னா, என்று கேட்க வாயெடுத்தவள் பேசாமல் இருந்து கொண்டாள். ஏதோ புரிந்தது மாதிரியும் புரியாத மாதிரியும் இருந்தது அவளுக்கு. மதினா, ராபியாவின் அறியாமையை நினைத்து ரொம்பவே பெருமையடைந்தாள். அவளுக்குத் தெரியாத ஒன்றைப் பற்றிச் சொல்லும் அளவுக்குத் தனக்குத் தெரியும் என்கிற பெருமிதம் முகம் முழுக்கப் பரவியிருந்தது. அவளே பேச்சைத் தொடர்ந்தாள். “எங்கண்ணனும் அண்ணியும் தினமும் ராத்திரியில ரூமுக்குள்ள பூட்டிக்கிட்டு இருக்கிறாங்க. காலையில அண்ணி தலைக்குக் குளிச்சிட்டுத்தான் வேற வேலை பார்ப்பாங்க. ஊர்லருந்து அண்ணன் வந்ததிலிருந்து இப்பிடித்தான். எங்கம்மா முணுமுணுத்துக்கிட்டே இருப்பாங்க, புதுசா கல்யாணம் ஆனமாதிரின்னு சொல்லி.”

“கதவப் பூட்டிக்கிட்டு என்ன செய்வாங்க? ஒனக்கு எதாவது தெரியுமா?” என்றாள் ராபியா. அவளுக்கு நிசத்தில் ஆர்வம் உண்டாகியிருந்தது என்பதைவிட மதினாவை உற்சாகம் கொள்ளச் செய்வதற்காகவே அவள் அப்படிக் கேட்டு வைத்தாள். திடீரென ராபியாவின் அறியாமை குறித்து எரிச்சலும் பரிதாபமும் கொண்டாள் மதினா. ஒரு வகையில் அவளது அறியாமை அவளிடத்தில் தன்னை உயர்த்திக்கொள்வதற்குக் கிடைத்த அரிய வாய்ப்பாகவும் மாறி அவளுக்கு நிறைவு உண்டாயிற்று.

ஒரு அப்பாவிக் குழந்தையின் முகத்தினைப் போலிருந்த ராபியாவின் முகத்தை அன்பு பொங்க உற்றுப்பார்த்தாள் மதினா. தனக்குள்ளே எழுந்த பிரியத்தின் வேகம் பொங்கி எழ, தன் இரு கைகளாலும் ராபியாவை இறுக்கி அணைத்து முகத்தில் முத்தமிட்டாள். அவளது செய்கையின் அர்த்தம் புரியாத திகைப்பிலிருந்து விடுபடத் தோன்றாத ராபியாவின் உடல் முழுக்க மதினா தன் விரல்களால் தொட்டுக் கொண்டிருந்தாள். சிமெண்ட் பூசிய மொட்டை மாடியின் சொர சொரப்பான தரையின் மீது சாய்ந்து அமர்ந்து கொண்டிருந்த ராபியாவின் உடல் அசௌகர்யத்தினாலும் பயத்தினாலும் படபடத்துக் கொண்டிருக்க, அவளைத் தனது இரு கைகளால் இறுக்கி அணைத்திருந்தாள் மதினா. இதுவரை திகைப்புக்குட்பட்டுக் கிடந்த ராபியாவின் உடலெங்கும் உணர்ச்சி மேலிட எப்போதோ அஹமதுவோடு இருந்த நாளில் நிகழ்ந்த விஷயம் நினைவுக்கு வர, இதுவரை தரையின் மீது வெறுமனே கிடந்த தனது கைகளை மதினாவின் உடலின் மீது போட்டு அவளை இறுக்கி அணைத்துக்கொண்டாள்.

# 41

பாதி இரவில் நூரம்மாவுக்கு வயிறு பசித்தது. இலியாஸ், இரவு றைமா கொடுத்தனுப்பிய சோற்றைக் கை தவறித் தெருவில் கொட்டிவிட்டு அழுது கொண்டே வந்து சேர்ந்தான். மறுபடி யாரிடம் கேட்க எனத் தெரியாமல் இலியாஸை மட்டும் ஷெரிபாவிடம் போய் சாப்பிடச் சொல்லி அனுப்பிவிட்டு நூரம்மா பசியோடு படுத்துக் கொண்டிருந்தாள். பசி வேதனையானதாக இருந்தது. அருகில் இலியாஸ் தூங்கிக் கொண்டிருந்தான். பசி துக்கமாக மாறி அவளை அழுத்தி, பிறகு பெரும் கோபமாக உருமாறித் திடீரென இலியாஸின் மீது திரும்பிற்று. "இரணங்கெட்ட பய குட்டி. பொறந்ததுமே தகப்பன ஓட்டி விட்டுருச்சு. இப்ப தாய்க்காரியையும் ஓட்டி விட்டுட்டு அனாதையா நிக்கிது. இப்புடி நிக்கணுமுன்னு நஸீப அல்லா இது தலையில எழுதியிருக்கையில யாரு என்னா பண்ண" என்று நினைத்துக்கொண்டவள், எழுந்து உட்கார்ந்து ஓரத்திலிருந்த அடுப்பை உற்று நோக்கினாள். நிஜமாகவே அடுப்பில் பூனை தூங்குவது சிம்னி வெளிச்சத்தில் தெரிந்தது. இன்னும் எத்தனை நாளைக்கு ஒவ்வொரு வீட்டிலும் சோறு வாங்கித் தின்று காலத்தை ஓட்ட முடியும் என்கிற எண்ணம் சோர்வை அதிகரிக்கச் செய்தது. தனது உடல் திடீரெனத் தெம்பே இல்லாமல் போய்விட்டதையும் முட்டியில் கடுமையான வலி உண்டாகிவிட்டதையும் நினைத்தால் பயமாக இருந்தது. தான் சீக்கிரமே மௌத்தாகி விடுவோமோ என்கிற பயம் அது. "கஷ்டப்பட்ட மண்டை சாகிறவரை கஷ்டப்பட்டாத்தான் அவனுக்கு உவப்பாயிருக்குமோ" என்று நினைத்துக் கொண்டாள்.

திடீரென அவளுக்கு தனது இளமைக்காலம் ஞாபகத்திற்கு வந்தது.

தான் செய்த பாவங்களை எல்லாம் அல்லா மன்னிக்க மாட்டான் எனத் தோன்றிற்று. தனது பதினாலு பதினைந்து வயதில் அவள் ரொம்பவே துடிப்போடிருந்தாள். அவள் அம்மா கைருன்னிஸா சரியான ராங்கிக்காரியெனப் பெயர் எடுத்திருந்தாள். பேட்டைத்தெரு குடிசைகளுக்குள் அவளது குடிசையிலிருந்து மட்டும் துடுக்கான பேச்சுக்குரல் கேட்டபடி இருக்கும். அத்தெருவில் யாரும் ஒருத்தருக்கொருத்தர் சளைத்தவர்களில்லை என்றாலும், கைருன்னிஸா கஜலண்டி எனப் பெயரெடுத்திருந்தாள். அவள் நூரம்மாவின் தந்தையை ஒரு கணவனாக மட்டுமல்ல, ஒரு மனித ஜீவனாகவே நினைத்ததில்லை. போட்டதைத் தின்னுட்டுப் போவியா என்று சொல்லித் திட்டிக் கொண்டேயிருப்பாள்.

நூரம்மாவும் அவளது தங்கையும் சிறுவயதில் தெருவில் விளையாடிவிட்டு வந்து கதவைத் தட்டினால், யாராவது ஒருத்தன் கதவைத் திறந்து கொண்டு வெளியே போவது சாதாரணமான விஷயமாக இருந்தது. ஒரு விதத்தில் நிலையான வருமானம் என்று தன் குடும்பத்திற்கு இல்லாததும் அதற்குக் காரணமாக இருந்தது. அவள் பருவமடைந்ததற்குப் பிறகு கைருன்னிஸா தானே தன் மகளுக்கு ஆட்களை ஏற்பாடு செய்து வரவழைக்கத் தொடங்கினாள். அந்நேரத்தில் அவ்வாழ்க்கை முறையில் நூரம்மாவுக்கும் பிடிப்பு வந்து விட்டிருந்தது அவளும்கூட பிரியத்துடன் வருபவர்களோடு உறவு வைத்துக் கொள்ளத் தொடங்கியிருந்தாள். பெரும்பாலான நாட்களில் குடிசையை ஒட்டிய திண்ணையில் கைருன்னிஸா தன் இரண்டாவது மகளோடு படுத்துக்கொண்டு காவலிருக்க வீட்டிற்குள் யாராவது ஒரு ஆள் இவளோடு இருப்பான். இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கப் பிடிக்காமல் நடைப்பிணமாக மாறிவிட்ட இவளது தந்தை காஜா மைதீன் வீட்டிற்கு வருவதையே நிறுத்திவிட்டுப்

பள்ளிவாசலிலேயே தங்கி எத்தனையோ நாட்களாகிவிட்டிருந்தன.

ரெண்டு ரூபாய் பணமும் ஒரு ரவிக்கைத் துணியும் பெரிய விஷயமாகி சந்தோஷத்தைத் தர இவளுக்கு அவ்வாழ்க்கை ரொம்பவே பிடித்துப் போயிருந்தது. அவள் அதற்குள் யாருடைய வற்புறுத்தலுமின்றிச் சென்றதோடல்லாமல் தனது தங்கையையும் அவ்வாழ்க்கைக்குள் கொண்டுவர முடிந்தது.

ஒரு கட்டத்தில் இந்த வாழ்க்கை முறை அலுத்துவிட அம்மாவிடம் சொன்னாள்: "எனக்கு எரிச்சலா இருக்கு, இனி எவனையும் இங்கெ வரவிடாதே." அவளது குரலில் வெளிப்பட்ட சலிப்பினைக் கண்டு கைருன்னிஸா மகளிடம் கேட்டாள், "மேக்கொண்டு என்னத்தச் செய்றதாம்." அவளுக்கு மிச்சமிருக்கும் காலத்தை எவ்வகையில் போக்க முடியும் என்ற பயம் பிடித்துக்கொள்ள துவண்டுபோய் நிலைப்படியில் அமர்ந்திருந்தாள்.

நூரம்மாவுக்கும் அந்தக் கவலை இருந்தாலும் கூட இந்த வாழ்க்கையின் அபத்தத்தை விட அது ஒன்றும் பெரிதில்லை என்ற எண்ணம் மட்டும் எஞ்சியிருக்க உறுதியாகவே சொன்னாள், "அதப் பொறவு பாக்கலாம்! மொத இந்த ஊரைக் காலி செஞ்சிட்டு எங்கியாவது போவம்." நூரம்மா தன்னை மட்டுமல்லாது தன் தங்கையையும் இந்த வாழ்விலிருந்து விடுவிக்க வேண்டிய பொறுப்பை எடுத்துக் கொண்டாள்.

கவலை தோய்ந்த குரலில் கைருன்னிஸா கேட்டாள், "அப்ப கலியாணம் பண்ணிக்கலாமுன்னு இருக்கியா?" அவளது கேள்வியில் அது சாத்தியமாகப் போவதில்லை என்கிற நம்பிக்கையை மகளுக்கு உணர்த்தும் சிரத்தையிருந்தது. கூடவே இதைவிட்டால் பிழைக்க ஒரு வழியும் இல்லை என்பதைச் சுட்டுக்காட்டுவதாகவும்! நூரம்மா சொன்னாள். "எவனோட குட்டியோ என்வயித்தில வளர்றப்போ அது

ஒண்ணுதான் கொறைச்சலு" – இயலாமையோடு ஒலித்த அவளது குரலில் பொதிந்திருந்த விரக்தியில் மூடிய தன் வாயை கைருன்னிஸா பிறகு திறக்கவேயில்லை.

கலைப்பதற்கு இயலாதபடி வளர்ந்துவிட்ட வயிற்றுக் கருவோடு பிழைப்புத்தேடி எங்கெங்கோ சென்றலைந்தது நூரம்மாவுக்கு இன்னும் துயரம் மிகுந்த நினைவாக மனதில் பதிந்து போயிருந்தது.

தனது கடந்த கால ஞாபகங்கள் தந்த அசதியும் குற்றவுணர்வும் அவளை ஆக்ரமித்திருக்க, தான் செய்த பாவங்களுக்குத் தண்டனைக் காலம் இதுதானோ என்கிற பயம் உண்டாயிற்று. தான் அன்றொரு நாள் வஹிதாவின் வீட்டில் வைத்துப் புளுகிய பொய்யும் கூட அவளுக்கு ஞாபகத்தில் வந்தது. பொய்யாகவேனும் ஒரு கதையை ஜோடித்து தன் குடும்பம் கவுரவமானதும் செல்வாக்கானதாகவும் இருந்தது என்று பிறரிடம் காட்டிக் கொள்ள முயற்சித்ததை நினைத்து அவளுக்கே வேடிக்கையாக இருந்தது. தன் தாயின் மரணம் குறித்தும், அவள் விட்டுச் சென்ற தங்கத்தையும் செல்வத்தையும் குறித்தும் அவள் வினோதமான கற்பனைக்கதை ஒன்றை உருவாக்கிச் சொன்னது, ஒரு சுவாரஸ்யத்தை உண்டு பண்ணுவதை முன்னிட்டும்தான் என்பதால் அதுகுறித்த அதிகமான குற்றவுணர்வு அவளுக்கு உண்டாகவில்லை. தான் ஒரு பாவியென்பது உண்மையெனில் எதற்காக ஜின்னு புதையலை எனக்குத் தருவதற்குக் காத்துக் கொண்டிருக்கப் போகிறது? ஒரு பாவியிடம் தரும் அளவுக்கு ஜின்னு ஒன்றும் முட்டாளில்லையே? என்றைக்கிருந்தாலும் அது தனக்காகத்தானே அதனைச் சுமந்து திரிகிறது. அதில் சந்தேகமேயில்லை. அவளுக்குக் குழப்பமாக இருந்தது.

சிறுமியாயிருந்தபோது இவளும் இன்னும் சில பக்கத்து வீட்டுப் பிள்ளைகளுமாக மாடு மேய்க்க வயக்காட்டிற்குச் செல்வார்கள். தலையில் ஒரு ஓலைப்பொட்டியும் அதில் செருகிய

கருக்கரிவாளோடும் காலை நேரத்திலேயே கஞ்சியைக் குடித்துவிட்டு மாடு பத்திப் போவார்கள். ஊரைத்தாண்டி, ஒற்றையடிப் பாதையில் போய், வழியில் கண்மாய் தண்ணீருக்குள் இறங்கி மேலே ஏறினால், பெரிய வயற்பரப்பு பசுமையாக விரிந்து கிடக்கும். ஒரு மரத்தில் மாட்டைக் கட்டிப்போட்டு அது வரப்பில் வளர்ந்து கிடக்கும் புல்லை மேய்ந்து கொண்டிருக்க விட்டுவிட்டு, கண்மாயைத் தாண்டும் போது நனைந்துபோய் சரசரக்கும் பாவாடையை உதறி அதிலிருக்கும் மண்ணை உதிர்த்து, காற்றில் பாவாடையைத் தூக்கி வீசி வீசிக் காயவைப்பார்கள்.

பிறகு ஓலைப்பொட்டியைத் தலையில் கவிழ்த்து வெயில் உறைக்காமல் செய்துவிட்டு, வரிசையாகக் குத்துக் காலிட்டு அமர்ந்து கதை பேசியபடியே புல்லை அறுக்கத் தொடங்குவார்கள். வரப்போரத்தில் வரிசையாக வளர்ந்துகிடக்கும் செடிகளை இது ஆவாரஞ்செடி, இது அரளிச்செடி, தொட்டாச்சுருங்கிச்செடி, துளசிச் செடி, பொம்மைக் கட்டைச் செடி என்று ஒவ்வொன்றாகச் சத்தம் போட்டுப் பெயரைச் சொல்லிச் சொல்லி விலக்கிவிட்டு இடது கையில் புல்லைக் கொத்தாகப் பிடித்து வலதுகை அரிவாளால் நறுக்காக அறுத்து ஒரே சீராகத் தரையில் அடுக்கி வைத்து ஓரளவு சேர்ந்ததும் இன்னொரு இடத்தில் போய் அமர்ந்து நறுக்குவார்கள். ஒருவழியாகப் பொட்டி நிறையுமளவு சேர்ந்ததும் அள்ளிப் பொட்டியில் வைத்துவிட்டு மறுபடி ஓடி விளையாடுவார்கள். அந்தக் கண்மாய் ஓரம் இருக்கும் ஒரு குட்டிஅரச மரத்தின் மீது ஏறி அமர்ந்து . . ! அப்போது ஒரே கும்மாளமாக இருக்கும். தூரத்திலிருக்கும் மலை, விரிந்து கிடக்கும் வயற்காடு, காற்றில் அலை அலையாக அசையும் பயிர், கண்ணுக்கெட்டும் வரை தெரியும் கண்மாய், இவற்றோடு பயிரின் வாசனை சுமந்து மிதந்துவரும் காற்று என்று பேரானந்தமாக இருக்கும்

அனைவருக்கும். ஒருநாள் புல்லைக் குனிந்துகொண்டே நறுக்கியபடி இருக்கையில் அவள் கைகளுக்கிடையில் வேரோடு பிடுங்கிய ஒரு செடியும் அதன் வேரில் கண்ணைப் பறிக்கும் மஞ்சள் நிறத் தங்கக் காசுகள் கொத்துக் கொத்தாய் தொங்கியதைப் பார்த்ததும் அதிர்ச்சியில் உறைந்து போனாள் நூரம்மா. அவளுக்குக் கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை. பெரிய வீடுகளிலும் ராஜா காலக் கதைகளிலும் இருப்பதாகச் சொல்லப்படும் தங்கக்காசு அவள் கையிலிருக்கும் செடியில் காய்த்துத் தொங்கும் அதிசயத்தை அவள் என்னவென்று சொல்வாள்? அதிர்ச்சியில் இங்கே வாங்க புள்ளைகளா எனக் கத்தியபோதுதான் அவள் கையிலிருந்த செடி மறைந்து போனது.

அவள் ஒவ்வொருவரிடமும் அதைச் சொல்லி நம்ப வைப்பதற்கும் முடியாமல் அது எப்படி மாயமாகி மறைந்திருக்கும் என்றும் புரியாத அதிர்ச்சியில் மூழ்கிப் போயிருந்தாள். ஜின்னு அவளுக்குத் தனது புதையலை முதல் முறை காட்டிக் கொடுத்தது அன்றுதான். அதன் பிறகும் ஒரு முறை காட்டியிருக்கிறது. இரண்டு முறையும் அதைத் தருவதற்கு அதற்கு என்ன அசௌகரியமோ? இனி மூன்றாவது முறை நிச்சயம் அது தன்னை ஏமாற்றாது என்கிற நம்பிக்கை அவளுக்குத் திடமாக இருந்ததால், அவள் தன்னை அதிகமாகக் கவலைப்பட்டு அலட்டிக் கொள்ளக் கூடாது என்று உறுதி கொண்டாள். தனக்கு வயதாகிவிட்டதனால் அப்புதையலைத் தர இனிமேலும் ஜின்னு தாமதிக்கும் எனத் தோன்றவில்லை அவளுக்கு. இந்தச் சந்தர்ப்பத்தை விட்டாலும், அதற்கு இன்னொரு சந்தர்ப்பம் கிடைக்கப் போவதில்லை. மட்டுமல்ல, இப்போது கிடைப்பதென்பது நல்ல உபயோகமாகவும் இருக்கும். “இந்த ஊர்க்காரன்களுடைய கண்ணுக்கு முன்னால் அவனுகளை ஒரு ஆட்டு ஆட்டிவைக்கலாம். அப்புறமும் ஊரை விட்டு ஒதுக்கியா வைப்பானுக, பாழாப் போவானுக.”

அவளுக்கு மூச்சுவாங்கிற்று. பசி வயிற்றைக் கவ்விப் பிடித்தது. மறுபடி தலை சாய்த்துப் படுத்துப் பார்த்தாள். விடிய இன்னும் எவ்வளவு நேரமிருக்கிறது என்று தெரியவில்லை. விடிந்ததும் காத்தூனு வீட்டில் போய் புட்டு வாங்கிவரச் சொல்லலாம். நோன்பு ஜகாத்தாகக் கிடைத்த பணத்தில் கணிசமாக ஒரு தொகை மீதமிருந்து ஓரளவு தெம்பை உண்டு பண்ணிக்கொண்டிருந்தது. அத்தெம்பு உருவாக்கிய கனிவோடு அவள் இலியாஸைப் பார்த்தாள். ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தான். “நாளையிலேருந்து றைமாக்கா வீட்டு மளிகைக்கடையில பொட்டலம் மடிக்கப் போறேன் நன்னி” என்று அவளுக்குத் தைரியம் சொல்லியிருக்கிறான். அவளுக்குள் துக்கம் நிரம்பிக் கண்ணீர் வழிந்தோடிற்று. “ஆம்பள வெறியெடுத்த முண்டை, தூமியக் குடிச்சிப் பய மவ இப்புடிப் பச்சை மதலைய சீரழிய வச்சுட்டுப் போனாளே!” என்று பாத்திமாவை மனதிற்குள்ளாகத் திட்டினாள். “நீ எங்கெ போனா என்ன? வாழமாட்டேடி சண்டாளி!” என்று மகளைச் சபித்துத் தன் பசி வேதனையை, துக்கத்தை, தனது ஆற்றாமையைக் குறைத்துக் கொள்ள முயற்சித்தாள். அவளது வேதனைக்கும் சாபங்களுக்கும் மத்தியில் அந்த இரவு மிகவும் துயரம் மிகுந்த ஒன்றாக வளர்ந்து கொண்டிருந்தது.

# 42

*முற்றத்தில் கொடியில் காய்ந்து கொண்டிருந்த துணிகளை ஒவ்வொன்றாக உருவி எடுத்துத் தன் குடங்கைக்குள் போட்டுக் கொண்டிருந்தாள் மும்தாஜ். பரிதாவின் தாவணியை உருவி எடுக்கையில் சட்டென மனதில் வெறுப்பு உண்டாயிற்று. இப்போதெல்லாம் அவள் தன்னோடு போட்டி போடுவது போலிருந்தது. வீட்டு வேலைகளிலாகட்டும், சமையல் வேலையாகட்டும் எதற்கெடுத்தாலும் ஏனோ போட்டி போட்டுக்கொண்டிருக்கிறாள். அதோடு புரணி வேறு! சைனு எங்காவது வெளியில் போய்விட்டு வீட்டிற்குள் நுழைந்ததுமே எதையாவது சொல்லி வைத்து விடுகிறாள். பிறகு சைனுக்கு ஆவேசம் வந்து கத்தித் தீர்ப்பதுதான் வேலை.*

*தான் தன் கணவனோடு தனித்திருப்பதை அவள் ரொம்பவே ஏக்கத்தோடு பார்ப்பது போலவும் அதனைச் சகித்துக் கொள்ள முடியாமல்தான் தன்னைப் பற்றித் தன் தாயிடம் ஏதேனும் கோள் சொல்லித்தருவதாகவும் மும்தாஜ் நினைத்துக் கொண்டாள். முன்பெல்லாம் அவள் இத்தனை மோசமாக இருந்ததில்லை. சைனு திட்டினால் கூட மும்தாஜுக்காகப் பரிந்து பேசி அம்மாவிடம் வாங்கிக் கட்டிக் கொள்வாள். இவ்வளவு பெரிய மாற்றம் அவளிடம் வந்ததற்குத் தான் கணவனோடு சந்தோஷமாக இருப்பது தான் காரணமா? மும்தாஜினால் ஒரு முடிவுக்கும் வரமுடியவில்லை. அவளும்தான் என்ன செய்வாள், கல்யாண ஆசை வரும் வயதுதானே, என்று நினைத்துத் தன்னைத்தானே சமாதானம் செய்து கொள்ள முயன்றாள். கொஞ்ச காலமாக இவளும் கவனிக்கத்தான் செய்கிறாள்.*

ராபியா வீட்டு கார் சத்தம் கேட்டால் போதும் பரிதாவின் முகம் மாறிவிடுவதையும், அவள் ஓடிப்போய் தெருவோர ஜன்னலில் காத்துக் கிடப்பதையும், ஜன்னல் திரைக்குப் பின்னிருந்தவாறு அவள் யாரையோ பார்க்கிறாள் என்பதையும்! இந்நினைவு வந்ததுமே அவளுக்குச் சுலைமானின் ஞாபகம் வந்து உடல் நடுங்கியது. பரிதாவின் இச்செயல் அவனுக்குத் தெரிந்தால் என்ன நடக்கும் என்பதை அவளால் கற்பனை செய்துகூட பார்க்க முடியவில்லை. அவன் ஒரு கொலைகாரனாகவே மாறி விடுவான் என்பதில் அவளுக்குச் சிறிதுகூட ஐயமேற்படவில்லை.

பரிதாவின் மீது உருவாகிக்கொண்டிருக்கும் வெறுப்பினால் அவளைக் காட்டிக் கொடுக்க நினைத்தாலும், அவ்வெண்ணத்தைச் சுலைமானின் மூர்க்கத்தனத்தை யோசித்துக் கைவிட்டாள்.

நேற்றிரவுகூட படுக்கையிலிருந்த போது சுலைமான் கேட்டான். “பரிதாவ இந்த சபர் கட்டிக் குடுத்துட்டுத்தான் போகணும் என்கிற நிய்யத்தோடதான் வந்திருக்கேன். சரியான மாப்பிள்ளைதான் கெடைக்கற மாதிரி தெரியல. பேசாம அஜீஸ் பயலுக்குக் கட்டிவச்சுட்டு விசா எடுத்து எங்கூடவே கூட்டிட்டுப் போயிரட்டுமா.” அவன் அஜீஸிற்குப் பெண் கொடுப்பதோடல்லாமல் இங்கிருந்து தன்னோடு கூட்டிப் போவதாகவும் சொல்லியதன் அர்த்தம் மும்தாஜுக்கு உடனேயே விளங்கிற்று. அவள் சிறிது நேரம் ஒன்றும் சொல்லாமலேயே அவன் கைகளைத் தொட்டு விளையாடியபடியிருந்தாள். இந்தத் திருமணம் நடந்தால் அஜீஸிற்கும் நபிஸாவுக்கும் இடையில் உள்ள உறவு வெட்டுப்பட்டுவிடும் என்கிற நினைப்பு அவளுக்குக் குரூர திருப்தியை உண்டு பண்ணியது. சுலைமான் வெளிநாட்டிலிருந்தாலும் கூட தானெல்லாம் இத்தனை ஒழுக்கமாக வேற்று ஆணின் காற்றுப் படாமல் வருடக்கணக்கில்

இருக்கும்போது, புருஷன்காரன்கூட இருந்தும் இன்னொருவனின் சகவாசத்தை வைத்திருக்கும் நபிஸாவின் மீது அவளுக்கு ரொம்பவே ஆத்திரமாக இருக்கும். சமயங்களில் அது பொறாமையோ என்றுகூட நினைத்துக் கொள்வாள். மறுகணமே, “ச்சேச்சே! நான் என்ன அப்பிடித் தரங்கெட்ட பொம்பளையா என்ன” என்று தன்னைத்தானே மெச்சிக் கொள்வாள்.

அவளால் உடனே இவ்விஷயத்தை ஆமோதிக்கவும் வழியில்லாத நிலை உண்டாயிற்று. அஜீஸும் சுலைமானோடு கூடவே வெளிநாடு போய் அவனோடு சேர்ந்தே தொழில் பார்த்தானென்றால் இன்றுவரை சுலைமானுக்கு மட்டுமே சொந்தமாக இருந்த வியாபாரத்தில் இவனும் பங்காளியாகி விடுவான். இது அவளுக்குக் கொஞ்சம்கூட பிடிக்கவில்லை. தனக்கு மட்டுமே சொந்தமான சொத்தை, தன் நாத்தனாரின் கணவனும் பங்கு போட்டுக் கொள்வதில் அவளுக்குத் துளிக்கூட உடன்பாடில்லை. இவ்விஷயத்தைச் சுலைமானிடம் சொன்னாள் என்றால் அவனுக்குக் கோபம் வரும். ஒன்றுமே சொல்ல முடியாதபடி பல்வேறு எண்ணங்கள் தோன்றி அலைக்கழிக்க சரியான ஒரு தருணத்தில் சொல்லலாம் எனப் பேசாமலிருந்தாள் அவள்.

அவள் யோசித்துக் கொண்டிருந்த சமயத்தில் சுலைமான் அவளை இறுக அணைத்திருந்தான். அதுகூட அவளுக்குத் தெரியவில்லை. அவன் அவளது காதை லேசாகக் கடித்து, “என்ன ஆச்சு ஒனக்கு? சவம் மாதிரி கெடக்கிற, அதுக்குள்ள அலுத்துப் போச்சா?” என்று கிசுகிசுத்ததும் அவள் சுய நினைவுக்கு வந்தாள். “ஒண்ணுமில்ல” என்று சொல்லிவிட்டு அவனை இறுக அணைத்துக் கொண்டாள்.

# 43

ளுஹர் தொழுதுவிட்டு பள்ளிவாசலிலிருந்து வெளியே வந்தான் சுலைமான். பள்ளிவாசல் நடைபாதையெங்கும் வாதாமர இலைகள் உதிர்ந்து கிடந்தது அவனுக்கு எரிச்சலை உண்டுபண்ணிற்று. பள்ளிவாசலுக்குள் இப்படிக் குப்பையாகக் கிடப்பது அவனுக்குச் சகிக்கவில்லை. நின்று சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான், மோதினார் நிற்கிறாரா என்று! அவரைக் காணாதது அவனுக்கு இன்னும் எரிச்சலை உண்டாக்கிற்று. மாதாமாதம் மோதினார் சம்பளத்தையும் பள்ளிவாசல் மின்சாரக் கட்டணத்தையும் சுலைமான்தான் தன் கைக் காசில் பார்த்துக் கொள்கிறான். இருந்தும்கூட போதிய நன்மையைச் சம்பாதித்த திருப்தியே அவனுக்கு உண்டாகவில்லையென்றதால்தான் அவன் கார் வாங்கினான். தப்லீக் வேலைக்கு உதவியாக இருக்கும், குடும்பத் தேவைகளுக்கும் எடுத்துக் கொள்ளலாம் என்கிற எண்ணத்தோடு! அவனுக்குத் தன் செய்கையை நினைத்து கர்வம் மிகுந்தது. காரைப் பள்ளிவாசல் உள்ளேயோ வெளியேயோ நிறுத்தி வைக்கத் தோதான இடம் இல்லாததனால்தான் வீட்டில் நிறுத்திவைத்திருந்தான். பள்ளிவாசலிலிருந்து வீட்டை நோக்கிக் கிளம்பியவனை, “கொஞ்சம் இங்கெ வாத்தா” என்று கரீம் கூப்பிட்டான். ஒன்றும் புரியாமல் அவனருகில் போய், “என்ன மாமு” என்றான். “என்ன, ஒண்ணே காலுக்கே பசிச்சிருச்சோ? கொஞ்ச நேரம் இங்கெ உக்கார்ந்திட்டுப் போகலாமில்ல” என்று சொல்லவும் தட்ட முடியாமல் நின்று கொண்டான். அவனுக்கு நிஜமாகவே பசித்தது. காலையில் விரால்மீன் வாங்கிக் கொடுத்திருந்தான். ஆறிப் போவதற்குள் போய் சாப்பிட வேண்டும். அவனுக்கு மீனென்றால்

உயிர். ஒவ்வொரு சபரும் சிங்கப்பூரிலிருந்து இங்கே இந்த வெயில் காலத்தில்தான் வருவான். அந்த இதமான சீதோஷ்ணத்தை விட்டு இங்கே வந்து இருக்கப் பிடிக்காதுதான். என்றாலும், இந்த வெயில் சீஸனில்தான் இங்கு விரால் மீன் கிடைக்கும். சிங்கப்பூரிலிருக்கும் சினேகிதர்கள் எல்லாம் கேலி செய்வார்கள், வெயில்ல போய் காயப் போறே என்று! அவன் ஒன்றும் சொல்லமாட்டான். மீனை நினைத்ததுமே அவனுக்கு நாக்கில் நீரூறிற்று.

கரீம் அவுஸுக்கு அருகிலிருந்த மதரஸாவில் சம்மணமிட்டு அமர்ந்திருந்தான். அவனுக்கு மிக நெருக்கமாகப் போய் கர்ச்சீப்பினால் தரையை லேசாக, தூசி தட்டிவிட்டு “அல்லாஹு” என்றவாறு அமர்ந்தான் சுலைமான். கரீமின் முகத்தில் ஏதோ கேட்கப் போவதற்கான தோரணை இருந்ததைச் சுலைமான் கவனித்தான்.

“என்னத்தா மருமவனே, ரொம்பவும்தான் நன்மையக் கொள்ளையடிக்கிறீங்க போலருக்கு?” மிகப்பெரிய பீடிகையோடு கேட்டான் கரீம். அவனது குரலிலிருந்த கிண்டலையும் நக்கலையும் சுலைமான் புரிந்துகொள்ளவில்லை. “என்ன சொல்றீங்க மாமு” என்றான் விளங்காமல்! அவன் பேந்தப்பேந்த விழித்ததைப் பார்த்துச் சிரித்தான் கரீம். “புரியாத மாதிரி நடிக்கிறீங்க! இவ்வளவு பெரிய காரியத்த பள்ளிவாசலுக்குச் செஞ்சுப்புட்டு. ஹும்!” என்றான் கரீம். “ஓஹோ. . ! அதச் சொல்றீங்களா?” சுதாரித்துக் கொண்டவனுக்குப் பெருமை பிடிபடவில்லை. கரீம் தன் செயலின் விசித்திரத்தைக் கிண்டல் செய்கிறான் என்பதுகூட புரியாத மரமண்டையாக இருந்தான். “எப்பிடி நம்ப வேலை?” என்று சொல்லி நிறுத்திவிட்டுத் தன் காரியத்தை நினைத்து ஒருகணம் தன்னைத்தானே மெச்சிக் கொண்டவன், “பின்னெ என்ன? பள்ளிவாசல் வேலை, தப்லீக் வேலைக்கெல்லாம் போகவரத் தோதா இருக்கும் இல்ல! சின்னச்

சின்ன ஊருகளுக்குப் பள்ளிவாசல் வேலையாப் போக எம்புட்டுச் சிரமமா இருக்கு, பஸ்ஸூம் இல்லாம ஒண்ணுமில்லாம! அதான் நான் காரை வாங்கி விட்டுருக்கேன் பள்ளி வாசலுக்காக" என்று சொல்லி விட்டு, "ரொம்ப நாள் நிய்யத்து இது எனக்கு" என்றான். மிகப்பெரிய காரியமொன்றை நிறைவேற்றிய திருப்தி அவன் முகத்தில் இருந்து கொண்டிருந்தது. அதை ஒருவித சுவாரஸ்யத்துடன் பார்த்து ரசித்துக் கொண்டிருந்த கரீம் சொன்னான், "இந்தக் கோயில்கள்ல காளை மாட்டை வாங்கி நேர்ந்து விடுவாங்க இல்லெ, அதுமாதிரிதானே? ஊம்" என்று சிரிக்காமல் அப்பாவியாக முகத்தை வைத்துக் கொண்டு கேட்டான். அவனது கேலிப்பேச்சு துளியும் புரியாமல் ரொம்பவும் பெருமையாகத் தலையாட்டி ஆமோதித்தான் சுலைமான். ரொம்பவும் சரியாகச் சொன்னீர்கள் என்பது மாதிரி!

கரீம் தொடர்ந்து சொன்னான். "என்ன இருந்தாலும் சொல்லுங்க மாப்பிள்ளை. இனி இந்த அளவுக்கு யாரும் நன்மையக் கொள்ளையடிக்கிற காரியத்தை எந்தக் காலத்துலயும் செய்ய முடியாது, போங்க!" என்றதும் சுலைமானுக்குக் குஷியாக இருந்தது. பசி கூட மறந்து போய்விட்டிருந்தது. சிறிது நேரம் இருவரும் எதுவும் பேசிக்கொள்ளவில்லை. காற்று சிலுசிலுவென்று அடித்துக் கொண்டிருந்தது. தொப்பி பறந்து விடாமலிருக்க அதைக் கழட்டிக் கையில் வைத்துக் கொண்டான் சுலைமான். காற்றில் அவுஸிலிருந்த தண்ணீர் அலையலையாகத் தளும்பிற்று. வளர்ந்து படர்ந்துகிடந்த பாசியினூடாக நுழைந்து நழுவிக் கொண்டிருந்த மீன்கள், மறுபடியும் அவனது பசியை நினைவூட்டின. பாதிப்பேச்சில் எழுந்துபோக முடியாமல் அமர்ந்திருந்தவனுக்குத் திடுமென பாத்திமா ஞாபகம் வந்தது. "ஏங்க மாமு, அந்த ஓடுகாலி முண்டையப் பத்தி எதுவும் தகவல் தெரிஞ்சிதா?" என்றான். திடுக்கிட்டுக் கனவிலிருந்து விழித்தவன்

போலிருந்தது அவன் கேட்டது. குரலில் கடுமை கூடியிருந்தது. கரீம் எரிச்சல் மேலிட, “அந்தச் சிறுக்கியப் பத்தி ஏன் ரொம்பவும் நீ அலட்டிக்கிறன்னே எனக்குத் தெரியல்ல” என்றான் மிகவும் அசுவாரஸ்யமான குரலில்!

அவனது குரலிலிருந்த அலட்சியமும் அசிரத்தையும் சுலைமானை ஆத்திரமுறச் செய்தாலும் பல்லைக் கடித்துக் கொண்டான். அவனது லேசான தாடிக்குள்ளாக மறைந்திருந்த முகம் ரத்தச் சிவப்பாய் ஆகியிருந்தது. அவனது சுருங்கிய கண்கள் ஒருகணம் கரீமை உற்று நோக்கித் தாழ்ந்தன. தனது மெல்லிய உதடுகள் துடிக்க ஆற்றாமையோடு கேட்டான். “ஊருக்குப் பெரிய மனுஷங்க, நீங்க இப்பிடிப் பொறுப்பில்லாமப் பேசினால் என்ன அர்த்தம் சொல்லுங்க?”

“என்னப்பா செய்றது, கழுத ஓடிப்போயிருச்சு! அத நாம என்னா செய்றது சொல்லு, தலை முழுகிட்டு இருக்க வேண்டியது தான? எதுக்காக நீ இம்புட்டு ஆத்திரப்படுறன்னு எனக்குப் புரியல. ஊருன்னு இருந்தா இப்பிடி முன்னப்பின்ன ஒண்ணு ரெண்டு நடக்கத்தான் செய்யும். இதையெல்லாம் யாரு ஒழுங்கு செய்ய முடியும்” என்று சலித்துக் கொண்டான் கரீம். அவனுக்கு மனதினுள் ஆத்திரம் முட்டிக் கொண்டிருந்தது. பய ரொம்பவும்தான் டென்ஷனாகிறானே என்று தனக்குள் திட்டிக் கொண்டான்.

சுலைமான் மறுபடி தொடங்கினான். அவனால் கரீமின் பொறுப்பின்மையைச் சகித்துக் கொள்ளவே முடியவில்லை. “அது என்ன, அப்பிடிச் சொல்றீங்க கொஞ்சங்கூட பொறுப்பில்லாம? நீங்களே இப்பிடி இருந்தா மத்தவங்க எப்பிடி இருப்பாங்க? அப்பிடித்தான் அன்னிக்கி பள்ளிவாசல் முன்னால தொழுகை நேரத்துல காபிர் பயலுக தப்பு அடிச்சிருக்கானுக, அதைக் கேள்விப்

பட்டுட்டு நான் ரொம்பவே துடிச்சுப் போனேன் தெரியுமா? நீங்கள்ளாம் இருக்கற தைரியத்துலதான எங்கள மாதிரி பசங்க வெளிநாடுகள்ல இருக்கோம். நீங்களே இப்பிடிக் கண்டுக்காம இருந்தா ஊர் என்னாகிறது? நம்ம சமூகம் சீரழியாமத் தடுக்கறது உங்க கடமைன்னு நீங்க நெனைக்கறதில்லையா?" என்றான் ஆவேசமாக! அவன் உணர்ச்சிப் பிழம்பாகி விட்டிருந்தான் என்பதை முகம் நன்றாகவே பிரதிபலித்தது.

கரீமுக்குள் ஒரு வகையான வெறுப்பும் சலிப்பும் சுலைமானின் பேரில் உண்டாயிற்று. கார் வாங்கி விட்டிருக்கிற அவனது முட்டாள்தனத்தைக் கேலி செய்து ரசிக்கலாம் என்று நினைத்துக் கூப்பிட்டால், இவன் இத்தனை ஆவேசப்படுகிறானே? அவனுக்குச் சமமாக ஆத்திரப்படுவது தனக்குச் சரியில்லை என்பது மாதிரி சற்றுநேரம் பொறுத்திருந்து விட்டு, சுலைமானின் தோளில் மெதுவாகத் தட்டிக் கொடுத்தான் கரீம். "ரொம்ப உஷ்ணப்படாதீங்க, மாப்பிள்ளை! யாரும் யாரையும் காப்பாத்தறதுங்கறது நடக்காத காரியம். எல்லாரையும் அல்லா ஒருத்தன்தான் காப்பாத்தணும். அவன் என்ன எழுதி வச்சிருக்கானோ அதன்படிதான் எல்லாம் நடக்கும்" என்றான். அவனைச் சமாதானம் செய்யும் நோக்கில் இல்லாமல் இன்னும்கூட தூண்டிவிட்டுப் பார்க்கவேண்டும் என்கிற ஆர்வத்துடன்!

சுலைமான், கரீமின் வறண்ட படர்ந்து கிடந்த முகத்தையே வெறித்துப் பார்த்தான். அவனது முகத்தில் தெரிந்த உணர்வினைச் சிறிதளவாவது கணித்துவிட முடியுமா என்கிற இயலாமையோடு. பெரும்பாலான நாட்கள் வெளிநாட்டிலேயே இருந்து பழகிய அவன் இங்குள்ளவர்களின் பேச்சின் அர்த்தங்களையோ, முகபாவத்தின் அர்த்தங்களையோ எளிதாகக் கணித்துவிட முடியாமல் சிரமப்பட்டான். திடீரென அவனது கோபம் அடங்கி முகத்தில்

சாந்தம் படிந்தது. “ஒரு முஸ்லிமா பொறந்துட்டு இப்பிடியெல்லாம் பொறுப்பில்லாம எப்பிடிப் பேச முடியுது உங்களுக்கு?” என்றான். அவன் குரல் மிகுந்த ஆற்றாமையோடிருந்தது. தனக்காக ஏதோ ஒரு உதவிகேட்டுக் கெஞ்சுவது போன்றோ, சிறிதாவது இரக்கம் காட்டுங்கள் என்றோ மன்றாடுவது போலிருந்தது.

கரீமிக்கு அவன் பேரில் ஒரு பரிவு உண்டாயிற்று. அவனை ஏளனம் செய்வதும், நக்கல் செய்வதும் தவறு என்ற எண்ணம் திடீரெனத் தோன்றி சங்கடத்தை உண்டு பண்ணியது. இந்தப் பேச்சை இதோடு முடித்துக் கொண்டால் தேவலை என்று தோன்றியது அவனுக்கு. அதனால், “சரி சுலைமான், இதுவரைக்கும் போனத விடு! இனிமேலும் நம்ம சமூகத்துக்கு இப்பிடி ஒரு இழிவு வராம பாத்துக்கறது நம்ம ஒவ்வொருத்தரோட கடமை. இனி இது மாதிரி ஒண்ணும் நடக்காது. எழுந்திரி கிளம்புவோம், பேசிக்கிட்டே போகலாம்” எனச் சொல்லியபடி அவனையும் அங்கிருந்து கிளப்பிக் கூட்டிக்கொண்டு பள்ளிவாசலை விட்டு வெளியே வந்தான் கரீம். சுலைமான் எழுந்து நடக்கையில் நினைத்துக் கொண்டான். ‘இந்த ஆளுகளுக்கெல்லாம், தின்னுட்டு ஊர் மேயுறதத் தவிர வேற என்ன கவலை. என்னிடம் இருக்கும் ஈமானில் துளியளவுக்காவது இந்த ஆட்களுக்கு இருந்தால் இப்பிடியெல்லாம் நடந்திருக்குமா?’

யாரோ தனது பெயரைச் சொல்லிக் கூப்பிடும் சத்தம் கேட்டுத் தன் நினைவுக்கு வந்தான் சுலைமான். பள்ளிவாசல் அருகில் பெட்டிக்கடை வைத்திருக்கும் ரசீதுதான் கூப்பிட்டான். “அண்ணே! உங்கவீட்டுக்கு வழிகேட்டு ஒரு பெரிய கார் இப்பத்தான் போச்சு! சீக்கிரமா போங்க” என்றதும், “சரிங்க மாமு, நான் போய் யார்னு பாக்கறேன்” என்று அவசரமாக விடைபெற்றான். யாராக இருக்கும் என்கிற யோசனையோடு வேகமாக வீட்டை நோக்கிச் சென்றவனுக்குத் தெரு

திருப்பத்திலேயே நின்று கொண்டிருந்த காரைப் பார்த்ததும் புரிந்து போயிற்று வந்திருப்பது அப்துல்லா பாய்தான் என்பது. மிகுந்த உற்சாகத்தோடு வீட்டிற்குள் நுழைந்தவன் அங்கு ஹாலில் அமர்ந்திருந்தவருக்கு ஸலாம் சொல்லி வாங்க வாங்கவெனக் கட்டி அணைத்துக் கொண்டு முஸாபா செய்தான். அவன் முகம் சந்தோஷத்தில் பூரித்துப் போயிருந்தது.

சோபாவில் அவர் அமர்ந்ததும், அவரருகில் அமர்ந்தவன், "என்ன நிக்காவெல்லாம் முடிஞ்சிதா, மாமியும் கூட வந்திருக்காகளா?" என்று கேட்டான். "அவங்களக் கூட்டிவராம நான் மட்டும் எப்பிடி வரப்போறேன். ரெண்டுபேரும்தான் வந்தோம். ஜஸிமா உள்ள இருக்கு" என்றார் பெருமையோடு! புது மனைவி பேரைச் சொல்லும் பொழுதே முகம் சிவந்தது அப்துல்லாவுக்கு.

மும்தாஜ் அடுப்படிக் கதவின் இடுக்கு வழியே அவரை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். ஒல்லியாக வெடவெடவென்று வளர்த்தியாக இருந்தார். வயது நிச்சயம் அறுபதுக்குக் குறையாது என்றாலும் தலையில் ஒரு முடி நரைத்திருக்கவில்லை. ராஜ குடும்பத்து நிறம். சிவந்த உடலில் கிள்ளிப்பிடிக்கச் சதையில்லை. நேர்த்தியான மூக்கும், செய்து வைத்தது போன்ற வாயும். வயதில் ரொம்பவே அழகாக இருந்திருப்பார் என்று நினைத்துக் கொண்டாள். மனதுக்குள் இவனுக்கு எதுக்காக இந்த வயசுல இளம் வயதுப் பொண்டாட்டி என்று கேட்டுக் கொண்டாள். அப்பெண் மும்தாஜின் அறையில் பரிதாவுடன் இருந்தாள். அந்தப் புதுப் பெண்ணின் உருவத்தை நினைவுறுத்திக் கொண்டாள் மும்தாஜ். இருபத்தைந்து வயதுதான் இருக்கும் அவளுக்கு. அத்தனை அழகாக இருந்தாள். பரதேசி வீட்டுல அழகாப் பொறந்து தொலைச்சதுக்காக, இந்தக் கெழவன் கிட்ட வந்து சேர்ந்திருக்கா. எல்லாம் நஸீபு என்று சலித்துக் கொண்டவள் மீனைப்

பொரிக்க ஆரம்பித்தாள். அவர்களுக்குச் சாப்பாடு வைக்க வேண்டுமென்கிற அவசரத்துடன், வேலைகளைப் பரபரப்போடு செய்யத் தொடங்கினாள். சாப்பாட்டிற்குப் பிறகு சுலைமான் தெருவிலிருந்த ஒவ்வொரு உறவுக்காரர்கள் வீட்டிற்கும் அவரையும் அவரது மனைவியையும் மிகவும் பெருமையோடு கூட்டிப் போய் அறிமுகம் செய்து வைத்தான்.

# 44

தெருவெங்கிலும் வெயில் கொட்டிக் கிடந்தது. அதன் தகிக்கும் அனல் தெருவில் நடமாட்டத்தை முடக்கியிருந்தது. ராபியா, வஹிதா வந்ததிலிருந்து அவள் கூடவே இருந்து கொண்டிருந்தாள். இன்னும் ஒன்றிரண்டு நாளில் அவள் இங்கிருந்து போய்விடுவாள். மறுபடி நாற்பதாவது நாளில்தான் இங்கு வருவாள். அதனால் அவள் விளையாட்டைப் பெரிதாக நினைக்கவில்லை. ஏனோ முன்னைக் காட்டிலும் வஹிதாவின் மீது கூடுதலான பிரியம், ஒட்டுதல் வந்திருந்தது. அதன் காரணமும் இவளுக்குத் தெரிந்ததுதான்.

இன்று வஹிதா வந்த மறுநாள் என்பதனால் காலையிலிருந்து வீட்டில் மருமகனுக்காக ஏக தடபுடல் கவனிப்பு நடந்து கொண்டிருந்தது. இவளுக்குத்தான் எரிச்சலாக இருந்தது. வஹிதாவுக்கும் அப்படித்தானிருந்திருக்கும் என்பதை அவள் முகத்தை வைத்தே புரிந்து கொண்டாள் ராபியா. அவளுக்கு வருத்தமாகக் கூட இருந்தது. அக்கா சந்தோஷமாக இல்லை என்பது தன் அறிவுக்கே எட்டும் போது அம்மாவுக்கும் பெரியம்மாவுக்கும் ஏன் விளங்கவில்லை? புரிந்தும் புரியாதமாதிரி நடிக்கிறார்களா என்று அறிந்து கொள்ள அவர்கள் முகங்களைச் சற்று உற்றுப் பார்த்தும் இவளுக்குப் புரியவில்லை. அவர்கள் நிஜமாகவே சந்தோஷத்துடன் ஓடியாடி வேலை செய்து கொண்டிருப்பது போலத்தான் இருந்தது. இவளுக்குத்தான் கவலையாக இருந்தது என்றாலும் மாப்பிள்ளைப் பலகாரமான ‘வட்லப்பம்’ தனக்கும் சாப்பிடக் கிடைத்த திருப்தி அவளுக்கு மிச்சமிருந்தது.

மத்தியானச் சாப்பாடு வேலை முடிந்த கையோடு தெருவில் இருந்த

அத்தனைப் பெண்களும் ஒவ்வொருத்தராகப் பெண் பார்க்கவென வரத்தொடங்கினார்கள். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் சீனியும் பூவும் வாங்கிப் பையில் வைத்துக் கொண்டுவந்தார்கள். பேச்சுச் சத்தமும் சிரிப்போசையும் வந்து கொண்டிருந்தது. ஷெரிபாகூட வந்திருந்தாள் வஹிதாவைப் பார்க்கவென! சவுரா, நபிஸா, மும்தாஜ், மாரியாயி, இன்னும் வேறுதெருப் பெண்கள் என்று ஒரே பெண்கள் கூட்டமாக ஹால் நிரம்பியிருந்தது. எப்போதும் மதியச் சாப்பாட்டுக்குப் பின் படுத்துத் தூங்கும் காதர் கூட அன்று கடைக்குப் போய்விட்டான். இரைச்சலில் தூங்க முடியாது என்று மாடியிலிருந்த அறையில் சிக்கந்தர் படுத்திருந்தான். புதுமாப்பிள்ளை வெளியில் போகக் கூடாதாம்.

முதலில் நபிஸாதான் வஹிதாவிடம் பேச்சைத் தொடங்கினாள். "ஏம்மா புதுப்பொண்ணு, ஒம் மாமியா எப்பிடி இருக்குது?" என்றாள் கிண்டலாக! நபிஸாவுக்கு சையது ஏதோ ஒரு வகையில் மாமு முறை வேண்டும்.

வஹிதா தலைகுனிந்தபடி மெதுவாகத் தலையசைத்தாள், நன்றாக இருப்பதாக அர்த்தம் வரும் விதத்தில். "அதுக்கென்னா கொறைச்சல், நல்லாயில்லாம? ஒங்கிட்ட எப்பிடி நடந்துக்கிதுன்னு கேட்டேன்" என்றாள் நபிஸா.

மும்தாஜ் இடை மறித்தாள். "போயி அஞ்சு நாள்ல என்னா செய்யப் போறாக. என்னையக் கூடத்தான் என் மாமியா கல்யாணமாகி ஒரு வாரம் படுக்கப்போட்டுச் சாப்பாடு குடுத்துச்சு" என்றாள் எகத்தாளமாக! படுக்கப்போட்டு என்கிற வார்த்தையை அவள் நக்கலாக நீட்டி முழக்கிச் சொல்லியவிதம் அங்கிருந்த அனைவருக்குமே சிரிப்பை உண்டு பண்ணிற்று. "அடி மெதுவா பேசுங்கம்மா, சைனு அக்கா வந்தாலும் வரும்" என்று சொல்லி நாக்கைக் கடித்தாள் றைமா.

“வரட்டுமே! தலையையா சீவிடும், உள்ளதத்தான சொன்னேன்” என்று அலட்சியமாகத் தலையாட்டினாள் மும்தாஜ். “எல்லாம் புருஷன் மடிக்குள்ள இருக்கற தைரியம், அதுதான் இப்புடிப் பேச வைக்கிது” என்று சொல்லிவிட்டுக் கண்ணடித்துச் சிரித்தாள் நபிஸா. “அப்புறம்?” என்று அதனை ஒத்து ஊதினாள் சொஹ்ரா.

திடீரென ஞாபகம் வந்தவளாக றைமா, “ஏன் மும்தாஜு, ஒம்மாப்பிள்ளை ரொம்பப் பெருமையா அந்தப் புதுமாப்பிள்ளையக் கூட்டிக்கிட்டுத் திரிஞ்சாரா? பாவம் அந்தப் பொண்ணு! தன் மக மாதிரி இருக்கற பொண்ணக் கட்டி வெக்கமில்லாமக் கூட்டிக்கிட்டுத் திரியறானே அந்த ஆளு” என்று சலித்துக் கொண்டவள், “எனக்கு மனசு ஆறலே தேறலே போ” என்றும் சொல்லிக் கொண்டாள்.

“யாருக்குத்தான் ஆறுது? அவர் இந்தக் கண்றாவிய பெருமையா நெனைச்சு காட்டிக் கிட்டுத் திரியிறார்ன்னா, இவரும் பெருமையா கூட்டிக்கிட்டுத் திரியிறாரே, என்னத்தச் சொல்ல?” என்று முக வாயில் கைவைத்தாள் மும்தாஜ். அவளுக்கும் சுத்தமாகப் பிடிக்கவில்லைதான். என்ன செய்ய? “என் மாமியாதான் நல்லாத் திட்டித் தீத்தாங்க அந்தக்கிழவன் போனதுக்கப்புறம். காசு இருந்தா இம்புட்டு பவுசாவரும் மனுஷனுக்குன்னு.”

“பாத்திமா புருஷனத் தேடி ஓடுனான்னு நாக்கைப் புடுங்கிக்குறாரே ஒம்புருஷன், இவர மட்டும் பெருமையா ஓட்டிக்கிட்டுத் திரியலாமா? கெழடனுக்கு ஏற்கனவே பொண்டாட்டி இருக்கையில இப்பிடி இளவயசுப் பொண்ண நாலாவதாக் கட்டி வீணாக்கலாமான்னு புத்தியச் சொல்லுறது” என்றாள் சொஹ்ரா. அவள் இந்த அளவுக்குக் கோபமும் எரிச்சலும் அடைந்து றைமா கூட இதுவரை பார்த்ததில்லை. அப்துல்லா வந்துவிட்டுப் போனதிலிருந்து இதே பேச்சாகத் தான் பேசித் தீர்த்துக் கொண்டிருந்தாள்.

*மும்தாஜால் அவளது எரிச்சலைத் தாங்கிக் கொள்ளவோ, சரியான பதிலைச் சொல்லவோ முடியவில்லை என்பதனால், சற்றுநேரம் பேசாமல் அமைதியாக இருந்துவிட்டுச் சொன்னாள், "இதை நான் மட்டும் அவருகிட்ட கேக்காமயில்லக்கா. கேட்டா என்ன சொல்றார் தெரியுமா? 'ஒனக்கென்ன, அவர் ஷரியத் வழியிலதான நடந்துருக்காரு. நாலு பொண்டாட்டி கட்டத்தான் இடமிருக்கே? அவரு ஷரியத்தை மீறி எதுவும் செய்தா அது தப்பு. அதுக்கு உட்பட்டு நடந்தது நியாயமானதுதான், தப்பே இல்லையே' அப்புடிங்கிறாரு! நானும் விடலை. 'அப்ப ஒங்க மனசுக்கு இந்தக் கொடுமை நியாயமாப்படுதா, மனசாட்சியத் தொட்டுச் சொல்லுங்கன்னு' கேட்டேன்."*

*"இந்தக் கெழடனுக வயசுப் பொண்டுகளக் கட்டிவச்சு விட்டுட்டுப் போயிருவானுக. அவளுக இங்கன தம் பாட்டுக்குப் பொறக்கித் திங்க ஆரம்பிச்சிருவாளுக. அவனுக மண்டைய போட்டான்னா, அவ அவ தட்டுக்கெட்டுத் திரிவாளுக. அப்புறம், இன்னா ராவுத்தர் மருமக, இன்னா ராவுத்தர் பொண்டாட்டி ஊர் மேயுறான்னு சொல்லி ஊர் ஒலகம் கேலி செய்யும். இந்தக் கண்றாவிய என்னான்னு சொல்ல? அந்தக் கெழவன் இதயெல்லாம் யோசிக்க மாட்டானா என்ன?" என்று சொல்லி சவுரக்கா ஆதங்கப்பட்டாள்.*

*"ஏன், கூட இருக்கறப்ப மட்டும் அந்தாளு வாழப் போறானாக்கும், என்னமோ என்னைக்காச்சும் ஒரு நாளைக்கி அவனுக்கு முடியுறதே அதிசயம்! அவதான் அந்தாள்கிட்ட என்னான்னு ஒப்பிப் படுக்குறாளோ. தகப்பன் மாதிரி இருக்கிறானே? கர்மம்னு சொல்லுறதா, பாவம்னு சொல்லுறதா" என்று நபிஸா தலையில் அடித்துக் கொண்டாள். அவள் முகம் ஆத்திரத்தினால் சிவந்து பின் தனது நிலைக்குத் திரும்பிற்று.*

*"அவளைப் பாத்தா பகுமானமாவுல்ல தெரிஞ்சுச்சு. ஒரு துளி கவலை*

மொகத்துல இல்ல. ஒரே சிரிப்பு வேற" என்று அதிசயப்பட்டாள் றைமா.

"எல்லாம் காசு பணம் செய்ற வேலைதான். கழுத்துல காதுல, கையில நகையாப் போட்டு அடுக்கி வச்சிருக்காருல்ல. அந்தப் பெருமை, பூரிப்பு" என்றாள் மும்தாஜ்.

இந்நேரம் புதிதாக ஒன்றிரண்டு பெண்கள் வீட்டிற்குள் வந்தார்கள். சொஹ்றாவும் றைமாவும் அவர்களை "வாங்கம்மா" என்று வரவேற்றுப் பாயில் அமரவைத்துக் கொண்டிருந்தார்கள்.

மும்தாஜும் நபிஸாவும் வஹிதாவை நெருங்கி அமர்ந்து கொண்டு அவள் காதோரம் குனிந்தார்கள் ரகசியம் பேசுவதுபோல! மும்தாஜ் கேட்டாள் கிசுகிசுப்பான குரலில், "என்ன எல்லாம் முடிஞ்சிதா?" என்று. அவளுக்கும் நபிஸாவுக்கும் அதனை எப்படியாவது அறிந்து கொள்ள வேண்டுமென்கிற ஆர்வம் தாங்க முடியாமல் இருந்தது. வஹிதா ஒன்றும் சொல்ல மாட்டாள் என்பதும் இவர்களுக்குத் தெரியும் என்றாலும் கேட்டு வைத்தார்கள்.

றைமா இவர்களருகில் வந்தமர்ந்து, "என்ன கேட்கிறீங்க?" என்று கேட்டாள். "ஒண்ணுமில்ல. ஒங்க மக கூச்சக்காரியில்ல? மாப்பிள்ளைகிட்ட பழகுதா என்னான்னு கேட்டோம். ஆமா என்னாச்சு" என்ற மும்தாஜ், "எல்லாம் முடிஞ்சிருக்கும். ஒருவாரம் ஆகப் போறதுல்ல" என்றாள்.

ஹாலில் அமர்ந்திருந்த பெண்களின் பேச்சு யாருடைய நகையைப் பற்றியோ இருக்க, இவர்கள் மூவரும் பேசுவது ஒரு தனிப்பட்ட உரையாடலாக மாறியிருந்தது. மும்தாஜ் கேட்டதும் றைமாவின் முகம் கவலையினால் சுருங்கிற்று. "என்னத்தச் சொல்றது. அவதான் அவர் பக்கத்துல போகக்கூட நாணிக்கிறாளே? பகல்ல சுத்தமா போறதேயில்ல. ராத்திரியில கூட பேசுறாளோ என்னமோ" என்றாள்.

எதுவும் தப்பு செய்து விட்டோமோ என்கிற கவலை வேறு அவளை அரித்துக் கொண்டிருந்தது. வஹிதா கணவனைப் பிடிக்காமல் அப்படி ஒதுங்கியிருக்கிறாளா, இல்லை அவளது கூச்சம் அப்படி ஒதுங்கியிருக்க வைக்கிறதா என்று அவளுக்குப் புரிந்து கொள்ள முடியவில்லை. அப்படி அவனைப் பிடிக்கவில்லை என்றாலும்கூட தன் தாயிடம் அதனைக் காட்டிக் கொடுத்து அவளைக் கவலைக்குள்ளாக்க அவளால் முடியாது என்பதுவும் றைமாவுக்குத் தெரியும் என்பதனால் றைமா ரொம்பவே குழம்பிப் போயிருந்தாள். இனம் காண முடியாத வேதனை அவள் உள்ளத்தில் நிரம்பியிருந்தது.

"நீங்க ஒண்ணும் கவலைப்படாதீங்க! கூச்சமாத்தான் இருக்கும். என்கிட்ட விடுங்க கூச்சத்த ஒரே நாள்ல இல்லாமப் போக்கிருவேன் இல்ல?" என்ற மும்தாஜ், "ஏன் நபிஸா, கேஸட் போட்டுக் காட்டுவோமா? சாயங்காலத்துக்கு" என்றாள், மிகவும் உற்சாகமாக!

"என்கிட்ட நல்ல கேஸட் ஒண்ணுகூட இல்லை. உன்கிட்ட இருக்குமே, சுலைமான் கொண்டுவந்தது, அதக்கொண்டு வா. போட்டுப் பார்க்க வைப்போம்" என்றாள் நபிஸா. "அய்யய்யே, அதெல்லாம் வேணாம் அவளுக்குப் பிடிக்காது," பதறிப்போய் அவசரமாக மறுத்த றைமாவை, "நீங்க சும்மாயிருங்கக்கா, நாங்க பாத்துக்கிறோம். இந்தக் கூட்டமெல்லாம் ஓயட்டும். சாயங் காலத்துக்கு மேல கேஸட் கொண்டு வர்றேன். போட்டுக் காட்டுவோம். வெளிநாட்டு கேஸட் என்கிட்ட இருக்கு" என்றவள், "சரி! மாப்பிள்ளை எங்கென இருக்காரு சொல்லுங்க. பாத்துட்டுக் கௌம்புறதுக்கு" என்றபடி எழுந்தாள் மும்தாஜ். "ஆமாம். எங்க மச்சானப் பாக்கவேயில்லை. பாத்துட்டுக் கௌம்புறேன் நானும்" என்று நபிஸாவும் அவள் கூடவே எழுந்தாள்.

அவர்கள் சிக்கந்தரைப் பார்க்கக் கிளம்பியதும் றைமாவுக்கு உயிரே

போயிற்று. "அம்மா பொண்ணுகளா, அவருகிட்டப் போயி கண்டபடி அசிங்கமாப் பேசி வைக்காதிங்க! வெக்கக்கேடாப் போவும்" என்று பதறினாள். "அவளுக போறதே அதுக்குத்தான், நீ வேற" என்று இடக்காகப் பேசிச் சிரித்தாள் சவுரா. அவள் குலுங்கிக் குலுங்கிச் சிரிக்கும்பொழுது கனத்த மார்பகங்கள் இரண்டும் அவளோடு சேர்ந்து குலுங்கியதைப் பார்க்க ராபியாவுக்கு வேடிக்கையாக இருந்தது.

"ராபியா நீ எங்க கூட வா" என்று அவளையும் கூப்பிட்டாள் மும்தாஜ். அவளை எதற்காகக் கூப்பிடுகிறார்கள் என்பது புரியாமல் விழித்த றைமாவையும் மற்றவர்களையும் பார்த்து, "புதுமாப்பிள்ளை ராத்திரியெல்லாம் தூங்கியிருக்க மாட்டாரு. இப்ப தூங்குறப்போ வேட்டி விலகிக் கிடந்துச்சுன்னா? அதுதான் முன்னால போயி இவ அவரை எழுப்பட்டும்" என்றாள் மும்தாஜ்.

ராபியா போவதற்கு எழுந்தவள், "ச்சீ! கர்மம். நான் வரமாட்டேன்," என்று சொல்லி மறுபடி உட்கார்ந்துகொண்டாள். அவர்கள் வலுக்கட்டாயமாக இழுத்துப்போய் விடுவார்களோ என்று பயப்படுகிற மாதிரி வஹிதாவின் பட்டுச்சேலை முந்தானையில் ஒட்டி அவளைக் கட்டி இறுக்கிக் கொண்டாள்.

"நபிஸா, இந்த பாருடி இதுக்கு எம்புட்டு வெக்கம்னு! சரி, போ! நாங்களே போய்க்கிறோம். அப்பிடி இப்பிடியிருந்தாக்கூட குத்தமில்லை. எனக்கு மச்சான் முறைதான் வேணும்" என்றபடி பட்டுப்புடவைகள் தடுக்கி விழாதபடிக்குத் தூக்கிப் பிடித்தபடி மாடிப்படியில் ஏறினார்கள்.

செங்குத்தான பழைய காலத்து மரப்படி என்பதனால் விழுந்துவிடுவோமோ என்ற பயத்துடன் மெதுவாக ஏறியவர்கள், முதல் அறையிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த பூ வாசத்தை வைத்து அதுதான் மாப்பிள்ளை இருக்கும் அறை என்று தெரிந்து மெதுவாக

நபிஸா தலையைமட்டும் உள்ளே நீட்டி எட்டிப் பார்த்தாள். கட்டிலில் படுத்து சிகரெட் புகைத்துக் கொண்டிருந்த சிக்கந்தர் இவள் தலையைப் பார்த்ததும், 'வாங்க மச்சி' என்றவாறு எழுந்து உட்கார்ந்தான்.

"என்ன பண்ணிக்கிட்டு இருக்கீங்க?" என்றபடி உள்ளே நுழைந்தாள் நபிஸா. அவளைப் பின்தொடர்ந்து மும்தாஜ் உள்ளே வந்தாள். இருவரையும் அங்கே கிடந்த நாற்காலியில் உட்காரச் சொன்னான் அவன். மும்தாஜ் மட்டும் நாற்காலியில் அமர, நபிஸா உரிமையுடன் அவன் அருகில் போய் படுக்கையில் அமர்ந்து கொண்டு அவனையே உற்றுப்பார்த்துக் கண்ணடித்துச் சிரித்தாள்.

"என்ன கண்ணெல்லாம் சிவந்து கிடக்கு, ராத்திரியெல்லாம் முழிப்போ? மாடியில தனிஅறை வேற! ஓடிப்புடிச்சு விளையாடியிருப்பீங்க" என்று கிண்டலாகச் கேட்டாள். சிக்கந்தர் பட்டு வேட்டியும் பனியனும் உடுத்தியிருந்தான். கழுத்தில் தங்கச் செயின் மின்னியது. அவளுக்கும் அவனுக்கும் ஏறக்குறைய ஒத்தவயதுதான் இருக்கும். அவளுக்குப் பத்து வயதில் மகன் இருக்கிறான். இவனுக்கு இப்பொழுதுதான் கல்யாணமே நடந்திருக்கிறது. அவளுக்கு அவனோடு சேர்ந்து படித்த நாட்கள் ஞாபகத்துக்கு வந்தது. சிறுவயதில் அவன் இங்கே இதே வீட்டில்தான் இருந்து படித்தான்.

ப்சு! என்று சலித்துக்கொண்டவன், "கன்னுக்குட்டியக் கட்டிக்கிட்டு அவஸ்தைப்படுறேன். நீ வேற!" என்றான்.

"ரொம்பவுல்ல அலட்டிக்கிறீங்க, பேசாம என்னையக் கட்டியிருந்திருக்கலாம் இல்ல? என்னமோ ஒண்ணுமில்லாதது மாதிரி கட்டமாட்டின்னு சொன்னிங்க," என்று அவனை இடறினாள் நபிஸா.

"ஒன்னைக் கட்டி என்ன செய்றது. நீ அழகா இருந்து என்ன புண்ணியம், குட்டச்சியா இருந்தே. அதுதான் எனக்குப் பிடிக்கலே"

என்று பதிலுக்கு விளையாட்டாகச் சொல்லிச் சிரித்தான் சிக்கந்தர்.

"குட்டையா, நானா? அதுசரி!" என்று தன் நெஞ்சில் கை வைத்து வியப்பாகக் கேட்டவள், "குட்டையோ, நெட்டையோ சங்கதி ரைட்டா இருந்தாப் பத்தாதா மச்சான்? ஒங்களுக்குக் குடுப்பினை இல்ல, அதுக்கென்ன செய்ய?" என்று விளையாட்டாகப் பெருமூச்சு விட்டாள், அவனுக்காகப் பரிதாபப்படுவது மாதிரி!

சிக்கந்தர் மும்தாஜைக் காட்டிக் கேட்டான், "அவங்க என்னமோ பேசாம உட்காந்திருக்காங்களே என்ன?" என்றான். மும்தாஜுக்கு ஏனோ அவனிடம் பேசக் கூச்சமாக இருந்தது. அதனால் பேசாமல் உட்கார்ந்திருந்தாள். நபிஸா அவளைத் திரும்பிப் பார்த்து விட்டு, மறுபடி சிக்கந்தரிடம் திரும்பி, "பாவம்! ஒண்ணுமே பேசத் தெரியாது" என்றாள் நக்கலாக! மும்தாஜ் இதைக் கேட்டுவிட்டுச் சிரித்தாள். அவள் சிரிக்கும்பொழுது மிகவும் அழகாக இருப்பதை ஒரு நிமிடம் உற்றுப்பார்த்துவிட்டு, "இருங்க. ஒரு நிமிஷம்" என்று சொல்லியபடி எழுந்து சிகரெட்டை அணைத்து ஜன்னல் வழியே வெளியில் வீசினான். மறுபடி வந்து கட்டிலில் உட்கார்ந்தவன், "இரண்டு அழகான பெண்கள் முன்னால சிகரெட் பிடிச்சதுக்காக வருத்தம் தெரிவிச்சுக்கறேன்" என்று சொல்லி மும்தாஜையும் நபிஸாவையும் சிரிக்க வைத்தான்.

"சரி, நாங்க வந்த வேலையப் பார்க்கணும். உள்ளபடி சொல்லுங்க மச்சான். என்னதான் ஆச்சு? சொல்லுங்க" என்று நேராகவே கேட்டாள். அவள் அப்படிக் கேட்டது அவனுக்குச் சிறிது அதிர்ச்சியாக இருந்தாலும் அவனும் அதே அளவு உற்சாகத்துடன், "அதெல்லாம் முடிச்சாச்சு" என்று பெருமையாகத் தோளைக் குலுக்கிக் கொண்டான்.

"முடிச்சுட்டு எதுக்குச் சலிச்சுக்கிறீங்க, கன்னுக்குட்டி, ஆட்டுக்

குட்டின்னு” என்றாள் நபிஸா.

“முடிச்சாப் போதுமா, கொஞ்சமாச்சும் நம்மளுக்கு ஈடு கொடுக்க வேணாமா? நீ வேற” என்று மறுபடி சலித்துக் கொண்டவன், “வெக்கம் வேற அவளுக்கு! கொடுமைப் படுத்துறா” என்றான்.

“நான் அவ கூச்சத்தை ஒண்ணுமில்லாமப் பண்ணுறேன் பாருங்க” என்று நபிஸா அவனுக்குத் தைரியம் சொன்னாள். “அதச் செய்யி மொதல்ல” என்றவன், “அவள் ஒண்ணுக்கும் ஒத்து வர மாட்டா பாரு” என்றான் உறுதியாக.

“பாருங்க, நான் தயார்பண்ணி அனுப்பி வைக்கிறேனா, இல்லையான்னு? பாக்கத்தான் போறிங்க” என்றவள், “அதுக்கு எனக்கு என்ன தருவீங்க?” என்றாள். “எங்கிட்ட இருக்கறதத்தான தரமுடியும்? அவசியம் தரேன், வேணும்னா வாங்கிக்க,” என்றான் விடாமல்! அவர்களது சிரிப்பில் மும்தாஜும் சேர்ந்துகொள்ள அறையே சிரிப்பொலியால் நிரம்பியது.

“சரி, கௌம்புறோம். அப்புறமா வரணும் இல்ல” என்றவாறு எழுந்த நபிஸா, “மச்சான் நல்லா சாப்புடுங்க, மாமியா வீட்டுச் சாப்பாட்டை! அப்பதான் தெம்பு வரும்” என்று சொல்லிக் கண்ணடித்துவிட்டு அறையை விட்டு வெளியே வந்தாள். மும்தாஜும், “சரி, நானும் வர்றேன்” என்று அவனிடம் சொல்லிவிட்டு நபிஸாவைப் பின்தொடர்ந்து சென்றாள். பின்னாலிருந்து சிக்கந்தர் சொன்னான்: “நான் இங்கெ இருக்கிறவரை அடிக்கடி வந்துருங்க மச்சி.”

மாடியிலிருந்து இறங்கி இருவரும் பின்வாசல் வழியே தெருவுக்கு வந்தார்கள். வீட்டை நோக்கிப் போகும்பொழுது நபிஸா, “ஒருவிஷயம் சொல்றேன் தப்பா நினைக்கமாட்டா இல்லை?” என்றாள் அக்கறையுடன் மும்தாஜிடம். “உன் மாப்பிள்ளை அந்த அப்துல்லாவைத் தூக்கித் தலையில வச்சுருக்கிறது எனக்குப்

புடிச்சுக்கலை. வருஷம் ஒரு கல்யாணம் பண்ணுறவனோட என்னத்துக்குச் சகவாசம் வைச்சுக்கணும்? அப்புறம் அவன மாதிரியே நானும் இன்னொரு கல்யாணம் பண்ணனும்னு ஒரு நாளக்கிச் சொல்லப் போறார் பாரு. மேயுற மாட்டை நக்குற மாடு கெடுத்துச்சாம், அது மாதிரி" என்றாள். அவள் சொல்லியதில் இருந்த அக்கறை மும்தாஜுக்கு ஆத்திரம் உண்டாக்கிற்று, "ஒன்னோட கிண்டல உன்மட்டோட வச்சுக்க! என் புருஷன் ஒண்ணும் யாரையும்போல எச்சிக்குணம் உள்ளவரு இல்ல" என்றாள் வெடுக்கென்று. அவள் குரலில் ஏறியிருந்த கடுப்பு முகத்தில் தெரியாதவாறு மறைத்துக் கொண்டிருந்தாள் என்றாலும் அவள் தன்னைக் குத்திக்காட்டுகிறாள் என நபிஸாவுக்குச் சங்கடமாக இருந்தது. தான் அக்கறையுடன் சொல்லிய விஷயத்தை இவள் ஏன் இப்படி எடுத்துக் கொண்டாள் என்று மனம் நொந்தபடி வீட்டை நோக்கி நடந்தாள்.

# 45

*படுக்கையில் துவண்டு கிடந்த வஹிதாவின் உடல் அனலாகக் கொதித்தது. அப்பொழுதுதான் டாக்டரைக் கூட்டிவந்து காட்டிவிட்டுப் போயிருந்தான் காதர். சாதாரணக் காய்ச்சல்தான் என்று டாக்டர் மருந்து தந்திருந்தார். இதை அவர் சொல்லும்போது வஹிதாவுக்குக் கத்த வேண்டும் போலிருந்தது, இந்தக் காய்ச்சல் எதனால் வந்தது என்று! தானாக எதையோ முணுமுணுத்துக் கொண்டாள்.*

*எதையுமே அவளால் இன்னும் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. தான் வயதுக்கு வந்ததிலிருந்து யாராவது ஒரு வேற்று ஆண் தன்னைப் பார்த்ததாகவே ஞாபகம் இல்லை அவளுக்கு. அம்மாவோ, சித்தியோ அதிகாலையில் குளித்து இவள் பார்த்ததேயில்லை. இவள் முன்பாக ஒரு அசாதாரண விலகலோடுதான் வீட்டில் அம்மா அத்தா, சித்தி சச்சா எல்லோரும் நடந்து கொள்வார்கள். வயதுக்கு வந்த பெண் முன்பாகத் தாங்கள் பேசிச் சிரிப்பதே குற்றம் என்பது மாதிரி. குளிக்கும்பொழுது உடலை மறைத்துத் துணிகட்டிக்கொள், மறந்துகூட உடம்பை உற்றுப்பார்த்து விடாதே என்றெல்லாம் சிறுவயதிலிருந்தே பாடம் சொல்லித் தந்திருக்கிறாள் அம்மா. இன்று எல்லாமே தலைகீழாக நடக்கிறது. ஒருத்தனோடு தனியாகப் படு என்கிறாள். ஒழுங்காக அவனோடு நடந்து கொள்ளச் சொல்லி அறிவுரை சொல்லவும், நல்லவிதமாக நடக்கவில்லை என்று குற்றம் சாட்டவும் ஆட்களை ஏவி விடுகிறாள். போதாக்குறைக்கு கேஸட் போட்டுக் காட்டும் ஏற்பாடும் நடந்து முடிய அவளுக்கு எதுவுமே புரியவில்லை. ஒரு வாரத்திற்கு முன்பாக ஒளித்து ஒளித்து வைத்து பயம் கொள்ளச்*

செய்தவர்கள், இன்று இத்தனைப் பகிரங்கமாக வெளிச்சம் போட்டுக் காட்டுவதற்கு இடையில் என்ன நடந்து விட்டது? அவள் சோர்வுற்றுக் கிடந்த வலது கையை உயர்த்தித் தனது கழுத்திற்குள்ளாகக் கைவிட்டுத் துழாவினாள். கறுப்பு மணி கோர்த்த தாலி கையில் தட்டுப்பட்டது. இதற்கு இத்தனை சக்தியா என்று நினைத்துக்கொண்டாள். இது கழுத்தில் ஏறிய அன்றே அத்தனையும் மாறிப்போய்விட்டது என்பதை நினைக்கையில் அளவற்ற அதிர்ச்சி உள்ளிருந்து வெடித்துக் கிளம்பிற்று. அவ்வதிர்ச்சியினால் உண்டான அலை உடலை நடுங்கச் செய்து, இனம் புரியாத உலகத்திலிருப்பது போன்றதொரு நினைப்பு மேலோங்கிக் குழப்பமுண்டாயிற்று.

கண்களை இறுக மூடியிருந்தவளுக்கு டிவியில் பார்த்த விதவிதமான காட்சிகள் மனத்திரையில் ஓடி உடலை உலுக்கிற்று. சிரமத்துடன் கண்களைத் திறந்தே வைத்திருக்க முயன்றாள். நிர்வாண உடல்கள் உண்டாக்கிய குமட்டலைக் கடும் முயற்சிசெய்து தடுத்துக் கொண்டாள். அவளது கட்டுப்பாட்டையும் மீறி, அவள் பார்த்த ஆண், பெண்ணின் தோற்றமும் உடலமைப்பும் ஞாபகத்தில் வந்து நிறைந்து கொண்டேயிருந்தது. சேர்ந்தாற்போல ஒருசில நிமிடங்கள் மட்டுமே பார்த்த காட்சிகளை எவ்வளவு முயன்றும் வழித்தெறியவே முடியாமலிருக்க அவள் புரண்டு படுத்தாள்.

அவளோடு சேர்ந்து அக்காட்சிகளைப் பார்த்த நபிஸா, மும்தாஜ் முகங்களும் அதில் பெருகிய உற்சாகமும்தான் அவளுக்கு இன்னும் அதிக அதிர்ச்சியை உண்டாக்கின. அன்றைக்கு ஏனோ இருவருமே ஒருவருக்கொருவர் முகம் கொடுக்கவேயில்லை. ஏதோ மனவருத்தம் போல! என்றாலும், இடையிடையே காட்சிகளை ரசித்து ஜாடைமாடையாக எதையாவது சொல்லிச் சிரித்துக் கொண்டார்கள். அவர்கள் பேசிய விஷயங்கள்தான் இன்னும் இரைச்சலாகக் காதோரம்

ஒலித்து அவளை நிம்மதியிழக்கச் செய்தபடியிருந்தன. அவளுக்கு அம்மாவின் பேரில்தான் முழு ஆத்திரமும் திரும்பிற்று. அவள் எதற்காக இந்தக் கண்றாவிக்கெல்லாம் இடம் தருகிறாள். அவள் மறுத்திருந்தால் இப்படி நடந்திருக்காது இல்லையா? நான் கணவனுடன் சந்தோஷமாக இருக்க வேண்டி அவள் எதுவேண்டுமானாலும் செய்வாளா? அன்று காய்ச்சலில் விழுந்தவள்தான். இதையாவது அம்மா புரிந்துகொண்டிருப்பாளா என்று யோசித்தாள் வஹிதா. நிச்சயமாகப் புரிந்து கொண்டிருப்பாள். அவளுக்குப் புரியாமல் இருக்காது. அந்த வருத்தம்தான் அவளைத் தன்னோடு சரியாகப் பேசவோ, அருகில் வர விடவோ அனுமதிக்கவில்லை என்று வஹிதாவுக்கும் தெரியும். தலைவலித்தது.

இவளுக்கு ஜுரம் என்பதால் சிக்கந்தர் ஊருக்குப் போயிருந்தான். "உனக்கு உடம்பு சரியில்லாதப்போ எனக்கு இங்கே என்ன சோலி. தண்டமா உக்காந்திருக்கிறதுக்கு ஊருக்காவது போயிட்டு வர்றேன்." வருத்தத்தோடு சொல்லிவிட்டுப் போனான். அவன் அப்படிச் சொன்னது இவளுக்குக் கஷ்டமாக இருந்தது. மனைவிக்கு உடல் நலமில்லாவிட்டால் பக்கத்திலிருந்து கவனித்துக் கொள்ளும் சினிமாக் கணவன் காரணமில்லாமல் மனதில் வந்துவிட்டுப் போனான். அவள் திரும்பத் திரும்ப யோசித்தாள், அவளுக்கு அவனை விரும்புவதற்கான காரணம் ஏதாவது இருக்கிறதா என்று.

தனக்குக் கணவனாக வருபவன் இப்படித்தான் இருக்கவேண்டும் என்று என்னவெல்லாம் நினைத்து வைத்திருந்தாளோ, அப்படி ஒன்றுமே அவனிடத்தில் இல்லாத மாதிரி இருந்தது. யாரோ ஒரு வேற்று ஆள் தன்னோடு படுத்திருப்பதாகத்தான் தோணுகிறதே தவிர கணவன்தான் என்கிற எண்ணம் சுத்தமாகவே மனதில் படிய மறுக்கிறது. அவனைப் பார்க்கும்பொழுதெல்லாம் யார் இது?

இவனுக்கு இங்கென்ன வேலை என்று கேள்வி எழுவதைத் தடுக்க முடியவில்லை. இந்த நினைவுக் குழப்பத்தை எப்படி நிறுத்துவது என்றும் அவளுக்குத் தெரியவேயில்லை. ஒருவாரம் தானே ஆகிறது? போகப்போக எல்லாம் சரியாகிவிடும் என்று தன்னைத் தானே தேற்றிக் கொண்டாலும், சந்தோஷத்தினால் வர வேண்டிய விஷயம் பழக்கப்படுத்திக் கொள்வதன் வழியேதான் வரப்போகிறது என்கிற நினைப்பு துக்கத்தை உண்டாக்கிற்று. கவலையோ, துக்கமோ, கஷ்டமோ, வேதனையோ பழக்கப்படுத் தலின் வழியேதானே தாங்கிக்கொள்கிறோம். அதுமாதிரித்தானா இந்த உறவும் இருக்கப்போகிறது? அப்படியென்றால் அது எத்தகைய நரகமாக இருக்கும்? அதனைத் தாங்கிக் கொள்ளும் சக்தி தனக்கிருக்கிறதா என்ன? அவளது இளம் மனதில் ஓராயிரம் கேள்விகளும் குழப்பங்களும் ஊடுருவி அலைக்கழித்தபடியிருக்க அவளுக்கு தன் மாமனாரின் ஞாபகம் வந்தது. ஒரு சிட்டுக் குருவியைப் போலக் கவலையில்லாமல் ஓடியாடிக் கொண்டிருந்தவளுக்கு ஒரே வாரத்தில் கல்யாணத்தின் மூலம் இத்தனை கவலைகளும் பிரச்னைகளும் எங்கிருந்தோ தலையின்மீது வந்துவிழுந்து சுமையாகக் கனக்கிறதே, எப்படி? அவளுக்கு இன்னும் கூட புரியவேயில்லை. இதையெல்லாம் யோசித்துக் குழப்பிக் கொள்வது சுத்தமாகவே பிடிக்கவில்லை என்பதனால், கண்களை இறுக மூடியபடி படுக்கையில் குப்புறப் படுத்துக்கொண்டு தூங்க முயன்றாள்.

# 46

சைனு தன் பிள்ளைகள் இருவருக்கும் தலைகுளித்து விட்டுக் கொண்டிருந்தாள். பரிதாவின் யோசனைப்படி கிராப் வெட்டியதால் குளிப்பாட்டிவிட எளிதாக இருந்தது அவளுக்கு! முன்பு மாதிரி பெரிய வேலையாக இல்லாமல் சுலபமாக இருந்தது. முன்பெல்லாம் இவர்களுக்குக் குளித்துவிட வேண்டும் என்றால் அன்று காலையிலிருந்தே புலம்ப ஆரம்பித்துவிடுவாள். கூடவே மும்தாஜுக்கும் சாடைமாடையாகத் திட்டுக்கள் கிடைத்துக்கொண்டிருக்கும். இப்போதெல்லாம் அப்படியில்லாமல் நெரிச்சல் குறைவாகத்தான் இருப்பதாக உணர்ந்த மும்தாஜ் முற்றத்திலிருந்த குளியலறைக் கதவு திறக்கிறதா என்று சிறிது நேரம் உற்றுப் பார்த்தாள். இப்போதைக்குக் குளியல் முடிகிற மாதிரித் தெரியவில்லை. சற்று நேரம் யோசித்தபடி நின்றுகொண்டிருந்தாள். சைனு வருவதற்குள்ளாக மீன்குழம்பில் கொஞ்சத்தைக் கொண்டு போய் நபிஸாவுக்குக் கொடுத்துவிட்டு வரவேண்டும். அடுத்த வீடுதான். ஒரே எட்டில் போய்விட்டு வந்துவிடலாம் என்றாலும் பரிதா பார்த்துவிட்டால் என்ன செய்வது என்றும் யோசித்தாள். பரிதா தொழுது கொண்டிருந்தாள். முடிக்க நேரமாகும். நபிஸாவுக்கு அயிரை மீன் குழம்பு பிடிக்கும். சுலைமான் எங்கிருந்தோ மீன்வாங்கி வந்திருந்தான்.

அவளுக்கு இரண்டு நாள் முன்பு நபிஸாவிடம் தான் இடக்காகப் பேசியது ஞாபகத்திற்கு வந்தது. நாக்கில் சனி குடியிருக்கிறதோ என்னவோ, அப்படிப் பேசித் தொலைத்துவிட்டேன் என்று தன்னையே திட்டிக் கொண்டாள். பெரும் உறுத்தலாக இருந்தது.

அவளிடம் எப்படியாவது தன் உறவை சகஜமாக்கிக் கொள்ள வேண்டும் என்பதனால்தான் மீன் குழம்பினைக் கொடுக்கிற சாக்கில் பேசலாம் என்று நினைத்தாள்.

சுலைமான் குறித்த சந்தேகம் இவளுக்கும் வராமல் இல்லை. தனக்குக் குழந்தை பிறக்கக் தாமதமானால் அவன் இன்னொரு கல்யாணம் செய்துகொண்டாலும் ஆச்சர்யப்பட முடியாதுதான். இதை நினைக்கையில் அவளுக்குத் திகீரென்றது. நேற்றிரவு கூட விளையாட்டுப்போலச் சொல்லிக் கொண்டிருந்தான். “இப்பெல்லாம் உன்கூட படுக்கறதே குழந்தை உண்டாகறதுக்குத்தான், அதைத் தவிர வேற எந்த நினைவும் வர்றதே இல்லை.” இவளுக்கு நறுக்கென்றுதான் இருந்தது. அவன் இப்படிச் சொன்னபிறகு அவளால் தொடர்ந்து அவனுடைய அணைப்பில் இருக்க முடியவில்லை. வலுக்கட்டாயமாக அவனிடமிருந்து தன்னைப் பிரித்து விலகிப் படுத்துக்கொண்டாள். சிறிது நேரத்திற்கு முன் இதமாகத் தோன்றிய அவனது ஸ்பரிசங்களைத் தனது உடலிலிருந்து தட்டி உதிர்த்து விடவேண்டும் போலிருந்தது. அவன் எதையுமே உணராதவனாக இருந்ததை அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அதன்பிறகு அவள் நீண்ட நேரம் அவனறியாமல் அழுதுகொண்டிருந்தாள்.

அவன் இவளிடமிருந்து எந்த ஒரு பதிலையும் எதிர்பார்க்காமல் அஜீஸிற்குப் பரிதாவைக் கொடுக்க முடிவுசெய்து விட்டது வேறு ஆத்திரத்தை உண்டாக்கிற்று. பாத்ரூம் கதவைத் திறந்த கிறீச்சிடும் ஓசையில் திடுக்கிட்டுத் தன் நினைவுக்கு வந்தவள் அங்கிருக்கப் பிடிக்காமல் தன் அறைக்குள் வந்து நுழைந்து கொண்டாள். சைனு தன் இரண்டு பிள்ளைகளையும் முற்றத்தில் நிறுத்தித் துவட்டி விட்டுத் துணிமாற்றுவாள். அதைப் பார்க்கக் கஷ்டமாக இருக்கும் என்பதனால் அவள் உள்ளே வந்து தன் படுக்கையில் படுத்துக் கொண்டாள். உடல்

அசதியாக இருந்தது. தொழுகையில்லாமல் போய் இன்றோடு எத்தனை நாளாகிறது என்று யோசித்தாள்.

விரல்விட்டு எண்ணிப் பார்க்கையில் சரியாக 22 நாட்கள் ஆகிவிட்டிருப்பது தெரிந்தது. இனி அதிகம் நடமாடாமல் படுத்திருந்து ஓய்வு எடுக்க வேண்டும் என்றும் நினைத்துக் கொண்டாள். இந்த இறுதி நாட்களில் ஓடியாடி வேலைபார்ப்பது கூடாது என்று சொஹ்ராவும் றைமாவும் சொல்லியிருந்தார்கள். அவளுக்கு இத்தனை நாட்களில் இன்றுதான் குழந்தை உண்டாவது குறித்த தேவையும் பயமும் உருவாகியிருந்தது. தனது பயம் நியாயமானது தானா என்று யோசித்தாள். அவனுக்குத் தான் இல்லாவிட்டால் இன்னொருத்தி என்பது சாதாரணமான விஷயம் என்பதனால் சற்று அதிகமாகவே கவலைப்பட்டாள். இந்தப் பயமும் கவலையும் நியாயமானதே என்றும் நினைத்துக் கொண்டாள். இன்றிலிருந்தே ஓய்வாக இருக்க முடிந்தால் நல்லது என நினைத்துக் கொண்டவளுக்கு, தான் வேலையேதும் பார்க்காமல் படுக்கையிலிருந்தபடி சாப்பிட்டால் சைனுவினால் சகித்துக் கொள்ள முடியாது என்பதால் அம்மா வீட்டிற்குப் போய் இருந்து கொள்வதுதான் சரியாக இருக்கும் என்று தோன்றியது.

அவளுக்கு மறுபடியும் நபிஸா ஞாபகம் வந்தது. அஜீஸுக்குத் திருமணம் முடியப்போவதும் அவன் வெளிநாட்டிற்குப் போகப் போவதும் அவளுக்குத் தெரிந்திருக்குமா என்று தெரியவில்லை. ரொம்பவும்தான் துடித்துப் போவாள். இவளுக்கு உடனே அவளிடம் இவ்விஷயத்தைச் சொல்லி அவளது முகம் எப்படி மாறுகிறது என்பதை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் எழுந்தது. ஒருபுறம் அது அற்பத்தனம் என்பது புரிந்தாலும் மறுபுறம் அந்த ஆர்வம் அவளை அங்கிருக்கவிடாமல் துரத்திற்று. அவள் மறுபடி எழுந்து ஹாலுக்கு வந்தாள். பரிதா துணி காயப்போட மாடிக்குப் போயிருக்க வேண்டும்.

சைனு முற்றத்திலிருந்த திண்ணையில் உட்கார்ந்து பிள்ளைகளுக்குத் தலை துவட்டிக் கொண்டிருந்தாள். இவளைப் பார்த்ததும், "ஏன் இன்னும் சுலைமான் சாப்பிட வரலை. லுஹர் தொழுத கையோட வந்திருவானே?" என்றாள். அவளுக்கு மகன் சாப்பிட்ட பிறகுதான் மற்றவர்கள் சாப்பிட வேண்டும். மும்தாஜ் "தெரியலையே" என்றுவிட்டு அடுக்களைக்குள் நுழைந்து பாத்திரத்தில் தான் ஊற்றி வைத்திருந்த ஆனத்தை எடுத்துக் கொண்டு கொல்லைப்புறக் கதவைத் திறந்து அவசரமாக வெளியேறி நபிஸா வீட்டுக்குள் நுழைந்தாள்.

மும்தாஜ் திடீரெனத் தன் வீட்டிற்குள் வந்து நிற்பதை எதிர்பார்க்காததால், என்ன என்கிற மாதிரி அவளை உற்றுப்பார்த்தாள் நபிஸா. "ஒண்ணுமில்லை" என்றபடி பாத்திரத்தைத் திண்ணையில் வைத்துவிட்டுத் தரையில் உட்கார்ந்து கொண்டாள் மும்தாஜ்.

"அட! தொழுகுற சேலையோட தரையில ஏன் உட்கார்ந்தே?" என்று உரிமையாகக் கடிந்தபடி அறையினுள்ளிருந்து பாயை எடுத்து வந்து உதறி விரித்தாள் நபிஸா. "இருக்கட்டும் ஒக்காந்தாச்சு" என்றபடி கால்களை மடக்கிச் சம்மணமிட்டுக் கொண்டாள் மும்தாஜ். "என்ன இது, என்னமோ கொண்டு வந்திருக்கே?" என்றபடி, பீங்கானைக் கையில் எடுத்து உற்றுப்பார்த்தவள், "மீன் ஆனமா?" என்றாள். "ஆமா, உனக்குப் பிடிக்கும்னு கொண்டு வந்தேன்" என்றாள் மும்தாஜ் பெருமையாக! மும்தாஜின் முகத்தை நேராகப் பார்த்து நபிஸா கேட்டாள். "உன் மாமியாருக்கு தெரியுமா? மனசு வராது இல்ல?"

"அந்தப் பொம்பளைக்கித் தெரியாம இல்ல கொண்டு வந்தேன்" பெருமையாகச் சொன்ன மும்தாஜ் வாய் தவறிச்சொல்லி விட்டோமோ என்று நாக்கைக் கடித்துக் கொண்டாள். தனக்கு அவள்மீது பிரியம் இருப்பதாகக் காட்டிக் கொள்வதற்காக

உண்மையை சொல்லியது தவறோ என்பதுபோல்! நபிஸாவின் முகம் மாறியிருந்தது. “தெரிந்தால் என்ன? ஒண்ணும் சொல்லாது அந்தப் பொம்பளை” என்று தொடர்ந்து அவளைச் சமாதானப்படுத்தும் விதத்தில் சொன்னாள் மும்தாஜ். நபிஸாவின் முகம் அருவெறுப்பான ஒரு பொருளைப் பார்ப்பது போல மாறிப்போயிருந்தது. இவள் ஏன் இதைக் கொண்டு வந்தாள் என்று அவள் பேரில் எரிச்சல் உண்டாயிற்று. ‘நான் ஒண்ணுமில்லாதவளா என்ன, இப்படி ஓசி வாங்கித் தின்ன’ என்று நினைத்தவள், “எதுக்காக இப்படி என்னைய அசிங்கப்படுத்திக்கிட்டு. எடுத்துக்கிட்டுப்போ. நான் என்ன திங்கறதுக்கு அப்பிடியா அலையிறேன். நாக்குக்குக்கீழ போனா நரகல்” என்று மும்தாஜிடம் சலித்துக் கொண்டவள் மறுபடியும், “தயவுசெய்து இதை எடுத்துக்கிட்டுப் போம்மா, மகராசியா இருப்ப” என்றாள். மும்தாஜுக்குத் தர்மசங்கடமாக இருந்தது. தன் மாமியாருக்குத் தெரியாமல் கொண்டு வந்ததாக ஏன் சொன்னோம் என்றிருந்தது. சற்று நேர அமைதிக்குப் பிறகு சொன்னாள். “இது என் புருஷன் சம்பாத்தியத்துல வாங்கினது. இதுல எனக்கு ஏதும் உரிமை இல்லையா. என்ன? இனிமே இதை நான் திருப்பிக் கொண்டு போகவும் முடியாது. பேசாம வச்சுக்கோ” என்றாள். அவள் அப்படிக் கேட்டது கெஞ்சுவது போலவும் இருந்தது நபிஸாவுக்கு.

இருவருமே சிறிது நேரம் பேசாமலிருந்தார்கள். மும்தாஜின் மனதில் உள்ள குறுகுறுப்பைப் புரிந்து கொண்டது போல நபிஸா உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு மும்தாஜ் அன்று அப்படிச் சொன்னதிலிருந்தே மனம் சரியில்லாமல் இருந்தது. இன்று அவள் தன்னிடம் வலிய வந்து பிரியத்தைக் காட்டுவதுகூட எரிச்சலாகத் தான் இருந்தது. என்றாலும் அவளை முகத்தை முறித்துப் பேசவும் முடியவில்லை. அப்படி முறித்துக் கொண்டுவிட்டால் பிறகு

பேசிக்கொள்வதற்கு வேறு நாதியில்லை என்கிற உண்மை அவளுக்கும் தெரிந்திருந்தது. ஷெரிபாவிடம் இருவரும் பேசிக்கொள்வார்களே தவிர, இப்படிக் கேலியும் விளையாட்டும் செய்ய முடியாது. அது நல்லதும் இல்லை. அவளது மௌனத்தின் அர்த்தம் விளங்காது தடுமாறிக் கொண்டிருந்த மும்தாஜுக்கு, தான் அறிந்த அந்த விஷயத்தைச் சொல்லலாமா வேண்டாமா என்ற அலைக்கழிப்பு மனதில் உண்டாகிற்று. அதனைச் சொல்வதன் மூலம், அவள் முகத்தில் உண்டாகும் மாறுதலைக் கண்டு ரசிக்கலாம் என்கிற ஆர்வம் இருந்தாலும், அதுவே அங்கு நிலவுகிற தர்மசங்கடமான சூழ்நிலையை இன்னும் அதிகப்படுத்தவும் கூடும் என்று தோன்றியது, என்ன செய்வது என்று புரியாமல் சும்மாவேனும் நபிஸாவின் முகத்தை உற்றுப்பார்ப்பதும் தலை குனிவதுமாக இருந்தாள். “எங்க அஹமதுவைக் காணோம், இன்னுமா வரலை?” என்றாள். நபிஸாவுக்கும் அவளது தர்மசங்கடம் புரிந்து மிகவும் கஷ்டமாக இருந்தது. வழக்கத்தைவிட இன்று தான் இயல்பாகப் பேசினால்தான் அவளுக்கு மன அமைதியை உண்டாக்க முடியும் என்று நினைத்தவளாக, “அஹமதுவா? அவன்தான் லீவு முடியறவரைக்கும் ஊருலேயே இருந்துட்டு வர்றேன்னுட்டுப் போயிருக்கானே. எனக்குத் தான் வீடே நல்லாயில்லாத மாதிரி இருக்கு” என்று சொல்லி முகத்தை வருத்தப்படுகிற மாதிரி வைத்துக் கொண்டாள். ஆமாமா என்று தலையசைத்து ஆமோதித்தவள் சற்று நேர அமைதிக்குப் பிறகு, “அஹமது அத்தாவை இன்னும் காணோம் சாப்பிட வரலை?” என்றாள். மறுபடி பேச்சைத் தொடர வேண்டியிருந்தது மும்தா ஜுக்கு. “அவுங்களா? இன்னிக்குக் கடை கொள்முதல் வேலையா டவுனுக்குப் போனாங்க. அதனாலதான் நான் இன்னிக்கு ஆனம்கூட காய்ச்சலை. வெறும் சோறு மட்டும் ஆக்கினேன். ரபீக்கும் தயிர் ஊத்தித்தான் போட்டுச் சாப்பிடுவான். பொம்பளைக்காக என்னத்தைச் செய்யிறது.”

சலித்துக் கொண்டாள் நபிஸா.

மும்தாஜ் இதனைப் பலமாக ஆமோதித்தாள். "ஆமாமா, ஆம்பிளைங்க இல்லேன்னா என்னத்த ஆக்கறது? இருக்கறதச் சாப்பிட வேண்டியதுதான."

நபிஸா கேட்டாள். "வஹிதாவுக்குக் காய்ச்சலாமுல்ல, நீ போய்ப் பாத்தியா?"

"இல்லை, இன்னைக்குதான் போகணும். றைமாக்கா சொன்னாங்க, இந்த கேஸட்டைப் பாத்ததுனால அவளுக்குக் காய்ச்சல் வந்திருச்சுன்னு. அப்புறம் நமக்கும் வஹிதாகிட்ட ரெண்டு திட்டுக் கிடைச்சிச்சாம்" என்று சிரித்தாள் மும்தாஜ்.

"அதுசரி, அப்புறம் என்னத்துக்கு மகளுக்கு அந்தக் கர்மத்தைக் காட்ட ஒத்துக்கிட்டாங்களாம், வேணாம்னு சொல்லியிருக்கலாம் இல்ல? ரொம்பத்தான் அதிசயமா இருக்கு. இதைக்காட்டிலும் பச்சைப் பிள்ளைகள் புருஷன்கிட்ட படுக்கறது இல்லை. புள்ளை பெக்கறது இல்லை. இந்தக் குட்டி ரொம்ப இல்லெ அடம் புடிக்கிது." அதிகப்படியாகவே எரிச்சல்பட்டாள் நபிஸா. அவளுக்கு வஹிதாவின் கூச்சமும், அவளுக்குக் காய்ச்சல் வந்த காரணமும் தாங்கமுடியாத எரிச்சலை உண்டு பண்ணியதோடு அது வினோதமாகவும் இருந்தது.

"அப்புறம் என்ன? இந்தா, என் நாத்தனார் பரிதா எப்போ எப்போன்னு இருக்கா எல்லாத்துக்கும் ரெடியா! அவ என்னடான்னா பொத்திப் பொத்தி வச்சுக்கிட்டு செல்லம் கொஞ்சுறா" என்ற மும்தாஜ் பரிதாவின் திருமணச் செய்தியைச் சொல்ல நல்லதொரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது என நினைத்தாள். இந்தச் சந்தர்ப்பத்தை விட்டால் அப்புறம் சொல்வது சிரமம் என்பதால் பேச்சைத் தொடர்ந்தாள். "பரிதாவுக்கும் கல்யாணம் வைக்கப்போறோம். மாப்பிள்ளைகூட யாருன்னு இவரு மனசுல நினைச்சு வச்சிட்டாரு" என்று பீடிகையோடு

நிறுத்தினாள். யார் என்கிற கேள்வியைக் கேட்க நபிஸா ஆர்வத்துடன் யத்தனிக்கையில் அவள் தானாகவே சொன்னாள், “அஜீஸுக்குக் குடுத்து அவரையும் தன்னோட வெளிநாட்டுக்குக் கூட்டிட்டுப் போகப்போறாராம்” என்று சொல்லியவள், “நீ இதை உன் மனசுல வச்சுக்கோ, இன்னும் நாங்க இதை வெளிய சொல்லலை” என்றபடி நபிஸாவின் முகத்தில் ஏதேனும் மாற்றம் தெரிகிறதா என்பதைக் கவனிக்கும் ஆர்வத்துடன் அவளைப் பார்த்தாள். அவள் சொன்ன செய்தி நபிஸாவின் மனதில் பெரும் இடிபோல வந்திறங்கிற்று. அவள் தன்னைச் சீண்டி வேடிக்கை பார்க்கச் சொல்கிறாளா, இல்லை உண்மையே தானா என்ற குழப்பம் படர அவள் ஒன்றும் சொல்லத் தோன்றாமலும் தன் முகத்தில் எந்த உணர்வையும் காட்டிவிடக் கூடாது என்கிற ஜாக்கிரதையோடும் பேசாமலிருந்தாள்.

தான் எதிர்பார்த்துச் சொன்ன விஷயம் பெரிதாக ஒரு அதிர்வையும் நபிஸாவிடம் உண்டாக்காதது மும்தாஜுக்கு ஏனோ ஏமாற்றமாக இருந்தது. அவள் நிஜமாகவே அதிர்ச்சியடையவில்லையா? இல்லை, சாமர்த்தியமாக அதனை மறைக்கிறாளா என்பது புரியாமல் அவள் முகத்தை இன்னும் ஓரிரண்டு தடவை உற்றுப்பார்த்துவிட்டுத் தன் பார்வையை வேறொருபுறம் திருப்பிக் கொண்டாள். அவளுக்குச் சப்பென்று போயிருந்தது. இனி இது விஷயமாக எதையும் பேசவோ சொல்லவோ முடியாதென்பது மட்டும் உறுதியாகப் புரிய, தான் அங்கிருந்து செல்லவேண்டிய நேரம் இதுதானென்பதை அறிந்தாற்போல மும்தாஜ் எழுந்து நின்றாள். “அப்பொ நான் வர்றேன் நபிஸா. மாமியா தேடும்” என்றவாறு அங்கிருந்து வெளியே செல்லப் பின்பக்கக் கதவைத்திறந்து படியில் இறங்கினாள். அங்கேயே அமர்ந்து அவள் போவதையே பார்த்துக் கொண்டிருந்த நபிஸா அவள் போன மறு நிமிடம் எழுந்து படுக்கையறைக்குள் நுழைந்து படுக்கையில் படுத்து

அழ ஆரம்பித்தாள்.

அஜீஸின் மடியில் முகம் புதைத்து அழுதுகொண்டிருந்தாள் நபிஸா. எவ்வளவோ நேரமாக அவளைத் தேற்றுவதற்கு முயற்சி செய்து கொண்டிருந்தான் அவன். அவளிடம் சொல்வதற்கு அவன் ரொம்பவே தயங்கிக் கொண்டிருந்த ஒருவிஷயம் எப்பிடியோ அவளுக்குத் தெரிந்திருந்தது. அது ஒரு செய்தி மட்டுமில்லை. அவர்களிருவரையும் எல்லாக் காலத்திலும் பிரிக்கக் கூடிய ஒரு விஷயம் என்கிற உண்மை நபிஸாவை அப்படி அழச்செய்தது. அவனுக்கும் அது புரிந்திருந்தாலும்கூட இதைவிட்டால் வேறு வழி ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. தன் அந்தஸ்தைவிட மேலான ஒரு இடத்திலிருந்து தனக்குப் பெண் தர முன்வருவதும் வெளிநாட்டிற்குக் கூட்டிச் சென்று விடுவதாகச் சொல்வதும் பெரிய விஷயம் தான். ஊரில் யார் என்ன வேண்டாலும் பேசட்டும், அவள்மீதான பிரியம் ஆழமானது. இருந்தாலும் இந்த உறவை நிலையான ஒன்றாக வைத்துக் கொள்ளவும் முடியாது என்பதும் இருவருக்கும் தெளிவான விஷயம்தான். அவனுக்கு இந்தச் சந்தர்ப்பத்தை விட்டால் வேறொரு சந்தர்ப்பம் வாய்க்கும் என்று தோன்றவில்லை. தனக்கு ஒரு உயர்ந்த அந்தஸ்து கிடைக்க இறைவன் அளித்த வாய்ப்பினை மறுக்கக்கூடிய ஒரு நிலையிலும் அவன் இல்லை.

அவன் அவளை முதுகில் மெதுவாகத் தட்டி ஆறுதல்படுத்த முயற்சித்தான். அவனுடைய கைலி அவளது கண்ணீரால் நனைந்து கொண்டிருந்தது. தனது இடைவிடாத அழுகையின் வழியே அவனை இந்தத் திருமணத்திலிருந்து விலக்கிவிட முடியுமென்கிற பெரும் நம்பிக்கையோடு அவள் அழுது கொண்டிருப்பதாக அவனுக்குள் தோன்ற ஆரம்பித்தது. இதுநாள் வரை தனக்கும் அவளுக்குமிடையிலிருந்த அன்பு, இன்று வரை எவ்வகையான

நிர்பந்தத்தையோ கட்டளையையோ கொண்டதாக இருந்ததாக அவனுக்கு நினைவிலேயே இல்லை. இன்றோ, அவள் தனது கண்ணீரின் மூலம் ஒருவிதமான நிர்பந்தத்தை அவனிடத்தில் உண்டு பண்ண முயற்சிப்பதாகத் தோன்றிற்று.

இழப்பின் தாங்கிக் கொள்ளவியலாத துயரம் அவளது கண்ணீர் என்பது அவனுக்குப் புரிந்தாலும் மெலிதான எரிச்சல் மண்டிற்று. இந்த உறவின் பேரில் நிலையான உத்தரவாதத்தை அவளால் தரமுடியாது என்பது எத்தனை உண்மையோ, அதே அளவு உண்மை அந்த உத்தரவாதத்தை இவன் எதிர்பார்த்திருப்பதும். ஒரு விளிம்பில் தடுமாறிக் கொண்டிருக்கும் இவ்வுறவு எந்தக் கணத்தில் விழுந்து சிதறிக் காணாமல் போகுமோ. அல்லாவுக்குத்தான் அந்த ரகசியம் தெரியும். இந்த நிலையில் மேலே என்ன செய்வது என்பதையும் அவன்தான் தனக்குக் காட்டிக் கொடுத்திருக்கிறான் என்கிற எண்ணம் அவனை நம்பிக்கை கொள்ளச் செய்தது. அவளைப்போல நிலைகுலைந்துவிட அவன் தயாராக இல்லை. ஒரு கட்டத்திற்குமேல் நீடிக்க முடியாத ஒரு உறவுக்காக அவன் தனது வாழ்வை விட்டுக் கொடுக்கவும் முடியாது. ஆனால், இதை அவளிடம் எப்படிப் புரிய வைப்பது என்று தெரியாத இயலாமை அவனைச் சூழ்ந்திருக்க, மௌனமாகவே அவளது முழு அழுகையையும் எதிர்கொண்டு அமர்ந்திருந்தான்.

அழுகையுனூடே, அவள் வாய் எதையோ முணுமுணுக்க அவனது கைலிக்குள்ளேயே அமுங்கிக் கொண்டிருந்தன வார்த்தைகள். ஏதோ சில வார்த்தைகளைத் தொடர்ந்து ஒப்பிப்பதுபோல விடாமல் முனகிக் கொண்டிருந்தாள். அது பிரார்த்தனையைப் போலிருந்தது. அது அவனை இன்னும் கூட உடல் கூசச் செய்தது. அவ்வார்த்தைகள் என்னவெனக் கூர்ந்து கேட்கத் தனக்குச் சக்தியில்லை என்று உணர்ந்தான். அதனாலேயே அவன் இன்னும் கூட தன் கால்களை

இறுக்கி அவளது வார்த்தைகளை உடைக்குள்ளாகப் புதைத்தான். அழுகையினூடேயே திடீரென, அவனது கைகளைத் தனது நகங்களால் கீறித் தன் எதிர்ப்பை இன்னும் வலுப்படுத்திக் காட்ட முயற்சித்தாள் நபிஸா. அவளது நகம்பட்ட இடங்கள் எரிச்சலை உண்டு பண்ண, அவன் திடுமென அவளைத் தன்னிடமிருந்து பிடித்து இழுத்து விலக்கினான். அவனது ஆவேசத்தினால் பயந்து, எழுந்து அமர்ந்து அவனை உற்றுப் பார்த்தவளிடம் தயக்கமேயின்றிச் சொன்னான். “ச்சீ, நீயெல்லாம் ஒரு பொம்பளையா? என் நிலைமையைக் கொஞ்சமாச்சும் புரிய வேணாம்?”

அவனது வார்த்தைகள் அவளை மட்டுமின்றி அவனையுமே அதிரச் செய்திருக்க வேண்டும். மறுபடி யோசிக்க முயன்றான். தான் என்ன வார்த்தைகளால் அவளைத் திட்டினோம் என்று. அவை நினைவுக்கு வந்த பொழுது அவன் அதனை ஒப்புக்கொள்ள ரொம்பவே தயங்கினான்.

அவன் முகம் வெளிறிப்போகத் தொடங்கிய பொழுது நபிஸா நிதானமாகச் சொன்னாள்: “வெளிய போ.” இதுநாள் வரை ஒரு அருமையான மனிதனாகத் தான் நினைத்துக் கொண்டிருந்தவனிடமிருந்து வந்த வார்த்தைகள்தானா அவை என்கிற சந்தேகம் சொற்பமான நேரம் வந்து போயிற்று. நொடி நேர இடைவெளிக்குப் பிறகு அவள் மறுபடி சொன்னாள், “போயிரு.” அவன் இத்தனை காலமும் தான் அவள் மீது கொண்டிருந்த மொத்தக் காதலையும் அவளிடத்தில் இறுதியாக உணர்த்திவிட ஒரு சந்தர்ப்பத்தை வேண்டுவதுபோலத் தன் கண்களால் இறைஞ்சிக் கொண்டிருந்ததை அவள் பொருட்படுத்துவதாகவே இல்லை. தான் இவ்வளவு நேரம் நிலைகுலைந்து கிடந்ததற்காக ரொம்பவே துக்கமும் வெட்கமும் கொண்டவளாகச் சொன்னாள், “தயவுசெய்து போயிரு

என்னைய வேதனைப்படுத்தாம."

அவன் பெரும் தயக்கத்துடன் கூனிக்குறுகிபோய் அங்கிருந்து சென்ற பின் சுத்தமாக நின்று போயிருந்தது அவளது அழுகை. இத்தனை நேரமாக முறியப் போகிறதே என எண்ணி அழுது கொண்டிருந்த அந்த உறவை நினைத்துப் பெரும் அருவெறுப்புக் கொண்டாள். தாங்கிக் கொள்ளவியலாத ஆத்திரம் கனன்று சரசரவென உச்சி மண்டையிலிருந்து பாதம்வரை ஓடிக்கொண்டிருக்க மூச்சு வாங்கிற்று. மார்புகள் உயர்ந்து தாழ வியர்வையினால் ஜாக்கெட் தொப்பலாக நனைந்து கொண்டிருந்தது. உடல் மையத்தைப்போலக் கனத்துச் செயலற்றுக் கிடந்தது. தன் வாழ் நாள் முழுக்க உணர்ந்தேயிராத வெறுப்பையும் தனிமையையும் ஒட்டுமொத்தமாக இந்த நிமிடத்தில் உணரத் துவங்கினாள். தெருவில் வெயிலின் அடர்த்தி குறைந்து கொண்டிருக்க திறந்திருந்த கதவின் வழியே ரபீக் மெதுவாக எட்டிப் பார்த்து விட்டு ஓடிவந்து இவளது மடியில் வந்து படுத்துக் கொண்டான். அவன் உடலெங் கிலுமிருந்து வீசிய புழுதியின் மணத்தை இறுக்கி முகர்ந்தவளாக நெடுநேரம் படுத்துக் கொண்டிருந்தாள் நபிஸா.

இருளில் மூழ்கிக் கிடந்த வீடு பஷீரைக் கலவரப்படுத்தக் கூடியதாக இருக்க சுவரைத் தடவித் தடவியே ஹாலுக்கு வந்து சுவிட்ச் இருக்குமிடத்தை அடைந்து சுவிட்சைத் தட்டினான். இருளில் சுருண்டு கிடந்த வீடு வெளிச்சத்தில் விரிந்து நீள, கல வரம் தேங்கிய முகத்தோடு படுக்கை அறையை நோக்கிச் சென்று ஒருக்களித்திருந்த கதவைத் தள்ளித் திறந்தான். ஹாலிலிருந்த வெளிச்சம், திறந்த கதவின் வழியே அறைக்குள் விழ படுக்கையின்மீது குறுகிக்கிடந்த நபிஸாவையும் அவளை ஒட்டிக் கொண்டு தூங்கிக்கொண்டிருந்த ரபீக்கையும் ஒரு நிமிடம் நின்று கவனித்தான். மறுபடியும் கதவை இழுத்துச் சாத்தி

ஒருக்களித்து வைத்துவிட்டு, ஹாலுக்கே வந்து நின்றபடி சட்டைப் பட்டன்களை கழற்றத் துவங்கினான்.

நேரம் எட்டுதான் தாண்டியிருந்தது. வழக்கமாக இந்நேரத்தில் தூங்குபவளில்லையே என்று யோசித்தபடியே சட்டையை ஹேங்கரில் மாட்டிவிட்டு சோபாவின் மீது அமர்ந்தவனுக்குச் சுலைமான் சொன்ன விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. சிறிது நேரத்திற்கு முன் மஹ்ரிபு தொழுகவென ஒலுச்செய்ய அவுஸுக்கு அருகாகச் சென்று கொண்டிருந்தபொழுது அஸ்ஸலாமு அலைக்கும் என்றபடி அருகில் வந்த சுலைமான் இவனைக் கட்டி அணைத்து இரு தோள்களிலுமாக முஸாபா செய்தவனாக, “அண்ணே தங்கச்சிக்கு மாப்பிள்ளை பேசி முடிக்கப் போறோம். வர்ற வாரத்துல! வந்துருங்க” என்றான்.

அவன் சொல்லி முடித்ததும் மகிழ்ச்சியில் மலர்ந்த முகத்துடன், “அப்புடியா . . .? என்னக்கி, யாரு மாப்பிள்ளை?” ஆர்வமாக கேட்டான் பஷீர்.

“மாப்பிள்ளை நம்ப அஜீஸ்தான்! வேற எங்கன போகப் போவுது.” வேகமாகவும் சலிப்பாகவும் சொன்ன சுலைமான், “வர்ற வெள்ளிக்கிழமைக்கிதான் பேசி முடிக்கிறது. வீட்டுலயும் அம்மா வந்து சொல்லியிருப்பாங்க, வந்திருங்கண்ணே” என்றபடியே அவுஸை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

0

நினைவிலிருந்து விடுபட்ட பஷீருக்கு ஏனோ மனம் குழப்பத்தில் ஆழ்ந்தது. என்றைக்குமில்லாமல் நபிஸா இப்படிப் படுத்துக் கிடப்பதற்கும் சுலைமான் சொன்ன விஷயத்திற்கும் ஏதும் சம்பந்தம் இருக்குமோ என மனம் பொருத்திப் பார்க்கத் துடித்தது என்றாலும், சேச்சே! அப்படியெல்லாம் இருக்காது என்று தனக்குள்ளாகச் சொல்லிக்கொண்டான். என்னதான் இருந்தாலும் இவ்விஷயத்தை

இத்தனை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளும் அளவுக்கு நபிஸாவை நினைக்க முடியவில்லை அவனால்!

என்றாலும், மனம் நிலைகொள்ளாமல் தடுமாறிக் கலங்கிற்று. அவளது இந்தச் செயலை ஏற்றுக்கொள்ள இயலாதபடிக்கு மனம் குமுறிற்று. இவள் ஏன் இப்படி இருக்கிறாள்? நான் அவளுக்கு எதில் குறை வைத்தேன், இன்று இப்படி மனமொடிந்து கிடக்கும் காரணம் தனக்குத் தெரியும் பட்சத்தில், தன் மனம் கொள்ளக்கூடிய வேதனை எத்தனை கொடுமையானதாக இருக்கும் என்கிற எண்ணமோ, அக்கறையோ அவளுக்கு ஏன் இல்லை? பஷீருக்கு இயலாமையினாலும் ஆற்றாமையினாலும் தொண்டையை அடைத்தது. நாய் ஒன்று ஊளையிட்டபடித் தெருவைக் கடந்து சென்றுகொண்டிருக்கிற சப்தம் துல்லியமாகக் கேட்டது.

பசிக்கிறதா, இல்லையா எனத் தீர்மானிக்கவியலாத அளவில் மனம் தெளிவற்றிருந்தது. என்ன செய்யலாம் என்று தெரியாத குழப்பத்துடன் பின்கட்டுக்குச் சென்று முற்றத்துத் தரையில் அமர்ந்து கொண்டான். அண்ணாந்து வானத்தை உற்றுப்பார்த்தான். கருநீல நிற வானம் முழுக்கக் கொட்டிப் பரப்பினாற்போலிருந்த நட்சத்திரக் கூட்டங்களெல்லாம் தன்னைப் பார்த்துச் சிரிப்பது போல உணர்ந்து கண்களைத் தாழ்த்திப் பார்வையைப் பாதத்தில் பதித்தான். முற்றத்துக்கல்லில் நிரம்பியிருந்த வெக்கை பாதத்தின் வழியே உடம்பிற்குள் கசிந்து நுழைந்து நிரம்பத் துவங்கிற்று. வருத்தத்திலாழ்ந்த மனம், இருப்புக்கொள்ளாமல் அலைக்கழிய மெதுவாக எழுந்து கிணற்றடியை நோக்கி நடந்தான். கிணற்று மேடையின் மீதிருந்த துணி துவைக்கிற கல்லின் மீது குத்தவைத்தமர்ந்து கொண்டவனின் மனம் அவள் எப்பொழுதிலிருந்து இப்படிப் படுத்துக் கொண்டிருக்கக்கூடும் என்பதைக் கணக்கிடத் துவங்கிற்று. கிணற்றின் சுற்றுச்சுவரருகில்

இருந்த இரும்பு வாளி நிறைய துணி ஊறிக் கொண்டிருந்தது. துவைப்பதற்காக ஊறவைத்திருக்க வேண்டும். அவனுக்குத் திடீரெனக் கவலையுண்டாயிற்று, அவளும் ரபீக்கும் மதியம் சாப்பிட்டிருப்பார்களா இல்லையாவென்று. நிச்சயமாக இருக்காது என்றே மனம் சொல்ல, அவனுக்கு அவள் மீது ஆழ்ந்த கருணை பிறந்தது. சாப்பிடாமல் கூட உடம்பைக் கெடுத்துக் கொள்கிறாளே என்கிற கவலை நிமிண்டியெடுக்க அங்கிருந்து எழுந்துகொண்டவன் வேகமாக உள்ளறையை நோக்கிச் சென்றான். ஏதோ யோசித்தவனாக மறுபடியும் திரும்பி அடுப்படியை நோக்கிச் சென்று கதவைத் தள்ளித் திறந்தான்.

கதவு திறக்கும் சத்தத்தில் சரசரவென்று எலிக்குஞ்சுகள் ஓடி ஒளிய, விளக்கொளியில் சுதாரித்துக் கொண்ட கரப்பான் பூச்சிகள் அவசரமாகத் தங்களது பதுங்குமிடங்களை நோக்கி ஓடின. நீண்ட நேரமாக ஆள் நடமாட்டம் இல்லாவிட்டால்தான் எலியும் கரப்பானும் சாவகாசமாகத் திரியும் என்கிற நினைவோடு அடுப்பில் உலை மூடி போட்டு மூடியிருந்த சட்டியைத் திறந்து சோறு இருக்கிறதா என்று பார்த்தான். மதியம் ஆக்கியதாகத்தான் இருக்க வேண்டும். ஒரு கரண்டிகூட அள்ளாமல் அப்படியே இருந்ததைப் பார்த்ததும் அவனுக்குள் லேசான கோபம் உண்டாயிற்று. ‘தானும் சாப்பிடாமல் பிள்ளையையும் சாப்பிட வைக்காமல் எப்படி?’ தனக்குள் கேள்வியைக் கேட்டவனாகத் திரும்பியவன் அடுப்படியை விட்டு வெளியே வந்து படுக்கையறைக்குள் நுழைந்தான். படுக்கையின் ஓரத்தில் சுருண்டு கிடந்தவளைப் பார்த்தவனுக்கு அவள் பேரில் இருந்த லேசான கோபமும்கூட புகையைப்போலக் கரைந்து இளக, நபிஸா, நபிஸா எனக் கூப்பிட்டு அவளை எழுப்ப ஆரம்பித்தான். அவனது குரல் நெகிழ்ந்து போயிருந்தது.

# 47

மதினா கையில் ஒரு கத்தை புத்தகம் வைத்திருந்தாள். தன் தாவணிக்குள் லேசாக அதை மறைக்க முயன்றபடியே ராபியாவின் வீட்டுக்குள் ஓடிவந்தவள், நேராக வஹிதாவின் அறைக்குள் போய் அவளருகில் நின்று மூச்சுவாங்கியவாறு தொப்பென்று அவள் மடியில் புத்தகங்களைப் போட்டுவிட்டு ஒரே ஓட்டமாகத் திரும்பி, “எங்க அண்ணி குடுக்கச் சொன்னாங்க” என்றவாறு ஓடினாள். ராபியா அப்பொழுதுதான் எங்கேயோ போய்விட்டு வந்து கொண்டிருந்தாள். ஓடிய வேகத்தில் மதினா அவளருகில் போய் நின்று அவளது கைகளைப் பிடித்து, “வா விளையாடலாம்” என்று கூப்பிட்டாள். அவளை ஏறிட்டுப்பார்த்த ராபியாவின் முகம் சோர்வுற்றிருந்தது. அவளுக்குச் சில நாட்களாகவே அஹமதுவின் ஞாபகம் அதிகமாக இருந்தது. அவன் எப்பொழுது வருவான் என்று தெரியாததால் வருத்தத்தில் ஆழ்ந்துபோய் இருந்தாள். அவனை எதற்காகத் தேடுகிறோம் என்பது புரிந்தும் புரியாமலும் இருந்தது. ஏதோ ஒரு தவிப்பு அவள் முகத்தில் தேங்கியேயிருந்தது.

மதினா அவளைப் பிடித்து உலுக்கினாள். “என்ன, என்னவோ மாதிரி இருக்க. வா விளையாடலாம்” என்று மறுபடி கூப்பிட்டவள், “வாயேன் ஒருவிஷயம் காட்டறேன்” என்று கண்ணடித்து விஷமமாகச் சிரித்தாள். நேரம் அஸரிலிருந்து மஃரிபைத் தொட்டுக் கொண்டிருந்தது. ராபியா, அவளது ஆர்வத்திற்கு ஈடுகொடுக்கும் வகையில் சிரிக்க முயன்று தோற்றாள். “வா, வா, சீக்கிரம்” என்றபடி வேகமாக அவளை இழுத்துக் கொண்டு ராபியா வீட்டின் மொட்டை மாடியை நோக்கி ஓடினாள். ராபியாவும் அவளைப் பின் தொடர்ந்து மாடிப்படியில் ஏறினாள்.

இவர்கள் ஏறுவதை யாரும் பார்க்கிறார்களா என்பதை லேசாகத் திரும்பி நோட்டம் விட்டாள் மதினா. யாருமே கவனிக்காதது ரொம்பவே நிம்மதியாக இருந்திருக்க வேண்டும். மேலே ஏறியதுமே மாடிக் கதவைத் தாளிட்டவள், தாவணியை விலக்கி தனது ஜாக்கெட்டுக்குள்ளிருந்து கையைவிட்டு ஒரு புத்தகத்தை உருவினாள். இதப் பாரேன் என்றபடி சுவரோரமாகத் தரையில் உட்கார்ந்து கொண்டாள். ராபியாவும் இதுவரையிலும் இருந்த சோர்வு மாறி ஆர்வத்துடன் அவளை நெருங்கி அமர்ந்து அப்புத்தகத்தைப் பார்த்தாள். வெளிச்சம் இன்னும் இருந்ததால் பார்ப்பதற்கு ஒன்றும் பிரச்னையில்லை.

புத்தகத்தின் அட்டையில் ஒரு பெண் பாதி நிர்வாணமாக நின்று கொண்டிருந்தாள். அவள் தன் மார்பகங்களைத் துளிக்கூட மறைக்காமல் காட்டிக் கொண்டிருந்தாள். அதைப் பார்த்ததுமே ராபியா மதினாவின் முகத்தை உற்றுப்பார்த்தாள். இது எப்படிக் கிடைத்தது என்கிற மாதிரியிருந்தது அவளது பார்வை. “எங்க மும்தாஜண்ணி வஹிதாக்காவுக்குக் குடுக்கச் சொல்லி நிறையப் புத்தகம் குடுத்தாங்க. அதுல ஒண்ணை எடுத்து ஒளிச்சு வச்சுக்கிட்டேன்,” பெருமையாகச் சிரித்தாள் மதினா. “தெரியாமயா?” ஆச்சர்யமாகக் கேட்டாள் ராபியா. “ஆமா!” என்றாள் மதினா. “போச்சு, தெரிஞ்சுச்சு, கொன்னுபோட்டுருவாங்க பாரு.” பயந்து நடுங்கினாள் ராபியா. ஆர்வத்தைக் காட்டிலும் பயம் மிகுதியாக இருந்தது அவளுக்கு. “தெரியாதுங்கறேன்ல” என்று அலட்சியமாகப் பதில் சொன்னாள் மதினா. இருவருமாகப் புத்தகத்தை புரட்டத் தொடங்கினார்கள். அதிலிருந்த படங்கள் ராபியாவின் பயத்தை ஒன்றுமில்லாமல் செய்து விட்டன. இருவருமே எழுத்துக் கூட்டி அதிலிருந்த கதைகளைப் படிக்கத் தொடங்கினார்கள். முதல்

முறையாக ஆண் பெண் உறவின் மர்மங்கள் ஓரளவு பிடிபடுவது பெரும் சுவாரசியத்தை உண்டுபண்ணிற்று. இத்தனை காலமும் பெரும் பயத்தை உண்டாக்கியபடியிருந்த நிர்வாணம் முதல் முறையாகக் கிளர்ச்சியூட்டக் கூடிய ஒன்றாக அவளுள் மாற்றம் கொள்ளத் தொடங்குகையில் . . .!

ராபியா திடுமெனத் தன் நிலைக்கு வந்து என்ன நடக்கிறது என யோசிக்க முற்பட்டாள். அவளது தலைக்கு மேலே வானத்தில் பறவைகள் கூட்டம் கூட்டமாகத் தம் கூடுகளுக்குச் சென்று கொண்டிருந்தன. வெளிர் நிறத்தை அடைந்திருந்த நிலா, தன்னையே உற்றுப் பார்ப்பதுபோல உணர்ந்து வெட்கமுற்றாள். அவளது சங்கடத்தைப் புரிந்து கொண்டது போல் கூட்டம் கூட்டமாக நகர்ந்துகொண்டிருந்த மேகங்களுக்குள் ஒளியவென இடம் தேடி ஓடுகிறது நிலவு. காலையிலிருந்து வெயிலைக் குடித்துக் குடித்துக் களைத்திருந்த சிவந்த ஆனையடிக்கல்லின் சூடு பாவாடை தாவணியைத் தாண்டிக் கீழ்ப்புறத்தைச் சுடத் துவங்கியிருந்தது. ராபியா உடலை லேசாக நகட்டிக் கொடுத்து சூட்டைத் தவிர்க்க முயன்று தோற்றாள். இத்தனை சூட்டிலிருந்தால் நீர்க்கடுப்பு வந்துவிடுமென்கிற கவலை மனதிற்குள் தோன்ற அந்தக் கவலையிலிருந்து விடுபட விரும்பியவளுக்குத் தாம் மிகப் பெரிய பாவத்தைச் செய்து கொண்டிருப்பதாகப் பயம் உண்டாயிற்று. மஃரிபு நேரங்களில் குர்ஆனை எடுத்து வைத்து யாஸீன் ஓதவோ, தஃலிம் படிக்கவோ செய்யாமல் எவ்வளவு பெரிய பாவத்தில் ஈடுபட்டிருக்கிறோம். இந்த நேரத்தில் பெரியத்தா வீட்டிற்கு வந்தாரென்றால் மஃரிபு நேரம் ஓதாமக் கொள்ளாம எங்கெ போகு இந்தச் சைத்தான் என்று கத்தித் தீர்த்துவிடுவார் என்பது நினைவுக்கு வந்தது.

நேற்று அவர் சொன்ன ஹதீஸில் சைத்தான்தான் எப்போதும் நம்மைக் கெடுத்துக் கொண்டிருப்பான். அவனிடமிருந்து தப்பித்துவிட்டால் நிச்சயம் நாம் சொர்க்கத்திற்குப் போகலாம். அங்கே பாலும் தேனும் ஆறாக ஓடும், ஆயிரக்கணக்கான ஹுருலீன் பெண்கள் இருந்து ஆண்களுக்குச் சேவகம் செய்து சந்தோஷப்படுத்துவார்கள் என்பதை நினைவூட்டிக் கொண்டவளுக்கு, ஆண்களுக்கு ஹுருலீன் பெண்கள் இருப்பது மாதிரி பெண்களுக்கு ஹுருலீன் ஆண்கள் இருக்கமாட்டார்களா என்கிற கேள்வி எழுந்தது. நேற்று அதைப் பெரியத்தாவிடம் கேட்கப் பயந்து கொண்டிருந்துவிட்டாள். இன்றைக்காவது அதைப் பெரியம்மாவிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும் என நினைத்துக் கொண்டாள். அஹமதுவிடம் கேட்டால் சொல்வான். அவன்தான் இங்கே இல்லையே என்கிற வருத்தம் மனதில் நிரம்ப, அதனூடே நேற்று நடந்ததை நினைவூட்டிக் கொண்டாள்.

மொட்டை மாடியெங்கும் கவிந்து கொண்டிருந்த இருள் வழக்கம்போலப் பயமூட்டுவதற்குப் பதில் துணையாக மாறியிருப்பதாக உணர்ந்தாள்.

நேற்று, வாதாம் பழம் வாங்கவெனச் சென்று கொண்டிருந்த போது மதினா கேட்டாள், "ஏன் இப்பிடி உம்முன்னு இருக்கே? உங்க மச்சான் உன்னைய எதுவும் வம்பு பண்ணுனாரா?" என்று. ராபியா அவசரமாகத் தலையை ஆட்டி மறுத்தாள். "சேச்சே! நான்தான் அவர் பக்கத்துல போறதே இல்லையே?" அவளுக்குத் திடீரென தன் மச்சானைப் பற்றி பிறரிடம் சொல்வதில் தயக்கம் உருவாகியிருந்தது. அப்படிச் சொல்வது வஹிதாவை அவமானப் படுத்துவது மாதிரி இருந்தது. இனி அவன் தனியானவனோ, வேற்று ஆளோ இல்லை. அக்காவோடு சேர்த்துத்தான் அவனை நினைக்க முடிந்தது. வீட்டில் அவனுக்குக் கிடைக்கும் முழு மரியாதையும் வஹிதாவின் பேரில்

இருக்கும் அன்பினாலேயே அன்றி அவனது தனிப்பட்ட தகுதிக்காக அல்ல என்பது தெளிவாகவே இவளுக்குப் புரிந்திருந்தது. அவனைப் பற்றிய விமர்சனங்களும் கேலியும் வஹிதாவுக்குத் தன் கணவன் பேரிலிருக்கும் வெறுப்பை அதிகரித்து விடச்செய்து விடுமோ என்கிற பயம் வீட்டில் உள்ள ஒவ்வொருவரிடத்திலும் நிரம்பியிருந்ததை ராபியா கவனிக்காமல் இல்லை.

"அப்புறம் ஏன் ஒண்ணும் பேச மாட்டேங்குறே?" என்றாள் மதினா மறுபடியும்! "ஒண்ணுமில்லை" என்ற ராபியா, சற்று நேர மௌனத்திற்குப் பிறகு, "அஹமது இல்லாம தெரு நல்லாவேயில்லை, உம்?" என்று மதினாவின் ஆமோதித்தலை எதிர்பார்ப்பவள் போலச் சொல்லிவிட்டு அவள் முகத்தைப் பார்த்தவளுக்கு கோபத்தில் சிவந்த அவளது முகம் அதிர்ச்சியூட்டியது. ரொம்பவே பயந்து போனாள் அவள். இவளுக்கு ஏன் அவன் பெயரைக் கேட்டாலே பற்றிக்கொண்டு வருகிறது என்று விளங்கிக் கொள்ள முடியவில்லை. தனக்கு அவனையும் மதினாவையும் பிடிப்பதுபோல அவளுக்கு ஏன் தன்னோடு அஹமதுவையும் பிடிக்கவில்லை. தன்னிடம் இவ்வளவு பிரியமாக இருக்கிறாள். அவனிடம் மட்டும் ஏன் எப்போதும் கோபத்தோடிருக்கிறாள். இருவருக்கும் இடையில் அப்படி என்ன பெரிய பிரச்சினை என்று யோசித்தபடியே நடந்துகொண்டிருந்தாள் ராபியா.

மதினா சொன்னாள், "ஒனக்கு அந்த மையத்தைத்தான் புடிக்கும். அவனையே கட்டிக்க." அவள் குரலில் ஆதங்கமும் எரிச்சலும் கலந்திருந்தது. அதன் பிறகு மீதி தூரங்களைக் கடப்பதற்கு அவர்களுக்குப் பேச்சு தேவையற்ற ஒன்றாக மாறியிருந்தது.

மதினா தன் கரங்களால் ராபியாவை இறுக்கி அணைத்திருந்தாள். அவளது மெலிந்த, வெளுத்த உடலைத் தன் கைகளுக்குள் எளிதாக

*அடக்கிக் கொள்ள முடிந்திருந்தது அவளுக்கு! விலக்க முடியாத அவளது ஸ்பரிசத்தினூடே ராபியா அஹமதுவினுடைய ஸ்பரிசத்தினையும் நினைவில் கொண்டுவந்து நிறுத்திக் கொண்டாள். இருவரின் தொடலுக்கும் இடையே உள்ள வித்தியாசம் எதுவென்று பிரித்தறிய முயல்வதுபோல! அவளுக்கு முழுமையாகத் தெரியாவிட்டாலும் இரண்டுமே வேறு வேறுதான் என்கிற உறுதி மட்டும் உண்டாயிற்று. ஆனால் எப்படி என்றுதான் தெரியவில்லை. என்றாலும் அவளுக்கு இருவரது அன்புமே தேவையாக இருந்தது.*

*தெருவில் யாரோ யாரையோ கூப்பிடும் சத்தம் இருவரையும் தத்தமது நினைவுக்குக் கொண்டுவந்தது. நன்றாக இருட்டி விட்டிருந்ததை அப்பொழுதுதான் கவனித்தாள் ராபியா. "சரி வா, கீழ போகலாம். ரொம்ப நேரமாயிருச்சு இல்ல" என்றாள் சற்று பதற்றமான குரலில்! நாளைக்கு மதிய விருந்திற்குப் பிறகு கணவன் வீட்டுக்கு வஹிதாவை அனுப்பி வைக்கப் போகிறார்கள். போய் அவளோடு இருந்து பேசிக்கொண்டிருந்தால் நன்றாக இருக்கும் என்றிருந்தது அவளுக்கு. மறுபடி அவள் இங்கு எப்போது வரப் போகிறாளோ? அம்மா சொன்னது மாதிரி நாற்பதாவது நாள் மடி நிரப்பித்தான் கூட்டிவருவார்கள் போல!*

*இவள் சொன்னதை மதினா காதில் வாங்கியதாகவே தெரியவில்லை. ராபியா மறுபடியும் தலை நிமிர்ந்து வானத்தைப் பார்த்தாள். சாம்பல் நிற மேகக்கூட்டங்களும் மஞ்சள் ஒளியும் இணைந்து பார்க்க அழகாக இருந்தது வானம். வானத்தைப் பார்த்துக் கொண்டிருக்க அக்காவுக்கு ரொம்பப் பிடிக்கும். தினமும் கூட அவள் முற்றத்தில் கட்டிலில் படுத்துக்கொண்டு ரேடியோ கேட்டபடியே வானத்தை உற்றுப் பார்த்து ரசித்துக் கொண்டிருப்பாள். இடையிடையே இவளிடம் அங்கே பார் கூன் தாத்தா மேகம், புள்ளத்தாச்சி மேகம், குட்டிக் குரங்கு மேகம்*

என்றெல்லாம் காட்டிக் கொண்டிருப்பாள். திருமணமாகி போய்விட்டு வந்த பிறகு அவள் ரேடியோவே கேட்பதில்லை. முற்றத்துப் பக்கம் வரக்கூட இல்லை என்பது ஞாபகம் வர, "கல்யாணமாயிட்டா இதெல்லாம் புடிக்காமப் போயிருமோ" என்று தனக்குள்ளாகக் கேட்டுக் கொண்டாள்.

அருகில் இருந்த மதினாவுக்கு முகம் ரொம்பவும் அமைதியாக இருப்பது அந்த அரைகுறை வெளிச்சத்திலும் நன்றாகத் தெரிந்தது. தூரத்திலிருந்த சினிமாத் தியேட்டரிலிருந்து இரவுக் காட்சிக்கு முன்பாக ஒலிபரப்பப்படும் சினிமாப் பாட்டு காற்றில் மிதந்து வந்து கொண்டிருந்தது. "இன்னக்கி நல்ல படம் ஒண்ணு போட்டுருக்காங்க. அந்தப் படத்துல ஒரு ஆடு ரொம்ப நல்லா நடிச்சிருக்காம். உமா சொன்னாள்" என்றாள் மதினா ஏக்கத்தோடு! அவளது கவலை ராபியாவையும் பற்றிக் கொள்ள, "நமக்குதான் பாக்கப் போகக்கூடாதுன்னு பள்ளிவாசல்ல பேசிட்டாங்களே, எப்பிடி பாக்கறது? ஆம்பளையா இருந்தாப் போகலாம். இல்லேன்னா உமா மாதிரி குடியானவங்களா இருந்தா போகலாம். என்ன பண்றது?" என்றாள் வருத்தம் தோய்ந்த குரலில்! அப்படி மீறிப் போனவர்கள் வீட்டில் எந்த நல்ல காரியம் கெட்ட காரியம் நடந்தாலும் அஸரத்துகளோ, நாட்டாண்மையோ வந்து பாத்திஹா ஓதவோ கலந்து கொள்ளவோ மாட்டார்களாம். ஊரில் எந்தப் பெண்களும் பெண் பிள்ளைகளும் சினிமாத் தியேட்டர் பக்கம்கூட காலடி எடுத்து வைப்பதில்லை. ராபியாவுக்குத் தெரியும். இத்தனைக்கும் காரணம் சுலைமான்தான் என்று! இருந்தாலும் அவனைத் திட்டினால் மதினா வருத்தப்படுவாள் என்று பேசாமல் இருந்தாள். அத்தாதான் சுலைமானைத் திட்டிக் கொண்டேயிருப்பார். ரகசியப் பட்டப் பெயர் கூட ஒன்று வைத்து அவனைக் கேலி செய்வார். அல்லா காத்தான்

என்றுதான் அவர் சுலைமானைச் சொல்லுவார். அம்மா விளங்காமல் மலங்க மலங்க விழித்தபடி கேட்பாள்: "அப்பிடின்னா என்னஙக அர்த்தம்?"

"அடிக்கிறுக்கு! இது கூடவா தெரியல? நீயே சொல்லு இந்த ஊர் ஒலகத்த நம்பள எல்லாம் கட்டிக் காக்குறது யாரு. அல்லாதான?" என்று நிறுத்திவிட்டு, "அந்த அல்லாவையே யாரு காப்பாத்தறது தெரியுமா? அது நம்ம சுலைமான்தான். அவனுக்கு நெனப்பு அல்லாவை நாமதான் காப்பாத்தறோம் அப்புடின்னு, அதுக்காகத்தான் அவனுக்கு இப்பிடிப் பேர், எப்புடி?" என்று சொல்லி விட்டு விழுந்து விழுந்து சிரித்துக் கொள்வார். இப்போது ஊரில் பாதிப்பேருக்குச் சுலைமானின் பெயர் மறந்து போய் அல்லா காத்தான் என்றே சொல்லத்தொடங்கியிருந்தார்கள். அவன் காதுக்கும் இந்நேரம் போகாமல் இருக்காது என்று ராபியா நினைத்துக் கொண்டாள்.

மதினா சொன்னாள், "அதைவிடு. எங்க பரிதாக்காவுக்குக் கல்யாணம் தெரியுமா, ஒனக்கு? மாப்பிள்ளை அஜீஸ்." எந்த அஜீஸ் என்பது போல நெற்றியைச் சுருக்கி யோசித்தாள் ராபியா. "அட! நம்ம அஹமது வீட்டுக்குக்கூட வருவார் இல்லை ஒருத்தர் அவர்தான்" என்றாள் மதினா. "அவரா!" என்றாள் ராபியா. "அவரு ஏழைதான், இருந்தா என்னன்னு அண்ணன் சொல்லிட்டார். கல்யாணம் முடிச்சதும் அவரையும் தன்னோட வெளி நாட்டுக்குக் கூட்டிப்போயிருவாராம் சம்பாதிக்க" என்றாள் மதினா. அவளது குரலில் சந்தோஷத்தைக் காட்டிலும் வருத்தம் அதிகமிருப்பதாக உணர்ந்த ராபியா, "பாவம், பரிதா. இவ்வளவு நாளைக்குப் பிறகு கல்யாணம் பண்ணி ஒடனே மாப்பிள்ளை வெளிநாடு போயிட்டா, அவ எப்புடி சந்தோஷமா இருப்பா?" என்றாள். "அவளும் எங்க

அண்ணி மாதிரித்தான். இந்தப் புஸ்தகங்கல்லாம் படிச்சுக்கிட்டுத் தபால் எழுதிக்கிட்டு இருக்க வேண்டியதுதான்." வலது உள்ளங்கையினால் வாய் பொத்தி சத்தம் வராதபடிக்குச் சிரித்தாள் மதினா. ராபியா ஒன்றும் சொல்லத் தோன்றாமல் மௌனமாக அமர்ந்திருந்தாள். ஊரை ஒட்டி நெருக்கத்தில், இருளில் படுத்திருக்கும் மலையையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். வானத்தை முட்டிக்கொண்டு கூம்பாக உயர்ந்திருந்த ஒரு மலையின் மீது மட்டும் இருள் கூடுதலாக அப்பியிருப்பது போலிருந்தது. பள்ளிக்கூடத்தை ஒட்டியிருந்தது அந்த மலை. விளையாட்டு மைதானத்தைக் கடந்ததுமே மலையில் ஏறத்தொடங்கி விடலாம். இவளுக்கு எப்பொழுதுமே அம்மலையின் உச்சிவரை சென்று பார்க்க வேண்டுமெனத் தோன்றிக் கொண்டேயிருக்கும். அங்கே என்னவெல்லாம் இருக்கும் என்று எல்லோரிடமும் கேட்டுக் கொண்டிருப்பாள். நாளுக்கு நாள் அந்த ஆசை அதிகரித்துக் கொண்டே போக ஒருநாள் அஹமது சொன்னான். "வர்றியா, என்கூட ஏறலாம்." "இவ்வளவு பெரிய மலையில ஒன்னால ஏற முடியுமா?" தனது பெரிய விழிகளை விரித்து ஆச்சரியத்துடன் கேட்டவளிடம், "ப்பூ! இது என்னா மலை? ஒகது மலையில கூட ஏறிருவான் இந்த அஹமது." சட்டைக்காலரைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு இரு கைகளாலும் பிடித்து அதனை ஸ்டைலாக இழுத்துவிட்டுக் கொண்டான் அவன். அவள் பயம் கலந்த ஆர்வத்துடன் உடனே தலையை ஆட்டி ஒப்புக் கொண்டாள்.

"ஆனா ஒண்ணு, அந்தச் சைத்தான் வரக்கூடாது. நீ மட்டும் தான் வரணும்." அவன் யாரைச் சொல்கிறான் என்பது இவளுக்கு உடனே புரிய, "சரி" என்று அதற்கும் தலையாட்டினாள். அடுத்த நாள் மாலை பள்ளி விட்ட கையோடு அவள் மலையேறச் சென்ற பொழுது மதினாவிடம் முதல்முறையாகப் பொய் சொன்னாள், அஹமதுவிடம்

நோட்ஸ் வாங்கிக் கொண்டு பின்னால் வருவதாக.

விளையாட்டு மைதானத்தையொட்டிய மலையடிவாரத்தில் அஹமது இலியாஸுடன் தயாராக நின்று கொண்டிருந்தான். அவர்கள் தங்களின் புத்தகப் பைகளை அங்கு குவிந்துகிடந்த கற்களை ஒட்டிச் சாய்த்து வைத்திருந்தார்கள். வெயில் சுள்ளென்று முகத்தில் அறைந்து எரிச்சலை உண்டு பண்ண, சனியன் பிடிச்ச வெயில் என்று முணுமுணுத்த ராபியாவிடமிருந்த பையைப் பிடுங்கி தமது பைகளை ஒட்டி வைத்தான் அஹமது. ராபியாவுக்கு ஏனோ துளிக்கூட பயம் உண்டாகவில்லை. அவனை நம்பி எங்கே வேண்டுமானாலும் போகத் தயாராக இருந்தாள். அவளை எந்த ஒரு ஆபத்திலிருந்தும் காப்பாற்றக்கூடிய வீரம் அவனுக்கிருப்பதாக நம்பியதால் உண்டான தைரியம் அது.

அவளுக்கு ஒருபயம் மட்டும் மிச்சம் இருந்தது. இருட்டுவதற்குள்ளாக வீடு போய் சேர்ந்துவிட முடியுமா? அவள் அதனை அவனிடமே கேட்கவும் செய்தாள். "ப்பூ! இது ஒரு மலையா? ஒரு நொடியில ஏறிட்டு எறங்கிரலாம்" என்றான் அவன் அலட்சியமாக! அவன் பதில் சொன்னவிதமே அலாதியான சந்தோஷத்தை இவளிடம் உண்டுபண்ணி நம்பிக்கையூட்டிற்று. அந்நம்பிக்கையினூடே மலையை அவள் நிமிர்ந்து பார்த்தாள். ரொம்பவும் உயரமில்லை. சிறிய மலைதான். அதிகமான செடிகள் மரங்கள் இல்லாமல் தள்ளித்தள்ளித்தான் இருந்தது. ரொம்பவும் நெருக்கமில்லாமல் மரங்களிருந்ததே பயத்தை வெகுவாகக் குறைக்கக் கூடியதாக இருந்தது. அவர்கள் மெதுவாக ஏறத் தொடங்கினார்கள். உருண்டை உருண்டைக் கற்களால் மலை நிரம்பிக்கிடந்தது. பெரிய பெரிய பாறைகளும் சின்னச்சின்னக் கற்களும் அடிவார மலையில் அதிகமிருப்பதையும், பெரும்பாலான செடிகளும் மரங்களும் மொட்டையாக நிற்பதையும்

பார்த்துவிட்டு அஹமது, “ஆடுமாடு இலை தழையை வந்து மேய்ஞ்சுருது இல்ல, அதுதான் மரமெல்லாம் அம்பட்டன் மொட்டையடிச்சாப்புல இருக்கு” என்று சொல்லிவிட்டுச் சிரித்தான். செருப்புக்கும் மேலே கல்லின் அழுத்தம் ராபியாவுக்கு வலியை உண்டுபண்ணிற்று. முகத்திலும் புறங்கழுத்திலும் வியர்த்து வழிந்தோட வெயில் சளைக்காமல் கூடவே வருகிறது. அவள் படும் சிரமங்கள் எதுவுமில்லாமல் உற்சாகமாக அவளுக்கு முன்னே ஏறிக்கொண்டிருந்தார்கள் இருவரும். சற்று நேரம் காலூன்றி நின்று மலையை நிமிர்ந்து பார்த்தாள். அதன் பிரமாண்டம் மறுபடியும் பயத்தை உண்டுபண்ணிற்று. குட்டிக் குட்டிக் கத்தாழை, கள்ளிச் செடிகளும் பெயர் தெரியாத மரங்களும் அதற்குள் பாம்புகள் பதுங்கிக் கிடக்கும் என்கிற நினைப்பும் திகில் உண்டாக்கியபடி இருக்க, அஹமதுவுக்கும் இலியாஸுக்கும் மட்டும் மலையேறுவது களிப்பைத் தந்திருந்ததைப் பார்த்து ஆச்சரியம் உண்டாயிற்று ராபியாவுக்கு.

சற்று தூரம் சென்ற பிறகு திரும்பிப் பார்த்த அஹமது, “ஏய்! ஏன் அங்கேயே நின்னுட்ட? ஓடிவா” என்று கத்தினான். அச்சமயத்தில் மலை முழுக்க அவன் குரல் எதிரொலித்து அவளுக்கு வியப்பையும் பரவசத்தையும் உண்டுபண்ணியது. அவள் பதில் சொல்ல விரும்பாத நிலையிலும் இங்கிருந்து கத்தினாள், “இதோ வந்துட்டேன்.” மலை அவளது குரலையும் அவர்களை நோக்கித் திருப்பி அனுப்பியதில் உண்டாகிய பெருமையோடு “ஓஹோஹோ” என்று கத்திக் கூச்சலிட்டபடி மேலே ஓடிக்கொண்டிருந்தார்கள் இருவரும். பெருமூச்சு விட்டபடி ஓடிக்கொண்டிருந்தாள் ராபியா அவர்களைப் பிடித்துவிடலாம் என்ற நம்பிக்கையுடன். முட்செடிகள் பாவாடையில் பட்டு அவளது ஓட்டத்தைத் தடை செய்தபடியிருக்க நின்று நின்று முட்களைப் பிய்த்தெடுத்தபடி ஓடினாள்.

அவளை எதிர்பார்த்து ஏறாமல் நின்று கொண்டிருந்தவர்களை நெருங்கியதும் ராபியா சொன்னாள், “மலை, மலை மாதிரியே இல்லெ” என்று. அவளுக்கு மலை தூரத்திலிருந்து காட்டிய வர்ணங்கள் கலைந்து போய் அதன் ஒளி விலகிப் போயிருந்தது போல இருந்தது. அடர்த்தியான மரங்களும் நிழலுமின்றி வெய்யிலும் பாறைகளும், முட்செடிகளும் நிறைந்திருந்த இதனை மலை என்றே எண்ணத் தோன்றவில்லை. “இதுக்குப் பேருதாண்டி மலை! ஆனா, மலை மாதிரியே இருக்காது. அதோ, பாரு ரெண்டாவது மலை தெரியுது. அதுதான் சூப்பரா இருக்கும். ஆனா அங்கெ போக முடியாது. அங்கெதான் மான், நரி, புலி, அப்புறம் மலைப்பாம்பு எல்லாமே இருக்கும். இதுல ஒண்ணுமே இருக்காது. பயப்படவே தேவையில்ல” என்று அவளுக்கு ஆறுதல் சொல்ல முயற்சித்தான் அஹமது. அவளது ஏமாற்றத்தை அவனால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. இந்த மலையை ஏகப்பட்ட மர்மங்கள் நிறைந்தது எனவும் இதில் ஏறுவது தனக்குச் சுண்டைக்காய் எனவும் தான் பீற்றிக் கொண்டிருந்தது ரொம்பவும் அதிகம் என்று அவள் நினைத்துக் கொள்வாளோவெனச் சங்கடமாக இருந்தது அவனுக்கு. அவள் பிரமாதமில்லை என்று சொன்னபிறகு அதைப்பற்றிப் பெரிது படுத்திச்சொல்ல அவனுக்கு ஒன்றுமே இல்லாமல் ஆகியிருந்தது. அவள் முகத்தில் வெளிப்படையாகத் தெரிந்த ஏமாற்றத்தைப் போக்க ஏதேனும் வழியிருக்கிறதா என்கிற மாதிரி அவன் யோசிப்பது போல அமைதியாக இருந்தான்.

இலியாஸ் ஒன்றும் புரியாமல் நின்று கொண்டிருந்தான். இங்கே தான் செய்ய எதுவும் இருக்கிறதா என்று புரிந்துகொள்ள விரும்பியவன் போல்! தனது செருப்புக்காலால் செங்குத்தான பாதையை இரண்டு உதை உதைத்தவன் பிறகு ஆச்சரியமூட்டும் வகையில் சொன்னான்,

“நாம களாக்காய் புடுங்கலாம்” என்று. “களாக்காய் காய்ச்சுருக்கா” என்று ஒரே நேரத்தில் இருவருமே ஆர்வத்துடன் கத்தினார்கள்.

“ஆமா, அதோ பாருங்க அந்தச் செடியில. அந்தக் கத்தாழைச் செடியை ஒட்டி” என்றபடி துள்ளிக்குதித்து முதலாவதாக அங்கு ஓடினான் இலியாஸ், ஏதோ அரிய விஷயமொன்றைக் கண்டுபிடித்தது போன்ற பூரிப்புடன். அஹமதுக்கு முகம் மாறிப்போயிருந்ததை ராபியா கவனித்தாள். தனக்குத் தெரியாத ஒன்றை இலியாஸ் கண்டுபிடித்துத் தன்னிடம் காட்டிவிட்ட வருத்தம் போல என்று ராபியா நினைத்துக் கொண்டாள். ஒரு களாக்காயைக் கண்டு சொன்னதற்காக இலியாஸ் பெரிய இவனா என்ன? எனக்கு அஹமது மேலிருக்கும் பிரியம் எப்பொழுதுமே துளிக்கூட குறையாது. அப்புறம் எதற்காக அவன் முகம் இப்படி வாடிப்போக வேண்டும் என்று மனதில் நினைத்துக் கொண்டவள் இலியாஸ் போன பிறகு இதை அஹமதுவிடம் சொல்லிவிட வேண்டும் என்று நினைத்துக் கொண்டபடி களாக்காய்ச் செடியருகே சென்றாள்.

அடர்த்தியாக இருந்த செடிக்குள் காய்த்துக் கிடந்த காய்களைப் பறிக்க ஆசையெழுந்தாலும் செடிக்குள்ளாகப் பாம்பு இருக்குமோ என்ற பயம் தயக்கத்தை உண்டு பண்ணிற்று. அஹமது சொன்னான். “நீ பேசாம இரு, நான் பறிக்கிறேன்.” செடியை விலக்கி இலியாஸும் அவனும் காயைப் பறித்துத் தம் சட்டைப்பைக்குள் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு இவளுக்குப் பயம் விலகியிருக்க, தானும் பறிக்கவென அவர்களுக்கருகே இசைவான இடத்தில் அமர்ந்து பாவாடையை இறுக்கிச் சுருட்டித் தன் தொடைகளுக்குள்ளாக வைத்து கொண்டு பறிக்கத் துவங்கினாள். “முள் இருக்கும் பாத்து” என்று அவளை அக்கறையாக எச்சரித்த அஹமது, “அட அங்கெ பார்

பிச்சிப்பூ செடிய, எவ்வளவு பூவு பூத்து இருக்கு” உற்சாகமாகக் கத்தினான். அவன் கை காட்டிய திசை நோக்கி இலியாஸும் ராபியாவும் ஒரே சமயத்தில் திரும்பிப் பார்த்தார்கள். ராபியாவின் முகத்தில் தெரிந்த சந்தோஷத்தினால் உற்சாகம் பீறிட்டது அவனுக்கு. லேசாகக் காய்ந்து போயிருந்த குத்துச் செடிகளில் பூ மொட்டுக்கள் நிறைந்திருந்தன. ராபியா மட்டும் எழுந்து போய் அப்பூக்களைப் பறித்துத் தன் கைகளுக்குள் போட்டுக் கொள்ளத் தொடங்கினாள். இரவுக்குள் மலர்ந்துவிடும் என்றாலும் அதிலிருந்து அருமையான வாசம் கைவிரல்களில் படிந்திருப்பதை முகர்ந்து பார்த்துக் கொண்டவள், அஹமது பெருமைப்படட்டும் என்பதற்காகவே பூவை மிக ஆர்வத்துடன் பறிப்பதுபோலக் காட்டிக் கொண்டாள்.

பிறகு மூவருமாகக் குண்டு மணிச் செடியிலிருந்து நிறையக் குண்டுமணிகளைச் சேர்த்துக் கொண்டார்கள். பாதியளவு கருப்பும் கீழ்ப்பாதி ரத்தச் சிவப்புமாக அழகாக இருந்தது குண்டுமணி. ராபியா அப்பொழுதுதான் கவனித்தாள், வெயில் சுத்தமாக இல்லாமலாகி இதமான காற்று வீசிக்கொண்டிருந்ததை. தடையேயில்லாத தைரியத்தில் இவர்களையே சுற்றிச் சுற்றி வருகிறது காற்று. விஷ், விஷ் என்கிற ஓசையுடன் முகத்தில் மோதித் திரும்புகிறது. தலை முடியைப் பற்றி இழுக்கிறது. படபடவென்கிற சத்தத்துடன் பாவாடையைத் தூக்கியடிக்கிறது. கூச்சத்துடன் பாவாடையைத் தொடைகளுக்கிடையே அழுத்திச் சொருகியவள், ‘நேரமாயிருச்சு போவோம்’ என்றபடி, திரும்பி அடிவாரத்தை நோக்கி நடக்க எத்தனித்த போது கீழே பார்த்தாள்.

மலையிலிருந்து பார்க்கையில் ஊரிலிருக்கும் வீடுகள் குட்டிக் குட்டியாக அழகாகத் தெரிந்தன. அவளுக்குள் வினோதமான உணர்வும் உவகையும் பெருகி ஓட அப்படியே மலைத்து நின்றபடி

அங்கிருந்து தன் வீடு எங்கிருக்கிறது என்பதைக் கணிக்க முயன்றாள். ஒன்றுபோலவே அத்தனை வீடுகளும் குட்டிக்குட்டியாகத் தெரிந்ததே தவிர தன் வீடு எதுவெனத் தெரியாதது ஏமாற்றமாக இருந்தது. அத்தோடு ஒரு விஷயம் அவளுக்குப் புரியவில்லை. தன் வீட்டு மொட்டை மாடியிலிருந்து மலை தெரிவதைப் போல மலையிலிருந்து பார்க்கையில் ஏன் நம் வீடு தெரிய மாட்டேனென்கிறது என்று! சிறிது நேர யோசனைக்குப் பிறகு தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள், ‘மலை, வீட்டைவிட ஆயிரம் மடங்கு பெரிசு இல்லை?’

“சரி, இறங்குவோம். தண்ணித் தாகமா இருக்கு” என்றபடி இறங்க முயல்கையில், அஹமது சொன்னான்: “இரு, நாம தேள் பிடிக்கலாம்.” “தேளா?” பயத்தில் அலறினாள் ராபியா. “ஆமா” என்றான் அலட்சியம் மிகுந்த கர்வத்துடன் அஹமது. “அது எங்கே இருக்கும்?” பயத்துடன் கேட்டவளிடம், “எங்கெயோ” என்றவன், அவள் நின்றுகொண்டிருந்த பெரிய கல்லிலிருந்து கீழே இறங்கச் சொன்னான். அவளும் இறங்கித் தள்ளி நின்றுகொண்டு அவனையே பார்த்தாள். அவள் முகம் திகிலில் கறுத்துப் போயிருந்தது. அது சிறிய பாறை போன்றிருந்தது. அஹமது தன் பலத்தைக் கொண்டு அதனை நகர்த்தத் தொடங்கினான். பாறை எளிதாக அசைவு கொடுத்தது. உடனே ஒரு கையை பாறையிலிருந்து எடுத்துத் தன் டவுசர் பாக்கெட்டுக்குள் நுழைத்தவன், அதனுள்ளிருந்து ஒரு தீப்பெட்டியை எடுத்தான். எடுத்து அதைப் பாதி திறந்து தன் இடது கையில் வைத்தபடி வலது கையால் பாறையைத் தூக்கிப் புரட்டினான். முதலிலேயே அசைக்கப்பட்டு மண் மீதான தனது பிடிமானத்தை இழந்திருந்த பாறை சுலபமாக மல்லாந்து கொண்டது. அதனடியில் உறைந்து கிடந்த தேள்குட்டிகள் திசைக் கொன்றாக ஓடத் துவங்க, தன் கையில் சிறு குச்சியொன்றை எடுத்து ஓடிக் கொண்டிருந்த தேள்களில் ஒன்றின் வால் மீது குச்சியை வைத்து அழுத்தி ஓட

முடியாமல் செய்தான். மற்றதுகள் எல்லாம் ஓடிப் போய் அருகிலிருந்த செடிக்குள்ளாக ஒளிந்துகொள்ள, ராபியா அதிர்ச்சியில் உறைந்து போய் அவளறியாமலே இரண்டடி பின் வாங்கியிருந்தாள்.

வெற்றிச்சிரிப்போடு அவளை அண்ணாந்து பார்த்தவன், இலியாஸைப் பார்த்து எப்பிடி என்று கண்ணடித்தபடி, குச்சியின் கீழிருந்தபடி ஓட முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்த தேளருகே பாதி திறந்திருந்த தீப்பெட்டியை வைத்து, லேசாகக் குச்சியின் அழுத்தத்தை விடுவித்தான். ஓட முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்த தேள், தீப்பெட்டிக்குள்ளாக நுழைந்துகொள்ளச் சடாரென்று பெட்டியை மூடியவன் தேள் பிடிபட்ட களிப்பில் ஓவென உற்சாகமாகக் கத்தியபடி துள்ளிக் குதிக்க ஆரம்பித்தான்.

ராபியா திகிலின் உச்சகட்டத்திலிருந்தாள். தரையில் கால் வைக்கப் பயமாக இருக்க திகைத்தபடியே நின்றவாறு, “அஹமது, பாறைக்குக் கீழதான் தேளெல்லாம் இருக்குமா?” என்றாள். அவளுக்கு நா வறண்டுபோய் பேச்சு வராமல் தடுமாறியது. “பின்னெ?” என்றான் அவன் முன்னிலும் அலட்சியமாக! அவள் முன்பாகத் தான் நிகழ்த்திக்காட்டிய சாகசத்தைத் தானே மெச்சுகிற தொனியில். “எல்லாப் பாறைக்கும் கீழயுமா?” “ஆமா, அதுக்கென்ன?” அப்ப இவ்வளவு நேரம் நாம ஏறுனப்போ ஏதாவது ஒரு பாறையாவது புரண்டுருந்துச்சுன்னா? அம்மாடி அவளுக்கு நினைக்கும் பொழுதே உடலைக் குலுக்கிற்று. தேள் கொட்டினால் எப்படி வலிக்குமென்று அவள் கேள்விப்பட்டிருக்கிறாள். இந்த மலையில் யாருக்கும் தெரியாமல் வந்த இடத்தில் ஏதாவது ஒன்று என்றால்? அவளது பயம் அதிகரித்தபடியே இருக்க, “எனக்கு இங்க நிக்க பயமா இருக்கு. நான் எப்படிக் கீழ எறங்கிப் போவேன், எறங்கையில பாறைகள்ல கால் வச்சுதான போகணும்?” அவள் அழும் குரலில் புலம்பத்

தொடங்கினாள். அவளுக்குத் திடீரென ஒரு பிளேன் வந்து இங்கிருந்து தன்னை அப்படியே அந்தரத்தில் தூக்கிப் போய்விடாதா என்று முட்டாள்தனமான ஏக்கம் உண்டாயிற்று. இன்னும் எவ்வளவோ தூரத்தை எப்படிக் கடக்கப் போகிறோம் என்று சிலையாக நின்றவளிடம் அஹமது சொன்னான்: "பயந்தாங்கொள்ளி! இதுக்குத்தாண்டி உன்னையயெல்லாம் கூட்டிட்டு வரக்கூடாது." சாவகாசமாக பாக்கெட்டில் தீப்பெட்டியை வைத்தபடி, "சரி, சரி வா! பாறையில கால வைக்காம மண்ணுலயே கால வச்சு வா. இன்னும் நாலு தேள் பிடிக்கலாம்னா இவளப்பாரு" என்றபடி, கீழே சரசரவென இறங்க ஆரம்பித்தான். அவர்கள் லாவகமாக இறங்கிப் போவது பெரும் ஆச்சர்யத்தை உண்டாக்க மெது மெதுவாக அடி எடுத்துவைத்து அவளும் இறங்க ஆரம்பித்தாள்.

அன்றிரவு வீட்டில், "மலைக்கு ஏறின சமயத்தில் முதல் தீட்டு வந்து இருந்தால் என்னவாகியிருக்கும்?" காத்து கறுப்பு அண்டியிருக்குமே என்கிற ஆத்திரத்தில் சொஹ்ரா நன்றாகத் திட்டித் தீர்த்ததும், மறுநாள் பள்ளியில் விளையாட்டு மைதானத்தை ஒட்டியுள்ள மலையடிவாரத்துக் கத்தாழைச் செடிகளில் அவள் பெயரை அஹமதுவோடு இணைத்துக் கெட்ட வார்த்தைகள் முட்களைக் கொண்டு எழுதப்பட்டிருந்ததைப் பார்த்துவிட்டுப் பள்ளியில் அத்தனை பிள்ளைகளும் கேலிசெய்ததும் அவள் மனதில் மலை ஏறிய அனுபவத்தோடு சேர்ந்தே பதிவாகியிருந்தது.

# 48

அடிவயிற்று வலி வஹிதாவைப் படுக்கையிலிருந்து எழ விடாமல் செய்திருக்க சிறுநீர் கழிக்குமிடத்தில் தொற்றியிருந்த எரிச்சல் மேலும் துன்பத்தை உண்டுபண்ணிற்று. தன்மீதேயான கருணை இன்று வழக்கத்தைவிட அதிகமாகிக் கண்களில் நீரை வடியச் செய்தபடியிருக்க, பெரும் கானகத்துக்குள் வந்து சேர்ந்துவிட்டது போலவும், இதிலிருந்து இனி தப்பிக்க முடியாது எனவும் தோன்றியபடியே இருந்தது அவளுக்கு. அம்மாவின் மடியில் விழுந்து கதறி அழவேண்டும் என்கிற எண்ணம் எழுந்தாலும், உடனேயே அவ் வெண்ணத்தைத் தட்டிவிட்டுக் கலைத்துக் கொண்டாள். எதற்காக அவள் மடியில் விழவேண்டும் என்கிற கேள்வியோடு கூடாது என்கிற வைராக்கியமும் எழுந்தது. “அம்மாவாம் அம்மா” என்று தனக்குள்ளாக ஆத்திரத்துடன் முனகிக்கொண்டவளுக்கு வெறுப்பு மூண்டு வலியை நினைவிலிருந்து அகற்றியது. இனி அவளது முகத்தில் ஒரு சங்கடமுமின்றித் தன்னால் விழிக்க முடியுமா என்கிற கேள்வி மிகுந்த அதைரியத்தை ஊட்டி அவளை வலுவிழக்கச் செய்வதாகயிருந்தது. அத்தோடு அவள் ஏன் இந்தத் திருமணத்தை அனுமதித்தாள்? அவளுக்கேகூட திருப்தியில்லாத நிலையில்! அவள் பிடிவாதமாக இருந்திருந்தால் இது நடந்திருக்காது என்ற எண்ணமும் இன்று இந்த வீட்டில் தன்னுடைய ஒவ்வொரு கஷ்டத்திற்கும் அவள்தான் காரணம் என்கிற கோபமும் குற்றச்சாட்டாக மாறித் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது.

மறுபடி அடிவயிற்றில் வலி மின்னி மறைய, ஆ. . ! வென மெலிதாகக் கத்தி வாய் மூடினாள். சபியா காலையில் வந்து அடிவயிற்றில் கை

நிறைய நல்லெண்ணெயை ஊற்றித் தடவிக் கொள்ளச் சொன்ன படியே, “புதுசா புருஷன்கூட சேர்றது அப்பிடித்தான் அடிவயித்துல சூடுமாதிரி வலியெடுக்கும். நல்லா தேயி, சரியாப் போகும்” என்றாள். இவளுக்கு ஏனோ சிக்கந்தரின் மீது துளி பிரியம்கூட இன்னும் வரவில்லை. அது குறித்து அவனுக்கும் ஒரு வருத்தமுமில்லாதது இவளைப் பெரும் ஆச்சரியத்திற்கு உள்ளாக்கிற்று. அவனோடு ஒத்துழைக்காத தன் மனமும் அதனால் தன் உடல் பெரும் சிரமத்துக்குள்ளாவதும் அந்த வேதனையையும் விட, அவன் அது குறித்துச் சிறிதும் கவலைப்படவோ யோசிப்பதோ இல்லை என்பதை நினைத்துத்தான் வேதனையாக இருந்தது.

நேற்று அவள் உடுத்தியிருந்த வெள்ளைப் பூப்போட்ட கருநீல நிறப்புடவை அவளை ரொம்பவும் அழகாகக் காட்டிய போது அவன் அதனைக் கவனிக்கவோ, பொருட்படுத்தவோ செய்யாதது அவளை வியக்கவைத்தது. அவன் தன்னைப் பார்த்து அழகாக இருப்பதாகச் சொல்ல வேண்டும் என்று அவள் விரும்பவில்லை என்றாலும், அவனுக்கு ஏன் அப்படித் தோன்றவேயில்லை என்பது தான் அவளுக்குத் தாங்க முடியாத எரிச்சலைத் தந்தது.

சபியா எந்த ஒரு புடவை கட்டினாலும் அன்று முழுவதும் சையது அவளை ரசித்துப் புகழ்ந்து பேசி இவளது காதுகளைப் பொத்துப்போகச் செய்துவிடுவார். அதைப்பார்த்து இவளுக்குச் சிரிப்பாக இருக்கும். இந்த வயதில் இந்த மூஞ்சியை இப்படி ரசிக்கிறாரே என்று! அவர் நேற்று இவளைக் கூப்பிட்டுத் தன்னருகில் உட்காரவைத்துக் கொண்டு இந்தப் புடவையில் ரொம்பவும் அழகாக இருப்பதாகச் சொல்லிப் பாராட்டியது இவளுக்குத் தாங்க முடியாத அருவெறுப்பை ஊட்ட, இன்றிலிருந்து நல்லதாகப் புடவை கூட உடுத்திக் கொள்ளக் கூடாது என்று மனதில் நினைத்துக் கொண்டாள்.

இவளுக்கு அவனைப்பற்றி தெரிந்தது என்று ஒன்றுமேயில்லை. குடிப்பானோ, குடித்துவிட்டு வந்து அடிப்பானோ, சிகரெட் பழக்கம் இருக்குமோ, வேறு கெட்ட பழக்கம் எதுவும் இருக்குமோ என்றெல்லாம் கற்பனை செய்து, இப்படியெல்லாம் இருந்தால் அவனை வெறுக்கும்படி ஆகிவிடுமே என்கிற கவலைகளுக்கு இடமில்லாதபடி இன்று சின்னச்சின்னச் காரணங்களும்கூட அவன்பேரில் விலகலை உண்டு பண்ணிக்கொண்டிருந்ததுதான் ஆச்சரியமாக இருந்தது.

அவனது நடவடிக்கைகள் ஒன்றுகூட இவளுக்குப் பிடிக்கவில்லை. அவள் கற்பனை செய்துவைத்திருந்த கணவன் ரொம்ப நாகரிகமானவனாக மென்மையானவனாக இருந்தான். அவனோடு இவனை ஒப்பிட்டுப் பார்க்கவே இவளுக்குப் பிடிக்கவில்லை. புது மனைவியான தன்னிடம் வெட்கம் கொள்ளக்கூடத் தெரியவில்லை.

இவன் ஏன் இப்படித் தன்னிடம் நடந்து கொள்கிறான் என்று நினைத்தவளுக்கு இவன் சினிமாவெல்லாம் பார்க்கவே மாட்டானா, என்ற கேள்வி உண்டாயிற்று.

வயிற்று வலியோடு, பசியும் சேர்ந்து கொள்ள, சாப்பிட வேண்டும் போலிருந்தது அவளுக்கு! இங்கு வந்ததிலிருந்து சாப்பிடக் கூட முடியாதபடி வெட்கமாக இருந்தது. நூரம்மா பசியோடு இருந்தாலே அம்மாவுக்குத் தாங்காது. உடனே சாப்பாடு கொடுத்துச் சாப்பிட வைத்து விடுவாள். இன்று தான் பசியினால் துவண்டு கிடப்பது தெரிந்தால் . . .? நினைக்கும்போதே துக்கமாக இருந்தது. இவள் வீட்டிலிருந்த சமயங்களில் நூரம்மா வந்து சாப்பிட ஏதாவது கேட்பாள். அவளுக்குப் பசித்தால் உடனே சாப்பாடு வேண்டும். அம்மா சொல்வாள், “ஆம்பளைங்க இன்னும் தொழுதிட்டுச் சாப்பிட வரலை, கொஞ்சம் பொறுத்து சாப்பிடலாம்” என்று நூரம்மா

அம்மாவிடம் உரிமையோடு கடிந்துகொள்வாள். “ஏன், ஆம்பளைங்க வயிறுதான் ஒசத்தியா? நம்ப வாயி வயிறெல்லாம் சாப்பிடாதோ? சும்மா போட்டுக் குடு தாயி.” அவள் சாப்பிடுவதை ஒண்டி நின்று ராபியாவும் வஹிதாவும் வேடிக்கையாகப் பார்ப்பார்கள். ராபியாவுக்குச் சந்தேகம் தீரவே தீராது. வஹிதாவின் காதில் கிசுகிசுப்பாள், “ஏக்கா, இந்தப் பொம்பளைக்கி இந்தப் பெரிய வயிறாவா இருக்கும்? சாலு மாதிரி! இம்புட்டுச் சோறு எப்பிடிக் கொள்ளும்.” வஹிதாவும் ஆச்சரியம் தாளாமல் திகைத்துப்போய் பார்த்துக் கொண்டிருப்பாள். இந்தச் சோறு தனக்கு எத்தனை நாளைக்குச் சாப்பிட சரியாக இருக்கும் எனக் கணக்குப் பார்த்துக் கொள்வாள். இவர்கள் பார்க்கும் பார்வையில் வெட்கப்பட்டுப்போகும் நூரம்மா சொல்வாள், “அடி பொம்பளைகளா, திருஷ்டி போட்டுராதீங்க, நான் சாப்புடுறதப் பார்த்து. ஒங்கள மாதிரி நானும் சோத்தைக் கோதுனாக்க நல்லாருக்கும். பாம்பு வயித்துக்காரிக!” என்று.

சாப்பிட்டு முடித்ததும் இரு கையேந்தி அதே இடத்திலிருந்தபடி துஆ கேட்கத் துவங்கினாள் என்றால், ஏறக்குறைய அரை மணி நேரம் அப்படியே கையேந்தி கண்மூடி முணுமுணுத்துக் கொண்டிருப்பாள். அப்படி என்னதான் கேட்பாளோ என்றிருக்கும் இவளுக்கு. அவளது துஆவைப் பார்த்து றைமாவும் சொஹ்ராவும் தங்களுக்குள்ளாக நமுட்டுச் சிரிப்பைப் பரிமாறிக் கொள்வார்கள்.

தொழுதுவிட்டு அத்தாவும் சச்சாவும் சாப்பிட வரும்பொழுது நூரம்மாவை இந்தக் கோலத்தில் பார்த்தால் போதும். கைக்குட்டையால் வாயைப் பொத்தியபடியே வந்து சச்சா கேட்பார், “என்ன, இன்னக்கி மிஸ்கீன் சோறா நூரம்மாவுக்கு?” என்று. பேச்சுக்குரல் கேட்டதும் சட்டெனக் கண் திறந்து அவசரமாக துஆவை

முடித்து விட்டு நூரம்மா சொல்வாள், "ஆமாத்தா." சச்சா சித்தியைக் கூப்பிட்டு அருகில் வரச்செய்து விட்டு நூரம்மாவின் எதிர்க்க நின்றபடி கேட்பார். "என்ன, நூரம்மாவுக்காக ஒருபடி அரிசி சேர்த்துப் போட்டிங்கதானே?" சச்சா குரலில் இருக்கும் கேலி முகத்தில் துளிக்கூட தெரியாதபடி பேசுவார். நூரம்மா புரிந்தும் புரியாமலும், "மகராசிக நல்லாருக்கணும். என் வயிறக் குளிர வச்சுதுக" என்று வாழ்த்திவிட்டு வீட்டுக்குப் போவாள்.

அவளுக்கு மறுபடி அடிவயிற்றில் வலி குத்திக் குத்தி எடுப்பது போலிருந்தது. இங்கே வந்ததிலிருந்தே ஒரு பக்கம் அவளுக்குச் சாப்பிட வெட்கமாக இருந்தாலும், இன்னொருபக்கம் சாப்பிடும் நேரம் நடக்கும் விஷயங்களும் இவளைச் சாப்பிடவிடாமல் செய்து கொண்டிருந்தன. ஒவ்வொரு வேளையும் சபியாதான் சமைப்பாள். கணவன் வெளிநாட்டிலிருந்து வந்திருக்கிறார் என்பதனால் தன் கைப்பக்குவத்தில் வகை வகையாகச் சமைப்பாள். கறியில்லாத வேளை இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். அவளுக்குத் தெரியும் தன் மருமகளுக்குச் சமைக்கத் தெரியாது என்று! அதனால் அவளுக்குச் சின்னச்சின்ன வேலைகளைச் செய்யச் சொல்லி விடுவாள். சபியா சமைக்கும் நேரத்தில் தன் இடுப்பில் ஒரு கர்ச்சீப்பைச் சொருகிக் கொள்வாள். விறகு அடுப்பிலிருந்து புகை வரும்பொழுது அவள் மூக்கிலிருந்து அடிக்கடி சளி ஒழுகி வந்து கொண்டிருக்க வலது கையில் கர்ச்சீப்பை உருவி ஓயாமல் சிந்தியபடிதான் சமைப்பாள். அந்தக் கையைக் கழுவாமலேயே புளி கரைப்பாள், மற்ற எல்லா வேலைகளையும் செய்து கொண்டிருப்பாள். குழம்பு அடுப்பிலிருக்கும்போது கரண்டியில் எடுத்து எச்சில் பண்ணிச் சுவை பார்த்து விட்டு மீதமுள்ள குழம்பை அப்படியே மறுபடியும் அடுப்பிலிருக்கும் குழம்பில் கரண்டியோடு விட்டுக் கிண்டிவிடுவாள்.

வஹிதாவுக்குக் குடலைப் புரட்டும். சபியாவின் எச்சிலும் சளியும் சேர்ந்து குழம்பில் கொதிப்பது போலிருக்கும். இது மாதிரி பல தடவை நடக்கும். இதைப் பார்த்த பிறகு சாப்பிட எப்படி மனம் வரும், இருந்தாலும் சாப்பிட்டுத்தானே ஆகவேண்டும்? பெரும்பாலான சமயங்களில் சையது அவளைத் தன்னோடு சாப்பிட உட்கார வைத்துக் கொள்வார். "நீ வா! நாம ரெண்டுபேருமா சாப்பிடலாம். உங்க குப்பியும் அவனும் பிறகு சாப்பிடட்டும்" என்று! அவளைத் தன் அருகில் பாயில் அமர வைத்துவிடுவார். அவர்களுக்கு முன்பாகப் பலவிதமான சாப்பாட்டு வகைகள் பரவலாக வைக்கப்பட்டிருக்கும். சையதுதான் தன் மருமகளுக்குப் பரிமாறுவார். கறியையும் கோழியையும் அவளுக்குத் தட்டு நிறைய அள்ளி வைத்து, "சாப்பிடு! இப்பிடி நோஞ்சானா இருந்தா எப்பிடி?" என்று சொல்வார். இவர்களுக்கு எதிரே அமர்ந்து கொண்டிருக்கும் சபியா, வஹிதா அப்படியே சாப்பிட்டு விடுவாளோ என்கிற கவலையோடு வஹிதாவின் தட்டிலிருக்கும் பண்டங்களையே பதற்றத்துடன் உற்றுப் பார்த்தபடியிருப்பாள். அவள் தன்னைக் கவனிக்கிறாள் என்பது அப்பட்டமாய் புரிய, உடல் கூசும் இவளுக்கு! அவள் உற்றுக் கவனிப்பதன் அர்த்தம் தனக்குப் புரியாமல் இருக்கக் கூடாதா என்கிற ஏக்கம் இவளுக்குள் முளைவிடும். சபியாவினால் அசுத்தம் செய்யப்பட்ட சாப்பாட்டைச் சாப்பிட இவளுக்கு ஏற்கனவே பிடிக்காமல் இருக்கையில், அவளது பார்வையின் அர்த்தமும் சேர்ந்து கொள்ள அவள் சாப்பிடாமலேயே எழுந்து கொள்ள முயல்வாள். அவளை எழவிடாத சையது அன்பாகக் கடிந்து கொள்வார், "என்ன பொம்பளை நீ, இப்பிடிச் சாப்பிட்டுக்கிட்டு" என்று. அவரது 'அன்பு' வேறு இவளைத் தாங்க இயலாத எரிச்சலுக்குள்ளாக்கும். தன் பங்குக்கு ஏதேனும் சொல்ல வேண்டிய கட்டாயத்தைச் சையதுவின் பிடிவாதம் உண்டாக்கிவிட சபியா சொல்வாள், "நல்லா சாப்புடும்மா சீதேவி,

இளைச்சுப் போனியன்னா உங்கம்மாக்காரிக்கு நான் பதில் சொல்ல வேண்டியிருக்கும்."

வஹிதா ஒன்றும் சொல்லாமல் தட்டையே குனிந்து பார்த்தபடி சோற்றை அளைந்து கொண்டிருப்பாள். சபியாவின் எச்சிலையே சாப்பிட்டுக் கொண்டிருப்பதான ஒரு எண்ணம் மேலோங்க அடிவயிற்றில் எழும் குமட்டலைக் கட்டுப்படுத்த பெரும் பிரயத்தனம் கொள்ள வேண்டியிருக்கும். தன் வீட்டிலோ, பள்ளியிலோ யாரேனும் எச்சில் வைத்துக் குடித்த தண்ணீரை இதுவரை குடித்திருக்கிறோமா என்று யோசித்துக்கொள்வாள். நினைவு தெரிந்த நாளிலிருந்து அப்படி எதுவுமே நினைவுக்கு வரவில்லை. பள்ளியில் பிள்ளைகள் காக்காய் கடி கடித்துத் தரும் எந்தத் தீனியையும் அவள் தின்றதில்லை.

தானறியாமலேயே கண்களிலிருந்து நீர் வடிந்து கொண்டிருப்பதை உணர்ந்து தலையணையில் முகம் புதைத்துக் கொண்டவள், தான் சாப்பிடும் பொழுது உற்றுக் கவனித்தபடியிருந்த சபியாவின் கண்களின் துரத்தலை உணர்ந்தாள். அவமானமாக இருந்தது. தன் வீட்டில் தனக்கிருக்கும் செல்வாக்கும் மதிப்பும் இங்கே ஒன்றுமில்லாமல் போய் விட்டிருப்பதை உணர்ந்தாள். அம்மா எதெதையோ செய்து அவளைச் சாப்பிட வைக்கப் படும் சிரமங்கள் நினைவுக்கு வந்தன. அவள் அவற்றைக் கொஞ்சம்கூட திரும்பிப் பார்க்க மாட்டாள். அவளது பிரியத்தையும் சேர்த்தே அலட்சியப்படுத்துவதுபோல றைமாவுக்கு வருத்தமாக இருக்கும். "உடம்புக்கு கொஞ்சமாவது சத்து வேணாம்? பின்னே எப்படித்தான் பெரிய பொம்பளையாகுறது" என்ற அம்மாவின் புலம்பல் வெகு தூரத்தில் ஒலித்தது.

லுஹர் தொழுகைக்கான நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. இப்பொழுது ஒலுச் செய்தால் பாங்கு சொல்லச் சரியாக இருக்கும்.

கஷ்டப்பட்டுப் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தாள். தலைமுடி நன்றாகச் சிடுக்கு விழுந்து கிடந்தது. அம்மா இந்நேரம் தலைக்கு எண்ணெய் தேய்த்து தலைவாரி பின்னியிருப்பாள் என்று நினைத்துக் கொண்டாள். சரியாகச் சாப்பிடாததனால் இரண்டு நாளாகவே மலம் கழிக்க ரொம்பவும் சிரமமாக இருந்ததோடு, ஒலுவும் நீண்ட நேரம் நிற்க மாட்டேனென்றது. அடிக்கடி காற்று பிரிந்துவிடுவதால் மறுபடி மறுபடி ஒலுச்செய்து தொழுகை முடிக்கவேண்டியிருந்தது. நேற்று மலத்தோடு ரத்தமும் சேர்ந்து வந்தது வேறு பயமாக இருந்தது.

திருமணம் செய்து கொண்டால் மாமியார் கொடுமைப் படுத்துவாள், கணவன் எப்படியிருப்பானோ என நினைத்துப் பயந்து போயிருந்தவளுக்கு இப்படியெல்லாம் பிரச்னைகள் இருக்குமென்றோ, இவைகள்தான் தனக்கு ரொம்பவும் சிரமமாக இருக்குமென்றோ தோன்றியதேயில்லை. ரொம்பவும் ஆயாசமாக இருந்தது அவளுக்கு. உடனேயே அம்மாவைப் பார்த்து அழ வேண்டுமெனத் தோன்றிற்று. ஆனால் அதில் ஒன்றும் பிரயோசனமில்லை என்றும் அவளுக்கே தெரியும். மறுவீடு கூட்டிப் போயிருந்த போது சிக்கந்தரைப் பற்றி சில விஷயங்களை அம்மாவின் மடியில் படுத்தபடி சொல்லி அழுதபோது அவள் ரொம்பவும் அமைதியாக இவளைப் பார்த்தபடி முதுகை தடவிக் கொண்டேயிருந்தாள். பிறகு அவளை அணைத்து ஆறுதல் சொல்லத் தொடங்கினாள். “இங்கெ பார், இனி அவருதான் உன்புருஷன். இதுக்கு ஒரு மாத்தம் எந்தக் காலத்திலயும் கிடையாது. அதை முதல்ல புரிஞ்சுக்கோ” என்றவள், “சின்னப் பிள்ளை மாதிரி, குறட்டை விடுறாரு, பொம்பளைங்ககிட்ட உக்காந்து பேசறாரு, சிகரெட் பிடிக்கிறாரு இப்பிடியெல்லாம் சொல்லிக்கிட்டு இருக்காத! நீ இனியும் பச்சைக் குழந்தை இல்லை, ஒருத்தன் பொண்டாட்டி என்கிற ஸ்தானத்துக்கு வந்தாச்சு. நீ விட்டுக்குடுத்துப் பேசுனா அவருக்கு

மரியாதை இல்லை, மத்தபடி மாப்பிள்ளை குணம் தங்கம். என்ன?" என்று சொல்லி அதற்கு மேல் பேச ஒரு வார்த்தையும் இல்லாத மாதிரி அமைதியாக இருந்தாள். வஹிதாவுக்கு அம்மாவின் குரலில் லேசாக விரக்தி கலந்திருப்பதைப் போலத் தோன்றியது. அதை ஊர்ஜிதம் செய்து கொள்ள முயல்வது போலத் தனது விசும்பலை நிறுத்திவிட்டுக் கவனித்தாள். நிமிர்ந்து அவள் முகத்தைப் பார்க்கும் தைரியத்தை ஏனோ இழந்து விட்டிருந்தாள். தனது வேதனைகளைச் சொல்லி அவளை அழச்செய்வது தவறோ எனத் தோன்ற அம்மாவின் பேரில் இரக்கம் உண்டாயிற்று. தனது பெண் இப்படி சந்தோஷமில்லாமல் இருக்கிறாளே என்கிற கவலையை அவளுக்கு உண்டு பண்ணக்கூடாது என்கிற உணர்வு மேலிட அதன் பிறகு அவள் அழவில்லை.

கட்டிலில் இருந்து எழும் முன்பாக மறுபடி மணி பார்த்தாள். பாங்கு சொல்லத் துவங்கியிருந்தார்கள். பாங்கு சொல்கையில் நடமாடக்கூடாதென்பதனால் அதே இடத்திலேயே அமர்ந்து கொண்டாள். பாங்கு முடிந்ததும் துஆ ஓதத் தயாராக இரு கைகளையும் இணைத்தவளுக்குக் கைவிரல்களில் லேசாக அழியத் துவங்கியிருந்த மருதாணி தனக்குத் திருமணம் நடந்து விட்டதை மறுபடியும் திடீரென ஞாபகத்துக்கு கொண்டுவந்து அடிவயிற்றில் பெரும் திகிலாக உறைந்தது. ஒவ்வொரு விரலாக மடக்கி இன்றோடு எத்தனை நாட்கள் ஆகிறது என்று எண்ணத் துவங்கியவள் சரியாகப் பதினைந்து நாட்களாவதைக் கணக்கிட்டு ஆழ்ந்த பெருமூச்சொன்றை விட்டாள். பதினைந்து நாளென்பது எத்தனையோ காலத்தைப்போல மனதில் பதிவாகியிருந்தது.

அறைக் கதவை யாரோ திறக்கும் சத்தம் காதில் விழ, யாரென்று பார்க்கத் தலையைத் திருப்பியவள், அங்கு சையது நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவசரமாகக் கட்டிலை விட்டு

இறங்கி தலை முக்காட்டை இழுத்துவிட்டுக் கொண்டு மரியாதைக்காக ஒதுங்கி நின்றாள். இந்த வேதனைக்கிடையில் இந்த ஆள் எதற்காக வருகிறார் என்கிற கேள்வி உள்ளுக்குள் எழ, வாய் மட்டும், “வாங்க மாமு, அஸ்ஸலாமு அலைக்கும்” என்றது.

“உம்! வாறேன்” என்றபடி வந்து கட்டிலில் அமர்ந்தவர், “அடடா! உக்காந்திட்டேனே, தொழுகிற உடுப்போட” என்று பதறுவது போல பாவனை செய்தவர், “என்ன? படுக்கையில நஜீஸ் ஒண்ணுமில்லைதானே?” என்று கிண்டலாகக் கேட்டார். அவரின் குரலில் தென்பட்ட நக்கல் அவளைக் கூனிக்குறுகச் செய்ய, ஒன்றும் சொல்லப் பிடிக்காமல் தலையைக் குனிந்து கொண்டாள்.

சையது ஒரு நிமிடம் அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தார், புதிதாகப் பார்ப்பவர்போல! பார்த்துவிட்டுத் திருப்தியுற்றவராக அவளைப்பார்த்து, “அறை நல்ல சவுரியம் இல்லெ?” என்றார். அவள் பதில் சொல்லப் பிடிக்காமலேயே “உம்” என்று தலையை ஆட்டி வைத்தாள். “ஏன் நிக்கிற? வா இப்பிடி உட்காரு!” என்று அவளை உட்காரச் சொன்னவர் அவள் மறுத்தாலும் பிடிவாதமாக அமரச் செய்தார். கட்டிலின் ஒரு முனையில் ஒடுங்கிப் போய் அமர்ந்து கொண்டாள் அவள். வேறுவழி தெரியவில்லை. உட்கார மறுத்தால் அவர் கையைப் பிடித்திழுத்து அமரச் செய்து விடுவார் என்கிற பயம் அவளுக்கு.

சையது அவளை உற்றுப்பார்த்தார். தலையிலிருந்து கால் வரையிலும் அவர் கண்கள் அவளை ஊடுருவிப் பாய்ந்து கொண்டிருப்பதை உணர்ந்து, உடலை இன்னும் கூட தனக்குள்ளாக ஒடுக்கிக்கொள்ள முயன்று தோற்றாள். அவள் உடம்பின் ஒவ்வொரு பகுதியாகத் தன் கண்களால் துழாவியவர், “சபியா சொல்லுச்சு, ஒனக்கு வயித்து வலின்னு. ஏன் ரொம்பவும் வலிக்கிதோ” என்றார். அவர் குரலில்

மிகுந்திருந்த ஆர்வமும் இயலாமையைப் பிரதிபலித்த முகமும் இவளை நிலை குலையச் செய்திருந்தன. வாய் பேச முடியாத ஒரு நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டது போலிருந்தாள். அவள் என்ன நினைப்பாளோ என்பது பற்றிய எந்த ஒரு நினைவும் இல்லாத பெரும் சுவாரஸ்யம் அவரது கிழட்டு முகத்தில் பரவியிருந்தது. சிறிது நேர மௌனத்திற்குப் பின் மறுபடி பேசத் தொடங்கினார்.

"பயப்படாத! அப்பிடித்தான் புதுசுக்கு எல்லாருக்குமே வலிக்கும். அப்புறம் சரியாப்போயிரும். அதோட ஒனக்குச் சின்ன வயசு. அவன் அப்பிடியில்லெ, முரட்டுப்பய, பெரிய ஆம்பளை, சிரமம்தான்! நீ பல்லைக் கடிச்சுக்கிட்டேன்னு வச்சுக்க, சரியாப் போவும் என்ன?" என்றவர் அவள் என்ன நினைக்கிறாள் என்பதை அறிந்து கொள்ளும்விதமாக ஆர்வத்துடன் அவள் முகத்தை உற்றுப் பார்த்தார். அவள் மீதான அக்கறையின் விளைவாகத்தான் தான் இப்படியெல்லாம் சொல்வதாக அவளை நம்பவைப்பதுபோல். அவள் முகம் பயத்தில் இறுகிக் கிடந்தது என்பது தெளிவாகத் தெரிந்தாலும், அவளிடம் தனக்குச் சொல்வதற்கு நிறைய விஷயங்கள் இருப்பதை நினைத்து அதனைப் பொருட்படுத்தாமலிருக்க முயன்றார்.

"இப்ப என்னப்பாரு, வயசாயிருச்சு. என்னால ஒண்ணும் பண்ண முடியாது. நெனைச்சாக்கூட முடியாது. ஆனா உன் புருஷன் அப்பிடியில்ல. இளவயசு. அதனால நீதான் அப்பிடி இப்பிடிப் பாத்து நடந்துக்கணும். இப்பிடி வலிக்குதுன்னு சொல்லிப் படுத்துக்கிட்டேன்னு வச்சுக்கோ அவன் பாவம் இல்லெ? புதுசா கல்யாணமாகியிருக்கு." அவர் ஏதேதோ சொல்ல முயன்று அதனைச் சரியாக சொல்ல முடியாத தடுமாற்றத்தில் இருந்தார். அவள் இதிலிருந்து எப்படித் தப்பிப்பது என்று புரியாமல் அதிர்ந்து போயிருந்தாள். ஒரு வழியும் இருப்பதாகத் தெரியவில்லை. அழுகை

வரும்போலிருக்க, சிரமத்துடன் உதட்டைக் கடித்துத் தனக்குள்ளாக மறைத்துக் கொள்ள முயன்றாள். அவரது குட்டை உடலும் சுருங்கிக் கிடந்த முகமும் இடுங்கிய சின்னஞ்சிறிய கண்களும் ஒரு மிருகத்தைப்போலத் தோற்றமளித்தன. என்ன மிருகம் என்பதை அவளால் கணிக்க முடியாமல் இருந்தது. இந்த ஆள் கெட்ட கேட்டுக்கு எதுக்குக் குஞ்சுத்தாடியும், தொப்பியும், தொழுகையும் என்று மனம் குமுறிற்று.

"என்ன, ஒண்ணுமே பேசமாட்டேங்கிற?" என்றவர் அவளைத் தன் நிலைக்குக் கொண்டு வருவதற்கு முயல்வது போல எட்டி அவளது முதுகைத் தொட்டு அழுத்தமாகத் தட்டிக்கொடுத்தார். அந்தத் தொடலில் மிகுந்திருந்த அழுத்தத்தில் ஒரு நிமிடம் அதிர்ந்து திரும்பிய வஹிதா, "உம், சும்மாதான்" என்று முனகினாள். அவளுக்கு அதற்குமேல் சொல்வதற்கு வார்த்தைகள் வரவில்லை. அவள் பேசியதில் திருப்தியுற்றவராக மறுபடி சொல்லத் தொடங்கியவர்,

"அந்தக் காலத்துல நானெல்லாம் புது மாப்பிள்ளையா இருந்தப்ப, ரொம்ப ஜாலியா இருந்தேன். இப்பப்பாரு வயசாகிப் போச்சு. ஒண்ணுக்கும் லாயக்கில்ல. சிலோன்ல எங்கெ பாரு சிங்களச்சிக சுத்திக்கிட்டுத் திரிவாளுக, அஞ்சுக்கும் பத்துக்கும். வயசு காலத்துல சம்பாரிக்க பொண்டாட்டிய விட்டுட்டுப் போயிக் கிடந்தோம். பொம்பளைககிட்ட போக அப்ப கையில காசு இருக்காது. சம்பாரிச்சு மனுஷனாகணுமின்னு ஓயாம வேலையப் பார்ப்போம். இப்ப காசு இருக்குது, வயசு போயிருச்சு. ஒண்ணுத்துக்கும் இயலல." ஒரு ஆழமான பெருமூச்சு அவரிடமிருந்து எழுந்தது. விரக்தி மேலிட ஒரு நிமிட அவகாசத்திற்குப்பின் மறுபடி தொடர்ந்தார். "அங்கெ என் சினேகிதன் ஒருத்தன் இருக்கான். ஏறக்குறைய என்னோட வயசுதான் அவனுக்கும். அவன் இன்னிக்கும் சிங்களச்சிககிட்ட போவான். போயி என்ன

பண்ண, ஆசை இருந்து என்ன பண்ண, அவளுக சும்மா அப்புடி இப்பிடித் தொட்டுத் தடவி விட்டுக் காசைப் புடுங்கிக்கிட்டு அனுப் பிருவாளுக, சுகரு வேற" என்று சொன்னவர், "பாவம் அவன்" என்று தன் சினேகிதனுக்காக வருந்துவது போல முகத்தை வைத்துக் கொண்டார்.

அவளுக்கு ஏனோ அவர் தன் சினேகிதனுக்காக வருந்துவது போலத் தெரியவில்லை, அவரது இயலாமையின் வெளிப்பாட்டை ஒரு கற்பனைச் சினேகிதனின் பேரில் சொல்லிக் கொண்டிருக்கிறார் என்பது தெளிவாகப் புரிந்தது. அவளுக்குத் திடுமென தன் நிலை குறித்த கேள்வியும் அதிர்ச்சியும் உண்டாயிற்று. இத்தனை சிறிய வயதிலேயே அவர் யாரைப் பற்றிச் சொல்கிறார் என்பதை யூகிக்கத் தன்னால் முடிவது எப்படி என்று யோசித்தாள். தான் இந்தப் பதினைந்தே நாட்களில் வேறொரு ஆளாக ஆகிவிட்டது போல உணர்ந்தாள்.

எப்படி எஞ்சிய காலத்தை ஓட்டுவது என்கிற பயமும் அவளுக்கு உண்டாயிற்று. இந்த வயதிலேயே இப்படியெல்லாம் யோசிப்பதற்கான தேவை எதனால் உண்டாயிற்று? திருமணம் செய்து கொண்டதனால்தானா என்று நினைத்துக் குழப்பத்தில் ஆழ்ந்தாள். எலிப் பொறிக்குள் சிக்கிக் கொண்டு விட்டோமோ என்ற எண்ணம் தோன்றியது.

குழப்பத்தின் சாயை அவளது முகத்தில் தெளிவாகப் படிந்திருப்பதை சையது எளிதாகக் கண்டு கொண்டார். அவள் எதன் பொருட்டு குழம்பிப் போகிறாள் எனப் புரியாமல் அவளைத் தன் இடுங்கிய கண்களால் உற்றுப்பார்த்தார். தன்னைப் பார்க்கும் போது கிளர்ந்தெழும் ஆசையை அவர் சிரமத்துடன் கட்டுப்படுத்திக்கொள்ள முயன்று கொண்டிருப்பதுபோலத் தோன்றியது. அவளுக்கு அவர் ஒரு

கிழட்டு ஓநாயைப்போலக் காட்சியளித்தார். அவளது மௌனத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவர் தொடர்ந்து பேச ஆரம்பித்தார். "இதக் கேளு, இப்ப என்னால ஒண்ணும் ஏலலை. ஆனா வயசுகாலத்துல நான் எத்தனை பொம்பளைகளச் 'சோலி' ஒழிச்சிருக்கேன் தெரியுமா? நீ நெனைப்ப, இந்தக் கெழட்டுப்பயலான்னு" என்று அவளைப் பார்த்துக் கண்ணடித்துச் சிரித்தார். "அப்ப நான் எப்பிடி இருப்பேன் தெரியுமா? சும்மா துறுதுறுன்னு. ஒன்புருஷன் மாதிரியா சோம்பேறிப் பயலாவா இருப்பேன்? கல்யாணம் ஆன புதுசுல ஒரு மாசத்துக்கு சபியாவை விட்டு துளிகூட நகர மாட்டேன்ல? பகலும் ராவும்! அவளுக்குப் பத்துவயசுதான், வயசுக்குக் கூட வரலை. இருந்தாலும் எனக்கு மனசு கோணாம நடந்துக்குவான்னா பாரு! அப்புறம், ஊர்ல நெறையப் பொம்பளைக என் பின்னால திரிவாளுக! நான் மைனர் கணக்கா இருப்பேனா, அவளுகளையும் ஒருகை பாத்துருவேன்" என்று கிசுகிசுப்பான குரலில் தன் அந்தரங்கத்தை போட்டு உடைத்துக் கொண்டிருந்தார். இவளுக்குக் குமட்டல் உண்டாயிற்று. இன்னும் ஒரு நிமிடம் அவர் பேசினால்கூட தான் வாந்தி எடுத்து விடுவோமோ என்று பயந்தாள். அவளது மெலிந்த தேகம் பெரும் நடுக்கத்திற்கு உள்ளாகி இதயம் படபடத்தது. "நான் தொழுகணும்" என்று முணுமுணுத்தாள். வார்த்தை உதடுகளைத் தாண்டி வெளியில் வந்ததா என்றுகூட அவளால் கணிக்க முடியாமலிருந்தது.

சையது தான் சொல்லிக் கொண்டிருந்த தனது வீரக்கதையை அவள் காது கொடுத்துக் கேட்கவோ, சுவாரஸ்யமாக எண்ணவோ இல்லை என்பது புரிய, உற்சாகத்தை இழந்திருந்தார். செயலிழந்து போய்விட்ட தனது உடலின் பேரில் ஆழமான இரக்கமும் வெறுப்பும் ஒரே சமயத்தில் அவருள் தோன்றி அலைக்கழிக்க, அவரது முகம் அதனை முழுவதுமாகவே பிரதிபலித்தது. அந்த நிலையிலும் கூட அவரால்

அங்கிருந்து அகல முடியாததை வஹிதா கவனிக்கவே செய்தாள். யாராவது வந்து தன்னை இந்த அசிங்கத்திலிருந்து காப்பாற்றி அழைத்துச் சென்றுவிட மாட்டார்களா என்கிற தவிப்பு அவளுள் எழுந்தது. அவளது தவிப்பை உணர்ந்தவராக இன்னும்கூட மிச்சமிருந்த தனது ஆசைகளையும் அவளிடம் சொல்லி மகிழ்ந்து கொள்ள வேண்டிய விஷயங்களையும் தனது தளர்ந்த நடையில் சுமந்தபடி வெளியேறினார் சையது. அவர் நடந்து செல்லும் போது ஏனோ அவளுக்குப் பரிதாபமாக இருந்தது.

# 49

தூக்கம் வராத பாதி இரவில், தனது அறைக்கு வெளியே இருந்த மொட்டைமாடியில் நின்று இலக்கில்லாமல் தெருவை வெறித்துக்கொண்டிருந்தாள் வஹிதா. தெரு அகலம் குறைவானதாயிருந்தது. சபியாவின் வீட்டை ஒட்டி மிக நெருக்கத்தில் மேற்கு நோக்கிக் கம்பீரமாக நிற்கிறது இஸ்மாயில் நன்னாவின் மச்சு வீடு. கட்டி ஐம்பது வருடமாவது ஆகி இருந்தாலும் பழமை ஏறாமல் புதுமையான தோற்றத்தைக் கொண்டிருந்தது. முகப்பிலும் மாடி வராந்தாவிலும் மரத்தாலான வேலைப்பாடுகளும் பெயிண்டிங்களும் செய்யப்பட்டிருக்கும். வீடு முழுக்கத் தரைக்குப் பளிங்கு பதித்திருப்பார்கள். சபியா குப்பி அந்த வீட்டை மிஞ்சியதாகத் தன் வீடு இருக்க வேண்டும் என்ற போட்டியில்தான் இந்த வீட்டைக் கட்டியதாக அம்மா சொன்னது ஞாபகம் வந்தது. பெரியதாக இருந்தாலும் அந்த வீட்டிலிருந்த அழகும் கம்பீரமும் ஏனோ இந்த வீட்டில் இல்லை. அம்மா சொல்வாள், “வீட்டுல என்னா இருக்குது, வீட்டுக்குள்ள இருக்குறவுக கையிலயில்ல இருக்குது” என்று. மறுபடியும் தெருவின் மீது பார்வையைப் பதித்தாள் வஹிதா. தெருவின் அமைதி அச்சமூட்டக் கூடியதாக இருந்தது. இந்த இரண்டு மச்சு வீடுகளைத் தவிர தெருவில் மற்றதெல்லாமே சின்னச் சின்ன வீடுகள்தான். இருள் விழுந்து கிடந்த தெருவையே கண் சிமிட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த வஹிதாவுக்கு ஒரு கணம் அதிர்ச்சியில் உயிர் போய் விடும் போலிருந்தது.

அவள் தன் கண்களின் மீதே நம்பிக்கையில்லாமல், ஒரு நிமிடம் கண்களைத் தேய்த்து விட்டு மறுபடி உற்றுக் கவனித்தாள். நிச்சயமாக

அது பிர்தவ்ஸின் உருவம்தான். அவள் எதற்காக எதிர்வீட்டுக்குள் போகிறாள், அதுவும் பாதி இரவில்? அவளுக்குப் புரியாமல் போய்விடாதபடி காரணம் தெளிவாகவே விளங்கிற்று. வறண்ட தொண்டையை நனைக்க எச்சிலைக் கூட்டி விழுங்கினாள், எதையோ ஜீரணிக்க முயற்சிப்பதுபோல. இத்தனை நேரமும் தன்னைப்பற்றிய நினைப்பிலேயே ஆழ்ந்து போய் அழுது கொண்டிருந்த தனக்குள் திடீரென ஏதோ ஒரு ஆர்வம் துளிர்ப்பதை உணர்ந்தாள். அந்த ஆர்வம் தன்னைப்பற்றின சிந்தனைகளிலிருந்து தன்னை முற்றிலுமாக விலக்கி வைத்துவிட்டு, பிர்தவ்ஸின் மீது படர்ந்து விட்டிருக்க, வியப்பும் அடர்த்தியான கோபமும் படர்ந்தது அவளுக்குள்.

"ச்சீ! என்ன பொம்பளை இவள்?" என்று ஒருதரம் தனக்குள்ளாகவே முனகிக் கொண்டாள். "எப்படி இதற்கெல்லாம் மனம் வருகிறது" என்று நினைத்து அதிருப்தியுற்றவள் திடீரென, தனக்கு ஏன் இத்தனை கோபம் வருகிறது என்று யோசித்தாள். தனது கோபம் வயதுக்கு மீறிய ஒன்றாக அவளுக்குத் தோன்றிற்று. பிர்தவ்ஸ் செய்வது தவறு என யோசிக்குமளவுக்குத் தான் விபரம் தெரிந்தவளாக ஆகிவிட்டோமா என்கிற கேள்வி அவளுள் எழுந்தது.

அவள் இருளின் நிசப்தத்தினூடே தலையை அங்குமிங்குமாகத் திருப்பித் தெருவை உற்றுப் பார்த்தாள். தெரு வழக்கத்தைவிட அமைதியாக இருப்பது போலத் தோன்றியது. அதுகூட தன்னுடைய நினைப்பாக இருக்கலாம் என நினைத்துக் கொண்டாள். இன்று அமாவாசை போல. அதுதான் வானத்தில் நிலவும் இல்லை என எண்ணியவள் பிர்தவ்ஸ், சிவாவின் வீட்டுக்குள் நுழைந்ததைத் தன்னைத் தவிர யாரும் பார்த்திருப்பார்களோவென சந்தேகம் கொண்டாள். யாரும் பார்த்திருக்க வாய்ப்பிருக்காது என்கிற உறுதி தோன்றியவுடன், ஏனோ மனம் நிம்மதியடைந்தது. சிக்கந்தர்

அவளிடமிருந்து வழக்கம்போலத் தனது தேவைகளை முடித்துவிட்டு நன்றாக தூங்கிக் கொண்டிருந்தான். அவனது குறட்டையொலி தூங்கவிடாமல் செய்ததனால்தான் அறையை விட்டு வெளியே வந்து பக்கவாட்டிலிருந்த மொட்டைமாடியில் நின்று கொண்டிருந்தாள். அவளுக்குத் தூங்கும் பொழுது துளியளவுகூட சத்தமிருக்கக் கூடாது. அவளால் தூங்க முடியாமல் ஆகிவிடும். திருமணத்திற்கு முன்பென்றால் அவள் தனி அறையில் தன் சவுகரியத்தை ஒட்டி படுத்துக்கொள்ளலாம். இனி அப்படி முடியுமா என்ன? இந்த ஓசைக்குத் தன்னைப் பழக்கிக் கொள்ள வேண்டியதுதான் என்று நினைக்கையிலேயே மனம் கசப்புணர்வில் நிரம்பிற்று.

ஒரு தடவை நன்னி வீட்டிலிருந்துவிட்டு வீட்டிற்கு வந்த சமயத்தில் அம்மா கெஞ்சினாள், "இன்னைக்கு இங்க வந்து என்கூட அத்தாகூட படுத்துக்கலாம் வா" என்று. அவள் பிடிவாதமாக மறுத்து விட்டாள். "வேணாம்மா, தூங்கறப்போ பாவாடை தாவணி பிசகும்." இரவில் வஹிதா தூங்கும்பொழுது அம்மா பலமுறை மகளருகில் வந்து நின்று கவனித்துப் பார்த்துக் கொண்டிருப்பாள். இரவு எந்த நிலையில் படுத்தாளோ அதே நிலையில்தான் அதி காலைவரை படுத்திருப்பாள். முதல் நாள் மாலை சீவிப்பின்னிய முடியில் ஒரு துளி கசங்கியிருக்காது. அதே மாதிரி படுக்கையும்! அப்பொழுதுதான் விரித்தது போல இருக்கும். கணுக்காலுக்குக் கீழாக மூடிய பாவாடையும் மார்பை மூடி இழுத்துச் சொருகிய தாவணியும் துளியும் விலகாமல். அம்மா சமயத்தில் பிரியமாகக் கடிந்துகொள்வாள். "என்ன பொம்பளப் பிள்ளை நீ, கை கால அசைச்சு தூங்குனா என்ன, ராத்திரியில ஒருதடவை முழிச்சு ஒண்ணுக்குப் போகமாட்டே? இப்பிடி ஒரே நிலையில படுத்திருந்தா எப்பிடி ரத்த ஓட்டம் இருக்கும்? அதுதான் அடிக்கடி கழுத்துல சுளுக்குவேற விழுந்துக்கிருது" என்று.

*வஹிதா தங்களோடு படுக்க வர மறுக்கும் காரணம் உண்மையில்லை என்று அம்மாவுக்குப் புரியும். அத்தா இரவெல்லாம் பலமாகக் குறட்டை விடுவார். வஹிதா பலமுறை அம்மாவிடம் சொல்வாள். "எப்பிடிம்மா இந்தச் சத்தத்துல தூங்குறீங்க. நானா இருந்தா ஒரு நிமிஷம்கூட இருக்கமாட்டேன்."*

*விரக்தியாகச் சிரித்துக் கொண்டவளுக்கு மறுபடியும் பிர்தவ்ஸின் மீது ஞாபகம் திரும்பிற்று. எவ்வளவு பெரிய ஊக்கக்காரி என்று மனதினுள் பொருமிக் கொண்டாள். என்ன தைரியம் இருந்தால் இப்படிச் செய்வாள்? என்ன இருந்தாலும் அவள் இப்படிச் செய்வது சரியேயில்லை என்று கோபமும் ஆத்திரமும் உள்ளுக்குள் போட்டியிடுகிறது அவளுக்கு! அதோடு தன்னுள்ளாக ஒரு பரபரப்பு உண்டாகியிருப்பதையும் உணர்ந்தாள். இந்நேரத்தில் சொஹ்ராவின் நினைவு வந்தது அவளுக்கு. இவ்விஷயம் சித்திக்குத் தெரிந்தால் என்னவாகும் எனத் தன் கற்பனைக்கு எட்டியவாறு யோசித்தாள். நிச்சயமாக அவள் கொலைகாரியாக மாறுவாள் என்பதில் இவளுக்குச் சந்தேகம் வரவில்லை. உடனேயே அவளைப் பார்த்து இவ்விஷயத்தைச் சொல்ல வேண்டுமென்கிற ஆர்வம் வஹிதாவுக்கு வெறியாக மாறியது. தனக்கிருக்கும் வேகத்தில் சிக்கந்தரை எழுப்பிக் காட்டிக் கொடுத்துவிடுவோமோ என்கிற பயம் திடுமென எழுந்து அவளது தடுமாற்றத்தைக் குறைத்தது. என்ன ஆயிற்று, ஏன் இத்தனை தூரம் உணர்ச்சிவசப்படுகிறோம் என்று தன்னையே கடிந்து கொள்ள முற்பட்டவள், பதற்றத்திலும் பரபரப்பிலும் முட்டாள்தனமாக எதையும் செய்து அவர்களைக் காட்டிக் கொடுத்து மிகப்பெரிய ஆபத்தை விளைவித்துவிடுவோமோ என்று கவலையுற்றாள்.*

*இவ்விஷயம் வெளியில் தெரிவதன் மூலம் என்னவெல்லாம் நடக்கும் என்கிற பயம் முன் எச்சரிக்கையோடு அவளை இருக்க வைத்தது*

என்றாலும், அவளால் சகித்துக் கொள்ளமுடியாமல் ஆகி உடம்பும் மனமும் ஒரு சேரக் கொதிப்புற்றது. அவள் தன் வலது கையை உயர்த்தி தனது நெற்றியையும் கழுத்தையும் தொட்டுப் பார்த்தாள். அவள் நினைத்தது போலல்லாமல் உடல் ஜில்லிட்டிருந்தது. வீணான கற்பனையென ஒதுக்கித் தள்ளிவிட்டு மறுபடி தெருவையும் சிவாவின் வீட்டு வாசல்படியையும் உற்றுப்பார்த்தாள்.

இருள் கனத்துக்கிடந்த அரவமில்லாத தெரு பயம் கொள்ளச் செய்வதாகயிருந்தது. தெரு முனையிலிருந்த தெருக்குழாயடியை ஒட்டி எதையோ அசைபோட்டபடி செவலை மாடு ஒன்று நின்று கொண்டிருந்தது. அதன் மூத்திர வாடை நாசியைத் தொட்டுப் போயிற்று. யார் வீட்டு மாடாக இருக்கும் என்று யோசித்தவள் பணியாரக்கார சைத்தூன் வீட்டு மாடாகத்தானிருக்கும் என்று நினைத்துக் கொண்டாள். ஊர் முழுக்க எருமை மாடுதான், சைத்தூன் வீட்டைத் தவிர. சபியா, சைத்தூனிடம்தான் பால் வாங்குவாள். சைத்தூன், சபியா வீட்டுக்கு வந்தாளென்றால் தன் மாட்டின் அறிவைப் பற்றியே பொழுதிற்கும் பேசித் தீர்ப்பாள். ஒரு தாய் தன் குழந்தையின் புத்திசாலித்தனத்தைப் புகழ்வது மாதிரி! அவள் போனதும் வஹிதாவிடம், “ஒரு நோனி மாட்ட வச்சுக்கிட்டு நல்லாத்தே திரியுறா பொகந்துக்கிட்டு” என்று சலித்துக் கொள்வாள் சபியா.

இன்றைக்கு ஏன் சைத்தூன் மாட்டை வீட்டுக் கொட்டத்தில் கட்டாமல் தெருவில் திரிய விட்டிருக்கிறாள் என்ற கேள்வி வஹிதாவின் மனதிற்குள் எழுந்தது. மாட்டைத் தேடி சைத்தூன் வருவாளோ என்ற கவலையோடு, வர வேண்டும் என்கிற நப்பாசையும் சேர்ந்தே உண்டாயிற்று.

பிர்தவ்ஸ் இன்னும் வெளியில் வரவில்லை. திடுமென அவள் எதிரில்

போய் நின்று கையும் களவுமாகப் பிடித்துக் காறித்துப்பினால் தேவலை என நினைத்தவளின் மனம், துப்பாவிட்டாலும் எனக்கு உன் யோக்கியதை தெரியும் என்று காட்டிவிட்டு வந்தால்தான் நிம்மதியடையும் என்றாகி விட்டிருந்தது. அவள் அதற்கும் மேலாக இதுபற்றி யோசிக்க விரும்பவில்லை. அதற்கான சிறு அவகாசமும் கூட அவளுக்கு வேண்டியிருக்கவில்லை. அந்த அவகாசம் தன்னை எப்படியாவது தடுத்து நிறுத்திவிடுமோ என்கிற பயம் அவளை யோசிக்கவிடாமல் துரத்திற்று. அவள் மெதுவாகப் பின்பக்க வாசல்படி வழியே தோட்டத்தில் இறங்கி, கொல்லைப்புறக் கதவை ஓசை எழாதபடி திறந்து, வேகமாகவும் சத்தமில்லாமலும் நடந்து தெருவின் முன்பக்கத்தை அடைந்தாள். தன்னை யாரும் பார்க்கிறார்களா என்கிற சிறு கவனத்தோடு, விடுவிடுவென நடந்து சிவாவின் வீட்டுக் கதவை மெதுவாகத் தள்ளித் திறந்து பார்த்தாள். தாளிடப்படாத கதவு சத்தமில்லாமல் திறந்து கொள்ள, கொஞ்சம் கூட தயக்கமோ பயமோ இல்லாமல் முன்கூடத்தில் நுழைந்தாள். கூடம் முழுக்க நிரம்பியிருந்த இரவு விளக்கின் மஞ்சள் ஒளி பார்வையைத் தெளிவு பெறச் செய்வதாகயிருந்தது. கட்டுப்படுத்தவியலாத ஆர்வத்தினால் படபடத்த இதயத்தோடு நீண்டு கிடந்த கூடம் முழுக்கப் பார்வையை ஓட்டியவளின் கண்கள் திறந்திருந்த பக்கவாட்டு அறையின் மீது நிலைத்தது.

அங்கே சிவாவும் பிர்தவ்ஸும் இருந்த காட்சி திகைப்புறச் செய்யக் கூடியதாயிருக்க ஒரு நொடி நின்றவள், மறுநிமிடமே தன் நினைவுக்கு வந்து தன்னையும் அறியாதபடி, “த்தூ! நீ ஒரு பொம்பளையா?” என்று காறித்துப்பினாள். தம் நிலையிலிருந்து திடுக்கிட்டு விலகிய சிவாவும் பிர்தவ்ஸும் தம்மை நோக்கியபடி நின்று கொண்டிருக்கும் வஹிதாவைப் பார்த்து ஏதும் புரியாமல் நிலை தடுமாறிச் சுவரோடு

ஒண்டிக் கொள்ள முயற்சித்தனர். தங்களது நிலை குறித்த வெட்கம் மோசமாக அவர்களைக் கூனிக் குறுகச் செய்திருக்க, வஹிதா திரும்பிப்பாராமல் வீட்டைவிட்டு வெளியேறி இருளினூடேயே பிர்தவ்ஸ் வீட்டின் திறந்திருந்த வாசல் கதவு வழியே நுழைந்து கல்வாசலில் போய் நின்று கொண்டாள், பிர்தவ்ஸின் வருகையை எதிர் நோக்கியபடி!

பரந்திருந்த வாசலில் அடர்ந்து மண்டியிருந்த இருள் அவளைத் துளிக்கூட பயமுறுத்தவில்லை. ஆவேசம் கொண்டதுபோல உடல் துடித்துக் கொண்டிருந்தது. தான் செய்தது சரியா, தவறா எனக் கணிக்க முடியாத நிலையில் அவள் இருந்தாள். அமைதியாக நின்று நிதானித்துச் சுவாசிக்க முயன்றாள்.

மறுபடி நிதானித்துப் பார்க்கையில் தான் அவர்களை, அவர்களது உறவைப் பாதியில் கலைத்துவிட்டு வந்ததும் அவர்களது நிலையைத் தான் வலுக்கட்டாயமாகப் பார்த்ததும் எப்படி நியாயமாகும் என்கிற கேள்வி தன்னைத் தொடர்ந்து வந்துகொண்டிருப்பதாக உணர்ந்தாள். அதனைத் தவிர்க்க வேண்டிய கட்டாயத்தினையும் உணர்ந்தவளாக, தன்னைச் சுற்றிலுமிருந்த பரந்த வாசலையும் எட்டியிருந்த தோட்டத்து மரங்களையும் உற்றுப் பார்க்கத் தலைப்பட்டாள். அசைவில்லாத மரங்களின் கீழே இருள் சற்று அதிகமாகவே குவிந்து கிடந்தது. ஒரு ஓரத்தில் கவிழ்த்து வைக்கப்பட்டிருந்த கூடைக்குள்ளாக இருந்த கோழி கக்கக் எனச் சிறிதாகச் சத்தமெழுப்புவது வஹிதாவின் காதில் விழுந்தது. அவள் தலையை உயர்த்தி ஒரு தரம் தன் வீட்டு மொட்டை மாடியைப் பார்த்துக் கொண்டாள், யாரும் நிற்கிறார்களா என்கிற அச்சத்துடன் அவளது மெலிந்த உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

பிர்தவ்ஸ் வரும் காலடிச் சத்தம் மெலிதாகக் கேட்க, அவளை எதிர்நோக்கி நேராக நின்று கொண்டிருந்தாள் வஹிதா.

பதற்றத்துடனும் பயத்துடனும் வந்து வீட்டுக்குள் நுழைந்த பிர்தவ்ஸ் அவளை அங்கு எதிர்பார்க்கவில்லை. ஒரு நிமிடம் அப்படியே திகைத்துப் போய் நின்றாள். என்றாலும், அவள் முகத்தில் துளியும் சலனங்களில்லை என்பதை அங்கிருந்த மெல்லிய வெளிச்சத்தினூடாக வஹிதாவால் பார்க்க முடிந்தது. என்ன என்பது போல வஹிதாவை நேருக்கு நேராக நின்று பார்த்தபடியிருந்த பிர்தவ்ஸைப் பார்த்து இவளுக்குத்தான் உடல் நடுங்கிற்று. எப்படி இவளால் எந்த ஒரு பயமும் இல்லாமல் தன் முன்னால் நிற்க முடிகிறது என்கிற ஆச்சர்யமும் தன்னிடத்தில் ஒரு சமாதான முயற்சிகூட செய்யாதபடிக்கு அவள் நின்று கொண்டிருப்பதும் பெரும் குழப்பத்தை உண்டாக்க, என்ன பேசுவது எனத்தெரியாமல் வாயடைத்துப் போய் நின்றாள் வஹிதா.

நடுக்கமோ, தடுமாற்றமோ அற்ற தெளிவான குரலில் அலட்சியமான தோரணையில் பிர்தவ்ஸ் கேட்டாள். “பாத்தே இல்ல? இப்ப என்னத்துக்கு இங்க வேற வந்து நின்னுக்கிட்டு இருக்கே?” அவள் குரலிலிருந்த தெளிவில் வஹிதா தன் நினைப்புகள் அனைத்துமே நொறுங்கிப் போனதுபோல் உணர்ந்தாள். தன்னிடத்தில் மன்றாடுவாள், அழுவாள், யாரிடமும் சொல்ல வேண்டாமெனக் கெஞ்சுவாள் என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருந் தவளுக்கு அவள் கேட்ட விதமும் நிற்கும் தோரணையும் இன்னும் கூட குழப்பத்தை அதிகப்படுத்த ஒன்றும் புரியாமல் விழித்தவள், சிறிது நேர யோசனைக்குப் பிறகு, தன் மனதிலிருந்த ஆத்திரத்தை முழுவதுமாக வெளிப்படுத்தும் விதத்தில் குரலை உயர்த்தி. “ஒனக்கு வெக்கமாயில்ல?” என்றாள். அவளுக்குத் தன் கோபத்தை முழுவதுமாக காட்ட வேண்டியிருந்தது. அதனால் முடிந்த வரைக்கும் தன் குரலை உயர்த்தியே சொன்னாள்.

பிர்தவ்ஸ் அமைதியாகச் சொன்னாள் “தயவு செய்து நீ இங்கேருந்து

போயிரு, என்னைத் துன்புறுத்தாம." அவள் குரலில் விரக்தி மண்டிக்கிடந்தது. அம்மா எழுந்துவிடக்கூடுமென்கிற பயம் வேறு அதிகமாகி இருக்க, இவளை இங்கிருந்து உடனே அனுப்பியாக வேண்டுமென்கிற கட்டாயத்திலிருந்தாள் அவள். வஹிதா அங்கிருந்து போவதற்காக எந்த முயற்சியும் செய்யாமல் மறுபடியும் கேட்டாள், "ஒனக்கு எவ்வளவு தைரியம், நீ ஒரு பொம்பளையா . . .?" அதற்கு மேல் சொல்ல அவளுக்கு வாய் வராததால் பாதியிலேயே நிறுத்திக் கொண்டாள்.

பிர்தவ்ஸ் ஒன்றும் சொல்ல விரும்பாதவள் போல அமைதியாக இருந்தாள். அவளது அமைதி வஹிதாவுக்கு எரிச்சலை உண்டு பண்ணிற்று. அவள் நிற்பது இவளை மதித்துப் பதில் சொல்வதா என்கிற மாதிரியிருந்தது. அவள் தன்னை அவமதிப்பது போலவும் இருந்தது. திடீரெனத் தனக்குள்ளிருந்த சிறு பிள்ளைத்தனம் வெளிப்படும் விதமாக, "விடியட்டும், ஒன்னைப் பத்தி சித்திகிட்டச் சொல்லி வைக்கிறேன்" என்றாள்.

பிர்தவ்ஸ் தன்னளவில் அதுகுறித்து ஒரு எதிர்ப்பையோ, பயத்தையோ காட்டாதபடிக்கு முணுமுணுத்தாள். "சீக்கிரம் இங்கிருந்து போயிரு" என்றபடி முற்றத்து கல்வாசலைக் கடந்து சென்றுவிடும் நோக்கத்தில் முன்னோக்கி நகர்ந்தாள். "போக முடியாது. என்னா செய்யப்போற?" என்ற வஹிதாவின் குரலில் திடீரெனக் கடுமை கூடிப்போயிருந்தது. உடம்பெங்கிலும் உஷ்ணம் பரவி ரத்தம் கொதிப்பது போன்ற உணர்வு மேலிட கால்களிலும் குரலிலும் நடுக்கம் ஓடிக்கொண்டிருந்தது.

அவளது குரலின் கடுமை பிர்தவ்ஸின் கால்களை நகரவிடாமல் பின்னிழுக்க எச்சரிக்கை செய்யும் விதத்தில் சொன்னாள். "நீ போகலைன்னா மோசமான வெளைவைச் சந்திக்க வேண்டீருக்கும்.

சொல்லிட்டேன்.”

“நான் ஒண்ணும் போகப் போறதில்ல, ஒன்னோட யோக்கியதைய வெளில சொல்லாம! விடியட்டும்” என்று கறுவிய வஹிதாவின் உடல் அவளது எச்சரிக்கைக்குப் பதிலடி கொடுத்துவிட்ட திருப்தியில் மெதுவாக ஆசுவாசம் கொள்ளத் துவங்கிற்று.

அவர்களுக்கிடையே ஊடுருவியிருந்த இருளும் காற்றும் காற்றிலிருந்த ஈரப்பதமும் அந்நேரத்து வாக்குவாதத்தின் கடுமையைச் சிறிதளவேனும் கட்டுப்படுத்தத் துணையாக இருந்தன. முகங்களில் வழியும் மொத்த உணர்வுகளையும் ஒருவருக்கொருவர் பார்க்காமலிருந்ததும் கூட நல்லதுக்காகத்தானோ என்று நினைத்துக் கொண்டாள் வஹிதா. அப்பொழுதுதான் தனது மிரட்டல் பிர்தவ்ஸை தயங்க வைத்ததைக் கவனித்தவளுக்குத் திடீரெனத் தான் வெற்றி பெற்றதாக ஒரு எண்ணம் மேலோங்கிற்று. அவளைத் தனது மிரட்டலுக்கு அடிபணியச் செய்து விட்டதான நம்பிக்கை பெரிதாக அமைதிபெறச் செய்திருந்தது. தன்னிடமிருந்த துவேசமும் ஆத்திரமும் அப்படியே புகையெனத் தன்னிலிருந்து பிரிந்து வெளியேறுவதைப் போல உணர்ந்தாள். இத்தனை நேரமும் தன்னை ஆட்டிப்படைத்த வெறுப்பில் ஒருதுளிகூட தன்னிடம் மிச்சமில்லாமல் குறைந்து போய்விட்டது எப்படி என்று புரியாமல் எது தன்னை இத்தனைச் சாதுவாக்கிற்று என்று யோசிக்க முற்பட்டவள், ஒன்றும் பிடிபடாமல் பிர்தவ்ஸை நோக்கி நிமிர்ந்தாள். அவள் பேரில் திடீரென பிரியமும் பரிதாபமும் தன்னுள்ளாகக் கிளைத்து மேலோங்கிக் கொண்டிருப்பதை அறிந்து வியப்புற்றாள். அவ்வியப்பு அவளை மறுபடி குழப்பமுறச் செய்தது. திடீரெனத் தான் இங்கு வந்து நின்று கொண்டிருப்பதன் காரணம், பெரும் வெட்கத்தை உண்டு பண்ண அங்கிருந்து உடனே வெளியேறிச் சென்றுவிட எத்தனித்தவள் இருளில்

செய்வதறியாமல் தன் திசையறிய பெரும் பிரயத்தனம் கொண்டாள்.

சற்று நேர மௌனத்திற்குப்பின் பிர்தவ்ஸ் இவளிடம் என்னவோ சொல்ல முயல்வது போல இவள் வழியை மறித்து நின்று தனது வளையல்களற்ற வெண்ணிறக் கையை உயர்த்தி மிக நிதானமாகச் சொன்னாள். “என்ன சொன்ன? என்னோட யோக்யதையப் பத்தியா? அத வெளியே சொல்றதுக்கு முன்னால ஒங்கம்மாவோட யோக்யத என்னாங்கறத, உங்க சச்சாகிட்ட கேட்டுக்கோ.” அழுத்தம் திருத்தமாகச் சொன்னவள் விடுவிடென நடந்து கல்வாசலைக் கடந்து சாத்திக்கிடந்த ஹால் கதவைச் சத்தமின்றித் திறந்து உள்ளே போய் கதவைத் தாளிட்டாள்.

தனித்து விடப்பட்டிருந்த வஹிதா தான் ஒரு அத்துவானக் காட்டில் நின்று கொண்டிருப்பது போன்ற தனிமையை உணர்ந்தாள். தன்மீது வீசப்பட்ட வார்த்தைகளிலிருந்த செய்தி பெரும் குழப்பத்தை அவளிடத்தில் கொண்டு வந்து சேர்த்திருந்தது. இதுகாலம்வரை தான் அனுபவித்திராத ஓர் உணர்வு ஒட்டு மொத்தமாக அவளிடத்தில் கவிந்து கொள்ள, விடியலின் முதல் ஒளியை எதிர்நோக்கிய துயரத்துடன் கனத்துக் கிடந்த கால்களைத் தன் வீட்டை நோக்கி இழுத்து நகர்த்தத் துவங்கினாள்.

# 50

பிர்தவ்ஸுக்கு மயக்கமாக இருந்தது. எழுந்து நிற்கமுடியாத நிலையில் அப்படியே படுக்கையில் சாய்ந்து தனக்குள்ளாக ஒடுங்கிக் கொண்டிருந்தாள். தலையணையிலிருந்து மருதாணிப் பூவின் வாசம் எண்ணெய்ப் பிசுக்கோடு சேர்ந்து வந்து நாசியில் ஊடுருவிற்று. அவளது சிவந்த நீளமான விரல்கள் தலையணை உறையின் குஞ்சங்களைத்தொட்டு இதமாக வருடிக் கொண்டிருக்க அவளுக்குத் தனது குழந்தைப்பருவம் நினைவு வந்தது.

அப்பொழுதெல்லாம் அவள் எந்நேரமும் வலது கைக் கட்டை விரலைச் சூப்பியபடிதான் தூங்குவாள். அந்தப் பழக்கத்தை நிறுத்த ஆமினா எவ்வளவோ முயற்சி செய்திருக்கிறாள். சொஹ்ராவும் அவளும் மாற்றி மாற்றி இரவுகளில் கண்காணித்தபடியிருப்பார்கள். படுக்கும்போது மொத்த விரல்களையும் ஒரு துணியினால் சேர்த்துச் சுற்றிக் கட்டி வைப்பார்கள். காலையில் ஒரு விரல் மட்டும் எப்படியோ வெளியில் வந்திருக்கும். இன்னொரு நாள் வேப்பெண்ணெய் தடவித் தூங்க வைப்பார்கள். அதன் சுவை பிடிக்காமல் இவள் அழும்போது, சொஹ்ரா சொல்வாள், "அடி கிறுக்குப் பொம்பள, நீ இம்புட்டு அழகா இருக்கயில்ல? இப்பிடி கை சூப்பினியன்னா, அப்புறம் ஒன் பல்லும் மேலுதடும் தூக்கிக்கும். அப்புறம் நீ அசிங்கமான பொம்பளையாப் போயிருவ, ஒன்னைய ஒருத்தனும் கட்டிக்கவே மாட்டான்" என்று. அவள் குரலில் தொனிக்கும் செல்லமும் பிரியமும் இவள் மனதில் இன்னும் கூட தங்கியிருக்க, அவளுக்கு உடனே தன் குழந்தைப்பருவத்திற்குத் திரும்பிப்போய் விட வேண்டும் போலிருந்தது.

அம்மாதான் தன் அழகை எப்படியெல்லாம் பொத்தி பொத்திப்

பார்ப்பாள். வாரத்திற்கு எத்தனை முறை திருஷ்டி கழித்துப் போடுவாள். வீட்டிற்கு எந்தப் பெண்கள் வந்தாலும் லேசில் இவளை அவர்களுக்கு முன் வந்து நிற்கவிட மாட்டாளே. “ஏம்மா இப்பிடி என்னையைப் பொம்பளைக முன்னாலயும் ஒளிச்சு வைக்கிற?” என்று இவள் செல்லமாகச் சிணுங்கும் பொழுது சொல்வாள், “ஆமடி, அவ பாட்டுக்குப் பாத்துட்டு வாயைப் பொளந்துட்டுப் போயிருவா, அப்புறம் நான் மெனக்கெட்டு ஒனக்குச் சுத்திப்போடணும்.” அவள் அலுத்துக் கொள்வது போலிருந்தாலும் அதில் பெருமிதம் நிரம்பி வழியும். அவளுக்குத் துக்கத்தில் தொண்டை அடைத்தது. இன்று இவர்கள் எல்லாம் எங்கே போய்விட்டார்கள். அவர்களுடைய பிரியமெல்லாம் எப்படிக் காணாமல் போயிற்று. அன்பு கூட நீர்த்துப்போய் விடுமா என்ன? அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை. அம்மா தன் மீது கோபம் கொள்வதாவது இருக்கட்டும் சொஹ்ராவும் எப்படித் தன்னை வெறுத்தொதுக்குகிறாள், எப்படி அவளால் என்னைப் புறக்கணிக்க முடிந்தது? அத்தனை வெறுப்புண்டாகும்படி தான் அப்படி என்ன மோசமான ஒன்றைச் செய்து விட்டோமெனக் குழம்பினாள். என்றைக்கும் போலவே இன்றும் இக்கேள்விகளுக்கு அவளால் விடை காணமுடியவில்லை.

வயிற்றில், நெஞ்சில் லேசான எரிச்சல் உண்டாயிற்று. சாவின் முடிச்சை அவிழ்த்து விட்டிருந்தாள் அவள். தன்னை இந்த உலகிலிருந்து வெளியேற்ற எல்லோருமே ஆர்வமாகக் காத்துக்கொண்டிருப்பதாக ஒரு எண்ணம் வலுவாக மனதில் உண்டாயிற்று. அவளுக்கு வாய்விட்டு அழவேண்டும்போல ஒரு துயரம் உண்டாகி அடங்கிற்று. தனக்குத்தான் இந்த வாழ்வின் மீது எத்தனை ஆசை. இதை இழந்துவிட அவள் எப்பொழுதும் நினைத்ததேயில்லை. அத்தனை ஆசை அவளுக்கு இந்த உலகின்மீதிருந்தது. என்ன துன்பம்

நேர்ந்தாலும் நினைத்துக்கொள்வாள். எதுக்காக சாகணும்? அவளுக்கு தன் பீரோவிலிருந்த விதவிதமான தோடு, வளையல், புடவை இவைகளை எல்லாம் விட்டுவிட்டுச் சாகப்போகிறோமா என்றிருந்தது. அவைகளை எடுத்து ஒரு முறை அணிந்து ஆசை பார்க்க வேண்டுமென்கிற ஆர்வம் உண்டாயிற்று. எழுந்து கொள்ளக் கூட இயலாது என்கிற மாதிரி உடல் நைந்து கிடந்தது.

அவளுக்கு சிவாவின் ஞாபகம் வந்தது. அவனை இனி எப்பொழுதுமே தன்னால் பார்க்க முடியாது என்பது புரிய, இதுவரைக்கும் சாவு உண்டாக்கிக் கொண்டிருந்த பயம் ரொம்பவும் அதிகமாகி உடலை நடுங்கச் செய்தது.

தான் இதுவரைக்கும் இழந்த எல்லாவற்றையும்விட இப்பொழுது இந்த நிமிடம் செத்துக்கொண்டிருக்கும் நிலையிலும் கூட அவளுக்கு சிவாவை விட்டுவிட்டுப் போகப்போகிறோம் என்பதை நினைத்தால்தான் தாங்கிக்கொள்ள இயலாத துயரம் கொப்பளித்தது. அவனை இனி எப்பொழுதுமே பார்க்க முடியாது என்ற நிலைதான் அவள் இந்த வாழ்வை முடித்துக்கொள்ளவே தூண்டிற்று. அவள் இந்த உலகின் மீது, இந்த வாழ்க்கையின் மீது வைத்திருந்த ஆசைகள் எல்லாவற்றையும் முடித்துக்கொள்ள அவனை இனி பார்க்க முடியாது என்கிற ஒரு உண்மைதான் காரணம் என்பதும் அவனை எத்தனை தீவிரமாக விரும்பினோம் எனவும் நினைத்துக் கொண்டாள்.

அவளுக்குள் அழுகை முன்னும் பின்னும் அடைத்தது. யாருமே இல்லாத ஒரு அனாதையாகப் போய்விட்டோமே என்பதைவிட, ஒரு நிராதரவான நிலையில் இங்கிருந்து தான் துரத்தப்படுவதன் நிஜம் அவளைச் சாகத் தூண்டியதாக உணர்ந்தாள். இத்தனை பெரிய உலகத்தில் தனக்கு மட்டும் ஏன் இடமில்லாமல் போக வேண்டும்? தன் காதல் யாரை எப்படித் துன்புறுத்திற்று என்று மறுபடி மறுபடி கேட்டுப்

பார்த்துவிட்டுப் பதில் தெரியாமல் ஓய்ந்து விட்டாள்.

அவளுக்குத் திடீரென வஹிதாவின் நினைவு வந்தது. அவளைத் தான் அதிகமாகவே தண்டனைக்குள்ளாக்கி விட்டதாக உணர்ந்து மனம் நொந்து கொண்டாள். அவள் ஏன் என்னை வந்து வம்பிழுத்தாள்? அதனால்தானே அவளுக்குக் காலம் முழுவதுக்குமான ஒரு வேதனையை நான் உண்டுபண்ணித் தொலைத்தேன் என்று தன்னையே கடிந்து கொண்டவள், இதோடு எத்தனையாவது முறையாக இப்படிக் கடிந்து கொள்கிறோம் என்று எண்ண முயன்றாள்.

எத்தனை முறை கடிந்து என்ன, தன் சகோதரியைப்போல தன்மீது பிரியம் வைத்திருந்த றைமாவுக்கு மிகப்பெரிய துன்பத்தை அல்லவா உண்டு பண்ணியிருக்கிறாள். தான் இந்த உலகத்தை விட்டுப் போய்விட்டாலும் இரண்டு உயிர்களுக்குக் காலமெல்லாம் நரக வேதனையை தரக்கூடிய ஒரு உண்மையை அல்லவா விட்டுப் போகிறாள்.

'யா அல்லா' என அயற்சி மேலிட முணுமுணுத்தவள், இது எப்படி நடந்தது, ஏன் நடந்தது என்று மெலிதாகப் புலம்பினாள். தான் சொன்ன விஷயத்தைத் தன்னாலேயே ஜீரணித்துக்கொள்ள இயலாமல் இருக்க, வஹிதாவின் மனம் எப்படியெல்லாம் கஷ்டப்படும், துயரப்படும் எனக் கற்பனை செய்ய முயன்று தோற்றாள்.

வயிற்றில் எரிச்சல் கூடிக் கொண்டிருப்பதை நிதானமாகக் கணிக்க முயன்றவளின் மனம் மறுபடியும் இன்று காலையில் நிகழ்ந்த சம்பவங்களை நோக்கித் திரும்பிற்று. வஹிதாவுக்கும் தனக்குமிடையே நிகழ்ந்த வாக்குவாதம் விழிக்கச்செய்ய, ஆமினா கோபத்தில் துடித்துக் கொண்டு பாயின் மீது அசையாமல் அமர்ந்திருந்தாள். விடிவிளக்கின் ஒளியில் அவள் அமர்ந்திருந்த நிலையின் உக்கிரம் பிர்தவ்ஸை உலுக்க அப்படியே அசைவற்றுக் கதவோரத்தில் நின்றவள், பெரும்

பாதுகாப்பின்மையினை வந்தடைந்தாள். ஆமினாவின் பார்வை உக்கிரமான சூழலைப்போல அவளைச் சுற்றிச் சுழற்றிற்று.

அவளாலோ, ஆமினாவாலோ அக்கணத்தைத் தாண்டிப் போக முடியவில்லை. அது அப்படி லேசானதாகவுமில்லை. சுவரோரத்தில் ஒடுங்கிப்போய் நின்றாள் பிர்தவ்ஸ். இந்த நிமிடமே தான் கரைந்து ஆவியாகிப் போய்விட்டால் நல்லது என விரும்பினாள். இதுவரை தான் விரும்பிய எதையும் அடைந்ததேயில்லை என்பது, ஏனோ காரணமில்லாமல் அவளது நினைவில் வந்து போயிற்று. ஆமினா அப்புறம் கூட நீண்டநேரம் எதுவும் பேசாமல் இருந்தது இவளைப் பயம் கொள்ளச் செய்தது. அவளுக்கு என்ன ஆயிற்று என்று தொட்டுப் பார்த்து அறிய விரும்பியவள், அவளை நோக்கிச் செல்ல விரும்பினாள்.

பயத்தினாலும் அவமானத்தினாலும் நடுங்கிக் கொண்டிருந்த உடலைத் துளிகூட நகர்த்த முடியாமல் தோற்றுப் போனவள் சுவரோரமாகச் சாய்ந்து தரையில் அமர்ந்தாள். நிலைகுலைந்த நிலையிலேயே தன் தாய் இறந்து போய்விடுவாளோ என்கிற பதற்றமும் குற்றவுணர்வும் அவளுள் நிரம்பி தனது பலத்தையெல்லாம் திரட்டிக் கொள்ளச் செய்ய, வெளிறிய முகத்தில் வழிந்தோடிய கண்ணீரைத் துடைக்க மறந்தவளாக ஒரு குழந்தையைப் போலக் கையூன்றித் தவழ்ந்து அருகில் சென்று “அம்மா” என அவள் தோளைத்தொட்டு லேசாக உலுக்கினாள், பலமாக உலுக்கினால் கூட அவளுக்கு வலிக்குமோ என்கிற மாதிரி. அவள் ஆமினாவின் தோளைத் தொட்டதுதான் தாமதம், மின்னல் வெட்டியதுபோல தூக்கியெறிப்பட்டாள். ஒரு பந்தைப்போலச் சுவரில் மோதி விழுந்தவள் அதிர்ச்சியில் உறைந்திருந்தாள். ஆமினாவின் கைகளுக்கு இப்படியும் பலமிருக்குமா என வியப்பது போன்று அதிர்ந்து போய் சுவரில் மோதிய தலையில் வலி வெட்டி மறைந்ததையும் வெளிக்காட்ட

முடியாமல் விக்கித்துப் போயிருந்தாள். இவளை நெட்டித் தள்ளிய ஆமினா வெறிகொண்ட மிருகமென எழுந்து, அடிவயிற்றிலிருந்து எழுந்த குரலில் கத்தினாள்.

"ஒரு காபிரோட படுக்கிற அளவுக்குப் போயிட்ட! அடி சண்டாளி, நீ என் வயித்திலதான் வந்து பொறந்தியா, அட அல்லாவே" அவள் குரல் வேதனையில் கிரீச்சிட்டது. உடல் காற்றில் ஆடும் துணியென நடுங்கிக் கொண்டிருந்தது. அதன் பிறகு அவள் எதையுமே யோசிக்க முயலாதபடி காரியத்தில் ஈடுபட்டாள். ஒரு டம்ளரில் கரைத்து வைத்திருந்த எலி மருந்தை இவளருகில் கொண்டு வந்து வைத்தவள், தெளிவான குரலில் சொன்னாள்.

"இன்னிக்கு நீ சாகணும்! இல்ல, நான் சாகணும்! கல்லுப்பட்டியில நடந்தது ஞாபகம் இருக்குல்ல, அது மாதிரி ஆகுறதுக்குள்ள." அவள் குரலில் பயமேயில்லாதபடிக்குத் தெளிவிருந்தது. அவள் ஒரு முடிவை நோக்கிச் சென்றுவிட்டாள் என்பதில் பிர்தவ்ஸுக்குச் சந்தேகமே இல்லாமல் இருந்தது. இந்த நிலையிலும் அவள் மனதில் பதுங்கியிருந்த அந்தச் சம்பவம் மனதிற்குள் ஒரு நிமிடம் வந்து போனது. அந்த ஊரில் ஒரு முஸ்லீம் பெண்ணும் இந்துப் பையனும் காதலித்தது வெளியில் தெரிந்து அந்தப் பையனை ஊரைவிட்டு அனுப்பிவிட்டு ஜமா அத்தில் பேசி முடிவு செய்தார்கள், அவளுக்கு அவள் குடும்பத்தாரே விஷம் கொடுத்துக் கொன்றுவிட வேண்டும் என்று. அந்த முடிவை அனைவருமே ஏற்றுக்கொண்டு அவள் தாய் தந்தையே அவளுக்கு விஷம் கொடுத்துத் தற்கொலை செய்து கொள்ள வைத்து, உடனேயே அடக்கம் செய்தும் முடித்து விட்டார்கள். போலீஸ் தெரிந்து கொள்ளக் கூடாது என்பதனால், முன் கூட்டியே குழிவெட்டி வைத்திருந்தார்கள் என்றும் அனைவருக்குமே தெரியும்.

பிர்தவ்ஸ் தன் உயிரின் மீதிருந்த ஆசையில் பிடிவாதமாக மறுத்துத்

தலையசைத்துக் கதறினாள், "முடியாதும்மா, என்னைய விட்டுரும்மா."

அவள் தனது முடிவை வலியுறுத்தி அதிலேயே இன்னும் நின்றுகொண்டிருந்தாள். அவளுக்குத் தெரியும் பிர்தவ்ஸுக்கு இந்த வாழ்க்கையின் மீதிருக்கும் ஆசை. ஆமினாவைப் பொறுத்த வரை இனி இந்த உலகில் வாழ்வதற்கு எந்தத் தகுதியுமில்லை அவளுக்கு. அவள் வாழத்தான் செய்வேன் என்று அடம் பிடித்தால் தன் வாழ்வையாவது முடித்துக் கொள்வதன் மூலம் தான் இந்தக் கேவலத்திலிருந்து தப்ப முடியும் என்றிருந்தது.

பிர்தவ்ஸ் எழுந்து ஓடிவந்து அம்மாவின் கால்களில் விழுந்து அவளது கால்களை இறுகப் பற்றிக் கொண்டாள். அவளை எவ்வகையிலாவது மனம் இரங்கச் செய்து இந்த வாழ்க்கையைத் தொடர்ந்து வாழப் பெரும் வேட்கை கொண்டிருந்தாள் அவள். ஆமினாவின் முகம் ஒரு சலனமுமில்லாமலிருந்தது. அவள் தன் மகளின் உடம்பைத் தொட்டுத் தூக்கவும் முயலவில்லை. அவளைத் தொடுவதன் மூலம் தன் மனதில் வேறு ஒரு நினைவு வந்து தன்னைத் தடுமாறச் செய்து விடுமோ என்கிற பயம் கொண்டவளாகத் தன் தாயைக் கற்பனை செய்தாள் பிர்தவ்ஸ். அவள் எதற்கு இடம்தர மறுக்கிறாளோ, அதற்காக இவள் போராட விரும்பினாள். அவள் இதயத்தில் சிறு துளியேனும் அன்பிருக்குமெனில் அதைப் பற்றிக் கொள்ளும் தவிப்பு அவளுக்கிருந்தது.

இவளது அழுகையை, தவிப்பைக் காதில் வாங்குவதோ, பொருட்படுத்துவதோ அவளுக்கு இரங்கக்கூடிய நிலைக்குத் தன்னைத் தள்ளி விடும் என்கிற பயம் ஆமினாவை உந்தித் தள்ளிற்று. எந்த ஒரு விஷயத்தையும் ஆறப்போடுவது அதனைத் தடுத்து நிறுத்திவிடும் என்கிற தெளிவு அவளிடமிருந்தது. தீர்க்கமான குரலில் மறுபடியும் சொன்னாள், "நீ குடிக்கிறியா, இல்லெ நான் குடிக்கட்டுமா." பிறகு அவளது பதிலை எதிர் பார்க்காமல் ஆவேசம் கொண்டவளாக அந்த

டம்ளரை எடுக்க முயல, ஓடிவந்து தன் தாயின் கைகளைப் பிடித்துத் தடுத்த பிர்தவ்ஸ் ஒரு நொடியும் தாமதிக்காமல் அதை எடுத்துக் குடித்து முடித்தாள். இவளுக்கு இதைவிட்டால் வேறு ஒரு வழியும் தோன்றாமலிருந்தது. மருந்தைக் குடித்து விட்டு வந்து அறைக்குள் படுத்துக் கொண்டாள்.

வயிற்றிலும் தொண்டையிலும் நெருப்பு பிடித்தாற்போல எரியத் தொடங்கியிருந்தது. அவள் தன் வேதனையை மென்று விழுங்கினாள். துளி சத்தம்கூட போடாமல் உயிரைவிடுவதென்கிற வைராக்யம் கொண்டிருந்தாள். அவளுக்கு இன்னும்கூட நம்ப முடியாமலிருந்தது தான் சாகத்தான் போகிறோம் என்பதை. இன்னும்கூட புரியவில்லை சாவை நோக்கித் தான் ஏன் துரத்தப்பட வேண்டும் என்பது குறித்து. தனக்கு விருப்பமான ஒருத்தரோடு சந்தோஷமாக இருப்பது இத்தனை பெரிய குற்றமாக ஏன் இருக்க வேண்டும் என்றும் மறுபடி கேட்டுக்கொண்டாள். இந்தக் கேள்வியை எத்தனையோ முறை கேட்டுக்கொண்டிருந்திருக்கிறாள். அவள் இறுதித்தடவையாக சிவாவைப் பார்க்க நினைத்தாள். ஆனால் அதிகாலையிலேயே அவனை ஊருக்குப் போய்விடச் சொல்லியிருந்தாள், வஹிதா பார்த்ததையொட்டி ஏதும் பிரச்னை வருமென்று நினைத்து! அதோடு அவன் ரொம்பவும் அதிர்ச்சியுற்றிருந்தான். இவளால் ஜீரணித்துக் கொள்ள முடிந்த அளவுகூட அவனால் முடியவில்லை. இவளைவிட அவன் மிகவும் பாதுகாப்பில்லாத நிலையில் இருந்தான். இவளுக்கு மனதில் துக்கம் பெருகிற்று. மறுபடியும் தான் சாகத்தான் வேண்டுமா என்று நினைத்தவள், இத்தனைக் காலமும் எத்தனையோ பிரச்னைகளில் சிக்கி, அவற்றிலிருந்தெல்லாம் மீண்டு வந்திருந்தவளை, சாக மாட்டேன் என்று பிடிவாதமாக நின்றிருந்தவளை, இன்று சாகத் தூண்டியது அம்மாவின் மிரட்டல் மட்டும்தானா என்கிற சந்தேகம்

வந்தது. தன்மீது உயிரையே வைத்திருந்த றைமாவுக்குத் தான் மிகப் பெரிய துரோகம் செய்திருப்பதும் அதுவும் கூட தன்னை விஷம் குடிக்குமளவுக்குக் கொண்டு சென்றதோ எனவும் யோசித்தாள்.

எத்தனை பெரிய முட்டாள்தனம் செய்துவிட்டோம். இனியும் உயிருடனிருக்கும் பட்சத்தில் காலமெல்லாம் இந்தத் துரோகம் தன்னை நிம்மதியாயிருக்க விடாது என்பதும், வஹிதா, றைமா முகத்தில் எப்பொழுதுமே விழிக்க முடியாமல் போய் விடும் என்பதுவும்கூட அவளை வருத்தி எடுத்தது. இதையொட்டி வஹிதாவுக்கும் றைமாவுக்கும் இடையே உறவில் ஏதும் வருத்தங்கள் நிகழ்ந்தால் அதனைப் பார்த்துக் கொண்டிருக்கத் தன்னால் முடியவே முடியாது எனவும் நம்பினாள்.

இவளுக்கு சொஹ்ரா, ராபியாவின் ஞாபகம் வர அக்காதான் எத்தனை அப்பாவி என்று நினைத்துப் பரிதாபம் கொண்டவள், இனி ராபியா இங்கே வரும் பொழுது தானிருக்கமாட்டோம்; அவளை மடியில் இருத்திக் கொஞ்ச ஆளில்லாமல் போய்விடும் என்றெல்லாம் நினைத்து, தான் உயிருடனிப்பதற்கான அவசியங்களை உருவாக்கினாள். ஆனால் இதையெல்லாம் சொல்லி, உயிர்வாழும் அனுமதி கேட்க யாருமே இல்லை என்கிற உண்மை அவளை மௌனம் கொள்ளச் செய்தது. அவள் கால்களை நீட்டிப் படுத்தாள், ரூஹு அடங்கு முன் உடலைச் சுருக்கி வைத்துக்கொள்ளக் கூடாது என்பதனால். அவளுக்குத் தான் இறுதிக் கணத்தை நோக்கிப் போய் கொண்டிருப்பது நன்றாகத் தெரிந்தது. தனக்கு நேராகச் சுவரில் தொங்கிய புகைப்படத்திலிருந்த அவளது தந்தை இஸ்மாயிலின் முகத்தை உற்று நோக்கினாள். அவராவது தன்னைச் சாகவிடாமல் காப்பாற்றியிருக்கக்கூடாதா என்கிற சிறு ஏக்கம் படர்ந்தது. அம்மா எலி மருந்து கலக்கிக் கொடுத்த டம்ளர் ஏனோ ஞாபகத்திற்கு வந்தது.

பெரிய வாய் அகன்ற டம்ளர். அவள் சிறுபிள்ளையாக இருந்தபொழுது இந்த டம்ளர் நிறைய பால் கொடுப்பாள் ஆமினா. சிறிய டம்ளர் எதிலும் தரவே மாட்டாள். “பொட்டப்பிள்ளைக்கு இத்தனைக் கவனிப்பா?” என்று யாராவது கேலி செய்தால் அவர்களிடம் சண்டை போடுவாள். சபியாக்காவிடம் பலமுறை சண்டைபோட்டிருக்கிறாள். இன்று அதே டம்ளரில்தான் தனக்கு விஷத்தையும் தந்தாள். எப்படி அவளால் தர முடிந்தது? இந்தக் கேள்விக்குப் பதிலைத் தெரிந்து கொள்ள மிகவும் விரும்பினாள் பிர்தவ்ஸ். எவ்வளவு அபத்தமான பதிலாக இருந்தாலும்! அவளது சிறுவயதில் ஆமினா தலைவாரி விட்டது, சாப்பாடு ஊட்டியது, குளித்து விட்டது, பார்த்துப் பார்த்து முடிக்குச் சாம்பிராணி போட்டது, இதெல்லாம் எப்போதிருந்து இல்லாமல் போயிற்று? தனது தலாக்கிலிருந்து தானா? இத்தனை அன்பும் வெறுப்பாக மாற இந்த ஒரு காரணம் போதுமா என்றெல்லாம் நினைத்தவளுக்கு நினைவு மங்கத் துவங்கிற்று. தனது ரூஹு அடங்கப்போகும் இறுதிக் கணத்தில்கூட அவள் வாழ விரும்பினாள். அதன்பிறகு நினைவு முழுதாக தப்பிப்போக, அவள் மெதுவாக இறந்துகொண்டிருந்தாள்.

# 51

அன்று வெள்ளிக்கிழமை என்பதனால் எல்லோருமே காலையிலேயே தலை குளித்து விட்டிருந்தார்கள். காலைச் சாப்பாட்டு வேலைகள் முடிந்து மதிய வேலைகளை ஆரம்பிக்க, சொஹ்ரா தேங்காய் துருவிக் கொண்டிருந்ததை ராபியா அருகில் அமர்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். இடையிடையே, “அம்மா நான் சுத்துரேனே” என்று கேட்டபடி. “சும்மாயிரு, கையில கீறிக்குவ, எல்லாம் பெரியமனுஷியானதும் செய்யலாம்” என்றபடி வேலையைத் தொடர்ந்து கொண்டிருந்தாள். கரீம் காலையில் சாப்பிட்டுப் போய்விட்டால் இடையில் வீட்டிற்கு வரமாட்டான். அன்று ஏனோ போன சிறிது நேரத்தில் திரும்பி வந்தது சொஹ்ராவை ஆச்சரியப்பட வைக்க, சந்தேகத்தோடு, இறுகிக் கிடந்த அவன் முகத்தை உற்று நோக்கினாள். அவளருகில் வந்தவன், ராபியா அருகில் இருப்பதைப் பார்த்ததும், “இங்கெ வா” என்றபடி படுக்கையறைக்குள் அவளை அழைத்துச் சென்றான். அதன்பிறகு அவளதுக் கதறலில் வீடே நடுங்கியது. ராபியா ஒன்றும் புரியாமல் அரண்டுபோய் அம்மாவைத் தேடி ஓடினாள். றைமாதான் சொஹ்ராவை மயக்கம் தெளியச் செய்து காரில் தேற்றியபடி வந்து கொண்டிருந்தாள். ராபியாவுக்கு என்ன நடந்தது என்பது புரியவே இல்லை. கேட்கும் ஆவலில் அவள் இருந்தாலும் சொல்லக்கூடிய நிலையில் யாருமில்லாததனால் வாய் மூடி அமர்ந்திருந்தாள்.

நன்னி ஊருக்குள் நுழைந்த கார் அவர்கள் வீட்டு வாசலில் போய் நின்றதும் வெளியில் கிடந்த பெஞ்சுகளில் கூடியிருந்த ஆண்களது கூட்டம் அவளைப் பயம் கொள்ளச் செய்தது. நன்னிக்கு

என்னவாயிற்று என்பது ஏறக்குறைய புரிந்திருந்தது. காரிலிருந்து கதறியபடி இறங்கி ஓடிய அம்மாவையும் பெரியம்மாவையும் பின்பற்றி ஓடினாள். இவர்களது வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்த அனைவரும் தங்களுடைய இருப்பிடங்களிலிருந்து எழுந்து சுவாரஸ்யத்துடன் நிகழ்வதை வேடிக்கை பார்க்கக் குழுமலானார்கள்.

நடு ஹாலில் நிரம்பியிருந்த பெண்கள் கூட்டத்திற்குள் ஊடுருவி நுழைந்த ராபியா, ஜனாஸா கிடந்த நீளமான பெஞ்சை ஒட்டி அமர்ந்திருந்த நன்னியைப் பார்த்ததும் அதிர்ச்சிக்குள்ளானாள். அப்படியென்றால் பெஞ்சில மூடிக்கிடப்பது யார், சித்தியா? அவள் உடல் நடுங்கிற்று. அவள் நினைத்தது ஆமினா நன்னி இறந்துவிட்டாள் என்றுதானே, சித்தி எப்படிச் செத்துப்போனாள்? செய்வதறியாது திகைத்து நின்று கொண்டிருந்தாள். சொஹ்ரா தன் தாயின் மடியில் விழுந்து கதற, ஆமினாவும் அவளோடு சேர்ந்து கதற ஆரம்பித்தாள். அழுது ஓய்ந்திருந்த கூட்டம் மறுபடி பெரும் குரலெடுத்துக் கதறத் தொடங்கியிருந்தது. தாயும் மகளும் அழும் துயரம், தாங்கிக்கொள்ள இயலாத ஒரு துயரத்தை வளர்த்தெடுத்து அவர்களையும் இவர்களோடு சேர்ந்து கொள்ளச் செய்திருந்தது. கனத்த கூக்குரல்களால் நிரம்பிய வீட்டில் கவனிக்கப்படாது தனித்துவிடப்பட்டிருந்தாள் ராபியா. அவளது இருப்பு அங்கு யாருக்குமே வேண்டியதில்லைபோலச் செய்வதறியாமல் நின்று கொண்டிருந்தாள். அவளுக்கு அழத் தோன்றவில்லை. அவளுக்குச் சித்தி எப்படி இறந்து போனாள் என்பது மட்டும் உடனே தெரிந்தாக வேண்டும் போலிருந்தது. வயதான கிழவிகள் உயிரோடு இருக்கும் பொழுது இவள் எப்படிச் செத்துப்போனாள் என்கிற கேள்வி அவளைத் துளைத்தெடுத்தது.

யாரோ ஒரு பெண் புதிதாக வீட்டிற்குள் வந்தவள் மையத்தின் முகத்தைப் பார்த்து ஸலவாத்து சொல்வதற்காக உடலை மூடியிருந்த

கபன்துணியை விலக்கி முகத்தைப்பார்க்க, அந்த ஒருகணத்தில் தான் பிர்தவ்ஸ் இறந்துபோய்விட்டாள் என்பது உறுதியாகி இவள் மண்டையில் உறைத்தது. வெள்ளை வெளேரென மாவால் செய்தது போல வழுவழுப்பான உருண்டை முகம் கண்ணைப் பறிப்பது போலிருக்கக் கண்களை இறுக்கி மூடிக் கொண்டாள். தனக்குள் அம்முகத்தை அனுமதிக்கக் கூடாது என்கிற மாதிரி. செத்துப் போனவர்களின் முகத்தைப் பார்த்தால் அவளுக்குப் பயமாக இருக்கும். இப்போதெல்லாம் யாருடைய முகத்தையும் பார்ப்பதுமில்லை. முன்பு யார் முகத்தையோ பார்த்துவிட்டு எத்தனையோ நாள் கனவுகண்டு அலறியிருக்கிறாள்.

ஆனால் இன்று அம்முகத்தைக் காண மறுத்துத் தான் கண்களை மூடிக்கொண்டது வழக்கமான பயத்தினால் அல்ல என்பது அவளுக்கு மிக நன்றாகவே புரிந்தது. தான் ரொம்பவும் விரும்பிய, தன்னை எப்பொழுதும் கொஞ்சிச் சிரித்துக் கொண்டிருந்த ஒரு முகத்தை உயிரில்லாமல் பார்ப்பதென்பது அவளுக்கு நடுக்கத்தை உண்டுபண்ணிற்று. தன்னைத் தூக்கி வளர்த்த உடல், அணைத்து முத்தமிட்ட முகம் இப்படி அசையாமல் கிடப்பதை அவளால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இந்த நிலையிலும் அவளுக்கு ஏனோ அழுகை வரமறுத்தது. அவள் எப்படிச் செத்துப்போயிருப்பாள் என்கிற கேள்வி மட்டும் பிரதானமாகி அவளை அழவிடாமல் செய்து கொண்டிருக்க, அவள் அங்கிருந்து வெளியேற விரும்பினாள். வெளியில் போக வழி கிடைக்கும் என்று தோன்றாததால் மாடிப்படி ஓரத்தில் போய் ஒடுங்கி நின்று கொண்டாள். யாரோ ஒருத்தி இவளைக் காட்டி இன்னொருத்தியிடம், “பாரு? இந்தக் குட்டி அழுகுதான்னு! அவ எப்புடியெல்லாம் இவளத் தூக்கி வளர்த்திருக்கா தெரியுமா?” என்று சொல்வது இவளுக்குக் காதில் கேட்டது. அவள் சோர்ந்து போய்

நின்றுகொண்டிருக்கும்போதுதான் வஹிதா துப்பட்டியில் உடம்பை மறைத்து முகம் மட்டும் தெரியும் விதத்தில் வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தாள். அவளுக்குப் பின்புறமாக சபியாவும் கூடவே வந்து கொண்டிருந்தாள். வஹிதாவைப் பார்த்ததும் ராபியாவுக்கு அவளருகில் போக வேண்டும் போலிருந்தது. ஆனால் கூட்டம் நிறைய இருந்ததால் நகர முடியாமல் அங்கேயே நின்று கொண்டிருந்தாள். வஹிதா ஒரு நிமிடம் மட்டும் மையத்தருகில் கண்ணில் நீர் வழிய நின்றுகொண்டிருந்துவிட்டு, உட்கார இடமில்லாததனால் சிறிது நேரம் தயங்கியபடி நின்று மறுபடி திரும்பி நடந்து வாசலை நோக்கிச் சென்றாள்.

ஆமினாவைக் கட்டியணைத்து அழுது கொண்டிருந்த தன் தாயையும் சொஹ்ராவையும் பார்க்கும் நிலையில் அவள் இல்லை என்பதால் உடனேயே போய்விட விரும்பினாள். சபியாவும் அவளை அங்கிருந்து போய்விடச் சொல்லும் முனைப்பில், “கொஞ் சம் தள்ளுங்கம்மா” என்று வழிவிடச் சொல்லிக் கூட்டத்தை ஒதுக்கி விட்டுக் கொண்டிருந்தாள். ராபியா இந்தச் சந்தர்ப்பத்தை விடக்கூடாது என்பது மாதிரி கிடைத்த இடைவெளியில் நுழைந்து வஹிதாவைப் பின்தொடர முயற்சித்தாள். வஹிதா தன் முகத்தில் கண்களைத் தவிர ஏனைய பகுதிகளை முழுவதுமாக மூடியிருந்ததால் அவள் முகத்தைப் பார்க்க முடியாமல் இருந்தது. அவளும் குனிந்த தலை நிமிராமலேயே இருந்ததால் ராபியா நிற்பதைக் கவனிக்கவில்லை. வந்த உடனேயே வஹிதா வெளியே போக முயல்வதையும், சபியா அவளைக் கூட்டிச் சென்றுவிடத் துடிப்பதையும் பார்த்து கூட்டத்திலிருந்த பெண்களில் ஒருத்தி, “என்னடி இது, அதிசயமா இருக்கு! வந்த ஒடனேயே மருமகளை ஓட்டிக்கிட்டுப் போறா” என்றாள். அதற்கு அவளருகில் இருந்த இன்னொரு பெண், “அத விடு,

காலையில நடந்த மௌத்துக்குப் பக்கத்து வீட்டுக்காரி இம்புட்டு நேரம் தாண்டியா வருவா, அதுலயும் ஒறவுக்காரிக வேற" என்று சலித்துக் கொண்டாள். ராபியாவுக்கு இவை காதில் விழுந்தாலும் சரியாகப் புரியாமல் இருந்தது. வஹிதாவுக்கும் இப்பேச்சு காதில் விழுந்திருக்கும் போல. அவள் ஒரு நிமிடம் ஏதோ நினைத்தவளாகத் தயங்கி நிற்பது போலிருக்க சபியாவின் குரல் அவளை வலுக்கட்டாயமாக அங்கிருந்து நகர்த்துவதுபோல, "வா, சீக்கிரம்" என்றதும் அவள் பின்னே வஹிதா போய்க்கொண்டிருந்தாள். ராபியா கூட்டத்தைக் கடக்க இப்போது தீவிரமாக முயன்று முண்டிக் கொண்டிருந்தாள்.

ராபியா எப்படி வஹிதாவின் வீட்டுக்குள் வந்து சேர்ந்தோம் என்று புரியாத மாதிரி நின்று கொண்டிருந்தாள். பின் வாசலில் நின்று முகம், கை கால் கழுவிவிட்டு வீட்டுக்குள் நுழைந்த வஹிதாவுக்கு இவளைப் பார்த்ததும் அதிர்ச்சியோடு, தாங்க முடியாத துக்கமும் பெருகிற்று. ஓடிவந்து அவளைத் தன் நெஞ்சோடு சேர்த்து அணைத்துக் கொண்டாள். அவளுக்கு அடிவயிற்றிலிருந்து முண்டிக்கொண்டு மேலெழுந்த அழுகை, சபியாவைப் பார்த்ததும் வெளியே வராமல் அப்படியே தொண்டைக்குள்ளேயே பதுங்கிற்று. ராபியாவைப் பார்த்த சபியாவின் முகம் ஏனோ கறுத்துச் சுருங்கிற்று. மவுத்துக்கு என வந்தவள் தன் வீட்டிற்குள் எதற்காக வந்தாள் என்பது போல இவளை உற்றுப் பார்த்துவிட்டு, மறுபடியும் ஆமினா வீட்டுக்கே திரும்பிப் போனாள்.

அவள் போனபிறகு தான் இதுவரை தனக்குள் புதைத்து வைத்திருந்த துக்கத்தைப் பெரும் குரலெடுத்து கதறித் தீர்க்க ஆரம்பித்தாள் வஹிதா. அவள் உடல் சூட்டில் புதைந்து போயிருந்த ராபியாவுக்குத் தானும் அழவேண்டும் என்கிற மாதிரி இருந்தது. தான் மிகப்பெரிய ஒன்றை இழந்து விட்டிருக்கிறோம் என்பதை வஹிதாவின் அழுகை

உறுதிப்படுத்த, பயத்தாலும் வருத்தத்தாலும் குழம்பிய குரலில் இவளும் சேர்ந்து அழத்தொடங்கினாள். வஹிதாவின் குரலில் மட்டும் என்றைக்குமே தீராத துயரத்தின் சாயல் குடிகொண்டிருந்தது.

# 52

மையத்தைத் தூக்கிப் போனபிறகு வீட்டில் ஒரு மூலையில் ஒடிந்து போய்க் கிடந்தாள் ஆமினா. சொஹ்ரா அவள் காலடியில் சுருண்டு கிடந்தாள். மிகப்பெரிய நாடகம் ஒன்று நடந்து முடிந்தே விட்டது என்று நினைத்துக் கொண்டாள் ஆமினா. பிர்தவ்ஸ் கரண்டடித்துச் செத்துப் போய்விட்டதாக அனைவரையும் நம்ப வைக்கச் சொன்ன பொய் ஒருவாறாக ஊரை அமைதிப்படுத்திவிட்டது. குளிப்பாட்டிய பெண்கள் வாய்விட்டுப் புலம்பிக் கொண்டிருந்த வார்த்தைகள் இன்னும் காதில் ரீங்காரித்துக் கொண்டிருப்பதாகப் பிரமை உண்டாயிற்று. “மஞ்சள் கிழங்கு மாதிரியில்ல இருக்குது, பாவிமக பாதியில போகவா இம்புட்டு அழகாப் பொறந்தா” என்று புலம்பித் தீர்த்தவர்கள் அவளிடம் வந்து, “மனசை தேத்திக்கோ, எப்பவுமே தனக்குப் புடிச்ச சிறப்பானதை அல்லா எப்படியும் தன்கிட்ட கூப்புட்டுக்குவான்” என்று ஆறுதல் படுத்த முயற்சித்தார்கள். என்றாலும் யாருக்குமே மனம் ஆறவேயில்லை என்பதே உண்மை. ஆமினாவின் கண்களிலிருந்து நீர் வழிந்தோடிற்று. அவளால் இன்னும்கூட நம்பமுடியாததாகவே பிர்தவ்ஸின் மரணம் இருந்தது. அவள் இந்தத் துனியாவின் மீது எத்தனை ஆசை வைத்திருந்தாள். தன்னால் சாகவே முடியாது என்பதை எத்தனை பிரச்னைகளுக்கிடையில் நிரூபித்துக் காட்டியிருக்கிறாள். ஆமினாவுக்குத் தன் மீதே அளவில்லாத வெறுப்பு உருவாகியிருந்ததை உணர்ந்தாள். தான் ஒரு தாய்தானா என்கிற சந்தேகம் மறுபடி மறுபடி தோன்றி அலைக்கழிக்க, தான் ஒரு கொலைகாரி என்பது நினைவுக்கு வந்து துன்பத்தினை உண்டாக்கிற்று.

குடும்ப கௌரவம் என்கிற பெயரில் தான் செய்ததை அவளால் நம்பவோ, ஏற்றுக்கொள்ளவோ இயலவில்லை. வாழ்வதற்காக ஆசைப்பட்ட குற்றத்திற்காகச் செத்துப்போன தன் மகளை நினைத்து நினைத்து இதயத்தில் கடுமையான வலி உண்டாயிற்று. அவள் இதிலிருந்து உடனே வெளிவர வேண்டுமென நினைத்தாள். இல்லையெனில் தன் பேரில் தன்னுள் பெருகும் வெறுப்பு தன்னைக் கொல்லாமல் கொன்றுவிடும் என்று நம்பியவளின் மனம் பிர்தவ்ஸ் செய்த தவறு எத்தனை மோசமானது என்பதை எண்ணி ஆறுதல் தேட முயன்றது. எந்தக் காலத்திலும், எந்த நிலையிலும், யாராலுமே மன்னிக்க முடியாத பாவத்தை அவள் செய்து விட்டதை மனதில் கொண்டு தன்னைச் சமாதானம் செய்து கொள்ளவும் குற்றவுணர்விலிருந்து விடுபடவும் விரும்பினாள்.

இவள் காலடியில் படுத்திருந்த சொஹ்ராவிடமிருந்து லேசான குரலில் கேவல் எழுவது இவளுக்குக் கேட்டது. இந்த இரவின் நிசப்தத்தில் எழும் அந்த விசும்பல் கேட்பவர்களின் இதயத்தையே அறுத்தெடுத்து விடும் போலிருந்தது. ஆமினா பல்லை இறுகக் கடித்துத் தன்னுள் பீறிட்ட அழுகையை மென்று விழுங்கித் தனக்குள் புதைத்தாள். அவளது கை தன்னிச்சையாகத் தனதருகில் தடவிப் பார்த்து பிர்தவ்ஸைத் தேடித்திரும்பிற்று. வழக்கம்போல அருகில் படுத்திருக்கும் பிர்தவ்ஸ் இன்று இல்லை, அவ்விடத்தில் நிரம்பியிருந்த வெறுமை இவளைத் திடுக்கிட்டு நடுங்கச் செய்தது. பிர்தவ்ஸின் உடலிலிருந்து எழும் லேசான வியர்வை வாடையும் இளம் தேகத்தின் கதகதப்பும் காணாமல் மறைந்து போய் வீடெங்கும் கழுவிவிட்ட பிறகும், முழுவதுமாகப் போய்விடாத ஊதுபத்தி மணம் மட்டும் எஞ்சியிருந்தது, அவளது மௌத்தை இவளுக்கு உணர்த்தியபடி! இவளே மறக்க முயன்றாலும் அவ்வாடை விடாது அவளைச்

சூழ்ந்திருந்தது.

ஆமினா கண்களைத் திறந்து ஒளிரும் விடிவிளக்கின் வெளிச்சத்தில் சுற்றுமுற்றும் பார்த்தாள். இவளையும் சொஹ்ராவையும் தவிர்த்து, இன்னும் நாலைந்து பெண்கள் படுத்திருப்பதைப் பார்த்தாள். எதற்காகப் படுத்திருக்கிறார்கள் என்றிருந்தது. இவர்கள் கூட இருந்தால் மட்டும் எனது இழப்பு லேசானதாகிவிடுமா என்று நினைத்துக் கொண்டவள், ராபியாவைத் தேடினாள். உடனேயே அவளைப் பார்த்தால் ஆறுதலாக இருக்கும். தான் அவளுக்கும்கூட பெரிய துரோகத்தைச் செய்து விட்டதாக நினைவு எழுந்தது. அவள் தன் சித்தியின் மீது உயிரையே வைத்திருந்தாள்.

அழுது அழுது தன் கண்களிலிருந்த கண்ணீர் வற்றிப்போய் விட்டதாக நினைத்துக் கொண்டாள். எவ்வளவு பெரிய சோகமாக இருந்தால் என்ன, எல்லாமும்தான் பழகிப் போய் விடுகிறதே, பிறகென்ன என மனதைத் தேற்றிக் கொள்ள முயன்றாள். ஒரு பக்கம் தன் மகளைத் தானே கொன்று விட்டதாகத் தோன்றினாலும், இன்னொருபக்கம் அப்படிச் செய்தது சரிதான் எனவும் நம்பினாள். இப்படி முடிந்தால்தான் சரியாக இருக்கும். இதைவிட்டால் வேறொரு மார்க்கம் இருப்பதாகவே தெரியவில்லை அவளுக்கு. அப்படியே இருந்தாலும் அது இன்னும்கூட விபரீதமான, கேவலமான ஒன்றாகவே இருந்திருக்கும் என்பதை நினைத்துத் தன் செய்கைக்கு நியாயம் வழங்கிக் கொண்டாள். இன்னும் சொஹ்ராவிடமிருந்து சிறு கேவல் வந்தபடியிருந்தது. அழட்டும் என நினைத்தவள், ஒருவேளை நடந்த விஷயங்கள் அவளுக்குத் தெரியும் பட்சத்தில் அவளது துக்கம் கொஞ்சமாவது குறையுமோ என எண்ணினாள். அதைச் சொல்வதன் மூலம்தான் அவளைத் தேற்ற முடியும் என்று நினைத்தவள், அதற்கான சந்தர்ப்பம் இல்லாததால் பேசாமல் இருக்க வேண்டியிருந்தது.

வெளியில் கோழியின் சத்தம் தோட்டத்து இருளைக் கீறியது. மாடு வைக்கோலை அசைபோடும் சத்தமும் கூடவே வந்தது. இனி இவைகளுக்கு இரைபோட்டுப் பராமரிக்க யாரும் இல்லை. பிர்தவ்ஸ் வீட்டில் இல்லையென்பது அவைகளுக்குத் தெரியுமா? இத்தனை பெரிய துக்கத்தில் தனக்கு இதெல்லாம் எதற்காக ஞாபகம் வருகிறது? அவளுக்குத் தன்னுள் பெருகிப்படர்ந்த வன்மத்தை இன்னும் ஒப்புக்கொள்ள முடியவில்லை. எத்தனை ஆழமாக அது தன்னுள் வேரூன்றியிருந்தால் தன்னை இந்தக் கொடுமைக்குத் தள்ளியிருக்கும் என நினைத்து நடுங்கினாள். தனது அமைதியான உருவத்திற்கும் சுபாவத்திற்கும் இடையில் இது எப்படி?

ஆமினாவிடமிருந்து ஆழ்ந்த பெருமூச்சொன்று எழுந்து அடங்கிற்று. அவளுக்கு உடனேயே சொஹ்ராவிடமாவது நடந்தவைகளைச் சொல்லித் தன் செய்கைக்கு ஒரு நியாயத்தைப் பெற வேண்டும் போலிருந்தது. அதன் பிறகேனும் தன் மனதில் அமைதி உருவாகலாம். அதோடு சொஹ்ராவின் ஆறாத துக்கத்தைக் குறைக்கவும் விரும்பினாள். பிர்தவ்ஸ் பற்றிய உண்மைகளை அவளுக்குச் சொல்வதன் மூலம் அவளையும் இந்த முடிவை ஏற்றுக் கொள்ளச் செய்யலாம் என்கிற நம்பிக்கை கொண்டிருந்தாள். அதற்கான அவகாசம் எதுவும் உடனே வாய்க்குமெனத் தெரியாததால், மௌனமாகவே இருந்து கொண்டிருந்தவளுக்குத் தன் கணவனின் நினைவு வந்தது. இந்தக் கொடுமைகளை எல்லாம் காணாமலேயே போய்ச் சேர்ந்து விட்டவனுக்காகச் சந்தோஷம் அடைந்தாள். அவனை நினைத்த மாத்திரத்தில் அவளது கண்கள் அவளெதிரே சுவரில் மாட்டியிருந்த அவனின் புகைப்படத்தை நோக்கிச் சென்றன. தினமும் கூட பார்த்துக் கொண்டிருந்த போட்டோதான் என்றாலும் இன்று அம்முகத்திலும் கண்களிலும் உக்கிரம் கனன்று கொண்டிருந்தது போல

உணர்ந்தாள். விடிவிளக்கின் லேசான ஒளியில் அறை மிதந்து கொண்டிருக்க இத்தனைத் துல்லியமாக அந்தப் புகைப்படம் தன்னை உற்று நோக்குவது அவளைத் துன்பத்திலாழ்த்திற்று. அவள் அப்பார்வையின் வேகத்தைத் தன்னிடமிருந்து உதறி எறியவும் அதிலிருந்த குற்றச்சாட்டிலிருந்து மீளவும் விரும்பினாள். என் மகளை இப்படிக்கொன்று விட்டாயே என்கிற கேள்வியைப் புறக்கணிக்க விரும்பினாள். தனது சூழ்நிலையையும் குடும்ப கௌரவத்தைத் தான் காப்பாற்றியதையும் தன் மனதிற்குள்ளாகவே சொல்லித் தன் தரப்பு நியாயத்தை நிரூபிக்க விரும்பியவளாக, மனமொடிந்து போய் குப்புறப்படுத்து அப்புகைப்படம் தன்னைப் பார்ப்பதைத் தவிர்க்கச் செய்தாள்.

அந்த அறையில் தன்னோடு படுத்திருந்த பெண்ணின் குறட்டை அவளுக்கு அங்கு படுத்திருக்க இயலாமல் ஆக்கிற்று. அது ஒரு மிருகத்தின் ஓசைபோலிருக்க அங்கிருந்து வெளியில் சென்று முற்றத்தில் அமர்ந்து கொள்ளலாம் என நினைத்து எழுந்து கதவைத் திறந்து வாசலுக்கு வந்தாள். முற்றத்தில் விழுந்த நிலவொளி மனதில் சாந்தத்தை உண்டு பண்ணியது. திண்ணையில் குத்துக் காலிட்டு அமர்ந்தாள். கண்ணைப் பறிக்கும் வெளிச்சத்தை வாரியிறைத்தபடி தலைக்கு மேலாக ஊர்ந்து நகர்கிறது நிலவு. கல் வாசலில், கிணற்றடியில், தோட்டத்துச் செடிகளில் அனைத்தின் மீதும் படிகிறது அதன் ஒளி. எங்கிருந்தோ ஒலிக்கும் கூகையின் ஓசையில் அரண்டு விழிகளை நாலாபுறமும் உருட்டி தனது வீட்டு மொட்டை மாடிச் சுவரில் நிலைக்கச் செய்தவள் சுவரின் மீது அமர்ந்து கொண்டிருக்கும் அதனைக் கண்டு விரக்தியில் முகம் சுளித்தாள். அதுதான் எல்லாம் முடிந்து விட்டதே என்கிற அவநம்பிக்கை அம்முகச் சுளிப்பில் நிறைந்திருந்தது. முன்பென்றால் அதனை விரட்டியடிக்கத்

துடித்திருப்பாள். இப்பொழுது ஒரு சலனமுமின்றி அதனையே பார்த்துக்கொண்டிருந்தாள். நேற்று என்ன கிழமை என யோசித்தவள், வெள்ளிக்கிழமை என்பதை சிறிது நேரக் குழப்பத்திற்குப் பிறகு யூகித்தாள். வெள்ளிக்கிழமைகளில் ஊரில் மிகுந்திருக்கும் சந்தோஷங்களை நினைத்தவள் இனி தன் குடும்பத்திற்கு மட்டும் எந்தவொரு வெள்ளிக்கிழமையும் அதன் கொண்டாட்டங்களும் இருக்காது என்பதை நினைவு படுத்திக் கொண்டாள். இனிமேல் நாளாவது கிழமையாவது என்கிற சலிப்பு ஊடுருவ, மௌனமாகத் தோட்டத்துச் செடிகளை அவற்றின் அசைவைக் கவனிக்கத் தொடங்கினாள். செடிகளினூடே பிர்தவ்ஸ் நடமாடித் திரிவது போலிருந்தது. கண்களைச் சுருக்கி உற்றுக் கவனித்து உறுதிப்படுத்திக் கொள்ள முனைந்தாள். பிறகு தன் கற்பனை என்பதைக் கண்டுகொண்டு கண்களை இறுக்கி மூடித் தன்னுள் பிர்தவ்ஸின் உருவத்தைக் கொண்டு வர முயன்று தோற்றாள், அவள் இனி எப்படித் தன் முகத்தில் விழிப்பாள்? கனவில்கூட வரமாட்டாளே என்று முணுமுணுத்தவள், தாளமாட்டாத பாசத்தினாலும் குற்றவுணர்வினாலும் சூழப்பட்டுக் கதறிக் கதறி அழத் தொடங்கிய வேளையில் விடியத் தொடங்கியிருந்தது.

# 53

கூடத்திலிருந்த தூணில் சாய்ந்து அதை அணைத்தபடி நின்று கொண்டிருந்தாள் வஹிதா. எதிரிலிருந்த சாய்வு நாற்காலியில் ஓய்வாகச் சாய்ந்திருந்தார் சையது. அவரெதிரேயிருந்த சேரில் சபியா குத்துக்காலிட்டு அமர்ந்திருந்தாள். வலது கையால் முகத்தைத் தாங்கிப் பிடித்திருந்தாள். முகம் கவலைமண்டிக் கிடந்தது. சையது அவளை உற்றுப் பார்ப்பதும் நமுட்டுச் சிரிப்பொன்றை உதிர்ப்பதுமாக இருந்தார். வஹிதாவைப் பார்த்துச் சிரித்துவிட்டுத் திரும்பிக் கொள்ளுவார். வஹிதாவுக்கு எரிச்சலாக இருந்தது, அங்கிருந்து போய்விட்டால் தேவலை என நினைத்தாள். உடலில் நிற்பதற்கும் கூட துளி பலமில்லாமல் தளர்ந்து போயிருந்தாள். சையது அவளை இருக்க சொல்லியதால் அங்கேயே நின்று கொண்டிருந்தாள். சனியன் பிடித்த கிழவன் என்று தனக்குள்ளாகச் சபித்துக் கொண்டாள். வயது அதிகமானவர்களைத் திட்டினால் ஆயுள் குறையும் என்று அம்மா சொல்லியதை நினைத்துக் கொண்டவள், இந்தக் கிழவனைத் திட்டித்திட்டியே ஆயுசு கொறைஞ்சு செத்துப்போய் விடுவோம் என்று எண்ணிக் கொண்டவளுக்கு நல்லதுதான் என்றிருந்தது. அம்மாவை நினைத்ததும் மனதில் வெறுப்பு மேலிடுவதை உணர்ந்தாள். அவள் எவ்வளவுதான் ஒதுக்க நினைத்தாலும் அவ்வுணர்வு மேலெழும்பியபடியே இருந்ததை நினைத்து அவளிடத்தில் கவலையுண்டாயிற்று.

சையது தொண்டையைச் செருமிக்கொண்டார். “இங்கிட்டு வந்து ஒக்காரு பிள்ளை” மருமகளைக் கூப்பிட்டவர், “அந்தத் தூணு ஒண்ணும் காணாமப் போயிராது, இப்பிடிக் கட்டிப் புடிச்சிக்கிட்டு

நிக்கிற?" என்று சொல்லி ஓஹோவெனப் பெரிதாகச் சிரித்தார். அவர் சொன்னதைக் கேட்டு சபியாவோ வஹிதாவோ சிரிக்காதது அவருக்கு எரிச்சலை உண்டு பண்ணியிருக்க வேண்டும். அவர் ஏற்கனவே இலங்கையில் பெரிய கலவரம் நடந்து கொண்டிருப்பதையும் சிறைச்சாலையில் கைதிகள் வெட்டிக் கொல்லப்பட்டதையும் நினைத்து வருத்தத்தில் இருந்தார். இதில் சபியா வேறு ஏதோ யோசனையில் இருந்தது எரிச்சலை அதிகரித்தது. "ஏண்டி புள்ள, கப்பல் கவுந்து போச்சோ, இம்புட்டு சோகமா இருக்க? நான் கெடக்கிறேன் எங்கடை ஓடமையெல்லாம் என்னாச்சோ, ஏதாச்சோன்னு, நீ என்னமோ கண்டுக்கிறவே மாட்டிங்கிற" என்று உறுமினார். அவரது கிழட்டுக்குரல் இத்தனை ஆவேசமாக வெளிப்படுவதைப் பார்த்துப் பயந்து போனாள் வஹிதா.

"என்னா, தொரை ரொம்பத் துள்ளுற மாதிரி இருக்கு. ஒங்க கவலை ஒங்களுக்குன்னா, எங் கவலை எனக்கு" எனப் பதிலுக்கு முறைத்துக் கொண்டாள் சபியா. அவளுக்கு என்ன கவலை என்கிற மாதிரி சையது அவளைக் கூர்ந்து கவனித்தார். சபியாவும் அதைப் புரிந்து கொண்டவளாக, "ஆமாங்க ஒங்களுக்கு எப்பிடித் தெரியுது சொல்லுங்க, கரண்டடிச்சுத்தான் பிர்தவ்ஸ் செத்துருப்பான்னு நெனைக்கிறீங்களா?" என்றாள் யோசனையோடு. "ஆமாம், அதுக்கென்ன இப்ப? அதுதானாக்கும் ஒன்னோட கவலையெல்லாம்? நாங்கூட எங்கடையப் பத்தித்தானாக்கும் கவலையா இருக்கேன்னு தப்பா நெனைச்சுட்டேன்," வருத்தமாகச் சொன்னவர் அவளது யூகத்தை அறியும் பொருட்டு, "நீ என்னா நெனைக்கிற?" என்றார். திடீரென சபியாவின் முகத்தில் தெரிந்த பிரகாசம் அவரையும் தொற்றிக்கொண்டதை வஹிதா கவனித்தாள். அவளுக்குள் மேலும் எரிச்சல் கூடிற்று. இதுவரை சத்தமாகப் பேசிய சபியா தணிந்த குரலில்,

“ஏங்க, அந்தச் சிறுக்கி எதிர்வீட்டுக்காரன் கூட சகவாசம் வச்சிருந்திருக்கணும், அத அவ ஆயிக்காரி பாத்துருக்கணும், இதுதாங்க நடந்துருக்கும். ஆமினா மானஸ்தி. திட்டியிருப்பா, அவ வெஷம் குடுச்சு செத்துருக்கணும் என்னா?” ஆர்வத்துடன் தன் கற்பனைக்கு எட்டிய விஷயத்தைச் சொல்லி முடித்த சபியா அவர் என்ன நினைக்கிறார் என்பதை அறியும் வகையில் அவர் முகத்தை உற்று நோக்கினாள். சையதுவுக்கு அதில் உண்மை இருக்கும் என்று தோன்றினாலும் வஹிதாவின் முன்பாக அதனை ஒப்புக்கொள்ளச் சங்கடமாக இருந்தது. என்ன இருந்தாலும் வஹிதா தன் சித்தியிடம் சொல்லிவிடக் கூடும் என்பதனால், அதனை ஒப்புக்காகவேனும் மறுத்துச் சொல்ல விரும்பி, “உஸ், சும்மாயிரு, ஒரு பொண்ணப்பத்தி இப்பிடியெல்லாம் புக்கந்தியா பேசக்கூடாது” என்று மனைவியை அதட்டினார், அவர் வாய் மூடிய மறுநிமிடமே சபியா அவரை அடக்கினாள். “ஆமாமா, இவரு ரொம்ப வெவரம் தெரிஞ்சவரு. சும்மாயிருக்க மாட்டிங்க, எனக்குத் தெரியாம எதுவும் நடக்குமா? கூறுகெட்ட மாடு ஏழுகட்டுப் புல்லுத் தின்னுச்சாம். சிவாப்பய பொண்டாட்டிக்காரி ஊரே தங்கமாட்டா, ஒலகத்துல ஓசியில புருஷன் கிடைச்சா விடுவாளுகளா, ஒனக்குச்செத்த எனக்குச்செத்த தாங்கிறேன்.” எகத்தாளமாகச் சொல்லி அவர் வாயை அடக்கினாள். சையது வஹிதாவின் முகத்தைப் பார்த்து விட்டுத் தர்ம சங்கடத்தில் நெளிந்தார். இந்தப் பேச்சைத் திசை திருப்ப விரும்பியவர்போல, “என்னா சொன்ன, ஓசியில புருஷன் கிடைச்சா, ஒனக்குச் செத்த எனக்குச் செத்தயா, அப்ப சரி, நான் ஊர்ல இல்லாதப்ப நீகூட அப்பிடித்தானா?” என்று சொல்லி வஹிதாவைப் பார்த்துக் கண் சிமிட்டிக் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார். சிரிக்கும்போது அவரது தொந்தி மட்டும் தனியாக ஆடுவதைப் பார்க்கச் சகிக்காமல் பார்வையை வேறு திசையில் திருப்பிக் கொண்டாள் வஹிதா.

அவர் தன்னைப் பார்த்து இப்படிக் கேட்டதும், கேலியாக வஹிதா முன்பாகச் சிரித்ததும் சரியான கோபத்தை சபியாவுக்கு உண்டு பண்ணியது. அவள் தனது குண்டுக் கண்களால் அவரை முறைத்துப் பார்த்துவிட்டு, "தூத்தேறி" என்று வாசல் புறம் திரும்பிப் பார்த்துப் பொய்யாகக் காறித்துப்பிவிட்டு மறுபடி அவர் பக்கமாகத் திரும்பி, "யாரைப் பாத்துச் சொன்னிங்க, எங்க குடும்பத்தோட அருமை என்னா, பெருமை என்னா, நான் யாருபெத்த பொண்ணு? எங்களுக்கென்ன தலையெழுத்தா தர்ப்பணமா, இப்பிடித் திரியறதுக்கு? நல்லாத்தான் வந்தீங்க" என்று ஆவேசமாகச் சொல்லி நிறுத்திப் பெருமூச்சொன்றை விட்டாள். அவள் பேசிய விதம் தன் குடும்பத்தோடு ஒப்பிட்டு ஆமினாவின் குடும்பத்தைத் தாழ்த்தியதை வஹிதாவினால் நன்றாகவே புரிந்துகொள்ள முடிந்தது. அவள் மனம் வேதனையினால் நிரம்பியது. அவள் கண்முன்பாக ஆமினாவின் முகமும் சொஹ்ரா சித்தியின் முகமும் தோன்றி மறைந்தன. இந்நேரத்தில் அவள் பிர்தவ்ஸை நினைத்துக் கொள்ள முயலவில்லை. அவளை நினைக்கும்பொழுதே இவளுக்கு உடம்பெங்கும் ஒரு நடுக்கம் உண்டாகிவிடும் என்பதால், அவளது நினைவை வலுக்கட்டாயமாகத் தடுத்து நிறுத்தினாள்.

சையதுவுக்கு மேலும் மேலும் தர்மசங்கடமாக இருந்தது. இவள் ஏன் வஹிதா முன்பாகவே இத்தனைத் தைரியமாகப் பேசுகிறாள். அவர் வஹிதா அங்கிருந்து போய் விட்டால் தேவலை என நினைத்தார். அதனால் அவளைப் பார்த்து, "போம்மா நீ, போயி கொஞ்சம் தண்ணி போட்டுக் கொண்டா குடிக்க" என்று அவள் பக்கம் திரும்பிச் சொன்னார். வஹிதா பதில் சொல்ல விரும்பாமல் அங்கிருந்து அடுப்படியை நோக்கி நகர்ந்தாள். அவளுக்குள்ளாக ஆத்திரம் பீறிட்டுக் கிளம்பியபடியே இருந்தது. அதனைச் சிரமத்துடன் அடக்கிக்

கொண்டிருந்தாள். தன் குடும்பப் பெருமையைப் பீற்றிக் கொள்ள சபியாவுக்கு ஏதாவது ஒரு தகுதியாவது உண்டா என யோசித்தவாறே தீக்குச்சியைக் கிழித்து ஸ்டவ்வைப் பற்ற வைத்தாள். இவள் இங்கு வந்ததிலிருந்து கவனிக்கத்தானே செய்கிறாள், எச்சில் கையால் காக்காய் ஓட்டாத இவர்களையும், தினமும் தெருவில் பிச்சையெடுக்க வரும் முஸாபிர்கள் இந்த வீட்டைமட்டும் தாண்டிப் போவதையும் அதைத் துளிகூட கூச்சமில்லாமல் சபியா பார்த்தபடியிருப்பதையும். கூடத்திலிருந்து சபியாவின் குரல் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தது. அவள், பிர்தவ்ஸை ஆமினா வளர்த்த லட்சணத்தைப் பற்றிச் சொல்லி அங்கலாய்த்துக் கொண்டிருந்தாள். அவர் ஏதாவது சொல்லியிருக்க வேண்டும், அவள் சொன்னதை மறுத்து. அவள் குரல் இப்போது இன்னும் சத்தமாகக் கேட்டது. “நீங்க வெளிநாட்டுல இருந்த மனுஷன், ஒங்களுக்கு என்ன தெரியும்? வாயைப் பொத்திக் கிடங்க” என்று அவரை அதட்டினாள்.

வஹிதா அங்கிருந்தபடியே சபியாவைத் திரும்பிப் பார்த்தாள். அடுப்படிக்கு நேராகத்தான் அவள் அமர்ந்திருந்தாள். அவள் முகம் கெட்ட எண்ணத்தினால் கறுத்துக் கிடந்தது. கன்னங்களிலும் நெற்றியிலும் சற்று அடர்த்தியாகவே தேமல் மாதிரி கறுப்பு படர்ந்திருந்தது. அம்மா அடிக்கடி சொல்வாள் கல்பு கறுத்துக் கிடக்கிறது போதாதுன்னு சபியாவுக்கு மூஞ்சியும் கறுத்துப்போய்க் கிடக்குது என்று! பால் கொதித்து வரும் சத்தம் கேட்டுத் தேயிலைத் தூள் டப்பியை எடுத்துத் தூளைப் போட்டுக் கொதிக்க வைத்தாள். தன் வீட்டில் இன்றுவரைக்கும் அத்தா அம்மாவுக்குத் தன் கையால் ஒரு செம்பு தண்ணீர் மொண்டு கொடுத்திருப்போமோ என யோசித்தாள். இன்று இங்கு இவர்கள் கேட்கும் போதெல்லாம் ஒரு வேலைக்காரியைப் போல டீ போட்டுத்தரக் கடமைப்பட்டு

இருக்கிறதை நினைத்து வெறுப்புண்டாகியது. டம்ளரில் டீயை ஊற்றி இரண்டு பேருக்குமாக வைத்து விட்டு ஸ்டவ்வை அணைத்தாள். தீ அணைந்ததும் அதிலிருந்து குப்பென மண்ணெண்ணெய் வாடை எழுந்து குடலைப் புரட்டியது. டீ தம்ளர்களைக் கைகளில் எடுக்குமுன் தலையை முக்காடிட்டு நன்கு மூடிக்கொண்டாள். சபியா, இவள் தலைமுக்காடு கீழே நழுவி விழுந்து கிடப்பதைப் பார்த்தாலே மிருகம் மாதிரி ஊளையிடுவாள். “அதபு மரியாதை வேணாம் பொம்பளைப் பிள்ளைக்கி? நம்ம குடும்ப மானத்தக் காத்துல பறக்க விட்டுராத” என்று.

டீயைக் கையில் வாங்கிக் கொண்ட சையது வஹிதாவை வலுக்கட்டாயமாகத் தன்னருகில் அமரச் செய்தார். “இங்கெ வா, இப்ப நாம ஒரு விஷயம் பேச வேண்டியிருக்கு. அதுக்காகச் செத்த நேரம் உக்கார்” என்றவர், தேநீரை இருகைகளாலும் பிடித்து மெதுவாக உறிஞ்சி இழுத்து நாக்கைச் சப்புக் கொட்டினார். தேநீரின் சுவை அவருக்கு மிகவும் திருப்திகரமாக இருந்ததை அவர் முகம் பிரதிபலித்தது. அதே திருப்தியைத் தன் மனைவியின் முகத்திலும் எதிர்பார்த்தவர், அவள் முகம் சுருங்குவதைக் கவனித்து ஏமாந்தார். “ஏன் இப்புடி சீனியைப் போட்டு வச்சிருக்க?” முகம் சுளித்தாள் சபியா. வஹிதாவுக்கு முன்பே தெரியும். அவள் எப்படியும் ஏதாவது ஒரு குறை சொல்வாள், இல்லையென்றால் தலை வெடித்துப் போய் விடாது?

சையது பேச்சை மாற்ற விரும்பினார். அதற்கு முன்பாக வஹிதாவை ஒரு கணம் உற்றுப்பார்த்தார். அவளது மெலிந்த தேகத்தை ஊடுருவி எதையோ தேட முயன்று தோற்றவராக, தன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டார். வஹிதா தன்மேல் ஊர்ந்த பார்வையிலிருந்து விடுபட விரும்பியவளாக முகம் திருப்பிக் கொண்டாள்.

சையது ஏதோ சொல்ல ஆரம்பிக்கும் தோரணையோடு

நிமிர்ந்தமர்ந்தார். “அப்ப, நான் இனிமேல என்ன செய்யட்டும் சொல்லு” என்று மனைவியைப் பார்த்துக் கேட்டு நிறுத்தினார். அவர் என்ன கேட்கிறார் என்பதில் வஹிதாவுக்கோ, சபியாவுக்கோ சந்தேகம் எதுவுமில்லாமல் இருந்தது.

நேற்றுவரை இலங்கையில் நடந்து கொண்டிருக்கும் கலவரம் பற்றித்தான் அவர் பேச்சை ஆரம்பிக்கிறார் என்பது புரிந்த வஹிதா துயரத்தில் ஆழ்ந்தாள். இலங்கை ரேடியோவிலும் பேப்பர்களிலும் அங்கு என்னென்ன நடந்து கொண்டிருக்கின்றன என்று அறிந்து உண்டாகிய கவலைகூட அவளுக்குப் பெரிதாகபடவில்லை. இதைக் காரணம் காட்டி சையது இனி இங்கேயே இருந்து கொள்ள முடிவெடுத்து விடுவாரோ என்றுதான் கவலையுற்றாள். அவருடைய செய்கைகள் எல்லை மீறிப்போவதை ஒன்றும் செய்ய முடியாமல் தவித்துக் கொண்டிருந்தவளுக்கு அவர் தொடர்ந்து இங்கே இருக்கப் போவதில்லை என்கிற ஒரே ஆறுதல் மட்டும்தான் மிச்சமிருந்தது. இப்பொழுது அதற்கும் வழியில்லாமல் ஆகிவிடும் என நினைக்கையில் திகீரென்றிருந்தது.

சபியா சிறிது நேர யோசனைக்குப் பிறகு, “எதுக்காக ஒடனேயே அதுபற்றி முடிவெடுக்கணும்கிறீங்க? இன்னும் கொஞ்ச நாள் பொறுத்துப் பாப்போம். போறதுக்கும் இருக்கறதுக்கும்” என்றாள்.

அப்பொழுதுதான் சிக்கந்தர் எங்கிருந்தோ வந்து வீட்டுக்குள் நுழைந்தான். அவனது முகம் வியர்த்துக் கறுத்துக் கிடந்தது. வெள்ளைக் கைலியில் புழுதி மண்டியிருந்தது. செருப்புச் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்த சபியா மகனைப் பார்த்து, “ஏத்தா, எங்கெ போயிட்டு வர்ற?” என்று அக்கறையோடு கேட்டாள். அதைக் கேட்டதும் சையதுவுக்கு ஆத்திரம் பொங்கிற்று. அவன் பதில் சொல்லும் முன்பாக, “சம்பாதிச்சுட்டு வர்றாரு பையன்” என்றார் கடுப்பாக! சிக்கந்தரின்

முகம் சுருங்கிற்று. அவரது ஆத்திரம் எதன் பொருட்டு என்பது தெரியுமாதலால், ஒரு நொடி நின்று நேராக அவரை நோக்கிச் சொன்னான், "அங்கெ கலவரம் நடந்தா, நான் என்னா செய்யட்டும்?" சையது வாய் மூடிக் கொண்டார். அவன் தன்னிடம் வந்து அக்கறையாக இதுபற்றிக் கேட்கவேயில்லை என்கிற ஆதங்கம் அவருக்கு. மறுபடி ஏதும் சொன்னால் அவன் மரியாதைக் குறைவாக எதுவும் பேசி விடுவானோ என்று பயந்து வாய் மூடிக் கொண்டார்.

சிக்கந்தர் வாசல் பக்கமாகக் கால் கழுவப்போன பிறகு வஹிதாவைப் பார்த்து, "புருஷன்காரன் வந்துட்டான் இல்ல? போயி காப்பி போட்டுக் குடுப்பியா, சும்மா ஒக்காந்துட்ட! இதுகூட நான் சொல்லணுமாக்கும்" என்று சலித்துக் கொண்ட சபியா, "அதுக்கு முன்னே அவனுக்குத் துண்டெடுத்துக் குடு" என்றாள். வஹிதாவுக்கு அவமானமாக இருந்தது. ஏன் இப்படித் தன்னிடம் கடுகடுப்பாகவே பேசுகிறாள் என்று புரியாமல் குழம்பினாள். அவள் கல்யாணத்துக்கு முன்பெல்லாம் தன்னிடம் இனிமையாகக் குழைந்து பேசியது நினைவுக்கு வந்தது. காலையில் அவள் தன்னிடம் நடந்து கொண்டதும் ஞாபகம் வந்தது. காலையில் வஹிதா குளித்துக் கொண்டிருந்தாள். இரவில் சிக்கந்தர் தன்னோடு உறவு கொண்ட உடனேயே குளித்து விடுவாள். இன்று ஏதோ அசதியில் தூங்கிப்போய் விழித்தபோது லேசாக விடிய ஆரம்பித்திருந்தது. பதற்றத்துடன் எழுந்தவளுக்குப் பலவீனமுற்ற உடல் நடுங்கிற்று. நாவு வறட்சியில் துவள, மேசையின் மீதிருக்கும் தண்ணீரை ஒருவாய் குடிக்கலாமென நகர்ந்தவளை, "புருஷன்கூட சேந்த பெறகு குளிக்காமத் தண்ணிகூட குடிக்கக்கூடாது மக்ரூஹு" என்று அம்மா சொல்லியது நினைவுக்கு வர, அந்த எண்ணத்தைக் கைவிட்டவள் பெட்ஷீட், தலையணை உறைகளைக் கழட்டிக் கைகளில் எடுத்துக் கொண்டு பாத்ரூமுக்குள் நுழைந்து

கதவைத் தாளிட்டுக் கொண்டாள். சிக்கந்தரைக் காணவில்லை. அவசர அவசரமாக முழுக்கு நபிலை மூன்று முறை சொல்லிக் குளித்துவிட்டு, படுக்கை விரிப்பையும் தலையணை உறையையும் சோப்புப்போட்டுத் துவைத்து அலச ஆரம்பித்தாள். இனி அறைக்குள் தான் நடந்த இடங்களை வேறு சுத்தம் செய்ய வேண்டும் என்கிற கவலையோடு யாரோ வந்து பாத்ரூம் கதவைப் படபடவென தட்டியதும், அப்படியே நின்று கொண்டு "யாரது?" என்று கேட்டாள். அவளுக்கு வெட்கமாக இருந்தது. இரவில் நடந்ததை எல்லோரும் தெரிந்து கொள்ளும் விதமாகக் குளிப்பதென்பது அவளுக்குப் பெரும் சங்கடமாக இருந்தது. அதோடு சையதுவேறு தலைமுடியைத் தொட்டுப் பார்த்துக் கேட்பார்: "குளிச்சியா?" அவர் சாவகாசமாக இயல்பாகக் கேட்டாலும் இவளுக்கு உயிரே போய் விடும். அதனாலேயே தலை முழுதாக முக்காடைப் போட்டுக் காயும் வரைக்கும் மூடிக் கொள்வாள்.

"என்னாது, நாங்கூப்புடுறது காதுல விழுகலை?" மறுபடியும் சபியாவின் கத்தல் கேட்டதும், "என்ன குப்பி?" என்று மட்டும் உள்ளிருந்தபடியே கேட்டாள். "என்ன, பஜ்ரு முழுக்கா முழுகுற?" என்றாள் சபியா. அவள் குரல் கோபத்துடன் ஒலித்தது. "ஆமா" என்கிற ஒரு வார்த்தை சொல்வதற்குள்ளாக அவமானமாக இருந்தது வஹிதாவுக்கு.

"இப்புடித்தானாக்கும் விடிய விட்டு முழுகுவ பொம்பள, பாவமில்லை? நல்லாவந்த போ, கர்மம்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து போனாள். அவள் இப்படிச் சொல்லிவிட்டுப் போனதும் உடம்பெல்லாம் கூசிப்போய் அங்கேயே நீண்ட நேரம் அழுது கொண்டிருந்தாள். ஷவரிலிருந்து தெறித்து விழுந்த நீரோடு அவளது கண்ணீரும் சேர்ந்து கொண்டது. தன் வீட்டிலிருந்தபோது ஒரு நாள்

அம்மாவும் இவ்விஷயத்தில் கடுமையாக நடந்துகொண்டது அவளுக்கு நினைவு வந்தது. அம்மா இந்த அளவு மோசமாக நடந்து கொள்ளவில்லையென்றாலும், அவளது வார்த்தைகளில் கறார் தன்மை மிகுந்திருந்ததை வஹிதா கவனிக்கத்தான் செய்தாள். அதன் பிறகுதான் இது எவ்வளவு பெரிய தவறு என்பதைப் புரிந்து கொள்ளவும் செய்தாள்.

"என்ன பலத்த யோசனை, போய் அவனுக்கு துண்டெடுத்துக் குடுக்காம?" எங்கேயோ இருந்த அவளது நினைவுகளைக் கலைத்துக் கூட்டி வந்தது சபியாவின் அதட்டல். கனவிலிருந்து விழித்தவள் போல விழித்து, துள்ளி எழுந்தாள் வஹிதா. சையது தன் மனைவியின் பேச்சில் அதிருப்தியுற்றவராக அவளை அதட்டினார். "இந்தா, என்ன நீ, சும்மா சும்மா அந்தப் பிள்ளைய அதட்டிக்கிட்டு, சும்மா இருக்கமாட்டே?" என்றார் இவளுக்கு வக்காலத்து வாங்கும் விதமாக! அவருக்கும் பயம் இருக்கத்தான் செய்தது. அவள் இவரை மட்டும் சும்மாவிடுவாளா என்ன? வாய் மூடிய மறுநிமிடம் அவரைப் பார்த்துச் சீறினாள், "நீங்க சும்மா கெடக்க மாட்டிங்க, வாயை வச்சுக்கிட்டு? ஆக்கங்கெட்ட கூகை" என்றுவிட்டு, "போம்மா நீ, போயி ராத்திரிக்குச் சோறாக்கு. நான் சையது அலி நோன்பு வைக்கறதுக்கு சஹருக்கும் சேத்து அரிசிபோடு" என்று உத்தரவிட்டாள்.

அப்பொழுதுதான் முகம் கால் கழுவிவிட்டுக் கூடத்துக்குள் நுழைந்த சிக்கந்தருக்கு, வஹிதா நடுங்கி முகம் வெளிறிப்போய் நிற்பது, அம்மா ஏதோ சத்தமிட்டுப் பேசியதன் காரணமாக என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது. அவன் நேராகவே சபியாவின் எதிரே வந்து நின்றான். முகத்தில் வடிந்த தண்ணீரை லேசாகக் கீழ் நோக்கி வழித்து விட்டவன், கையை உதறுவது தரித்திரம் என்பதால் கையை அப்படியே தன் கைலியில் பதித்துத் தடவிக் கொண்டான். அவன் முகம்

கோபத்தால் சிவந்திருந்தது. “என்ன நெனைச்சுக்கிட்டு இருக்கம்மா நீ? காலையிலருந்து பாக்கறேன் அவளை இந்த வெரட்டு வெரட்டுற? அவ என் பொண்டாட்டி தெரியும் இல்லெ?” ஓங்கி ஒலித்த அவனது குரல் தன் தாயை அடக்கிவிடும் தோரணையோடிருந்தது.

சபியா நிலைதடுமாறிப்போனாள். ஒரு நிமிடத்தில் தன்னைத் தூக்கி எறிந்து விட்ட மகனை உற்றுப்பார்த்து, அவன்தான் இப்படிப் பேசுகிறானா என்று உறுதிப்படுத்திக் கொள்ள முயன்றாள். வஹிதாவுக்கு முன்பாக அவன் இப்படிப் பேசியது அவளுக்கு அவமானமாக இருந்தது. வஹிதாவும் ஒருகணம் ஒன்றும் புரியாமல் தடுமாறினாள். தன்னை சபியா திட்டியதைச் சிக்கந்தரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை என்பது இவளுக்கு ஆச்சர்யமாக இருந்தது. தனக்காகப் பேச இங்கே அவன் இருக்கிறான் என்பது புரிய, முதல் முறையாகப் பெரும் பாதுகாப்பை உணர்ந்து ஆறுதலடைந்தாள். வஹிதாவின் முகத்தில் படர்ந்த நிம்மதியைக் கவனித்த சபியா அதனாலேயே மேற்கொண்டு ஆத்திரம் கொண்டவளாக, “என்ன சொன்ன? அவ உன் பொண்டாட்டின்னா? ஆமாமா, எனக்குத் தெரியாது. நீ சொல்லித்தான தெரியும்” என்றவள், “ஆமா நீ என்னவேணா சொல்லுவப்பா, புதுப்பொண்டாட்டியப் பாத்தவன் இல்ல?” அவளுக்கு, சொல்லும் பொழுதே தொண்டை கட்டிக் கண்ணிலிருந்து நீர் வழிந்து விடும் போலிருந்தது. இடுப்பில் சொருகியிருந்த கைக்குட்டையை எடுத்து மூக்கை அழுத்திச் சிந்தினாள். சையது செய்வதறியாமல் அப்படியே அமர்ந்திருந்தார். வஹிதாவின் முன்பாகவே அவன் தன் தாயைக் கண்டித்தது அவருக்கும் பிடிக்கவில்லை. சிக்கந்தர் அதற்கு மேல் அங்கே நிற்க விரும்பாதவனாக, கடகடவென்று மாடியேறிப் போனான். போகும்பொழுதே, வஹிதாவைப் பார்த்து, “மேலே வா” என்று ஒரு

வார்த்தை மட்டும் சொல்லிவிட்டுப் போனான்.

வஹிதா பயத்தில் ஒடுங்கிப்போனவளாக அவனைப் பின் தொடர்ந்து சென்றாள். இதற்கும் மேலே அங்கே நிற்பதற்கு அவளிடத்தில் தைரியம் ஏதுமில்லை. சபியாவின் முகத்தைப் பார்க்கக்கூட பயமாக இருந்தது அவளுக்கு. அவள் படிகளில் ஏறும் பொழுது, “பாத்தீங்களா அவன? எல்லாம் அவ பண்ற வேலை. சின்னக் குட்டியா இருந்துக்கிட்டு, அவனக் கைக்குள்ள போட்டுருச்சே! இல்லாததையும் பொல்லாததையும் சொல்லி” என்று புலம்புவது காதில் கேட்டது.

தன் கணவனைத் தொடர்ந்து அறைக்குள்ளாக நுழைந்தவளைக் கட்டிலில் அமர்ந்திருந்தவன், “இங்கெ வா” என்று அருகில் கூப்பிட்டான். தயக்கத்துடன் அவனது அருகே சென்றவளை, “திருதிருன்னு முழிக்காம வந்து இங்கெ உக்காரு!” எனத் தனக்கருகில் படுக்கையின் மீது அமரச் சொன்னவன், “வேலையில்லேன்னா ரூம்ல வந்து படுத்து ரெஸ்ட் எடுக்க வேண்டியதுதானே? என்னத்துக்கு அந்தக் கிழடுக கிட்டப் போற? தொணதொணத்துச் சாகடிச்சுடும் ரெண்டும்” என்று அக்கறையுடன் அதட்டினான். இவள் ஒன்றுமே பதில் சொல்லாமல் அமைதியாக அமர்ந்திருந்து பெட்ஷீட்டின் நூலை விரலில் நோண்டியபடியிருந்தாள், அவனுக்குத் தன் மீது எவ்வளவு பிரியம் என்பதை யோசித்தபடி!

அவனுக்கு ஆத்திரத்தில் மூச்சுவாங்கிற்று. இன்னும் கூட இவள் வருத்தமாக இருக்கிறாள் என்பதை முகத்தை வைத்தே கணித்தவன், “கவலைப்படாதே! நான் இருக்கேன் இல்லை, அப்புறம் என்ன?” அவனுக்கு அவள் மீதான தனது பிரியத்தைக் காட்டுவது தொடர்பான தடுமாற்றத்தில் வார்த்தைகள் வர மறுத்தன. அவமானத்தினால் சிறுத்து, அழத் தயாராகிவிட்ட நிலையிலிருந்த அவளது முகம் அவனை

மேலும் பதற்றமுறச் செய்ய, “நான்தான் சொல்றேன் இல்லெ? கவலைப்படாதேன்னு.” கெஞ்சலாக வெளிப்பட்டது அவன் குரல். வஹிதாவுக்கு ஏனோ அவனைப் பார்த்துப் பரிதாபமாகவும் இருந்தது. அவன் தனது கையைப் பற்றி மருதாணியினால் அழகூட்டப்பட்ட தனது நீளமான விரல்களைத் தனது கைகளில் எடுத்துக் கொண்டு இதமாக நீவிவிட்டபடி தன்னை ஆறுதல்படுத்த வேண்டும் என விரும்பினாள். ஆனால் அது மாதிரியான பிரியத்தைக் காட்டக்கூட அவன் அறிந்திருக்கவில்லை. இவளைச் சமாதானம் செய்வதற்கான முழு எத்தனிப்பையும் எவ்விதம் காட்டுவது எனப் புரியாத குழப்பத்தில், “விட்டுரு, கவலைப்படாதே! இனிமே நான் பாத்துக்கிறேன்” என்று தயங்கித்தயங்கிச் சொல்லிக் கொண்டிருந்தவனைப் பார்த்துச் சிரிக்க முயன்றாள். அவளது சிரிப்பு உண்டாக்கிய திருப்தியோடு அப்பாடாவென படுக்கையின் மீது சரிந்து படுத்தவன், “சரி, நீ வேலை இருந்தா பாரு” என்று அவளைப் பார்த்துச் சொல்லிவிட்டுக் கண்களை மூடி எதையோ யோசிக்க ஆரம்பித்தான். இத்தனை நாளில்லாமல் முதல்முறையாக இந்த வீட்டில் பெரும் பாதுகாப்பை உணரச் செய்த இந்த உறவின் மீது உருவாக ஆரம்பித்த பிடிப்பினைத் தொடர்ந்து தக்கவைத்துக் கொள்ள வேண்டிய அவசியத்தை உணர்ந்தவளாக அங்கிருந்து எழுந்து போனாள் வஹிதா.

ஸஹரில்கூட சாப்பிடாமலேயே நிய்யத் வைத்துக் கொண்ட சபியா, காலையில் தாமதமாகத்தான் தூங்கி எழுந்தாள். எழுந்ததிலிருந்து சோபாவில் அமர்ந்து கொண்டு, “இந்த ஒரு புள்ளை நல்லாயிருக்கணும், எங்கண்ணன் வீட்டுல பொண்ணு கட்டணும் அப்புடியெல்லாம் நெனைச்சுத்தானே நேர்ந்து சையது நோன்பு வைக்கிறேன். பதினாறு மாச நோன்புல மாசம் ஒண்ணா பதினாலு வச்சுட்டேனே, இவன் என்னைய இப்பிடி எடுத்தெறிஞ்சு பேசிட்டானே நான் எம்புட்டு

பயபக்தியோட இந்த நோம்பு வைக்கிறேன்னு அவனுக்கும் தெரியும்தானே, இப்புடி ஒரு தாயை காலால் எட்டி ஒதைச்சுட்டுப்போனானே, அந்த அல்லா எனக்கு ஒரு பொம்பளப் புள்ளையக் குடுத்தானா? நான் இம்புட்டுக் காசு பணத்த யாருக்காகச் சேத்துவச்சேன், எம்புள்ளைக்காகத்தானே" என்று புலம்பித் தீர்த்துக் கொண்டிருந்தாள். இந்தப் பதினாறு நோன்பை இடையில் நிறுத்தி விடக்கூடாது என்பதனால்தான் அவள் இன்றும் வைத்திருந்தாள். சையது பதில் எதுவும் சொல்ல முடியாமல் வேடிக்கை பார்த்தபடியிருந்தார்.

# 54

மொட்டை மாடியில் காய்ந்து கொண்டிருந்த துணிகளை எடுக்க மாடிக்குப்போன வஹிதாவுக்குத் தன்னையறியாமலேயே பார்வை பிர்தவ்ஸின் வீட்டுப் பக்கம் திரும்பியது. ஆளில்லாத முற்றத்தில் தூசி படர்ந்து கிடந்தது. ஆமினாவுக்கு நெஞ்சு வலியென்று மதுரையில் ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறார்கள். சொஹ்ரா சித்திதான் கூடப் போயிருக்கிறாள். இனி அவள் பிழைக்க மாட்டாள் என்றுதான் எல்லோரும் பேசிக் கொண்டார்கள். வஹிதாவுக்கு நெஞ்சில் பயம் கூடு கட்டியது. பிர்தவ்ஸினுடைய சாவுக்குத் தான் காரணமாக இருந்து விட்டோமே என்று நினைக்கும் பொழுதே அவளுக்குக் கண்களில் நீர் நிறைந்து வழிந்தது. அன்று இரவு தான் பார்க்காமல் இருந்திருந்தால் இதெல்லாம் நடந்திருக்குமா என்று நினைத்தாள். பார்த்ததோடு நிற்காமல் அங்கு போகாமல் இருந்திருந்தால் கூட இப்படி எதுவுமே நடந்திருக்காதே என்று யோசித்தாள். சிறுபிள்ளைத்தனமாகத் தான் நடந்து கொண்டதையொட்டி எத்தனை விஷயங்கள் நடந்து முடிந்து விட்டன என்று நினைத்தவள், அன்றிரவு தன் தாயின் மீது தனக்கு மிதமிஞ்சிப் பெருகிய வெறுப்பு, பிர்தவ்ஸின் மரணத்திற்குப் பிறகு அப்படியே ஒன்றுமில்லாமல் ஆகிவிட்டது எப்படி என்று யோசித்தாள். தன்னிடமிருந்த வெறுப்பின் சுவடுகூட இல்லாமல் மறைந்ததே பெரிய ஆறுதலை அவளிடத்தில் உண்டு பண்ணிற்று. பிர்தவ்ஸின் சாவுக்கு முன்பாக எதுவுமே பெரிய விஷயமாக இல்லாத மாதிரி ஆகியிருந்தது. என்றாலும் தொடர்ந்து இதே மாதிரி இருக்குமா என்று அவளுக்குத் தெரியவில்லை. தன் அம்மாவை எப்பொழுது பார்த்தாலும் பிர்தவ்ஸ் சொன்ன விஷயம்தான் இனி சாகும் வரைக்கும் ஞாபகம் வரும் என்று

நினைத்தாள். பிர்தவ்ஸின் மீது இன்னும் கூட தனக்குக் கோபம் பாக்கியிருப்பதாகவும் உணர்ந்தாள். கூட்டிக் கழித்துப் பார்த்தால், தான் அங்கு போய் அவர்களைப் பார்த்ததற்கும் பிர்தவ்ஸ் தன்னிடம் அப்படிச் சொன்னதற்கும் சரியாகப்போய் விட்டதோ? அவளுக்குக் குழப்பமாக இருந்தது.

அவள் வானத்தை அண்ணாந்து பார்த்தாள். இருட்ட ஆரம்பித்திருந்தது. வானில் திட்டுத்திட்டாக மேகம் சாம்பல் நிறத்தில் தேங்கிக் கிடந்தது. தூரத்தில் பெரிய கடல் ஆமை போலவும் யானையின் உடல் போலவும் தெரிந்தது. வேறொரு மலை கூம்பு வடிவில் வானை முட்டி உயர்ந்திருந்தது. பிர்தவ்ஸ் இந்நேரம் எங்கேயிருப்பாள் என்கிற கேள்வி மனதில் எழுந்தது. சொர்க்கத்திலா, நரகத்திலா என்று யோசித்தாள். ஜன்னத்துல் பிர்தவ்ஸ் என்கிற ஒரு சொர்க்கம் இருப்பதாக ஹதீஸில் படித்திருக்கிறாள். அவளால் அங்கே நுழைய முடிந்திருக்குமா என யோசித்தவள், அவள் நிச்சயம் நரகத்தில்தான் இருப்பாள் என்று நம்பினாள். அவள் செய்த பாவத்திற்கு வேறு எந்த மாதிரியும் நினைக்க முடியவில்லை அவளுக்கு. அது சரிதான் என்றும் நினைத்தவள், மேற்கொண்டு இதுபற்றி யோசிக்கவே கூடாது என்று முடிவுசெய்து கொண்டாள்.

காலையில் மும்தாஜ் ஊரிலிருந்து வந்திருந்தாள். பரிதாவுக்குக் கல்யாணம். அஜீஸ்தான் மாப்பிள்ளை. சொல்லிவிட்டு, “பாவம் நபிஸா” என்று வஹிதாவின் காதில் கிசுகிசுத்துச் சிரித்தாள். இவளுக்கு அவள் என்ன சொல்ல வருகிறாள் என்பது சரியாகப் புரியவில்லை. புரிந்தது மாதிரி தலையாட்டி வைத்தாள். மும்தாஜோடு சைனுவும் வந்திருந்தாள். சைனுவிடம், சபியா தன் மருமகளைப் பற்றின மனக்குறைகளைச் சொல்லவும் முடியாமல், சொல்லாமலிருக்கவும் முடியாமல் தடுமாறிக் கொண்டிருந்த போது, மும்தாஜ் இவளுடைய

அறையைப் பார்க்க வந்து உட்கார்ந்து கொண்டாள். உண்மையில் அவளுக்குச் சிக்கந்தரிடம் பேசவேண்டும் என்பதுதான் நோக்கம். அதைச் சிக்கந்தர் நன்றாகவே புரிந்து கொண்டிருந்தான். வஹிதா அவர்களது பேச்சில் இருந்த கிண்டலையும் கேலியையும் மௌனமாகக் கவனித்துக் கொண்டிருந்தாள். மும்தாஜ் மிக மிக லேசான ஒரு புடவையை உடுத்தியிருந்தாள். அவளது உடம்பில் பாதி அப்படியே அப்பட்டமாக வெளியில் தெரிந்தது. அவள் அதைத் துளிகூட பொருட்படுத்தாதபடி அவனருகில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தாள். அவன் தன் அழகைப் பார்க்கிறான் என்பதைக் கவனித்தும் கவனிக்காதது போல போக்குக் காட்டியபடி பேசிக்கொண்டிருந்தது வஹிதாவுக்குக் கொஞ்சம்கூட பிடிக்கவேயில்லை. இவள் சின்னப்பெண்தானே, என்ன நினைக்கப் போகிறாள் என்று நினைத்துக்கொண்டாள் போலத் தோன்றிற்று. சிக்கந்தரின் பேரில் இவளுக்கு மறுபடியும் வெறுப்பு உண்டாயிற்று, பெண்களிடம் ஏன் இப்படிப் பேசுகிறான் என்று! அவனாவது போகட்டும். இவள் ஏன் இப்படி உடம்பைக் காட்டுகிறாள் என்பது புரியாமல் விழித்தாள் வஹிதா. இங்கேயும் பக்கத்து வீட்டுப் பெண்கள் பகல் நேரத்தில் பொழுது போகாமல் அரட்டையடிக்க சபியா வீட்டுக்கு வந்து உட்கார்ந்து கொள்வார்கள். அவர்களும் கூட இப்படித்தான்! இவனோடு அரட்டையடிப்பார்கள். அவர்களோடு சபியாவும் சேர்ந்துகொள்வாள். அந்நேரத்திலெல்லாம் இவளுக்குள்ளாக அவர்களின் பேரில் வெறுப்பு வளர்ந்து கொண்டேயிருக்கும். அவனைப் பொறுக்கி என்று நினைத்துக் கொள்வாள். ஆனால் அந்த வெறுப்பெல்லாம் சபியா தன்னைத் திட்டும்பொழுது அம்மாவிடம் சிக்கந்தர் காட்டும் எதிர்ப்பில் ஓரளவாவது குறைந்து போய் விடுகிறது.

அவளுக்குக் குழப்பமாக இருந்தது. தான் அவனை

விரும்பாவிட்டாலும், வெறுக்காமலாவது இருக்க விரும்பினாள். அப்படி இல்லாவிட்டால் மீதிக் காலத்தைக் கழிக்கவே முடியாமல் போய்விடும் என்று நினைத்தவள், கனத்த ஆயாசத்துடன் கண்களை மூடிக்கொண்டாள். இருட்டத் தொடங்கியிருந்தாலும் கால்களுக்குக் கீழேயிருந்த மொட்டைமாடியின் ஆனையடிக்கல்லில் வெப்பம் இன்னும் இருந்து கொண்டிருந்தது. ஆமினா வீட்டில் இருந்த வெறுமையும் அங்கு தடையில்லாமல் பெருகிக்கிடந்த முற்றத்து இருளும் மனதை என்னவோ செய்தபடியிருக்க முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அங்கு பார்க்காமலிருக்க முடியாததால் கீழே இறங்கிவிடலாம் என யோசித்தாள். அங்கு சையது இருப்பார் என்பது நினைவுக்கு வந்து பயமுண்டாக்கிப் போகவிடாமல் தடுத்தது. இருந்தாலும் சபியாக் குப்பி நோன்பு திறக்கக் காத்திருப்பாள் என்பது நினைவுக்கு வர கீழே இறங்கினாள். மற்ற எந்த நோன்பையும் விட சையதுஅலி நோன்புதான் மிக மிகப் பூணிப்பாக வைப்பார்கள் எல்லோரும்! காலையிலேயே வீடெல்லாம் கழுவிச் சுத்தப்படுத்திவிட்டார்கள். சாயங்காலமும் நோன்பு திறக்க சபியா உட்காரும் இடத்தைக் கழுவி சுத்தம் செய்து, பாய் அலசி எடுத்து விரித்து வைத்திருந்தாள். ஒவ்வொரு வீட்டிலும் யாராவது ஒரு பெண் இந்த நோன்பை நேர்ந்து கொண்டு தொடர்ந்து மாதம் ஒரு நோன்பு வைப்பார்கள். பதினாறாம் நோன்பை முடிக்கும் அன்று வசதிக்கேற்றது போல் மிஸ்கீன்களைக் கூப்பிட்டுச் சாப்பாடு கொடுத்து, பாத்திஹா ஓதி முடிப்பார்கள். அன்றைய தினமாவது சபியா மிஸ்கீன் சாப்பாடு கொடுப்பாளா என்கிற கேள்வி எழ, வஹிதாவுக்கு ஒரு விஷயம் மட்டும் வியப்பாக இருந்தது. எந்த வீட்டிலும் ஒரு ஆண் கூட இந்த நோன்பு நேர்ந்து பார்த்ததில்லை அவள். வீட்டில் எவ்வளவு பெரிய கஷ்டம் இருந்தாலும் பெண்கள்தான் அதற்காக நேர்ந்து கொண்டு நோன்பு வைப்பார்கள். இவளுக்கு ஒருமுறை மலேரியா காய்ச்சல் வந்தபோது

மூன்று நோன்பு முகையதீன் ஆண்டவர் பெயரில் நேர்ந்து கடைப்பிடித்த அம்மாவிடம், “ஏம்மா ஆம்பளைங்க நேர்ந்துக்கிட்டு நோன்பு வக்கிறதில்லை?” என்று அவள் கேட்டிருக்கிறாள். அம்மா சரியான பதிலைச் சொன்னதாகவே நினைவில்லை.

மாடிப்படிகளில் ஒலித்த இவளது மெட்டி ஒலி கேட்டுப் பாயில் உட்கார்ந்திருந்த சபியா சட்டெனப் படுத்துக்கொள்வதைக் கவனித்துச் சிரித்துக்கொண்ட வஹிதா, நேராக அடுப்படிக்குள் நுழைந்து அடுப்பிலிருந்த பாலை இறுத்து ரவைக் கஞ்சி காய்ச்சத் தொடங்கினாள். ஹாலிலிருந்து வந்த ஊதுபத்தியின் மணம் ஏனோ பிர்தவ்ஸின் மரணத்தினை நினைவூட்டுவதாகயிருந்தது.

பிர்தவ்ஸ் மௌத்தானதிலிருந்து மஃரிபுக்கே ஜன்னல் கதவுகளையும் வாசல் கதவையும் அடைத்து விடுகிறாள் சபியா. குழந்தை பெற்றவர்கள் வீட்டிலும், முதல் தீட்டு வந்த வயதுக்கு வந்த பெண்கள் வீட்டிலும் அறை வாசலில் பேய் அண்டாமலிருக்க நாற்பது நாளைக்கும் ஒரு இரும்புக் கத்தியையும் விளக்குமாற்றையும் போட்டு வைத்திருப்பதைப்போல சபியா, வீட்டு வாசல்படியில் ஒரு கத்தியையும், விளக்குமாற்றையும் வேறு போட்டு வைத்திருந்தாள். சையது கிண்டல் செய்வார். “சபியா நீ இப்பத்தான் வயசுக்கு வந்திருக்கியோ?”

“சும்மாயிருங்க நீங்க, இள வயசுக்காரி, துனியா மேல எம்புட்டு ஈமான வச்சுருந்தாளோ? நப்ஸு, குழிக்குள்ள கெடக்க விடாது. வந்து சேந்துருவா பாருங்க!” என்று சொல்லும் பொழுதே அவளுக்கு உடல் பயத்தில் நடுங்கிப்போகும். “அவளுக்கு ஒரு ஆசை, இந்த ஒலகத்து மேல” என்று அங்கலாய்த்துக் கொள்வாள்.

அதைக் கேட்டு விழுந்து விழுந்து சிரித்த சையது, “ஆமாமா, ஒனக்கெல்லாம் பாரு, எதாச்சும் ஒரு ஆசையாவது இந்தத் துனியாவுல

இருக்கான்னு" என்று நக்கலாகக் கேட்பார். சபியா அவரைப் பார்த்து எரிச்சலோடு ஒரு முறைமுறைப்பாள், கூறுகெட்ட மனுஷன், இந்த மனுஷன் கிட்டேயா பேச்சுக் குடுத்தோம் என்பது மாதிரி! வஹிதாவுக்குத் தினமும் வேடிக்கை பார்த்துச் சிரிக்க இப்படி ஏதாவது ஒன்று நடந்து கொண்டேயிருக்கும்.

அடைபட்டிருப்பதால் வீடு ஒரே புழுக்கமாக இருந்தது. ஹாலின் நடுவே நோன்பு திறப்பதற்காகத் தட்டில் வைக்கப்பட்டிருந்த வாழைப் பழங்களில் ஒன்றின் மீது குத்தி நிற்க வைக்கப்பட்டிருந்த ஊதுபத்திகளிலிருந்து சுருள் சுருளாகப் பிரிந்து எழும் புகை வளையங்கள் நெளிந்து ஓடி ஹால் முழுக்கப் பரவி மூச்சு முட்டச் செய்தது. ஜன்னல் கதவையாவது திறந்துவிட நினைத்துக் கொக்கியை எடுத்துவிட்ட வஹிதாவிடம், "என்னாத்துக்கு தொறக்குற?" என்றாள் சபியா அவசரமாக! ஜன்னலுக்கு வெளியே ஒண்டிக் கொண்டிருந்த பேய் உடனேயே உள்ளுக்குள் நுழைந்து விடுமென்கிற பதற்றம் குரலில் நிரம்பியிருந்தது. "காத்தே இல்லாம வேர்க்குது" என்ற வஹிதா உடனே சுதாரித்துக் கொண்டு, "பள்ளியில நகரா அடிக்கிற சத்தம் கேட்காது வேற! நோன்பு திறக்கணுமில்ல?" என்றாள். "எல்லாங் கேக்கும். மொதல்ல சன்னலைச் சாத்து. ரொம்பத்தான அக்கறை" என்ற சபியா, "ஊக்கப்பட்ட கட்டை" என்று முணுமுணுத்துக்கொள்வது காதில் விழுந்தது இவளுக்கு. தொடர்ந்து அவள் தன் கையிலிருந்த கர்ச்சீப்பினால் சுர்ரென்று சத்தம்வர மூக்கை உறிஞ்சினாள்.

வஹிதாவுக்குக் குடலை புரட்டியது. இன்றுதான் நிம்மதியாகச் சாப்பிட்டிருந்தாள். சபியா நோன்பு வைத்ததால் அடுப்படி பக்கமே வரவில்லை, படுத்தே இருந்தாள். சாப்பாட்டு வகைகளைப் பார்த்தால் நாவில் நீர் ஊறிவிடும். பிறகு நப்ஸைக் கட்டுப்படுத்த முடியாது என்பதனாலோ என்னவோ, அவள் அடுப்படிக்குள்ளேயே

நுழையவில்லை. இன்று மட்டும்தான் வஹிதாவுக்குச் சாப்பாட்டை அருவருப்பில்லாமல் சாப்பிட முடிந்தது. வஹிதாவுக்குச் சிரிப்பு வந்தது, தன்னை நினைத்து, தன் நிலைமையை நினைத்து. சபியா இந்த வயதில் இப்படிப் பயந்து சாவது வேறு வேடிக்கையாக இருந்தது அவளுக்கு. "ஊக்கப்பட்ட கட்டை" என்று அவள் தன்னைச் சொன்னதை மறுபடி ஞாபகப்படுத்திக் கொண்டாள். ஊரில் யார் மௌத்தாக இருந்தாலும் ஒரு வாரமாவது பயந்து போய்த் தான் இவளும் இருப்பாள். இரவு நேரத்தில் ஒண்ணுக்கிருக்கக் கூடப் போகாமல் பல்லைக் கடித்துக் கொண்டு படுத்திருப்பாள். காலையில் அம்மாவிடம் சொன்னால் அவள் திட்டுவாள், "என்கூட வந்து படுத்துக்கலாமில்ல" என்று! இன்று பக்கத்து வீட்டில் இவ்வளவு பெரிய மௌத்து நடந்திருக்கிறது. தனக்குத் துளிக்கூட பயமில்லை. அவளுக்கு வியப்பாக இருந்தது. அதற்கு என்ன காரணம் என்று யோசித்தாள். பிர்தவ்ஸின் மரணம் தன்னைப் பயமுறுத்தாததற்கு என்ன காரணம் இருக்கும் என்றே புரியவில்லை அவளுக்கு. தனது பயமெல்லாம் எங்கே போயிற்று என்று அவளுக்கே ஆச்சர்யமாகத்தானிருந்தது. நேற்றிரவுகூட தூக்கம் வராத நள்ளிரவில் அறையை விட்டு வெளியே வந்து நீண்டநேரம் மொட்டை மாடியில்தான் நின்று கொண்டிருந்தாள் அவள்.

தூணோரத்தில் ஒண்டி நின்று கொண்டிருந்த வஹிதாவை யாரோ அவளது பின்புறத்தில் லேசாகத் தட்டியதும், திடுக்கிட்டுத் திரும்பினாள். அவளுக்குப் பின்புறமாக சையது நின்று கொண்டு பல்லை இளித்து, "இந்தப் புடவை ஒனக்கு ரொம்ப அம்சமா இருக்கு" என்று மெதுவாகச் சொல்லிவிட்டுத் தள்ளாடியபடி முன்னோக்கிச் சென்று சபியாவின் அருகில் போய் அமர்ந்துகொண்டார். சபியா இவர் வந்ததைக் கவனித்ததாகவே தெரியவில்லை. கிதாபில் மூழ்கியிருந்தாள். வஹிதாவுக்கு அவமானத்தாலும் வெட்கத்தாலும்

உடல் கூசியது. அவர் தொட்டுவிட்டுப் போன இடம் நெருப்பினால் சுட்டது போல எரிந்தது. ஒரு கணம் நிமிர்ந்து ஆத்திரம் கொப் பளிக்கும் கண்களால் அவரை உற்றுப் பார்த்தாள். இவள் கண்களைச் சந்திக்கப் பயந்து அவர் தன் முகத்தைத் தாழ்த்திக் கொண்டதிலிருந்தே தன்னையும் அறியாமலேயே இப்படி நடந்து விட்டதாக நினைப்பது போன்ற பாவனை இருந்தது. வெளிக்காட்டவியலாத தன் கோபத்தைத் தனக்குள்ளாக விழுங்கிக் கொண்டாள் வஹிதா. அவளுக்கு அதற்கும் மேலே எதிர்ப்பைக் காட்டத் தெரியவுமில்லை.

அங்கேயே திகைத்துப் போய் நின்றிருந்தவளைக் கலைக்கும் விதமாக, “என்னது அங்கியே நின்னுக்கிட்டு! பாங்கு சொல்லியாச்சு, வந்து குப்பிக்கு வேணுங்கறதக் கேட்டுப் பரிமாறும்மா” என்ற சையதின் குரல் எழுப்ப, தன் நிலைக்குத் திரும்பியவள், அவரது குரலில் அவளைச் சமாதானம் செய்யும் தொனி இருப்பதை உணர்ந்ததும், அவர் தன்னைத் தொட்டு விட்டுப்போனது தவறுதலாக நடந்த விஷயம் இல்லை என்பது நிரூபணமாக, சோர்ந்து போனாள் வஹிதா.

# 55

ஹாலில் கிடந்த நீளமான நாற்காலியில் படுத்துக்கிடந்தாள் ராபியா. மனது கொஞ்சம்கூட உற்சாகமில்லாமல் சோர்வாக இருந்தது. அம்மா, ஆமினா நன்னியோடு மதுரையில் ஆஸ்பத்திரியிலேயே இருந்தாள். எப்பொழுது வருவார்கள் என்றே தெரியவில்லை. அத்தாதான் இரண்டு நாட்களுக்கு ஒரு தடவை துணிமணி, சாப்பாடு கொண்டுபோய் கொடுத்துவிட்டுப் பார்த்து வருவார். அத்தா தினமும் இரவில் தன் அறைக்குப் படுக்கப்போகும் பொழுது இவளிடம் கேட்பார். “ராபியா, நீ எங்கூட வந்து படுத்துக்கலாம் இல்லெ?” அவரது குரல் காட்டும் பிரியத்தைப் பிடிவாதமாகத் தலையசைத்து மறுப்பாள் இவள்.

“அத்தா கூப்புட்டுத் தன்னோட படுத்துக்கச் சொன்னா படுத்துக்காதே, தூங்கறப்போ ஒனக்குப் பாவாடை தாவணி வெலகுறது தெரியாது. அத்தா முன்னால அசிங்கம்” என்று சொல்லிவிட்டுச் சென்ற அம்மாவின் குரல் கூடவேயிருந்து இவளைத் தடுக்கும். ‘அம்மா சொல்வதும் நிஜம்தானே? அம்மா சொல்வது மாதிரி, ‘பகலைக்கெல்லாம் கொஞ்ச நஞ்ச ஆட்டமா?’ என யோசித்தவள் ‘இப்பொழுதுதான் அதெல்லாம் இல்லாமல் வீட்டிற்குள்ளேயே தானே அடைந்து கிடக்கிறேன், பிறகென்ன? அத்தாவோடு படுத்துக் கொண்டால் வருத்தம் கொஞ்சமாவது குறையுமே’ என நினைத்தாலும் அந்நினைவைப் பிடிவாதமாகப் புறக்கணித்தாள். அத்தாவும் பெரியம்மாவும் தன்னிடம் எவ்வளவோ பிரியமாக இருந்தாலும் அவளுக்கு அம்மா ஞாபகம் பெரும் ஏக்கத்தை உண்டு பண்ணிற்று. தனக்காக யாருமேயில்லாத மாதிரி உணர்ந்தாள்.

அவளுக்கு பிர்தவ்ஸ் சித்தியின் ஞாபகம் வந்தது. கடைசியாகப் பார்த்த அவள் முகம் நினைவில் வந்து நின்றது. உலர்ந்து போய், பொம்மைபோல வழுவழுப்பாக இருந்தது அவள் முகம். சித்தி இனி திரும்பி வரவே முடியாத இடத்திற்குப் போய்விட்டாள் என்பதையே நம்பமுடியவில்லை. அவளைப் பார்க்க நினைத்து அழுதாலும் தவித்தாலும் முடியவே முடியாது என்பதே வினோதமாக இருந்தது. வயதாகிக் கிழவிகளானால்தான் செத்துப் போவோம். வயதானவர்கள்தான் முதலில் சாவார்கள் என்றுதான் அவள் நினைத்திருந்தாள். இன்னும் மிச்ச வயது இருக்கையிலேயே ஏன் இவள் மட்டும் செத்துப்போனாள் என்று புரியவில்லை. நூரம்மா இன்னும்கூட சாகாமல் கிடப்பது ஞாபகத்திற்கு வந்தது. கொஞ்ச நாளாக அவள் படுத்தேதான் கிடக்கிறாள், எதையெதையோ உளறிக்கொண்டு! இலியாஸ்தான் தினமும் இங்கேவந்து பெரியம்மாவிடம் தானும் சாப்பிட்டுவிட்டு, அவளுக்குக் கஞ்சி கரைத்து வாங்கிப்போய் வாயில் ஊற்றி விடுகிறான். ஒருநாள் ராபியாவும் அவன்கூட வீட்டுக்குள் போனாள். இவர்கள் வீட்டில் நுழையும் முன்பே, தெருவில் நடந்து வந்த சத்தத்தை வைத்தே, யாரது என்று கேட்ட நூரம்மா, அருகில் போனதும் கண்களை லேசாகத் திறந்து பார்த்துவிட்டுப் பேசாமல் இருந்துகொண்டாள். வீடே மூத்திர நாற்றம்! தாங்கமுடியவில்லை இவளுக்கு. இலியாஸ் அவள் வாயில் கஞ்சியை ஊற்றும் முன் சிம்னி விளக்கைப் பற்ற வைத்து விளக்காங்குழி மாடத்தில் வைத்திருந்தான். தாவணியால் மூக்கை நன்றாக அழுத்தி மூடிக்கொண்டவள், “நான் போறேன்டா” என்றாள். அவன் அவளைப் பரிதாபமாகப் பார்த்துவிட்டு, “ஒரு நிமிஷம் நில்லு, நானும் வந்துடுவேன் உன்னோடயே” என்று கெஞ்சினான்.

அவனைப் பார்க்கப் பாவமாக இருந்ததால், “சரி, சரி சீக்கிரம்” என்று

சொல்லிவிட்டு, நூரம்மா படுத்திருந்த பாயை மிதிக்காமல் தள்ளி நின்றுகொண்டாள். அவனும் இரவில் ராபியா வீட்டில் படுத்துக்கொள்ள வந்துவிடுவான். நூரம்மா தனியாகத்தான் கிடப்பாள். பெரியம்மாதான் அவனைப் படுக்கக் கூடாது என்று சொல்லியிருக்கிறாள். பாதி ராத்திரியில் நூரம்மாவுக்கு ரூஹு போய்விட்டால் பயந்து விடுவானாம். ராபியா வீட்டில் பெரியம்மா அறைக்கு வெளியே பாய்விரித்துப் படுத்திருப்பான். அவனைப் பார்க்கும் பொழுது ராபியாவுக்குச் சமயங்களில் அழுகையாக வரும். பத்து நாள் அம்மா ஊருக்குப்போனதே தனக்கு இத்தனை வருத்தமாக இருக்கையில் அவனுக்கு எப்படி இருக்கும் என்று நினைத்துக் கொள்வாள்.

இலியாஸ் கஞ்சியை ஊற்றும்போது வாயைத் திறந்துகொடுத்து குடித்துக் கொண்டிருந்த நூரம்மா தெருவில் இந்த வீட்டைக் கடந்து யாரோ போகும் காலடிச் சத்தம் கேட்டதும் குடிப்பதை நிறுத்திவிட்டுக் கண்களை மூடியபடியே "யாரது?" என்று கேட்டாள் இலியாஸும் ராபியாவும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து லேசாகச் சிரித்துக் கொண்டார்கள். அவன் சொன்னான்: "இப்பிடியே தான் எப்ப, எந்தநேரம் தெருவுல யார் போனாலும், அப்பிடியே காதுல விழுந்துரும். ஒடனே யாரது, யாரதுன்னு கேட்டுக்கிட்டே கிடக்கும். ஒரு நாளைக்கி நூறுதடவை. யாரா இருந்தாக்க என்னவாம்?" ஆச்சரியம் தாளவில்லை இருவருக்குமே. வேறு ஒரு வார்த்தையும், ஒரு அசைவும் இல்லாமல் இருக்கும்போது இது மட்டும் எப்படி என்று! பெரியம்மாதான் மையித்து குளிப்பாட்டும் ஆசியம்மாவை ஏற்பாடு செய்திருந்தாள். வாரத்தில் இரண்டு நாள் வந்து நூரம்மாவைச் சுத்தம் செய்து, துணிமாத்த! பெரியம்மா அடிக்கடி சலித்துக் கொள்ளுவாள், "வயசான காலத்துல பாக்க பிள்ளை வேணும்பாங்க, இங்கெ வயசான

தாயையும் விட்டு, எத்தீமான பிள்ளையையும் விட்டுட்டுப் போயிட்டாளே அறிவுகெட்ட பொட்டச்சி.”

ராபியாவுக்கு மறுபடியும் சித்தியின் ஞாபகம் வந்தது. அவள் தன்மீது காட்டிய பிரியங்களுக்கான ஏக்கமாகவே அவளது நினைவுகள் இருந்ததை உணர்ந்தாள். இனி எப்பொழுதுமே அவை கிடைக்கப் போவதில்லை என்கிற உண்மையும் அநியாயமாகச் செத்துப்போய் விட்டாளே என்கிற துக்கமும் அவளை வருத்திற்று. தான் இனி எப்பொழுதும் அந்த ஊருக்குப் போகப் போவதில்லை. தனக்குத் தினமும் கதைசொல்லித் தன்னோடு கும்மாளமிட்டவள், பனந்தோட்டத்திலிருந்து வீடு வரை தன்னை ஓலைப் பொட்டியில் வைத்துத் தன் தலைமீது தூக்கிச் சுமந்தவள் இன்று இந்த உலகிலேயே இல்லை. அவளுக்குத் துக்கம் பொங்கியது. பொங்கி வந்த கண்ணீரைக் குப்புறப்படுத்து மறைத்தபடியே நீண்ட நேரம் அழுதுகொண்டிருந்தாள். றைமா பெரியம்மா வரும் சத்தம் கேட்டு, தன் தாவணியால் முகத்தை அழுந்தத் துடைத்து விட்டுக் கொண்டாள். தான் அழுவதைப் பார்த்தால் பெரியம்மா கவலைப்படுவாள் என்பது தெரியும் அவளுக்கு.

றைமா அவளருகில் வந்து மென்மையாக அவளைத் தொட்டு எழுப்பினாள். “என்ன ராபியா, சாயங்காலத்துல படுத்துக்கிட்டு? விளக்குவைக்கிற நேரம் பொம்பளப்பிள்ளை படுக்கக்கூடாது. எந்திரி! வெளிய போய் மதினாவைப் பார்த்துட்டு வா.” இவள் அழுகிறாளோ என்கிற வேதனை அவள் முகத்தில் நன்றாகவே தெரிந்தது. “சும்மாதான் பெரியம்மா” என்று தன்னுள்ளாகவே முனகிக் கொண்டாள். பெரியம்மாவும் இவள் முகத்தைப் பார்க்கத் தைரியமில்லாத மாதிரி அங்கிருந்து அவசரமாகவே நகர்ந்து போனாள்.

ராபியா அங்கிருந்து எழுந்து வெளியில் வந்து தெருத்திண்ணையில்

போய் உட்கார்ந்து கொண்டாள். பரிதாவுக்குக் கல்யாணம் நடந்து முடிந்துவிட்டது. அது முடிந்த கையோடு மதினாவும் வயதுக்கு வந்து விட்டாள். இன்றோடு நான்கு நாள் ஆகிறது. இவளுக்கு அவளிடம் வயதுக்கு வருவது பற்றிக் கேட்க எவ்வளவோ கேள்விகளும் அவளுக்கு இவளிடம் சொல்ல எத்தனையோ விஷயங்களும் இருந்தன. இவள்தான் சரியாகவே அங்கே போகவில்லை. எங்கேயும் போகக்கூட பிடிக்காமல் வீட்டிற்குள்ளேயே அடைந்து கொண்டிருந்தாள். மதினாவைப் பார்த்து நேற்று கொஞ்ச நேரம் மட்டும் பேசிக் கொண்டிருந்தாள். அவளைச் சுற்றி நிறையப் பெண்கள் உட்கார்ந்து அரட்டையடித்துக் கொண்டிருந்தார்கள். மதினா பட்டுப்புடவை கட்டி நிறைய நகை போட்டு சேரில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். வீடு முழுவதும் ஒரே சிரிப்பும் கொண்டாட்டமுமாக இருந்தது. இவள் அவளது காலடியில் போய் நெருக்கமாக அமர்ந்து கொண்டு மதினாவையே பார்த்துக் கொண்டிருந்தாள். சந்தோஷத்தாலும் வெட்கத்தாலும் பூரித்துப் போய் அமர்ந்திருந்தாள் அவள். மதினாவை இனிமேல் வீட்டுவாசல் படி தாண்ட விட மாட்டார்கள். இந்த வருடம் ஸ்கூலில் சேர்க்க மாட்டார்கள் என்ற நினைவு வேறு இவளைத் துன்புறுத்தியது. இனி தான் தனியாகத்தான் பள்ளிக்குப் போகவேண்டும் என்பதை நினைத்துக் கவலையாகவும் இருந்தது. அஹமது வேறு இனி இந்த ஊருக்கு வரமாட்டானாம். அவனது மாமா அங்கிருக்கும் ஒரு நல்ல ஸ்கூலில் அவனைச் சேர்த்துவிடப் போவதாக நபிஸா சொல்லியிருந்தாள். கூட்டத்திலிருந்து கலகலவென்ற சிரிப்பொலி கேட்டுத் தன் நினைவுக்கு வந்தாள் ராபியா.

யாரோ ஒரு பெண் கண்ணடித்துச் சொன்னாள், “அடுத்தது யாரு, நீதான ?” என்று ! அதற்கு மும்தாஜ், “ஆமாமா, வெயில் காலம் இல்லெ வெடிச்சிராதாக்கும்” என்று பதில் சொல்லிச் சிரித்தாள். கூட்டமே

சேர்ந்து கொண்டு சிரித்தது. ராபியாவுக்குச் சங்கடமாக இருந்தது. சைனு அதற்கு, "என் மக நல்லவேலை செஞ்சா, சித்திரையக் கடத்திட்டா" என்று சொல்லி நிம்மதிப் பெருமூச்சு விட்டாள். "சித்திரையில வயசுக்கு வர்றதும், பிள்ளை பெக்கறதும் குடும்பத்துக்கு நல்லதில்லையில்ல?" என்றாள். "நீ ஏழுநாள் வரை இங்கியே இரு. உங்கம்மாதான் இல்லையில்ல?" மதினா, ராபியாவின் காதோரமாகக் குனிந்து கிசுகிசுத்தாள். அவளுக்குத் தன்கூடவே ராபியா இருந்தால் சந்தோஷமாக இருக்கும் என்று ஆசையாக இருந்தது. ஆனால் அவள் இருக்கமாட்டாள். அவள் இருந்தாலும், அம்மா அனுமதிக்க மாட்டாள் என்பதனால் அரைகுறை மனதோடுதான் அவளும் கூப்பிட்டாள். ராபியா வேகமாகத் தலையசைத்து மறுத்தாள். அவள் முகம் கறுத்துப்போய்க் கிடந்தது. மதினாவுக்கு இவளைப் பார்க்கவே மிகவும் சங்கடமாக இருந்தது. அவள் இத்தனை கவலையாக இருக்கும் பொழுது தான் இப்படி அலங்காரம் செய்து கொண்டு இருக்கிறோமே என்று நினைத்துக் கொண்டாள். ராபியாவுக்கும் இது ஓரளவு புரியத்தான் செய்தது.

வெயில் தாழ்ந்து இருட்டத் துவங்கியிருந்தது என்றாலும், வெக்கைக்குக் குறைவில்லை. மதினா வீட்டுக்குப் போகலாமா என்று யோசித்தவள், இருட்டினதுக்கப்புறம் அங்கு போகக்கூடாது என்பதனால் அந்த எண்ணத்தைக் கைவிட்டாள். தெரு விளக்கு வெளிச்சத்தில் பளிச்சென்றிருந்தது. தூரத்தில் இலியாஸ் நின்று கொண்டு யாரிடமோ பேசிக்கொண்டிருப்பது தெரிந்தது. தனியாக இருந்து இருந்து என்னவோ போலிருந்தது அவளுக்கு. அவனிடமாவது போய் ஏதாவது பேசினால் தேவலை என நினைத்தவள், மெதுவாகத் திண்ணையிலிருந்து இறங்கி அவனை நோக்கி நடந்து சென்றாள். இதமாக வீசிய காற்று மனதிற்குள் இருந்த கவலைகளிலிருந்து

விடுவித்து ஆறுதலை உண்டு பண்ணுவதாக இருக்க, திடீரெனத் தனக்காக யாருமேயில்லாத மாதிரி உணர்ந்தாள். தான் தனித்துவிடப்பட்டது போலவும் இலியாஸைப் போன்றே யாருமற்ற அனாதை எனவும் தோன்றியது. உடனேயே செத்துப் போய்விட்டால் என்ன என்று நினைத்துக்கொண்டவளுக்கு பயமாகவும் இருந்தது. தன்னை நினைத்தும் இலியாஸை நினைத்தும் ரொம்பவே இரக்கப்பட்டுக்கொண்டாள்.

அவளின் மிகச்சிறு வயதில் ஒருநாள் மாம்பழம் தின்று கொண்டிருந்தாள். தின்று முடித்ததும் கையையும் வாயையும் கழுவ வேண்டும் எனத் தோன்றாமல் கழுத்தைத் திருப்பி வாயைத் தனது சட்டையின் தோள் பகுதியில் அழுத்தித் தேய்த்துக் கைகளையும் தனது பாவாடையில் தேய்த்துத் தடவித் துடைத்துக் கொண்டாள். அதைக் கவனித்துக் கொண்டிருந்த அம்மா நன்றாகத் திட்டித்தீர்த்தாள். அத்தா வேண்டுமென்றே தான் சாப்பிட்ட கையை அவளது பாவாடையில் தடவித் துடைத்துவிட்டுச் சிரித்தார். அன்று இரவெல்லாம் அவள் அவமானத்தினால் அழுது கொண்டேயிருந்தாள். உடனேயே செத்துப்போய்விட வேண்டும் என்று விரும்பினாள். கிணற்றில் குதித்து விடலாமா என்றெல்லாம் நினைத்தபடியே தூங்கிப்போனாள். அன்று தன்மீது தனக்கு உண்டான இரக்கமும் வருத்தமும் மறுபடி இன்று தோன்றியிருந்தது.

தெருவில் யாரோ ஒரு பிச்சைக்காரி சோறு கேட்டு இவளுக்கு முன்னால் போய்க் கொண்டிருந்தாள். அவளது புடவை கிழிந்து தைக்கப்பட்டிருந்தது. தலையில் முக்காடு போட்டுத் தன் பறட்டைத் தலையை மூடியிருந்தாள். அவளைக் கடந்து வந்த காற்று ராபியாவைத் தாண்டிப் போகும்போது துர்நாற்றம் வீசிற்று. மூக்கைச் சுழித்து சுவாசத்தை நிறுத்தி தம் கட்டிக் கொண்டாள் ராபியா. தானும்

அவளைப் போலப் பிச்சைக்காரி என்ற எண்ணம் உண்டாயிற்று. அவளிடமிருந்து வந்த துர்நாற்றம் சகிக்க முடியாதபடி குடலைப் புரட்டியது. எதற்காக மொஸாபிர்கள் மேல் மட்டும் இப்படிக் கெட்ட வாடை வருகிறது என்று நினைத்தவள் ஊரில் எத்தனை குளம் இருக்கிறது, போய் குளித்தால் என்ன என்று நினைத்தாள். அம்மா இவளைக் குளத்திற்குக் குளிக்க அனுப்பவேமாட்டாள், "கர்மம், பிச்சைக்காரங்க எல்லாம் குளிப்பாங்கடி" என்று! இவள் சற்று வேகமாகவே நடையை எடுத்து வைத்தாள், அவளைத் தாண்டிப் போய்விட்டால் இந்த வீச்சத்தை விட்டுப் போய்விடலாம் என்பது மாதிரி!

இலியாஸின் வீட்டைக்கடந்த பொழுது வீட்டினுள்ளிருந்து, "யாரது?" என்ற கேள்வி வர சற்று நேரம் தயங்கி நின்று விட்டு மறுபடியும் நடக்க ஆரம்பித்தாள். இவளுக்குப் பின்புறமாக வந்த பிச்சைக்காரப்பெண்ணின் காலடிச் சத்தத்திற்கும் ஒன்றிரண்டு தடவை, "யாரது?" என்கிற கேள்வி உள்ளிருந்து வர அப்பெண், அந்த வீட்டில் ஆள் இருக்கிறார்கள் என்று நினைத்து, அப்படியே நின்றுகொண்டு, "அம்மா தாயே, சோறு போடுங்கம்மா" என்று குரல் கொடுக்கத் துவங்கினாள்.

இலியாஸ், ரபீக்கோடு பேசியபடி நின்று கொண்டிருந்தான். அவர்களிடம் வேகமாக வந்து அருகில் நின்றுகொண்ட ராபியா, "இலியாஸ் அங்க பாருவே" என்று சொல்லிக் கைகாட்டினாள். அவள் காட்டிய திசையில் சட்டெனத் திரும்பிப் பார்த்தான், தன் வீட்டுக் குடிசை முன்பாக நின்று பிச்சை கேட்பவளைப் பார்த்து விட்டு, "ப்ச்! அதுவா" என்றவன், "அந்தக் கிழவிதான் தெருவுல யார் நடந்தாலும் யாரதுன்னு கேக்குது, சரி, யாரோ ஆளிருக்காகன்னு அந்தப் பொம்பளை சோறு கேட்கிறா, நின்னுட்டுப் போகட்டும்" என்றான்

அலட்சியமாக! ராபியாவுக்கு அவனைப் பார்த்து ஆச்சர்யமாக இருந்தது, இவனுக்கு ஒரு கவலைகூட இல்லையா என! அம்மா இல்லை என்பதுகூட அவனுக்கு எப்படிக் கவலையில்லாமல் இருக்கும்? தன் பேச்சில் மும்முரமாக இருந்தான் இலியாஸ். ரபீக் சொன்னான். "இனிமேல எங்கண்ணன் இங்க வரமாட்டான், டவுனிலேயே படிப்பானாம்."

இலியாஸின் முகத்தில் வருத்தம் தெரிந்தது. இவளைப் பார்த்து, "அஹமது இங்கெ வரமாட்டானாம்" என்று சொன்னான். "மதினாவும் இனி வெளிய வரமாட்டா, தெரியுமில்ல?" என்றாள் இவள் தன் பங்குக்கு. இருவரும் ஒருவரை ஒருவர் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்து விட்டு வீட்டை நோக்கித் திரும்பி நடக்க ஆரம்பித்தார்கள். ராபியாவுக்கு அவனைக் கட்டிக்கொண்டு அழவேண்டும் போல இருந்தது. திடீரென அவன் மீது தனக்கு இத்தனை இரக்கமும் பரிவும் எப்படி உண்டாயிற்று என்று அவளுக்கு விளங்கவில்லை. அவனுக்கு ஏதாவது செய்தே ஆகவேண்டும் போலிருந்தது.

முன்பெல்லாம் அதிகாலையில் குளிர்காலங்களில் பிள்ளைகள் எல்லோருமாகத் தெருவோர மந்தையில் சுற்றிலும் உட்கார்ந்து கொண்டு குளிர் காய்வார்கள். ஆளுக்குக் கொஞ்சமாக சுள்ளியும் தட்டியும் பொறுக்கிக் கொண்டு வந்து குவித்துக் கொண்டு எரிப்பார்கள். அப்பொழுது தன் பக்கத்தில் இலியாஸ் உட்கார்ந்தான் என்றால், இவள் அவனை அங்கே உட்காரவே விடமாட்டாள். "எந்திரிச்சு அங்கிட்டுப் போ" என்று விரட்டியடிப்பாள். மதினா, அஹமது, ரசாக் எல்லோருமே அப்பொழுது ஒற்றுமையாகத்தான் இருந்தார்கள். மதினா இவளைத் திட்டுவாள், "ஏன் அவனை இப்பிடி விரட்டுற?" என்று. "சீ . . .! அவனும் ஓட்டை டவுசரும்" என்பாள்

ராபியா. பம்பரம் விளையாடினாலும் அவனைச் சேர்த்துக் கொள்ள விடமாட்டாள். அதற்குக் காரணம் வீட்டில் அம்மாவும் பெரியம்மாவும் இலியாஸை ரொம்பவும் நல்லவிதமாக நடத்துவது தான். இவளுக்கு எரிச்சலாக இருக்கும். தனக்குத் தருவது போலவே அவனுக்கும் எதுவாக இருந்தாலும் தருவதும் பிரியம் காட்டுவதும் அவன் மீது பொறாமையை உண்டு பண்ணியிருந்தது. றைமா பெரியம்மாதான், "எத்தீமான பிள்ளை" என்று சொல்லிச் செல்லம் கொஞ்சுவாள். இப்பொழுது தனக்கே அவன் மீது இத்தனை அன்பு எப்படி வந்தது என்று நினைத்துக் கொண்டாள்.

"ராபியா, உங்க நன்னி எப்புடியிருக்காங்க, உங்கம்மா இன்னும் ஊருக்கு வரலை?" என்று கேட்ட ஷெரிபாவின் குரல் கேட்டு நின்றாள்.

"அம்மா இன்னும் வரலைக்கா. நன்னிக்கு இன்னும் சவுரியமாகலையாம்" என்றவள், "வர்றேன்க்கா" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து நகர்ந்து சென்றாள். ஷெரிபாவின் குரலில் தெரிந்த கருணையைக் கவனித்தாள் ராபியா. எல்லோருமே தன்னிடத்தில் ரொம்பவும் அனுதாபத்தோடு பேசுவதும் பார்ப்பதும் அவளுக்கு என்னவோ போலிருந்தது. எதற்காக இப்படி என்று எரிச்சல்வேறு வந்தது. தனக்குத்தானே எவ்வளவோ இரக்கப்பட்டுக் கொண்டாலும் வேறு யாரும் தன் மீது இரக்கப்பட்டால் இவளுக்கு ஏனோ பிடிக்கவேயில்லை. கூட வந்து கொண்டிருந்த இலியாஸ் தன் டவுசர் பாக்கெட்டில் கைவிட்டு எதையோ எடுத்து, ஒரு நிமிடம் நின்று இவளிடம் காட்டினான், "இதப்பாரு" என்று. அவளும் நின்று அதை உற்றுப்பார்த்தாள். பிரைஸ் அட்டை அது. அவளிடம் அதனை விரித்துக்காட்டினான். ஊதா நிறத்தில் கீழேயெல்லாம் வரிசையாக இடைவெளியில்லாமல் மூடி நம்பர் ஒட்டியிருந்தது. மேல் புறத்தில் 5 காசு, 10 காசு என்று வரிசையாகக் காசுப்படமும் நம்பர்களும் இருந்தன.

*அவற்றினிடையே எம்ஜிஆர், சிவாஜி படம் போட்டிருந்தார்கள். இது எதுக்காக என்று கேட்பதுபோல அவனை நிமிர்ந்து பார்த்தாள் ராபியா. அவனது கண்களிலும் கறுத்த முகத்திலும் ஆர்வம் நிரம்பியிருந்தது. "பிக்கிறியா?" என்று ஆவலுடன் கேட்டவன், "அஞ்சு ரூபா லாபம் கிடைச்சா செலவுக்கு வச்சுக்குவேன்" என்றான் பெருமையாக! அவளுக்கு அவனுக்காக எதாவது செய்தால் தேவலை என்றிருந்த பொழுது அவன் இப்படிக் கேட்டதும் சந்தோஷமாகவும் ஆறுதலாகவும் இருந்தது. "உம்! பிக்கிறேன். வீட்டுக்கு வா" என்றாள் அவளும் ஆர்வமாக! பிறகு இருவருமாகச் சேர்ந்தே வீட்டை நோக்கி நடக்கத் துவங்கினார்கள். "ஒரு நிமிஷம் வெளிய நில்லு, விளக்கேத்திட்டு வர்றேன்" என்றுவிட்டு அவன்மட்டும் தன் குடிசையை நோக்கி வேகமாக நடந்து உள்ளே போனான். அவனது கால்சுவட்டின் சத்தம் கேட்டுக் குடிசைக்குள்ளிருந்து யாரது என்கிற குரல் வர, அக்குரலில் இருந்த நடுக்கமும், அது உண்டாக்கிய பீதியும் புதிதாக அவளைத் தாக்க, அவன் வரும்வரை பயத்தோடு அங்கேயே ஒதுங்கி நின்று கொண்டிருந்தாள் ராபியா.*

# 56

வஹிதாவுக்குச் சந்தோஷத்தில் கைகால் ஓடவில்லை. இன்று சாயங்காலம் அம்மா வந்து தன்னை வீட்டிற்குக் கூட்டிச் செல்லப்போகிறாள். நாற்பதன்றே வந்து கூட்டிப் போயிருக்க வேண்டியது. ஆனால், அப்போது ஆமினாவுக்கு உடல் நலமில்லாமல் சொஹ்ரா சித்தி ஆஸ்பத்திரியில் இருந்ததால், இங்கேயே சபியா பட்டுச்சேலை எடுத்து மடி நிரப்பி வைத்துக் கொண்டாள். இப்பொழுது ஆமினாவை வீட்டுக்குக் கூட்டி வந்து விட்டார்கள். ஆள் பாதியாக இளைத்திருந்தாள். சொஹ்ரா தன்னோடு இருக்கச் சொன்னதற்கு முடியவே முடியாது. என் புருஷன் எனக்காகக் கட்டிய வீட்டிலேயே என் ரூஹு கிடக்கட்டும் என்று சொல்லிவிட்டாளாம். அவளைப் பார்க்கச் சகிக்கவில்லை வஹிதாவுக்கு. நடைப்பிணம் என்று சொல்லக் கேள்விப்பட்டிருந்தாள். அவளைப் பார்த்தால் அப்படித்தானிருந்தது.

ஊருக்குள் பரவலாக பிர்தவ்ஸின் மௌத்தைப் பற்றி ஆளுக்கு ஒன்றாகப் பேசினார்கள். சபியா வீட்டில் காலை பதினொரு மணிக்கே தன் வேலைகளை எல்லாம் முடித்து விட்டு ஐந்தாறு பெண்கள் வந்து கூடுவார்கள் தினமும். அவர்களுக்கு ஏதாவது ஒரு புரணி யாரைப் பற்றியாவது பேசியே தீரவேண்டும். இல்லாவிட்டால் மண்டை வெடித்துவிடும். அவர்களோடு சிக்கந்தரும் உட்கார்ந்து கொள்வான். மதனி, மாமி, மச்சி என்று உறவு முறை சொல்லிக் கொண்டு வம்பளப்பான். கொஞ்சநாளாக இதே பேச்சுதான் எல்லோருக்கும். பலவிதமாகக் கற்பனை செய்து இப்படித்தான், அப்படித்தான் என்று நடந்ததைக் கற்பனையிலேயே சொல்லிப் பார்த்துக் கொள்வார்கள்.

வஹிதாவுக்குச் சகித்துக் கொள்ளவே முடியாது. சமயங்களில் சிக்கந்தரிடம் முணுமுணுப்பாள், “நிறைஞ்ச வீட்டுலருந்து ஊர் கர்மத்தை இப்புடி அலசிக் குடிச்சா, தரித்திரம் தான் வீட்டைப் புடிச்சு ஆட்டும்” என்று. “கிழடி மாதிரி பேசாத” என்று ஒரு வார்த்தையில் அவள் வாயை அடைத்துவிடுவான். அவன் பெண்களோடு அரட்டையடிப்பது இவளுக்குப் பிடிக்கவில்லை என்பதை எத்தனையோ சந்தர்ப்பங்களில் முகத்தில் காட்டிக்கொண்டேதான் இருப்பாள். அவன் அதைக் கண்டு கொள்வதாகவே தெரியாது. இவளுக்கு இந்தக் கர்மங்களையெல்லாம் பார்க்காமல், கேட்காமல் கொஞ்சநாளாவது அம்மா வீட்டில் இருக்கப் போகிறோம் என்று நிம்மதியாக இருந்தது. முக்கியமாக, இந்தக் கிழவனின் இம்சை இருக்காது என்று நினைத்தாள். இதை நினைக்கும்போதே பயத்தில் சிலிர்த்து அடங்கியது அவள் உடல்.

சென்ற வாரம் ஒருநாள் சபியா இல்லாத நேரத்தில் வந்து, இவளருகில் உட்கார்ந்து கொண்டவர் சாவகாசமாகப் பேச்சை ஆரம்பித்தார். கைலியை முழங்காலுக்கு மேலாகச் சுருட்டித் தொடைக்குள்ளாகத் திணித்தபடி குத்த வைத்துக்கொண்டு உட்கார்ந்தவர், “நிலைமை அங்கெ இன்னும் சரிப்பட்டு வரலை போல! சிலோன் ரேடியோவுல சொல்றானுக.” அவர் குரலில் வருத்தம் இருந்தது. “என் கடை என்னாச்சோ ஏதாச்சோ, நானும் கூட போக முடியாம இல்ல கெடக்கிறேன்?” என்று அங்கலாய்த்துக் கொண்டவர், ஏதோ யோசனையில் ஆழ்ந்து விட இதுதான் சந்தர்ப்பம் என்று நினைத்து மெதுவாக அங்கிருந்து எழுந்தவளை, தன் நினைவிலிருந்து விடுபட்டவராக, “என்ன, கெளம்புறியா? ஒக்காரு” என்றார் உரிமையோடு. பயத்தில் நாக்கு உலர்ந்து போயிருந்தது இவளுக்கு. உடனே உட்கார்ந்து கொண்டாள். “கொஞ்சம் நேரம் கெடைச்சாப்

போதும் புருஷன்கூட கதவைப் பூட்டிக்குவே! சரியான ஆளு," நக்கலாகச் சொல்லிச் சிரித்தார். இவளுக்கு அவமானமாக இருந்தது. சிக்கந்தர் மாடியில் அறையில் தூங்கிக்கொண்டிருந்தான். அதைத்தான் இப்படிச் சொல்கிறார் என்பது புரிந்தது. "அட, சும்மா வெக்கப்படாத! நானும் சின்ன வயசுல அப்புடித்தான இருந்திருக்கேன். பகலாவது, ராத்திரியாவது பூட்டிக்கிட்டு உள்ளேயேதான இருப்போம்?" என்றவர் ஒருகணம் பழைய நினைவுகளில் ஆழ்ந்து திரும்பினார். அவர் முகத்தில் பரவசம் மிகுந்திருந்தது. "அது மட்டுமா? அந்தக் காலத்துல நான் இருந்த அழகப்பாத்து எத்தனை பொம்பளைக என்னையக் கூப்புட்டுப் படுத்துருக்காளுக தெரியுமா? ஒம் புருஷன்லாம் ஒரு அழகா? நான் எப்புடி இருப்பேங்கறத சபியா கிட்ட கேட்டுப்பாரு. எத்தனை பொம்பளைக எம்பின்னாடி சுத்திச் சுத்தி அலைவாளுக. இது அவளுக்கும் தெரியும். வந்து சொல்லியிருவேன் இல்ல? எல்லாம் நம்ப சொந்தக்காரப் பொம்பளைகதான்."

பெருமையோடு சொன்னவரின் குரல் திடீரெனக் கிசுகிசுப்பாக மாறிற்று. அவளது முகத்தருகில் தன் முகத்தைக் கொண்டு வந்தவர், "யார்கிட்டயும் சொல்லிராத, நம்ப ஆமினாவைக்கூட ஒருகை பாத்திருக்கேன் இல்ல?" என்றார். அவரது வாயிலிருந்து வீசிய துர்நாற்றமும் தெறித்த எச்சிலும் குப்பெனப் பரவ, அவர் சொன்ன விஷயம் பொய் என்கிற உறுதி உண்டாகி வெறுப்புண்டாகிற்று. அவளது முகமாற்றத்தையோ, அவள் முகம் அருவெறுப்பில் சுளித்ததையோ பொருட்படுத்தாமல் அவர் தொடர்ந்து சொல்லிக் கொண்டிருந்தார். "வயசுல, குட்டி பிரமாதமா இருப்பா, புருஷன்காரனும் இல்ல. ஒருநாள் ராத்திரியில காத்து இல்லாமப் புழுங்கிக்கிடக்குதேன்னு வெளிய திண்ணையில படுத்துக்கிடந்தேன். யாரோ பாதித் தூக்கத்துல எழுப்புறாகளேன்னு பாத்தா, ஆமினா

நின்னுக்கிட்டு இருந்தா! அப்புறம் அவ கூட்டிட்டுப் போன மச்சு அறைக்குள்ள மூட்டை முடிச்சோட, ஏங்கேக்குற? பாதியில சொல்றா, கொஞ்சம் இருங்க எசவா ஒக்காந்துக்கிறேன்னு" சொல்லியவர் தனது வெற்றுத்தொடை மீது வலது கையால் தட்டிக்கொடுத்தபடி கெக்கலிகொட்டிச் சிரிக்கத் துவங்கினார். எப்போதோ தன்னை விட்டுப் போயிருந்த நினைவுகள் இன்று மறுபடியும் தன்னிடத்தில் திரும்பி வந்துவிட்ட பெருமிதமும் வெறும் நினைவுகள் மட்டுமே தன்னோடு இருப்பதன் துயரமும் சேர்ந்த ஒரு முகபாவம் அவருக்கு இருந்ததை வஹிதா கவனித்தாள். கற்பனையான செய்திகளை இவளிடம் சொல்லிச் சுகத்தை அனுபவிக்கும் அவரிடம் இன்று ஏனோ அளவில்லாத இரக்கம் உண்டாயிற்று இவளுக்கு.

அவளிடம் இருந்து கேலியையோ வெறுப்பையோ எதிர்கொள்ள வேண்டியிருக்கும் என்று தோன்றவேயில்லாதது போல முகத்தை வைத்துக்கொண்டிருந்தார் அவர். வஹிதா தன்னிடமிருந்த சகிப்புத் தன்மையின் வழியே அவரை எதிர்கொள்ள நினைத்தாள். மனம் ஏனோ அவருக்காக, அவரது இயலாமைக்காக, அவரது முதுமைக்காக ரொம்பவுமே இரங்கிற்று. அதே சமயம், அவருக்கு ஆதரவாக ஒரு சிறு அசைவுகூட தன் முகத்தில் தெரிந்துவிடக் கூடாது என்பதில் கவனமாக இருக்க விரும்பினாள். அது தனக்குப் பிரச்னையை அதிகரிக்கச் செய்யும் என நினைத்தாள்.

"அப்புறம் கேளு," சையது நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டார். சுவாரஸ்யத்தினால் முகம் பொலிவு பெற்றிருந்தது. தன்னுடைய மொத்த சாகசங்களையும் இவளிடம் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்ள இதையே சந்தர்ப்பமாக நினைத்துக் கொண்டவர்போல, "நான் இதையும்கூட சபியாகிட்ட மறைக்கலை பாத்துக்க! இதுவரைக்கும் நான் எத்தனை பொம்பளைக கிட்ட பழகியிருக்

கேங்கற விபரம் எல்லாம் அவளுக்குத் தெரியும். நான் மறைக்க மாட்டேன். அவளும் ஆர்வமா கேட்டுக்குவாளே தவிர சண்டை போட மாட்டா. எப்புடி?”

தன் நினைவிலிருந்து விடுபட்டு ஊருக்குப் போகவெனத் துணி எடுத்து பெட்டியில் வைக்கத் துவங்கினாள் வஹிதா. அம்மா அத்தாவைப் பார்த்து நீண்ட நாட்களாகிவிட்டது. பிர்தவ்ஸ் மௌத்திற்கு வந்தபொழுது அம்மாவும் அத்தாவும் தூரத்தில் இருந்தே அவளைப் பார்த்துவிட்டுத் தலையசைத்துவிட்டுப் போனார்கள், வீட்டிற்கு வரக்கூடாது என்பதனால்! அதன் பிறகு ஆமினாவுக்கு உடல் நிலை சரியில்லாமல் போனதால் அவள் ஆஸ்பத்திரிக்குப் போய்விட, சொஹ்ராவும் கூடவே போய் விட்டதால் யாருமே வரமுடியாதபடி ஆகிவிட்டிருந்தது. மௌத்து அன்றைக்கு ராபியா இங்கே வந்ததற்கே சபியா மொடமொடத்துப்போனது இவளுக்கு ஞாபகம் வந்தது. வஹிதாவுக்கு அம்மாவை நினைத்து ஏக்கமாக இருந்தது. இங்கு பட்ட கஷ்டங்களையெல்லாம் சொல்லி அவள் மடியில் படுத்து அழுதால் தேவலை என்றிருந்தது. அதே சமயத்தில் துளி சங்கடமாவது இல்லாமல் அவளது முகத்தைத் தன்னால் பார்க்க முடியுமா என்கிற கேள்வி எழுந்து விஸ்வரூபம் கொள்ள, பீதியில் மனம் செத்துப்போயிற்று. இத்தனை நேரம் அம்மாவைப் பார்க்கப்போகிறோம் என்ற உற்சாகத்தில் மிதந்துகொண்டிருந்தவளுக்கு அவள் ஏன் அப்படிச் செய்தாள் என்ற கேள்வி மனதினுள்ளிருந்து பீறிட்டெழுந்தது. பிர்தவ்ஸைப்போல அவளுக்கு ஒன்றும் ஆகிவிடக்கூடாது என்கிற பதற்றத்தில் நடுங்கிய உடலைத் தன்னாலான அளவுக்குக் கட்டுக்குள் கொண்டு வர முயன்றாள். அவள் கட்டிலில் இருந்து எழுந்து போய், ஆளுயர நிலைக் கண்ணாடி முன்பாக நின்று தன்னை உற்றுக் கவனித்தாள். அதில்

தெரியும் உருவம் தன்னைப் போலவே இல்லை என்று தோன்றியது. ரொம்பவே இளைத்திருப்பதைக் கண்ணாடி வெளிப்படையாகக் காட்டி அவளைக் கவலையுறச் செய்தது. இனி இந்த வீட்டுப் பக்கமே வராமல் அங்கேயே இருந்து கொண்டால் என்ன என்று நினைத்தாள். அதற்கு என்ன செய்தால் முடியும் என யோசித்தாள். இந்தக் கொஞ்ச நாட்களில் என்னவெல்லாமோ விஷயங்கள் நடந்து முடிந்து விட்டது போலவும் எத்தனையோ வருடங்கள் இங்கு வாழ்ந்து விட்டது போலவும் ஒரு ஆயாசம் உண்டானது. இங்கு வந்தபிறகு தனக்கு எவ்வளவோ விஷயங்களைப் பற்றிய புரிதலும் உண்டாயிருப்பதாக உணர்ந்தாள். தன்னை ஒரு விபரம் அறிந்த நடுத்தரவயதுப் பெண்ணாகக் கற்பனை செய்து கொண்டாள். ஆனால் கண்ணாடியில் தெரிந்த முகத்தில் சிறு பிள்ளைத்தனம் அப்படியே மிச்சமிருந்தது. சிவந்த முகத்தில் ஒன்றிரண்டு பருக்கள் நெற்றியிலும் கன்னத்திலும் வந்திருந்தன. தொழுகையில்லாமல் போகும் நேரம் நெருங்குவதன் காரணமாக இருக்கலாம். அவளுக்கு மனதில் நிம்மதி உண்டானது. நல்லவேளை எனத் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டாள். பிள்ளை உண்டாயிருக்க வாய்ப்பில்லை. மறுபடியும் கட்டிலில் வந்து உட்கார்ந்து கொண்டாள். தன்னுடைய பயம் வெகுவாகக் குறைந்திருந்ததை அனுமானித்தாள். முதல் முறை தீட்டு வந்ததற்கே சபியா முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டிருந்தாள். சையதுவும்கூட குறைபட்டுக் கொண்டேயிருந்தார். இவளுக்கு வெட்கமாக இருந்தது. தெருவில் உள்ள ஒவ்வொரு பெண்ணும் வந்து வந்து விசாரித்துவிட்டுப்போனார்கள். ஒரு சிலர், “அடுத்த மாசம் நிக்கும். கவலைப்படாத” என்று சபியாவுக்கு ஆறுதல் வேறு சொல்லிவிட்டுப் போனார்கள். இவளுக்கு எல்லாமே வினோதமாக இருந்தது. வயதுக்கு வந்திருந்த காலத்தில் யாருக்கும் தெரியாமல் ஒளித்து ஒளித்து வைத்துக் கொண்டிருந்த ஒன்று, இன்று ஊரெல்லாம் தெரிந்து பேசப்படுவதாக

மாறி இருப்பதை நினைத்து அவமானமாக இருந்தது.

இந்த மாதம் அங்கே அம்மா வீட்டில்தான் தீட்டு வரும். ஆனால் அங்கேயும் பெண்கள் இதைப்பற்றித் தூண்டித் துருவி விசாரிப்பதை இவள் பார்த்திருக்கிறாள். மும்தாஜ் அண்ணியையும் இதேதான் கேட்டுப் பாடாகப் படுத்துவார்கள். இனி இவளையும் கேட்டுக் கொண்டேயிருப்பார்கள். இதை நினைத்ததும் அவளது உற்சாகம் குறைந்து சோர்வு உண்டானது. இருந்தாலும் குழந்தை உண்டாகி இருக்காது என்பதை நினைத்து ஆறுதலாக இருந்தது. அவளுக்கு இங்கே எதுவுமே பிடிக்கவேயில்லை. வெறுப்பாகத்தான் உணர்ந்தாள். இங்கே மறுபடி வரவே கூடாது, இதோடு போய்விட வேண்டும் என்பதில் மட்டும் உறுதியாக இருந்தாள். இந்த வீட்டை நினைத்தாலே சபியா கையில் கைக்குட்டையோடு மூக்கைச் சிந்தியபடியே சமைப்பதும் சையது தன் தொடையைத் தடவியபடியே இவளிடம் அசிங்கமாகப் பேசுவதும் ஞாபகத்தில் வந்து அவளை ஒட்டவிடாமல் துரத்தின.

அவள் பீரோவைத் திறந்து தனது நகைகள் எல்லாவற்றையுமே எடுத்துப் பெட்டியில் அடுக்கத் துவங்கினாள். தான் இங்கு திரும்பி வந்தால் பரவாயில்லை, தான்தான் வரவே போவதில்லையே? பிறகு எதற்காக மிச்சம் வைக்க வேண்டும் என்று நினைத்தபடியே எடுத்து வைத்தாள். அம்மா வீட்டிலிருந்து நாற்பதாம் நாள் சீர் வரிசை நிறையவே கொண்டு வரவேண்டும் என்று சபியா உத்தரவிட்டிருந்தாள். சிக்கந்தரிடம், “ஏண்டா, உன் மாமனார் வீட்டுலருந்து இதுவரைக்கும் ஆனாப்புல சீர் செய்யலை. கலியாணத்தன்னிக்கி ஒரு சருவம் நிறையக்கூட அதிரசம் குடுக்கலை. தேங்கா, பழம் குடுக்கலை. ஏழா நாள் சீருலயும் நூறு அதிரசத்தக் கொண்டுவந்து நொட்டி விட்டுட்டுப் போயிட்டா ஒன் மாமியா. நானு இங்கெ உள்ளவுகளுக்கு சீர்ல வந்த பலகாரம்னு பகிந்து குடுக்கறதில்ல.

எல்லாருங் கேக்குறாளுக, ஏஞ் சபியா, சீர்பலகாரம் எங்கென்னு. மவளுக்கு மட்டும் உச்சியிலருந்து உள்ளங்கால் வரைக்கும் நகை போட முடியுதுல்ல? சம்பந்திக்கு தரமா சீரு பலகாரம் செய்ய கசக்குதோ, லச்சக் கணக்குல செலவழிச்சு கலியாணம் வக்கிறானுகளாம் கலியாணம்! நக்கப் பயலுக, நக்கச் சிறுக்கிக." மூச்சுவிடாமல் பேசியவள், "உன் பொண்டாட்டி கிட்டச் சொல்லி இப்ப நல்லவிதமாச் செய்யச் சொல்லிரு" என்றவளைச் சிக்கந்தர் நன்றாகத் திட்டிவிட்டான். "ஒனக்கென்ன, ஒண்ணுமா இல்லை? ஏம்மா இப்பிடிப் பறக்கிற. அவங்க என்ன மொஸாபிர் வீடா, ஒன் அண்ணன் வீடுதானே, வேணுங்கறத கேட்டா குடுப்பாங்க இல்லெ?" என்று! இதற்கும் ரொம்ப நேரம் மூக்கைச் சிந்திக் கொண்டிருந்தாள் சபியா. "அவ ஒன்னைய அப்புடி மயக்கி வச்சிருக்கா இல்ல, அதுதான் இப்பிடியெல்லாம் பேசுற."

அவன் அதனைப் பொருட்படுத்தவே இல்லை. பேசாமல் எழுந்து போய்விட்டான். அங்கேயே நின்று அழுதுகொண்டிருந்த வஹிதாவுக்கு அவன் தன் குடும்பத்திற்காகவும் தனக்காகவும் பேசியதில் ரொம்பவும் திருப்தி உண்டாயிற்று. அவனிடத்தில் திரும்பவும் லேசான பிரியமும் உருவாகியது என்றாலும், அது எந்தச் சமயத்திலும் இல்லாமல் போய்விடும் வாய்ப்பும் இருந்தது.

சபியா எப்பொழுது பார்த்தாலும் தான் அவனை மயக்கி வைத்திருப்பதாகச் சொல்வது அவமானமாக இருந்தது வஹிதாவுக்கு. அப்படி என்றால் என்ன என்று அவளுக்குத் தெரியவேயில்லை. அவள் இப்படிச் சொல்லும் போதெல்லாம் இவளுக்கு சினிமாவில் யாராவது ஒரு கவர்ச்சி நடிகை அசிங்கமாக உடையணிந்து ஆடிக் கதாநாயகனை மயக்குவது ஏனோ நினைவுக்கு வரும். சமயங்களில் சிரிப்பாகக்கூட இருக்கும். இன்னும் எத்தனை நாள் இப்படி எல்லாம்

கேட்டுக்கொண்டு இங்கேயிருக்கப் போகிறோம் என்றுதான் பல்லைக் கடித்துக் கொண்டு இருந்தாள். தன் அக்கா வீட்டில்தானே பெண்ணைக் கொடுத்திருக்கிறோம் என்கிற தைரியத்தில் சரியாகக்கூட இங்கு வந்து போகாத தன் தந்தைக்குத் தன்னைப் பார்த்ததும் வரும் அதிர்ச்சியைவிட தான் சொல்லும் விஷயங்கள்தான் மிகவும் அதிர்ச்சியைத் தரப் போகின்றன என நினைத்துக் கொண்டவள், இங்கு வந்ததிலிருந்து சபியா தன்னையும் தன் குடும்பத்தையும் எதற்காகவெல்லாம் குறை சொல்லித் திட்டினாள் என்பதை ஒவ்வொன்றாக நினைவிலிருந்து தோண்டி எடுத்து மனதின் ஒரு ஓரத்தில் ஒதுக்கி வைத்து ஒரு குழந்தையைப் போலப் பட்டியலிடத் துவங்கினாள், தன் வீட்டில் போய் சொல்லவென! அது இதமாகவும் இருந்தது.

# 57

தன் வீடு முன்னைப் போலவேயில்லாதபடி அமைதியாக இருந்தது கண்டு வியப்பாக இருந்தது வஹிதாவுக்கு. சொஹ்ராவின் முகம் உயிர்ப்பில்லாமல் உலர்ந்து கிடந்தது. அம்மாவும் கூட எதையோ பறி கொடுத்த மாதிரிதான் இருந்தாள். வஹிதாவைப் பார்த்த மாத்திரத்திலேயே அவளுக்குப் பாதி உயிர் போயிருந்தது. மகள் உடம்பை எப்படித் தேற்றுவேன் என்று புலம்பி மாய்ந்து போனாலும் அதையும் தாண்டி அவள் தன்னிடமிருந்து விலகிச் செல்வது போலவும் இவள் உணர்ந்தாள். இங்கு வந்த மறுநாளே சிக்கந்தர் ஊருக்கு வந்து விட வேண்டும் என்று சொல்லி அனுப்பியிருந்தாள் சபியா. மாதக் கடைசியில் பெண்டாட்டியோடு கூடினால், உண்டாகியிருக்கும் கரு கலைந்துவிடுமாம். அதனால் கடைசி ஒரு வாரம் வஹிதாவைத் தொடக்கூடாது என்று மகனை எச்சரித்திருந்தாள். அவன் வெளிநாடு வேறு போக வேண்டும். ஒருவழியாகப் பிள்ளை உண்டாகிவிட்டால் அவன் தைரியமாகக் கிளம்பிப் போகலாம் என்கிற எண்ணம் அவளுக்கு.

வஹிதாவுக்கு அவன் போய் விட்டது நிம்மதியாக இருந்தது. ஒருவேளை தனக்குக் குழந்தை உண்டாகிவிட்டது உறுதியானால், சபியா மறுநாளே மகனை பிளேன் டிக்கெட் எடுத்து அனுப்பி வைத்துவிடுவாள். அதுவும் நல்லதுதான், இரண்டு மூன்று வருஷம் அவன் இங்கிருக்க மாட்டான் என்றும் நினைத்தாள். ஆனாலும் குழந்தை பெற்றுக் கொள்ளவேண்டும் என்பதை நினைத்தாலே அவளுக்கு வேதனையாக இருந்தது. அவனையே பிடிக்காமல் தான் இருந்து கொண்டிருக்கையில் பிள்ளை வேறா என்றிருந்தது.

ராபியா இவள் மடியிலேயேதான் கிடந்தாள். வெளியே போவதேயில்லை. அவள்தான் சொன்னாள், "அக்கா, அம்மாவும் பெரியம்மாவும் தனியாப் போகப் போறாங்களாம். இதே வீட்ல குறுக்க சுவரு வைச்சு" என்று! வஹிதாவுக்கு இந்த ஒரு செய்தியிலேயே தெரிந்து கொள்ள எத்தனையோ விஷயங்கள் இருந்தன. சொஹ்ரா ஆமினாவோடு ஆஸ்பத்திரியில் இருந்த பொழுதே நடந்தவை அத்தனையையும் அறிந்து கொண்டிருக்க வேண்டும் என்று யூகித்தவளுக்கு, அம்மா தன்னிடம் இருந்து விலகியே இருப்பதாகத் தோன்றுவதுகூட அதனால்தானா அல்லது தனது கற்பனையா என்று அறிந்து கொள்ள முடியவில்லை. தேவையில்லாத நேரங்களில் கூட அதிகப்படியாகவே அம்மா தன்னிடம் குழைந்து கொண்டிருப்பதுபோலவும் பிரியத்தைக் கொட்டுவது போலவும் தோன்ற அது தனது வீணான கற்பனை என நினைத்து அந் நினைவை உதறித்தள்ள முயன்றாள். இங்கு வந்து நிம்மதியாகவும் சந்தோஷமாகவும் இருக்கப் போகிறோம் என்று நினைத்திருந்தவளுக்கு, பெரும் ஏமாற்றமாக ராபியா சொன்ன செய்தி இருந்தது. வீடே அமைதியில் நிரம்பிக்கிடப்பதும் அனைவரும் அவரவர் வேலைகளைச் சத்தமில்லாமல் செய்து கொள்வதும் தாங்க முடியாத மனக்கஷ்டத்தை, துன்பத்தை உண்டு பண்ணியது. அங்குள்ள கதைகளை இங்கு வந்து சொல்லி ஆறுதல் தேடலாம் என்று நினைத்தவளுக்கு, இங்கே யாரிடம் சொல்வது என்று தெரியாமல் குழப்பமாக இருந்தது. அம்மாவிடம் சொல்ல முடியாத விஷயங்கள் நிறைய இருந்தன. குறிப்பாக சையது செய்யும் சேட்டைகள், பேசும் பேச்சு இதையெல்லாம் சொஹ்ரா சித்தியிடம்தான் சொல்லலாம் என்று நினைத்திருந்தாள். ஆனால் அவளோ, தன்பேரில் கோபமாக இருக்கிறாளோ என்கிற சந்தேகத்தை உண்டு பண்ணும் விதத்தில் முகத்தைச் சிடுசிடுப்பாகவே வைத்திருந்தாள். யாரும் யாரிடமும் சரியானபடி பேசிக் கொள்ளாதது

மாதிரி இருந்தது. அம்மா இவளுக்குத் தினமும் வகை வகையாக சூப் வைத்துக் கொடுத்துச் சாப்பிட வைத்துக் கொண்டிருந்தாள். தலைக்கு எண்ணெய் தேய்த்து வாரிவிட்டாள். தலை தேய்த்துக் குளிக்கச் செய்தாள். இருந்தாலும், அவளை ஏதோ ஒன்று தன்னிடம் ஒட்டவிடாமல் செய்து கொண்டிருப்பதாக வஹிதா புரிந்து கொண்டாள். தனக்குத் தெரியும் என்கிற விஷயம் அம்மாவுக்குத் தெரிந்துவிட்டதோ என்கிற கவலை இவளை அரித்தது.

காலை பதினொரு மணிக்குமேல் வேலைகளை முடித்துவிட்டு தெருப்பெண்கள் ஒவ்வொருவராக வஹிதாவைப் பார்க்க வந்திருந்தார்கள். ஷெரிபா, நபிஸா, மும்தாஜ், சைனு, சவுரா என்று அத்தனை பேருமே அங்கு வந்து சேர்ந்திருந்தார்கள். நபிஸா முன்போல இல்லாமல் முகம் சோர்ந்து போயிருந்தாள். மும்தாஜ் தன்னிடம் பரிதா திருமணத்திற்குச் சொல்லி வரும்போது சொன்ன விஷயம் இவளுக்கு ஞாபகம் வந்தது.

ஒவ்வொருத்தருமே வஹிதா இப்படி இளைத்துப் போய்விட்டாள் என்றே திரும்ப திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். மும்தாஜ், "ஏண்டி, ஒனக்கு அங்கெ சாப்பாடு ஏதும் போடுறது இல்லெ?" என்று சொல்லிச் சிரித்தாள். "இவ கெடக்கிறா" என்ற சவுரா, "அந்தப் பய சிறுக்கி பிள்ளைய சரியாக் கவனிச்சுக்கிருவாளாக்கும். சரிதான், அவ வாயி எம்புட்டு கொட்டுக் கொட்டுச்சோ புள்ளைய," அக்கறையாகச் சொல்வது போலச் சொல்லி நிறுத்தினாள். வஹிதாவும் அதனை ஆமோதித்து ஏதாவது சொல்வாள் கேட்டு ரசிக்கலாம் என்கிற மாதிரி! அம்மா வந்த அன்றே இவளிடம் சொல்லி விட்டாள். "வர்றவளுக, ஆளுக்கொண்ணு கேட்டு உம்புருஷனப் பத்தி, மாமனார் மாமியார் பத்தி வாயைப் புடுங்குவாளுக, ஒரு வீட்டுக்கொள்ளிய ஒம்போது வீட்டுல வைக்கறதுக்கு! அதனால யார் என்ன சொன்னாலும் சிரிச்சு

வை. ஒரு பதிலும் சொல்லாத. அவங்க காதுக்குப் போனால் சங்கடம்" என்று! வஹிதா சவுரா சொன்னதை ஆமோதிக்கவோ, மறுக்கவோ செய்யாமல் அமைதியாக இருந்து கொண்டிருந்தாள்.

"ஊர் பித்துனா பேசாட்டி ஒனக்குத் தூக்கம் வராதே" வெடுக்கெனச் சொல்லித் தன் தாயை அடக்கினாள் ஷெரிபா. அவளுக்கு வஹிதாவைப் பார்த்தால் ரொம்பவே சங்கடமாக இருந்தது. முன்பு அவள் கண்ணில் தெரியும் உற்சாகம் துளிக்கூட இல்லாதபடி சோர்ந்திருந்தாள். மாமனார் மாமியார் கிடக்கட்டும், கணவனைக் கொஞ்சமாவது பிடித்திருந்தால்கூட கண்ணிலும் முகத்திலும் இத்தனை சோர்வு வந்திருக்காது. சவுராவுக்கு எரிச்சல் மேலிட்டது. "இவ வேற, எங்கிட்ட எசாவத போடாம இருக்க மாட்டா." தன் மகளைப் பற்றிச் சலித்துக் கொண்டவள், "ஏம்மா, நாளு தள்ளிக் கிள்ளிப் போயிருக்கா, இல்லெ வந்துருச்சா" என்று வெகு அக்கறையோடு கேட்டாள். அவளுக்கு இதற்காவது பதில் சொல்ல வேண்டிய கட்டாயம் இருப்பதைப் புரிந்து கொண்ட வஹிதா பதில் சொல்ல வாயெடுக்கும் பொழுது றைமா முந்திக்கொண்டு, "நாளு கிடக்கு, வர்றதுக்கு" என்று ரத்தினச் சுருக்கமாகச் சொல்லிப் பேச்சை முடித்துக் கொண்டாள். றைமா முந்திச் சொன்னதன் காரணம் ஷெரிபாவுக்கும் மற்ற அனைவருக்குமே புரிந்தது என்றாலும், சவுரா அவள் சொன்னதை ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை. "அது எப்புடி? கல்யாணத்தப்போ முழுகிப் போயிருந்துச்சு, இப்ப வாற டயம் தானே?" என்று மறுபடி கேட்டவள், தன் விரல்களை நீட்டிமடக்கி நாட்களைக் கணக்கிட முயன்றாள். பிறகு வஹிதா பக்கம் திரும்பி, "ஏலே, குளிக்க முழுக இருக்கேதானே?" என்று திடீரென ஒரு சந்தேகத்தைக் கிளப்பினாள். றைமாவுக்கு எரிச்சல் மண்டி முகம் கடுகடுப்பாக மாறியது.

சைனு தன் பங்குக்கு, "இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்குச் சொல்லியா குடுக்கணும், புருஷன்கூட இருக்க" என்று சொல்லிச் சிரிக்க, அவளோடு சேர்ந்து எல்லோருமாகச் சிரித்தார்கள். அந்த இடத்தில் இருக்கப் பிடிக்காதவளாக சொஹ்ரா எழுந்து அடுப்படியை நோக்கிப் போனாள். அவள் முகத்தின் சோகத்தைப் பார்த்தால் யாருக்கும் சிரிக்கக் கூட தோன்றாது என்றாலும் இவர்கள் இப்படி கொஞ்சம்கூட வருத்தமேயில்லாமல் சிரிக்கிறார்களே என்று நினைத்துச் சங்கடமாக உணர்ந்தாள் வஹிதா.

சொஹ்ரா எழுந்து போன மறுநிமிடம் அதற்காகவே காத்திருந்ததுபோல சைனு அவளிடம் வந்து காதோரம், "ஒனக்கு எதுவும் விஷயம் தெரியுமா? அவ தங்கச்சி செத்ததப் பத்தி. வெஷம் குடுச்சுச் செத்தாளாமே?" என்றாள் கிசுகிசுப்பாக! வஹிதாவுக்குப் பயத்தில் உடல் நடுங்கியது. அவள் அவசரமாகத் தலையைப் பலமாக அசைத்தாள், எனக்கு ஒன்றும் தெரியாது என்பது மாதிரி! சவுரா தன் பங்குக்கு, "கொளுப்பெடுத்து ஊர் மேய்ஞ்சா அப்புடித்தான்" என்றாள் சாவகாசமாக!

"அட, சும்மா சொல்லு அங்க என்ன பேசிக்கிறாகன்னு. ஒங்க சித்தி இப்ப ஒலைய வேறயா வக்கப்போகுதாம், ஒங்கம்மா கிட்ட சண்டை போட்டுக்கிட்டு" என்றாள் மும்தாஜ். அவள் என்ன நினைத்துச் சொல்கிறாள் என்பதில் வஹிதாவுக்கு ஒரு சந்தேகமும் இல்லை. றைமாதான் பதில் சொன்னாள், "அதெல்லாம் ஒரு சண்டையுமில்ல, நீங்க நினைக்கற மாதிரி! ஆம்பளைக அபிப்ராயப் படுறாங்க குடும்பத்தைப் பிரிக்கணும்னு." விஷயத்தை சொஹ்ரா வருவதற்குள்ளாக முடிக்க நினைத்தாள். அவளுக்கே ஆச்சர்யமாக இருந்தது. இவர்களுக்கு எப்படித்தான் இதெல்லாமும் தெரிகிறதோ, என்று! ஷெரிபாவுக்கு இந்தப் பேச்சை எப்படியாவது முடிவுக்குக்

கொண்டுவர வேண்டும் போலிருந்தது. ஆனால், எப்படி என்றுதான் புரியவில்லை. நபிஸா இதையெல்லாம் காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருந்ததோடு சரி, வாயே திறக்கவில்லை.

சவுரா மறுபடி பிர்தவ்ஸின் பேச்சை எடுத்தாள். "ஆமா, அந்தக் குட்டி யார் மேலயும் பேயா வந்தாளா? கேக்கணுமுன்னே நினைச்சேன் மறந்துட்டேன்." அவ்வளவு ஆர்வத்திலும்கூட அவள் குரல் தணிந்திருந்தது. சொஹ்ராவின் காதில் விழுந்து விடுமோ என்ற எச்சரிக்கையோடு கேட்டவளிடம், "சேச்சே! அதெல்லாம் இல்லெ" முதல்முறையாக வாய் திறந்து பதில் சொன்னாள் வஹிதா. அவளுக்குத் தன் மாமியாரின் ஞாபகம் வந்தது. அவளும் இதையே தான் சொல்லிக் கொண்டிருந்தாள். சவுராவுக்கு அசுவாரஸ்யம் தட்டியது. ஒரு சங்கதியையும் இவளிடமிருந்து வாங்க முடியாதது எரிச்சலாகவும் இருந்தது. அங்கிருந்து போய் விடலாமா என்று யோசித்தவள், "உங்க வீட்டுல என்ன ஆக்கியிருக்கீங்க இன்னைக்கி? மக வந்திருக்கா இல்ல. விசேஷமா இருக்கும்!" என்று அவளே பதிலும் சொல்லிக் கொண்டாள்.

அவள் கேட்கும் விதத்திலேயே கையோடு கொஞ்சம் வாங்கிக் கொண்டு போக வேண்டும் என நினைப்பது புரிய, "புளியானம் தான், கறியும் மொச்சையும் போட்டு. வேணும்னா வாங்கிட்டுப் போங்க" என்று சொல்லியபடியே எழுந்து அடுப்படியை நோக்கிப் போனாள் றைமா. அவளுக்கு எப்படியாவது இவளை இங்கிருந்து அனுப்பிவைத்தால் போதும் என்றிருந்தது. ஷெரிபாவுக்குத்தான் அம்மாவை நினைத்து அவமானமாக இருந்தது. 'என்ன சொன்னாலும் புரிந்துகொள்ள மறுக்கிறாள், என்ன செய்யட்டும்' என்பது போல வஹிதாவின் முகத்தை உற்றுப் பார்த்துவிட்டுக் குனிந்து கொண்டாள். பள்ளியில் லுஹருக்குப் பாங்கு சொல்லத் துவங்கிய சத்தம் கேட்டது.

அங்கிருந்து பேசிக்கொண்டிருந்த அனைவரும் உடனேயே வாய்மூடி மௌனமாக இருந்தனர். நின்று கொண்டிருந்த சவுரா மறுபடியும் சோபாவில் உட்கார்ந்து கொண்டாள், பாங்கு சொல்லி முடியட்டும் என்பது போல.

சவுரா குழம்பு கேட்டு நின்றதைப் பார்த்ததும் வஹிதாவுக்குத் தன் மாமியார் சபியாவின் நினைவு வந்தது. அவளும் இப்படித்தான் யார் வீட்டில் எது செய்தாலும் போய் வாங்கிக் கொண்டு வந்துவிடுவாள். இவளும் சபியாவும் அடுப்படியில் ஒன்றாக நின்று வேலைபார்த்துக் கொண்டிருக்கும்போது தனது பழங்காலத்துக் கதைகள் எதையாவது காய் நறுக்கியபடியே சொல்லத் துவங்குவாள். “சரி, எதையோ சொல்ல வருகிறாள் கேட்கலாம்” என்று நினைக்கையில், அவளது பழங்கால ஞாபகங்கள் எல்லாமே சாப்பாட்டைப் பற்றியதாகவே இருக்கும். எந்த ஒரு சம்பவத்தையும் நினைவுகூர்ந்து சொல்லும் பொழுது, “அதை நான் அந்தக்காலத்துல அப்புடிச் சாப்பிட்டுருக்கேன்” என்று சொல்லுவாள். சித்திரை மாத வெயிலைப் பற்றிப் பேச்சு வரும்பொழுது சொல்வாள்: “அந்த மாசத்துல பருப்பானம் வைச்சுத் திங்கணும் என்ன? அப்ப புதுப்புளி மரத்துல காய்ச்சிருக்கும். முருங்கைக்காய், மாங்காய் எல்லாம் அந்த மாசம் சேந்துகிடைக்கும் சீஸன் இல்லெ? ஆனம் அம்புட்டு டேஸ்ட்டா அமையும். அதோட வெயில் காலங்கிறதுனால குளத்துகள்ல தண்ணி வத்திப்போயி மீன் கிடைக்கறதும் அந்த மாசம்தான். பெரிய பெரிய விரால்மீன் கிடைக்கும்.” சொல்லும்போதே நாவில் எச்சில் ஊறும் அவளுக்கு. அதேபோல அறுவடைகாலத்தைப் பற்றி புதுஅரிசிப்பணியாரம், பால்சோறு என்று எதெதையோ சொல்லிக் கொண்டிருப்பாள்.

தன் தந்தை தன்னை எப்படிச் சீராட்டினார் என்பதைச் சொல்லும் பொழுது, “ஏன் வஹிதா, உங்க ராதா அதுதான் எங்கத்தாவுக்கு

எம்மேல எம்புட்டு உசுரு தெரியுமா? நான் இங்கேருந்துட்டு தாய்வீட்டுக்கு போறப்போ உங்க ராதா எம் மக வந்துருக்கான்னு சொல்லிக்கிட்டு வேகா வெயில்ல வீட்டுக்கு வெக்கு வெக்குன்னு வருவாக! அப்புடி வாறவுக வெறுங்கையோட ஒரு நா ஒருபொழுது வந்ததில்ல. பின்னாடியே பண்ணையாளு இரண்டு கையிலயும் வாத்தும், கோழியும், மீனும் அடங்கப்புடிச்சுக்கிட்டு வருவான். கோழியும் வாத்தும் பள்ளிவாசல்ல போயி அறுத்தே வரும்னா பாத்துக்கோ! எம்மகளுக்குப் பசிக்குமே, சீக்கிரமா சமைச்சு வேலையை முடிங்களேன்னு ஒரே ஆட்டம் ஆடி, சமைக்கவைச்சு என்னைய உக்கார வச்சு திங்கவிட்டுப் பாப்பாக தெரியுமா? அம்புட்டு உசுரு எம்மேல." அப்படியே உருகிப்போவாள் அவள். அதே போலத்தான் சையதுக்குத் தன்பேரிலிருக்கும் பிரியத்தைப் பற்றி இவளிடம் சொல்லும்போது, "ஒங்க மாமு இருக்காரே? அவருக்கு எம்புட்டுப் பிரியம் தெரியுமா, எம்மேல. நீனும் தான் பாக்கிறியே, என்னயை விட்டுட்டு சாப்பிடவே மாட்டாரு தெரியுமா? என்னைத் தனியா சாப்பிடவிடவே மாட்டாரு இந்த மனுஷன்." பெருமையாகச் சொல்லியவளிடம் வஹிதா, "மாமு ஊருக்குப் போயிட்டா தனியாதான சாப்பிடனும் இல்ல?" அவள் சொன்னதிலிருந்த கிண்டலைக் கவனிக்காதவளாக, "ஊருக்குப்போனா தன்னாலதான் சாப்பிடணும். அதுக்கென்னா செய்ய? குரங்கு செத்தா பொழப்புமா கெட்டுப் போயிரும், நல்லாச் சொன்ன" என்பாள். வஹிதாவுக்கு ஆச்சரியமாக இருக்கும். தின்னும் விஷயங்களைத் தவிர, வேறு எதுவுமே மனசில் பதியாமல் ஒருத்தருக்கு இருக்குமா என்று! கடந்தகால நினைவுகள் எல்லாவற்றையுமே உணவோடு சேர்த்தே ஞாபகம் கொள்ள முடிவது எப்படி என்று நினைத்துக் கொள்வாள்.

வஹிதா, சைனுவிடம் ஆர்வமாக, "ஏங்குப்பி, மதினா வயசுக்கு

வந்துட்டாளாக்கும்" என்று கேட்டாள். "ஆமாமா, ஊக்காளி மாட்டைக் கால் ஒடைச்சுப் போட்டாச்சு இல்ல, நீ ஒருநாள் வந்து பார்த்துட்டு வரலாமில்ல பிள்ளைய!" என்றாள் சைனு. "அக்காவுக்கு ஒண்ணை வெளியே தள்ளுன கையோட இன்னொண்ணு உக்காந்திருச்சு" என்றபடி கையில் குழம்பு பாத்திரத்தோடு வந்தாள் றைமா. "ஆமாம், என்ன பண்றது? அடுத்ததுக்கு இனி மாப்பிள்ளை பாக்கணும். பாத்தரம் பண்டு சேக்கணும். இப்பதிலேருந்து ஆரம்பிச்சாத் தான்" என்று சலித்துக்கொண்டாள் சைனு. "ரொம்பவும் சலிச்சுக்கிறாதீங்க, அதுக ரெண்டும் நல்லா இருந்திருந்தா, மொத்தம் நாலு பொண்ணுல்ல கரையேத்தணும். இப்ப ரெண்டுதானே?" என்றாள் நபிஸா. அவளுக்குத் தான் நீண்ட நேரமாக ஒன்றுமே பேசாமல் இருப்பது என்னமோ போலிருந்திருக்க வேண்டும்.

"அதுவும் உள்ளதுதான். ஆனா இப்புடி இழுபட்டுக்கிட்டுக் கிடக்கிறதுக்குப் போயி சேர்ந்தாவுல்ல தேவலாம்" என்ற சைனுவின் முகம் துயரத்தால் சுருங்கிப் போயிற்று. அடுப்படிக்குள்ளிருந்து வெளியே வந்த சொஹ்ரா ஏதோ வேலை பார்த்தது போலச் சேலை முந்தானையினால் கை துடைத்து பாவனை செய்தபடி அவர்களருகில் வந்து அமர்ந்து கொண்டாள். தான் ஒளிந்து கொண்டிருந்ததாக அவர்கள் நினைத்துவிடக் கூடாது என்ற கவலை அவள் முகத்திலிருந்ததை வஹிதா கவனித்தாள்.

அவள் வந்ததும் சவுரா தன் கையிலிருந்த குழம்புப் பாத்திரத்தோடு எழுந்து போய் அவளருகில் போய் நின்று கொண்டு ரொம்பவும் அக்கறைப்படுவது போல முகத்தை வைத்துக்கொண்டு, "ஏம்மா சொஹ்ரா, நீ அம்மாவை இங்கெ கூட்டிவந்து வச்சுக்கலாம் இல்லெ, இப்ப எப்படித்தான் இருக்குது ஒடம்புக்கு?" என்று கேட்டாள். சற்று முன்வரைக்கும் தன்னிடம் என்னென்னவோ கேட்டுக்

கொண்டிருந்தவளுக்குத் திடீரென எப்படி முகத்தைப் பரிதாபமாக வைத்துக்கொண்டு இப்படிக் கேட்க முடிகிறது என்று ஆச்சர்யமாக இருந்தது வஹிதாவுக்கு. அங்கிருந்த மற்ற பெண்களும் கூட இந்தச் சமயத்திற்கு ஏற்றாற்போல முகத்தை வைத்துக்கொண்டு சொஹ்ராவிடம் செய்தி கேட்கத் தயாராக இருந்தார்கள். சொஹ்ராவுக்கு அவளது கேள்வியும் பச்சாதாபமும் துக்கத்தைக் கிளறி விட்டிருக்க வேண்டும். நிஜமான அனுதாபத்துடன் அவள் கேட்கவில்லை என்பது புரிந்தும் கூட, அவளையும் அறியாமல் கண்களில் நீர்பெருகி, தொண்டை அடைத்தது. ஒன்றும் சொல்ல முடியாத தத்தளிப்போடு மௌனமாகத் தலை குனிந்து கொண்டாள். அவளது நிலை அனைவரையும் தர்மசங்கடத்தில் ஆழ்த்திவிட யாருமே ஒன்றும் பேசாமல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டு அமர்ந்திருந்தார்கள்.

வஹிதாவுக்கு சவுராவின் மேல் கடுமையான கோபம் வந்தது. இந்தப் பொம்பளை எதற்காக இத்தனை அக்கறைப்படுகிறாள்? ஆறிக்கிடந்த துக்கத்தை ஊதிப்பார்க்கிறார்களே என்று வேதனைப் படும் வகையில் றைமாவின் முகமிருந்தது. “என்னவோ, போ! அந்தப் பொம்பளப் பிள்ளைக்கி நஸீபு அவ்வளவுதான். போகணுமின்னு இருந்திருக்குது, போய்ச்சேர்ந்திருச்சு! இந்த ஒலகத்துல அதுக்கு வகைஞ்ச ரஸ்க்கும் தண்ணியும் அம்புட்டுத்தான் போல. அதுக்கு யாரு என்ன செய்யறது. பச்சை வாழமரம் மாதிரியில்ல கெடந்தா நாக்காலி நெறைஞ்சு! அம்பூட்டு முடியும் தரையில விழுந்து புரண்டுச்சே? குளிப்பாட்டையில பாத்தவுகளுக்கெல்லாம், குலையப் புடிக்கன!” என்று சொல்லி நிறுத்திப் பெருமூச்சு விட்டாள் சவுரா. அவள் முகம் பரிபூரண சோகத்தில் ஆழ்ந்து போய் இருந்தது. நிஜமாகவே குரல் வருத்தத்தினால் நிரம்பியிருந்தது. அவள் சொல்வதை ஆமோதிப்பது

போல அங்கிருந்த ஒவ்வொருவரின் முகத்திலும் சோகம் வழிந்ததை வஹிதா கவனித்தாள். அது நடிப்பு மாதிரியும் அவளுக்குத் தெரியவில்லை.

"நடந்தது நடந்துபோச்சு. போன உசுரு போயிடுச்சு. இருக்கற உசுரக் காப்பாத்த வேணாமா? நீ தான் உங்கம்மாவுக்கு இருக்கற ஒரே ஆதாரம். பேசாம இங்கெ கூட்டி வந்து உன்கூட வச்சுக்குவியா, இப்பிடி அனாதையா விட்டுட்டு வருவியா" என்று உரிமையோடு புத்தி சொன்னாள் சைனு. அவள் பேசும்பொழுது அவளது நீள முகமும் அதற்கேற்றாற்போல நீண்டிருந்த கோடாலிக் கொண்டையும் சேர்த்து மேலும் கீழுமாக ஆடியதைப் பார்க்க வினோதமாக இருந்தது வஹிதாவுக்கு. பேச்சு சுவாரஸ்யத்தினால் மறந்துபோய் சைனு கால்களை மேற்கு நோக்கி நீட்டியிருந்ததைச் சொல்லவிரும்பினாள் அவள். "வந்தாதானேக்கா? நானும் எம்புட்டோ சொல்லிப் பாத்துட்டேன். எம்புருஷன் கட்டுன வீட்டுல கிடந்து இந்த ரூஹு அடங்கட்டும்னு சொல்லிட்டுப் புடிவாதம் புடிக்கிறவுகள என்ன செய்றது?" என்று ஆற்றாமையோடு பதில் சொல்லிவிட்டு மூக்கைச் சிந்தினாள் சொஹ்ரா. அவளது கண்களும் மூக்கு நுனியும் சிவந்து போயிருந்தன. அவள் முகத்தைப் பார்க்கவே மனம் பொறுக்க முடியவில்லை வஹிதாவால். சொஹ்ராவுக்கும் இவர்களது அனுதாபமும் பரிவும் எந்த அளவு உண்மை என்பது புரிந்துதானிருக்கும் என நினைத்துக் கொண்டாள் அவள்.

"அதுவும் உள்ளதுதான். ஆயிரந்தே இருந்தாலும் புருஷன் கட்டுன வீட்டை விட்டு வரமுடியுமாக்கும்." ஆமினாவை ஆதரித்துப் பேசிய சவுரா, வீட்டுக்குப் போகவென எழுந்தவள் தனது பருத்த உடலால் மறுபடி உட்கார்ந்து எழுந்திருப்பது சிரமம் என்பதனால் நின்று கொண்டிருந்தாள். அவள் கைகளிலிருந்த பீங்கானிலிருந்து வந்த

குழம்பின் மணம் அந்த இடமெங்கும் நிறைந்திருந்தது. யாரும் எதுவும் பேசிக்கொள்ளாமல் கொஞ்சநேரம் அமைதியாக இருந்தார்கள். “இன்னும் எத்தனை நாள் நீ இங்கே இருக்கப்போற வஹிதா, பக்ரீத் வரைக்குமா?” என்றாள் ஷெரிபா. அந்த மௌனத்தை நீண்ட நேரம் வைத்திருக்க முடியாமல் பேச்சைத் திசை திருப்பும் நோக்கமும் ஷெரிபாவின் பேச்சில் நிரம்பியிருந்தது.

“தெரியலை” புரியாத்தனத்துடன் தலையசைத்துப் பதில் சொன்னாள் வஹிதா. “நம்ப புள்ளை நம்ப வீட்டுல இருக்கறதுக்கு என்ன கணக்கு? எத்தனை நாள் வேணா இருக்கட்டும்” என்றாள் றைமா. “நீங்க சொல்வீங்க! அவ புருஷன், மாமியார் ஒத்துக்கணும் இல்ல? இனிமே அவுங்க சொல்றதுதானே கேக்கணும்” என்றாள் ஷெரிபா. “அவளா? அவ மருமகள கூட்டிப்போய் வீட்டுல வைப்பாளாக்கும். செலவு ஆகிப்போயிரும் இல்ல?. நக்கச்சிறுக்கி” என்று சபியாவைக் கிண்டல் செய்தாள் நபிஸா. அனைவருமே “அப்புறம்?” என்று அதனை ஆமோதித்துச் சிரிக்க, “சரி நாங் கிளம்பறேன், தொழுக நேரமாவுது” என்றபடி சவுரா கிளம்ப, ஒவ்வொருவராகப் புறப்பட ஆயத்தமாகி எழுந்து நின்றார்கள். சுலைமான் தொழுது முடித்த கையோடு வீட்டிற்குப் போக வந்தவன், வழியிலேயே ராபியா வீட்டிற்குள் பேச்சுச் சப்தம் கேட்பதை வைத்து உள்ளே நுழைந்தான். அவனைக் கண்டதும், றைமாவும் சொஹ்ராவும் பதறியடித்து எழுந்து தலைமுக்காட்டை இழுத்துவிட்டபடி, “வாங்கத்தா” என்றனர். அதற்குள்ளாக ஷெரிபாவும் வஹிதாவும் எழுந்திரித்து தலையில் முக்காட்டை இழுத்து விட்டபடியே விழுந்தடித்து ஓடி அறைக்குள் நுழைந்து கொண்டனர்.

“வர்றேன்” என்றபடி உள்ளே வந்த சுலைமான், “என்னையக் கண்டு யாரோ ரெண்டுபேர் விழுந்தடிச்சு ஓடி ஒளியுறாகளே யாரு?”

என்றவாறு சோபாவின்மீது தன் கர்ச்சீப்பினால் ஒரு தட்டுத் தட்டிவிட்டு உட்கார்ந்தான். “யாரு? எல்லாம் உன்னோட மாமு மக ஷெரிபாவும் வஹிதாவும்தான்” என்றாள் சைனு. “நம்ப பொண்ணுக நாணக்கூட செய்யுதுகளா? பரவால்லையே” என்று ஆச்சரியமாகச் சொல்வது போலச் சொல்லிக் கண்களை விரித்து காட்டியவன், றைமாவின் பக்கமாகத் திரும்பி, “தொழுதுட்டு இன்னும் மாமு எல்லாம் வரலை?” என்று கேட்டுவிட்டு, “நான்தான் மொத ஆள் போல வீட்டுக்கு வந்திருக்கேன்” என்றான். அங்கிருந்து வீட்டுக்குக் கிளம்ப எத்தனித்த சவுரக்காவைப் பார்த்து, “கொஞ்சம் நின்னு இந்த வெஷயத்தைக் கேட்டுட்டுப் போங்க மம்மாணி” என்றவனிடம், “நான் போய் ஒங்களுக்குச் சாப்பாடு வைக்க வேணாமா? சீக்கிரமாகச் சொல்லி முடிங்க” என்று செல்லமாகச் சிணுங்கிக் கணவனை அவசரப்படுத்தினாள் மும்தாஜ்.

றைமா அதற்குள்ளாகப் போய் மோர் கொண்டுவந்திருந்தாள். “என்னது மோரா?” என்றவன், “வேணாம், வேணாம். நான்தான் சாப்பிடப்போறேன் இல்ல” என்றபடியே அவள் பிடிவாதமாக நீட்டவும் வேறுவழியில்லாமல் வாங்கிக் கொண்டான். “நல்ல வெயில் இல்லெ? இந்தப் போடு போடுது. சிங்கப்பூர் க்ளைமேட் மாதிரி வருமா?” என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டவனிடம், “நான்போகணும் இல்ல, சொல்றிங்களா இல்லையா?” மறுபடியும் உரிமையோடு அதட்டினாள் மும்தாஜ்.

“சங்கதி தெரியுமா?” என்று பீடிகையோடு ஆரம்பித்த சுலைமான், “ஓடிப்போனாளே, பாத்துமா, அவ கதை என்னாச்சுன்னு” என்று சொல்லி ஒரு நொடி நிறுத்தியவன் ஒவ்வொருத்தரின் முகத்தையும் ஆர்வத்துடன் உற்றுப்பார்த்துவிட்டு, “அந்த முண்டை செத்துப்போனாளாம். தகவல் கிடைச்சிருக்கு” என்றான் உற்சாகமாக!

இதைக் கேட்டதுமே அங்கிருந்த ஒவ்வொருவரின் முகமும் ஆச்சரியத்தாலும் பயத்தாலும் நிறைந்து விட்டிருந்தது. யாராலுமே நம்பமுடியாத செய்தியாக அது இருந்ததென்பதை அவர்களது முகம் காட்டியது. ஒரு மௌத்துச் செய்தியை இத்தனை உற்சாகத்துடன் ஒருவரால் சொல்ல முடியுமா என்கிற வியப்பு உள்ளிருந்த ஷெரிபாவையும் வஹிதாவையும் ஒரே சமயத்தில் தாக்கியிருக்க வேண்டும். இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு அந்த விஷயத்தையும் அந்தக் குரலிலிருந்த உற்சாகத்தையும் ஜீரணிக்க முயன்றனர். ஒரு நிமிட அமைதிக்குப்பின் தன் நிலைக்கு வந்த சவுரா, “என்னத்தா சொல்ற? எப்புடி இவ்வளவு பெரிய செய்திய இப்பிடிச் சாவகாசமா சொல்ற” என்றாள். அதற்குள்ளாக சைனு, “என்னாச்சு, எப்பிடியாம், யாரு சொன்னாக?” என்று அடுக்கடுக்காகக் கேள்விகளை எழுப்பினாள். அவர்களது முகங்கள் பதற்றத்தினாலும் ஆர்வத்தினாலும் நிரம்பியிருந்தன. சுலைமான் இன்னும்கூட உற்சாகமானான். தனக்குத் தெரிந்த விஷயத்தை இவர்களிடமும் சொல்லிச் சந்தோஷப்பட்டுக்கொள்ளக் கிடைத்த சந்தர்ப்பத்தை அவன் முழுவதுமாகப் பயன்படுத்திக்கொள்ள நினைத்தான்.

“பாத்திங்களா, அல்லா குடுத்த தண்டனைய? ஓடுகாலி பொம்பளை என்னா செய்துட்டுப் போனா? என்னவெல்லாம் நெனைச்சுப் போயிருப்பா? என்ன ஆனா? விடுவானா அவன்? அவனுக்குத் தெரியும் எல்லாம். அவனறியாத ரகசியம் ஒண்ணு இருக்கா? அவன் எப்பேர்ப்பட்டவன்?” என்று ஒரேயடியாகச் சொல்லித் திருப்திப்பட்டுக்கொண்டான். “மதுரைக்குப் போயி ரெண்டுபேரும் குடித்தனம் பண்ணியிருக்காக. நேத்துக்காலையில கடைவீதிக்குப் போயிருக்கா, அதிகாலை நேரம் எவனோ அடிச் செறிஞ்சுட்டுப் போயிட்டான். பஸ்ஸோ, லாரியோ தெரியல” என்றான்.

அந்தச்செய்தியை அவன் ரொம்பவே ரசித்துச் சொல்லிக் கொண்டிருந்தது ஷெரிபாவுக்கு எரிச்சலை உண்டாக்கிற்று. நல்ல வேளை குப்பி மகன் என்று சொல்லி இவனைக் கட்டிவைக்கவில்லை எனக்கு. பாவம் மும்தாஜ் என நினைத்துக்கொண்டவள், பாத்திமாவை நினைத்து பெரும் துக்கமடைந்தாள்.

"அடப்பாவமே, அப்புறம் ஒனக்கு எப்புடிப் தெரியும்?" என்றாள் சவுரா. "அங்கேருக்கற போலீஸ் ஸ்டேஷன்லருந்து செய்தி இங்க வந்துச்சு! அந்தப்பய, பாடிய இங்க கொண்டு வரட்டுமான்னு கேட்டு அனுப்பினான். ஜமா அத்துல முடியாது அங்கேயே பொதைங்க, எரிங்க, இங்கெ வரக்கூடாதுன்னு சொல்லியனுப்பியாச்சு. இப்பதான் பேசி முடிச்சு செய்தி அனுப்பியாச்சு! அவனுக அனாதைப் பொணம்னு பொதைப்பானோ, எரிப்பானோ யாருக்குத் தெரியும். என்னா கதி அடைஞ்சிட்டா பாரு கூடிய சீக்கிரத்துல, சிறுக்கி! அவன் இப்புடி உடனுக்குடன் காட்டுவான்னு நான் நெனைக்கவேயில்லை. என்ன இருந்தாலும் அவன் ரொம்பப் பெரியவன் இல்லெ" என்று உணர்ச்சிவசப்பட்டவனாகச் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டான்.

"அவ, நஸீபு அவள அங்கெ கொண்டு போயிச் சேர்த்திருக்கு. அவ ரூஹூ அங்கெ வச்சு புடுங்கணும்னு இஸ்ராயிலுக்கு இருந்துருக்குது. ஹூம்" என்று சொல்லிப் பெருமூச்சு விட்ட நபிஸாவுக்கு மௌத்துச் செய்தி கேட்டு இத்தனை நேரமாகியும், தானோ மற்ற யாருமோ இன்னாவில்லாஹி வ இன்னா இலைஹி ராஜி ஹூன் சொல்லாதது நினைவுக்குவர, அதனை மற்றவர்களுக்கும் நினைவு படுத்திச் சொல்ல வைக்கும் விதமாகச் சத்தமாகவே அதனைச் சொல்லி நிறுத்தினாள். அவள் வாய் மூடிய மறுநொடியே அங்கிருந்தவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தாற்போல இதே வார்த்தையைச் சொல்லி முடித்தார்கள்.

அவர்கள் ஒவ்வொருவரது முகத்திலும் மௌத்துச் செய்தி உண்டாக்கிய வருத்தத்தைவிட, எப்படி இவ்வார்த்தையை உடனடியாகச் சொல்லாமல் விட்டோம் என்கிற வருத்தம் அதிகமாகத் தெரிந்ததைக் கவனித்த நபிஸாவுக்குத் தான் மிக முக்கியமான ஒரு காரியத்தைச் செய்து முடித்தாற்போன்ற திருப்தி மனதில் உண்டாகியிருந்தது.

றைமாவுக்கும் சொஹ்றாவுக்கும்தான் அதை நம்புவதற்கு மிகவும் கஷ்டமாக இருந்தது என்பதை அவர்களது முகம் தெளிவாகக் காட்டியது.

சுலைமான் தான் வந்த நோக்கம் நல்லவிதமாக முடிவுற்றது குறித்த திருப்தியுடன், “அப்ப, நான் கெளம்புறேன். அஸ்ஸலாமு அலைக்கும்” என்றபடி கிளம்பி வெளியே சென்றான். அவன் சொன்ன ஸலாத்திற்குப் பதில் சொல்ல முடியாத அளவுக்கு அதிர்ச்சியோடு நின்று கொண்டிருந்தனர் றைமாவும் சொஹ்றாவும்! அவனைத் தொடர்ந்து மும்தாஜ் கிளம்பிப்போக, “சரி, நானும் வர்றேன்” என்று நபிஸாவும் கிளம்பினாள். அவன் போன உடனேயே அறைக்குள்ளிருந்து வெளியே வந்த வஹிதாவும் ஷெரிபாவும் ஒன்றுமே பேசத் தோன்றாமல் திகைத்துப்போய் நின்றுகொண்டிருந்தனர். என்ன சொல்வது எனத் தெரியாமல் தானும் கிளம்பிய சைனு, “சரி, அவ நஸீப யாரும் மாத்த முடியுமா என்னா? அவளுக்குச் சரியான தண்டனை கெடைச்சிருக்கு. அவனறிவான் ரகசியத்தை” என்று நீட்டி முழக்கியபடி சொன்னவள், “ஏலெ றைமா, ஒம்மகள சாயங்காலம் நம்ம வீட்டுக்குக் கூட்டி வாயேன். மதினா வயசுக்கு வந்ததைப் பார்த்தது மாதிரியிருக்கும். அதோட பரிதா மாமியார் வீட்டுலெ இருக்கா அவளையும் போய் பாத்துட்டு வரட்டும் என்ன?” என்று கண்டிப்புடன் சொல்லிவிட்டுக் கிளம்பிப் போனாள். ஒவ்வொருவராக

எழுந்து சென்ற பிறகு அங்கே வஹிதா, றைமா, சொஹ்ரா மூவரும் மட்டுமே எஞ்சியிருந்தனர். சற்று நேரம் அமைதியாக நின்று கொண்டிருந்துவிட்டு, அம்மாவும் சித்தியும் தத்தமது வேலைகளை ஆரம்பிக்க, வஹிதாவுக்கு ஏனோ மனம் வேதனையினால் நிரம்பியது.

# 58

குடும்பத்தைப் பிரிப்பதைப் பற்றி ராபியா மூலம் கேள்விப்பட்டு வஹிதா தன்னிடம் வந்து, “ஏம்மா, அவ சொல்றது உண்மையா?” என்று கேட்டபொழுது றைமாவுக்கு மனம் ஒரு கணம் தடுமாறிற்று. “ஆமாம்” என ஒரு வார்த்தையில் பதில் சொல்லி முடித்துக் கொண்டவள் அங்கிருந்து காற்றடித்துச் செல்லும் புகையைப்போல நழுவி வேறிடத்திற்குப் போனாள். ஆமினாவை ஆஸ்பத்திரியிலிருந்து கூட்டி வந்த மறுநாளே சொஹ்ரா இப்படிச் சொன்னதன் காரணம் புரியவில்லை என்றாலும் அவளுக்கு யார் மீதோ கோபம் இருப்பது மட்டும் றைமாவுக்குப் புரிந்தது. அதன் பிறகு வஹிதாவைக் கூப்பிட ஊருக்குப் போயிருந்தபோது, ஆமினாவைப் பார்க்கப் போனவளிடம் ஆமினா மெலிந்து போன தன் கைகளினால் இவளது கையைப் பற்றிக்கொண்டு நீண்டநேரம் அழுதுகொண்டிருந்தாள். சொஹ்ரா அங்கில்லாத தைரியத்தில் இவளிடம் பிர்தவ்ஸின் சாவைப்பற்றிய அத்தனை விஷயத்தையும் ஆமினா சொல்லிமுடித்தபோது உடல் கூசி ஒடுங்கிப்போனது றைமாவுக்கு. அதன் பிறகு அவள் ஒன்றுமே பேசாமல் அங்கிருந்து வந்து சேர்ந்திருந்தாள்.

வாழ்க்கையில் எப்போதோ ஒருமுறை அறியாத்தனமாகச் செய்த விஷயம் எப்படி இத்தனைப் பெரியதாக விஸ்வரூபம் கொண்டு எழுகிறது என்பதே றைமாவுக்கு விளங்கவில்லை. அவள் எதையுமே நினைவுபடுத்திக் கொள்ள முயலவில்லை. அப்படிச் செய்வதற்கான மனவலிமை தன்னிடம் இல்லை என்பதை அவள் அறிந்திருந்தாள். தான் மறந்துவிட நினைக்கிற ஒரு விஷயமாகவே அதனை அவள் நினைத்திருந்ததனால், ஒரு குழப்பத்தையும் தன்னுள் அனுமதிக்க

மறுத்து மௌனமாக இருந்து கொண்டிருந்தாள் எனினும், அவள் உடல் கூசத்தான் செய்தது. தன் மகள் எதிரிலே ஒரு குற்றவாளியைப் போல நடமாடுவதை அவள் அறிந்துகொண்டு விடக்கூடாது எனப் போராடிக் கடுமையான சித்ரவதைக்குள்ளாகிக் கொண்டிருந்தாள். எப்போதோ நடந்த தவறுக்கு எவ்வளவோ மனவருத்தம் அடைந்து ஓரளவு நிம்மதியை அடைந்த சமயத்தில் இப்படி ஆனதன் கொடுமையை எப்படிப் புரிந்து கொள்வது, யாரை நொந்து கொள்வது என்றே இவளுக்குத் தெரியவில்லை. மனம் ஒரு பழந்துணி போலக் கசங்கி இற்றுப் போயிருப்பதாக உணர்ந்தாள். கையோடு கிழிந்து உதிர்ந்து போய் விடுமோ என்பதுபோல்! வஹிதா என்ன நினைக்கிறாள் என்பது பற்றி ஒன்றுமே அறிந்துகொள்ள முடியவில்லை என்றாலும், இவளுக்கு அவள் எதிரே நிற்கவும்கூட தைரியமில்லாமலிருந்தது. அவள் தன்னை வெறுத்துவிடுவாளோ என்கிற பயம் தூங்கவிடாமல் துரத்த நடைப்பிணமாகத்தான் நடமாடிக் கொண்டிருந்தாள். றைமாவுக்குத் திடீரெனத் தன் மேலேயே ஒரு சந்தேகம் வந்தது. தான் ஒரே சமயத்தில் மகளிடமிருந்து விலகிச் செல்வது போலவும் வழக்கத்தைக் காட்டிலும் கூடுதலாகப் பிரியத்தைக் கொட்டிக் குழைவது போலவும் தோன்றிற்று.

இதுமட்டுமில்லாமல் வஹிதா சந்தோஷமாகக் கணவன் வீட்டில் இல்லையோ என்கிற கவலை வேறு துளைத்தெடுத்துக் கொண்டிருந்தது அவளை. சிக்கந்தரும் வஹிதாவும் பேசிக்கொள்வதுகூட ஏனோ ஒட்டாத மாதிரி தெரிந்தது என்றாலும், அது தனது கற்பனையாக மட்டுமே இருக்க வேண்டும் என்ற கவலையுடன் மகளது சந்தோஷத்திற்காக மூன்றுமாத நோன்பு வைப்பதாக நேர்ந்து கொண்டாள். தன்னுடைய அழுதழுது சோர்ந்து விட்ட கண்களும் வீங்கிய முகமும் வஹிதாவுக்குப் பெரிய மனக்குழப்பத்தை

உண்டுபண்ணக் கூடும் என்கிற நினைப்பில் வலுக்கட்டாயமாகத் தன்னை அந்த நினைவுகளிலிருந்து விடுவித்துக்கொள்ள முயன்ற றைமாவுக்கு இன்று வெள்ளிக்கிழமை என்பது நினைவுக்கு வர, நல்ல நாளும் கிழமையுமாக இப்படி அழுவது குடும்பத்திற்கு நல்லதில்லை என்று எழுந்து வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தாள். என்றாலும் வஹிதாவின் கண்கள் தன்னை ஊடுருவிப் பார்த்துக் கொண்டிருப்பதான ஒரு எண்ணம் நிரம்பி உடலை நடுங்க செய்து கொண்டேயிருந்தது.

வஹிதா குளித்துவிட்டுத் தலைவாரிக் கொண்டிருந்தாள். தலைமுடியிலிருந்து ஈரம் சொட்டிக்கொண்டிருந்தது. அடுப்படியில் நின்று சமைத்துக் கொண்டிருந்த றைமா தூரத்திலிருந்தே அதைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு வேகமாக மகளருகே வந்து, “ஏன் தலையை நல்லா துவட்டாம விட்டுருக்கே, சளி பிடிக்காது?” என்று அக்கறையுடன் சொல்லிக் கொடியில் காயப்போட்டிருந்த துண்டை எடுத்து வந்து அழுத்தமாகத் துவட்டிவிட ஆரம்பித்தாள். துவட்டுவதற்குத் தலையைக் கொடுத்தபடி குனிந்து அமர்ந்திருந்த வஹிதாவிடம் கேட்கலாமா, வேண்டாமா என்பது போலத் தயங்கியவள் சிறிது நேர யோசனைக்குப் பிறகு, “ஏம்மா, இன்னியோட எத்தினி நாள்? சரியா சொல்லு” என்றாள். அவளுக்குக் கேட்பதற்குச் சங்கடமாகத்தான் இருந்தது என்றாலும் அது தன் கடமை என்பது போலவும் நினைத்தாள்.

வஹிதாவுக்கு வெட்கமாக இருந்திருக்க வேண்டும். அவள் முகம் சிவந்து போயிருக்க, உடலை அப்படியே குறுக்கிக் கொண்டிருந்தாள். “சும்மா சொல்லும்மா, அம்மாதான கேட்கறேன். இன்னிக்கு தர்ஹாவுக்குப் போலாம்னு நினைச்சிருக்கேன். ஏழு வெள்ளி விளக்குப் போட நேர்ந்துருக்கேன், உன்னையும் இந்த வெள்ளி என்கூட கூட்டிப்

போகலாமுன்னுதான். இதோட நின்னுகிட்டா நல்லது” என்று ஆதங்கமாகச் சொல்லிப் பெருமூச்சுவிட்டாள். சின்ன வயதிலிருந்தே அவள் இப்படித்தான். ஒரு உணர்ச்சியையும் முகத்திலோ, செயலிலோ அவசரப்பட்டுக் காட்டிவிடமாட்டாள் வஹிதா. சொஹ்ரா சொல்வாள், “சரியான அமுக்குணி உங்க மக. ஒரு நாள்ல ஆடி வந்திருக்காளா, பாடி வந்திருக்காளா? நான் ஒண்ணு பெத்து வச்சிருக்கேன். எப்பவும் ஆட்டந்தான், பாட்டுதான்! பொண்ணாவா இருக்குது.” அவள் வஹிதாவைப் பாராட்டுகிறாளா, ராபியாவைத் திட்டுகிறாளா என்பதே சரியாகப் புரியாது. முகத்தில் பெருமையும் சலிப்பும் ஒரே சமயத்தில் தெரியும். அவள் சொல்வது நூற்றுக்கு நூறு சரிதான் என்பது இப்பொழுதுதான் உறைத்தது றைமாவுக்கு. முன்பெல்லாம் மகளது அமைதிக்கு ஒரு அர்த்தமும் தனக்கு வேண்டியிராது என்பதும் இப்பொழுது ஆயிரம் அர்த்தங்களைக் கற்பனை செய்து கொள்ள வேண்டியிருப்பதையும் நினைத்து வேதனை உண்டாகியது. “சரியான கல்லுள்ளி மங்கி” என்று தனக்குள்ளாக முணுமுணுத்துக் கொண்டாள். அவளிடமிருந்து பதில் எதுவும் வராதது மட்டும் ஏனோ மனதைக் கஷ்டப்படுத்தியது. இவள் வெட்கப்படுகிறாள் என்றால் மட்டுமே அது தனக்கு நிம்மதியாக இருக்கும். அதில்லாமல் தனக்குக் குழந்தை உண்டாவதே பிடிக்காமல் இப்படி மௌனம் சாதிக்கிறாளா, இல்லை தன்னிடம் சொல்லப் பிடிக்காமல் இப்படி இருக்கிறாளா? புரியாமல் சோர்ந்து போனாள் றைமா. தலை துவட்டிக்கொண்டிருந்த அவளது கைகள் கொஞ்சம்கூட வலுவேயில்லாமல் துவண்டு விழுவது போலிருக்க, ஒன்றும் பேசாமல் அறைக்குள் நுழைந்து பீரோவைத் திறந்து வஹிதாவுக்கு உடுத்தவென பட்டுப்புடவையையும் நகைகளையும் எடுத்து மெத்தையில் பரப்பினாள். வஹிதா மறுக்க மாட்டாள் என்கிற நம்பிக்கையோடு!

அம்மாவைத் தொடர்ந்து அறைக்குள் வந்த வஹிதா ஒன்றும் புரியாமல் அம்மாவை உற்றுப்பார்த்தாள், இதெல்லாம் எதற்காக என்பது மாதிரி! றைமா அவளுக்குப் பதில் சொல்லியே ஆக வேண்டும் என்கிற கட்டாயத்தினால், "இன்னக்கி வெள்ளிக்கிழமை. பரிதாவைப் போய் அவ மாப்பிள்ளை வீட்டுல பாத்துட்டு வரணும். மதினாவை ஒரு எட்டு பாக்கணும். நம்ம வீட்டுலயே கிடந்தவ, ஒன்னைப் பார்க்கணும்னு சொல்லிகிட்டே இருந்தாள்" என்றாள்.

வஹிதா சித்தியை நினைத்துக் கொண்டாள். மனம் ஏனோ தன்னை அலங்கரித்துக் கொள்ள ஒப்பவில்லை. அதனால் படுக்கையில் பரப்பியிருந்தவற்றையெல்லாம் தன்கையினால் ஒதுக்கியபடி, மெதுவாகத் தணிந்த குரலில் சொன்னாள். "வேணாம்மா, சித்தி கவலையா இருக்காங்க. எனக்குச் சங்கடமா இருக்கும். இன்னொரு நாள் பாத்துக்கலாம்." றைமாவுக்கு மகளது தயக்கம் புரிந்திருந்தது தான் என்றாலும் வேறு வழி எதுவும் தெரியவில்லை. இவளும் புதுப்பெண்தானே? இந்த வயதில் அலங்கரித்துக் கொள்ளாமல் எப்பொழுது செய்து கொள்ளப்போகிறாள்? என்ன செய்வது என்று யோசித்தவள், "அதுக்கென்ன செய்றது? எனக்கும் சங்கடமாத்தான் இருக்கு. ஒரு வருஷத்துக்கு நோன்பு நொடி அவளுக்கு இல்லெ. அதுக்காக நீ என்ன செய்யப்போற? அவ ஒண்ணும் நினைச்சுக்கிற மாட்டா." சொன்னவளின் குரலில் குளித்துக்கொண்டிருந்த சொஹ்ரா வருவதற்குள்ளாக மகளைச் சமாதானப்படுத்திவிட வேண்டும் என்கிற அவசரமும் இருந்தது.

வஹிதா பிடிவாதமாக மறுத்தாள். "வேணாம்மா. ஒரு வீட்டுக்குள்ள எப்புடி நடமாடுறது. மூஞ்சியில முழிக்கிறதா? முதுகுல முழிக்கிறதா?" சற்று முன் வரைக்கும் தான் கேட்ட கேள்விக்கு மௌனம் சாதித்தவள் இப்போது தன்னோடு பேசுவதேகூட றைமாவுக்குப் பெருமையாக

இருந்தது. கொஞ்ச நேரத்திற்கு முன் தான் எப்படியெல்லாம் கற்பனை செய்து கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம். அதெல்லாம் தவறு! அப்படியெல்லாம் அவளுக்கு ஒரு வருத்தமும் தன்னிடம் இல்லை என்று மனதில் நிம்மதி உண்டாகியிருந்தது. இதற்கும் மேலே எதுவும் பேசத் தோன்றாமல் தன் வேலையைக் கவனிக்க அடுப்படிக்குப் போன றைமா, குளித்துவிட்டு வந்த சொஹ்ரா ஏதோ சமாதானம் சொல்லியபடி வஹிதாவிற்கு அலங்கரித்து விட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்து தன் வீட்டில் அமைதி சுத்தமாகவே போய்விடவில்லை எனத் திருப்திப்பட்டுக் கொண்டாள்.

சாயங்கால எதிர் வெயில் முகத்தில் அடித்து எரிச்சலை உண்டு பண்ணிக்கொண்டிருந்தது. தனது துப்பட்டியினாலேயே முகத்தின் வேர்வையை ஒற்றி எடுத்தபடி நடந்து கொண்டிருந்தாள் றைமா. கையிலிருந்த சிறிய ஒயர் கூடையில் விளக்குப் போடும் எண்ணெய், துணி, காணிக்கைப் பணம், யாஸீன் கிதாபு எல்லாம் வைத்துக் கொண்டு வந்திருந்தாள். ஏழு வெள்ளிக்கு விளக்குப் போட நேர்ந்திருந்தாள். சவுராவும் சைனுவும் அசைந்து அசைந்து பின்னாலேயே நடந்து வந்து கொண்டிருந்தார்கள். இவளது வேகத்திற்கு ஈடு கொடுக்கும் உடம்பு அவர்களுக்கில்லை.

சவுரா தன் சதைத்த உடம்பை வைத்துக்கொண்டு வதக்கு வதக்கென்று நடந்து கொண்டிருந்தாள். அவர்களோடு சேர்ந்து தானும் மெள்ள நடந்து கொண்டிருந்தது எரிச்சலாக இருந்தது. கூடவர ஆள் யாரும் இல்லாததனால் இவர்களோடு சேர்ந்து வர வேண்டியதாக இருந்ததை நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டாள். சொஹ்ரா, பிர்தவ்ஸ் மௌத்திலிருந்து விளக்குப்போட வரவில்லை. “என்னத்துக்கு? நான் ஒண்ணும் போடலை” என்று சொல்லிவிட்டாள். “பாதியில நிறுத்தக்கூடாது மிச்சத்தையும் போடும்மா” என்று

எவ்வளவோ கெஞ்சிப் பார்த்து விட்டார்கள் சவுராவும் சைனுவும். அவள் காதிலேயே வாங்கிக்கொள்ளவில்லை. "இனிமே எனக்கு ஆகப்போறது ஒண்ணுமில்லை" என்றவளின் வாயை சைனு தன் கையினால் பொத்தித் தடுத்தாள். "என்னாடி இவ்ளோ பெரிய வார்த்தை சொல்ற? ஒனக்கு இனிமேத்தான வாழ்ற வயசுல பொண்ணு இருக்கா, வெறுப்புல இப்புடியெல்லாமா பேசுறது. பாதியில நிறுத்துனா அவுலியாக்கள் கோவுச்சுக்கிற மாட்டாகளா" என்று கடிந்துகொண்டாள்.

"சீக்கிரமா வாங்க, வெயிலு தாங்க முடியலை. சட்னு போய் தர்காவுக்குள்ள நுழைஞ்சுரலாமில்ல" என்று அவர்களிடம் திரும்பி நின்று அவசரப்படுத்திய றைமா, வியர்வையை மறுபடி துப்பட்டியில் துடைத்துக் கொண்டாள். வெயிலின் கடுமை தாக்கி அவளது முகம் சிவந்துபோய் விட்டிருந்தது. "உஸ்! இருலெ இந்தாத்தேன் வந்துட்டமுல்ல?" என்ற சைனு, "நடந்தே வந்து வெளக்குப் போடுறதா நேர்ந்ததுனால இப்பிடி வேகாவெயில்ல வரவேண்டியிருக்குது. இல்லென்னா காருலயாச்சும் வரலாம்" என்றபடி சற்று எட்டி நடக்கத் துவங்கினாள். சவுராவுக்கு அதுகூட முடியாததால் அவள் பின்னாலேதான் வந்துகொண்டிருந்தாள்.

வெயிலோடு சேர்த்து அனல் காற்றும் அடிக்க, சைனுக்கு எரிச்சலுண்டாயிற்று. "இந்த வெயிலு சித்திரை மாதிரியில்ல இந்த வாங்கு வாங்குது. பாழாப்போகத்துக்கு" என்று தன் பாட்டுக்குத் திட்டியவள், "அந்தச் சிறுக்கிக்கி என்னா அம்புட்டு ராங்கு. யாருக்குத் தான் கஷ்டம் இல்லெ? தங்கச்சிக்காரி என்னா பாவம் செஞ்சாளோ போயிச் சேந்தா! அதுக்கு யாரு என்னா செய்வாக? இந்தா பாத்துமா ஓடுனாளே, விட்டானா அவன்? சரிதான் அப்புடின்னுட்டு போகாம, தங்கச்சி ரொம்ப யோக்கியமுன்னுட்டு வக்காலத்து வாங்குது,

வாழைக்கன்னு மாதிரி ஒரு பொண்ண வச்சுக்கிட்டு” என்று சலித்துக்கொண்டு, றைமாவின் முகத்தை உற்றுப்பார்த்துப் பதிலை எதிர்பார்த்து நடந்து கொண்டிருக்க, றைமாவுக்கு வெறுப்பாக இருந்தது. தன் வாயைப் பிடுங்குவதில் என்னதான் சுகமோ என்று நினைத்தவளாக முகத்தை வேறுபுறம் திருப்பிக் கொண்டாள்.

“நான் ஒலுவோட இருக்கேன்க்கா, எதையும் பேச வேணாம். பேசித்தான் என்ன ஆகப்போவுது? ஒலு முறிஞ்சுச்சுன்னா மறுபடி எங்கன போய் ஒலு செய்யமுடியும்” என்று சொல்லிப் பேச்சை முடித்துக்கொண்டாள் றைமா. அவளுக்கு இந்தப் பேச்சு பிடிக்கவில்லை என்பது முகத்தில் லேசாகவேனும் தெரியத்தான் செய்தது. அவள் இப்படி வெட்டிப்பேசியதில் சைனுவுக்கு அதிருப்தி உண்டாகியிருக்க வேண்டும். “ஆமலே, நீ மட்டுந்தானாக்கும் ஒலுவோட இருக்க, நாங்க இல்லையாக்கும். நீ ஒங்கொழுந்தன் பொண்டாட்டியக் கொஞ்சம்கூட விட்டுக் குடுத்துப் பேசமாட்டாதவ இல்லெ?” என்று சலித்துக்கொண்டாள். அவளுக்குத் தனியாகப் பேசக்கிடைத்த சந்தர்ப்பத்திலும்கூட றைமா வாய்திறக்காத ஏமாற்றம் சகித்துக் கொள்ள முடியாத துக்கமாக இருந்தது.

அதற்குள்ளாக சவுரா முந்திக்கொண்டு, “ஏன் அண்ணன் பொண்டாட்டி, ஒனக்குத் தெரியாதா சங்கதி, இவ வாய் திறக்க மாட்டான்னு. அம்புட்டு உறுத்து கொழுந்தன் பொண்டாட்டி மேல! லேசாவா நினைச்ச?” என்று சைனைச் செல்லமாகக் கடிந்து கொண்டவள், றைமாவின் முகத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டாள். இப்படிப் பேசினாலாவது றைமா எதையாவது சொல்ல வாய் திறப்பாளா என்கிற எதிர்பார்ப்போடு! பதிலுக்கு அமைதியாகப் புன்முறுவல் செய்து கொண்ட றைமா தன் வாய்க்குள்ளாகவே தஸ்பீஹ் சொல்லியபடி நடந்து கொண்டிருந்தாள்.

நகரத்துக்குச் செல்லும் சாலை வழி என்பதனால் எதிரே அவர்களைக் கடந்து வரிசையாக பஸ்களும், லாரிகளும், கார்களும் சென்றபடியிருந்தன. போகலாமா வேண்டாமா என்பது போல வெயில் தயங்கித் தயங்கி ஊரைக் கடந்து சென்று கொண்டிருந்தது. இவர்களுக்கு முன்புறமாகவும், பின்புறமாகவும் இவர்களைப் போலவே தர்காவுக்குச் செல்கிற பெண்கள் ஐந்தாறுபேர்களாக சேர்ந்து சென்று கொண்டிருந்தார்கள். றைமாவுக்குத் தன்னை நினைத்து வேடிக்கையாக இருந்தது. முன்பெல்லாம் தர்காவுக்குப் போகமாட்டாள். பெண்கள் தர்காவுக்குப் போகக்கூடாது. அது ஆணினுடைய அடக்கஸ்தலம். அதைப் பெண்கள் பார்க்கவே கூடாது. அவர்களிடம் போய் கையேந்துவது அல்லாவுக்கு இணை வைப்பது மாதிரி. அதை அல்லா மன்னிக்கவே மாட்டான் என்கிற காதரின் ஹதீஸ்களைக் கேட்டு அதன்படியேதான் இருந்து கொண்டிருந்தாள். இப்பொழுது கணவனுக்கே தெரியாமல் தானும் தர்காவுக்கு வரத் துவங்கியிருப்பது எந்த நம்பிக்கையில் என்கிற கேள்வியைவிட எந்தக் கவலையில், யார்மீதான அவநம்பிக்கையில் என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள்.

தன் மகளின் வாழ்வு சந்தோஷமாக இருக்க வேண்டுமென்கிற கவலையில் தான் எதைச் செய்யவும் தயாராக இருப்பதுதான் தன் மாற்றத்திற்குக் காரணம் என்பது புரிந்துதான் இருந்தது. சையது அலி நோன்பு, மூன்று மாத நோன்பு, தர்காவில் விளக்குப் போடுவது, நாகூர் தர்காவுக்கு, ஏர்வாடி தர்காவுக்கு வருவதாக நேர்ந்து கொண்டிருப்பது இதெல்லாமே வஹிதாவின் சந்தோஷத்திற்காக மட்டும்தான் என்பதை நினைத்தபொழுது அவள் தனக்கு ஏதும் மனக்குழப்பம் உண்டாகிவிட்டதோ என்று பயந்தாள். ஆனால் எல்லாவற்றையும் தாண்டிய ஒரு நம்பிக்கைக்காக அவள் ஏங்கினாள். சைனுவும் கூட

பரிதாவின் திருமணத்திற்காக நேர்ந்து கொண்டு தன் மகன் சுலைமானுக்குத் தெரியாமல்தான் தர்காவுக்கு ஒவ்வொரு வாரமும் வருகிறாள். இதுவும் இல்லாவிட்டால் அவள் உயிரோடு இருப்பாளா என்பதே சந்தேகம்தான்.

# 59

ஸ்கூல் திறந்து ஒருவாரமாகியிருந்தது. சொஹ்ரா, ராபியாவை இனி படிக்கப்போக வேண்டாம் என்று சொல்லி விட்டாள். ராபியா எவ்வளவோ கெஞ்சிப்பார்த்தாள். மதினா வயதுக்கு வந்த மறுநாளே சொஹ்ரா சொல்லியிருந்தாள். “பொம்பளப் பிள்ளையா, லட்சணமா வீட்டுல இருந்தா போதும். மதினாவும் போகலை, நீ தனியா போக வேணாம்” என்று. “நான் உமா கூட போறேன்” என்றவளிடம், “அவ குடியான வீட்டுப்பொண்ணு, நம்ப தெருப்பிள்ளைக யாரும் கூட வராம நீ போகக்கூடாது” என்று அதட்டினாள். ராபியா ரொம்பவே மனம் சோர்ந்து போனாள். “அவ இப்பதான ஏழாவது முடிக்கிறா? அதுக்குள்ள நிறுத்த வேணாம்” என்ற றைமாவிடம், “அதெல்லாம் முடியாது” என்று வெடுக்கென்று கண்டிப்பாகச் சொல்லிய சொஹ்ரா அதற்கு மேலே யாரையும் பேச விடவில்லை. இப்போதெல்லாம் முன்னைவிட இன்னும் அதிகமாகவே அவள் ராபியாவை அடக்கி ஒடுக்கி வைப்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பதை வஹிதாவும் றைமாவும் கவனிக்கத்தான் செய்கிறார்கள். வஹிதா, அம்மாவிடம் சொன்னாள், “பாவம்மா அவ! வயசுக்கு வர்றதுக்குள்ளேயே வீட்டுக்குள்ள போட்டு அடைச்சுக்கிட்டு” என்று.

அம்மா சொன்னாள், “உனக்கு என்ன தெரியும், ஊர்ல அவ குடும்பத்தைப் பத்திப் பேசுறதை? சவுரா கூட என் கிட்ட சொல்லியிருக்கு. ஆமினா தங்கச்சி மாதிரித்தான் ஆமினா மக. எல்லாம் வழி வழியா வருது பாரு. தெரியாமயா சொல்றாங்க சாதிப்புத்தி கூட வரும் அப்புடின்னு! இவ அதுக்காகத்தான் பயப்பட்டுச் சாகறா, அவள ரொம்பவும் பொத்திப் பொத்தி வைச்சுக் கொல்லுறா” என்று.

வஹிதாவுக்கு மனதிற்குக் கஷ்டமாக இருந்தது. நேற்று மதினாவைப் பார்க்கப் போயிருந்தபொழுது அவள் ஆர்வமாக ராபியா ஸ்கூலுக்குப் போகப்போறாளா என்று கேட்டது ஞாபகத்திற்கு வந்தது. அவளுக்கு இவள் போகமாட்டாள் என்றால்தான் சந்தோஷம். "அப்பதான எனக்கு போரடிக்காம அவ என் கூடயே பேசிக்கிட்டு இருப்பா" என்றாள் குழந்தையைப் போல!

சென்ற வருடம் சபுர்கழிவு அன்று காலையிலேயே குளித்து விட்டு அஸரத் வீட்டில் போய் அவர் மையினால் ஆயத்து எழுதிக் கொடுத்த ஆறேழு மாவிலைகளைக் கொண்டுவந்து இவளிடம் கொடுத்து, "அக்கா இதைத் தண்ணியை ஊத்திக் கழுவி அந்தத் தண்ணியை நீ குடிச்சுட்டு எனக்கும் குடு." ஆர்வமுடன் கேட்ட தங்கையின் முகத்தை உற்றுக்கவனித்த வஹிதா அவளது முகத்தில் ஏதோ வருத்தமிருப்பதாக உணர்ந்தாள். அவள் சொன்னது போலவே ஒரு அகலமான பாத்திரத்தில் இலைகளைப்போட்டுத் தண்ணீர்விட்டுக் கழுவி பிறகு இருவருமாகக் குடித்தார்கள். குடித்த கையோடு அம்மாவிடம் ஓடி, "அம்மா, நானும் மத்தியானம் புல்லுமிதிக்க மலைக்குப்போறேன்" என்றவளை, "அதெல்லாம் வேணாம். போன இடத்துல வயசுக்கு வந்துட்டன்னா?" என்று சாவகாசமாகப் பதில் சொல்லிவிட்டு மத்தியானப் பாத்திஹாவுக்கெனச் சமைக்க ஆரம்பித்தவளிடம் வஹிதா கேட்டாள்: "ஏன் சித்தி, அவ போகட்டுமே, ஊரே போகுதுல்ல?"

"ஒனக்குத் தெரியாது வஹிதா, போன எடத்துல மொதத்தீட்டு வந்துட்டா, காடு கரையில காத்து கருப்பு அண்டுச்சுன்னா ஒண்ணும் பண்ணமுடியாது. கல்யாணம் முடியட்டும், பெறகு போகலாம். போனவருஷம், அதுக்கு முந்துன வருஷமெல்லாம் சின்னப்பிள்ளையா இருந்தா. போனா! அப்புறம் என்னவாம்?" என்று தீர்மானமாகச்

சொல்லிவிட்டாள். அதற்கும் மேலே பேச இவளுக்கு ஒன்றுமில்லாமல் ஆயிற்று. ராபியா புதுத்துணி போட்டு, பூவைத்து, அலங்கரித்து அன்று முழுக்க அழுததுதான் மிச்சம்.

அதேபோலத்தான் இந்த வருடம் முழுப்பரிட்சை எழுதுவதற்குள் ராபியாவைப் படுத்தி எடுத்துவிட்டாள். அவள் கையில் புத்தகத்தை எடுத்தாலே போதும், “பொழுதுக்கும் படிச்சு என்னா செய்யப்போறே? கலெக்டரா ஆகப்போறதுமாதிரி! இந்த வருஷம் இல்லாட்டி அடுத்த வருஷத்தோட உக்காரப்போற, என்னமோ பாஸானாப் போதாதா? கிடந்து ராவும் பகலுமா தலையைக் குப்புறக் கவிழ்த்துக்கிட்டுக் கெடக்கிற பொம்பளப்புள்ள, தலையை வலிக்காது?” என்று சித்தி முணுமுணுத்துக் கொண்டேயிருந்ததை ஆழமான துயரத்துடன் நினைவுபடுத்திக் கொண்டாள் வஹிதா.

“பரிச்சைக்கு நல்லாப் படிடி.” அக்கறையாகச் சொல்லும் வஹிதாவிடம் ராபியா சொல்வாள்: “ரொம்பநேரம் படிச்சு என்னக்கா செய்யப்போறேன், எப்புடியும் சீக்கிரத்தில படிப்பை நிறுத்திருவாங்கதானே?” அவளது குரலில் தெரியும் இயலாமை வருத்தத்தை உண்டு பண்ணும்.

வஹிதாவுக்கு மனம் வெறுப்பாக இருந்தது. சொஹ்ரா முன்பு மாதிரி இல்லாமல் இறுகிப் போன முகத்தோடே இருந்து கொண்டிருப்பதில் இவளுக்கு அம்மா வீட்டிற்கு வந்த சந்தோஷமே இல்லாமல் ஆகியிருந்தது. வீட்டின் நடுவில் சுவர் வைத்து விட ஏற்பாடு நடந்து கொண்டிருந்தது. காலையில் கூட யாராரோ வந்து வீட்டை அளந்து கொண்டிருந்தார்கள். கரீமும் காதரும் குடும்பம் பிரிவதைப் பற்றி ஒருவார்த்தையும் பேசிக்கொள்ளவில்லை.

பெண்களுக்குள் என்ன பிரச்னையோ என்பது போல இருந்தார்கள். சொஹ்ரா சித்தி, சச்சாவிடம் ஒரே விஷயம்தான் சொன்னாளாம்.

“நான் எங்கம்மாவையும் என்கூட வச்சுக்கப் போறேன். அதுக்காகத்தான்” என்று. காதரிடம் கரீம் இதைச் சொல்லியதால் மறுபேச்சு பேச யாருக்கும் துணிவில்லை. அது நியாயம்தான் என்பது போல காதருக்கும் தோன்றியிருந்தது. ஆனால் றைமா, சொஹ்ரா, வஹிதா மூவருக்கும் மட்டுமே உண்மையான காரணம் தெரியும். ஒரு நரகத்தில் இருப்பதுபோல இங்கிருப்பதை உணர ஆரம்பித்திருந்தாள் இவள். அங்கிருந்து தப்பித்து இங்கே வந்து விட்டோம், இனிமேல் இங்கிருந்து போகவே கூடாது என நினைத்து வந்தவளுக்கு, சொஹ்ராவின் நடவடிக்கையிலிருந்த விலகலும் அம்மா தன்னிடமிருந்து ஒதுங்கி ஒதுங்கிப் போவதும் ராபியா இந்த வயதிலேயே சுருண்டு போய் தன்னோடு தன் அறைக்குள்ளேயே கிடப்பதும் பார்க்கவே சகிக்க முடியாமல் இருந்தது. யாரை நொந்துகொள்வது என்று புரியாத மனம் அமைதியில்லாமல் புழுங்கித் தவித்தது. ஊருக்கே போய் விடலாமா, என்று நினைத்த மாத்திரத்தில், சையதுவின் முகம் கண் எதிரில் தோன்றி அவளை நடுங்கச் செய்தது. கூடவே சபியாவின் பேச்சும் அவளது கைக்குட்டையும்!

திடீரெனத் தன் நினைவுக்கு வந்தவளுக்கு இன்றோடு எத்தனை நாளாகிறது என்கிற கேள்வி எழுந்தது. முப்பத்தி ஒன்றா, முப்பத்தி இரண்டா எனத் தெரியாமல் குழப்பமுண்டாகியது. வழக்கமாக முப்பதாம் நாளில் வந்துவிடும். இப்பொழுது ஏன் இன்னும் வரவில்லை என யோசித்தவளுக்கு, ஏனோ உடல் குலுங்கிற்று. தன்னையறியாமலேயே கை, நெற்றியையும் கன்னத்தையும் நோக்கி உயர்ந்து விரல்களில் நெருடிய பருக்களைத் தடவிப்பார்த்துத் திருப்தியடைந்தது. அவள் எழுந்து போய் கண்ணாடியின் எதிரே நின்று தன் முகத்தை உற்றுக் கவனித்தாள். சிவந்து பழுத்திருந்த கன்னத்துப் பருவைத் தொட்டுத் தடவினாள். அது உண்டுபண்ணிய

சந்தோஷத்தில் அதனை லேசாகக் கிள்ளி விட்டுக்கொண்டாள். வலித்தது என்றாலும் சுகமாக இருந்தது. சிவந்த முகத்தில் அந்த இடம் மட்டும் இன்னும் சிவப்பாகிவிட்டிருந்தது. உடுத்தியிருந்த கறுப்புநிறச் சேலையின் நிறம் இன்னும் கூடுதலாகத் தெரிகிறது. இங்கு வந்த பிறகு தன் உடல் நன்றாகவே தேறி இருக்கிறது. சிக்கந்தர் ஒரு நாளாவது தன்னை அழகாக இருப்பதாகச் சொல்லியிருக்கிறானா என ஞாபகப் படுத்திப் பார்த்தாள். இருட்டில் தன்மீது ஒரு மிருகம்போல் விழுந்து எழுந்து போவான், அவ்வளவுதான். அவன் தன்னை வர்ணித்தால் மட்டும் ரசிக்குமா எனக் கேள்வியையும் கேட்டுக் கொண்டாள். பதில் அவளுக்குத் தெரிந்ததுதான். நிச்சயமாக அவளுக்கு அது பிடிக்காதுதான். அதுவே பெரிய நிம்மதியை உண்டு பண்ணிற்று. கூடவே சையது தன்னை ஒவ்வொரு நாளும் ஏதாவது சொல்லி வர்ணிப்பது ஞாபகம் வந்து இம்சிக்க தன் நினைவுகளை உதறித் தள்ளினாள். இப்படிக் கண்டதையும் நினைத்து நினைத்துத் தனக்குப் பைத்தியம் பிடித்துவிடுமோ என்கிற பயம் உண்டாகியிருந்தது. யாரிடமாவது பேசினால் தேவலை என நினைத்தவள், கட்டிலில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்த ராபியாவை உற்றுப் பார்த்தாள். நேரம் அஸரை நெருங்கியிருந்தது. தொழுவதற்கு முன்பாக அவளை எழுப்பிக் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருக்கலாம் என்று நினைத்தவள், அவளருகில் போய் காலடியில் உட்கார்ந்து கொண்டு அவளது பாதத்தைச் சுரண்டி எழுப்பத் துவங்கினாள். தன்னிடம் எத்தனையோ கேள்விகளைக் கேட்டுக்கொண்டு துள்ளி ஓடிக் கொண்டிருந்தவள் இப்படிச் சுருண்டு ஒடுங்கிக் கிடக்கிறாளே, அதுவும் இந்த வயதிலேயே என்கிற கவலையோடு!

றைமா உள்ளே வந்தாள். கையில் ஒரு பீங்கான் வைத்திருந்தாள். “இந்தா பொரி. நீயும் அவளும் தின்னுங்க. பிறகு டீ குடிக்கலாம்” என்று

கட்டிலில் இவளருகில் வைத்து விட்டு வெளியே போனவளிடம், “நான் இன்னும் தொழுகலைம்மா. அதை வெளியதானா வைங்க. இங்கெ குப்பையாப் போவும்” என்றாள் வஹிதா.

“ஆமா, உடனே ரெண்டு பேரும் தின்னு முடிச்சிடுவீங்க பாரு” என்று சலித்தபடி அம்மா பாத்திரத்தை மறுபடி வெளியே கொண்டு போனாள். ராபியா எழுந்து முகம் கழுவப் போனாள். வஹிதாவுக்கு மறுபடியும் அம்மாவின் காலடிச் சத்தம் கேட்டது. இவளுக்கு அம்மாவின் காலடிச் சத்தம் சின்ன வயதிலிருந்தே ரொம்பவும் பிடிக்கும். பூனைமாதிரி மிருதுவாக, சத்தமேயில்லாமல் நடந்து வருவாள். மெட்டியொலி மட்டும் மிக மெல்லிய சத்தத்தோடு அவள் நடையை உணர்த்தும். உள்ளே வந்த அம்மாவை என்ன என்பது போலப் பார்த்தாள் வஹிதா. அவள் ஏதோ சொல்ல வந்து தயங்குவது போலிருந்தது.

சிறிது நேரத் தயக்கத்துக்குப் பிறகு, “ஒண்ணுமில்ல ரெண்டுநாள் தள்ளிப் போயிருக்கு இல்ல? அதனால நீ சும்மா சும்மா நடக்காம கொள்ளாமப் படுத்தே இரு. தொழுகக்கூட அவசரமில்ல, பின்னாடி பார்த்துக்கலாம்” என்றாள். இதைச் சொல்லி முடிப்பதற்குள் அவளது முகம் பேயறைந்தாற் போல வெளுத்துப் போயிருந்ததை வஹிதாவுக்கு தெளிவாகப் பார்க்க முடிந்தது. இதைச் சொல்ல இவள் ஏன் இப்படிப் பயந்து நடுங்கவேண்டும். அப்படியென்றால், தன்னிடமிருந்து அவள் ரொம்ப தூரத்தில் இருக்கிறாளோ என்கிற எண்ணம் மனதில் நிரம்பியது. இப்பொழுதும் தான் ஒரு பதிலைச் சொல்லவில்லையென்றால் அது அவளுக்கு ரொம்பவே வேதனையாகவும் துயரமாகவும் மாறிவிடும் என்பதனால், “இல்லேம்மா, இந்தா பாருங்க முகமெல்லாம் பருவை” என்றாள் மொட்டையாக, அவளுக்கு விளங்கிக் கொள்ள முடியும் என்ற

அர்த்தத்தில்! மகள் என்ன சொல்ல வருகிறாள் என்பது புரிந்தது றைமாவுக்கு. என்றாலும்கூட, “இருக்கட்டும். நீ சும்மா ரெஸ்ட் எடு. அது ஒண்ணும் தப்பில்லே” என்றவள், வஹிதா பதில் சொல்லிய திருப்தி முகத்தில் தெரிய அறையை விட்டு வெளியே போனாள்.

முகம் கழுவிவிட்டு அறைக்குள் வந்த ராபியா, மறுபடியும் வந்து இவளது மடியில் தலைவைத்துப் படுத்துக்கொண்டாள். “என்ன, இன்னும் தூக்கம் கலையலையா?” என்றவாறு அவளது முதுகைத் தடவிவிட்டவள், “எழுந்திரிச்சிக்கோ. தலை சீவி விடுறேன்” என்றாள். பதில் சொல்லாமல் எழுந்து உட்கார்ந்த ராபியா, தலைப் பின்னலை அவிழ்த்துவிட்டுப் பின்புறமாகப் போட்டபடி சீவி விடத் தோதாக அமர்ந்து கொண்டாள். வஹிதா அவளது நீளமான முடியை தன் இரு கைகளில் எடுத்து வலிக்காதபடிக்கு மிருதுவாகச் சீவி விட ஆரம்பித்தபொழுது எதையோ நினைத்துக்கொண்டவளாகச் சட்டென்று கழுத்தைத் திருப்பி அக்காவின் முகத்தைப் பார்த்த ராபியா, “நீ ஏன் கல்யாணமானதும் ஒரு ஊருக்கும் போகலே?” என்றாள். வஹிதாவுக்கு இப்பொழுதுதான் நினைவுக்கு வந்தது, தான் திருமணத்திற்கு முன்பாக அவளிடம் ட்ரெயினில் கூட்டிப் போவதாகச் சொல்லியிருந்தது. அவள் அதை இன்னும் ஞாபகத்தில் வைத்துக் கேட்பது சங்கடத்தை உண்டு பண்ண, நீளமான தயக்கத்துடன் “அதுவா?” என்றவள், என்ன சொல்வது என யோசித்தாள். ராபியாவே மறுபடியும், “பெரியம்மாகிட்ட கேட்டேன். நாப்பது கழியாம வெளிய போனா பூ வாசம் பேய்க்குப் பிடிக்குமாம். அது ஒன்னையப் புடிச்சுக்குமாம். சொன்னாங்க” என்றாள் பெரிய மனுஷி மாதிரி! இதைச் சொல்லும்பொழுது அவளது பெரிய கண்களில் திகில் நிறைந்திருந்ததை வஹிதா கவனித்தாள்.

தான் பதில் சொல்வதற்கு முன்பாக அவளாகவே பதில் சொல்லியது

நிம்மதியாக இருந்தது வஹிதாவுக்கு. அவள் பதில் எதுவும் சொல்லாமல் தலையைச் சீவியபடியே இருந்தாள். அவளது தலையில் பேன்கள் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருந்ததைப் பார்த்துவிட்டு, “ஏண்டி, இவ்வளவு முடியை வைச்சுக்கிட்டு பேன் சீவுறது இல்லெ?” என்று தங்கையைக் கடிந்து கொண்டவள், போய் அலமாரியைத் திறந்து பேன் சீப்பை எடுத்துக்கொண்டு வந்து சீவி விட ஆரம்பித்தாள். “அக்கா, நீ சீவி விடறது பிர்தவ்ஸ் சித்தி சீவுறது மாதிரியே இருக்கு. கொஞ்சம்கூட வலிக்கவே இல்லை” என்ற ராபியா, “சித்திய நினைச்சா எனக்கு அழுகை அழுகையா வருதுக்கா” என்றாள். வஹிதாவுக்குச் சுருக்கென்றது. தொடர்ந்து அவள், “எங்க சித்தி எவ்வளவு நல்லவங்க தெரியுமா, நானுன்னா உசுரு இல்லேக்கா?” என்றாள். இவளுக்கு அவளது குரலிலிருந்த வருத்தம் தாங்கவியலாத துக்கத்தை உண்டு பண்ணித் தொண்டையில் அடைக்க, பதில் சொல்ல முடியாத நிலையில் வெறுமனே தலையை மட்டும் ஆட்டினாள் அவள் சொன்னதை ஆமோதிப்பது போல! தொண்டையிலிருந்து “உம்” என்கிற ஒரு ஓசையை மட்டும் எழுப்பியபடி! அவளையும் அறியாமல் கண்களில் நீர் திரையிட்டுப் பார்வையை மறைக்க, “நீ கொஞ்சம் இரு இதோ வந்திட்டேன்” என்றபடி அறையிலிருந்து வெளியே வந்து ஹாலின் ஒரு ஓரத்தில் நின்று யாரும் பார்க்கிறார்களா என்று கவனித்தபடியே சேலைத் தலைப்பால் கண்களிலிருந்த நீரை ஒற்றி எடுத்தாள். அம்மா சமையலறையில் சமைத்துக் கொண்டிருப்பது ஜன்னல் வழியே தெரிந்தது. சொஹ்ராவைக் காணவில்லை. அவள் மறுபடியும் ராபியாவின் பக்கத்தில் போகவே பயந்தாள். அவள் வேறு எதுவும் கேட்டுவிடுவாளோ என்றிருந்தது. அவளிடம் மறுபடி போகும் முன்பாக வேறு ஏதாவது சங்கதியை ஞாபகப்படுத்தி அதை உள்ளே நுழைந்த உடனேயே பேச ஆரம்பிக்கலாம் என நினைத்தவள் என்ன பேசுவது என்று யோசித்தாள். என்றாலும் அவள் சிந்தனையை

நங்கூரம் போட்டுப் பாய்ச்சியது போல பிர்தவ்ஸின் நினைவுதான் ஆக்கிரமித்திருந்தது.

"அக்கா சீக்கிரமா சீவி விடு. மஃரிபு நேரம் தலை விரிச்சுக் கிடந்தா அம்மா திட்டுவாங்க. மலக்குக வர்ற நேரமுன்னு." உள்ளிருந்தே கத்திக் கூப்பிட்டாள் ராபியா. உள்ளே நுழைவதற்கு முன்பாகவே பேச்சை ஆரம்பிக்க வேண்டும் என்கிற திட்டத்தோடு வஹிதா, "ஆமா ராபியா, அஹமது இப்ப எங்கெ ஆளையே காணும்" என்று கேட்டவாறே அவளருகில் வந்து தலை வாரி விடத் தொடங்கினாள். அவனது பெயரைக் கேட்டதுமே ராபியாவுக்கு முகம் சோர்வுறுவதை வஹிதாவினால் கண்டுகொள்ள முடிந்தது. பொழுது சாயும்வரை கூட பிள்ளைகளோடு சேர்ந்து விளையாடிக் கொண்டிருப்பாள். இப்பொழுதுதான் ஒன்றுக்கும் வழியில்லாமல் ஆகிவிட்டதே. "அஹமது இப்ப இங்கே இல்லைக்கா. அவங்க மாமா வீட்லெ ஊர்ல படிக்கிறான்" என்றாள்.

அவளுக்கு இதைச் சொல்வதற்குக்கூட இயலாதபடி வருத்தம் குரலைத் தாழ்த்தியிருந்தது. வஹிதாவுக்கு இப்பொழுதுதான் ஒரு விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. டிரைவர் முத்து இப்பொழுது வேலையில் இல்லை. அவனை அனுப்பிவிட்டதாகத் தெரிந்தாலும் எதற்காக அனுப்பினார்கள் என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பினாள். அம்மாவிடம் கேட்க நினைவு வரவேயில்லை. இவளுக்குத் தெரிந்துதான் இருக்கும் என்று நினைத்தவள், "ஏன் ராபியா, முத்துவை என்னத்துக்கு வேலையை விட்டு நிறுத்துனாங்க உனக்காவது தெரியுமா?" என்றாள். வஹிதா தன்னை மதித்துக் கேட்டு தெரிந்து கொள்கிற அளவுக்குத் தனக்கு விஷயம் தெரியும் என்கிற பெருமை முகத்திலும் குரலிலும் பீறிட, உற்சாகம் கொண்ட ராபியா, "ஒனக்குத் தெரியாதா?" என்று தலையைத் திருப்பி இவள் முகத்தைப்

பார்த்துக் கேட்டாள், “சுலைமான் அண்ணன்தான் வந்து அத்தாகிட்ட என்னமோ சொல்லுச்சு. அவருக்கு முத்துவைப் புடிக்கலையாம். ஒடனே அத்தா முத்து அண்ணனை வேலைய விட்டுப் போகச் சொல்லிட்டாங்க” என்றவளின் குரலில் சரியான வருத்தம் தெரிந்தது. “இப்ப அவரு வேற ஊருக்கு லாரி ஓட்டப் போயாச்சாம். உமா சொன்னா” என்றாள் தொடர்ந்து.

வஹிதாவுக்குப் பதில் சொல்லத் தோன்றாததால் மௌனமாகவே அவளுக்குப் பின்னலிட்டுக் கொண்டிருந்தாள். சிறுபிள்ளைதானே அவளுக்கு இதற்கு மேலே என்ன தெரிந்திருக்கப் போகிறது என்கிற மாதிரி. அவள் ரிப்பனைக் கட்டிக் குஞ்சம் முடிந்து கொண்டிருந்த பொழுது, ராபியா விருட்டென அக்காவின் பக்கமாகத் திரும்பினாள். “முத்து அண்ணன் சுத்த மோசம்க்கா, பரிதா அக்காவும்தான். தெனமும் ஜன்னல்ல நின்னுக்கிட்டு சிரிச்சுக்கிட்டே இருப்பாங்க” என்றாள்.

வஹிதாவின் மண்டையில் சடாரென்று எதுவோ உறைத்தது. “பரிதாவுக்குத்தான் நான் நெனைச்ச மாதிரி மாப்பிள்ளை பார்க்க நேரமில்லாமல் போச்சு. வசதியில்லாட்டியும் பரவாயில்லை, காரியம் முடிஞ்சா சரின்னு முடிச்சாச்சு. இவளுக்காச்சும் நல்ல எடம் பாத்துக் குடுத்தாதான் மனசு ஆறும்” என்று சைனு நேற்று தன் பாட்டுக்குப் புலம்பிக் கொண்டிருந்ததை நினைவுக்குக் கொண்டுவந்தாள்.

அம்மா அருகிலில்லாத தைரியத்தில், “ஏம்மா வஹிதா, இன்னையோட எத்தினி நாள் தீட்டு தள்ளிப் போயிருக்குது. சும்மா சொல்லு. நான் என்ன வேத்து ஆளா? யார்ட்ட சொல்லப் போறேன்” என்று இவள் வாயைக் கிண்டிய சைனு, “இந்தாபாரு என் மருமகளுக்குக் கர்ப்பப்பை வளர்ச்சியே அடையலையாம். புள்ளை தரிக்கிறது சந்தேகமுன்னு டாக்டரம்மா சொல்லிட்டாளாம். நான்

வச்சுருக்குறது ஒரே ஒரு புள்ளை. அவனுக்கு வாரிசு இல்லாமப் போனா யாரு என்னா செய்றது? அதை நெனைச்சு வேறே உக்கிக்கிட்டு கிடக்கறேன். இது தெரிஞ்ச நாள்ல இருந்து எம்புள்ள கவலையில அரை ஆளாப்போயிட்டான்!" வருத்தத்தில் தோய்ந்திருந்தது அவளது குரல். மும்தாஜ் இல்லாத தைரியத்தில் சத்தமாகவே சொன்னாள் சைனு. வஹிதாவுக்கென்னவோ சைனு இதைச் சொல்லும்பொழுது அவள் குரலில் வருத்தத்தைக் காட்டிலும் சந்தோஷம் அதிகமிருப்பது போலவே தோன்றிற்று. இவ்விஷயத்தை வெளியில் சொல்லாமல் மறைக்க வேண்டுமென்ற எண்ணமேயில்லை அவளுக்கு.

இவளுக்குச் சுலைமான் ஞாபகம் வந்தது. அவர் இன்னொரு கல்யாணம் பண்ணினாலும் பண்ணுவார். தனது சிநேகிதன் அப்துல்லா பாய் மாதிரி. பாவம் மும்தாஜ், என்று நினைத்துக் கொண்டாள்.

அங்கிருந்து இவள் கிளம்பும் பொழுது சைனு சொன்னாள்: "ஒம் புருஷன் என்னக்கி வர்ரான்னு சொல்லு. பொண்ணு மாப்பிள்ளை விருந்தாக்கணும் நானு." வஹிதா அங்கிருந்த கொஞ்ச நேரத்தில் சித்திக்கா, ரபிக்கா இருவரும் இவளைப் படுத்தி எடுத்து விட்டார்கள். இவளது ஒவ்வொரு நகையையும் சேலையையும் தொட்டுப் பார்த்து, பூவைத் தொட்டுப் பார்த்து, "இது ஏது? எங்கெ வாங்கின?" இந்த இரண்டு கேள்வியையுமே நூறு தடவையாவது கேட்டுத் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தவர்களை சைனு தயாராக இருந்த குச்சியினால் ஆளுக்கொரு அடி போட்டு அங்கிருந்து விரட்டியடித்தாள். இவளும் தப்பித்தோம் என்று உடனே கிளம்பி வந்துவிட்டாள். அவர்கள் உடம்பெல்லாம் ஒரே நாற்றமாக வேறு இருந்தது. அவர்கள் வீட்டில் விருந்துக்குச் சொன்னால் வேண்டாமென்று சொல்லிவிட வேண்டும் என்று அப்பொழுதே

நிச்சயித்து வைத்துக்கொண்டாள். அறைக்குள் பரவத் தொடங்கிய இருள் அஸர் தொழுகையைத் தவறவிட்டு விட்டதை ஞாபகப்படுத்த வருத்தத்துடன் மஃரிபுடன் அஸரையும் களா செய்து தொழுகலாம் என நினைத்தபடியே எழுந்து ஒலுச் செய்யப் போனாள்.

# 60

மொட்டை மாடியில் மிளகாய், மல்லி காயப் போட்டிருந்ததைக் கிண்டி விடுவதற்காக மேலே ஏறினாள் நபிஸா. நல்ல வெயில். இன்று ஒரே நாளில் காய்ந்து போய்விடும். சாயங்காலமே மிஷினுக்குக் கொடுத்துவிட்டு அரைத்துவிடலாம் என்று யோசித்தபடி குனிந்து கையினால் மல்லியைக் கிண்டிப் பரப்பி விட்டாள். வெயில் பிடரியில் பட்டுப் பிடுங்கியெடுத்தது. அவசர அவசரமாக வந்த வேலையை முடித்தவள் நிமிர்ந்து நின்று சுற்று முற்றும் தெருவையும் ஊரையும் பார்த்தாள். வெயில் விழுந்து கிடந்ததால் தெருவில் அவ்வளவாக நடமாட்டம் இருக்கவில்லை. தூரத்தில் அஜீஸ் வீட்டு ஓடு தெரிந்தது. சின்ன வீடுதான். அவளுக்கு அவனது ஞாபகம் வந்தது. கல்யாணத்திற்குப் பிறகு இவள் அவனைப் பார்க்கவேயில்லை. பார்த்துக்கொள்வதற்கான சந்தர்ப்பமும் இல்லை. அவன் தன்னை மறந்தே போய்விட்டானா என்று நினைத்தவளுக்கு மனம் துக்கத்தினால் நிரம்பிற்று. கூடவோ, குறைத்தோ ஏதாவது நடந்ததா என்று சொல்லவே முடியவில்லை. அவளுக்கு எல்லாமே சரியாகத்தான் நடந்திருப்பதாகவே யோசித்தாள். இவளும் அவனும் எவ்வளவோ பிரியமாகத்தான் இருந்தார்கள். ஆனால் அது கடைசி வரை எப்படி நீடிக்கக் கூடியதாக இருக்க முடியும் என்கிற கேள்வி இருவரிடமுமே இருக்கத்தான் செய்தது. இந்த உறவு நிலையானதாக இருக்க முடியாது என்பது எத்தனை உண்மையோ, அதே அளவு உண்மை அவன் தன் வாழ்க்கையை இந்த உறவுக்காக விட்டுக்கொடுக்க முடியாது என்பதும்!

இவளுக்கு அத்திருமணத்தில் இப்போது பெரிய வருத்தம் எதுவும்

இல்லை. நன்றாகவே தன்னைச் சமாதானம் செய்து கொண்டிருந்ததால்! அவனைப் பார்க்காமலிருப்பது கூட அத்தனைக் கஷ்டமாக இருக்கவில்லை. எல்லாவற்றையும் விட மற்றவர்கள் தன்னைக் கவனிப்பதிலிருந்து விடுபட நினைத்தாள். அவளுக்கு வெயிலின் கடுமை சுய நினைவை உண்டு பண்ணிற்று. சேலைத் தலைப்பால் வேர்வையை ஒற்றி எடுத்தபடி கீழே இறங்கி வந்தாள். அவளுக்கு அஹமதுவைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. நாளைக்கு ஊருக்குப் போய்விட்டு வந்தால் என்ன என்று நினைத்தாள். அவனைப் படிக்க அனுப்பியதற்கு ஊர் என்னவெல்லாம் பேசித் தீர்த்தது. இவள் காதுபடவே ஒருதரம் சவுரா ஜாடை பேசியிருக்கிறாள், “எல்லாம் அவுக வேலைக்கு எடைஞ்சலாப் போயிரும்னுதான்” என்று தன் செவுட்டில் அறைவது போல! அதனால்தானே, “அவ மக இப்புடி வாழுற வயசுல வெதவையா கிடக்கிறா” என்று மனதில் சொல்லிக் குமைந்து கொண்டாள். ஷெரிபா பாவம்தான். அவள் யார் வீட்டு வம்புக்கும் வந்ததில்லைதான். இருந்தாலும் தாய் செய்த பாவம் பிள்ளைகள் தலையிலதானே விடியும் என்று நினைத்துக் கொண்டாள். அதேபோலத்தான் இந்த மும்தாஜ். அவளது கேலிக்கும் கிண்டலுக்கும் இப்ப குழந்தை பிறக்கவே வழியில்லாமல் கிடக்கிறது என நினைத்துத் தன்னுள்ளாகவே சந்தோஷப்பட்டுக் கொண்டவளுக்கு மனசாட்சி உறுத்தத்தான் செய்தது, ஏன் இப்படி எல்லாம் நினைக்கிறோம் என்று! அந்த அளவுக்குத் தான் மோசமானவளா என்கிற சந்தேகம் வர தன்னைத்தானே திட்டிக் கொண்டாள்.

ஹாலில் வந்து சோபாவில் உட்கார்ந்தவள், டிரான்ஸிஸ்டரை ஆன் செய்து சிலோன் வானொலிக்குத் திருப்பினாள். அதில் அவசரச் செய்தி சொல்லிக் கொண்டிருந்தார்கள். இன்று நடந்த கலவரத்தில் எத்தனை பேர் இறந்தார்கள் என்றும், எந்தெந்த இடங்களில் ஊரடங்கு

உத்தரவு போட்டிருக்கிறார்கள் என்றும்! இவளுக்குப் பாவமாக இருந்தாலும், எரிச்சலாகவும் இருந்தது. சனியன் பிடிச்சவனுக, பாட்டுப் போடுறதை நிறுத்திட்டானுக என்று சலிப்புடன் திட்டிக் கொண்டாள். மறுபடியும் அஜீஸின் நினைவு வந்தது. அவன் இன்னும் ஒரே வாரத்தில் சிங்கப்பூர் போகப் போவதாகக் கேள்விப்பட்டதிலிருந்து அவன் ஞாபகம் வரத்தான் செய்தது. மறுபடி திரும்பி வர இரண்டு மூன்று வருடங்கள் ஆகலாம் என்கிற எண்ணம் அவனைப் பார்ப்பதற்கான ஆவலைத் தூண்டியது.

அவனுக்கும் தன்னைப் போன்றே தன் நினைப்பிருக்குமா என்று யோசித்தாள். அவனுக்குத்தான் புதுப் பெண்டாட்டி பக்கத்தில் இருக்கிறாளே, பிறகேன் என் ஞாபகம் வரப்போகிறது என்று சொல்லிக்கொண்டாள். மனதில் லேசான பொறாமை பரிதாவின் மீது எழுந்ததை உணர முடிந்தது. இத்தனை நாளும் கூட தனக்குள்ளாகப் பொறாமை உண்டாவதை எப்படியோ தடுத்து வந்தாலும் இன்று அது தன்னையும் மீறித் தன்னுள்ளாகவே பொங்கிப் பெருகுவதை அவளால் தடுக்க முடியவில்லை. அவள் மனம் விட்டு அழ விரும்பினாள். ஆனால் அழுவதற்கு ஏற்ற நேரமாக அது இல்லை. மதியத் தொழுகைக்குப் பிறகு பஷீர் சாப்பிட வரும் நேரம் நெருங்கிக்கொண்டிருந்தது. அவன் வருவதற்குள்ளாகச் சாப்பாட்டைத் தயாராக எடுத்து வைத்துவிட நினைத்தவள், எழுந்து கொடிக்கயிற்றில் கோர்த்துக் கட்டியிருந்த உப்புக்கண்டத்தை, முடிச்சை அவிழ்த்து உருவினாள். அதிலிருந்து மூன்றை மட்டும் உருவி எடுத்துக்கொண்டு மறுபடியும் முடிச்சிட்டுக் கட்டித் தொங்கவிட்டாள். கறி நன்றாகக் காய்ந்து கல்லைப்போல இறுகியிருந்தது. முற்றத்தின் ஒரு ஓரத்தில் சுவரோரமாகப் பதிக்கப்பட்டிருந்த அம்மியில் அதை வைத்துச் சுத்தியலால் ஓங்கி ஓங்கித் தட்ட ஆரம்பித்தாள்.

*பஷீர் தொழுத கையோடு சாப்பிட வந்தவன், வாசலில் நின்றவளைப் பார்த்ததும் தன் கையிலிருந்த பாக்கெட்டை, "இதப் புடி" என்று இவள் கையில் கொடுத்துவிட்டுச் சட்டையைக் கழற்றிய படி வீட்டுக்குள் நுழைந்தான். இது என்னாது என்று கேட்டபடியே அவனைப் பின்தொடர்ந்து வீட்டுக்குள் வந்தாள். பள்ளிவாசலில் யாரோ ஒரு அஸரத் வந்து குர்ஆன் கிதாபெல்லாம் வித்தாரு, வாங்கினேன் என்றபடியே சோபாவில் உட்கார்ந்தான். அவன் சொன்னதைக் கேட்டதும் திடுக்கிட்டுப் பதறிப்போன நபிஸா தன் கையிலிருந்த கிதாபைச் சட்டென சோபாவில் வைத்துவிட்டு, "இம்புட்டு தூரம் கொண்டு வந்திங்க, இங்கெ வந்து எங்கையில குடுக்கணுமா? எனக்குத் தொழுகையில்லை. தொட்டுட்டேன்" என்று அவனிடம் கத்திவிட்டு, அடுப்படிக்குள்ளாக நுழைந்தாள், பஷீர் தான் கொண்டு வந்த பாக்கெட்டை எடுத்துக் கண்களில் ஒற்றிவிட்டு அலமாரியைத் திறந்து அதை உள்ளே வைத்தான். வீட்டில் ரபீக் இல்லாதது நினைவுக்கு வர "நபிஸா" என்று அவளைக் கூப்பிட்டவன், "அவனை எங்கெ காணோம்" என்றான். அடுப்படியிலிருந்தே "ரபீக்கா" என்று எதிர்கேள்வி கேட்டவள், "தெரியலை. தெருவுல யார் கூடயாவது விளையாடிட்டு இருப்பான், சாப்பாட்டு நேரம் வந்திருச்சுன்னா வரவேண்டியதுதானே" என்றாள்.*

*பாய் விரித்துச் சாப்பாட்டை எடுத்துவைத்துக் கொண்டிருந்த நபிஸாவிடம், "வர்றப்போ நூரம்மா வீட்டைத் தாண்டி வந்தேனா, எப்பப்பாரு, யார் தெருவுல நடந்து போனாலும், யாரதுன்னு கேட்காம இருக்கறதேயில்ல, கேட்கறதுக்கே என்னவோ மாதிரி இருக்கு. பெரிய கொடுமை இல்லெ?" என்றபடியே தட்டில் சோற்றை அள்ளி வைத்தான். "ஆமாங்க, பெரிய கொடுமைதான். அவ போனவ ஒரேயடியா போய்ச்சேர்ந்துட்டா! அந்தப்பயல நினைச்சா . . .!*

றைமாக்காதான் கவனிச்சுக்கிறாங்க, இல்லென்னா கஷ்டம்தான்” என்று சொல்லிக் கவலைப்பட்டாள். சோற்றைப் பிசைந்து விட்டுக் கொண்டு ஆனத்தை ஊற்றிப் பிசைந்து கொண்டிருந்தவன், “நீங்களும் பொம்பளைகதானே? றைமா மாதிரி, அந்தப் பயலுக்கு எப்பவாச்சும் சோறுகீறு குடுத்திருக்கீங்களா, யாராச்சும்” என்று சொல்லிவிட்டுச் சாப்பிட ஆரம்பித்தான். அவன் சொன்னது நபிஸாவுக்குச் சுருக்கென்றது. தான் இதுவரைக்கும் அவனுக்கோ, நூரம்மாவுக்கோ எதுவுமே கொடுத்ததில்லை என்பது நினைவுக்கு வந்தாலும் தன் தவறை ஒப்புக்கொள்ள மனமில்லாமல், “அது சரி, அவங்க குடும்பத்துக்குத் தானே அம்மா மக ரண்டுபேரும் உழைச்சு ஓடாத் தேய்ஞ்சாங்க. அவங்கதான் பாத்துக்கணும். இதுவரைக்கும் சரி, இனிமேயும் அவங்க பாக்க முடியுமான்னு தெரியலை. அந்தக் குடும்பமும்தான் தனித்தனியா பிச்சுக்கப் போவுதே” என்றவள், “விட்டுட்டு ஓடிப் போனாளே பெத்தவ, அவளச் சொல்லணும்” என்று ஆத்திரம் பொங்கத் திட்டினாள். பஷீருக்கும் பாத்திமாவைத் திட்டவேண்டும் போலத்தான் இருந்தது என்றாலும், அவனால் தைரியமாக ஒன்றும் சொல்ல முடியவில்லை. தான் பாத்திமாவை ஏதாவது சொல்லித் திட்டப் போய், அது நபிஸாவுக்கு மனதைக் குறுகுறுக்கச் செய்துவிட்டால் என்ன செய்வது என்கிற கவலையோடு சாப்பிட்டுக் கொண்டிருந்தவன், “சரி விடு, எல்லோருக்கும் செய்த பாவத்துக்குக் கூலியை அவன் குடுக்கத்தானே செய்றான். இந்தா, அவளுக்கு உடனேயே குடுத்துட்டான். ஒரு வருஷமாச்சும் அவள அவனோட வாழ விட்டு வச்சானா? அவனுக்குத் தெரியும் எல்லாம்” என்று சொல்லிவிட்டுத் தொடர்ந்து பேசிக்கொண்டிருக்காமல் சாப்பிட ஆரம்பித்தான்.

தான் பாத்திமாவைத் திட்டியதைப் பொருட்படுத்தாமலும், தன்

பங்குக்கு அவளைப் பற்றி ஒரு வார்த்தை திட்டாமலும் பஷீர் இருந்தது நபிஸாவுக்கு உறுத்தலை உண்டு பண்ணியது. அவள் மிகுந்த துயரத்திற்கும் அவமானத்திற்கும் உள்ளானாள். அவன் ஒரு வார்த்தை திட்டியிருந்தால் கூட பரவாயில்லை. ஆனால் அவளைக் கண்டுகொள்ளாமல் பெருந்தன்மையோடிருப்பதாகக் காட்டிக் கொண்டதுதான் தாங்கிக்கொள்ள முடியாததாக இருந்தது அவளுக்கு. அவள் அந்த இடத்தை விட்டு உடனே விலகிச் சென்றுவிட விரும்பினாள். ரபீக் இன்னும் சாப்பிட வராததால் அவனைத் தேடிச்செல்கிற தோரணையோடு, அவ்விடத்திலிருந்து வெளியே வந்தவள் கண்களில் துளிர்த்த கண்ணீரைத் தன் விரலால் ஒற்றி எடுத்து முற்றத்து வெயிலில் சுண்டி எறிந்தாள். வெப்பத்தில் தகித்துக் கொண்டிருந்த கல் அவளது கண்ணீரை ஒரே நொடியில் உள் வாங்கிக்கொண்டது.

*‘அல்லா! உன்னுடைய அமானுந்தம்.” களைப்புடன் கட்டிலில் கால்நீட்டி அமர்ந்து தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டான் சிக்கந்தர். வஹிதா அவனருகில் கையில் தண்ணீர் செம்போடு நின்றுகொண்டிருந்தாள். நல்ல கறுப்பு என்று சொல்லமுடியாவிட்டாலும், கறுப்புதான். திடகாத்திரமான உடல், முற்றின முகம் வழுவழுப்பாக இருந்தது. மாமியார் வீட்டுக்கு வருவதற்காக ஷேவ் செய்திருப்பது நன்றாகவே தெரிந்தது. அவனருகில் நிற்கையில் தனது நிறம் பல மடங்கு கூடுதலாகத் தெரிவதாக உணர்ந்தாள். இவளுக்குப் பொசுங்கலான உடல் வேறு. ஒடித்தால் ஒடிந்து போய்விடக் கூடிய மாதிரி! அவன் இவள் தன்னையே கவனிப்பது தெரியாமல் படுத்து மேலே விட்டத்தை உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தான். “போய் பெண்டாட்டியப் பாத்துட்டு வா” என்று அம்மா அத்தா சொன்னதால் வந்தானாம். இவளுக்குச் சிரிப்பாக இருந்தது. வந்த உடனேயே விசா விஷயமாக மெட்ராஸுக்குப் போக வேண்டும் என்று சொல்லிப் போகக் கிளம்பினான். அம்மாதான் ஒருநாள் தங்கி விட்டுப் போகலாம் எனச் சொல்லிவிட்டாள். இவளுக்கு எரிச்சலாகவும் அவமானமாகவும் இருந்தது. இவன் தலையைக் கண்டதுமே அம்மா இவளை அலங்கரித்து, பூவைத்து விட்டதை நினைத்துக் கொண்டாள்.*

*பூ வைத்து முடித்து அவளை விட்டு விலகிப்போகிற அம்மா எதையோ நினைத்துக்கொண்டது மாதிரி, “ஆமா எத்தினி நாள் கூடப்போயிருக்குது” என்று பரிவோடு கேட்டாள். அவள் சொல்ல வந்த செய்தி மறைமுகமானதென்றாலும் பச்சையாகவே இருந்தது*

இவளுக்கு வெட்கத்தை உண்டு பண்ணியது. அவள் தண்ணீரை அவனருகில் கிடந்த ஸ்டூல் மீது வைத்துவிட்டுக் கட்டிலின் ஒரு ஓரத்தில் உட்கார்ந்தாள். அவன் அப்பொழுதுதான் ஏதோ யோசனையிலிருந்து விடுபட்ட மாதிரி திடுக்கிட்டு அவளைப் பார்த்தான். "எப்ப வந்தே, ரொம்ப நேரமாவுதா" என்றவன், "தூக்கம் வந்தா, தூங்கு!" என்றான் அக்கறையாக! அவள் பதில் எதுவும் சொல்லாமல் பேசாமல் இருந்து கொண்டிருந்தாள்.

"அத்தா நீயில்லாம ரொம்பவே புலம்பிக்கிட்டு இருக்காரு. டீ போட்டுக் குடுக்கக்கூட நாதியில்லையாம். எப்ப வர்றன்னு கேட்டாரு" என்றான். தன் தந்தை மருமகளின் மீது வைத்திருக்கும் பிரியத்தை ஓரளவிற்காவது தெரிய வைத்து விட்டதான ஒரு நம்பிக்கை அவன் முகத்தில் தெரிந்தது. பெருமையாக அவளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டான். இவளுக்கு ஆத்திரமாக இருந்தது. அந்தக் கிழவன் டீ குடிக்கிறதுக்காகவா என்னைத் தேடுறான் என்று மனதிற்குள்ளே கறுவியவள், தனக்காகத் தானே அடிக்கடி டீயே குடிக்கிறான் சனியன் என்றும் நினைத்துக்கொண்டாள்.

"நான் கேள்விப்பட்ட சங்கதியெல்லாம் நிசமா?" என்றான் மொட்டையாக! அவள் தலை நிமிர்ந்து பார்த்து என்னவென்று தெரியாமல் விழித்தாள். "என்ன நடிக்கிறியா?" என்றவன், "உங்க குடும்பம் தனித்தனியா பிரியுதாமில்ல? கேள்விப்பட்டேன். என்கிட்ட மறைக்கலாமின்னு நினைச்சியா?" என்றான். "உனக்குத் தெரியிறதுக்கு முன்னால இந்த ஊர் நியூஸ் அத்தனையும் எனக்குத் தெரியும். இன்னும் சொல்லட்டுமா?" கேலியாகக் கேட்டவன், "மும்தாஜு மேல பிர்தவ்ஸ் பேயா வந்துபுடிச்சு அவள ஆட்டி வைக்கிறது, ஓடிப்போன பாத்திமா செத்துப்போனது, பரிதாவும் முத்துவும் பல்லை இளிச்சுக்கிட்டது தெரிஞ்சு அவ அண்ணன் விஷம் குடிச்சு சாகப்போறதா மிரட்டி

அவளுக்கு உடனே கல்யாணம் பண்ணி வச்சது, எல்லாமே எனக்குத் தெரியும். எங்கிட்ட எதுவும் சொல்ல மாட்டே இல்லெ?" என்றான். அவன் குரல் வருத்தத்துடன் இருந்தது.

அவள் வாய் திறக்கவே இல்லை. அப்படியே ஊர் விஷயம் அத்தனையையும் சொல்கிறான். அதுவும் மும்தாஜ் விஷயம் கூட தெரிந்திருக்கிறது என்று நினைக்கும் பொழுதே இவளுக்கு ஆச்சரியமாக இருந்தது, எப்படித்தான் பஸ் ஏறிப்போகிறதோ இதெல்லாம் என்று. "ஒங்கிட்ட கேக்கறேன் பாரு. காது செவுடா? போ, தூக்கம் வந்தா தூங்கு" எரிச்சல் மிகுந்திருந்தது அவனது குரலில்; "உன்னைய இப்பவெல்லாம் தொட்டுறக் கூடாதுன்னு அம்மா சொல்லியனுப்பியிருக்காங்க. அதனால தைரியமா இரு. ஒன்னைய முழுங்கிறமாட்டேன்." என்றவன், "இல்லாட்டியும்கூட பொல பொலன்னு இருந்து கிழிச்சுருவாள்" என்று காட்டமாக முணு முணுத்து விட்டு, கால்களுக்கு ஒரு தலையணையை எடுத்துப் போட்டுக் கொண்டு நீட்டி நிமிர்ந்து படுத்தான்.

அவள் பதில் சொல்லாமலேயே அவனருகில் படுத்துக் கொண்டாள். வந்ததிலிருந்தே அவன் ஒரு வார்த்தைகூட தன்னிடம் பிரியமாகப் பேசாதது நினைவுக்கு வர சங்கடமாக இருந்தது. தேவையேயில்லாத ஊர் விஷயங்கள் அத்தனையையும் கேட்டுத் தீர்த்துவிட்டான். என்ன ஜென்மமோ என்று வெறுப்பாக உணர்ந்தாள். கொஞ்சமாவது அன்பாகப் பேசவோ, நடந்துகொள்ளவோ தெரியாமல் இப்படியும் ஒருத்தன் இருப்பானா என்று சலிப்புண்டாகியது. மனைவியிடம் எப்படி நடந்து கொள்வது என்று கூடவா தெரியாது என்று கண்மூடி யோசித்துக் கொண்டிருந்தவளின் கையைத் தொட்டு லேசாக உலுக்கினான். திடுக்கிட்டுக் கண்களைத் திறந்து என்ன என்று கேட்டவளிடம், "இன்னும் தூங்கலைதானே?" என்றவன்,

“புருஷன்காரன் ஒரு வாரம் கழிச்சு வந்திருக்கானே, ஒரு நாலு வார்த்தையாவது என்கூட பேசியிருப்பே. அன்பா என்னங்க, ஏதுங்கன்னு, மண்டு! எல்லாம் என் தலை நஸீபு” என்று லேசாக முன் நெற்றியில் உள்ளங்கையால் அடித்துக் கொண்டவனின். குரலில் ஏமாற்றம் மிகுந்திருந்தது. இவளுக்குத் திக்கென்றிருந்தது. தான் நினைப்பது மாதிரியே இவனும் நினைக்கிறானோ, தான் அவனிடம் நடந்து கொள்வது சரியில்லை என்கிற மனக்குறை அவனிடமும் இருக்கும் என இதுவரை தான் நினைத்துக் கூடப் பார்த்ததேயில்லை என்பதால் உண்டான அதிர்ச்சி மேலோங்க அவனிடத்தில் லேசான பரிவு இவளுக்கு ஏற்பட்டது.

“நீ நல்ல நாள்லயே ஒண்ணுலயும் சேத்தியில்ல, இன்னைக்கி மட்டும் பேசிக் கிழிக்கப் போறியாக்கும்” சிடுசிடுத்தவன், “சிங்கப்பூர்ல மலயாக்காரிக தடுக்கி விழுந்தா நிப்பாளுக, அஞ்சு வெள்ளிக்கும் பத்து வெள்ளிக்கும். எங்க கடையில் வேலை பாத்த ஒருத்திக்கு, என்கூட இருக்கறதுன்னா அவ்வளவு ஆசை. நீயும் இருக்க பொம்பளைன்னு.” ரொம்பவே அனுபவித்துச் சொல்கிறான் என்பதை அவனது முகம் தெளிவாகவே காட்ட சற்றுமுன் அவனிடம் உண்டான பரிவு விலக, “ச்சீ! இவன் ஒரு மனுஷன்தானா?” என்ற வெறுப்பில் குமைந்து போனாள். பொங்கி வந்த அழுகையைக் கட்டுப்படுத்தவென வழக்கத்தை விட அதிகமாகவே பிரயாசைப் பட்டாள். அதுவோ அவளிடம் ரொம்பவே முரண்டுபிடித்துக் கொண்டிருந்தது வெளிப்படுவதற்கு. அவன் பார்த்துவிடுவதைத் தவிர்க்கவெனப் புரண்டு படுத்து பக்கவாட்டில் முகத்தை வைத்துக் கொண்டாள். அவன் அவளைப் பொருட்படுத்தவே இல்லை என்பது இன்னும் அவளைத் துன்புறுத்த, மனம் நொறுங்கிப் போயிற்று.

அவன் எழுந்து விளக்கை அணைத்துவிட்டு வந்து அவளருகில்

படுத்துக் கொண்டான். மிக நெருக்கத்தில் படுத்திருந்ததனால் அவன் உடம்பிலிருந்து வந்த வியர்வை வாடை குமட்டலை உண்டுபண்ணியது. அவள் குப்புறப்படுத்துத் தலையணையில் முகம் புதைத்துக்கொண்டு அவ்வாடையைத் தவிர்க்க முயன்றாள்.

அவன் மறுபடியும் பேச்சை ஆரம்பித்தான். “என்ன மும் தாஜுக்குப் பேய் புடிச்சாட்டுனது நிசம்தானா?” என்றான். அவனுக்கு அவ்விஷயத்தை உறுதிபடுத்திக்கொண்டே ஆகவேண்டியிருந்தது. இல்லாவிட்டால் மண்டையே வெடித்து விடும் போலிருக்குமோ, என்னமோ? பதில் சொல்வதற்கு முடியாதபடி அவளுக்கு வயிற்றைப் புரட்டியெடுத்துக் கொண்டிருந்தது. “என்ன பதில் சொல்லக்கூட வலிக்குதோ?” என்றவன், தனக்குள்ளே எதையோ முணுமுணுத்துக் கொண்டான். அவள் பதில் சொல்லாமலேயே எழுந்து போய் ஒரு வாய் தண்ணீர் குடித்து விட்டுச் சுவரோரத்தில் ஸ்டூலில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த போர்வையிலிருந்து ஒன்றை உருவி எடுத்தாள். விடிவிளக்கின் லேசான ஒளியில் அவள் என்ன செய்கிறாள் என்பதையே அவன் கூர்ந்து கவனித்துக் கொண்டிருப்பதை உணர்ந்தாலும் அவனைத் தவிர்த்தபடி போர்வையை விரித்துப் பலம்கொண்ட மட்டும் உதறினாள்.

பிறகு மறுபடியும் கட்டிலில் வந்து அவனருகாகப் படுத்துக் கொண்டாள். இங்கிருந்து போய் வேறொரு அறையில் படுத்துக் கொண்டால் தேவலை போல இருந்தது. அவள் ஒன்றுமே பேசாமல் போர்வையை முகம் வரைக்கும் மூடிப் போர்த்துக்கொண்டு கண்களை மூடித் தூங்க முயற்சித்தாள், தூங்க முடியவில்லை. அவனது பேச்சைப் போர்வையின் மூலம் தடுக்க முடிந்ததே போதும் என நினைத்துக்கொண்டு ஆறுதல் பட்டுக் கொண்டாள்.

அவள் ஒதுங்கிப் போவதை ஒட்டி திடுமென அவனிடமிருந்து

பதற்றம் உண்டாவதாக உணர்ந்தாள். அவன் அவளிடமிருந்து ஒட்டாமல் விலகிப்படுப்பது தெரிந்தது. அவள் முகத்தை மூடிக் கொண்டது அவனுக்கே சங்கடமாக இருந்திருக்க வேண்டும். அவன் அதனை மௌனமாகவே எதிர்கொண்டான். அது இவளை ஆசுவாசம் கொள்ளச் செய்தது. இப்பொழுது குமட்டல் வெகுவாகக் குறைந்து விட்டதை உணர்ந்தாள். போர்வைக்குள்ளாகக் கரிய இருள் நிரம்பியிருந்தது. அவ்விருளில் அவள் மிதந்து கொண்டிருப்பது போலவும் அது தன்னைப் பாதுகாப்பது போலவும் கற்பனை செய்து கொண்டாள்.

அவன் மறுபுறமாகத் திரும்பிப் படுத்துக்கொண்டு தூங்க ஆரம்பித்தான். போர்வைக்குள்ளேயே அதிக நேரம் சுவாசித்துக் கொண்டிருந்தது மூச்சு முட்ட மெதுவாக முகத்தைப் போர்வைக்குள்ளிருந்து விலக்கி மூச்சை ஆழமாக இழுத்து விட்டாள். அவள் தலையிலிருந்த மல்லிகைப் பூ மலர்ந்து அதன் நறுமணம் அறையெங்கும் பரவியிருந்தது. திறந்திருந்த ஜன்னல் வழியே காற்று வீசிக் கொண்டிருந்தது. படுக்கையை ஒட்டிய ஜன்னல் என்பதால் தெரு நன்றாகத் தெரிந்தது. சற்று தொலைவிலுள்ள கப்ருஸ்தானும் அங்கு எரிந்து கொண்டிருந்த விளக்கொளியில் அடக்கம் செய்யப்பட்டிருந்த குழிகளும் மாடியிலிருந்து நன்றாகவே தெரிந்தன. சமீபத்தில் அடக்கம் செய்யப்பட்டவர்களது குழிகள் இன்னும் மேடாகவே இருப்பதும் மற்றதெல்லாம் இடிந்து குழிகளாக இருப்பதும் தெளிவாகவே தெரிந்தது. சிறுவயதிலிருந்தே இவள் மாடிக்கு வந்தால் இந்த ஜன்னலைத் திறக்கவே மாட்டாள். இப்பொழுது உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறாள் ஒரு பயமுமில்லை. முன்பு கேள்விப்பட்ட கதைகளும் மனதில் பதிந்திருந்த பயங்களும் இன்று ஒன்றுமேயில்லாமல் ஆகியிருந்ததை நினைத்து விரக்தியாக இருந்தது.

மனதில் கவலையிருந்தால் பயம் கூடவா இல்லாமல் போய்விடும்.

அவள் பார்வையை அங்கிருந்து விலக்கித் தெருவைப் பார்க்கத் தொடங்கினாள். தெருவிளக்கு மின்னி மின்னி எரிந்து கொண்டிருந்தது. ஒரு நடமாட்டமுமில்லாமல் தெரு அமைதியாக இருந்தது. எல்லோருமே வியாபாரம் செய்பவர்கள். பத்து மணிக்கெல்லாம் தூங்கி, காலை பஜ்ரு தொழுக எழுந்திரித்து விடுவார்கள். முன்பெல்லாம் தெருவில் நடமாட்டமே இல்லையென்றாலும் நூரம்மா மட்டும் இரவில் பனிரெண்டு மணிவரைக்கும் கூட நடமாடிக் கொண்டிருப்பாள். ஒரு மாடு வைத்துப் பால் கறந்து விற்றுக்கொண்டிருந்ததால் இரவில் விழித்திருந்து அதற்குத் தண்ணீர் காட்டி, இரை போட்டு மாட்டுடன் ஏதேதோ பேசியபடி நடமாடிக் கொண்டிருப்பாள். கரீம் சச்சா கேலி செய்வார். ராவெல்லாம் மோகினிப் பிசாசாட்டம் அவள் நடமாடுவதாக! தெரு நாய்க்கெல்லாம் அவளென்றால் பயம். ஒரு நாயைப் பார்த்தால் போதும் விடவே மாட்டாள். கல்லெடுத்து எறிந்து காலை ஒடித்தே விடுவாள். ஊரெங்கும் அவளால் நொண்டியாகத் திரிந்த நாய்கள்தான் அதிகம். கொஞ்சம் கூட இரக்கமில்லாமல் எப்படித்தான் நாய்க் காலை ஒடிக்க முடிகிறதோ என்று றைமாவும் சொஹ்ராவும் பேசிக் கொள்வார்கள். இரவில் அவள் நடமாடித் திரியும் பொழுது ஒரு நாய் கூட தெருப்பக்கம் அண்டாது. தூரத்திலேயே அவள் இருப்பதை அனுமானித்துத் தலைகாட்டாமல் ஓடும். அதைப் பார்த்து வெற்றிப் புன்னகை புரிந்தபடி, “தூமியக் குடிச்சிப் பய குட்டி” என்று கெட்ட வார்த்தை சொல்லித் திட்டுவாள் நூரம்மா. அவளுக்குத் தூக்கமே வராதா என்றுகூட எல்லோருக்கும் ஆச்சரியமாக இருக்கும். ஏதோ ரகசியத்தைத் தேடிச் செல்வதுபோலத் தெருவெல்லாம் சுற்றியலைவாள். இன்று அவள் படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள்.

நப்ஸு எப்படித்தான் கிடக்கிறதோ என்று எல்லோரும் வியக்கும் வகையில்! தெருவில் நாலு நாய்கள் சேர்ந்தாற் போல ஓடிக் கொண்டிருந்தன. அவை ஓடுவதைப் பார்த்தால் ஏதோ காரியமாகப் போவது போலிருந்தது வஹிதாவுக்கு. அவை ரொம்பவே சுதந்திரமாகத் திரிவதுபோலப் பட்டது.

அவள் பார்வை மறுபடியும் கப்ருஸ்தானுக்குள் சென்றது. சுற்றிலும் உயரமான காம்பவுண்டுச் சுவர் எழுப்பப்பட்டு பெரிய கேட் போட்டுப் பூட்டப்பட்டிருந்தது. ஒருமுறை ஒரு குழந்தையின் மையத்தை நாய்கள் தோண்டி எடுத்த பிறகுதான் இந்தச் சுவர் எழுப்பிப் பாதுகாப்பு செய்யப்பட்டது. உள்ளே வரிசையாக நின்ற தென்னைமரங்கள் காற்றில் ஒருமித்து அசைந்து ஆடியபோது பேய் பிடித்தாடுவது மாதிரியிருந்தது. நேற்றுத்தான் இந்த மரங்களைக் கன்றாக ஊன்றியது போலிருக்கிறது. ஒரு சில வருடங்களிலேயே பெரியதாக வளர்ந்து விட்டிருந்தன. சொஹ்ரா சித்தி சொல்வாள். "நல்ல உரம், அதான் இவ்வளவு வேகமா வளருது."

இவளுக்கு மும்தாஜின் ஞாபகம் வந்தது. ஒரே ஒரு தடவை பரிதாவின் கல்யாணத்திற்கு அழைப்பதற்காக சபியாவின் வீட்டிற்கு வந்திருந்தாள் மும்தாஜ். அவளை பிர்தவ்ஸ் பேயாக வந்து பிடித்துக் கொண்டுவிட்டாள் என்பது எப்படி என்று புரியவில்லை இவளுக்கு. நான் அங்கேயேதானே இருந்தேன். என்னைக் கூடப் பிடிக்காமல் எப்படி ஒரே ஒரு நாள் வந்த மும்தாஜைப் பிடித்திருக்கும்? சைனு நக்கலாகச் சொன்னாள்: "அதுக்கு இந்தப் புள்ளைய ரொம்பப் புடிச்சுப் போயிருக்கும்." அன்றைக்கு ஒரே ஆட்டமாக ஆடித்தீர்த்து விட்டாளாம். சைனு குப்பிதான் சொன்னாள். இவளுக்கு நம்ப முடியவில்லை. நம்பாமலிருக்கவும் முடியவில்லை. சொஹ்ரா சித்தி இதை யார் மூலமோ கேள்விப்பட்டுக் கட்டுக்கடங்காத கோபம்

கொண்டாள். “எவளாவது பிர்தவ்ஸ் பேயா திரியறான்னு சொல்லட்டும் என் காதுபட, தொலைச்சுக்கட்டிருவேன்.” அவள் ஏன் இப்படிக் கோபப்படுகிறாள் என்று வஹிதாவுக்குப் புரியாத போது றைமா சொன்னாள், “இந்த துனியா மேல ரொம்ப ஆசையும் நப்ஸூம் இருக்கறவுகதான் பேயா வருவாங்க. அதுதான் சொஹ்ரா ஆத்திரப்படுறா.” இந்த நினைவுகளால் தன் மனம் உறுத்துவதும் சஞ்சலம் கொள்வதும் தவிர்க்க இயலாமல் போக அவள் தன் கண்களை இறுக மூடி அந்நினைவை வெளியேற்ற முயற்சித்தாள்.

# 62

மொட்டை மாடியில் ஒரு ஓரமாக உட்கார்ந்திருந்தார்கள் மதினாவும் ராபியாவும். பலமான காற்று முகத்தில் அடித்து தலைமுடியைக் கலைத்துக் கொண்டிருந்தது. ஒன்றுமே பேசத் தோன்றாததால் அமைதியாகவே இருந்தார்கள். ராபியாவுக்கு மனம் ரொம்பவே சோர்வாக இருந்தது. பிர்தவ்ஸ் சித்தி செத்துப் போனதற்கு ஈடான சோகம் வீட்டின் நடுவில் சுவர் வைக்கப் போகிறார்கள் என்பதால் உண்டாகியிருந்தது. முன்பெல்லாம் ஒரே ஓட்டமும் நடையுமாக இருந்தவளை அதிகமாகத் தெருவில் இறங்கக் கூட அம்மா அனுமதிக்காததும் பள்ளிக்குப் போவதை நிறுத்தி விட்டதும் அவளுக்குள் தாங்க முடியாத வருத்தத்தை உண்டு பண்ணியிருந்தது. முன்னாடி இவள் மதினா, உமா, அஹமது, இலியாஸ் எல்லோரும் சேர்ந்து சினிமாவுக்குப் போவார்கள். இப்பொழுது மதினாவும் வரமுடியாது. ஊரில் பெண்கள் யாரும் சினிமாவுக்குப் போகவும் கூடாது. ஏன் இப்படி எல்லாமே மோசமாக இருக்கிறது என்று இவளுக்குப் புரியவேவில்லை. அஹமதுவைப் பார்த்தால் நன்றாக இருக்கும். அவன் மறுபடி எப்பொழுது ஊருக்கு வருவான் என்றே தெரியவில்லை. அவனுக்கும் தன்னைப் பார்க்க வேண்டும் என்கிற எண்ணம் இருக்குமா என்று நினைத்துக் கொண்டாள்.

மதினா தொடையில் லேசாகக் கிள்ளி இவளுக்குச் சுயநினைவை உண்டாக்கினாள். திடுக்கிட்டுப் பேந்தப் பேந்த விழித்த ராபியா மெதுவாகச் சிரித்துச் சுதாரித்துக் கொள்ள முயன்றாள். “என்ன யோசனை பலமாயிருக்கு?” என்றாள் மதினா. ராபியாவிடம் சொல்வதற்கென நிறைய விஷயங்களைச் சேர்த்து வைத்திருந்தாள்

அவள். பிர்தவ்ஸ் மௌத்திலிருந்தே இருவரும் சரியாகப் பேசிக்கொள்ள முடியவில்லை. பிறகு மதினா வயதுக்கு வந்தபிறகு சுத்தமாகவே பார்க்க, பேச நேரமில்லை. இன்றுதான் ராபியாவே இவளைத் தேடி வந்தாள். மதினாவுக்கு ராபியாவின் சோர்ந்த முகம் சங்கடமுண்டாக்கியது. இவள் ஏன் இப்படி இருக்கிறாள்? அவள் கொஞ்சமாவது கலகலப்பாக இருந்தால்தானே தான் வயதுக்கு வந்த விஷயங்களை அவளிடம் சொல்லிக் கொள்ள முடியும் என்று நினைத்தவள், “ஏன் ஒரு மாதிரியா இருக்கே?” என்றாள். “ஒண்ணுமில்லே” என்ற ராபியா, “உங்க அண்ணிய எங்கே காணோம்” என்றாள். அவள் இப்படிக் கேட்டதும் மதினாவுக்குத் தர்மசங்கடம் உண்டாயிற்று. ‘சொல்லலாமா, வேண்டாமா’ என்பது போல விழித்தவள், “அது வந்து, அவுங்களுக்குப் பேய் பிடிச்சிருக்கு. அதனால அவங்கம்மா வீட்டுக்குப் போகச் சொல்லிட்டோம்” என்றாள்.

பேயின்னா அது எப்புடிப் புடிச்சுக்கும்? சரியாகப் புரியாததால் விளக்கமாக அதனைக் கேட்டுத் தெரிந்து கொள்ள விரும்பிய ராபியாவுக்குள் பிர்தவ்ஸ் சித்தி பேயாக வந்து விட்டதாக எல்லோரும் பேசிக்கொள்வதன் வருத்தம் மனதில் நிரம்பித் ததும்பிக் கொண்டிருந்தது. அவள் அதனை நம்பத் தயாராக இல்லை. என்றாலும் மதினா தன்னிடம் பொய் சொல்லமாட்டாள் என்ற திடமான நம்பிக்கை கொண்டிருந்தாள். மதினாவுக்கும் அதன் விபரம் சரியாகப் புரியாமல்தான் இருந்தது என்றாலும் மும்தாஜ் அண்ணி அன்றிரவு தலைமுடியை விரித்தாடியது நினைவில் வந்து உடலை நடுங்கச் செய்தது. திடீரென இவளது உடலெங்கும் புல்லரித்துச் சிலிர்த்ததை ராபியாவினால் நன்றாகவே பார்க்க முடிந்தது. அதன் பிறகு சுலைமான் தனி அறையில்தான் தினமும் படுத்துக் கொண்டான். மும்தாஜிடம் வீட்டில் யாரும் சரியாகப் பேசுவதுமில்லை. அம்மாதான்

சொன்னாள், "ஒடம்பு சவுரியமாற வரைக்கும் போய் ஒங்க அம்மா வீட்டுல இருந்துட்டு வா" என்று.

மும்தாஜுக்குப் போகவே இஷ்டமில்லை என்றாலும் இரவு நேரங்களில் தினமும் இப்படிப் பேய் பிடித்தாட்டுவதையும் சுலைமானும் மற்றவர்களும் பயந்து நடுங்குவதையும் பகல் நேரத்தில் தனக்கு நன்றாக இருந்தாலும் கூட யாரும் தன்னுடன் பேசாமல் இருந்தது கஷ்டமாக இருந்திருக்க வேண்டும். அவளாகவே அம்மா வீட்டிற்குப் போய் விட்டாள். அவள் போனபிறகு சுலைமான் அவளைப் பார்க்கக்கூட போகாமல் இருந்தான். அம்மாவும்கூட அவனைப் போகச் சொல்லவில்லை. இதெல்லாம் மதினாவுக்கு வேடிக்கையாகத்தான் இருந்தது. அம்மா நேற்று மதியச் சாப்பாட்டு நேரம் சுலைமானிடம் ஒப்பாரி வைத்தாள், "எனக்கிருக்கறது ஒரே வாரிசு. எங்குலம் தழைக்க ஒண்ணு பெற ஒன் பொண்டாட்டிக்கு யோக்கியதை இல்லையே!" என்று. "புள்ளப்பெற வக்கத்த பொண்ண எந்தலையில கட்டிட்டு, 'தெரியாமக் குடுத்துட்டேன். எம்புள்ளைக்கி கிறுக்காப் புள்ளை பொறக்கப் போவுது' ன்னு சொல்லி ஊரெல்லாம் சொல்லிக்கிட்டுத் திரிஞ்சாளே அவ அம்மாக்காரி. இப்ப கிறுக்காக் கூட ஒரு புள்ளப்பெக்க வக்கத்துப்போயில்ல கெடக்குது" என்று வேறு சொல்லி அவனிடம் திட்டிக் கொண்டேயிருந்தாள்.

"அத, விடு" என்று அந்நினைவை உதறிவிட எத்தனித்தாள் மதினா. அவளுக்கு இந்த விஷயத்தை ராபியாவிடம் சொல்லக்கூடப் பிடிக்கவில்லை. அதனால் பேச்சை மாற்றும் வகையில், "ராபியா, வயசுக்கு வர்றது எப்புடின்னு உனக்குச் சொல்லட்டுமா" என்றாள் மிகவும் ஆர்வமாக! தனக்குத் தெரிந்த ஒரு விஷயத்தை ராபியாவிடம் சொல்லாவிட்டால் தலையே வெடித்துவிடும் போலிருக்கும் அவளுக்கு. அதுவும் இந்த விஷயத்தை எப்படித்தான் இத்தனை நாள்

சொல்லாமலிருந்தாளோ, அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது.

"உம் சொல்லு" என்ற ராபியாவின் சுவாரஸ்யமில்லாத குரல் இவளது ஆர்வத்தைக் குறைத்தாலும் அவள் அதனைப் பொருட்படுத்தாமல் மறைத்துக்கொண்டு உற்சாகத்துடன் சொல்ல ஆரம்பித்தாள்.

"அன்னக்கிச் சாயங்காலம் ஒண்ணுக்கு இருக்கப் போனப்போ பாத்தாக்க லேசா கறுப்பு நிறத்துல ரத்தம். அதைப் பார்த்ததுமே எனக்கு உயிரே போயிருச்சு தெரியுமா? யார்ட்ட சொல்ல, என்னன்னு கேட்கன்னு தெரியாம நடுங்கிப் போயிட்டேன். சரிதான் நம்மளுக்கு என்னமோ ஆயிடுச்சு அப்புடின்னு! அப்புறம் நல்லா தண்ணிய ஊத்திக் கழுவிட்டுப் பேசாம இருந்தேனா" என்று நிறுத்தியவள், ராபியா இடைப்பட்டு நிறுத்தி ஒரு கேள்வியும் கேட்காததனால் கொஞ்சம் ஏமாற்றமாக உணர்ந்தாள். இவள் ஏன் இப்படி இருக்கிறாள் முகத்தை உம்மென்று வைத்துக்கொண்டு? எரிச்சலாக இருந்தது மதினாவுக்கு. இருந்தாலும் பாவமாகவும் இருந்ததனால், "ஏண்டி ஒரு மாதிரியாவே இருக்க" என்று அவளைத் தோளைத்தொட்டு ஆதரவாகக் கேட்டாள். இவள் இப்படிக் கேட்டதும் உடனே சுதாரித்துக்கொண்ட ராபியா, "ஒண்ணுமில்ல" என்றவள், "என்னையப் பள்ளிக்கூடம் போகக் கூடாதுன்னு சொல்லிட்டாங்களா?, அதுதான். அப்புறம், நாளைக்கி எங்க வீட்டுல குறுக்கால சுவர் வைக்கப் போறாகளாம்" என்றாள் வருத்தத்துடன்!

அவளது வருத்தத்தைப் புரிந்து கொண்ட மதினா, சிறிது நேரம் ஒன்றும் பேசாமல் மௌனமாக இருந்தாள். ராபியாவின் அம்மாவுக்கும் பெரியம்மாவுக்கும் சண்டை என்று அம்மாவும் நபிஸா அக்காவும் பேசிக் கொண்டிருந்ததை இவள் கேட்டுத்தானிருந்தாள். அதனால் இவ்விஷயம் தனக்கு ஏற்கனவே தெரியும் என்பது போல

முகத்தை வைத்துக்கொண்டு, “ஆமாமா. ஒங்க வீட்டுல என்னமோ சண்டையாமே? எனக்கும் தெரியும்” என்றாள்.

“அதில்லை மதினா, சண்டை மாதிரியே தெரியல. எனக்கும் அக்காவுக்கும்தான் கவலையாவே இருக்கு.” பெரிய மனுஷியாட்டம் முகத்தைத் தன் வலது உள்ளங்கையினால் தாங்கிக் கொண்டு அமர்ந்திருந்த ராபியா, “மதினா நான் ஒண்ணு கேப்பேன் சரியா பதில் சொல்றியா” தயங்கித் தயங்கிக் கேட்டவள், “எங்கம்மாவப் பாத்தா தான் எனக்குப் பாவமா இருக்கு. யாராவது எங்கம்மாகிட்ட பிர்தவ்ஸ்தானாமே மும்தாஜைப் புடிச்சுக்கிட்டான்னு கேட்டா அவங்களுக்கு ரொம்பக் கோவம் வருது.” சொல்லி நிறுத்தியவள், “எப்புடித் தெரியும் அந்தப்பேய் எங்க சித்தின்னு” என்றாள் நிச்சயப்படுத்திக் கொள்கிற ஆர்வத்துடன்!

அவளது வருத்தமான முகத்தைக் காணவிரும்பாத மதினா, தலையைக் குனிந்து மொட்டை மாடியின் தரையைப் பார்த்துத் தன் ஆட்காட்டி விரலில் கோடுகளை வரைந்தபடி மௌனமாக இருந்தாள் என்றாலும், அவளது கேள்விக்குத் தான் தனக்குத் தெரிந்த பதிலைச் சொல்வதுதான் சரியென்பதுபோலத் தலையை அசைத்தவள், “எனக்குத் தெரியும் அன்னிக்கி ராத்திரி அண்ணன் ரூமுக்குள்ள போனதும் அண்ணி, வெளியே போடா நாயே, என்னையத் தொடாதேன்னு சத்தமாகக் கத்தினாங்க. ஒடனே நானும், எங்கம்மாவும் ஓடிப்போய் அறைக்கு வெளியே நின்னுக்கிட்டோமா, அப்ப அண்ணன் கதவைத் தொறந்து வெளியே வந்து, ‘அம்மா பாரும்மா இவளை’ன்னு எங்கம்மாகிட்ட சொன்னாங்க. எங்கம்மா பதறிப் போயி உள்ளறெ போயி ரூமுக்குள்ள மூலையில ஒக்காந்து முழங்கால்ல முகத்தைப் பதிச்சுக்கிட்டு இருந்த அவங்களப் பாத்துக் கேட்டாங்க, ‘ஏம்மா சீதேவி நீ யாரும்மா, எங்கெருந்து வந்தே’ன்னு.

எங்கம்மாவுக்கே பயம் ஒடம்பெல்லாம் நடுங்குச்சு. அப்ப மும்தாஜு அண்ணி தலையை நிமித்தி அம்மாவைப் பாத்து, 'நான் பிர்தவ்ஸ் வந்துருக்கேன்டி'ன்னு ஆவேசமாகக் கத்தவும் பயந்து போயி நாங்க எல்லாருமே அறையைவிட்டு வெளியே வந்துட்டோம்." சொல்லி முடிக்கும்பொழுது தான் மிகப் பெரிய குற்றமொன்றை செய்துவிட்ட பாவம் மதினாவின் முகத்தில் பளிச்சிட்டது. அவளது கேள்வியைத் தன் பதிலால் உறுதி செய்ததன் மூலம் ராபியாவுக்கு மிகப்பெரிய வருத்தத்தைத் தந்துவிட்ட கவலையும் அவளிடத்தில் கூடியிருந்தது.

அதன்பிறகு கொஞ்ச நேரத்திற்கு இருவருமே ஒன்றும் பேசாமல் இருந்து கொண்டிருந்தார்கள். வானத்தில் அந்தியின் வெளிச்சம் பரவியிருந்து ஒரு விதமான மஞ்சள் நிறத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தது பார்க்கவே அழகாக இருந்தது. எங்கே திரும்பினாலும் மஞ்சள் நிறம். ராபியாவின் முகமும் மதினாவின் முகமும் கூட மஞ்சள் நிறம் கொண்டிருந்தன. மதினா வயதுக்கு வந்த பிறகு வீட்டிற்குள்ளேயே இருந்ததால் அவள் உடம்பில் லேசான சதையும் நிறமும் கூடிப் பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருப்பதை ராபியா கவனித்தாள். தானும்கூட வயதுக்கு வந்ததும் இப்படித்தான் அழகாகி வெளுப்பாகிவிடுவோம் என்கிற நினைவு வந்து மனதில் திடீரென சந்தோஷம் உண்டாயிற்று. மறுபடியும் அவளுக்கு அஹமதுவின் நினைவு வந்தது. அவன் இந்நேரம் கூட இருந்தால் நன்றாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டவள், மதினாவின் மடியில் தலை சாய்த்துக் கொண்டு வானத்தையே பார்க்கத் தொடங்கினாள், எதையோ அறிந்து கொள்ள முயல்வதுபோல!

துக்கத்தை விழுங்கி விழுங்கித் தொண்டை வலித்தது சொஹ்ராவுக்கு. எழுந்து போய் அடுப்படிக் கதவை திறந்து மண் பானையிலிருந்த தண்ணீரைச் சொம்பில் மெத்திக் குடித்தாள். குளுகுளுவென்று தொண்டையில் இறங்கிய தண்ணீர் இதமாக இருந்தது. வாசலில் குவிந்து கிடந்த செங்கல்கள் நேராக அவள் கண்களில் பட்டன. முற்றத்தின் நடுவில் சுவர் எழுப்பிப் பாதி வரை வந்திருந்தது. இன்னும் இரண்டு நாளில் வேலை முடிந்து விடும். பெரிய வீடென்பதால் சரிபாதியாக அறைகளையும் முற்றத்தையும் அளந்து பிரித்திருந்தார்கள். மனை சாஸ்திரப்படி அண்ணன் ஒரு திசையிலும் தம்பி ஒரு திசையிலும் இருக்க வேண்டுமென்பது முடிவானதில் றைமா வீட்டுப்பக்கமாகக் கிணறு பிரிந்து விட்டது. கரீமிடம் சொஹ்ரா, தன் வீட்டுப்பக்கம் உடனே கிணறு வெட்டச் சொன்னதற்கு அவன் ஒரே பேச்சில் அவள் வாயை அடைத்துவிட்டான். “வஹிதா புள்ளை உண்டாகிற நிலையில இருக்கு. அது உறுதியாயிருந்தா கிணறு நம்ப வீட்டுல வெட்டக் கூடாது. கொஞ்ச நாள் பொறு” என்று.

இவளுக்கு எரிச்சலும் ஆத்திரமும் மண்டினாலும் ஒன்றும் பேச முடியலில்லை. அண்ணனும் தம்பியும் கறாராக இருந்தார்கள். காதர், றைமாவையும் சொஹ்ராவையும் கூப்பிட்டுச் சொன்னான். “பொம்பளைகளுக்குள்ள மனஸ்தாபம் வர்றது சகஜம்தான், நம்ப வீட்டுல இம்புட்டு நாள் ஒத்துமையா இருந்ததே பெரிய சங்கதி. யார் கண்ணு பட்டுச்சோ சுபஹானல்லாஹ்! ஆனா ஒண்ணு, வீடுல தான் பிரிவினையே தவிர தொழில் எப்பவும் ஒண்ணுதான். நான் என் பொண்ணுக்கு எவ்வளவு செலவழிச்சுக் கல்யாணம் முடிச்சேனோ,

அதே போல ராபியாவுக்கும் செலவழிச்சுக் கல்யாணம் முடிக்கற வரை இப்படியே இருக்கட்டும்” என்று ஒரேயடியாகப் பேச்சை முடித்து விட்டான். பிறகு யாருமே வாய் திறக்கவில்லை.

சுவர் வைக்க ஆரம்பிக்கும் முன்பாக சொஹ்ராவைக் கூப்பிட்ட காதர், “இங்கே பாரும்மா, ஒனக்கு இங்கெருந்து என்னென்ன தேவையோ அதெல்லாம் எடுத்துக்க. யாரும் ஒண்ணும் சொல்ல மாட்டோம். இம்புட்டுக் காலத்துல குடும்பத்துல ஏதாவது கூடக் குறைச்சு நடந்திருந்தாலும் அல்லாவுக்காக மனம் பொறுத்துக்க.” றைமா எதற்குமே வாய் திறக்கவேயில்லை. அவளது பொறுமையை ஒப்புக்கொள்ள மனமில்லாமல், “கள்ளி, உடம்பெல்லாம் வெஷம்” என்று தன்னுள்ளாக முனகித் திருப்திப்பட்டுக் கொண்டாள் சொஹ்ரா.

அடுப்படி, குளியலறை, கழிப்பறை மூன்றும் சொஹ்ராவின் வீட்டுப் பக்கமும் கிணறு மட்டும் றைமா வீட்டுப்பக்கமும் பிரிந்திருந்தது. பொதுச் செலவில் அந்தப் பக்கம் அடுப்படி கழிப்பறைகளும் இந்தப் பக்கம் கிணறும் தோண்டுவதாகப் பேசியிருந்தார்கள். வேலையும் நடந்து கொண்டிருந்தது. கிணறு வெட்டத்தான் தடையாகப் போயிருந்தது. காதர் தம்பியிடம் சொன்னான்: “தினமும் எம்புட்டு நேரம் வேணுமின்னாலும் மோட்டார் போட்டுத் தண்ணி புடிச்சுக்கங்க. ஒண்ணும் பிரச்னையில்லை.”

சொஹ்ராவுக்குத்தான் ஒப்புக்கொள்ளப் பிடிக்கவில்லை. உடனே பாட்டோடு பாடாகக் கிணற்றையும் தோண்டினால்தான் ஆயிற்று என்று கரீமிடம் அடம் பிடித்துப் பார்த்தாள். இன்னும் ஒரு வருஷம் கிடந்து பட்டுப்போகும் என்று! அவன் ஒரே ஒரு அடியில் அவள் வாயை அடைத்து விட்டான். சொஹ்ராவின் கை தன்னையுமறியாமல் தன் வலது கன்னத்தைத் தடவிவிட்டுக் கீழிறங்கியது. அவன்

சரியில்லாததனால்தானே இத்தனை கஷ்டமும் என்று வாய்விட்டுப் புலம்பிக் கொண்டவளின் கோபம் ராபியாவின் மீது திரும்பியது. “அந்தச் சனியன் ஏன்தான் அந்தச் சிறுக்கி மேல இம்புட்டுப் பிரியத்த வச்சுருக்குதோ தெரியலையே. இப்பிடி சீலைப்பேனாட்டம் ஒட்டிக் கிடக்கிறாளே? அவள எப்படிப் பிரிச்சு எடுக்க” என்று தனக்குள்ளாக முனகி ஆத்திரத்தைத் தீர்க்க முயன்றாள்.

கரீம் வேறு இடையிடையே, “நீ எம்புட்டு விரோதிச்சா என்ன? ஒன் மக அங்க எவ்வளவு தூரம் உசுரா இருக்கா தெரியுமா?” என்று கிண்டல் செய்து ஆத்திரமூட்டிக் கொண்டிருந் தான். இவள் குடும்பத்தைப் பிரிக்கச் சொல்வது தன் தாயைக் கூட்டி வருவதற்காக மட்டுமேயில்லை என்பதை அவன் உணர்ந்தேயிருந்தான். முன்பெல்லாம் சொஹ்ராவுக்குத் தான் கையாலாகாத நிலையில் இருப்பதாக அடிக்கடி தோன்றிக் கொண்டேயிருக்கும். இதையாவது தன் இஷ்டப்படி செய்தால்தான் உயிரோடு இருப்பதற்கே அர்த்தமிருப்பதாகக் கற்பனை செய்து கொண்டாள். தான் வெற்றி பெற்று விட்டதான குரூர திருப்தியும் உள்ளுக்குள் பீறிட்டது.

அவளுக்குத் திடீரென பிர்தவ்ஸின் நினைவு வந்தது. அவள் முகமே கண் மறந்தாற் போலிருந்தது. தன் கனவில்கூட அவள் வருவதில்லை என்பது ஞாபகம் வர, துக்கத்தில் மறுபடியும் தொண்டை அடைத்தது. அவள் தன்மீது கோபமாக இருக்கிறாள், அதுதான் வரவில்லை என்பது புரிந்தது. கோபத்தில் எத்தனை நாள் அவளோடு பேசாமல், அவளைப் பார்க்கப் போகாமல் இருந்திருக்கிறாள். ஏன் ராபியாவைக் கூட வீம்பாக அனுப்பாமல் இருந்தாளே? எதற்காக அந்தப் பச்சைக் குழந்தையிடம் அத்தனை வீம்பு செலுத்தினோம் என்று நினைத்து அழுதாள் சொஹ்ரா. கடைசி நேரத்தில் தனக்காக உதவி செய்ய ஒரு நாதியும் இல்லை என்று நினைத்திருப்பாளே என நினைக்கையில்

அழுகை கட்டுக்கடங்காமல் வெளிப்பட்டது. அறையில் ஒரு மூலையில் அமர்ந்திருந்தவள் முகத்தை மடியில் புதைத்துக் கேவலை விழுங்கினாள். தான் அழுவது றைமாவின் காதில் விழுந்துவிடக் கூடாது என்கிற எண்ணத்தோடு. அதற்குத் துளிக்கூட இடம் தர அவள் தயாராக இல்லை என்பதால் கஷ்டப்பட்டு அழுகையை நிறுத்தினாள். வெளியில் யாரோ அம்மாவென்று கூப்பிடும் சத்தம் கேட்டு முகத்தைச் சேலை முந்தானையினால் அழுந்தத் துடைத்துக் கொண்டவாறு வெளியே வந்தாள். கையில் பால் தூக்கோடு மாரியாயி நின்று கொண்டிருந்ததைப் பார்த்து விட்டு வந்து பாலைக் கையில் வாங்கிக் கொண்டு அடுப்படிக்குள் போனாள். இவளது முகத்தை உற்றுப் பார்த்துவிட்டு முற்றத்தில் எழும்பிக் கொண்டிருந்த சுவரையும் ஒரு பார்வை பார்த்த மாரியாயியின் கண்களில் துயரம் குடிகொண்டு அவளையும் மௌனமாக்கிற்று. அவள் எதையோ யோசித்தபடி கல்வாசலின் ஓரத்தில் கிடந்த துணி துவைக்கிற கல் மீது சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள். தெருவிலிருந்து ஓடிவந்த ராபியா, மாரியாயி மடியில் தொப்பென விழுந்து அவளை அணைத்துக் கொண்டதும்தான் தன் நினைவுக்கு வந்தாள் அவள்.

# 64

றைமா கரண்டியை விட்டு சோற்றைக் கிண்டி எடுத்து ஒரு பருக்கையை நசுக்கிப் பார்த்தாள். இன்னும் வேகாதது மாதிரிதான் இருந்தது. மெத்தி வைத்திருந்த உலைத் தண்ணீரைக் கொஞ்சம் அதில் ஊற்றி விட்டு ஊதாங்குழலை எடுத்து லேசாக ஊதித் தீயை நன்றாக எரித்தாள். புகையில் கண் எரிச்சலோடு மனதிலிருந்த துக்கமும் ஒன்று சேரக் கண்ணீர் வழிந்தோடிற்று. வஹிதா, சுவர் வைத்ததிலிருந்தே ரொம்பவும் மனமுடைந்து போயிருப்பது போல இருந்தாள். றைமாவிடமும் சரியாகப் பேசுவதில்லை. அவள் என்ன நினைக்கிறாள் என்பதே இவளுக்குப் புரியவில்லை. மகள் தன்னை வெறுத்தொதுக்கும் நிலை ஏற்பட்டு விட்டதை நினைத்துத்தான் தாளமாட்டாதபடி அழுகை பொங்கிப் பொங்கி வழிந்தது.

சைனு மாற்றி சவுரா, இல்லை நபிஸா இப்படி யாராவது, ஒருத்தி மாத்தி ஒருத்தி இவளிடம் வந்தும் சொஹ்ராவிடம் போயும் எதையெதையோ கேட்டு வாயைப் பிடுங்க முயற்சிப்பதும் இவளுக்குச் சரியான எரிச்சலை உண்டு பண்ணியபடி இருந்தது. ரொம்பவும் அக்கறையாக இருப்பது போலத்தான் பேசுவார்கள். இவளிடம், “ஏன் றைமா, உன் மனசு எப்புடிப் பத்தரைமாத்துத் தங்கம், இந்தச் சிறுக்கி இப்படி எடுத்தெறிஞ்சுட்டுப் போனாளே. நல்லாத்தான் வா” என்பார்கள். சொஹ்ராவிடம், “ஊமை ஊரைக் கெடுக்குங்கற மாதிரி உன் கொழுந்தன் பொண்டாட்டி. நல்லவேளை! இப்பவாச்சும் புரிஞ்சுக்கிட்டியே?” என்பார்கள். காதர், சொஹ்ராவையும் றைமாவையும் கூப்பிட்டு வைத்து ஒரே ஒரு விஷயம் மட்டும் அழுத்தமாகச் சொன்னான்.

"இந்தா பாருங்க, இங்கெ என்னா நடக்குது ஏது, நடக்குதுன்னு பாக்க ஒவ்வொருத்தரும் பட்டமா பறப்பாக. உண்மையில இங்க நமக்குள்ள ஒரு பிரச்னையும் இல்லாமத்தான் பிரியுறோம். இதற்கிடையில யாராவது எதையாவது ஔறி வைச்சுக் கேவலப்படுத்திக்கிறாதீங்க. நான் பொல்லாதவனா மாறிப் போயிருவேன்" என்று! இதை அவன் குறிப்பாக சொஹ்ராக்காகத்தான் சொன்னான் என்பது கரீமுக்கும் தெரியும். அது சொஹ்ராவுக்கும் புரியத்தான் செய்தது.

"தன்னால் யாரைப் பற்றியுமே சரியான ஒரு அளவுகோலை வைத்துக் கொள்ளவே முடியாதோ" என்கிற விரக்தி மேலிட்டது றைமாவுக்கு. சொஹ்ரா தன்னோடு எத்தனை ஒற்றுமையோடிருந்தாள். இன்று அவளிடம்தான் எத்தனை விரோதம்! அதுவும்கூட இவளை நிலைகொள்ளவிடாமல் செய்தது. சோறு பொங்கி வழிந்து உஸ் . . ! என்று சத்தம் வந்ததும் திடுக்கிட்டுத் தன் நினைவுக்கு வந்தவள், அடுப்பு அணைந்து புகை வருவதைக் கண்டு மறுபடி விறகை ஒடித்து உள்ளே நுழைத்து ஊதாங்குழலால் விடாமல் ஊதி எரிய வைத்தாள். கரண்டியினால் கிண்டி விட்டு ஒரு சோறை கிள்ளி எடுத்துப் பார்த்தவள், "இனிமேலயாவது கியாஸ் அடுப்பு வாங்கணும், பயந்து சாகறத விட்டுட்டு" தனக்குள்ளாக முணுமுணுத்துக் கொண்டபடியே புகையினால் எரியும் கண்களைப் புடவை முந்தானையினால் தொட்டுக் கசக்கி விட்டுக் கொண்டாள்.

தெருவில் சைனு யாரையோ கூப்பிட்டபடியே போகும் சத்தம் கேட்டது. அவள் வீட்டிற்குள் நுழைந்து விடுவாளோ, என்கிற பயம் புகையோடு சேர்ந்தே அவளைச் சூழ்ந்தது. வந்தால் போதும், 'வஹிதாவுக்கு இன்னையோட எத்தனை நாளாச்சு', 'மசக்கை வாஸ்தவம்தானா', 'நீர் காய்ச்சிப் பாத்தாச்சா' என்று கேட்டுத் துளைத்தெடுத்து விடுவாள். அவள் மட்டுமில்லை; சவுரா, நபிஸா

என்று யாராக இருந்தாலும் இதே கேள்விதான். அடுத்த வீட்டில் என்ன நடந்தால் என்ன? அது மட்டும் இவர்களால் இருக்கவே முடியாது. இவளும் சில சமயங்கள் வெடுக்கென்று முகத்தில் அடித்தாற்போலச் சொல்லிவிடுவாள். மறுநாளே அதை மறந்து விட்டு இதே விஷயத்தைக் கேட்க வந்துவிடுவார்கள். இவளுக்காவது சங்கடமாக இருக்கும் இப்படிப் பேசிவிட்டோமே என்று! அவர்களுக்குத் துளிகூட இருக்காது.

அவளுக்குச் சோற்றை வடிக்க வேண்டியது ஞாபகம் வந்தது. துணிபிடித்துப் பானையைத் தூக்கி வடித்தவள், உலைமூடி சரிந்து விடாமலிருக்க ஊதாங்குழலை தட்டிற்குக் குறுக்கே வைத்து விட்டு எழுந்தாள். மகள் என்ன செய்கிறாள் என்று பார்ப்பதற்காக அறைக்குள் போனாள். அறையில் ஜன்னல்களை எல்லாம் சாத்திக் கொண்டு இருட்டாக்கியிருந்தாள் வஹிதா. படுக்கையின் ஒரு ஓரத்தில் சுருண்டு படுத்துக்கிடந்தவளைப் பார்க்கையில் அடி வயிற்றை கவ்விப் பிடித்தது றைமாவுக்கு. இவள் ஏன் இப்படிக் கொஞ்சம்கூட சந்தோஷமேயில்லாமல் இருக்கிறாள் என்று நினைத்து வேதனையுண்டாயிற்று. துளியளவு உற்சாகம்கூட இல்லாமல் போகுமளவுக்கா புதிதாகக் கல்யாணம் ஆன பெண் இருப்பாள். இத்தனை தூரம் இவள் சோர்வாக இருக்கும் அளவுக்கா வாழ்க்கை இருக்கிறது என்கிற கேள்விகள் இதயத்தைப் பிசைய, அவளுக்கு வெடித்துவிடும் போலத் தலை வலிக்க ஆரம்பித்தது. எதையெதைத்தான் நினைத்து நினைத்து அழுது தீர்ப்பது என்கிற வேதனையெழுந்து மறுபடியும் கண்களிலிருந்து நீர் வழியத் துவங்க, அதை உடனேயே முந்தானையால் துடைத்தபடி வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தாள்.

# 65

இரண்டு நாளாக ஷெரிபா படுக்கையை விட்டு எழுந்திருக்கவேயில்லை. அழுது வீங்கிய முகமும் சாப்பிடாமல் வாடிய உடலுமாகப் படுத்துக்கிடந்தாள். குழந்தையை றைஹானாதான் கவனித்துக் கொண்டாள். சவுரா ஒரு அறையில் இதே நிலைமையில் கிடந்து அழுது கொண்டிருந்தாள். ஷெரிபாவுக்குத் தான் பட்டினி கிடப்பதுகூட பெரிதாகத் தெரியவில்லை. அம்மா எப்படிச் சாப்பிடாமல் இருக்கிறாள் என்றுதான் ஆச்சர்யமாக இருந்தது. அவளுக்குச் சாப்பாடுதான் உலகம், வாழ்க்கை எல்லாமே.

சைனு இரண்டு நாட்களுக்கு முன் வந்து ஷெரிபாவைச் சுலைமானுக்கு நிக்காஹ் செய்யக் கேட்டு விட்டுப் போனாள். அதிலிருந்துதான் சவுரா இப்படி அடம்பிடிக்க ஆரம்பித்திருந்தாள். எப்படியாவது இவளை ஒத்துக்கொள்ள வைப்பதற்காகவென அழுதுகொண்டிருந்தாள். இருவரும் ஆளுக்கு ஒரு அறைக்குள் போய் படுத்தவர்கள்தான். மும்தாஜுக்குப் பேய் பிடித்திருக்கிறதாம், பிள்ளை பிறக்காதது பெரிய குறையாம். ராத்திரி நேரத்தில் சுலைமானைப் பக்கத்தில்கூட வரவிடாமல் விரட்டுகிறாளாம். சைனு புலம்பி விட்டுப் போனாள் தன் நாத்தனாரிடம்.

“ஒங்க அத்தாவுக்கும் வயசாகிப் போச்சு, அவர் காலத்துக்கப்புறம் இந்தக் குடும்பத்த கொண்டு செலுத்த எந்த நாதியிருக்கு. ஒரு ஆம்பள தொணையில்லாம எப்புடி, ஒன் காலம் ஓடும். ஒந்தங்கச்சி ஒருத்தி மொட்டையா நிக்கிறா, அவள யாரு பாத்துக்குவா. ஒன்னோட தம்பி அறியாப்பிள்ளை. அவனுக்கு நல்லது கெட்டத யாரு கை காட்டுவாக. ஒனக்கு ஒரு வாழ்க்கை அமைஞ்சு நீ சந்தோஷமா இருந்தா, அந்த

நெனப்பே ஒங்கத்தாவுக்கு இன்னும் கொஞ்ச காலத்துக்கு ஆயுச நீடிச்சுப் போடும். அட, எங்களுக்கே ஒண்ணுன்னா உன் புருஷன் நம்ப குடும்பத்தப் பாத்துக்குவான். இப்புடி எங்கண்ணன் மகனுக்கே கட்ட முடியும்னு எப்பவாவது நெனைச்சிருப்போமா? அல்லா நாடியிருப்பான் போல! மாட்டேங்காதம்மா" என்று இவள் தலைமாட்டில் உட்கார்ந்து புலம்பித் தீர்த்தாள் சவுரா.

சுலைமானின் பேரைக் கேட்டாலே பற்றிக்கொண்டு வந்தது. அன்றைக்கு பாத்திமா மௌத்தான விஷயத்தை றைமா வீட்டில் வைத்து அவன் சொல்லிக் கொண்டிருந்த பொழுது அவன் முகத்தில் தெரிந்த உற்சாகமும் குரோதமும் அவன் பேரில் அதிகப்படியான வெறுப்பை இவளிடத்தில் உண்டு பண்ணியிருந்தது. கொஞ்சநாள் மனைவிக்கு உடம்பு சரியில்லை என்றவுடனே இன்னொருத்தியைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளத் தயாராக இருக்கிறானே? கர்மம் பிடித்தவன் என்று நினைத்தவளுக்கு, தான் இன்னும் கூட தன் கணவனை நினைத்துக் கொண்டிருப்பதை நினைத்துப் பெருமையாக இருந்தது.

அவள் மறுபடியும் சவுரா சொன்ன விஷயங்களை யோசித்துப் பார்த்தாள். அவளது கவலைகள் மிகவும் நியாயமானவைதான் என்று புரிந்தது. என்னதான் நியாயம் என்றாலும் பக்கத்து வீட்டில் இத்தனை நாள் பழகி இருந்த மும்தாஜுக்குக் கெடுதல் பண்ண அம்மாவுக்கு எப்படி மனம் வந்தது, கொஞ்சமாவது கூச்சம் இல்லாமல் என்று நினைத்தாள். அம்மாவைப் பொறுத்த வரை ஏதாவது ஒரு வழியில் கல்யாணம் எனக்கு நடந்தால் அது போதும். அதற்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருந்தாள். ஆண் துணையில்லாத குடும்பம் எப்படியெல்லாமோ கஷ்டப்படத்தான் செய்யும் என்கிற நிஜத்தையும் சேர்ந்தே யோசித்தாள். நான்கு

நாட்களுக்கு முன் அவளது தந்தையிடமிருந்து போன் வந்திருந்தது. லேசாக நெஞ்சுவலி இருந்ததாகவும், டாக்டரிடம் காண்பித்ததாகவும்! உடனே கிளம்பி வரச்சொன்னதற்கு அது எப்படித் தொழிலை விட்டுவிட்டு வரமுடியும் என்று மறுத்துவிட்டார். இதே மாதிரித்தான் சைனு மம்மாணி புருஷனுக்குமிருந்தது. பிறகு அங்கேயே அவர் மவுத்தாகப் போய்விட்டார். மையத்தைக்கூட கொண்டு வரவில்லை. சவுரா இந்தச் சமயத்தில் அதை நினைத்து வேறு அழுது தீர்த்தாள். இந்த முறை அவர் போகும்பொழுது, “போக வேண்டாம் இருக்கற பணம் போதும்! வயசாகிப் போயிருச்சு, இனி யாருக்காகச் சம்பாதிக்க?” என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள் ஷெரிபா. கேட்டால்தானே? “அதெல்லாம் ஒரு நிமிஷம்கூட என்னால இங்கெ இருக்க முடியாது, எனக்கு ஒண்ணும் ஆவாது, அல்லா இருக்கான்” என்று மறுத்துவிட்டார்.

“துனியாக்கவுசு தொலையுது விடு” என்று சொல்லிவிட்டுப் பேசாமல் இருந்து விட்டாள் சவுரா. அவளுக்குத் தெரியும் அவரைப் பற்றி! ஷெரிபாதான் ஒவ்வொரு நாளையும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு தந்தைக்காக அல்லாவிடம் துஆ செய்தபடி இருப்பாள். இன்று அவருக்கு உடல் சுகமில்லை என்று தெரிந்த பிறகு மனம் ரொம்பவே வேதனைப்பட்டது. சவுராவுக்கோ அது வேறு மாதிரி கவலைகளைக் கிளப்பி விட்டிருப்பதோடு தனக்கு முன்னிருக்கும் பொறுப்புகளையும் நினைவுக்குக்கொண்டு வந்திருக்கிறது.

புரண்டு படுத்த ஷெரிபா பெருமூச்சு விட்டாள். இதே மாதிரிதான் தன் திருமணப் பிரச்னை சென்ற வருடமும் விஸ்வரூபம் கொண்டது என்பதை நினைவுபடுத்திக் கொண்டாள். பள்ளிவாசலில் ஒவ்வொரு வருடமும் மவ்லூது பிறை முடிந்த கையோடு ஊர் முழுக்க வீட்டுக்கு வீடு தலைக்கட்டுப் பணம் நூறு ரூபாய் வசூலிப்பார்கள். ஒரு கணவன்

மனைவி கொண்டது ஒரு தலைக்கட்டு. அவர்கள் தம் பங்குக்குப் பள்ளிவாசலுக்கு நூறு ரூபாய் கொடுக்க வேண்டும். வசதியானவர்கள் தம் விருப்பத்திற்கு ஆளுக்கு ஒரு தொகையை நன்கொடையாகக் கட்டாயமாகக் கொடுத்துவிட வேண்டும். இப்படிச் சேரும் பணம் மொத்தத்தையும் போட்டு ஊர் நாட்டாண்மை நூற்றுக்கணக்கில் கிடா வாங்கிப் பள்ளிவாசலில் வைத்து அறுத்து, குழம்பு வைப்பார். வரிசையாகப் பானையில் வைத்து, பத்து தலைக்கட்டுக்கு ஒரு பானை என்கிற கணக்கில் காய்ச்சி, பத்து வீட்டுக்கு ஒரு பானையைத் தூக்கிவிடுவார்கள். யாராவது ஒருத்தர் வீட்டில் வைத்துப் பத்து குடும்பத்தாரும் அந்தப் பானையிலிருப்பதைப் பிரித்தெடுத்துக் கொள்வார்கள். அன்றைக்கு ஷெரிபாவின் வீட்டு முற்றத்தில் வைத்துத்தான் குழம்பைப் பிரித்துக்கொண்டிருந்தார்கள். சைனுதான் பானைக்கருகில் உட்கார்ந்து கரண்டியினால் குழம்பைக் கிண்டி விட்டு ஒரு சிறிய பீங்கானில் கறியைத் தனியாகப் பிரித்தெடுத்து வரிசையாக வைக்கப்பட் டிருந்த பாத்திரங்கள் ஒவ்வொன்றிலுமாகக் கொட்டத் துவங்கினாள். முற்றத்தில் விழுந்து புரண்டுகொண்டிருந்த முற்பகல் வெய்யிலின் வெப்பத்தைப் பொருட்படுத்தவிடாதபடிக்குக் குழம்பின் மணம் அனைவரையும் கட்டிப் போட்டிருந்தது. தம் பாத்திரங்களுக்கருகில் நின்று சைனு, கறியைப் பகிர்ந்து கொட்டுவதைக் கண் சிமிட்டாதபடி கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நபிஸா, சொஹ்ரா, பாத்திமா, சவுரா எல்லோரும் தாம் கொஞ்சம் அசந்தால்கூட சைனு எதுவும் தவறு செய்து விடுவாளோ என்கிற கவலை அவர்களது முகங்களில் தெளிவாகவே பதிந்திருந்தது. யார் யாருக்கு எத்தனை பங்கெனப் பள்ளிவாசலிலிருந்து வந்திருந்த சீட்டைப் படித்த சைனு, “இந்த ஒரு தலைக்கட்டு விதவைப் பங்கு எனக்குப் பாதி, ஷெரிபாவுக்குப் பாதி” என்று சொல்லியபடியே அரைப்பங்கைப் பிரித்துப் பாத்திரத்தில் எடுத்து, “இது உன் மகளுக்கு”

என்று சைனு ஊற்றியது தான் தாமதம் சவுராவுக்கு முகம் கறுத்துப் பேயறைந்தாற் போல ஆயிற்று. இத்தனை நாள் மறைந்திருந்த விஷயத்தை யாரோ முகத்தில் அடித்துச் சொல்லி ஞாபகப் படுத்தியது போல உணர்ந்தவள், "தாய்க்காரி வாவரசியா இருக்கறப்போ என் கண்ணுக்கு முன்னால எம்புள்ளைக்கி விதவைப் பங்கு குடுக்க வச்சியேடா றப்பு" என்று அலறித் தீர்த்து விட்டாள். அந்தக் குழம்பையும் ஆத்திரத்தில் நார்சா என்றுகூடப் பார்க்காமல் உதைத்தெறிந்து விட்டாள். அவளது அலறலில் அங்கிருந்த ஒவ்வொருவரின் மனதிலும் தேற்றிக்கொள்ளவியலாத துயரமாகக் குடியேற அத்தனைப் பெண்களுமே இந்தக் கண்றாவியைப் பார்க்க நேர்ந்த தர்மசங்கடத்தோடு தான் நின்று கொண்டிருந்தார்கள். அப்பொழுதும் தொடர்ச்சியாக ஒரு வாரம் இப்படித்தான் அழுது தீர்த்துக் கொண்டிருந்தாள், கல்யாணம் பண்ணிக்கொள்ளச் சொல்லி. ஷெரிபாவுக்கு அந்தச் சம்பவம் ஞாபகத்தில் வந்தது. இன்னும் ஒரு வாரம் இப்படித்தான் அழுது கொண்டிருப்பாள். பிறகு சரியாகிவிடுவாள் என்று நினைத்தவளுக்கு இனியும் தன்னால் தனது உணர்வுகளை அடக்கிக் கொண்டு தனியாக வாழ முடியுமா என்கிற கேள்வி தீவிரமாக எழத்தான் செய்தது. ஒவ்வொரு நாள் இரவுமே பெரும் துன்பமாக மாறிக் கொண்டிருப்பதும். அந்த வேதனையைக் கடக்க தான் படும் சிரமமும் நினைவில் மேலெழும்பிற்று. தன் கணவனின் நினைவும் குழந்தையின் மீதுள்ள பாசமும் மட்டுமே மிச்சமுள்ள காலத்திற்கும் தனக்குப் போதுமான துணையாக இருந்துவிட இயலுமா என்பது புரியாத பெரும் குழப்பம் அவளை ஆக்கிரமித்திருக்க, செய்வதறியாமல் திகைத்துப்போய் அப்படியே படுத்திருந்தாள்.

தினசரி ஒன்பது நேரத் தொழுகையும் குர்ஆனும் ஹதீஸும்

வாரமொரு நோன்பும் என விடாமல் செய்தாலும் மனதின் எந்த மூலையில் இந்த உணர்ச்சிகள் இன்னும்கூட வற்றிப் போகாமல் ஒளிந்து கொண்டிருக்கின்றன. அவள் தினமும் துஆவில் இறைவனிடம் இதைத்தானே கையேந்திக் கேட்கிறாள். இந்த உலக ஆசாபாசங்களிலிருந்து என்னை விலக்கிவை என்று கெஞ்சிக் கெஞ்சித்தானே கேட்கிறாள்? ஏன் அவனுக்கு இரக்கம் வரவில்லை. நினைக்க நினைக்க அவளுக்கு அவன் மீது ஆத்திரமாகத்தான் இருந்தது. விரக்தி மேலிட எழுந்தவள், கட்டிலிலிருந்து மெதுவாக இறங்கித் தரையில் காலை ஊன்றினாள். நிற்க முடியாதபடி கால்கள் நடுங்க விழுந்து விடாமல் கட்டிலைப் பிடித்துக் கொண்டாள். தலை சுற்றியது. மயக்கம் வருவது போலிருந்தது. உடம்பில் ஒன்றுமேயில்லாமல் சக்கையாகப் போய்விட்டது போல ஆயாசமாக இருந்தது. பல் விளக்கிவிட்டுத் தண்ணீராவது குடிக்கலாம் என்று நினைத்தவள், ஜன்னல் வழியே தெருவை ஒரு பார்வை பார்த்தாள். தெருவில் யாரோ ஒரு பையன் நூரம்மா வீட்டைக் கடந்து ஓடிக்கொண்டிருந்தான். உள்ளிருந்து "யாரது?" என்கிற தீனமான குரல் காதில் விழ, மனதில் நிறைந்த அயர்ச்சியுடன் பாத்ரூமுக்குள் போய் நுழைந்து கொண்டு பல் தேய்க்க ஆரம்பித்தாள். குளியலறைக் கண்ணாடியில் தெரிந்த முகம் தன்னுடையது மாதிரியே இல்லாமல் வேறு யாரோ மாதிரி இருப்பதைக் கவனித்தபடி வாய் கொப்பளிக்கத் துவங்கினாள்.

வாய் நிறைய தண்ணீரைத் தேக்கிக் கன்னத்தை உப்ப வைத்தாள். இரண்டு நாட்களாகச் சாப்பிடாததும், யாரிடமும் ஒரு வார்த்தையும் பேசாமலிருந்ததும் முகத்தை வலிக்கச் செய்திருந்ததனால் இறுகிக் கிடந்த முகத்தின் தசைகளைத் தளர்வுபெறச் செய்யவெனத் தண்ணீரை வாய்க்குள்ளே வைத்தபடியே கொப்பளித்துக்

கொண்டிருந்தாள், கன்னம் உப்பி உப்பிச் சுருங்குவதைக் கண்ணாடியில் பார்த்தபடியே. காதில் போட்டிருந்த கல்வைத்த சிறிய ஜிமிக்கி முன்னும் பின்னுமாக அசைவது ரொம்பவே அழகாக இருந்தது. இதைப் போலவே கல்யாணமான புதிதில், வாரப் பத்திரிகையின் அட்டையில் ஒரு நடிகை அணிந்திருந்தாள். இவளுக்கு உடனே இதே போல செய்து போட வேண்டுமென ஆசையாக இருந்தது. சலாத்திடம் காட்டிச் சொன்னாள். "இதோ உடனே செய்து தர்றேன்டி தங்கச்சி" என்று சொல்லி ஆசாரியைக் கூட்டி வந்து புத்தகத்தைக் காட்டிச் செய்து தரச் சொன்னான். இவளுக்கு அவன் தன்னைத் தங்கச்சி என்று சொல்லிக் கொஞ்சியது வெட்கமாக இருந்தது. ரொம்பவும் சந்தோஷமாக இருக்கும் பொழுதுகளில் வேண்டுமென்றே அவளை இப்படிச் சொல்லிச் சிணுங்க வைப்பான். அடிக்கடி, "உனக்கு வெக்கமேயில்லடி. இப்படி அண்ணனைப்போய் யாராவது கல்யாணம் பண்ணுவாங்களா. ஒரு நிமிஷம் நல்லா நினைச்சுப் பார்த்தா நாக்கைப் பிடுங்கிக்கிட்டுச் சாகத்தோணுது இல்லெ?" என்றெல்லாம் கிண்டல் செய்து இவளைச் சீண்டியபடி இருப்பான். பல்வேறுவிதமான நினைவுகளோடும் கவலைகளோடும் ஷெரிபா முகம் கழுவ ஆரம்பித்தாள்.

# 66

லேசாகக் கண்திறந்து யாரெனப் பார்த்த வஹிதாவுக்கு அம்மாவைப் பார்த்ததும் மனம் ரொம்பவே நெகிழ்ந்தது. அவளது அழகான அமைதியான முகம் இப்போதெல்லாம் கவலையினால் கறுத்து அமைதியிழந்து பார்க்கவே சகிக்காத மாதிரி மாறிப்போய்விட்டிருப்பதைக் கவனித்துப் பார்த்தவள், இத்தனைப் பிரச்னைகளுக்கும் காரணம் தான்தான் என்பது புரிய கண்களை இறுக்கமாக மூடிக்கொண்டாள். அன்று இரவு தான் மொட்டை மாடிக்குப்போகாமல் இருந்திருந்தால் அல்லது பிர்தவ்ஸைப் பார்க்காமலாவது இருந்திருந்தால் . . . ? அவள் கண்களை மூடியிருந்தாலும் ஒவ்வொரு காட்சியாக மனதில் வந்து போயிற்று. மனதில் ஓடிய அந்தச் சித்திரங்களைக் காணவோ, நினைவுறுத்தவோ பிடிக்காமல் அவள் கண்களைப் படக்கெனத் திறந்து கொண்டாள். தனக்கு வேண்டாத பொருட்களைத் தூக்கி எறிந்து விடுவது போல, வேண்டாத நினைவுகளையும் வீசி எறிந்து விட முடிந்தால் எத்தனை நிம்மதியாக இருக்கும் என நினைத்தாள். எவ்வளவுதான் வேரோடு பிடுங்கி எறிந்தாலும் கூட அந்நினைவுகள் இப்படித் துளிர் விட்டு வளர்ந்து தன்னைக் கொடுமைக்குள்ளாக்குகிறதே என்று வியப்பாகவும் இருந்தது அவளுக்கு. இதையெல்லாம் விட்டுத் தொலைக்க, சந்தோஷம் கொள்ள ஏதாவது இருக்கிறதா என்றால் அதற்கும் வழியில்லை. தன் கணவனை நினைத்தால் கவலை கூடுகிறதே தவிர வேறு ஒரு உணர்வுமே இல்லாமல் இருந்தது அவளுக்கு.

இவளுக்குள் தன் வாழ்க்கை இப்படி ஆயிற்றே, என்கிற கவலை அழத் தூண்டியது. எவ்வளவுதான் சமாதானம் செய்தாலும் கூட

அவ்வளவுதானா, எல்லாமே முடிந்து போய்விட்டதா, இனி இதற்கு மாற்றே இல்லையா என்பது மாதிரியான கேள்விகள் மனமெங்கும் எதிரொலித்தபடியே இருக்க, தான் மறுபடியும் கணவன் வீட்டுக்கே போகக் கூடாது என்பதில் மட்டும் உறுதியாக இருந்தாள். யார் என்ன சொன்னாலும் அவளுக்கு அந்த வாழ்க்கை வேண்டவே வேண்டாம். அதில் துளிக்கூட சந்தோஷமே இல்லை. பிறகெதற்காக அங்கே போய்க்கிடக்க வேண்டும், நரகத்தில் இருப்பது மாதிரி! இங்கே இத்தனைச் சீரோடும் செல்வாக்கோடும் இருந்துவிட்டு அங்கே ஒரு வேலைக்காரியாக இருக்க என்ன கட்டாயம் வந்திருக்கிறது? அவளுக்குத் தன் உடலையே வெறித்துப் பார்த்து ரசிக்கும் சையதுவின் கண்களும் தான் சாப்பிடும்பொழுது கண்காணிக்கும் சபியாவின் கண்களும், ஞாபகத்தில் வர அம்மாவின் மடியில் தலையை வைத்து ஆழப் புதைத்துப் படுத்தாள். தான் அங்கே போய் இனி வாழ முடியாது என்பதைச் சொன்னதும் அம்மாவின் இருண்ட முகம் இன்னும் எத்தனை மோசமாக இருளடைந்து போகும் என்பதை நினைக்கையில் உடல் நடுங்கியது வஹிதாவுக்கு.

மடியில் தலை வைத்திருந்த மகளின் உடல் நடுங்கி ஓய்வதை உணர்ந்த றைமா, “என்னம்மா, என்னாச்சு?” என்று பதற்றத்துடன் வஹிதாவைத் தொட்டு உலுக்கினாள். மெதுவாகக் கண்திறந்து அம்மாவின் முகத்தைப் பார்த்தாள். “ஒண்ணுமில்லை” ஒரு வார்த்தையில் பதில் சொல்லியவள் மறுபடி கண்களை மூடி எதையோ யோசித்தவளாக, “அம்மா” என்று வாய்க்குள்ளாகவே முனகினாள். மகள் எதையோ சொல்ல வாயெடுப்பதும் சொல்ல முடியாமல் தவிப்பதும் நன்றாகவே புரிந்தது றைமாவுக்கு.

மகள் என்ன சொல்லப் போகிறாளோ என்கிற பயமும் பதற்றமும் தொற்றிக்கொள்ள றைமாவின் தொண்டை வறண்டு நாக்கைச்

சுழற்றியது. பேச முடியாதபடி தத்தளித்தவள், “ஏம்மா? என்னாச்சு?” தட்டுத்தடுமாறி மிக ஆதரவாகக் கேட்டாள்.

“அது வந்தும்மா” என்ற வஹிதா, “எனக்கு அங்கெ போகப் புடிக்கலைம்மா. நான் இனிமே இங்கியே இருந்துக்கிர்றேன்ம்மா” என்றாள். றைமாவுக்கு அவள் என்ன சொல்ல வருகிறாள் என்பது புரிந்தும் புரியாதவளாக, “ஏம்மா, என்ன சொல்ற நீ?” என்றாள். அம்மாவின் குரலில் தான் எதிர்பார்த்திருந்த பதற்றம் தொற்றியிருந்ததை வஹிதாவால் உணரமுடிந்தது.

“ஆமாம். நான் இனிமே அங்கெ போகவே மாட்டேன். எனக்கு அங்க யாரையுமே புடிக்கல. என்னைய அங்கெ போகச் சொல்லிராதேம்மா” என்றவள் தாயின் மடியில் முகம் புதைத்துக் கண்ணீர் விட ஆரம்பித்தாள்.

றைமா என்ன செய்வதெனத் தெரியாமல் மகளின் முதுகில் கை வைத்து அவளை இறுக அணைத்துக் கொண்டாள். தான் என்ன பேசுகிறோம் என்பது புரியாமல் பேசுகிறாளா அல்லது புரிந்துதான் பேசுகிறாளா? என்றாலும் மகளைச் சமாதானம் செய்ய வேண்டும் என்கிற நோக்கத்தில், “சரிம்மா. இனி நீ அந்த வீட்டுக்குப் போக வேணாம். இங்கியே இருந்துக்க!” என்று சொல்லியபடி மகளைத் தோளில் தட்டிக் கொடுத்தாள். அவள் மனம் ரொம்பவே கலக்கமுற்றிருந்தது.

வஹிதா மறுபடி தலையைத் தூக்கித் தாயைப் பார்த்தாள். அம்மாவின் முகத்தில் இனம் புரியாத கலக்கம் பரவியிருந்தது. ஒரு நிமிடம் அவளுக்கு அம்மாவை நினைத்துக் கவலையாக இருந்தது. அவளுக்காக ரொம்பவே பரிதாபப்பட்டாள். இருந்தாலும் தான் இனியும்கூட எதையும் மறைத்து வைத்துக் கஷ்டப்பட முடியாது என்கிற எண்ணத்தில் அம்மா கவலைப்பட்டால்கூட பரவாயில்லை

என்று பட்டது. அதனால் மனதைத் தைரியப்படுத்திக் கொண்டவள், “எனக்கு அவனைப் புடிக்கலம்மா. சையது மாமுவும் ஒரு பொறுக்கி. எனக்கு யாருமே வேணாம்.”

அவள் பேச்சு ரொம்பவும் சிறுபிள்ளைத்தனமாக இருப்பதாக றைமாவுக்குப்பட்டது. திருமணம் முடிந்துவிட்ட பிறகு இப்படியெல்லாம் சொல்லி என்ன ஆகப்போகிறது? இவளுக்கு இதை எப்படி விளங்க வைப்பது என்கிற கவலை ஒரு பக்கமும், தெரிந்தே இப்படிப் படுகுழி பார்த்து ஒரே பெண்ணைத் தள்ளிவிட்டோம் என்கிற குற்றவுணர்வு ஒரு பக்கமும் றைமாவைத் துயரத்தில் ஆழ்த்தின! இதற்கு என்ன மாற்று இருக்க முடியும். இனி எஞ்சிய காலம் முழுக்க அவனோடு இருப்பதுதானே கவுரவம். இல்லையென்றால் பிர்தவ்ஸ் சீரழிந்த கதை மாதிரித்தானே ஆகும். இவ்வாறெல்லாம் மனதில் என்னென்னவோ சிந்தனைகள் ஓடி அவளை வாயடைக்கச் செய்தன.

அம்மாவிடமிருந்து தனக்கு ஆதரவாக ஒரு வார்த்தைகூட வராதது வஹிதாவைப் பெரும் ஏமாற்றத்திற்குள்ளாக்கியது. அவளிடமிருந்து தனக்கு ஏற்ற மாதிரி ஒரு பதிலை வரவழைக்க வேண்டியதன் அவசியம் புரிந்தது மாதிரி அவள் மடியில் இன்னும் ஆழமாகத் தன் முகத்தைப் பதித்துக் கொண்டிருந்தாள் அவள். தனக்கு ஆதரவாகப் பேச ஒருத்தர் இருந்தால்தான் இதிலிருந்து தப்பிக்க முடியும் என நினைத்தாள்.

றைமா மெதுவாக மகளின் தலையை வருடினாள். யதார்த்தத்தை மகளுக்குப் புரிய வைக்க வேண்டியதை அறிந்தவள் போல, “சரிம்மா, நீ அங்கெ வேணும்னா போக வேணாம், இங்கெயே இருந்துக்க. மாப்பிள்ளை வந்து போக இருக்கட்டும். அவன் இவன் என்றெல்லாம் மரியாதைக் குறைவா பேசக்கூடாது. உனக்குதான் பாவம்” என்று சமாதானமாகச் சொல்லி மகளைத் தேற்ற முனைந்தாள் றைமா. “மாப்புள்ளை பொம்பளைங்க கிட்ட பேசுறதெல்லாம் பெரிய தப்பா?

உங்கத்தா சொந்தக்காரப் பொண்ணுக கிட்ட பேசுறதில்லை? இந்தக் காலத்துல யாராச்சும் பொண்டாட்டி பேச்சு கேக்காம இருப்பாங்களா? நீ சொல்லித் திருத்து, எதுவாக இருந்தாலும். இதெல்லாம் ஒரு குறைன்னு சொல்லிக்கிட்டு! அவரு காதில விழுந்தா அவருக்கு ரொம்பவுல்ல கஷ்டமா இருக்கும்?" என்று வருத்தமான குரல் சிக்கந்தருக்காக இரங்கிற்று.

அம்மாவிடமிருந்து இப்படியெல்லாம் சமாதானம் செய்யும் விதத்தில் வார்த்தைகள் வரும் என்பது முன் கூட்டியே தெரியும் வஹிதாவுக்கு. எந்த அம்மாதான் தன் மகள் வாழாமல் வெட்டிக் கொண்டு வருவதை விரும்புவாள்? எந்த வகையிலாவது சமாதானம் செய்து வைக்கத்தான் முயற்சிப்பாள். இது தெரிந்தாலும்கூட இவளிடத்தில் ஒருவிதமான வீம்பு உண்டாகிற்று. இனி இவளிடம் இதுபற்றி ஒரு வார்த்தைகூட பேசக்கூடாது என்ற வீம்பு.

அவள் படக்கெனத் தலை தூக்கி எழுந்து உட்கார்ந்தாள். அவிழ்ந்து கிடந்த தலைமுடியைச் சுருட்டிக் கொண்டை போட்டாள். அவனைக் கொஞ்சம் கூட விட்டுக் கொடுக்காமல் பேசும் அம்மாவின் மீது கடுமையான கோபம் உண்டாக, சற்று நேரத்திற்கு முன் அம்மாவின் பேரில் உண்டான இரக்கம் தன்னிடத்தில் ஒரு துளிகூட இல்லாமல் போய் மனம் வறண்டு போய்விட்டிருப்பதைத் தெளிவாக உணர்ந்தாள். இவளிடம் கெஞ்சிக் கொண்டிருப்பதில் ஒரு பிரயோஜனமுமில்லை என்பது தெளிவாகவே புரிந்தது. திடீரென அவளுக்கு மும்தாஜின் ஞாபகம் வந்தது. சுலைமானுக்கும் ஷெரிபாவுக்கும் அடுத்த வாரத்தில் கல்யாணமாம். சவுரா விஷம் குடித்துச் செத்துப் போவதாக மகளை மிரட்டியதாக நேற்று ஷெரிபா இவளிடம் சொல்லி அழுதாள். மும்தாஜுக்குப் பிடித்த பேய் தனக்குப் பிடித்திருக்கக்கூடாதா என்று ஆதங்கமாக இருந்தது. வஹிதாவுக்கு! தனக்கு ஒரு விமோசனம்

கிடைத்திருக்குமே?

கட்டிலை விட்டு எழுந்தவள் முகம் கழுவினால் நன்றாக இருக்கும் என்று நினைத்தாள். அம்மாவின் பக்கம் திரும்பாமலேயே அறையை விட்டு வெளியே வந்தாள். பகல் நேர வெளிச்சம் கண்களைக் கூசச் செய்தது. அறை இருட்டுக்குப் பழகியிருந்த கண்களைப் புறங்கையினால் தேய்த்து, வெளிச்சத்திற்குப் பழக்கினாள். லுஹர் தொழுகைக்கு நேரமாகியிருக்கும் என்று யூகிக்கையில் சைனு வீட்டிலிருந்து பனிரெண்டு நாற்பது டெல்லிச் செய்தியைக் கட்டைக் குரலில் யாரோ ஒரு பெண் குரல் வாசிக்கத் துவங்கியது. இவள் பாத்ரூமிற்குள் நுழைந்து முகம் கழுவும் பொழுது செய்தி வாசிக்கும் பெண் குரல், இலங்கையில் கடுமையான சண்டை நடக்க ஆரம்பித்திருப்பதாகவும் நூற்றுக்கணக்கான அப்பாவி ஜனங்கள் சிங்களர்களால் வெட்டிக் கொலை செய்யப்பட்டிருப்பதாகவும் அங்கு ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதாகவும் சொல்லிக் கொண்டிருந்ததைக் கவனித்துக் கேட்டாள். அவளுக்கு சையது ஞாபகம் வந்தது. இனி அவர் திரும்பிப் போகவே போவதில்லை என்பதை உறுதி செய்து கொண்டாள். ஆனால் அது குறித்துத் துளிகூட பயமில்லை அவளிடத்தில்! அவள்தான் அங்கே போகப் போவதில்லையே என்கிற தைரியத்துடன், ஒலுச் செய்ய ஆரம்பித்தாள். வாயில் தண்ணீரை விட்டுக் கொப்பளிக்கத் துவங்கும் பொழுது லேசாகத் தலைசுற்றுவது போல உணர்ந்தாள். நிதானித்து சுவரைப் பிடித்துக்கொண்டு என்ன ஆயிற்று என்று யோசிக்கையில் அடி வயிற்றைப் புரட்டியது. வாயிலிருந்து கொழகொழப்பாக எச்சில் ஊறியது. துப்புவதற்காகக் குனிந்தபொழுது அடிவயிற்றில் புரண்ட குமட்டல் ‘உவ்வே’ என்கிற சத்தத்துடன் வெளிப்பட காலையில் சாப்பிட்ட இட்லி செரிக்காமல் அப்படியே வாந்தியாய் தரையெங்கும்

தெறித்துச் சிதறிற்று. விடாமல் தொடர்ச்சியாகக் குமட்டிக் குமட்டி வாந்தி எடுக்க ஆரம்பித்தாள். அவளறியாமலேயே சிறுநீர் கழிந்து பாவாடை சேலையெல்லாம் நனைய ஆரம்பிக்க, குளியலறைக் கதவை ஓடிவந்து அம்மா தட்டுவது காதில் விழுந்தது. தூரத்திலிருந்து எழுவது போல அந்த ஒலி லேசாக மங்கிப் போய் காதில் விழுந்தது. கண்ணை இருட்டிக் கொண்டு வர, அப்படியே சுவரோரம் சரிந்து உட்கார்ந்து நடுங்கும் கால்களை இறுகப் பிடித்துக் கொண்டவளுக்குத் தன் வயிற்றில் ஒரு உயிர் உருவாகிவிட்டிருப்பது புரியத் துவங்கியிருந்தது. அவள் மெதுவாகத் தன் அடிவயிற்றில் கைவைத்துத் தொட்டுப் பார்த்தாள். ஒன்றுமே தெரியவில்லை. வெளியே அம்மா கதவைத் தட்டியபடியே இருப்பது காதில் விழுந்தபடி இருந்தது. அவள் திறக்க விரும்பாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தாள். அவளுக்குத் திடீரென ஒரு விஷயம் புரியத் தொடங்கியிருந்தது. இனி அவள் நினைத்த மாதிரி எதுவும் நடக்கப் போவதில்லை. அந்த உண்மையை ஏற்றுக்கொள்ள வேண்டியதை நினைத்து நடுக்கமுற்றவள் ஓவெனக் கதறிக் கதறி அழ ஆரம்பித்தாள்.

# 67

அஹமது, ஊரிலிருந்து வந்திருக்கிறான் என்ற விஷயம் கேட்டதிலிருந்தே ராபியாவுக்குத் தரையில் கால் பாவவில்லை. இலியாஸ்தான் வந்து சொல்லிவிட்டுப் போனான். றைமா பெரியம்மாவிடம் இட்லி வாங்க வந்தவன் மெதுவாக இவளைக் கூப்பிட்டுச் சொல்லிவிட்டு, “நீ போய் அவனைப் பாரு. நான் கடைக்கு வேலைக்குப் போயிட்டுச் சாயங்காலம் வர்றேன்னு சொல்லு” என்று சொல்லிவிட்டு ஓடிவிட்டான். இவளும் வேகவேகமாகச் சாப்பிட்டுவிட்டு அறைக்குள் போய் நுழைந்து கொண்டு பீரோவைத் திறந்து என்ன கலர் பாவாடை தாவணி போடலாம் என யோசித்தாள். இருப்பதிலேயே நல்லதாக ஒரு ட்ரெஸை உருவி எடுத்த பொழுது அதற்குள்ளிருந்து கீழே விழுந்த மரப்பாச்சிப் பொம்மையை ஒரு நிமிடம் உற்றுப் பார்த்துவிட்டு எடுத்து நெஞ்சோடு அணைத்து இறுக்கிக் கொண்டாள். அதன் முகத்தைத் தன் நெஞ்சோடு வைத்து அழுத்திக் கண்மூடி ரசித்துக்கொண்டாள். அஹமதுவே அவளைத் தொட்டு அணைத்திருப்பது போல ஒரு ஆனந்தம் உண்டாகி உடம்பெல்லாம் புல்லரித்திருந்தது. தன் நினைவுக்கு வந்தவள் வேகமாக அந்த பொம்மையைத் தன் உடுப்புகளுக்குள்ளாகச் சொருகி மறைத்து வைத்தாள்.

பாவாடையை உதறி எடுத்து இடுப்பில் கட்டினாள். நேற்று குளித்து விட்டதால் இன்று குளிக்க வேண்டியிருக்காது. மறுபடி நாளைக்குத்தான் குளிக்க வேண்டும். அவசர அவசரமாகச் சட்டையை மாட்டி பட்டனை எட்டியவரை பூட்டித் தாவணியைச் சுற்றி இடுப்பில் சொருகினாள். கையில் சீப்பை எடுத்துக் கொண்டு ஒரே ஓட்டமாக

ஓடி இன்னும் கட்டிமுடிக்காத குறுக்குச்சுவரின் இடைவெளிவழியாக வஹிதாவிடம் போய், “அக்கா தலையைப் பின்னிவிடு” என்றாள். படுக்கையில் படுத்திருந்த வஹிதா எழுந்து உட்கார்ந்து தலைமுடியைக் கைகளால் நீவிக் கொண்டை போட்டாள். அவள் முகம் சோர்ந்து போய் இருந்ததை ராபியா கவனித்தாலும் பொருட்படுத்தும் நிலையில் அவள் இல்லை.

“என்னடி ரொம்ப அவசரம்” என்றபடியே சீப்பை வாங்கிக் கொண்டு இவளுக்குச் சீவ ஆரம்பித்தவள், விடுபட்டிருந்த பட்டன்களையும் இவள் சொல்லாமலேயே பூட்டி விட்டாள். இத்தனை நாட்களாக உற்சாகமிழந்து சோர்ந்து கிடந்த ராபியாவின் முகம் இத்தனைப் பரவசம் கொள்ள என்ன காரணம் என யோசித்தபடியே, “எங்கெயோ அவசரமா கிளம்பற மாதிரி இருக்கு?” என்றாள். “இல்லையே, சும்மாதான்க்கா” என்றவள், “என்னை இங்கே வரக் கூடாதுன்னு அம்மா சொல்லிக்கிட்டே இருக்காங்க” என்றாள். வஹிதா ஒன்றும் சொல்லாமலேயே தலைவாரி விட்டுக் கொண்டிருந்தாள். அவள் ஒரு பதிலும் சொல்லாதது ராபியாவுக்கு லேசாக வருத்தத்தை உண்டு பண்ணினாலும் மேலே பேசாமல் தலையைக் கொடுத்துக் கொண்டிருந்தாள். ஏன் சொன்னோம் என்று தன் மேலேயே வெறுப்பாக இருந்து. ‘சனியன்’ என்று தன்னைத்தானே மனதிற்குள் திட்டிக் கொண்டவளுக்கு இப்போதெல்லாம் அக்கா சிரிப்பதுகூட குறைந்து போய்விட்டது ஞாபகத்திற்கு வந்தது. முன்பெல்லாம் அம்மாவின் டிரான்ஸிஸ்டர் ரேடியோவை எந்நேரமும் தலைமாட்டிலேயே வைத்திருந்து பாட்டுக் கேட்டுக் கொண்டிருப்பாள். இப்பொழுது அதையும்கூட சுத்தமாகவே நிறுத்திவிட்டாள். இதெல்லாம் கல்யாணத்திலிருந்து வந்ததுதானென்பது இவளுக்கு நன்றாகவே தெரியும். அவள் மௌனமாகவே அமர்ந்து

கொண்டிருந்தாள்.

தலைவாரிப் பின்னியதும் போகக் கிளம்பியவளை வஹிதா சொன்னாள். "முகத்துல ஒரு டின்னு எண்ணெய் வழியுது. போய் சோப் போட்டுக் கழுவு."

"செரிக்கா" என்றவள் தன் வீட்டிற்குப் போகாமல் புதிதாகக் கட்டியிருந்த பாத்ரூமுக்குள் நுழைந்து கொண்டாள். சோப்பு டப்பாவில் வெளிநாட்டு லக்ஸ் சோப் இருந்தது. அதை ஆசையாக எடுத்தவளுக்கு சிக்கந்தரின் ஞாபகம் வந்தது. அவன் கொடுத்ததாகத் தான் இருக்கும் என்று நினைத்தபடி சோப்பைக் கைகளில் குழைத்து முகத்தில் தேய்க்க ஆரம்பித்தாள். மொத்தம் பத்து முறையாவது போட்டுக் கழுவியிருப்பாள், முகம் ஓரளவுக்காவது பளிச்சென்று ஆகியிருக்கும் என்கிற திருப்தியை விரலிடுக்கில் பூத்திருந்த சோப்பு நுரை உண்டு பண்ணக் குளியலறை கதவைத் திறந்து வெளியில் வந்து கொடியில் கிடந்த தேங்காய் பூத்துவாலையில் முகத்தைத் துடைத்தாள். மூக்கில் நுழைந்த புதுச் சுண்ணாம்பின் வாசனையைச் சுர்ரென்று உறிஞ்சி அனுபவித்தாள். திடீரென நோன்பு நாட்களைச் சுண்ணாம்பு வாசனை உண்டு பண்ணியது. மறுபடி அறைக்குள் வந்தவள் கண்ணாடியின் முன் நின்று பவுடர் பூச ஆரம்பித்தாள். எவ்வளவுதான் பூசினாலும் தன் முகம் அழகானதான திருப்தியே வராத மாதிரி திரும்பத் திரும்பப் பஞ்சில் தோய்த்து முகத்தில் பூசிக் கொண்டாள்.

"அழகாத்தான் இருக்க" என்று யாரோ சொல்வது காதில் விழ வேகமாகத் திரும்பியவள், அங்கே பெரியம்மா நின்று கொண்டிருப்பதைப் பார்த்து, வெட்கப்பட்டுத் தலை குனிந்து கொண்டவள் ஒரே ஓட்டமாக வெளியே ஓடி வந்தாள்.

அஹமது வீட்டு வாசலை நெருங்கும் முன்பாக மதினா தான் அங்கு போவதை பார்த்து விடுவாளோ என்கிற பயத்தோடு மெதுவாகக்

காலடி எடுத்து வைத்து அவள் வீட்டைத் தாண்டியவள், நல்லவேளை என்று பெருமூச்சுவிட்டுக் கொண்டாள். அஹமதுவின் வீடு சாத்திக்கிடந்தது. இவளுக்கு வாசல்படியில் கால் வைக்கையிலேயே ரத்தம் தலைக்கேறி நெஞ்சு படபடத்தது. சந்தோஷத்தில் மூச்சே நின்று விடும்போல உணர்ந்தாள். மெதுவாகக் கதவைத் தள்ளித்திறந்து உள்ளே போனாள். அஹமது கட்டிலில் உட்கார்ந்து காலை ஆட்டிக் கொண்டிருந்தான். இவள் வருவதைப் பார்த்ததும் கால் ஆட்டுவதை நிறுத்திவிட்டு அண்ணாந்து இவளை உற்றுப் பார்த்தான். இவள் ரொம்பவே மாறிப் போய்விட்டதாகவும் அடையாளமே தெரியாதது மாதிரியும் அவன் வியந்து போவதாகக் கற்பனையாக நினைத்துக் கொண்டவள், அவனைக் கவனித்துப் பார்த்தாள். அவன் நன்றாக வளர்ந்திருந்தான். பேண்ட் சட்டை போட்டுக் கையில் கடிகாரம் கட்டியிருந்தான். ரொம்ப படித்த டவுன் பிள்ளைகளைப் போல முகம் நாகரிகமாக இருந்தது. இவளுக்கு அவன் அருகில் போகவும் அவன் பேரைச் சொல்லவும் கூட ஒரு தயக்கத்தை அவன் தோற்றம் உண்டு பண்ண அப்படியே ஒதுங்கிப் போய் நின்று கொண்டிருந்தாள்.

“ஏண்டி அங்கியே நிக்கிற? வா இங்கே.” அவன்தான் கூப்பிட்டான். “எப்படி அதுக்குள்ள இப்புடி வளந்த?” ஆச்சர்யமாகக் கேட்டவன், “நீ ஸ்கூலுக்குப் போறதில்லையாமே?” என்றான். அவன் எப்போதும் போலத் தன்னோடு பேசுவது சந்தோஷத்தை உண்டு பண்ண, உற்சாகத்துடன் ஒரே ஓட்டமாக ஓடி அவனருகில் போய் நின்று கொண்டாள் ராபியா. உள்ளிருந்து ஏதோ வேலையாக வெளியே வந்த நபிஸா, “வாடி என் மருமகளே, என்னா சங்கதி? மாப்பிள்ளையப் பாக்க வந்தியா?” என்று கேட்க, வெட்கத்தில் முகம் சிவந்துபோய் தலையைக் குனிந்து கொண்டாள். அஹமது அவளையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருப்பது புரிய பார்வையை இன்னும் கீழே

தாழ்த்திக் கொண்டாள்.

"ஏன் நீ ஸ்கூலுக்குப் போறதில்ல?" என்று மறுபடியும் கேட்டவன், "நான் இப்பொ ஸ்கூலுக்குதான் போறேன் டி.ஸி. வாங்கலாம்னு! எங்க அத்தா பின்னாடி வருவாங்க. இப்ப நீயும் நானும் போகலாம் வா" என்று அவளையும் கூப்பிட்டான். "நானா?" என்று தயங்கினாள் ராபியா. அவள் முகத்தில் அம்மாவின் அதட்டல் குறித்த பயம் ஒரு நிமிடம் வெளிப்படையாகத் தெரிந்து மறைந்தது. இருந்தாலும் அவன் மறுபடி ஊருக்குப் போய்விடப் போகிறான் என்பது புரிய அவன் இங்கிருக்கும் பொழுது அவன் கூடவே இருக்க வேண்டும் என்று விரும்பினாள். மேற்கொண்டு ஏதும் யோசிக்காமல், "சரி வர்றேன்" என்றுவிட்டு, "ஒரு நிமிஷம் நில்லு வீட்டுல சொல்லிட்டு வர்றேன்" என்றவள் பதிலை எதிர்பார்க்காமல் தன் வீட்டை நோக்கி ஓடினாள். அப்படி ஓடும் பொழுது கூட ஒரு கண்ணால் மதினா வீட்டைப் பார்த்தபடிதான் ஓடினாள்.

சொஹ்ரா, அடுப்பில் எதையோ வறுத்துக் கொண்டிருந்தாள். ஒரே புகையாக இருந்தது. ராபியா வேகமாக ஓடி அறைக்குள் நுழைந்து பீரோவைத் திறந்து, மரப்பாச்சிப் பொம்மையை எடுத்துத் தன் தாவணிக்குள்ளாக மறைத்துச் சுருட்டி வயிற்றோடு அணைத்துக் கொண்டாள். பிறகு வேகத்தைக் குறைத்து சாவகாசமாக நடப்பவள் போல நடந்து வந்து சொஹ்ராவின் அருகில் வந்தவள், புகை மூட்டத்தினூடே அம்மாவைப் பார்த்து "அம்மா, மதினா வீட்டுக்குப் போறேன் தேடாதீங்க" என்று விட்டு, ரொம்பவும் மெதுவாக அவசரமேயில்லாதது மாதிரி நடந்து வீட்டை விட்டு வெளியே வந்தாள். மறுபடி அஹமதுவின் வீட்டை நோக்கி ஓட ஆரம்பித்தாள். அம்மா ஒன்றும் சொல்லாதது பெருத்த நிம்மதியை உண்டு பண்ணினாலும் அவள் தடுக்காததற்கு முக்கியமான காரணம்,

வஹிதாவிடம் போய் இருப்பதை விட மதினா வீட்டில் இருப்பதே நல்லது என்பதுதான் என்று இவளுக்குப் புரிந்தது. முதலிலெல்லாம் மதினா வீடென்றால் திட்டியவள் இப்பொழுது ஒன்றுமே சொல்லாதது அதனால்தான்.

இவள் வருவதை எதிர்பார்த்து வெளியில் தெருவில் இறங்கி நின்று கொண்டிருந்தான் அஹமது. இவள் ஓடிப்போய் அவனோடு சேர்ந்து கொண்டாள். இருவருமாக நடக்க ஆரம்பித்தார்கள். "இலியாஸ் எங்கெ போயிட்டான்?" என்றான் அவன். "அவன் இப்ப எங்க கடையில பொட்டலம் மடிக்கிற வேலை பாக்கறான். ஞாயித்துக்கெழமை மட்டும்தான் வீட்டுல இருப்பான்" என்றாள் ராபியா. "பாவம் இல்லெ?" என்றவன், "ஆமா, அந்தப் புள்ளைய காணோம், எங்கே?" என்றான் கடுப்பாக! அவன் யாரைக் கேட்கிறான் என்பது புரிந்தாலும், பதில் சொல்லக் கூச்சமாக இருக்கவும் பேசாமல் இருந்தாள். "என்ன காது செவுடா?" என்று அவன் மறுபடியும் அதட்டிவிட்டு அவளிடமிருந்து பதிலை எதிர் பார்த்து முகத்தைப் பார்த்தான். வேறு வழியில்லாமல், "அது . . . வந்து . . . அவ . . . மனுஷியாயிட்டா . . ." என்றாள். வெட்கத்தில் ஒவ்வொரு வார்த்தையாகத்தான் வெளிவந்தது அவளிடமிருந்து! "அப்புடியா?" என்றவன் வேறு ஒன்றும் சொல்லாமல் நடந்து கொண்டிருந்தான். அதற்குள்ளாக இருவரும் லைப்ரரியைத் தாண்டி பள்ளியின் பின்புறத்தை அடைந்து விட்டிருந்தார்கள். இவளுக்கு பள்ளியைப் பார்த்ததும் முகம் பரவசத்தில் ஆழ்ந்து போயிற்று.

அஹமது கையிலிருந்த கடிகாரத்தில் மணி பார்த்தான் பெரிய மனுஷத் தோரணையோடு. "அத்தா பதினோரு மணிக்கு மேலதான் வர்றதா சொல்லியிருக்காங்க. வா நாம போய் மலையோரம் இருக்கற மரத்தடியில உட்காரலாம்" என்று அவளிடம் சொன்னவன்,

"இப்பதான் பத்தேகால் ஆகியிருக்கு" என்றபடி முன்னே நடந்தான். காம்பவுண்ட் சுவரில்லாத பெரிய விளையாட்டு மைதானம் ஒரு பிள்ளைகளுமில்லாமல் வெறிச்சோடிக் கிடந்தது. இப்பொழுதுதான் முதல் பீரியட் ஆரம்பமாகியிருக்கும் என்பதால் யாரையுமே கிரவுண்ட்டில் காணோம் என நினைத்தபடி அவன் கூட நடந்து தூரத்திலிருந்த புளிய மரத்தடிக்குச் சென்றாள். வரிசையாக நான்கு மரங்கள் நின்று அந்த இடத்தையே குளுமை யானதாக ஆக்கியிருந்தன.

மரத்தடியில் போய் இருவருமாக உட்கார்ந்தார்கள். அவளுக்கு மனதிற்குள் அம்மாவின் நினைவு வந்து உடல் நடுக்கமுற்றது. அஹமது அவளருகில் வந்து அமர்ந்தவன், "இந்தப் பள்ளிக்கூடம் மாதிரி வராது இல்ல?" என்றான். இவள் ஏனோ வெட்கத்தாலும் மகிழ்ச்சியினாலும் பதில் சொல்ல இயலாமல் மயங்கிப் போயிருந்தாள். அவனோடு தனியே இருப்பதிலுள்ள சந்தோஷத்தை முழுமையாக உணர்ந்து அனுபவித்தாள். "என்ன பதில் சொல்ல மாட்டேங்கற?" என்றவன். "ஏன் உன்னைப் பள்ளிக் கூடத்துலருந்து நிறுத்திட்டாங்க? கஷ்டமா இல்லை?" என்று அனுதாபம் மிக்க குரலில் கேட்டான். "சும்மாதான். எனக்குக் கூட துணைக்கு வர யாரும் என் வயசுப் பிள்ளைக இல்லேன்னுதான்" என்றவள், "கஷ்டமாதான் இருக்கு" என்றுவிட்டுத் தலையைக் குனிந்து கொண்டாள். அவளால் அவனது கண்களைப் பார்க்கவே முடியாமல் வெட்கமாக இருந்தது. உடம்பெல்லாம் பாதத்திலிருந்து தலைவரைக்கும் பரவசம் ஊறித் ததும்பி நிலைகொள்ள விடாமல் செய்தது. அவள் தன் மடியிலிருந்த மரப்பாச்சிப் பொம்மையை அவன் பார்க்காத சமயத்தில் தொட்டுப் பார்த்துக் கொண்டாள். அவனிடம் அதைக் காட்டி அவனுக்கு எதையோ நினைவுபடுத்த விரும்பினாள். ஆனாலும் அவளது வெட்கம் அவளை ஒன்றும் செய்யவிடாமல் தடுத்தது. அவனைப் போல

சுலபமாகப் பேசக்கூட அவளால் முடியவில்லை. அவள் அருகில் தெரிந்த மலையை நோக்கித் தன் பார்வையைத் திருப்பிக் கொண்டாள். சற்றுத் தள்ளி வரிசையாக மண்டிக்கிடந்த கத்தாழைச் செடி அவள் பார்வையில் பட்டது. பக்கத்தில் ஏதோ ஒரு செடியில் சிவப்புக் கலரில் நிறைய பூப் பூத்துக்கிடந்தது. இவளுக்கு அப் பொழுதுதான் ஞாபகம் வந்தது, வீட்டிலிருந்த டேபிள் ரோஸ் செடியில் பூ மலர்ந்திருந்ததைப் பறித்துத் தலையில் வைக்காமல் வந்துவிட்டோமே என்று! அம்மா பார்த்தால் திட்டுவாள் என்பதனாலேயே அந்த ஞாபகம் வராமல் போய் விட்டதை நினைத்து வருந்திக்கொண்டாள். இந்த இரட்டைச் சடையில் ஒரு பக்கமாக டேபிள் ரோஸ் வைத்துக்கொண்டால் அவளுக்கு ரொம்ப அழகாக இருப்பதாக உமா சொல்லிக் கொண்டேயிருப்பாள். அஹமதுவுக்குப் பிடித்தாலும் பிடிக்கும். “ச்சே . . . ! எப்படி மறந்து தொலைத்தோம்” என்று மறுபடியும் தனக்குள்ளாகப் புலம்பிக் கொண்டாள்.

கத்தாழைச் செடியைவிட்டு அவள் பார்வை அகலாததை அப்பொழுதுதான் கவனித்த அஹமது, “என்ன யோசிக்கிற மாதிரி இருக்கு?” என்று அவளைப் பார்த்துக் கேட்கவும் திடுக்கிட்டுத் திரும்பியவள், “ஒண்ணுமில்லை” என்று சொல்லிவிட்டுக் குனிந்து கொண்டாள். அவள் முகம் அவனுக்கு எதையோ உணர்த்தியிருக்க வேண்டும். என்னவோ சொல்ல வந்தவன், வேகமாகப் போய் அந்தச்செடிகளை ஒட்டிப்போய் நின்றுகொண்டு இவளை நோக்கித் திரும்பி, “இங்கெ வா” என்று கை அசைத்து அவளைக் கூப்பிட்டான். இவளுக்கு உடம்பெல்லாம் படபடத்து நடுங்கிற்று. எதையோ தேடிப்போவது போல நடந்து அவனருகே போய் நின்றாள். அவன் அவளைப் பார்த்துச் சிரித்தபடி குனிந்து செடிக்குள்ளாக எதையோ தேடினான். குனியும் பொழுது அவனது கை அவளது கையில் லேசாக

உரசி அவளை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. இனம்புரியாத சந்தோஷம் உள்ளே பொங்கிப் பெருக அவன் என்ன தேடுகிறான் என்பது புரிந்து மகிழ்ச்சியில் திக்கு முக்காடினாள்.

அவனை விட அவளுக்கு அந்த இடம் சரியாகத் தெரியுமாதலால், இவள் அந்தச் செடிக்கருகில் போய் நின்று குனிந்து உற்றுக் கவனித்தவள், "இந்தா, இங்கே" என்று உற்சாகமாகக் குரல் கொடுத்தாள், வெட்கத்தில் அப்படியே பாதி வார்த்தையை விழுங்கி மௌனமானாள்.

அவன் "எங்கே" என்றபடி ஆர்வத்துடன் அவளருகில் வந்து அவள் காட்டிய செடியில் அவனது பெயருடன் அவள் பெயரும் எழுதியிருந்ததைப் பார்த்துவிட்டு அவளைப் பார்த்துச் சிரித்தான்.

அவன் சிரித்தது இவளைப் பெருமைகொள்ள வைத்தது. அவன் இன்னும் தன்னை நினைத்துக்கொண்டிருப்பதை ஏதோ ஒரு வகையில் உறுதி செய்து கொண்ட திருப்தி அவள் முகத்தில் படர்ந்து நிம்மதியை உண்டுபண்ணியது. அதனால் உண்டான ஆசுவாசத்தைத் தனித்திருந்து அனுபவிக்க வேண்டும் போலிருக்க அவள் மறுபடியும் மரத்தடியில் வந்து நின்று கொண்டாள்.

அவன் திரும்பி வந்து இவளருகில் உட்கார்ந்து கொண்டு தன் சட்டைப்பையிலிருந்த கர்ச்சீப்பை வெளியில் எடுத்து வியர்த்திருந்த நெற்றியையும் புறங்கழுத்தையும் துடைத்தான். இவளுக்கென்னவோ அவன் தனக்காகத்தான் இப்படியெல்லாம் செய்கிற மாதிரி இருந்தது. அதுவும் அவளுக்குச் சந்தோஷமாகவே இருந்தது. அவன் மறுபடி பாக்கெட்டில் கர்ச்சீப்பை மடித்து வைத்துவிட்டு வேறு எதையோ அதிலிருந்து வெளியில் எடுதான். சிறிய காகிதத்தில் சுற்றியிருந்ததைப் பிரித்து உள்ளங்கையில் வைத்து அவளிடம் நீட்டினான். காபி கலர் சாக்லேட் மிட்டாய்கள் பேப்பர் நிறைய இருந்தன. இவளிடம், "உம்

எடுத்துக்கோ” என்றான். இவளுக்கு அவன் முன்பாகத் தின்பதற்கு வெட்கமாக இருந்தது. தலையசைத்து வேண்டாமென மறுத்தாள். “அட, எடுத்துக்கன்னா” என்று மறுபடி அதட்டினான். அவன் வேறு வழியில்லாமல் கை நீட்டி அதிலிருந்து ஒரே ஒரு மிட்டாயை மட்டும் எடுத்துக்கொண்டாள். “உம் தின்னு” அதிகாரமாக அதட்டியவன், “இது வெளிநாட்டு மிட்டாய். நன்னா வெளிநாட்டுல வாங்கி அனுப்புனது. சாப்பிட்டுப் பாரு” என்று சொல்லியபடி அவன் ஒன்றைப் பிரித்து வாயில் போட்டுக் கொண்டான். இவளும் காகிதத்தைப் பிரித்து மிட்டாயை வாயில் போட்டுக்கொண்டு, நாசூக்காகச் சத்தம் வராமல் சுவைக்க ஆரம்பித்தாள்.

அவன் கைக்கடிகாரத்தில் மணி பார்த்துவிட்டு, “பதினொண்ணாகப் போவுது. நீ இரு. நான் போய் ஹெச் எம்கிட்ட அத்தா வந்துட்டாங்களான்னு பாத்துட்டு வர்றேன்” என்று சொல்லிவிட்டு எழுந்து போகக் கிளம்பியவன் பின்புறம் ஒட்டியிருந்த மண்ணைத் தட்டி விட்டுக்கொண்டு பள்ளியை நோக்கிப் போனான்.

ராபியா, அவன் போவதையே பார்த்துக்கொண்டிருந்துவிட்டு மறுபடியும் எழுந்து கத்தாழைச் செடி அருகில் போனாள். தன்னைத் தவிர தொலை தூரம் வரை யாருமே இல்லை என்றாலும் பயம் துளியும்கூட வராதது அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. அவள் பெயரும் அவன் பெயரும் இணைந்து எழுதப்பட்டிருந்ததை உற்றுப் பார்த்தபடியே குந்தவைத்து உட்கார்ந்தவளுக்கு அந்த எழுத்துக்கள் அஹமதுவினுடையவைதான் என்பது புரிய மனம் பரவசத்தில் மலர்ந்தது.

அவன் திரும்பி வரும்வரை அவள் மரத்தடியிலேயே காத்துக்கொண்டிருந்தாள், தூரத்தில் ஒன்றிரண்டு மாடு மேய்க்கும் சிறுவர்கள் மலை மீதேறிக் கொண்டிருப்பதைப் பார்த்தபடியே.

இருவரும் வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கியதும் அஹமது கேட்டான், "எதையோ தாவணிக்குள்ள மறைச்சு வைச்சுருக்கியே, என்னது?" அவள் உடனே குனிந்து பார்த்துக் கொண்டாள். வயிற்றுக்கு மேலே லேசாக துருத்தியிருந்ததை அவன் கவனித்துவிட்டது தெரிந்து, கூச்சத்தில் நெளிந்தபடி, "ஒண்ணுமில்லை" என்றாள். "இல்லை, என்னத்தையோ மறைக்கிற" என்று மறுபடி கேட்ட பொழுது இந்தச் சமயத்தை விட்டால் வேறொரு சமயம் வராது என்று உணர்ந்தவள் போல, தன் தாவணிக்குள் கைவிட்டு மறைத்து வைத்திருந்த அந்த மரப்பாச்சிப் பொம்மையை வெளியில் எடுத்தாள். "இதோ இதுதான்! இது உன்னோடது இல்ல, குடுக்கலாம்னு எடுத்துட்டு வந்தேன்." சொல்லி முடிப்பதற்குள் பயத்திலும், வெட்கத்திலும் முகம் சிவக்க நிலைகுலைந்து போனாள் ராபியா. அவன் ஒரு நிமிடம் நின்று அவளையும் அந்தப் பொம்மையையும் மாறி மாறிப் பார்த்தான். அவனுக்கும் மனதில் ஏதோ ஞாபகங்கள் வந்து போயிருக்க வேண்டும் என்பதை அவன் முகம் தெளிவாக காட்ட, "இதையா? எனக்கா?" என்றவன், "வேணாம் நீயே வச்சுக்க. அங்கெயெல்லாம் எனக்குத் தேவைப்படாது" என்று சொல்லிவிட்டு அவளைப் பார்த்துப் பிரியமாகச் சிரித்தான்.

அதன்பிறகு இருவரும் ஒன்றும் பேசாமலேயே வந்து கொண்டிருந்தார்கள். வீடு வந்ததும் அஹமது சொன்னான், "நான் சாயங் காலமே ஊருக்குப் போயிடுவேன். பரிட்சை லீவுலதான் வருவேன். வர்றேன் என்ன?" என்று அவளிடம் விடைபெறும் தோரணையில் சொல்லிவிட்டு வீட்டுக்குள் போனான். அவன் உள்ளே போய்விட்ட பிறகும் இவள் தொண்டையை அடைத்த துக்கத்தோடு சற்று நேரம் அங்கேயே நின்று கொண்டிருந்தாள். தன் உடலிலிருந்த ஏதோ ஒன்று பிரிந்து போவது போல உணர்ந்தாள். வீட்டுக்குள்

நுழைந்தவளுக்கு வாசலில் முழுதாகக் கட்டி முடிக்கப்பட்டிருந்த சுவர் தாங்கவியலாத அதிர்ச்சியையும் வெறுமையையும் உண்டு பண்ண, தளர்ந்து போன நடையோடு அறைக்குள் நுழைந்து கட்டிலின் ஒரு ஓரத்தில் சுருண்டு படுத்துக் கொண்டாள். அவள் கைகளில் இறுக்கமாகப் பிணைந்திருந்தது மரப்பாச்சிப் பொம்மை.

Ç

பின்னுரை

# பிரியத்தின் வெளிப்பாடாக மொழிபெயர்த்தல்

**மரியா ரெமோண்டெஸ்**

*ஒரு பிரதியை மொழிபெயர்ப்பதுதான் அதை மிகவும் நெருக்கமாக அறிந்துகொள்ளும் வழி என்கிறார் பின்காலனியக் கோட்பாட்டாளர் காயத்ரி சி. ஸ்பிவெக். இந்த நெருக்கத்தைப் ப்ரியமாக மாற்றக்கூடிய பிரதிகளும் உண்டு. சல்மாவின் 'இரண்டாம் ஜாமங்களின் கதை' நாவலுடன் எனக்கு அத்தகைய அனுபவம் தான் ஏற்பட்டது.*

*1998இல் நான் தொடங்கிய Implicadas no Desenvolvemento என்கிற தொண்டு நிறுவனத்தின் பணிகளில் ஒன்றாக கலீஷியன் மற்றும் தமிழ்க் கவிஞர்களின் தொகுப்பு ஒன்றைக் கொண்டுவர முயற்சித்துக்கொண்டிருந்தபதுதான் எனக்கு சல்மா அறிமுகமானார். 1998லிருந்தே எனது அமைப்பு மூலமாகத் தமிழ்ப்பெண்களுடனும் அமைப்புகளுடனும் நான் பணிபுரிந்துகொண்டிருந்தேன். குறிப்பாக, திருச்சியிலிருந்து இயங்கிவரும் People's Development Initiatives என்கிற அமைப்போடு தொடர்ந்து செயல்பட்டு வந்தோம். ஒரு குரல் பிரதிநிதித்துவப்படுத்தப்படுவதற்கும் காணாமல் போவதற்கும் ஏழ்மைக்கும் நெருங்கிய தொடர்புண்டு என்று நான் எப்போதும் நம்பியதுண்டு. அதிலும் குறிப்பாக, பெண்களின் குரல். மேலாண்மை அதிகாரமற்ற ஒரு சிறிய மொழியைச் சேர்ந்தவள் என்பதால் பாலினத்திற்கும் ஒரு நாட்டின் தந்தைமையக் கோட்பாட்டு வரையறைக்கும் இடையிலான ஊடுபாவுகள் பற்றியும் எல்லைகள்*

தாண்டிய கூட்டணிகளுக்கான தேவை பற்றியும் நான் ஆழமாக உணர்ந்திருக்கிறேன்.

அந்த முதல் புத்தகம் ‘வணக்கம் பென்விடாஸ்’ சல்மாவை முதல் முறையாகச் சந்திக்கும் வாய்ப்பை ஏற்படுத்தித் தந்தது. அவருடைய துணிச்சலும் குறிப்பாக அவரது சொற்களும் என்னை நெகிழ வைத்தன. எனது தமிழ் நண்பர்கள் (என் குடும்பம்) அவரது அற்புதமான நாவலான ‘இரண்டாம் ஜாமங்களின் கதை’ பற்றிச் சொல்லத் தொடங்கினார்கள். பேச்சுத் தமிழில் ஓரளவு பரிச்சயம் இருந்தாலும் சல்மாவின் நாவலை நேரடியாகத் தமிழிலிருந்து மொழிபெயர்ப்பது எனக்குச் சாத்தியமாயிருக்கவில்லை. அதனால், லக்ஷ்மி ஹோம்ஸ்ரோமின் ஆங்கில மொழிபெயர்ப்புக்காகக் காத்திருந்தேன். அதற்குள் சல்மா நாவலின் கலீசிய மொழிபெயர்ப்பு பற்றி ‘செராய்ஸ்’ என்கிற எனது பதிப்பகத்திடமும் பேசி வைத்திருந்தேன். மொழிபெயர்ப்புப் பணி சீக்கிரமாகவே தொடங்கியது.

இந்த நாவலை அறிந்துகொள்வது என்பது அதன் முதல் பக்கத்திலிருந்து கடைசிப் பக்கம்வரை அதை நேசிப்பதுதான். வார்த்தைகளை வைத்து சல்மா ஒரு உலகத்தைப் படைத்திருக்கிறார்; அவர் வரைந்த உலகத்தில் பெண்களால் தமது குரல்களை மீட்டெடுக்க முடிந்தது; தந்தைமையச் சமூகம் அவர்கள்மீது போர்த்திய இருளிலிருந்து அவர்களால் மீள முடிந்தது. சல்மாவின் அழுத்தமான மொழி, நுணுக்கமான விவரணைகளில் இருக்கும் ஆர்வம் காரணமாக அவர்களுடைய உணர்வுகள், காமம், நட்பு, போட்டி மனப்பான்மை எல்லாம் உயிர்பெற்றன. வாசிக்கும் யாவரும் அந்தச் சமூகத்தின் ஒரு அங்கமாகிறார்கள், கதாபாத்திரங்களுடன் கோபம்கொள்கிறார்கள், வருத்தம்கொள்கிறார்கள்; அல்லது ஊக்கம் பெறுகிறார்கள். தனது சமூகத்தின் வேறொரு முகத்தைக் காட்டுகிறார் சல்மா.

ஒருவருக்கொருவர் ஆதரவாக அல்லாமல் பெண்களைத் தந்தைமையக் கோட்பாடுகளுக்கு ஆதரவாக செயல்படுமாறு தூண்டும், வற்புறுத்தும் சமூகத்தின் முகம். பெண்களை 'அவர்களுடைய இடத்தில் வைக்க' ஆண்கள் அணியும் வேடங்களைத் துகிலுரித்துக் காட்டுகிறார். ராபியாவின் கண்கள் வழியாக இது மிகச் சிறப்பாக வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது.

சல்மாவின் நாவல் சர்வதேச அணுகுமுறையோடு ஒரு கிராமத்தின் அக்கறைகளை இணைக்கிறது. இந்த நாவலின் கலீசிய மொழிபெயர்ப்பு எப்படி இங்குள்ள வாசகர்களால் அடிப்படையான மானுடப் பண்புகளின் வழி நாவலில் வரும் கதாபாத்திரங்களோடு தங்களை அடையாளப்படுத்திக்கொள்ள முடியும் என்பதைக் காட்டியிருக்கிறது. சல்மாவையும்[1] நாவலையும் இங்குள்ள விமர்சகர்கள் மிகுந்த வியப்புடனும் மரியாதையுடனும் வரவேற்றிருக்கிறார்கள். ஒரு பெண்ணாக, உலகத்தைப் பெண்கள் மாற்றிட வார்த்தைகள் எவ்வளவு மதிப்பானவை என்பதைக் காட்டியிருக்கிறார். அவர் நாவலின்வழி ஒரு நாவலாசிரியருக்குரிய பரந்துபட்ட திறமைகளையும் தான் இன்னும் அதிக கவனத்திற்குரியவர் என்பதையும் காட்டியிருக்கிறார்.

[1] கலீசிய மொழிபெயர்ப்பின் வெளியீட்டிற்காக சல்மா ஸ்பெயினின் ஒரு மாகாணமான கலீசியாவுக்குச் சென்றிருந்தார்.

என்னைப் பொறுத்தவரை இந்த நாவலை மொழிபெயர்த்தல் நிச்சயமாக பிரியத்தை வெளிப்படுத்தும் ஒரு செய்கை. நாவலின் மீதான பிரியத்தை, அந்த நாவலில் குடிகொண்டுள்ள பெண்களின் மீதான பிரியத்தை, சல்மாவின் சொந்த கிராமத்தில் நான் சந்தித்த அசலான பெண்களின் மீதான பிரியத்தை மற்றும் மிகவும் கடினமான சூழல்களிலும் தங்களுக்கான குரல்களைப் பாதுகாத்துக்கொள்ளப் போராடும் எல்லாப் பெண்களின் மீதான பிரியத்தை வெளிப்படுத்தும் ஒரு செயல்பாடு. உள்ளூர் மற்றும் சர்வதேச சமூகமாக அவர்களது

*குரல்களைக் கேட்க வேண்டிய கடமை நமக்கு இருக்கிறது. அவர்களுடைய துணிச்சல் கோரும் அன்புடனும் ஆதரவுடனும் நாம் கூர்ந்து கேட்க வேண்டும்.*

*தமிழில்:* **கவிதா**

# வழக்குச் சொற்கள்

அத்தாள - அப்பா

அதபு - நல்லொழுக்கம்

அவுஸ் - நீர்த்தொட்டி

அஸர் - மாலைநேரத்தொழுகை

அஸரத் - மதப்பண்டிதர்

ஆனம் - குழம்பு

இக்மத் - துர்புத்தி

இத்தா - கணவனின் மரணத்திற்கு பிறகு கடைப்பிடிக்கப்படும் மறைவுச் சடங்கு, தலாக்கிற்கு பிறகு பெண்கள் அனுசரிக்கும்
தனிமைக் காலம்

இல்மு - கல்வி

இஷா - இரவுத் தொழுகை

ஈமான் - இறை நம்பிக்கை

உப்புக் கண்டம் - கறிவற்றல்

உம்மும்மா - தாய்வழி பாட்டி

எத்தீம் - அனாதை

ஒலு - தொழுகைக்கான உடல் சுத்தம்

கல்பு - மனம்

கபர்ஸ்தான் - சடலத்தை அடக்கம் செய்யும் இடம்

கபன் துணி - சடலத்தை பொதியும் வெள்ளைத் துணி

களா - ஒன்றுக்கு மேற்பட்ட தொழுகைகளை சேர்த்துத் தொழுதல்

கிதாப் - மறை நூல்

கியாமத் நாள் - இறுதிநாள்

குப்பி - அத்தை

சச்சா - சித்தப்பா

சகுன் - பாத்திரம்

சபூர் - பொறுமை

சஹர் - ரம்ஜான் மாத அதிகாலை உணவு

சஹர் முஸாபிர் பாவா - நோன்பு வைக்கும் நேரத்தை அறிவிப்பவர்

சாயிது - ஒப்புதல்

சிபத் - லட்சணமாக (கேலியான பொருளில்)

சேரா - மலர்களால் செய்யப்பட்ட அலங்காரம்

டேலாக்கட்டி - ஆண்கள் சிறுநீர் கழித்தபிறகு துளிர்த்திருக்கும் நீரை சுத்தம் செய்யும்
மண் கட்டி.

த:்லீம் கிதாபு - ஆன்மிக நூல்

தண்ணி - டீ

தப்லீக் - முஸ்லிம்களின் கடமைகளை நினைவு படுத்துபவர்கள்

தராவீஹ் - நோன்புக்கால இரவுத் தொழுகை

தஹஜ்ஜத் - நடு இரவு நேரத்தொழுகை

தாளிசா - குழம்பு

துஆ - பிரார்த்தனை

துனியா - உலகம்

துனியாக் கவுஸீ - உலக ஆசை கொண்ட பேய்

நந்தன, விந்தன - சிங்கள நிகழ்ச்சி

நப்ஸு - நிறைவேறாத ஆசை

நன்னா - தாய்வழிப் பாட்டன்

நன்னி - தாய்வழிப் பாட்டி

நஸீப் - தலைவிதி

நஜீஸ் - அசுத்தம்

நாக்குரொட்டி - தின்பண்டம்

நார்சா - நேர்ச்சை

நிய்யத் - விருப்பம், உறுதி

பர்ளு - கடமை

பதூசு - அப்பாவி

பஜர் - அதிகாலைவேளை

பித்துனா - புரளி

புக்கந்தி - கற்பனை

பூணிப்பு - பயபக்தியுடன்

பைத்து - பாடல்

மஃரிபு அந்திப்பொழுது தொழுகை

மம்மாணி - மாமி

மாணான் - முதலாளி

முஸல்லா - தொழுகை விரிப்பு

முஸாபா - நெஞ்சோடு சேர்த்து ஆலிங்கனம் செய்தல்

மௌத் - இறப்பு

மைய்யித்து - இறந்த உடல்

மொசாபிர் - பிச்சைக்காரர்

ரஸ்க் - உணவு

ரசூலுல்லாஹ் - முகம்மது நபி

ராகத் - வசதி

ரூஹு - உயிர்

ரேகாளி - குர்ஆன் வைத்து ஓதும் ஸ்டாண்ட்

லுஹர் - மதியத்தொழுகை

லைலத்துல் கதிர் - ரம்ஜான் மாத 27வது நாள் பண்டிகை

வபாத்து - மரணம்

வாவரசி - சுமங்கலி

ஹக் - உண்மை

ஹயாத் - வாழ்க்கை

ஸபர் - வருகை

ஸபூர் - பொறுமை

ஸலவாத் - முகம்மது நபி மீதான புகழுரை

ஸஹர் - நோன்பு வைப்பதற்கான அதிகாலை உணவு

ஸாயிது - பெண்ணின் சம்மதம்

ஜனாஸா - சடலம்

ஜுஸ்வு - அத்தியாயம்

Ĕ